# ஸ்ரீ மஹாபாரதம்

## ஆதிபர்வம்

வசனகாவியம்



வாவிள்ள ராமஸ்வாமி சாஸ்த்ருலு
அண்ட் ஸன்ஸ்
292, நேதாஜி ஸுபாஷ்சந்திரபோஸ் ரோட்
சென்னை-1.

உ

கடவுள் துணை

# ஸ்ரீ மஹாபாரதம்

## ஆதிபர்வம்

வசன காவியம்

இது

த. சண்முகக்கவிராயரவர்கள்

வசனரூபமாகச் செய்தருளிய பிரதிக்கிணங்க

வரகவி திரு. அ. சுப்ரமணியபாரதியாரால்

சுத்தப் பிரதியாகப் பரிசோதிக்கப்பட்டு

வாவிள்ள ராமஸ்வாமி சாஸ்த்ருலு அண்ட் ஸன்ஸ்

292, எஸ்பிளனேட், சென்னை

அவர்களால்

ஸ்ரீராமா அச்சியந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டது

---

1928

உ

செந்திலாண்டவன் திருவடி துணை

# முகவுரை

பரதகண்டத்தில் மக்களுடைய அறிவை அபிவிருத்தி செய்து அவர்களை உய்வித்தற்குச் சாதகமாக விளங்கும் நூல்களில் பாரதம், இராமாயணம், ஸ்காந்தம், பாகவதம் என்னும் இந்நான்கும் சிறந்தவை. இந்நூல்கள் மக்களுடைய வாழ்க்கைக்குரிய ஒழுக்கங்களைப் போதிப்பதுமல்லாமல் அவர்கள் தெய்வாநுக்ரஹத்தை அடைவதற் கேதுவான பக்தியையும் மெய்ஞ்ஞான போதனைகளையும் போதிக்கத் தக்கவை என்பது யாவரும் அறிந்த விஷயமாகும்.

அன்றியும் இந்நூல்கள் கேவலம் நீதிகளையும் சரித்திரங்களையுமே விளக்குவனவா யிராமல் தெய்வமகிமையையும் அடியார் பெருமையையும் விளக்குவன. அதனாலேயே இவை, புகழுடம்புபெற்ற புண்ணியர்களைப்போல் அழியாநிலையில் உலகமெங்குங் கொண்டாடத்தக்க சிறப்புடன் நீடூழி காலமாக விளங்குகின்றன. இவைகளின் பெருமையை அயல்நாட்டாரும் வியந்து பேசுகின்றனர்.

இவைக ளிப்படியிருக்க, நம்மவருக்கு இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்க ளுண்டு. வேதங்கள் விதிவிலக்குகளைப் போதித்து மக்கள் பேரின்ப வீடடைவதற்குச் சாதகமான போதனைகளைச் செய்யும். அத்தகைய உயர்ந்த போதனையை இந்தப் பாரதமும் செய்யத் தக்க தென்பது பெரியாருடைய துணிபாதலினால், இதனை ஐந்தாம்வேதம் என்று புகழ்கின்றனர். பாரதம் ஓதின் காரியஜயம் உண்டாகுமென்று அநுபவஞானிகள் கூறுவதால், இதற்கு ஜயம் என்றும் பெயருண்டு. இதற்குச் சமானமான நூல் உலகத்தி லில்லை என்பது மேதாவிகளின் அபிப்பிராயம். இதனை ஐயந்தீர ஓதுபவர் சுருதி, ஸ்மிருதி இதிஹாஸ புராணங்களின் இரகஸ்யார்த்தங்களை இனிதுணரலாம்.

இந்த உயர்ந்த நூல் ஸம்ஸ்கிருத பாஷையில் வெகு விஸ்தாரமாயுள்ளது. அந்த நூலும் இப்பொழுது தமிழ்ப்பாஷையில் வெளிவந்துள்ளது. பாரதத்தைத் தமிழில் வெண்பாவினால் கடைச்சங்கப்

புல்வரிலொருவராகிய **பெருந்தேவனார்** என்பவர் இயற்றியருளினார். கடந்த சில நூற்றாண்டுகளுக்குமுன்னே மகாமேதவியாக விளங்கிய **வில்லிபுத்தூரார்** என்னும் தமிழ்ப் புலவர் பெருந்தேவனார் இயற்றியதையே ஆதாரமாகக் கொண்டு மிகச்சுருக்கமாகத் தமிழில் விருத்தப்பாவால் பாடியருளினர். அப்பால் புலவர் **நல்லாப்பிள்ளை** என்பவர், அதனுடன் இடை இடையே பாடல் விரவி வரும்படி கதையை விரித்துப் பாடி அதனை விஸ்தாரப்படுத்தினர். அந்தச் செய்யுள் நூலையொட்டி, வித்வான் த. **சண்முகக்கவிராயர்** என்பவர் தமிழுலகுக்கு ஒரு வசனநூல் தந்தருளினர்.

ஸ்ரீமான் சண்முகக் கவிராயர் கடந்த ஐம்பது வருடங்கட்கு முன்னர் இருந்தவரென்று தெரியவருகிறது. அவர் பிரசங்கஞ் செய்வதில் மகா சமர்த்தர் என்று அவர் பிரசங்கங் கேட்டு மகிழ்ந்த பெரியார் கூறுகின்றனர். அவர் எழுதிய இந்த வசனம் பண்டிதரே யன்றிப் பாமரரும் விரும்பி உற்சாகத்துடன் படித்துப் பயன்பெறத்தக்கபடி இனிமை வாய்ந்துள்ளது. இதுபோன்ற வசனம் எழுதுபவர் இக்காலப்புலவரிற் காண்ப தரிதென்று கூறினும் பிழையாகாது.

இந்த அழகிய நூலை, சில புத்தகவியாபாரிகள் அச்சிடத் தொடங்கினர். அவர்கள் மெல்லிய காகிதத்தில் அச்சுப்பிழைகளுடனும் அச்சிட்டு வந்தபடியால் இப்புத்தகத்திற்கு நாளடைவில் கௌரவமும் குறைந்தது. அந்தக்குறையை நீக்கவேண்டுமென்கிற எண்ணம், தமிழ்பாஷையிலுள்ள உயர்ந்த நூல்களை வெளியிட முன் வந்துள்ள **வாவிள்ள இராமசாமி சாஸ்த்ருலு அண்டு ஸன்ஸ்** புத்தகசாலையின் அதிபராகிய **ஸ்ரீமான் வேங்கடேச்வர சாஸ்த்ருலு** அவர்களுடைய திருவுளத் துதித்தபடியால், இப்பெரிய நூலை அச்சிடத்தொடங்கி, இப்பொழுது நல்ல உயர்ந்த காகிதத்தில் ஆப்டோன்களுடன், அச்சுப்பிழைகளில்லாமல் **ஆதிபர்வத்தை** வெளியிட்டிருக்கின்றார்கள். மற்ற பருவங்களும் அச்சாகி வருகின்றன. அவை விரைவில் ஒன்றின்பின் ஒன்றாக வெளிவரும். சாஸ்திரிகள் அவர்களுக்குப் பொருள்வசதியும் அச்சுக்கூட வசதியும் கடவுள் திருவருளால் அமைந்திருக்கிறபடியால் இடையில் ஒருவிதமான இடையூறுக்குமுள்ளாகாமல் இந்தப் பெரிய நூல் இனிது முடியுமென்பதற்கையமில்லை.

இந்த நூலில், நான் என்னு லியன்றவரையில் அச்சுப்பிழைக ளைப் பரிசோதித்து உதவியதுமன்றி, மாணவரும் மாதரும் எளி திற் படித்தற்கேற்றபடி பதங்களையும், பிரிவுகளையும் (paragraph) ஒழுங்குப்படுத்தி யுள்ளேன். வேறெதுவும் சேர்க்கவில்லை. இது சைவ, வைணவ, ஸ்மார்த்த, மாத்வசமயிகள் எவரும் விரும்பத் தக்கபடி பேதமில்லாமல் அமைந்துள்ளதாதலால் இது எல்லோரும் போற்றத் தக்க நூலாகும்.

இதனை இனிக் கலாசாலைப் புத்தகசாலைகளுக் குபயோகிக்கும் படி கல்விபிலாகா அதிகாரிகள் அங்கீகரித்தலும் பொருத்தமுடைய தாகும்.

இதுபோல் மற்றப்பாகங்களையும் விரைவில் அச்சிட்டு முடிக் கத்தக்க ஊக்கத்தை, சாஸ்திரிக ளவர்களுக்கு எல்லாம் வல்ல இறை வன் கொடுத்தருள்வானாக!

இராயப்பேட்டை.
14—9—28.

திரு. அ. சுப்ரமண்ய பாரதி.

உ

# ஸ்ரீமகாபாரதம்

## ஆதிபர்வம் விஷய-அட்டவணை

### ஸ்ரீமஹாபாரத வரலாறு

பக்கம்.

பக்கம்.

உ

கடவுள் துணை

# ஸ்ரீமகாபாரதம்

## சிறப்புப்பாயிரம்

### கணபதி துதி

நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராஜன் மாபார தஞ்சொன்னநாள்
ஏடாக வடமேரு வெற்பாகவங்கூ ரெழுத்தாணிதன்
கோடாக வெழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ.

### மும்மூர்த்திகள் துதி

உலக மாக்கலுங் காக்கலு முண்மையால்
இலக நீக்கலு மென்றுந் தவிர்கலார்
சலச வாண்மலர்த் தாள்களென் னெஞ்சினு
நிலவு சென்னியி னுநிலை யாமரோ.

### கலைமகள் துதி

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வையை யாற்றிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளரு கின்றாள்.

### வேதவியாசர் துதி

வேத மாதி விளங்கிய நூலெலாம்
ஓதி யாரு முளிந்தெளி வெய்திடப்
போதி யாநின்ற புங்கவ னன்புடை
வாத ராயணன் றன்னை வழுத்துவாம்.

## அவையடக்கம்

முன்சொலாகிய சொல்லெலா முழுதுணர் முனிவன்
தன்சொலாகிய மாப்பெருங் காப்பியந் தன்னைத்
தென்சொலாலுரை செய்தலிற் செழுஞ்சுவை யில்லாப்
புன்சொலாயினும் பொறுத்தருள் புரிவரே புலவோர்.

## இந்நூல்செய்தற்குக்காரணம்

அகத்தியன் பயந்த செஞ்சொ லாரணங் கப்பு யாதன்
முகத்தினில் வாழு மந்த மொய்குழ லருளி னாலே
பகைத்தெதிர் பொருத தெய்வப் பாரத கவியை முந்நீர்ச்
செகத்தினிற் கதைய தாகச் செய்கெனச் செய்த தன்றே.

## வாழ்த்துக்கவி

ஏழ்பெ ருங்கடன் மாநில மெங்குநல் லறமே
சூழ்க வண்டமி ழோங்குக தேங்குக சுருதி
வீழ்க பைம்புயல் விளங்குக வளங்கெழு மனுநூல்
வாழ்க வன்புடை யடியவர் மன்னுமா தவமே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

உ

கடவுள் துணை

# ஸ்ரீமாஹபாரத வரலாறு

---

## சூதபுராணிகர் நைமிசாரணியம் வருதல்

[நெடிய கடல் சூழ்ந்த உலகத்தில், தவத்துக் குபயோகமாக் இருக்கின்ற திவ்ய க்ஷேத்திரங்களெவற்றினு மிகவுஞ் சிறப்புற்றோங்கி விளங்குகின்ற நைமிசாரண்யத்தில், சௌனகர் முதலாகிய இருபத் தாறாயிர முனிவர்களுங்கூடி இருக்கிற தருணத்தில், சூதமுனிவர் வந்தார். அவரை அந்த இருபத்தாறாயிர முனிவர்களுங் கண்ட வுடன் எழுந் தெதிர்கொண்டு அழைத்துவந்து, அர்க்ய பாத் யாதிகள் கொடுத்து, பிரம்மாசனம் போட்டு, சோடச உபசாரமுஞ் செய்து இருக்கச்சொல்லி யோகக்ஷேமங் கேட்டபின்பு ஒரு வசனஞ் சொல்லுவதானார்கள்—

"ஓ தபோநிதியான சூதமுனிவரே! ஓ சகல புராணங்களையும் சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த மஹானுபாவரே! நீர் இவ் விடத்திற்கு வந்தது, நாங்களெல்லாம் கடைத்தேறுவதற்கு மூல காரணமேயன்றி வேறொன்றில்லை. ஆனால் உம்மை ஒரு மனு கேட்டுக்கொள்ளுகிறோம். அஃதென்னெனில் - முன்னந் தங்க ளுடைய வாக்கினாலே, மச்சியம் - கூர்மம் - வராகம் - வாமனம் - பிரமம் - வைணவம் - பாகவதம் - சைவம் - இலிங்கம் - பௌடிகம் - நாரதீயம் - காருடம் - பிரமகைவர்த்தம் - காந்தம் - மார்க்கண் டேயம் - ஆக்கினேயம் - பிரமாண்டம் - பதுமம் - ஆகிய பதினெண் புராணங்களையும் கேட்டுணர்ந்தோம். இனி ஐந்தாம் வேதமென்று கூறப்பட்ட பாரதகதையைக் கேட்க விருப்புற் றிருக்கின்றோம்" என, அதைச் சூதமுனிவர்கேட்டு, "ஓ முனிவர்களே! நீங்கள் கேட்ட பாரதகதையை முன்னம் ஜனமேஜய மஹாராஜன் கேட்டுப் பாபரகிதனானான். அவ்வளவு சிலாக்கியமான பாரத கதையை நீங்களுங்கேட்டு ஆனந்த மடையும்படியாக யாம் சொல் லுகிறோம் கேளுங்கள்" என; அதற் கம்முனிவர் சூதமுனிவரை வணங்கி, "இப்பாரதக் கதையைக் கேட்ட அவ்வரசன் யாவன்?

முறைவழுவாமல் இக்கதையை அவ்வரசனுக்குக் கூறினவர் எவர்? அக்கதையைக் கூறவுங் கேட்கவும் அவர்க்கேற்பட்ட காரண மென்ன? இவைகளையெல்லாங் கிருபைசெய்து சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்" எனலும் சூதமுனிவர் கூறத் தொடங்கினர்.]

## 1. ஜனமேஜயன் அரசியற் சருக்கம்

முருகார் மலர்த்தாம முடியோனை யடியார் முயற்சித்திறந்
திருகாமல் விளைவிக்கு மதயானை வதனச் செழுங்குன்றினைப்
புருகூதன் முதலாய முப்பத்து முக்கோடி புத்தேளிரும்
ஒருகோடி பூதேவ ருங்கை தொழுங்கோவை யுறவுன்னுவாம்.

ஓ சௌனகாதி முனிவர்களே! மலர்மிசை வீற்றிருக்குந் திசைமுகனாற் சிருஷ்டிக்கப்பட்ட இந்த உலகம் ஏழுபிரிவாகி, அவ்வப்பிரிவிற் சிறந்த பொருள்களாகிய, நாவல் - இறலி - குசை - கிறவுஞ்சம் - புட்கரம் - தெங்கு - கமுகு - என்பனவற்றின் அபிதானத்தால் ஏழுதீவுகளாய் இருக்கின்றன. அவற்றுள் நாவலந் தீவாகிய இஃது, அங்கம் - அருணம் - அவந்தி - ஆந்திரம் - இலாடம் - யவனம் - ஒட்டியம் - கருசம் - கலிங்கம் - கன்னடம் - கன்னுடம் - காசம் - காஸ்மீரம் - காந்தாரம் - காம்போசம் - கிராடம்- குருகு-குடகம்-குந்தளம் - குரு - குலிந்தம் - கூர்ச்சரம் - கேகயம்- கேரளம் - கொங்கணம் - கொல்லம் - கோசலம் - சகம் - சவ்வீரம்- சாலவம் - சிங்களம் - சிந்து - சீனம் - சூரசேனம் - சோழம் சோனகம் - திராவிடம் - துளுவம் - தெங்கணம் - நிடதம் - நேபாளம் - பாஞ்சாலம் - பப்பரம் - பல்லவம் - பாண்டியம் - புலிந்தம் - போடம் - மகதம் - மச்சம் - மராடம் - மலையாளம் - மாளவம் - யுகந்தரம் - வங்கம் - வங்காளம் - விதற்பம் - என்னும் ஐம்பத்தாறு தேசங்களை யுடையது இத்தீவிலிருக்கும் நாடெல்லாவற்றிலும் மிகவுஞ் சிறப்புற்று, பரமனிடப்பாகத்து விளங்கும் பார்வதியைப் பெற்று வளர்த்த இமயமலையையும், அப்பரமன் சடாடவியில் வாழ்ந்திருக்கும் மந்தாகினியையு முடைத்தாகி, அறிவுடைமை - அன்புடைமை - அருளுடைமை - பொருளுடைமை - பொறையுடைமை - வலியுடைமை - ஒழுக்கமுடைமை - முதலிய வற்றைப் பெற்று, தருமாதிகளை வழுவாது வளர்த்து வருவதில்

மேன்மை யடைந்திருக்கின்றது குருக்ஷேத்திரம்! அக் குருக்ஷேத்திரத்தில் அஸ்தினபுர மென்றொரு நகருண்டு. அந்நகரம் சந்திரகுலத் தரசருக்கு அரசு செலுத்தும் நகராகி, சொர்க்க - மத்திய - பாதாள - லோகங்களி லிருக்கிற நகரங்களைத் தன் வளப்பத்தினால் வென்று, அந்த மூன்று லோகங்களில் சஞ்சரிப்பவர்கள் நிரந்தரந் தன்னை விட்டு நீங்காமலிருக்கத்தக்க மங்கல வோசையையும் வேத கோஷ்டத்தையும் பெற்றிருக்கின்றது. அந் நகரத்துக்கு ஓரரச னுண்டு. அவன் யாரென்றால், சந்திர வமிச பரம்பரையிற் றோன்றி, சக்ரவாளகிரி பரியந்தம் தன்னாணையைச் செலுத்தி, சத்துருக்களை நாசஞ்செய்து மித்துருக்களைப் பரிபாலித்து நல்லொழுக்கத்தில் நின்றோர்க்கெல்லாம் யாதொரு குறைவும் வராமல் வேண்டியவற்றையுதவி, மன்னுயிரைத் தன்னுயிர்போலக் காப்பாற்றுந் தயாநிதியாகிய பரிட்சித்து மஹாராஜனுடைய புத்திரன் ஜனமேஜய மஹாராஜன். அந்த ஜனமேஜயன் தன் தந்தையிலும் எண்மடங் கதிகமாக நன்மையை விளைத்து அரசு செலுத்தி வருகிறநாளில், ஒருநாள் சத்திர யாகஞ் செய்ய யத்தனித்து அந்த யாகத்துக்குச் சமைத்த சாலையி லினிது வீற்றிருக்கிற தருணத்தில், தேவகுலத்திற் பிறந்த குக்குரன் மனைவி சரமை யென்பவள் பெற்ற சிறுவர்களில் சார்மேய னென்பவன் அந்த யாகசாலையிற் புகுந்தான். அவன் புகுந்ததை அந்த ஜனமேஜய மஹாராஜன் சகோதரர்களாகிய சுதசேனன்-பீமசேனன்-உக்கிரசேனன்-இம்மூவருங் கண்டு, அச்சார்மேய னென்பவனை அடித்துத் துரத்திவிட்டார்கள். அச் சார்மேயன் மிகுந்த துயரத்தை யடைந்து, தன் தாயாகிய சரமையினிடத்துச் சொல்லித் துக்கித்தான். அதைக் கேட்டமாத்திரத்தில் அந்தச் சரமை அதி வேகமாய் வந்து, யாகசாலை யிலிருந்த ஜனமேஜய மஹாராஜனைக் கண்டு, "ஓ அரசனே! யான் பெற்ற மக்களில் மிகுந்த இளமைப்பருவத்தையுடைய சார்மேயனென்பவனை யாதொரு காரணமுமின்றி உனது தம்பிமார் அடித்தார்களாம்; அது தருமமா? தருமசாஸ்திரங்களைக் கற்றுணர்ந்து என்போலிய ஏழைகளைப் பாதுகாக்கின்ற மஹாராஜனே!" என்று முறையிட்டுப் பொறுமையைப் பூஷணமாக உடைய அந்தச் சரமை அந்தர்த்தானமாய்ப் போய்விட்டாள்.

உடனே அரசன் திகிலடைந்து, இதென்ன ஆச்சரியமென்றேங்கி, விரைவில் அந்தச் சத்திரயாகத்தை நிறைவேற்றித் தன்

ணகரமாகிய அஸ்தினபுரத்திற்கு வந்து, பழையபடி சிலநாள் அரசு செய்து, ஒருநாள் சரமை சொல்லிய வாக்கியத்தை நினைத்துப் புத்தி மயங்கி, "இந்தப் பொல்லாங்குக்கு என்ன செய்கிறது? அந்த அம்ம னிருந்தால் அவளிஷ்டப்படி நிறைவேற்றிவிடலாம். அதற்கில்லாமல் அந்த அம்மன் அந்தர்த்தானமாய்ப் போய்விட்டனள். இனி இதற்கு யென்ன செய்யலாம்" என்றேங்கித் தனது மந்திரி முதலானவர்களை நோக்கி, "நான் வருகிறபரியந்தம் சகல ஜீவாத்மாக்களுக்கும் யாதொரு குறைவும் வராமல் விசாரணைசெய்து கொண்டிருங்கள்" என்று கட்டளையிட்டுத், தான் காட்டுக்குப்போய்ச் சிலநாளிருந்து பின்பு சோமாசிரவசுவென்னும் முனிவரைக் கண்டு, மிகுந்த அன்புடனே வணங்கி எழுந்துநின்று, சரமை யென்பவளால் தனக்கு நேரிட்டிருக்கிற குறையையும் யாகவிக்கினத்தையுஞ் சொல்லி முறையிட்டான். அதற் கம்முனிவர் "சாந்தியாகஞ் செய்தால் உன் மனக்குறை நீங்கும்" என, அவ்வாறே அரசன் அம்முனியைக் குருவாகக் கொண்டு அந்த யாகத்தை அவ்வனத்திலேயே நிறைவேற்றி அனேக தான தருமங்களைச் செய்து தன் மனக்குறை நீங்கி எப்போதும் போல நற்குணமுடையவனாய்த் தன்னகரத்தில்வந்து அரசாட்சி செய்துகொண்டிருந்தான்.

ஜனமேஜயன் அரசியற் சருக்கம் முற்றிற்று.

---

## 2. உதங்கமுனிச் சருக்கம்

---

ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வரச னிவ்வாறிருக்க, உதங்க னென்னும் பெயரையுடைய பிரமசாரிப் பிராமணரொருவர் சகல சாஸ்திரங்களிலும் வல்லவராய் ஞானசுரூபியாய் விளங்குகின்ற பயிலவ முனிவரிடத்தில் நான்குவேதம் - ஆறுசாஸ்திரம் - அறுபத்து நான்கு கலைக்கியானம் முதலாகிய சாஸ்திரங்களைக் கற்க விரும்பி அவரை யடுத்து, அந்தமுனிவர் தன்மேல் அன்புடையவரா யிருக்கும் பொருட்டுப் பயபக்தியுடனே வழிபட்டு வருகிறநாளில் அம்முனிவர் இந்த உதங்கன் நினைத்துவந்த கருத்தின்படி ஐயந்திரிபில்லாமலிருக்க எல்லா நூல்களையு முணர்த்தினார். அதன்மேல் அவ்வுதங்கன் மகிழ்ந்து குருவாகிற பயிலவமுனிவரை வணங்கி, "தாங்கள் என் கல்வியின்பொருட்டு எடுத்துக்கொண்ட பிரயாசைக்குக் குருதக்ஷிணை

கொடுக்க விரும்புகிறேன். அதற்குத் தங்கள் கருத்தை வெளியிட வேண்டும்'' என்று பிரார்த்தித்தான். அம்முனிவர் உதங்கனை நோக்கி, "எனக்கு ஒன்றும் தேவையில்லை'' என்று மறுத்தார். மறுபடியும் உதங்கன் வேண்டினான். அம் முனிவர் உதங்கனைப்பார்த்து, "அப்பா! எனக்கொன்றும் வேண்டுவதில்லை என்றாலும் உனது மனம் திருப்தியாகாமையால், என் பத்தினியிடத்திற் சென்று கேள். உன் தாயாகிய என் பத்தினி எதைக் கேட்பாளோ அதைக் கொண்டுவந்து கொடு'' என்று கட்டளையிட்டார். அவ் வுதங்கன் அக்கட்டளையைச் சிரமேற் கொண்டு சென்று, குருபத்தினியாரைக் கண்டு வணங்கிக் குருவினிடத்து நிகழ்ந்தவைகளைச் சொல்லிப் பயபக்தியுடனே யெதிர்நின்று, "அம்மணி! இதற்குத் தங்கள் கருத்தை வெளியிட வேண்டும்'' என்று கேட்டனன். அதற்கவ் வம்மையார் இந்த உதங்கன் பக்தி விசுவாசத்துக்கு மகிழ்ந்து, "ஓ உதங்கா! மனுசாஸ்திர விதி பிசகாமற் செங்கோல் செலுத்தித் தன்னுயிர்போல் மன்னுயிரனைத்தையும் புரக்கும் பௌடியந்த மஹாராஜனுடைய மனைவி செவியி லணிந்திருக்கிற கோடி சூரியப் பிரகாசமாகிய நாசரத்தினக் கம்மலை கொண்டுவந்து கொடுப்பாயாகில் அதுதான் குருதக்ஷிணை'' என்று சொல்ல உதங்கன் கேட்டு மிகுந்த களிப்படைந்து, அந்தக் கம்மலை இந்தனை நாளிற் கொண்டுவந்து கொடுக்கிறேன் என்று கெடுவிட்டு வணங்கி விடைபெற்றுக்கொண்டு பௌடியந்த மகாராஜன் நகரத்தைக் குறித்து வருகிறபோது, தாவள்யமான வெள்ளை எருதின் மேல் ஒரு திவ்விய புருஷன் வந்து இவனை வழிமறித்தான். அதுகண்ட உதங்கன் அப் புருஷனுக்கு வந்தனஞ்செய்து, "குருதக்ஷிணை நிமித்தம் பௌடியந்த மஹாராஜன் நகரத்திற்குப் போகின்றேன். நீர் ஏன் என்னை மறிக்கிறீர்?'' என, அப்புருஷன் "இந்த வழியில் என் னுத்தரவில்லாமற் செல்லொணாது. நீ குருதக்ஷிணையின் நிமித்தமென்று சொல்லுகிறபடியால் இவ்வெருதின் கோமயம் அருந்துவாயாகில், உன்னை இவ்வழியிற் செல்ல விடை கொடுப்பேன்'' என; அவ்வாறே அவ் வுதங்கன் அவ்வெருதினது கோமயத்தை யருந்தி, அந்தப் புருஷனுடைய உத்தரவு பெற்று, மலையைப்போலத் திரண்ட தோளையும் அளவற்ற புகழையு முடைத்தாகிய பௌடியந்த மஹாராஜன் அரண்மனைக்கு வந்து, தன் வரவைக் காவலாளர்களால் அவ்வரசனுக்குத் தெரிவித்து, அவ்வரசன் வந்தனை வழிபாடு செய்ய அவைகளை யேற்று, அவ்வரசனுக்குப் பல

ஆசீர்வசனங்கள் சொல்லி, அவ்வரசனிட்ட பொற்பீடத்திலிருந்து, "ஓ மகாராஜனே! எனக்குக் கல்விபயிற்றிய பயிலவமுனிவருக்குக் குருதக்ஷிணை கொடுக்க யத்தனித்து வணங்கி நின்றேன். அதற்கம் முனிவர் "நமது பத்தினியார் கருத்துக் கிசைந்ததைக் கொடு" வென்றார், உடனே அந்த அம்மையாரைக் கண்டு வணங்கி என் கருத்தினைக் கூறி, "தாயே தங்கட்கு என்ன வேண்டும்?" என்று கேட்டதற்கு உமது நாமத்தைக் கூறி உமது மனைவியா ரணிந்திருக்கும் கம்மலைக் கொண்டுவந்து கொடுக்கும்படி கூறினர். அந்த அம்மையாருக்கு இத்தனை நாளில் கொண்டுவந்து கொடுக்கிறேனென்று கெடுவிட்டு உமதிடத்துக்கு வந்தேன்" என்றான். அதை அவ்வரசன் கேட்டு மகிழ்ச்சி யடைந்து, "அந்தப்புரத்தில் என் மனைவி யிருக்கிறாள். நீர் போய் நான் கொடுக்கச் சொன்னேனென்று சொல்லி அக் கம்மலை வாங்கிக்கொள்ளும்" என் றனுப்ப அவ்வுதங்கன் அந்தப் புரத்திற்சென்று எங்குந்தேடி அந்தராஜன் மனைவியரைக் காணாமல் மறுபடியும் இராஜனிடத்தில் வந்து, "ஓ மஹாராஜனே! உமது மனைவியார் அந்தப்புரத்திலில்லை" என்றான். அரசன் "ஓ மஹானுபாவா! என் மனைவி அசுசியாயிருக்கிறவர்கள் கண்களுக்குத் தோன்றாள். நீர் அசுசியா யிருக்கிறதாய்த் தோற்றுகிறது. சுசியாய்ச் செல்லுவீராகில் உமது கண்களுக்குத் தோற்றி நீர் கருதிய பொருளைக் கொடுப்பாள்'! என்றான். உதங்கன் "ஆ! ஆ! நான் வெளியில் திரிந்து வந்தவனாதலால் அசுசியாக விருக்கலாம்" என்று ஒப்புக்கொண்டு, தீர்த்தக் கரைக்குப்போய் ஸ்நான - சந்தி ஜெப - தப முதலிவற்றை முடித்துக்கொண்டு, சுசியாய் மீண்டு மவ்வரண்மனையிற் சென்றான். உடனே அந்த மஹாபதிவிரதை எதிரில் வந்து வணங்கி அவ்வுதங்கன் கேட்காததற்கு முன்னமே தானணிந்திருந்த கம்மலைக் கையிலேந்தி, "இதோ வாங்கிங் கொள்ளும்" என்று ஒரு வசனஞ் சொல்லுகிறாள்—

சொர்க்கவாசியாகிய ஒரு பெரியவர் ஏதோ ஒரு காரியார்த்தமாய் நாகலோகத்திற்குச் சென்று ஆதிசேஷனைக் கண்டு திரும்பி வருகிற தருணத்தில், அந்த ஆதிசேஷன் அந்தப் பெரியவர்க்குக் காணிக்கையாகத் தனது சிரோரத்தினங்களில் சிலவற்றைக் கொடுத்தான். அவைகளைப் பெற்றுக்கொண்டு அப் பெரியவர் சொர்க்கத்துக்குப் போகிறபோது எனது அரசனது நல்லொழுக்கத்தைக் கேள்விப்பட்டுக் காணவந்தார். அப்போது நானும் என்னரசனும் சிங்கார

வனத்தி லிருந்தோம். அந்தவிடத்திற்கு அவர் வந்து, எங்களால் செய்யப்பட்ட வந்தனை வழிபாடுகளைப்பெற்று ஆசீர்வாதஞ் செய்து என்னைப் பார்த்து, "ஓ அம்மா! மகாலட்சுமியைப்போல் ரூபவதியாயும் அருந்ததியைப்போல் கற்புடையவளாயுமிருக்கின்ற உன்னை எவராகிலும் பார்ப்பாரானால் உமது ரூபத்தில் இச்சை கொள்வார். அதனால் ஏதாகிலும் கிஞ்சித்து வருத்தம் நேரிடும். அவ்வகைப் பட்ட வருத்த முனக்கு நேரிடாதிருக்கும்படி இதோ இந்த இரத்தினத்தைக் கொடுக்கிறேன். இந்த இரத்தினத்தைக் கம்மலிலழுத்திச் செவியில் அணிந்து கொள். நல்லொழுக்கத்தின்கண் நின்ற மகாத்துமாக்களுக்கும் உன் புருஷனுக்குமே யன்றி, மற்ற துராத்மாக்கள் கண்ணுக்கும் கிஞ்சித்து அசுசியா யிருக்கிறவர்களுக்கும் உன்னுருவும் தெரியாது. அதனாலே உன் கற்புக் கழிவு வாரதென்று வாழ்த்திக் கொடுத்துப் போயினர். அப்படியே நான் அந்த நாகரத்தினத்தை ஓராபரணமாக்கிக் காதி லணிந்திருந்தேன். பின்பு ஆதிசேஷன் இந்தச் சேதிதெரிந்து 'நமது லோகத்துப் பொருள் சொர்க்கலோகத்திலன்றிப் பூலோகத்தி லிருக்கிறது தகுதியல்லவே இதற்கென்ன செய்வோம்' என்று தனது மந்திரிகளோடு யோசிக்கும்போது தக்ஷகன் எழுந்து வணங்கி, 'யான் எவ்விதத்திலும் அந்த இரத்தினத்தைக் கொண்டுவந்து கொடுக்கிறேன்' என்று உறுதி கூறிவந்து இந்த நகையைக் கொண்டுபோக இங்ஙனேதானே வெகு ஜாக்கிரதையாகக் காத்துக்கொண் டிருக்கிறான். ஆகையால், இந்த உடைமையை மறதியா யெங்கேயாகிலுங் கீழே வைக்கப் போகிறீர். அப்படிவைப்பீராகில் மோசம்வரும்; சொன்னேன். மேலும் இக்கம்மலை அணிந்துகொள்ளப்போகிற பயிலவமுனிவர் மனைவியோ மிகுந்த கற்புடையவளா யிருந்தபோதிலும், இப்போது நான்சொல்லிய சங்கதியையும் அவளுக்குக் கிஞ்சித்துத் தெரியப்படுத்தும்" என்று சொல்லி அந்த நகையைக் கொடுத்தாள்.

உதங்கன் அந்தக் கம்மலைப் பெற்றதை விட அவ்வரசன் மனைவியாருடைய கற்புடைமைக்கு அதிக மகிழ்ச்சியடைந்தவனாய் அரசனிடத்து வந்து "கம்மலைப் பெற்றுக்கொண்டேன்; விடைதர வேண்டும்" என அரசன் அந்த உதங்கனை நோக்கி "ஓ மஹானுபாவா! இன்றையதினம் என்மனையிற் புசித்துப் பின்பு உமதிடத்திற்குச் செல்லும்" என்று அன்புடனே கேட்டுக் கொள்ள, உதங்கன் ஒத்துக் கொண்டு, அவ்வரசனோ டந்தப்புரத்திற்குச் சென்று அவ்வரசனுந்

தானும் உண்கின்றபோது, அச்சாதத்தில் ஓர் மயிரிருக்கக் கண்டு அவ்வுதங்கனுக்குக் கோபம் பிறந்து அரசனை நோக்கி, "கலத்திற் சோற்றையிட்டுக் கழுத்தை யறுத்ததுபோல் அசுசியாயிருக்கிற அன்னத்தைப் படைத்து என்னைப் பசித்திருக்கச் செய்தனையே! இக்குற்றத்தினாலுனது கண்ணொளி இழந்துபோகக்கடவது" என்று சாபமிட, அரசன் "ஐயா! இக்குற்றம் என்னால் நேரிட்டதல்ல; அப்படியல்லவென்று அக்குற்றத்தை என்னதாக பாவித்தாலும், அக்குற்றத்திற்குத் தக்க சாபமிடாமல் விபரீதசாப மிடலாமா? யோசிக்காமல் சினங்கொண்டு சாபமிட்டதினால், நீர் கலியாணமின்றித் தேசசஞ்சாரியா யிருக்கக்கடவீர்" என்று அந்த உதங்கனுக்கு அரசன் மறுசாபமிட, அதனால் கோபமாறிய உதங்கன் அரசனை நோக்கி, "எனக்குக் கொடுத்த சாபம் என்னையடையாதிருக் கக் கிருபைசெய்யவேண்டும்" என்று வேண்டிக்கொள்ள அரசன் நகைத்து, "ஐயனே! உலகத்தையாளும் அரசர்களிட்டசாபத்திற்கு மறுசாபங் கொடுப்பதை எங்கேயாகிலும் கேட்டதுண்டா? இல் லையே, ஆதலால் நானிட்டசாபத்திற்கு மறுசாபமில்லை. தேவரீர் எல்லாநூல்களையுங் கற்றுணர்ந்து சித்தசாந்தமடைந்த பரமாத்மா வாகையால் எளியேன்மீது கிருபைகூர்ந்து, நீரிட்ட சாபத்தை நீக்கவேண்டும்" என்று கேட்டுக்கொள்ள உதங்கன் மகிழ்ந்து, தான் அவ்வரசனுக்கு முன்னிட்ட சாபத்தை நீக்கி விடை பெற்றுக் கொண்டு, அந்தக் கம்மலைக் கைசோரவிடாமல், மிகுந்த ஜாக்கிரதை யுடனே எடுத்து வந்தான்; அவனுடைய குருவாகிய பயிலவமுனி வர் ஆசிரமத்தைநோக்கிச் செல்லுகையில் சூரியன் அஸ்தமித்தான். அதுகண்டு சந்தியானுஷ்டானம் செய்ய அந்த உதங்கன் ஒரு குளத் தருகில் வந்து அந்நகையைப் பூமியில் வைத்துச் சந்தியானுஷ்டா னத்தைச்செய்து கொண்டிருந்தான். அப்போது துஷ்டனாகிய தக்ஷ கன் ஒரு பிராமணனாய் வேடந்தரித்துவந்து அந்நகையை யெடுத்துக் கொண்டு போக அதனைக்கண்ட உதங்கன், அத்தக்ஷகனை விடாமற் பின் பற்றி அதிவேகமாய்ச் சென்றான். அந்தத்தக்ஷகன் உதங்கனிடம் அகப்படாமல் தன் லோகத்திற்குச் சென்றான். இந்த உதங்கனும் அந்த நாகலோகத்திற்குச் சென்றான். இதனையுணர்ந்து தக்ஷகன் நாக லோகத்தி லிருக்கிறவர்களில் ஒருவராகிலும் இம்முனிவன் கண்ணுக் குத் தோன்றாமலிருக்க மாயஞ்செய்து மறைந்தான். இம் முனி வன் மிகுந்த துன்பத்தை யடைந்து, "எரிந்த கோபத்தைக் கொண் டிருப்பதைவிட அதிக மகிழ்ச்சியில் மறதியைக்கொண் டிருக்கிறது

கெடுதிக்கெல்லா மேலான கெடுதியென்று நூல்களா லறிந்திருக்கிறது மன்றி, இந் நகையைக்கொடுத்த அவ்வம்மையாரும் நமக்கு ஞாபகப்படுத்தி யிருந்தும் '**விளக்கைப் பிடித்துக்கொண்டு கிணற்றில் விழுந்தவர்போல**' ஆனேமே" யென்று பலவாறு தன்னைத்தானே நிந்தித்துக்கொண்டு அந்த நாகலோகத்தைச் சுற்றிச்சுற்றி வந்தான். பார்க்குமிடமெல்லாம் ரத்நமயமாகிய மாடமாளிகைகளும் சிங்கார வனங்களும் தாமரைத் தடாகங்களுமேயன்றி வேறொருவரும் அவன் கண்ணுக்குத் தோன்றவில்லை, ஆனால் ஒரு பக்கத்தில் இரண்டு ஸ்திரீகள் பவளம்போன்ற தமது விரல்களில் கறுப்புநூலையும் வெள்ளைநூலையும் சுற்றிக்கொண்டிருக்கவும், அதற்கப்புறம் பன்னிரண் டிதழுடன் கூடி அறுகோணம்போ லிருக்கிற ஒரு பீடத்தையும் அப்பீடத்தின் கோணங்கடோறும் பொருந்திய ஆறு குமாரர்களையும் பார்த்து வியந்து பின்பு "நாகலோகத்தி லிருக்கிறவர்களைத் துதித்தாலல்லது நமது குறை நீங்காது" என்று கருதி, அவ் வுலகத்தாரைத் துதிக்க யத்தனித்துச் சொல்லுகிறான் "ஓ மஹா தபோநிதியான காசிப முனிவருடைய புத்திரரே! பார்வதிசமேதராய் விளங்கும் ஸ்ரீ கைலாசபதியாகிய பரமன் கைவில்லுக்கு நாணாகித் திருமரு மார்பனாகிய திருமாலுக்குப் பாயலாகி இந்த ஏழுலோகத்தையும் பணாமுடியிற் றாங்கித் தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்து விளங்குகின்ற உபகாரிகளே! என் குரு பத்தினியார்க்காகக் கொண்டுவந்த நகையைக் கொடுத்து இரக்ஷிக்க வேண்டும்" என்று பலவாறு தோத்திரஞ்செய்தான். செய்தும் "**அபாத்திரத்திற் பிக்ஷையிட்டது போல்**" பயன்படாமலிருக்கக் கண்டு, மிகுந்த வல்லமையையுடைய உதங்கன் மனங்கலங்கி ஒன்றுந் தோன்றாமல் பிராணனை விட்டுவிடுவோ மென்று நிற்கிற தருணத்தில் வாயுகதியோடு கலந்த திவ்ய அஸ்வத்தின்மேல் அக்கினி சுரூபியாகிய ஒரு தேவ புருஷன் அவன் கண்ணுக்கு முன் வந்தான். உடனே அவ்வுதங்கன் தரித்திரனுக்குத் தனப்புதையல்கிடைத்தா லெப்படியோ அப்படிப்போல மகிழ்ந்து, அந்தத் திவ்ய புருஷனை வணங்கித் தான் குருகிமித்தம் வந்ததையும் வந்தவிடத்தில் நடந்ததையும் சொல்லி முறையிட்டான்.

அந்தப் புருஷன் உன் கருத்தென்னவென்று வினவ, "என்னை வஞ்சித்த இந்த நாகலோகத்தாரெல்லாரும் நடுங்கி எனக்கு வழிபட வேண்டும்" என்று கேட்டுக்கொள்ள, ஆனலிந்த அஸ்வத்தின் செவி

யில் ஊது" என்று வந்தபுருஷன் கூற, உதங்கன் அவ்வஸ்வத்தின் செவியில் ஊதினான். உடனே ஒரு அழற்சி உண்டாயிற்று. அதனால் பஞ்சாயுதங்களுடைய திருமால் செய்யுஞ் சங்கத் தொனியைக் கேட்ட அசுரரைப்போல் பாதாளலோகத்தி லிருக்கிற யாவரும் துடிதுடித்துப் பதைபதைத்து நடுநடுங்கிக் கடுகடுத்து விடவிடத்து நெஞ்சுலர்ந்தனர்; "ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்! இந்தச் சத்தமும் அழற்சியும் ஒருநாளும் கண்டதில்லையே; இன்றையதினம் இவ்வகைப்பட்ட கெடுதி நேரிட்டது என்னகாரணம்! ஐயோ வைதிக நிலைமைபூண்ட ஒரு மஹாத்மாவுக்கு நம்மினத்தி லொருவனாகிய தக்ஷகன் செய்த கடூரமான வஞ்சனையே இதற்குக் காரணம்" என்று பலவாறு நினைந்துருகி, அந்நாகலோகத்தி லிருக்கிற யாவரு மொருமிக்கக் கூடி, எடுத்துவந்த கம்மலை அத் தக்ஷகனுலேயே யம் முனிக்குக் கொடுப்பித்தார்கள். அவ் வுதங்கன் கம்மலை வாங்கிக்கொண்டு பரமானந்தத்தை யடைந்து, "இந் நகையை நமது குருபத்தினிக்குச் சேர்ப்பிக்க வேண்டுமே: நாமோ நாகலோகத்தி லிருக்கிறோம். இனி இதற்கென்ன செய்வோம்" என்று இடிவிழுந்த மரம்போ லேங்கி நிற்கிற தருணத்தில், மறுபடியும் முன்குறித்த மஹாபுருஷன் பின்னும் அஸ்வத்துடன் தோன்றி, "ஓ பிர்மசாரி! இன்னும் நீ கிலேசப்படவேண்டிய காரணமென்ன?" என்று வினவ, "ஆண்டவனே! இத்தனை நாளில் இந்த நகையைக் கொண்டுவந்து கொடுக்கிறேனென்று நான் என் குருபத்தினிக்குக் கெடுவிட்டு வந்தேன். அந்த கெடுவு தப்பாமல் நகையை அவர்களிடம் சேர்க்கவேண்டுமென்று யோசித்து வருந்துகிறேன்" என்று உதங்கமுனி கூற, அப் புருஷன் "இதோ இந்தக் குதிரையின்மே லேறு; ஒரு நொடியில் இது உன்னை உன் குருபத்தினியாரிடத்தில் கொண்டுபோய் விடும்" என்றான். உதங்கன் மிகுந்த களிப்படைந்து அக் குதிரையின்மே லேறினான். அக்கணம் பயிலவ முனிவர் ஆசிரமத்திற் கொண்டுவந்து விட்டு அவ்வஸ்வம் மறைந்து போயது.

அப்பால் அந்த உதங்கன் குருபத்தினியைக் கண்டு வணங்கிக் கம்மலைக் கொடுத்தான். அந்த அம்மன் உதங்கனை வாரித் தழுவி, "அப்பா மகனே! இந்நகைக்கு வெகு பிரயாசைப் பட்டுக்கொண்டு வந்த உன் பக்திக்கு மெச்சினேன்" என்று வாழ்த்த, உடனே உதங்கன் அந்த அம்மன் உத்தரவு பெற்றுக்கொண்டு, தன் குருவாகிய பயிலவ முனிவரிடத்துக்கு வந்து வணங்கிப் பயபக்தியுடனே எதிர்

நின்றான். அப்படி நின்ற சிஷனைப் பார்த்து, "அப்பா மகனே! குரு விசுவாசத்தில் உன்னைப்போன்றவர் இவ்வுலகி லொருவருமில்லை" என்று அவனைத் தழுவி, மிகுந்த அன்புடனே நோக்கி ஒரு வசனஞ் சொல்லுகிறார்—"ஓ சகல சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தவர்களிலும் சகல பற்றினையும் நீக்கின மகாத்மாக்களிலும் சிறந்த சற்புத்திரனே! பௌஷியந்த மஹாராஜன் மனைவி காதிலிருக்கும் கம்மலைக் கொண்டுவந்து கொடுக்கப்போன நீ, இத்தனை நாள் வரைக்கும் தாமசப்பட்டு வராதிருந்ததற்குக் காரணமென்ன?" என்று கேட்டார். உதங்கன் அரசனிடத்திற் சென்று கம்மலைப் பெற்று நாகலோகம்போய் இவ்விடம் வந்துசேர்ந்த விர்த்தாந்தத்தை ஆதியோடந்தமாகச் சொல்லி, மறுபடியும் குருவைப் பார்த்து ஒருவசனஞ் சொல்லுகிறான்—"ஓ ஐயனே! நான் இவ்விடம்விட்டுப் பௌஷியந்த மஹாராஜன் பட்டணத்தை நோக்கிச் செல்லுகையில், வெள்ளை எருதின் மேலேறி ஒரு திவ்யபுருஷன் வந்து என்னை மறித்து 'இவ்வழியே போகிறதற்கு உனக்கு மனமிருந்தால் இந்த எருதின் கோமயத்தைப் புசித்தால் போகலாம்; இல்லாவிட்டால் நானுன்னைப் போகவொட்டேன்' என்று மறித்தான். பின்பு நாகலோகத்திற் செல்லுகையில் இரண்டுஸ்திரீகள் தமதுவிரல்களில் கறுப்புநூலையும் வெள்ளைநூலையும் சுற்றிக் கொண்டிருந்தார்கள். மற்றொரிடத்தில் அறுகோண பீடமும் கோணத்துக்கு இரண்டிதழும் ஆறு குமாரருமிருந்தார்கள். நான் அந்த நாகலோகத்திற் சென்று திக்குத்திசை தெரியாமல் இருக்கின்ற தருணத்தில் அஸ்வத்தின்மேல் ஒரு சௌந்தரிய புருஷன் வந்து என்னை இவ்விடத்துக்கு வரும்படி செய்வித்தான். என்னாற்கூடிய மட்டும் யோசித்துப்பார்த்தும், அவர்க ளின்னாரென்று என் கருத்துக்குத் தோன்றவில்லை. ஆண்டவனே! கிருபைபுரிந்து அவர்களை இன்னாரென்று யான் உணர்ந்துகொள்ளப் போதிக்கவேண்டும்" என, பயிலவமுனிவர் உதங்கனைப்பார்த்துக் கூறுகின்றார்:—

"தம்பி உதங்கா! பௌஷியராஜனைக் காணப் போகிறபோது வழியில் வெள்ளை எருதிலேறிவந்து மறித்தவ னிந்திரன். அவ்வெருதோ வெள்ளையானை. கோமயமோ அமுதம், பாதலலோகத்தில் கறுப்புநூலும் வெள்ளைநூலும் விரலிற் சுற்றிக்கொண்டு இரண்டு ஸ்திரீக ளிருந்தார்களே, அவர்களில் ஒருத்தி தாதை. மற்றொருத்தி விதாதை. கறுப்புநூலும் வெள்ளைநூலும் இரவும்பகலுமாம் ஆறு

கோணமும் கோணங்கடோறும் இரண்டிதழும் ஆறுகுமாரரும் என்னவென்றால், அறுகோணம் பூமி, கோணங்கடோறும் இரண்டிதழிருந்தது பன்னிரண்டு மாதம். அந்தக் குமாரரும் ஆறு இருதுக்கள். உன்முன் குதிரையோடு தோன்றின புருஷன் வருணன். அக்குதிரையோ அக்கினிபகவான். நீ குருபக்தியுள்ளவனாதலால் உனக்குத் தேவரெல்லாஞ் சகாயம் செய்தார்கள். உன்னைப்போன்ற கனவான் இவ்வுலகத்தில் யாருமில்லை. இனி நீ தவநிலைசேர்ந்து தவஞ்செய் " என்றார்.

உதங்கன் மகிழ்ந்து குருவாக்கியத்தை சிரமேற்கொண்டு சில நாள் தவம்புரிந்து தன்னை வருத்தப்படுத்திய தக்ஷகனுக்கு ஒரு கெடுதி செய்யவேண்டுமென்று மனதில்நினைத்து, சந்திரவமிச சிகாமணியாகிய ஜனமேஜய மஹாராஜன் சபைக்கு வந்தான். உடனே அரசன் கண்டு எதிர்கொண்டுபோய் அழைத்துவந்து சோடசோபசாரஞ்செய்து பொற்பீட மளித்து இருக்கச்சொல்லி யோகக்ஷேமங்கேட்டு "ஓ முனிசிரேஷ்டராகிய ஐயனே! தேவரீரிவ்விடத்திற்கு எழுந்தருளிய காரணமென்னவோ எளியேனுக்குத் தெரியவில்லை" என்று மிகுந்த பயபக்தியுடனே வினவ உதங்கமுனி சொல்லுகிறார்: "ஓ மஹாராஜனே! எனக்குக் கல்வி பயிற்பிய பயிலவர்க்குக் குருதட்சணையாகப் பௌடியந்த மஹாராஜன் மனைவி தரித்திருந்த கம்மலை வாங்கி வருகிறபோது, என்னை வஞ்சித்து அந்த நகையைக் கொண்டுபோய் எனக்கு மிகுந்த வருத்தத்தையுங் கொடுத்த தக்ஷகனையும் அவனோடு சம்பந்தப்பட்டவர்களையுந் தண்டிக்கவேண்டி சர்ப்பயாகஞ் செய்ய உம்மை நாடிவந்தேன்" என, அரசன் முனிவரை நோக்கி, "ஐயனே! சிறியோர் செய்த பிழை பொறுப்பது பெறியோர் தன்மை. அப்படியல்லவென்று தண்டிக்கப் புகுந்தால் குற்றவாளியைத் தண்டிக்க வேண்டுமேயன்றி, அவர்களின் இனத்தாரைத் தண்டிப்பது தகுதியா?" என, உதங்கன் அம்மொழியைக் கேட்டு, குலத்திலொருவன் சிறப்படைந்தால் அச்சிறப்பைக் குலமுழுதும் அடையும். அதுபோலக் குலத்திலொருவன் குற்றவாளியானால் அக்குலமுழுதும் குற்றமாகும். இது திருஷ்டாந்தமாகும்படி ஒரு கதை சொல்லுகிறேன் கேளும்" என்று உதங்க மஹாரிஷி சொல்லுகிறார்—

**உதங்கமுனிச்சருக்கம் முற்றிற்று**

---

# 3. பிருகுமுனிச் சருக்கம்

ஓ அரசனே! ஒரு வனத்தில் பிருகுமுனி தம் மனைவி புலோமிசையோடு வாழ்ந்துவந்த நாளில், புலோமிசை கர்ப்பவதியானாள். அப்படியிருக்க அம்முனிவர் வழக்கப்படி ஔபாசனக்கினி பூசித்து வந்தார். ஒரு நாள் சூரியன் அஸ்தமன மடையக்கண்டு அவர் தம் மனைவியை யழைத்து, "நான் வருகிறபரியந்தம் இந்த ஓமத்தை நடத்திவா" என்று கட்டளையிட்டு ஸந்தியாவந்தனஞ் செய்யப் போனார். புலோமிசை பூர்ண கர்ப்பமா யிருந்தபோதிலும், கணவனிட்ட கட்டளையைத் தள்ளாமல் அந்த ஓமத்தைப் பூசித்து வந்தாள். அப்படிச் செய்கிற தருணத்தில், ஓமகுண்டத்தெழுந்த அக்கினிதேவன் பிரஸன்னமாகி அந்த அம்மன் கொடுக்கிற ஆகுதியை ஏற்று, அக் குண்டத்தின் மத்தியிலிருந்தார். அந்த வேளையில் ஓர் அரக்கன் அவ் வனத்திற் பிரவேசித்தான். அவன் அந்த ஓம வெளிச்சத்தைக் கண்டு அங்கே வந்து, ஓமஞ் செய்கிற முனி பத்தினியைப் பார்த்தான்; துராத்துமா வாகையால் கெடுதியான நினைப்பை மனதில் எண்ணினான்; பின் அந்த ஓமகுண்டத்தில் விளங்கும் அக்கினி தேவனையும் கண்டான்; கண்டதும், "அக்கினி! உனக்கு முன்னிருக்கிற பெண் யார்? உனக்குத் தெரியுமா?" என்று வினவினான். அக்கினிதேவன் இவன் யாரோ அரக்கன் என்று மதித்து, "ஓ அரக்கனே! இந்த அம்மன் பிருகு முனிவரின் பத்தினியார்" என்று உள்ளபடி சொல்ல, அரக்கன் கேட்டு, "இந்தப்பெண் பிருகு முனிமனைவியா? சீ! சீ! நான் சொல்லுகிறதைக்கேள். நான் சிறுபோது இவளை விவாகம் செய்தேன். என்னை மோசஞ்செய்து இந்தமுனிவனெடுத்துக்கொண்டுவந்து இவளைக்கலியாணஞ் செய்துகொண்டான். இவளைத் தேடித் தேடி எனது காலுந் தேய்ந்துபோய்விட்டது. இவ்வனத்தில் இப்போது கண்டேன். இனி இவளை விடப்போகிறதில்லை" என்றுசொல்லி அதிவேகமாய் வந்து அந்த அம்மாளை தூக்கிக் கொண்டு சென்றான். அந்த அம்மாள் அதிர்ந்து நடுங்கி பயந்து கூக்குரலிட்டு அலறினாள். பூர்ண கர்ப்பவதியாகையால் பயத்தினால் அவ்விரக்கன் தோளிலேயே புத்திரனைப்பெற்றாள். அந்தப் புத்திரன் ஞானசிகாமணியாய் உதித்தபடியால் தன் தாய்க்குக் கெடுதி நினைத்த துராத்மாவைக் கோபித்து நோக்கினான். அந்த நோக்கத்தில் இரண்டு அக்கினிப் பொறிகளுண்டாய் அவனுடலைப் பஸ்மீகரமாக்கி விட்டன. இந்த மகத்துவத்தைக் கண்ட புலோ

மிசை புத்திரன்மேல் மிகுந்த அன்புடையவளாய் வாரித்தழுவி யெடுத்துக்கொண்டு தன் னாசிரமத்துக்கு வந்தாள்.

உடனே, பிருகுமுனி ஸந்தியா நுஷ்டானத்தை முடித்துக் கொண்டுவர, அவரைப் புலோமிசை கண்டு அலறிக் கூக்குரலிட் டழுது சொல்லுகிறாள்: "ஆண்டவனே! ஓமஞ் செய்யச்சொல்லி எனக்குக் கட்டளையிட்டுப் போனபின்பு அவ்வாறு நான் அந்த ஓமத் தை நடத்த, அக்கினிபகவான் பிரசன்னமாகி அக்குண்டத்தின் மத்தியிலிருந்து நான்கொடுக்கும் ஆகுதியை ஏற்று நிற்கிற தருணத் தில், ஓர் அரக்கன் வந்து என்னை எடுத்துக்கொண்டு போனான். நான் பயந்து அலறிக் கூக்குரலிட் டழுதுகொண்டு அவன் தோண் மேற் செல்லுகையில் இக் குமாரனைப் பெற்றேன். இக் குமாரன் அந்தத் துராத்மாவைக் கோபித்து நோக்கினான். அந்த வேளையில் இவனது நேத்திரத்திலுண்டாகிய தீயினால் அவ்வரக்கனுடல் சாம்ப ராயிற்று. உடனே நான் குமாரனை எடுத்துக்கொண்டு இவண் வந்து சேர்ந்தேன்" என்றாள். பிருகுமுனி கோபித்து,"ஓ பெண்ணே! வீட்டிலிருந்த உன்னை அவன் எவ்விதத்திலுணர்ந்து எடுத்துப்போ னான். அவன் எடுக்கிறபோது அக்கினிதேவன் சும்மாவிருந்தாரா?" என்று கேட்டார். புலோமிசை "நாதா அந்த அரக்கன் வந்து என்னை யாரென்று அக்கினிதேவனைக் கேட்டான். அத்தேவன் தங்கள் நாமத்தைச்சொல்லி இன்னார் மனைவி என்று சொன்னார். அதன்மேல் என்னை அவ்வரக்க னெடுத்தான்" என்றாள். பிருகுமுனி உடனே அந்த அக்கினிதேவனை அழைத்து "என் மனைவியை அரக்கனுக்குக் காண்பித்தபடியினாலே நற்கந்தமாத்திரம் புசிக்கிற நீ இனிமேல் துர் கந்தத்தையும் புசிக்கக்கடவாய்" என்று சாபமிட்டார். அக்கினி தேவன் மிகுந்த வருத்தத்தை யடைந்து, "ஓ முனிநாதா! அவ் வரக்கன் உன் பத்தினியைப் பார்த்து இவள் யாரென்று என்னைக் கேட்டான். உண்மை கூறுவதே பரலோகத் தின்பமென்று மேலோ ருரைத்திருக்கிற படியாலும், நான் எல்லாவற்றிற்குஞ் சாட்சியான படியாலும் உண்மையைச் சொன்னேன். அதற்காக எனக்கு இவ் வகைப்பட்ட சாபமிடலாமா? நீர் பிராமணராகையால் என்ன குற் றம் செய்தபோதிலும் பொறுப்பது என்போலியர் கடைமை யென்று பெரியோர்கள் விதித்திருக்கிறார்க ளாதலால். உனக்கு மறு சாபங்கொடாமல் பொறுத்தேன்" என்று சொல்லி உலகமுழுதும் நிறைந்திருக்குந் தன் அம்சத்தைக் கிரகித்துக்கொண்டு ஓரிடத் திற் பதுங்கி யிருந்தான்.

பின்பு உலகத்தில் அக்கினியில்லாமற் போயிற்று. யாகாதிக் கிரமங்கள் ஒன்றும் நிறைவேறாமல் எல்லா உலகத்தார்களும் கனவருத்தமடைந்து இந்திரனிடத்துவந்து முறையிட்டனர். இந்திரன் பிரமனிடத்துச் செல்ல, பிரமன் யாவரையும் அழைத்துக்கொண்டு அக்கினிதேவனிருக்கிற இடத்துக்கு வந்து அவரை அழைத்து, "ஓ அக்கினிதேவனே! பிருகுமுனி கொடுத்த சாபத்துக்கு மறுசாபம் கொடுக்கிறேன். அஃதென்னவென்றால் பிருகுமுனியிட்ட சாபத்தின்படி துர்க்கந்தத்தைப் புசித்தாலும் அதனால் வருங் குற்றம் உன்னை அடையாதிருக்கக்கடவது. மேலும் நீ இப்போதிருக்கிற விதத்திலும் மேலாக இனி விர்த்தியாகக்கடவாய்! நீ வந்து முன் போல் உலகங்களில் நிறைந்திரு" என்று கட்டளையிட்டார்; அந்தப் பிருகுமுனி பத்தினி அழுதகண்ணீரை வீணாகப் போகவொட்டாமல் ஒரு நதியாக்கி, அதற்கு வதுசரை என்று பெயரிட்டுத் தமது லோகத்துக்குப் போய்ச் சேர்ந்தார். பின்பு பிருகுமுனி தம் குமாரனுக்குச் சௌனகனென்று பெயரிட்டு அதிக விருப்பத்துடனே வளர்த்து, நாலுவேதம் ஆறுசாஸ்திரம் அறுபத்துநாலு கலைக்யான முதலியவற்றைப் போதித்தார். அப்புத்திரனும் அவைகளைக் கற்று, வல்லவனானான்; பின் ஒருவனத்திற் சென்று தவத்திலிருந்தான்.

அந்தச் சௌனகமுனி நெடுங்காலந் தவத்திலிருந்தமையால், அம்முனிவரைப் புற்று மூடிக்கொண்டது. இப்படிச் சிலநாள் சென்றபின்பு இரவிகுல திலகனான சர்யாதிமகாராஜன் வேட்டையாடத் தனித்து, மந்திரிபிரதானி முதலானவர்களோடு மற்ற நால்வகைத் தளமும் தன்னைச் சூழ்ந்துவரத் தன்மகளாகிய சுகன்யையோடு பிரயாயாணப்பட்டு ஒருவனத்தில் வந்து, விலங்கினங்களெல்லாங் கலங்கி நெட்டுயிர்ப்போடு மரணாவஸ்தையடைய வேட்டையாடி, அவ்வேட்டையினாலுண்டாகிய இளைப்பாற, நெருங்கித் தழைந்த சோலைகள் சூழ்ந்த இந்தச் சௌனகமுனி தவஞ்செய்யும் வனத்தில் வந்து, தனது தண்டு தளங்களைவிட்டிறங்கியிருந்தான். அந்தவேளையில் அவ்வரசன் குமாரத்தியாகிய சுகன்யை சில தாதிமார்களுடனே அவ்வனத்திலுள்ள விநோதங்களைப் பார்க்கச் சென்றாள். அப்படிச் செல்லும் வழியில் இந்தச்சௌனகமுனியை மூடியிருந்த புற்றிருந்தது. அதில் முனிவரின் கண்ணொளி பாய்ந்திருந்ததை யறியாமல், இதென்ன இந்தப்புற்றில் இரண்டு ஒளிகளுண்டாகி இருக்கின்றனவென்று அந்தச் சுகன்யை ஒரு சுப்பலெடுத்து அவ்வொளிவழியாகக் குத்தி விட்டு

வந்து விட்டாள். சுப்பலால்குத்தின குத்து இந்தச் சௌனகமுனிவரின் கண்ணிற்பட்டது. அதனாலே அம்முனிவருக்குக்கோபமுண்டாயிற்று. முனிவரிருக்கிற இடத்துக்கு ஒருவர் வரக்கூடாது. வந்தது மல்லாமல் இவ்வகைப்பட்ட துஷ்டத்தனஞ் செய்கிறதா வென்று கொதித்து, அந்த சர்யாதி மகாராஜனும் அவன் மந்திரியுந் தவிர மற்றவர்க்கெல்லாம் கண்ணொளி மழுங்கச் சாபமிட்டார். உடனே அவ்வரசன் சேனைக ளனைத்தும் தத்தித்தடுமாறி "குருடுபரவி விட்டதே இதென்ன ஆச்சரியம்" என்று கூக்குரலிட, அதனை அரசன் கண்டு, "ஓ மந்திரி! இதென்ன விந்தை? நமது சேனைகள் கண்ணொளி மழுங்கி வருத்தப்படுகின்றன. ஐயோ! அதனை உணர்ந்து சொல்" என, மந்திரி சற்று நேரம் ஆலோசித்து, "ஓ அரசனே! இந்தவனம் முனிவர்களுடையதா யிருக்கவேண்டும். நமது சேனைகளாலே ஏதோ ஒரு குற்றம் முனிவர் எவருக்கேனும் நேரிட்டிருக்க வேண்டும். அதனால் இத்துன்பம் வந்ததாய்த் தோன்றுகின்றது" என, அரசன் தனது தளத்தை நோக்கி, "இவ்வனத்தில் யாராவது துஷ்டத்தனஞ் செய்திருந்தால் தெரிவியுங்கள்" என்று பறைசாற்றுவித்தான். அப்பறை யோசையைக் கேட்டதும் சுகன்யை தன் தந்தைதாளில் வந்து வணங்கி, "ஒருபுற்றில் இரண்டொளி உண்டாயிருக்கக்கண்டு அவைகளைச் சுப்பலால் குத்தினேன்" என, அரசன் கேட்டுத் திகிலடைந்து அப்புற்றைக் காட்டச் சொல்லி அந்த இடத்துக்குப்போய் அப்புற்றைச் சோதிக்க, அதில் சௌனகமுனிவர் விளங்கினர். அம்முனிவரை அரசன் கண்டு மிகுந்த பயபக்தியுடனே வணங்கி அனேகவிதமாய்த் தோத்திரஞ் செய்து "என்புத்திரி செய்த பிழையைப் பொறுத்து இரட்சிக்க வேண்டும்" என்று வேண்ட, அம்முனிவர் மகிழ்ந்து முன்னிட்ட சாபத்தை நீக்கி அவ்வரசனுக்குப் பல ஆசீர்வாதஞ் செய்தார். அதன்மேல் அரசனுக்கு மிகுந்த மகிழ்ச்சியுண்டாய், "ஓ முனிநாதரே! இந்தச் சுகன்யை என் புத்திரி. இவள் செய்த குற்றத்தை மன்னித்ததற்காக இப்பெண்ணை உமக்குக் கலியாணஞ்செய்து கொடுக்க விரும்புற்றிருக்கிறேன்" என, அம்முனிவர் அவ்வரசன் கருத்தின்படி சம்மதிக்க, உடனே அரசன் அவ்விடத்திலேயே கல்யாணமண்டபமியற்றித் தன் குமாரத்தியைக் கன்னிகாதானமாகக் கொடுத்து, அம்முனிவரிடத்து விடைபெற்றுத் தனது நகரத்திற்குப்போய்ச்

சேர்ந்தீன். பின்பு இந்தச் சுகன்யையை அம்முனிவர் தமக்குப் பணிவிடை செய்ய வைத்துக்கொண்டார்.

இப்படிச் சிலகாலஞ் சென்றபின்பு, ஒருநாள் அந்தச் சுகன்யை தனது கணவன் பூஜைக்கு ஜலந்திரட்டிவரச் சென்றாள்.

அப்போது அவ்வழியில் எதிரில் அஸ்வனிதேவர்கள் இருவரும் வந்தார்கள். அவர்கள் சுகன்யையைக் கண்டதும் "பெண்ணே! நீயார்? உனது பெயரென்ன? உனது கணவன் யார்? அவன் பெயரென்ன?" என்று கேட்க அதற்கு அந்தச் சுகன்யை "யான் சர்யாதி ராஜன் பெண். என் கணவர் சௌனகமுனிவர். என்பெயர் சுகன்யை" என, அஸ்வனிதேவர்கள் அப்பெண்ணின் கற்பினிலையை யறிய எண்ணி "ஓ பெண்கள் நாயகமே! உன் னிளமைப் பருவத்துக்குத் தகுந்த கணவனைத் தேடிக்கொள்ளாமல் மிகுந்த கிழத்தனத்தை யுடையவராய் ஐம்புலனு மொடுங்கினவராய் விளங்குகின்ற சௌனகமுனிவரைக் கணவனாகக் கொண்டதில் நீ கண்டபல னென்ன? ஒன்றுமில்லையே! ஆதலால் எங்க ளிருவரில் யார்பேரில் உனக் கிச்சை யிருக்கிறதோ அவரைக் கணவனாக்கிக் கொள். அதனாலே நீ உன் அழகுக்குப் பயனடைவாய்" என்றார்கள். சுகன்யை மறுமொழி சொல்லாமல் மௌனமாய்த் தனது கணவனிடத்து வந்து வணங்கித் தன்னை இருவர் வந்து மறித்துக் கூறிய வசனங்களைப் பிசகில்லாமல் சொல்லி நின்றாள். முனிவர் தமது ஞான திருஷ்டியினால் அஸ்வனிதேவர்களென்று உணர்ந்து "பெண்ணே! நீ அவர்களிடத்திற் சென்று உங்களி லொருவரை மணஞ்செய்து கொள்ளுகிறேன். ஒருவர் ஏற்படுங்கள் என்று சொல். அவ்விருவருக்கும் வழக்கு நேரிடும். அதன் பின்பு என்னிடத்துக்கு வருவார்கள். அதன் மேல் பேசவேண்டியதைப் பேசிக்கொள்ளலாம்" என்று கூறி அனுப்ப அந்தச் சுகன்யை மஹா பதிவிரதையாதலால் கணவன் கூறியபடி அஸ்வனிதேவதைகளிடத்து வந்து "உங்களிருவரில் ஒருவரைக் கணவனாகக் கொள்கிறேன். ஏற்படுங்கள்" என்றாள். அதைக்கேட்ட அவ்விருவரும் ஒருவர்க் கொருவர் வழக்கிட்டு "இவ்வழக்குக்குத் தீர்ப்பு சௌனகமுனிவர்தான் சொல்லவேண்டும்" என்று கருதி அப்பெண்ணை அழைத்துக்கொண்டு சௌனகமுனிவரிடத்துக்குப் போய் தங்கள் வழக்கைச் சொன்னார்கள். அச் சௌனகர் அவ்விருவரையும்பார்த்து "அப்பெண்ணுக்கு நானுமொரு

பாத்தியஸ்தனுதலால் உங்களைப்போல் எனக்கும் வழக்கிருக்கின்றது" என்று கூற, "ஆனல் முனிவரே நாமெல்லோரு மற்றெருருவரிடத்திற் சென்று வழக்கைத் தீர்த்துக்கொண்டு மூவரிலொருவர் இந்தச் சுகன்யையை மணஞ்செய்து கொள்வோம்" என்று பேசிக் கொண்டு போகிறபோது ஒரு சுனையைக்கண்டு தங்களுக்குள் ஒரு தீர்மானஞ் செய்துகொண்டு சுகன்யையைப் பார்த்து, "ஓ பெண்ணே! இச்சுனையில் மூவருமுழுகி யெழுந்துவருகிறேம். உனக்கு இஷ்டமான புருஷனைத் தொடு" என்று சொல்லி இம்மூவரும் அந்தச்சுனையில் முழுகி வெளிப்பட்டார்கள். அதில் கிழத்தனத்தையுடைய சௌனகரும் அந்த அஸ்வனிதேவர்கள் எவ்வுருவத்தோடு வெளிப்பட்டார்களோ அவ் வுருவத்தைக்கொண்டு வெளிப்பட்டார். மூவரும் ஒரே ரூபமாய் நிற்கக்கண்ட சுகன்யை தன்கணவனைத் தியானித்துத் தெய்வ கடாக்ஷமெப்படியோவென்று மனதில் நினைத்துக் கடவுளைச் சாஷ்டாங்கமாய் வணங்கி யெழுந்துநின்று ஒருவரைத் தொட்டாள். அப்படித் தொட்ட புருஷன் சௌனகமுனிவரா யிருக்கக்கண்டு, அசுவனி தேவர்கள் மஹா பதிவிரதையென்று மதித்து வாழ்த்தி, விடை பெற்றுத் தங்கள் லோகம்போய்ச் சேர்ந்தார்கள்.

பின்பு சௌனகமுனிவரும் அந்தச் சுகன்யையும் ஆச்ரமத்திற் சுகமாயிருந்தார்கள். அப்பால் சுகன்யை ஒரு புத்திரனைப் பெற்றுள். அப்புத்திரனுக்குச் சனகனென்று பெயரிட்டார்கள். அச்சனகன் சகல கலைக்கியான சொரூபியாய் மகா நிலைபெற்ற தவசிலாக்கியனுய், ஒரு மகாமுனி புத்திரியை விவாகஞ்செய்து உரூருவனைப் பெற்றுன். அவ்வுரூருவன் ஒரு முனிபுத்திரியை விவாகஞ்செய்து வாழுகிற நாளில், ஒருநாள் சந்தியாநுஷ்டானஞ் செய்யப்போனுன். அப்படி அவன்போய் வருகிறதற்குள் ஆசிரமத்திலிருந்த அவன் மனைவி பாம்பினுற் கடியுண்டு விஷந் தலைக்கேறி, கைகால்களை உதறிக் கொண்டு மரணவஸ்தைபி லிருந்தாள். அந்த உரூருவன் வந்து கண்டு, இடிவிழுந்த மரம்போ லேங்கி மதிமயங்கி, யாதொன்றுந் தோன்றுமல் பிரமைகொண்டு நின்று, சற்றுநேரத்திற்குப்பின் ஒருவிதமாய்த் தேறி, அவ்விஷத்துக்குத் தகுந்த சிகிச்சைகள் செய்தான். செய்தும் பயன்படாமல் மனைவி இறக்கவே மூர்ச்சையடைந்து, பின்பெழுந்து அழுது, "ஐயோ! பெண்ணே! இதுவரையில் பூவும் மணமும்போலும் பாலும்நீரும்போலும் வேற்றுமையின்றி வாழ்ந்து வந்தோம். உன்னை, இப்போது இறக்கவிட்டுத்

தனியே பிரிந்திருக்க என்னால் முடியவில்லையே: என்ன செய்வேன்" என்று பலவாறு துக்கித்துத், தன்னுயிரையும் விட யத்தனித்த போது, ஆகாயவாணி அதட்டினாள். உரூருவன் இந்தச் சத்த மேதென்று நாலுதிசையும் நோக்குகிறபோது, மறுபடியும் ஆகாய வாணி "ஓ! உரூருவா" என்று அழைத்தாள். அதனால் ஆகாய வாணி யென்று அறிந்து வந்தனைவழிபாடு செய்து நின்றான். அப்போது ஆகாய வாணி "ஓ உரூருவா! உன்மனைவி விதிகிழிந்து பாம்பின்வாயிற் பட்டாள். அவளுக்காக நீயும் உயிர்விட யத்த னிப்பது தகுதியா? அந்த மனைவியின் பேரில் மிகுந்த அன்பு உனக்கு உண்டாயிருந்தால் உனது ஆயுளில் பாதி கொடுத்தால் அவள் முன்போல் உயிர் பெறுவாள்" என்று உறுதிகூற, இந்த உரூருவன் அக்கணம் தன்னாயுளில் பாதியைத் தத்தஞ் செய்தான். உடனே மனைவி உயிர்பெற்று நித்திரைசெய்து எழுந்ததுபோல எழுந்தாள். உரூருவன் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தவனாய் அவளை வாரித் தழுவி நடந்த விருத்தாந்தத்தைக் கூறி, "இவ்வளவு வருத்தத்தை யுண்டாக்கினது பாம்பல்லவோ? அப் பாம்பினத்தை யெல்லாம் நிர்மூலப்படுத்துகிறேன்" என்று சபதஞ் செய்து ஒரு தண்டினை யேந்தி, யமனைப்போலக் காட்டிற் பிரவேசித்துப் பாம் பினத்தை வதைத்து நித்தம் நித்தம் ஆயிரம் பதினாயிரம் லக்ஷம் கோடி இப்படியாகக் கொன்றுவந்தான். அப்படி யிருக்கையில் ஒருநாள் ஒரு புற்றடியில் ஒரு பெரும்பாம்பிருந்தது. உரூருவன் அதனைப் பார்த்து அதிவேகமாக ஓடிக் கையிலிருந்த தண்டை வீசி அடிக்கப் போகும்போது அந்தப் பாம்பு "ஹரி ஹரி! கோவிந்தா! பரந் தாமா! சர்ப்பசயனா!" என்று ஓலமிட்டது. அதைப் பார்த்து அதிசயப்பட்டு. "ஓ நாகமே! நீயேன் கடவுளைத் தியானித்தாய்?" என்று உரூருவன் கேட்டான். நாகம் "ஓ மகாநிலைபெற்ற தவசிரேஷ் டரே யாதொரு குற்றமுஞ் செய்யாத என்னை அடித்துக் கொல்ல வந்தீர். அவ்வடிக்குத் தப்பிப் பிழைத்துப்போக என்னாற் கூடிய மட்டும் இப்புற்றில் நுழையலாமென்று அதிவேகமாக ஓடிவந்தும், உமது கதைக்கு இரையாகப் போய்விட்டோமே! எனக் கருதிக் கடவுளை நினைத்தேன்" என்று சொல்லிப் பின்னும் உரூருவனைப் பார்த்து, "ஓ முனிவரே! நீர் இப்படிப்பட்ட கொடுமையான செய்கை யில் பிரவேசித்த காரண மென்ன?" என்று நாகங் கேட்டது. உரூரு வன் நாகத்தினால் தன் மனைவிக்கு நேரிட்ட துன்பத்தை விளம்பி,

"அன்றுமுதல் இந்த விரதங்கொண்டு பாம்பினத்தை நாசப்படுத்தி வருகிறேன்" என்று சொல்லி, மீண்டுங் கதையினால் மோதுகிற சமயத்தில் அந்நாகம் மறைந்து, காவிகாம்பர சடாடவி தண்டு கமண்டலதாரியாய் ஒரு முனிவர்போல் எதிரில் தோன்றிற்று. உரூருவன் பார்த்து மிகுந்த ஆச்சரிய மடைந்தவனாய் நிற்கிறதருணத்தில் அம்முனிவர் உரூருவனை வணங்க உரூருவனும் அம் முனிவரை வணங்கி ஒருவர்க்கொருவர் வந்தன வழிபாடுகள் செய்த பின்பு உரூருவன் அம்முனிவரை நோக்கி, "அகஸ்மாத்தாய் இந்த இடத்தில் தோன்றின உமது விருத்தாந்தம் என்ன?" என்று கேட்க அம்முனிவர் சொல்லத் தொடங்கினார் :—

"ஓ முனிவரே ! நான் பிராமணன். எனக்கு ஆயிரபாதனென்று பெயர். ஒருநாள் ஒரு மகாமுனிவர் தவஞ்செய்கிற இடத்திற்குப் போய் அவர்பேரில் ஒரு துரும்பை எடுத்துப் போட்டுப் 'பாம்பு பாம்பு' என்று பரிகாசஞ் செய்தேன். அதன்மேல் அம்முனிவருக்குக் கோபம் பிறந்து 'பாம்பு பாம்பு என்று பரிகாசஞ் செய்தபடியால் நீ பாம்பாய்ப்போகக் கடவது' என்று சபித்தார். உடனே நான் பயந்து நடுங்கி அவரை வணங்கி இச்சாபம் என்றைக்குத் தொலையுமென்று கேட்டுக்கொண்டேன். தேவரீருடைய நாமதேயத்தைச்சொல்லி உமது தரிசனமானவுடன் சாப விமோசனமாம் என்று அருளினார். இன்றையதினம் உமது தரிசனத்தைக் கண்டு என் சாபத்தை நீக்கிக் கொண்டேன். இனி தங்களுக்கொரு விண்ணப்பம். அஃதென்னவென்றால்: இப்போது கொண்டிருக்கிற விரதம் தாங்கள் பூண்டிருக்கிற தவவேடத்துக்குத் தகுதியானதல்ல. அப்படி யல்லவென்று தவவேடத்தை மதிக்காமல் அவ்விரதத்தை நிறைவேற்றவேண்டுமென்று துணிவுகொண்டாலும் உமக்குச் சத்துருவாகிய நாகங்களைப் பற்றறச்செய்வதற்கு உம்மாற்கூடுமா? ஏனென்றால் அவைகள் இந்தப் பூலோகத்தில் மாத்திரமன்றிச் சொர்க்கலோகத்திலும் அண்டங்களிலும் நாகலோகங்களிலும் நிறைந்திருக்கின்றன. அவைகளையெல்லாம் எவ்விதத்தில் நாசஞ் செய்வீர். ஆதலால், ஓ முனிசிரேஷ்டரே ! அப்பாம்பினைப்பெற்ற மாதா "சந்திரவம்சத்தில் ஜனமேஜய னென்றொரு அரசனுதிக்கிறான். அவன் செய்கிற சர்ப்பயாகத்தில் நீங்கள் எல்லோரும் மடிவீர்கள்" என்று பாம்பினத்துக்கெல்லாம் சாபமிட்டிருக்கிறாள். அதற்குள் நீரேன்

வீண்வருத்த மெடுத்துக் கொள்ளுகிறீர்?" என, உளுருவன் அதனைக் கேட்டுத் தனது கோபத்தை யடக்கிக்கொண்டு தன் னாசிரமஞ் சேர்ந்து மனைவியோடு வாழ்ந்திருந்தான். கேட்டீரோ ஜநமேஜய மகாராஜனே! குலத்தில் ஒருவன் தீமைசெய்தால் அக்குலமுழுவதும் துன்பப்படும்" என்று உதங்கமுனி புகல, ஜநமேஜயன் அவ் வுதங்கமுனியை வணங்கி, "ஓ முனிநாதா! பெற்ற மாதாவானவள் பிள்ளைகள்பேரில் இரக்கமில்லாமல் சாபமிடவேண்டிய காரணமென்ன?" என்று வினவ, உதங்கமுனி சொல்லுகிறார்:—

பிருகுமுனிச்சருக்கம் முற்றிற்று

---

## 4. கருடபகவான் சருக்கம்

ஓ அரசனே! சாபாநுக்கிரக சாமர்த்தியத்தையுடைய காசிப முனிவர்க்குப் பதின்மூன்று மனைவிய ருண்டு. அவர்களில் விநதை கத்துரு என்னுமிருவரும் புத்திரரில்லை யென்று மிகுந்த துன்பத்தையடைந்து, நமது கணவனை நோக்கித் தவஞ்செய்வோமானால் அவர் கிருபையினால் புத்திரசந்தான முண்டாகு மென்று கருதி, அவர் தவஞ் செய்யும் கந்தமாதனவெற்பின் சாரலி னோரிடத்தில் வந்து தவஞ்செய்தார்கள். இப்படி இவர்கள் தவஞ்செய்கிறதைக் காசிப ருணர்ந்து அவ்விருவர் முன்னும் பிரசன்னமாய், "உங்கள் கருத்தென்ன?" என்று வினவ விநதை யென்பவள் வணங்கி, "ஆண்டவனே! யாவராலும் வெல்லக்கூடாத வல்லமையுடைய இரண்டு புத்திரரை யான் பெறக் கிருபை செய்யவேண்டும்" என்று கேட்டாள். மற்றொருத்தி காசிபரை வணங்கி 'சிறந்த பராக்கிரமமுள்ள நூற்றுநாலு புத்திரரும் ஒருபுத்திரியும் யான்பெறத் தயை செய்யவேண்டும்' என்று கேட்டாள். அவ்விருவர் கருத்தும் நிறைவேற முனிவர் புத்திரகாமேஷ்டியாகஞ் செய்து, அதிற் கிடைத்த பிண்டத்தை அவர்கட்குக் கொடுத்துத் தான் எப்போதும் போல் கந்தமாதனத்தில் வந்து தவஞ்செய்திருந்தார்.

பின்பு இவ்விரண்டு ஸ்திரீகளும் அனேகநாள் கர்ப்பவதிகளாக இருந்தார்கள். பின் விநதையென்பவள் இரண்டு முட்டைகளையும் கத்துரு யென்பவள் நூற்றைந்து முட்டைகளையும் பெற்றார்கள். அம்முட்டைகளில் கத்துரு வீன்ற நூற்றைந்து முட்டை

களும் ஐந்நூறு வருஷகாலஞ் சென்றபின்பு விரிந்தன. அவை களிலிருந்து ஆதிசேஷன் - வாசுகி - தக்ஷகன் - கார்க்கோடகன் - தனஞ்செயன் - காளியன் - நாகபுராமான் - புஞ்சன் - புரஞ்சகன் - ஏலாபுத்திரன் - வாமனன் - நிலன் - அநிலன் - கல்மாஷன்-சபலன்-ஆரியகன் - புண்டிரகன் - விசாலன் - போதகன் - சுமநோகன் - ரதிமுகன் - ததிமுகன் - விமலன் - குண்டலன் - பிண்டகன் - பந்தகன் - ஆப்தன் - கோடரகன் - சங்கபாதன் - சிகன் - நிஷ்டூரகன் - ஏமன் - உக்கமுகரன் - நகுஷன் - பிங்கலன் - கோகர்னன் - அவ்விய கர்னன் - அவிர்முகன் - முதகரன் - கம்பளாசுவன் - அஸ்வநரன் - தானியகன் - உருத்தன் - சுவருத்தன் - சம்வாதகன் - சங்கநகன் பிண்டரகன் - அஜரன் - க்ஷேமகரன் - சமுகன் - பிண்டநகன் - ரக்ஷேமுகன் - பிடரகன் - கரவீரன் - புட்பதவுஷ்டரன் - நகரன் - பலரகன் - சாலகன் - பகன் - வில்வபாண்டூரன் - பாதகபராசிதன் - பதங்கக்கிரீவன் - ரத்தாக்ஷன் - அபராதிகன் - மூஷிகாதன் - சங்க சரன் - புண்ணியதமுஷ்டரன் - அரித்திரகன் - அபானமித்திரன் - ஜோதிகன் - ஸ்ரீவகன் - பராதீதன் - அயக்கிரீவன் - கவுர்வியன் - இரிதராஷ்டிரன் - புஷ்கரன் - சல்லியன் - விரஜன் - சாலுண்டன் - கபோதவன் - வில்வகன் - சுபகு - சலபிண்டன் - அஸ்திபத்திரன் முகரகோணன் - நாசிகன் - குஞ்சரன் - குரங்கன் - பிரஹாரன் - தித்திரி - புரிலன் - பாலிகண்டன் - குண்டான் - குதரன் - பிரப கரசு - முதகாண்டன் - வீரன் - குடாரன் - அகுருஷன் - காகோ தரன் - அரிதி - கர்க்கரசன் - அகர்க்கரன் - குண்டோதரன் - மகோதரன் என்னும் நூற்றுநாலு புத்திரரும் ஐராத்காரை என்னும் ஒரு புத்திரியும் உதித்தார்கள். இவர்களைக் கத்துரு மிகுந்த களிப்புடனே வளர்த்து வந்தாள்.

அப்புத்திரர்கள் சகல கலைக்கியான சொரூபிகளாய் மிகுந்த திற லுடையவராய் விளையாடிக்கொண் டிருப்பதை விநதை கண்டு பொறுமல், தான்பெற்ற முட்டைகளைப் பார்த்தாள். அவை வைத் தது வைத்தாற்போ லிருக்கக் கண்டு "இதென்ன ஆச்சரியம்! இம் முட்டைகள் முன்போலவே இருக்கின்றன" என்று ஒருமுட்டையை யுடைத்தாள். அம்முட்டையில் எல்லா அவயவமுங்கூடிக் கால் மாத்திரங் கூடாமல் ஒருவன் தோன்றினன். அப்படி தோன்றின வன் தன் தாயைப்பார்த்து, 'தாயே! எல்லா அவயவங்களுங் கூடி வருகிற தருணத்தில் ஆத்திரப்பட்டு முட்டையை யுடைத்துவிட்

டாயே! ஐயோ! நான் பராக்கிரமசாலியாயிருந்தும் பிறர் நிந்திக்க உன்னால் முடவனானேன். ஆதலால், நீ உன் தங்கையாகிய கத்துருவுக்குத் தாதியாகக் கடவது" என்று சாபமிட்டான். இச்சாபத்தைப் பெற்றதும் விநதை சஞ்சலித்து வருத்தப்படாமல், புத்திராபேக்ஷையினாலே முட்டையை யுடைத்ததற்கு வருத்தமுற்று, 'ஆத்திரக்காரருக்குப் புத்திமட்டு' என்ற பழமொழி நம்மிடத்தில் திருஷ்டாந்தமாயிற்றென்று தன்னைத்தானே நிந்தித்துக்கொண்டாள். அப்போது அவன், தாயைப்பார்த்து, "ஓ அம்மணி! என்னைப் பின்னப்படுத்தினதினால் கோபங்கொண்டு சாபமிட்டேன். இச்சாபம் நீங்க மறுசாபங் கொடுக்கிறேன். அஃதென்னவென்றால், இதோ இருக்கிற முட்டையில் எனக்கிளையவ னிருக்கிறான். அவன் மிகுந்த பராக்கிரமசாலியாயிருப்பான். அவனாலே உன் சாபம் நீங்கி நீ மகிழ்ச்சியடைவாய்" என்று பிரதிசாபங்கூறி, "நானிருந்த முட்டையை யுடைத்து என்னைப் பின்னப்படுத்தினதுபோல இந்த முட்டையை யுடைக்காதே பத்திரம்" என்று உறுதி கூறினான். பின்பு இந்த விநதை அந்தப் புத்திரனுக்கு அருணனென்று பெயரிட்டு வளர்த்து வருகிற நாளில், சூரியனானவன் தனது ரதத்தை நடாத்தத் தகுந்த வல்லமையையுடையவர்கள் யாரென்று எங்கணும் தேடி இந்த அருணன் வல்லமையைக் கேள்விப்பட்டு வந்து, "அப்பா அருணனே! என் இரதத்துக்குத் தகுந்த சாரதி நீயே யன்றி வேறொருவருமில்லை. ஆதலால் கிருபைகூர்ந்து எனக்கு ஸாரதியா யிரு" என்று வேண்ட அப்படியே அருணன் ஒப்புக்கொண்டு சூரியனுக்கு ஸாரதியாய் அமைந்தான்.

பின்பு விநதையானவள் மூத்தகுமாரன் இட்ட கட்டளைப்படி மறுமுட்டையைப் பாதுகாத்துக்கொண்டு வருகிறநாளில் சொர்க்கலோகத்தில் இனிது வீற்றிருந்து மூன்று லோகத்தையுங் காத்துவருகிற இந்திரன் நரைதிரை மூப்பு பிணி இவை யுறாதிருக்கக் கருதி முப்பத்து முக்கோடி தேவர்களையும் நாற்பத்தெண்ணாயிர முனிவர்களையும் மற்றப் பரிசனங்களையும் அழைத்துக்கொண்டு வைகுந்தத்திற்குச் சென்று, சங்கு - சக்கரம் - வாள் - கதை - கோதண்டதரனாகிய ஸ்ரீமஹா விஷ்ணுவைக் கண்டு வணங்கி, "ஓ பரந்தாமா! ஓ கோவிந்தா! ஓ அநாதரக்ஷகா! அன்பர்க்கெளியனான நாராயணா," என்று பலவாறு தோத்திரஞ்செய்ய; நெடுமால் அன்புகூர்ந்து, "தேவராஜனே! நீ நினைத்துவந்த கருத்தென்ன?" என்றுகேட்க,

இந்திரன்; "ஆண்டவனே! நரை திரை மூப்பு பிணி என்னும் இவைகளை யாங்கள் அடையாதிருக்கக் கிருபை செய்ய வேண்டும்" என்றார்கள். திருமால் களிப்படைந்து, "ஓ தேவராஜனே! நீ கொண்ட கருத்துக்குத் திருப்பாற் கடல் கடைந்தால் அதில் அமுதமுண்டாகும். அந்த அமுதத்தைப் புசித்தால் நரை திரை மூப்பு பிணி இவை யணுகா. அதற்கு உங்களில் யாராவது சென்று மந்தரகிரியைக் கொண்டுவந்தால், அதனை மத்தாக்கித் திருப்பாற் கடலைக் கடையலாம்" என்று திருவாய் மலர்ந்தார். இந்திரன் முதலான தேவர்கள் இதைக் கேட்ட மாத்திரத்தில், "ஆ! அந்த மந்தரகிரியென்ன சிறியதா? இவ்வுலகத்துள்ள எல்லாக் கிரிகளினும் மிகவும் பெரிதாயிற்றே, அதைக் கொண்டுவருகிறவர் யாவரிருக்கிறார்கள்?" என்று திடுக்கிட்டு நின்றார்கள். அப்போது கத்துருவின் மூத்தகுமாரனான ஆதிசேஷன் இந்திரனைப் பார்த்து, "ஓ தேவராஜனே! நீயேன் கிலேசப்படுகிறாய்? இதோ நான் போய் மந்தரகிரியைக் கொண்டுவருகிறேன்" என்று உறுதிசொல்லி அதிவேகமாய்ச் சென்று, அந்த மந்தரகிரியை வேரோடும் பிடுங்கி எடுத்து வந்தான். இதைக் கண்ட இந்திரன் முதலானவர்கள் ஆதிசேஷன் பராக்கிரமத்துக்கு மெச்சிப் பலவாறு புகழ்ந்து, பின்பு திருமாலை வணங்கி, 'இதோ மந்தரகிரி வந்துவிட்டது. நாங்கள் கொண்டகருத்து நிறைவேறக் கிருபைகூர்ந்து திருப்பாற்கடல் கடைந்து அமுதம் பாலியும்" என்று வேண்ட, உடனே திருமால் திருப்பாற்கடலிற் சென்று, மந்தரகிரியை மத்தாக்கிச் சந்திரனைத் தறியாக்கி, ஆதிசேஷனுக்கு இளவலாகிய வாசுகியைத் தாம்பாக்கி, ஒரு பக்கத்தில் சுரரும் மற்றொரு பக்கத்தில் அசுரருமாக அத்தாம்பைப் பற்றிக் கடையக் கட்டளையிட்டார்; அப்படியே இருதிறத்தாரும் வலித்து வலித்துக் கடைந்தார்கள். இப்படிச் சிலநாள் கடைந்துவர, வாசுகிக்கு மிகுந்த வருத்தநேரிட்டு விஷத்தைக் கக்கிவிட்டான். அவ்விஷம் வடவையைப்போற் சீறி யாவரையும் பஸ்மீகரப்படுத்த வெளிப்பட்டது. அதுகண்டு இந்திரன் முதலாகிய தேவரும் திடுக்கிட்டு நடுநடுங்கி, இதென்ன விபரீதமென்று அலறிக் கூக்குரலிட்டு, இந்த வேளையிற் பரமன் வந்துதான் இத்துன்பத்தை நீக்கவேண்டுமென்றுன்னி, "ஓ கயிலாசவாசா! ஓ பார்வதிசமேதா! ஓ பன்னகாபரணா! ஓ சிருஷ்டி-திதி சங்காரா! திரௌபவானுக்கிரகா! ஓ அகண்டித அலகிந்துக கிருபாசமுத்திரா! திரிநேத்திர சகலசூஸ்திர சாஸ்திர

ஸ்தோத்திர பூஜிதா" என்று பலவாறு துதிக்க, அன்பர்க் கெளியவனாகிய சாம்பசிவ மூர்த்தி அவண் எழுந்தருளி அவ்விஷத்தை உண்டு, சுரர்க ளிடுக்கணை நீக்கிக் கயிலைக் கெழுந்தருளினார். பின்பு தேவரெல்லாரும் மனமகிழ்ந்து வந்து முன்போலக் கடலைக் கடைகிற தருணத்தில், சங்கநிதி - பதுமநிதி - சிந்தாமணி - இரதி - இலக்குமி - அகலிகை - இந்திராணி - அறுபத்தாறாயிரம் ரம்பாஸ்திரீகள் - காமதேனு - கற்பக விருக்ஷம் - ஐராவதம் - உச்சைசிரவம் இவை முதலாகிய பல வஸ்துகளுந் தோன்றின. அதன் பின்பு அமுதமும் பிறந்தது. அமுதத்தைக் கண்ட மாத்திரத்தில் தேவர்களெல்லாம் கடைவதைவிட்டு மிகுந்த மகிழ்ச்சி யடைந்து, திருமாலை வணங்கிப் பலவாறு துதித்து நின்றார்கள். திருமால் பாற்கடலிற் பிறந்த வஸ்துக்களை யெல்லாம் நோக்கி, இரதியை மாரனுக்கும், காமதேனு - கற்பகவிருக்ஷம் வெள்ளையானை - வெள்ளைக்குதிரை - ஐராணி - அரம்பாஸ்திரீகள் - சங்கநிதி - பதுமநிதி முதலியவைகளை இந்திரனுக்கும், அகலிகையைக் கௌதமருக்கும் கொடுத்து இலக்குமியையும் - கௌஸ்துப மணியையும் தமக்குரியவைகளாகக்கொண்டு, அந்த அமுதத்தை யாவருக்கும் பகுந்து கொடுக்கக் கருதித் தமக்குள் ஒன்றை நினைத்துக்கொண்டார்.

அஃதென்னவெனில்,"அசுரர்களுக்குச் சுபாவத்திலேயே அதிக வல்லமையும் துர்நடத்தையு மிருக்கின்றன. நரை திரை மூப்பு பிணி முதலியவற்றை நீக்குகின்ற இந்த அமுதத்தையும் புசிப்பாரானால், நெருப்பில் நெய்யை விட்டதுபோல் அதிக பாபத்தைப் பண்ண ஆரம்பிப்பார்கள். அதனாலே உலகத்துக்குக் கெடுதி நேரிடும். இதற்கொரு தந்திரஞ் செய்யவேண்டும்" என்று கருதித்தமது அம்சத்தில் ஒரு மோகினி உண்டாக நினைத்தார். அப்படி நினைத்த மாத்திரத்தில் சண்பக மலர்போலும் செம்பொன்போலும் ஜொலிக்கின்ற தேககாந்தியையும், முகிலையொத்த குழலையும், மூன்றாம் பிறையன்ன நெற்றியையும், வில்லையனைய புருவத்தையும், வேலையொத்த கண்களையும், வள்ளைபோன்ற செவியையும், எள் மலர்புரையும் நாசியையுழ், இலவம் பூ நிகர்த்த வாயையும், முல்லையென விளங்கும் பல் வரிசையையும், தேனைப் பாகைக் கற்கண்டை நிகர்த்த சொல்லையும்; சந்திரபிம்பத்தை நிகர்த்த முகத்தையும், கண்ணாடியையொத்த க்போலத்தையும், கமுகையொத்த கழுத்தையும் வேய்புரை தோளையும், மகரயாழை நிகர்த்த முன் கையையும், கமல

மொத்த அக்கைகையையும், கௌிறு மீன்போன்ற விரல்களையும் கிளி மூக்கனைய நகங்களையும், மலையைநிகர்த்த முலையையும், வடபத்திரம்போன்ற அதரத்தலையும், எறும்பூர் வரிசைபோன்ற ரோம வரிசையையும், பிடியினி லடங்கு மிடையினையும், நீர்ச்சுழியொத்த உந்தியையும், அரவப்படம்போன்ற அல்குலையும், வாழையை யொத்த தொடையையும், ஞெண்டுபோன்ற முழந்தாளையும் சினை வராலனைய கணைக்காலையும், ஆமையொத்த புறவடியையும், தராசை யொத்த பரட்டையையும், பந்துபோன்ற குதிகாலையும், பவளத்துண்டனைய கால்விரல்களையும், முத்துப்போன்ற நகத்தையும், தாமரை மலர்போன்ற பாதத்தையு முடையவளாய்ச் சுராசுரர்கள் மத்தியில் அகஸ்மாத்தாய் ஜகன்மோகினி வந்து நின்றாள். அவளைக் கண்ட சுராசுரர்கள் வியந்து "சொர்க்கமத்திய பாதாளமென்னும் மூன்று தலங்களில் இவ்வண்ணமான திவ்யஸ்திரீ இல்லையே" என்று தமக்குள் பலவாறு நினைத்து பிரமைகொண்டு நின்றார்கள். இவர்களில் தேவர்கள் மாத்திரம் "அசுரரை மோசஞ்செய்ய நமது திருமாலே ஜகன் மோகினியாய்த் தோன்றினதாகத் தோன்றுகின்றது. எல்லாம் இன்னும் சற்றுநேரத்தில் வெளியாகும்" என்று கருதி, தங்கள் கருத்தைக் காமத்தின்வழி செல்லவொட்டாமல் அடக்கிக் கொண் டிருந்தார்கள். அசுரரோ யார்யார் எந்தெந்த அவயவங்களைக் கண்டார்களோ அவ்வவ்வவயவங்களிலேயே தங்கள் கருத்தைச் செலுத்தி, சித்திரம்போலவும் உட்காரவைத்த சவம் போலவும் சற்று மசைவின்றி, நெட்டுயிர்ப்பேர்டு வாயைத் திறந்து கொண்டிருந்தார்கள்.

அந்தவேளையில் கபடநாடக சூத்திரதாரியாகிய பரந்தாமன் யாவரையும் நோக்கி, "ஓ சுராசுரர்களே! அமுதத்தைப் பங்கிட ஒருவர் வேண்டுமே. இதோ யிருக்கிற ஸ்திரீயைப் பங்கிடக் கட்டளையிடுகிறேன் புசியுங்கள்" என்று ஒரு கிண்ணத்தையும் ஒரு கரண்டியையு முண்டாக்கி, அந்த மோகினிகையிற் கொடுத்து, "ஓ பெண்ணே! இந்த அமுதத்தை யாவருக்கும்பங்கிடு" என்று கட்டளையிட்டார். மோகினி அக்கட்டளையைச் சிரமேற் கொண்டு, அசுரர்கள் தன் கண்வலையிற் சிக்கி வருத்தப்பட நடை நொடி பாவனைகளைக் காட்டிக்கொண்டு தேவர்களுக்கு அமுதத்தைப் பங்கிட்டாள். அப்படி வருகிற தருணத்தில் ஆதிசேஷன் சகோதரர்களில் இருவர் "இது ஏது சுத்தமோசமாயிருக்கின்றது! ஐயோ, பந்தியில் வஞ்சனை

செய்யலாமா? நியாயமாய் எல்லாரும் கஷ்டப்பட்ட சொத்து யாவர்க்கும் உபயோகப்பட வேண்டியதுதானே! அப்படி உபயோகப் படாமல் **விரல்நீக்கி மோர் குடிப்பது**போல், கஷ்டப்பட்ட நம்மை யும் அசுரரையும் நீக்கித் தேவர்கள் மாத்திரம் அமுதம் புசிக் கிறார்களே'' என்று தங்களுக்குள் தாமே நினைத்து, "இனி நாமும் தேவர்களைப்போல் வேடங்கொண்டு தேவபந்தியில் சேர்ந் தால்தான் அமுதங் கிடைக்கும். இல்லாவிட்டால் கிடைக்காது" என்று தீர்மானித்துத் தேவரூபங்கொண்டு, தேவபந்தியி லொரு பக்கத்திலிருந்தார்கள். இந்த ஜகன்மோகினி தேவர்களுக்கு அமுதம் பங்கிட்டதுபோல் இவ்விருவருக்கும் பங்கிட்டாள். உடனே அவ்வமுதத்தை அவர்கள் அருசியாய் உட்கொண்டார்கள். அதை அருகிலிருந்த சந்திரசூரியர் கண்டு திடுக்கிட்டு 'இவ்விருவரும் உரு வத்தில் தேவராயிருந்து செய்கையில் அசுரராயிருக்கிறார்களே' என்று கருதி முகம்வேறுபடச் சைகைசெய்தார்கள். அதைக்கண்டு அந்த ஜகன்மோகினி தன்கையிலிருந்த கரண்டியால் அவர் கள் மண்டைபிளக்க அடித்துவிட்டு அப்பால் அமுதத்தை முன் போலவே தேவர்கூட்டத்துக்குப் பங்கிட்டுக்கொண்டு வந்தாள். தேவர்களெல்லாரும் தாங்கள் பெற்ற அமுதத்தை அஷ்டாக்ஷர சொரூபியாகிய கடவுளைத் தியானஞ்செய்து உட்கொண்டு மிகுந்த மகிழ்ச்சி யடைந்தார்கள். மாறுரூபங்கொண்டு அமுதம்புசித்த இருவரும் 'சந்திரசூரியரால் அல்லவோ நமக்குக் கெடுதி நேரிட் டது' என்று கருதி அவர்கள் மீது வன்சினங்கொண்டு அவ்வன்சின த்தைத் தீர்த்துக் கொள்ளுமாறு தவஞ்செய்து, பரமன்கிருபை யால் ஒருவன் சூரியனையும் மற்றொருவன் சந்திரனையும் நாளது வரையில் பற்றி விழுங்குகிறதும் கக்குகிறதுமாக இருக்கிறார்கள். இச்செய்கைகளை உலகத்தில் சூரியக்கிரகணமென்றும் சந்திரக் கிரகணமென்றும் சொல்லுகிறார்கள். பின்பு பங்கிட்டு மிகுந்து நின்ற அமுதத்தை ஒரு பொற்குடத்தில் விட்டு ஆகாயத்தில் வைத்து, அதற்குத் திவ்யாஸ்திரங்களையும் தேவகணங்களையும் காவலாகவைத்து, திருமால் மறைந்தார். ஜெகன்மோகினியும் மறைந்தாள். தேவர்கள் அவரவர் தலத்துக்குச் சென்றார்கள்.

இடைவிடாது மோகினியினுடைய ரூபலாவண்யத்தைப் பார்த்துக்கொண் டிருந்த அவ்வசுரர்களோ வென்றால், **வாய்த் தவிடும் போய் அடுப்புநெருப்பும்போனது** என்கிற பழமொழி

போல் அமுதத்தை இழந்து, இளித்த வாயராய் யாதோரு பயனு மடையாமல் ஏமாந்து, "அடடா! திருமால் முதலாகிய தேவர்கள் நம்மை ஏமாற்றி அமுதத்தைக் கொடுக்காமற் கொண்டு போய் விட்டார்களே" என்று அதிக கோபங்கொண்டு, யாவரும் ஒருமிக்கக் கூடி யுத்தஞ்செய்யத் தீர்மானித்து, தேவர்கள்பேரில் படையெடுத்துக் கொண்டு வந்து பொன்னுலகமடைந்து, இந்திரன் முதலான தேவர்களோடு யுத்தஞ்செய்ய, இந்தச்செய்தி பிரம னும் திருமாலும் உணர்ந்து அதிவேகமாய் வந்து, அவ் வசுரர்களை நாசப்படுத்தினார்கள். பின்பு இறந்த அசுரர்கள்போக மற்ற அசுரர்கள் யாவருங் கூடி, இனி இவ்விடத்தி லிருந்தோமானால் அடிக்கடி அபாய நேரிடுமென்று நினைத்துப் பாதாளலோகத் திற் சென்று நடுங்கி நடுங்கி அடங்கி இருந்தார்கள். அப்பால் இந்திரன் முதலான தேவர்களெல்லாம் மிக மகிழ்ச்சி யடைந்திருந் தார்கள். இப்படியிருக்கிற காலத்தில் திருப்பாற்கடலிற் பிறந்து திருமரு மார்பினால் இந்திரனிடத்திற் சேர்ந்திருக்கின்ற ஐரா வதம் உச்சைசிரவ முதலியவற்றுள், உச்சைசிரவமென்கிற வெள்ளைக்குதிரையானது ஒருநாள் கடலோரத்தில் வந்திருந்தது. அப்போது ஆதிசேஷன் முதலானவர்களைப் பெற்ற கத்துரு வும் அருணனைப்பெற்ற விநதையும் வந்து அக்கடலோரத்தி னின்று வேடிக்கைப் பார்த்தனர். அவர்கள் உச்சைசிரவ மென்கிற வெள்ளைக்குதிரையைக் கண்டார்கள். இவர்களில் விநதை யென் பவள் தன் தங்கையாகிய கத்துருவை நோக்கி, "இதோ இருக்கிற குதிரையைப் பார்த்தாயா? புண்ணியவான் புகழைப் போல சுத்தவெண்மையா யிருக்கின்றது" என்று சொன்னாள். அதைக் கேட்ட கத்துருவை "இந்தக் குதிரைக்கு வாற்புறத்தில் கிஞ்சித்துக்கறுப்பிருக்கிறது" என்றாள். "சுத்தவெண்மையாயிருக்கிற குதிரைக்குக் கிஞ்சித்துக் கறுப்பிருக்கிற தென்று ஏன் பொய் கூறுகிறாய்? நன்றாய்ப் பார்" என்று விநதை சொன்னாள். இந்த மொழியைக்கேட்ட கத்துரு, "ஓ அக்கா! இக்குதிரை நீ கூறியபடி முழுவதும் வெண்மையா யிருந்தால் நான் உனக்குப் பணிவிடைப் பெண்ணாயிருக்கிறேன். நானுரைத்தபடி வாற்புறம் கறுப்பிருந்தால் நீயெனக்குப் பணிவிடைப் பெண்ணா யிருக்கிறாயா?" என்றாள். விநதை அதற்கு ஒப்புக் கொண்டு "அக்குதிரையை நெருங் கிப் பார்ப்போம் வா" என்று கத்துருவை அழைக்க, அவள்,

"நாம் வந்து வெகு நேரமாயிற்று, நாளையதினம் பார்ப்போம் வா" என்ன, விநதை அதற்கு ஒப்புக்கொண்டாள். பின் இருவரும் தமதிருப்பிடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். பின்பு கத்துரு தன் பிள்ளைகளாகிய ஆதிசேஷன் முதலானவர்களை நோக்கி, "ஓ புத்திரர்களே! நானும் என் தமக்கை விநதையும் கடலோரத்திற் சென்றபோது உச்சைசிரவ மென்கிற வெள்ளைக் குதிரையைக் கண்டோம். என் தமக்கை 'சுத்தவெள்ளை இக் குதிரை' யென்றாள். நான் அக்குதிரைக்கு 'வாற்புறத்துக் கறுப்பிருக்கிறது' என்று சொன்னேன். என் வாக்குப்பழுதாகாமல் அக் குதிரையின் வாற்புறத்தில் கிஞ்சித்துக் கறுப்புண்டாக்குங்கள். அப்படிச் செய்தீர்களானால் நான் என் தமக்கையைப் பணிவிடைப் பெண்ணாகக் கொள்வேன். இல்லாவிட்டால் நான் அவளுக்குப் பணிவிடைப் பெண்ணாக வேண்டும்" என்று சொன்னாள். ஆதிசேஷன் முதலானவர்கள் கேட்டுத்திடுக்கிட்டு, "ஆ! தாயே! அந்த உச்சைசிரவ மென்கிற குதிரை பாற்கடலிற் பிறந்தது. அதற்கொரு மறு உண்டா? மறுவற்ற குதிரைக்கு ஒரு மறு உண்டாக்குவோமானால் மிகுந்த பாவத்துக் காளாவோம். மேலும் தாயினை விலையா குதிழைப்பது? நாங்கள் அச் செய்கைக்குப் பாத்தியப்படோம்" என்று மறுத்தார்கள். உடனே கத்துரு கோபங்கொண்டு, "ஜநமேஜயமகாராஜன் செய்கிற சர்ப்பயாகத்தில் நீங்களெல்லாம் மடியக்கடவது" என்று சாபமிட்டாள். இதைக் கேட்ட புத்திரர்களில் ஒருவன் அச்சாபத்துக்குப் பயந்து அந்தக் குதிரையின் வாற்புறத்தில் கிஞ்சித்துக் கறுப்புத் தோன்ற ஒன்றியிருந்தான். மறுநாள் கத்துரு விநதையை அழைத்துக் கொண்டு அக் குதிரை இருக்கிற இடத்தில் வந்து, "ஓ அக்கா! இதோ பார்த்தாயா வாற்புறத்தில் கறுப்பிருக்கிறது" என்று காட்டினாள். விநதை "சரிதான் முன் சொன்ன வண்ணம் நான் உனக்குத் தாதியாகிறேன்" என்று ஒப்புக்கொண்டு அவளுக்கு அடக்கமாயிருந்து, அவளிட்ட வேலையைச் செய்து வந்தாள்.

இப்படிச் சிலநாட்கள் சென்றபின்பு இந்த விநதை உயிர்த்த மற்றொரு முட்டை பருவகாலம் வந்து தனக்குத் தானே விரிந்தது. அப்படி விரிந்த மாத்திரத்தில் அழகிய சிறகினையும் பழகிய ஆற்றலையும் இளஞாயிறு போன்ற தேக காந்தியையும் பெற்று, இரணியனை வதைக்கத் தூணில் நின்று வெளிப்பட்ட நரசிங்க மூர்த்தி

போல் ஒரு புத்திரன் உற்பத்தியானன். அந்தப் புத்திரன் உடனே ஆகாயத்திலெழும்பிப் பறந்து தன் தாயாகிய விநதையினிடம் வந்து வணங்கி நின்றான். அதை விநதை பார்த்து "இன்றல்லவோ பெண்ணுற் பெறும்பேறு பெற்றேம்" என்று பரமானந்தத்தை யடைந்திருந்தாள். கத்துரு வென்பவள் இந்தப் புத்திரனது புஜபல பராக்கிரமத்தையும் சவுந்தரியத்தையும் கண்டு "பெற்றாலும் இவ்வண்ணமான புத்திரனைப் பெறவேண்டுமே யல்லாமல் பன்றி பலகுட்டி போட்டது போல் பல புத்திரர்களைப் பெற்றென்ன பயன்?" என்று தனக்குள்தானே வருத்தப்பட்டு அப்புத்திரனைப் பார்த்து ஒரு வசனஞ் சொல்லுகிறாள்.—"ஓ கலுழனே நீ என் தாதி வயிற்றிற் பிறந்தவனாதலால் என்வயிற்றிற் பிறந்த மக்களுக்குப் பணிவிடைக்காரனா யிரு" என்றுகூற அப்புத்திரன் அதற்கு ஒப்புக்கொண்டு ஆதிசேஷன் முதலானவர்களுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தான். இவன் செய்து வந்த பணிவிடை என்னவெனில்-, ஆதிசேஷன் முதலான நூற்று நால்வரையும் தீவு தீவாந்திரங்களில் எடுத்துப்போய் அவ்வவ்விடங்களிற் காணப்படும் விநோதங்களையும் இமயம் - மந்தரம் - விந்தம் - நிடதம் - ஏமகூடம் - கந்தமாதனம் - நீலகிரி - முதலாகிய பர்வதாலங்காரங்களையும் காண்பித்து வருவதேயாம்.

இப்படி இடைவிடாமல் ஆதிசேஷன் முதலானவர்களைச் சுமந்து சுமந்து வருந்தி மனநொந்த கலுழன் ஒரு நாள் தன் தாயினிடத்து வந்து பணிந்து "ஓ அம்மா! என்னுடைய ஆற்றல் முதலாகிய வற்றை அஷ்டாக்ஷர சொரூபியாகிய ஸ்ரீமந்நாராயண மூர்த்தியே யல்லது மற்றொருவராலும் அளவிடமுடியாது. அவ்வளவு ஆற்றலைப் பெற்றும், சபையைக் கண்டு அஞ்சி மெய்ந்நடுக்கங் கொள்வோருடைய கல்வியும், சபைக்கஞ்சாமற் பேசுகிற மூடனுடைய சொல்லும், பிறர்க்குதவாச் செல்வமும், தரித்திரனுக் குண்டாகிய அழகும் நற்குண நற்செய்கைகளில்லாத இல்லாளை உடையவன் செய்யும் இல்லற தருமமும் எக்காலத்தும் பயன்படாவாறுபோல யான் யாதொரு பயனுமடையாமல் எனக்குப் பணிவிடை செய்பவர்க்கு நான் பணிவிடை செய்பவனாகி, மல் யுத்தத்தினால் காய்ப்பேறும் என் தோள்களெல்லாம் ஆதிசேஷன் முதலானவர்களைச் சுமந்து சுமந்து காய்த்துப்போயின. இதை யுய்த்து நோக்கநோக்க மனது புண்ணாகிறது. இது என் தலைவிதியென்று தீர்மானித்

திருந்தாலும் நீ படுகிற அவஸ்தையைப் பார்த்தால் உகிர்ச்சுற்றியின் பேரில் அம்மி விழுந்ததுபோல் அதிக துன்பத்தைக் கொடுக்கின்றது. ஆதலால், தாயே! அந்தக் கத்துருவுக்கு நீ சுபாவத்தில் பணி விடைப்பெண்ணுயினையா? அல்லது ஏதோ ஒரு காரணத்தினுலே பணிவிடைப் பெண்ணுயினையா? எனக்கு விளங்க உரைக்கவேண்டும்" என்முன். அதை விநதை கேட்டு, அனலிடுமெழுகுபோல் மனதுருகி, "அப்பா மகனே! நான் அந்தக் கத்துருவுக்குத் தமக்கை. இன்னும் என்னுடனே பிறந்தவர்கள் பதினெரு பெண்கள். நாங்கள் பதின்மூன்று பெயரும் காசிபமுனியின் மனைவியர். ஒரு காரணத்தினுலே என் சகோதரியாகிய கத்துருவுக்கு நான் தாதியானேன். அதைக்கேள்:—உன் தமையனுகிய அருணனிட்ட சாப மொன்றுண்டு. அஃது யாதெனில், அருணனிருந்த முட்டையைப் பருவமாகாத முன்னமே நான் உடைத்தேன். அப்போது உன் தமையனுக்கு எல்லா அவயவமுங்கூடிக் கால்மாத்திரங் கூடாமலிருந்தது. அதன்மேல் அவன் கோபங்கொண்டு 'உன் தங்கைக்குத் தாதியாகக் கடவது' என்று எனக்குச் சாபமிட்டான். நான் அந்தச் சாபத்திற்கு வருத்தப்படாமல் பிள்ளையின் அவயவம்பழுதாயிற்றே என்று துன்பப்படுகிறபோது உன் தமையன் கண்டு 'அம்மா! என்னைப் பங்கப்படுத்தினதினுல் நான் சபித்தேன். இந்தச்சாபம் என் தம்பியால் நீங்கும்' என்று கூறிச் சூரியனுக்குத் தேர்ப்பாகனுகப் போய்விட்டான்" என்று சொல்லி, அச்சாபப்படி தாதியான விருத்தாந்தத்தையும் விளங்க உரைக்க, கலுழன் கேட்டு வியப்படைந்து தாயை வணங்கி விடைபெற்று, முன்போலவே ஆதிசேஷன் முதலானவர்களுக்குப் பணிவிடைக்காரனு யிருந்தான்.

இப்படி யிருக்கிறநாளில் ஒருநாள் ஆதிசேஷன் முதலானவர்கள் கலுழனைப் பார்த்து, "ஓ கலுழனே! மாலியபர்வதம் விநோதமாயிருக்கிறதென்று கேள்வி, அதனைப் பார்க்கவேண்டும்" என்முர்கள். கலுழன் "நல்லது வாருங்கள் கொண்டுபோய்க் காண்பிக்கிறேன்" என்று சொல்லி அனைவரையும் தனது தோளில் ஏற்றிக்கொண்டுபோய் அப்பருவதத்தில் விட்டு, தான் அம்மலைச்சருவிலொருபக்கத்தி லிருந்து, "அட்டா!! இதென்ன விதிவசம், கத்துருதான் கிஞ்சித்தேனும் இரக்கமில்லாமல் அடிக்கடி நமது தாய்க்கு வேலையிடுகிருள். இந்தப் புத்திரர்கள் மூடர்களல்லவே? இவர்கள், சகல கலைகளையுங் கற்றுணர்ந்தவர்கள். இவர்களில் ஆதிசேஷனே

மஹா பண்டிதன். இப்படி யிருந்தும் என்னைத் தம்பியென் றெண்ணாமல் கனகடூரமான பணிவிடைகளைச் செய்யச் சொல்லுகிறான். நல்லது பராக்கிரமத்தினாலே இவர்களை அதமாக்குவோமென்றால், தாயின் சொல் தவறுகின்றது. இதற்கென்ன செய்கிறது" என்று தனக்குள் தானே நினைந்து வருத்தப்படுகிற தருணத்தில், நாரதர் அக்கலுழன் கண்முன் தோன்றினார். அவரைக் கண்டு யாரோ ஒரு மஹாத்துமா வருகிறாரென்று விரைவி லெழுந்து எதிர்கொண்டு போய் வணங்கி நிற்க, நாரதர் கலுழனுக்குப் பல ஆசீர்வாதஞ் செய்து ஒரு வசனம் சொல்லுகிறார்.

"ஓ கலுழனே! உன்னைக் கண்டு தரிசிப்பவர்களுக் கெல்லாம் யாதொரு துன்பமும் நேராது. நீ துன்பப்படுகிற முகத்துட னிருக்கிறதை நோக்கினால் மிகுந்த ஆச்சரியமா யிருக்கின்றது. ஆனதால், உன் மன வருத்தத்தைத் தெரிவி" என்று வினவ, கலுழன் தன் தாய்க்குத் தன் தமையனிட்ட சாபமும் அச்சாபம் வந்தடைந்த விதத்தையும் சொல்லி, 'ஐயா! உச்சைசிரவமென்கிற வெள்ளைக் குதிரைக்கு வாற்புறத்திற் கறுப்புண்டாச்?" என்று வினவ, நாரதர் "ஓ கலுழனே! அந்த உச்சைசிரவம் சுத்த வெண்மையானதுதான். அதற்கு வாற்புறத்திற் கறுப்புண்டானது உன் சிறிய தாயாகிய கத்துரு செய்த சூது" என்று அந்தச் சூதை விவரமாயெடுத்தோதி மறைந்துவிட்டார். அதற்குள் ஆதிசேஷன் முதலானவர்கள் அம்மாலிய பர்வதத்தின் விநோதங்களைப் பார்த்துவிட்டுத் திரும்பினார்கள். அவர்களை முன்போலவே யெடுத்துவந்து இருப்பிடத்திற் சேர்த்து கத்துருவும் அவள் புத்திரரும், தன் தாயையும் தன்னையும் செய்கிற துர்நடத்தையை மனதில் நினைத்து, "நமது வல்லமையை அவர்களுக்குத் தெரிவிப்போமானால் அப்போது அவர்களுக்கு நம்மிடத்தில் கிஞ்சித்து அச்ச முண்டாகி அதிக வருத்தங் கொள்வார்கள் என்று கருதிக் காலம் பார்த்துக்கொண் டிருக்கிற தருணத்தில், ஆதிசேஷன் முதலானவர்கள் இந்தக் கலுழனை யழைத்து, "ஓ கலுழனே! கடல் சூழ்ந்தநெடிய உலகத்திலிருக்கிற எல்லா விநோதங்களையும் கண்டோம். இனி ஆகாயத்திலிருக்கிற வாயுமண்டலம்-வருணமண்டலம்-சந்திர மண்டலம்-சூரிய மண்டலம்-நக்ஷத்திர மண்டலம்-அக்கினி மண்டலம்-திரிசங்கு மண்டலம் முதலியவற்றின் அலங்காரத்தைப் பார்க்கவேண்டும்" என்று கேட்டார்கள். கலுழன் "அப்படியே

பார்ப்பீர்கள் வாருங்கள்" என்று அவர்களை யெடுத்துக்கொண்டு வான மார்க்கத்தில் எழும்பி ஒவ்வொரு மண்டலமாகக் காண்பித்து, தான் கொண்ட கருத்தை நிறைவேற்றப் பருதி மண்டலத்தில் தாவினான்.

உடனே ஆதிசேஷன் முதலானவர்கள் அந்தச் சூரிய அழற்சியினால் சரீரமெங்குங் கன்றி மிகுந்த துன்பத்தை யடைந்து, "ஓ கலுழனே! 'யானை தன் தலையில் தானே மண் போட்டுக் கொள்வது போல' எங்களாலேயே எங்களுக்கு வருத்தந் தேடிக்கொண்டோம். சூரிய அழற்சியினாலே பிராணாவஸ்தைப் படுகிறோம். எங்க ளிருப்பிடத்திற்கு எங்களைக் கொண்டுபோய் விட்டுவிடும்" என்று பல வாறு பிரிய வசனஞ் சொல்லி முறையிட்டார்கள். அதைக் கலுழன் கேட்டு, "இவ்வளவுதானா உங்கள் வல்லமை?" என்று பின்னும் சிலதூரங் கொண்டுபோய், அவர்கள் கேட்டுக்கொண்டபடி இருப்பிடத்திற் கொண்டுவந்து சேர்த்தான். அப்போது ஆதிசேஷன் முதலானவர்களெல்லாரும் சூரிய அழற்சியினாலே நொந்து பிராணாவஸ்தையி லிருந்தார்கள். அதைக் கத்துரு கண்டு, "ஓ கலுழனே! என் மக்களை இவ்வண்ண மாக்குவித்தனையே இதென்ன விபரீதம்?" என்று வினவ, கலுழன் 'ஓ அம்மா! நானென்ன செய்வேன்? அவர்கள் ஆகாயத்திலிருக்கிற மண்டலங்களின் வினோதங்களைப் பார்க்கவேண்டு மென்றார்கள். அவர்கள் கட்டளைப்படி கொண்டுபோய்க் காண்பித்து வந்தேன்' என்றான். கத்துரு கேட்டு வருத்தப்பட்டு வருணமந்திரத்தை யுச்சரித்தாள். உடனே மிகுந்த மழை சொரிந்தது. அதனாலே அந்த ஆதிசேஷன் முதலானவர்கள் சூரிய அழற்சியினால் தங்களுக்கு உண்டாகிய வருத்தம் நீங்கி முன்போலானார்கள். அது முதல் அவர்கள் இந்தக் கலுழனிடத்துக் கிஞ்சித் தஞ்சி நடக்கலானார்கள். இப்படி இருக்கிற காலத்தில் ஒரு நாள் கலுழன் கத்துருவை நோக்கி 'ஓ அம்மா! இப்போது என் தாயும் நானும் உனக்கு அடிமையாயிருக்கிறோம். இந்த அடிமையை நீக்கிக்கொள்ள எனக்கு மனமிருக்கின்றது. இதற்காக நீ என்ன வஸ்து கேட்டபோதிலும் கொண்டு வந்து கொடுக்கிறேன் கேள்' என்று வினவவும், கத்துரு 'உன் கருத்தின்படி அடிமைத் தொழிலை நீக்குகிறேன். என்மக்கள் சுகப்பட தேவாமிர்தத்தைக் கொண்டு வந்து கொடுத்தால் உன் கருத்து நிறைவேறும்' என்றாள். கலு

மூன் அதற் கொப்புக்கொண்டு தன் தாயினிடத்து விரைந்தோடி வந்து கத்துருவுக்கும் தனக்கும் நடந்ததைக் கூறி மறுபடியுந் தாயைப் பார்த்து 'ஓ அம்மா! கத்துருவின் கருத்தின்படி அத்தேவாமிர்தத்தைக் கொண்டுவர ஆசீர்வாதஞ் செய்து என் தந்தை யிருக்கிற இடத்தையுஞ் சொல்லி எனக் கிருக்கிற பசிநோயுந் தீரக் கட்டளையிட வேண்டும்" என்று கேட்டான். விநதை கலுழனைப் பார்த்து "அப்பா மகனே உன் தந்தையாகிய காசிபர் கந்தமாதன பர்வதத்திலிருக்கிறார். நீ கொண்ட பசிக்கு இரை, வடகிழக்குச் சமுத்திரத்தின் மூலையி லொரு திட்டி லிருக்கின்றது. அதில் மஹாபாதகர்களாகிய வேடர்க ளிருக்கிறார்கள். அவர்களைப் புசி. ஆனால் அவர்களில் ஒரு பிராமண னிருக்கிறான். அவனைப் புசியாதே" என்று கூறிப் பல ஆசிர்வாதஞ் செய்தாள். உடனே கலுழன் மகிழ்ந்து, "வேடர்களோடு வேடனா யிருக்கிற பிராமணனை எப்படி அறிந்து கொள்வது" என்று கேட்டான். அதற்கு அவள் "மகனே! அந்தப் பிராமணனை விழுங்குகிறபோது நெஞ்சில் அழற்சி உண்டாகும். அதைக் கண்டு அவனை நீக்கு" என்று கூற, கலுழன் கேட்டு மகிழ்ச்சியடைந்து கேசரிமார்க்கத்தி லெழும்பி, அந்த வடகிழக்கு மூலையை நோக்கிப் பார்க்கும் போது அவ்வேடர் கூடியிருக்கிற திட்டுத் தோன்றியது. உடனே அங்குச் சென்று, அவர்களை யெல்லாம் வாழைப் பழத்தை விழுங்குவதுபோல விழுங்கத் தலைப்பட்டான். இப்படி விழுங்கி வருகிற தருணத்தில் அவனுடைய நெஞ்சில் அழற்சி யுண்டாயிருந்தது. அது கண்டு கலுழன் பிராமணனென்று கருதி, அப்பிராமணனை வெளியில் வாவென் றழைத்தான். அப்பிராமணன் 'என் மனைவி வந்தால் நான் வெளியில் வருவேன்" என்று கூற, கலுழன் அப்படியே அவன் மனைவியையும் அவனையுங் கக்கி, அவனுக்குச் சில புத்திசொல்லி யனுப்பி விட்டு, மற்றவர்களை யெல்லாம் புசித்த பின்பு தந்தை யிருக்கிற கந்த மாதனத்திற்குப் போய்ச் சேர்ந்தான்.

**கருடபகவான் சருக்கம் முற்றிற்று**

---

## 5. கந்தமாதனச் சருக்கம்

---

அரிச்சந்தனம் - சந்தானம் - மந்தாரம் - பாரிஜாதம் - கற்பகம் என்னும் ஐந்து தருக்களையும் ஒத்த அரிய விருக்ஷங்களையும், சந்தனம் - அகில் - பாதிரி - மகிழம் - கோங்கு - நாரத்தை - குருக்கத்தி-

வாழை - வாகை - செருந்தி - அழிஞ்சில் - குங்குமம் - அனிச்சை - கமுகம் - பலா - தேமா - புளிமா - கருவிளம் - கூவிளம் - அசோகம் - சிந்தூரம் - தேக்கு - இலந்தை - கொன்றை - நாவல் - வேம்பு - ஆத்தி - தேக்கு - விளா - தணக்கு - நெல்லி - பச்சிலை - பாலை - பிராய் - புளி - புன்னை - மருதம் - வெட்பமாலை - வேங்கை - வேல் - ஆச்சா - அத்தி - இலவம் - இலுப்பை - ஈந்து - எட்டி - எலுமிச்சை - கடவு - கடுக்காய் - தென்னை - பனை - சண்பகம் - கச்சூரம் - வன்னி - குருந்தம் - ஆல் - அரசு - நறுவிலி - முதலியவகைகளையும், வனமல்லிகை - மலைமல்லிகை - கொடிமல்லிகை - முல்லை - இருவாக்ஷி - வெக்ஷி - அலரி - செவ்வந்தி நந்தியாவர்த்தம் - குன்றி - குமிழ் - நொச்சி முதலாகிய செடிகளையும், வெண்டாமரை - செந்தாமரை - அல்லி - ஆம்பல் - குவளை - காந்தள் - நீலோற்பலம் முதலியவைகள் நிறைந்த தடாகங்களையும், சிங்கம் - யாளி - புலி - யானை - குதிரை - பசு - எருது - ஆடு - பன்றி - கவரிமான் - புள்ளிமான் - வேசரி - ஒட்டகம் - நரி - சுவானம் - இற்பூனை - புனுகுபூனை-சவ்வாது பூனை-செங்குரங்கு - கருங்குரங்கு - வெண்குரங்கு - எலி - கரடி - எருமை - பாம்பு இவை முதலாகிய மிருகங்களையும், மயில் - அன்னம் - குக்குடம் - கழுகு - அசுணம் - கிளி - சிம்புள் - சக்ரவாளம் - வலியன் - சிச்சிலி - சம்பங் கோழி - காடை - கவுதாரி - நாரை - வண்டு முதலாகிய பறவைகளையும், பரமன் சடாடவியில் நின்றிழியும் கங்கையொத்த அருவியையும் உடைத்தாகி, வேதாகமங்களை யுணர்ந்து நல்லொழுக்கத்தின் கண் நின்றோர்க் கெல்லாம் ஆதரவாகி, சிற்றின்பத்துக்குக் காரணம் ஸ்திரீகளுடைய கந்தமாதனமென்று சொல்லுவதுபோலப் பேரின்பத்துக்குக் காரணம் இந்தக் கந்தமாதனந்தா னென்று யாவரும் சொல்ல உயர்ந்து பருத்து விளங்கி யிருந்தது. விநதையின் புத்திரனாகிய கலுழன் அந்தக் கந்தமாதனத்தின் விந்தைகளனைத்தையும் பார்வையிட்டு முனிவர்களையும் முனிவர்க ளிருக்கிற ஆசிரமங்களையும் நோக்கிப் பலவாறு புகழ்ந்து பின்பு தன் தந்தையாகிய காசிபமுனிவ ரிருக்கிற ஆசிரமம் போய், அங்கே கண்டு, மெய்-வாய் - கண் - மூக்கு - செவி வழியாகிய சுத்தம் - பரிசம் - ரூபம் - ரசம் - கந்தமென்னும் ஐம்புலன்களையும் அடக்கி அறிவைப் பிரமத்தினிடத்திற் செலுத்தித் தியானஞ் செய்துகொண் டிருந்த காசிபரைக் கண்டு சாஷ்டாங்க

மாக நமஸ்காரஞ் செய்தான். உடனே காசிபர் பன்னகவேரிக்குப் பல ஆசிகள் வழங்கி, தேககாந்தியினையும் ஆற்றலையும் நோக்கி உடல் முழுதும் புளகம் போர்ப்பக் கலுழனை வாரித் தழுவி "அப்பா மகனே! தற்காலம் என்னிடத்தில் வந்த காரணமென்ன?" என்று வினவ, கலுழன் தான் வந்த காரணத்தை விரித்துரைத்து "அடிமைத் தொழில் நீங்க அமிர்தங் கொண்டுவரவும், தங்களிடத்தில் வரப்பிரசாதம் பெறவும், என் பசியாறவும் வந்தேன்" எனக் கூற, காசிபர் கேட்டு மகிழ்ச்சியடைந்து 'நீ சிறந்த ஆற்றலைப் பெற்று அமுதத்தைக் கொண்டுவரக் கடவது. உன் பசியாற ஆகாரங் காட்டுகிறேன். அதனையும் புசி " என்று சொல்லிக் கூறுகிறார்.—

"அளகாபுரி யென்னும் நகரத்தில் சுக்கிரன் நதிபன் என்று இரண்டு பிராமண ரிருந்தனர். அவர்கள் ஒருவருக் கொருவர் சகோதரர்கள். ஒரு நாள் நதிபன் தன் தமையனாகிய சுக்கிரனை வணங்கி 'என் பாகத்தை எனக்குக் கொடு' என்று வினவ, சுக்கிரன் பாகங் கொடுக்க மனமில்லாதவனாய் நதிபனை வைதான். அதன்மேல் அவர்கள் விரோதப்பட்டு கர்னகடூரமான வசனங்களை வழங்கினார்கள். அதில் மூத்தவனாகிய சுக்கிரன் நதிபனைப் பார்த்து 'அடா துன்மார்க்கா! மரியாதை யில்லாமல் என்னை இகழ்ந்ததினால் நீ ஆறு யோசனையகலமும் பன்னிரண்டு யோசனை உயரமுமாகிய யானையாகக்கடவாய்' என்று சபித்தான். நதிபன் பார்த்து 'எனக்குச் சேரவேண்டிய பிதிர்ப்பாகத்தைக் கேட்டால் எனக்குக் கொடுக்காமல் என்னைத் தூஷித்தது மல்லாமல் என்னைச் சபிக்கிறாயா? இது நன்றாயிருக்கின்றது. நியாயமில்லாமல் சாபங் கொடுத்தபடியால் நீ மூன்று யோசனை அகலமும் ஆறுயோசனை யுயரமுமுடைய ஆமையாகக் கடவாய்' என்று சுக்கிரனைச் சபித்தான். அப்படியே யிருவரும் அவ்வுருவங் கொண்டு வடமேற்குச் சமுத்திரமூலையில் என்னேரமும் யுத்தஞ் செய்துகொண் டிருக்கிறார்கள். அதனா லனேக சீவன்கள் வருத்தப் படுகின்றனர். ஆகையால் நீ அவ்விருவரையும் புசிப்பாய்" என்று கட்டளையிடக், கலுழன் மஹாபாக்கிய மென்று அக்கட்டளையைச் சிரமேற் கொண்டு வணங்கி விடை பெற்று ஆகாயத்தி லெழும்பிப் பறந்து வடமேற்குச் சமுத்திர மூலையைப் பார்த்தான்; அங்கே யானையும் ஆமையு மிருக்கக் கண்டான். அவைகளைக் கண்டதும் கருடன்

அஜேவகள் மேற் பாய்ந்து, அவ்விரண்டையும் சேர்த்துத் தனது காலில் பற்றிக் கொண்டு கேசரிமார்க்கத்தி லெழும்பி ஓரிடத்தில் வைத்துப் புசிக்க எண்ணி எவண் வைக்கலாமென்று நாலுதிசையும் உய்த்துப் பார்த்தான். நூறுயோசனை விஸ்தீரணமுள்ள அநேகங் கிளைகளை யுடையதாய் உயர்ந்து பெருத்திருக்கிற ஓர் ஆலமரத்தைக் கண்டு, அதனிடத்திற் சென்று ஒரு கிளையில் இந்த இரண்டு ஜந்துக்களையும் வைத்துத் தானு மிறங்கினுன். உடனே அக்கிளை கனம் பொறுக்காமல் முறிந்தது. கலுழன் முறிந்து விழுகிற கிளையைப் பார்த்தான். அதில் அங்குஷ்டப் பிரமாணமுள்ள வாலகில்லியர் என்கிற முனிக்கூட்டங்கள் இலைக் கொவ்வொருவரா யிருந்து தவஞ் செய்தலைக் கண்டு திடுக்கிட்டு, "அடடா !! மோசம் வந்தது. வெ:ற்று மரமென்று நாம் வந்தோம். இதில் தபசிக ளிருக்கிருர்கள். இக்கிளை பூமியில் விழுந்தால் இவர்கள் தவத்துக் குப் பங்கம் வரும். அதனுல் நமக்குக் கெடுதி நேரிடும். ஆதலால் இவர்கள் தவத்துக்குப் பங்கம்வராமல் இக்கிளையைக் காலி லிடுக்கிக் கொண்டு நமது தந்தை யிடத்துச் சென்று வினவினுல் நலமுண் டாகும். இல்லாவிட்டால் பழுது நேரிடும்" என்று எண்ணி அந்த இரண்டு ஜந்துக்களுடனே அக்கிளையையும் எடுத்துக் கொண்டு காசிபரிடத்தில் வந்து வணங்கி இதனைச் சொல்லுவான்.—

"ஓ ஐயனே ! தாங்கள் இட்ட கட்டளைப்படி சென்று அந்த இரண்டு ஜந்துக்களையும் பற்றிக்கொண்டு போய்ப் புசிக்க, ஓர் ஆல மரத்தின் கிளையி லிறக்கி நானு மிறங்கினேன். கனம் பொறுக்காமல் அந்தக் கிளைமுறிந்தது. அக்கிளை அங்குஷ்டப் பிரமாணமுள்ள முனிவர்மயமா யிருக்கின்றது. இதைப் பூமியிலவிட்டால் அவர் கள் தவத்துக்குப் கெடுதிவருவது மன்றி, எனக்குச் சாபமும் வரும். ஆதலால் இங்கு வந்தேன். இதற்கென்ன செய்வது" என்று முறையிடக் காசிபர் விரைவிலெழுந்து வந்து, அக்கிளையி லிருக்கும் வாலகில்லியரைப் பார்த்து, "ஓ மஹாதபோநிதிகளே ! நீங்க ளிருந்து தவஞ்செய்கிற கிளையை முறித்தவன் ஆதியிலே உங்க ளுடைய கிருபையினுலே புத்திரகாமேஷ்டி யாகஞ் செய்தேனே அந்தயாகத்தில உதித்த எனது புத்திரன். அவன் நீங்கள் தவஞ் செய்கிற மரமென்று அறியமாட்டான். வெற்றுமர மென்று நினைத்து அம்மரத்தின் மேல் வந்திறங்கினுன். அதனுலே கிளை முறிந்தது. நீங்கள் சினங்கொண்டு என் புத்திரனைச் சபிக்காமல்

காப்பாற்ற வேண்டும்" என்று வேண்ட, வாலகில்லியர் காசியரை நோக்கி "ஓ ஐயனே உமது புத்திரன்பேரில் எங்களுக்குக் கோப மில்லே. எங்களைப் பூமியில் விடுவாஞனுல் எங்கள் கருத்துக்கிசைந்த இடத்துக்குச் செல்கிறோம்" எனவும், காசிபர் மகிழ்ந்து கலுழனைப் பார்த்து, "அப்பா மகனே! மெதுவாய்க் கிளையைப் பூமியில் விடு" என்று கூறக் கலுழன் மகிழ்ச்சியடைந்து கிளையைப் பூமியில் விட்டான். உடனே வாலகில்லியர் பூமியிலிறங்கிக் காசிபரையும் கலுழனையும் வாழ்த்திப் போயினுர்கள். போயின பின்பு கலுழன் காசிபரை நோக்கி "இக்கிளையை எந்த விடத்திற் சேர்க்கிறது. இந்த ஜந்துக்களை எந்த விடத்தில் வைத்துப் புசிக்கிறது என்று வினவ, காசிபர் கலுழனைப் பார்த்து, "ஓ புத்திரசிகாமணியே! இந்தக் கிளையை இமயமலைக்கு அருகிலிருக்கிற நரமேத பர்வதத்தில் வைத்து விட்டு நீ இமயமலையின் மேலிருந்து இச் செந்துக்களைப் புசித்து தெய்வ லோகத்திற் சென்று அமிர்தங் கொண்டு போ" என்று கட்டளையிட்டார். கலுழன் அவ்வாறே அக் கிளையை நரமேதபர்வதத்தில் வைத்துவிட்டு இமயமலையில் வந்து இரண்டு ஜந்துக்களையும் புசித்துப் பசியாறினுன்.

**கந்தமாதனச் சருக்கம் முற்றிற்று**

## 6. அமிர்தங்கொணர்ந்த சருக்கம்

கலுழன் அமிர்தத்தைக் கொண்டுவர யத்தனித்துத் தன் தாயையும் தந்தையையும் மனதிலே தியானித்து உயர எழும்பி அமிர்தமிருக்கும் நாட்டை நாடி வருகிறுன். இப்படி வருகிற போது தனது செட்டைக்காற்றினுலே முகிலினங்க ளெல்லாம் திகிலடைந்து இவ்வகைப் பட்ட கடூரமான காற்றை எப்போதுங் கண்டதில்லை யாதலால் சற்றுநேரம் இங்கு நிற்போமாஞல் நின்ற விடந் தெரியாமற் போகும்படி நேரிடு மென்று நினைத்துத் தக்ஷணம் அண்டர் நாட்டிற் சென்றடைந்தன. மலைகளெல்லாம் வேரற்றன. வாயு பகவானும் திடுக்கிட்டுக் "காற்றுக்குத் தலைவஞக நாமிருந்தும், இக் காற்று ஏது? ஊழிக்காற்ருே என்னமோ?" என்று மருண்டு ஒளித்தான். இப்படியாகக் கலுழன் மஹா உக்கிரத்துடனே வருகிற தருணத்தில் இந்திரனுனவன் முப்பத்து முக்கோடி தேவர்கள்

நாற்பத்தெண்ணுயிர முனிவர்கள் கின்னரர் கிம்புருடர் சித்தர் வித்தியாதரர் முதலானவர்களோடு கொலுவிருக்கிறபோது அவன் கண்முன் சில துர்நிமித்தங்கள் தோன்றின. அந்தத் துர்நிமித்தங்களை இந்திரன் நோக்கி "ஆ! இதென்ன ஆச்சரியம். ஒரு நாளுங் காணாத துர்நிமித்தத்தை இன்றைய தினங் கண்டோம். அதனால் என்ன விளையுமோ" என்று திகிலடைந்து தனது குருவாகிய வியாழபகவானிடத்திற் சென்று வணங்கி எதிர்நின்று தான் கண்ட துர்நிமித்தங்களைக்கூற வியாழபகவான் ஞானதிருஷ்டியினாற் பார்த்து இந்திரனை நோக்கி "ஓ தேவராஜனே அந்தத் துர்நிமித்தத்துக்குக் காரணமென்னவெனில், காசிபருக்கு விநதையினிடத்து உதித்த புத்திரன் கலுழன். தன் தாயின் அடிமைத் தொழிலை நீக்க உனதிடத்திலிருக்கிற அமிர்தத்தைக் கொண்டுபோக வருகிறான். ஆதலாலே இத்துர்நிமித்தங்கள் தோன்றின" என்று கூற, இந்திரன் "ஆண்டவனே ஒரு பறவை என் சுவாதீனத்திலிருக்கிற அமுதத்தை எடுத்துப் போகுமா? நானென்ன அவ்வளவுபேதையா? எனக்குத் தெய்வப்படை இல்லையா? இதென்ன ஆச்சரியம்" என்று கூற, வியாழபகவான் நகைத்து "ஓ தேவராஜனே! என்ன நீ மறந்து பேசுகிறாய்? முன்னம் காசிபர் புத்திரகாமேஷ்டி யாகஞ் செய்தபோது நாமெல்லொரும் போயிருந்தோம். அந்தப் புத்திர காமேஷ்டியாகத்துக்கு வாலகில்லியர் என்னு முனிவர்கள் தாங்கள் சுமக்கத்தக்க ஹோமதிரவியங் கொண்டு வந்தார்கள். நீ அவர்களைப் பார்த்து 'ஆ' இவர்களென்ன அங்குஷ்டப் பிரமாணமுள்ளவர்களாயிருக்கிறார்கள்' என்று சற்றே இகழ்ச்சியாக நினைத்தாய். அதனை அந்த வாலகில்லியர்கள் உணர்ந்து, 'இந்தத் தேவேந்திரனுக்கு இவ்வளவு கர்வமா' என்று மனதில் நினைத்து, 'இதோ செய்யப்போகிற புத்திரகாமேஷ்டி யாகத்திலுதிக்கிறவன் இந்திரனுக் கிந்திரனாகக் கடவன்', என்று இந்திரமந்திரத்தைச் செபித்தார்கள். அது கண்டு நீ நடுங்கிப் பயந்து அவர்களை வேண்டிக்கொண்டதின்பேரில் 'பறவைகளுக் கெல்லாம் இந்திரனாகக் கடவது' என்று வேறொருவிதமாய் மந்திரத்தைத் திருப்பி உச்சரித்தார்கள். அதிற் பிறந்த புத்திரனே கலுழன். அவனே அமிர்தத்தை எடுக்க வருகிறான். அந்த வாலகில்லியர் இந்திர மந்திரத்தையே உச்சரிப்பாரானால் உனக்கு இந்திரப்பட்டம் ஏது? அவ்வளவு பராக்கிரமத்தையுடைய் சிலாக்கியவான் வருகிறான். அவன் எப்படியும் அமிர்தத்தைக்

கொண்டுபோவான்" என்றார். அதற்கு இந்திரன் "தேவகணங்களும் தேவப்படைகளும் காவல் பூண்டிருக்கிற அமிர்தத்தை அவன் எவ்வாறு எடுத்துப் போவான் பார்ப்போம்" என்று சொல்லிக் குருவை வணங்கி விடைபெற்றுத் தனது சபையிற் சேர்ந்து தன் சேனைகளனைத்தையும் வரவழைத்து "கலுழன் அமிர்தத்தை எடுக்க வருகிறான். ஆதலால் மிகுந்த ஜாக்கிரதையோடு காவலாயிருங்கள்" என்று கட்டளையிட்டுத் தானும் போர்க்கோலங்கொண்டிருந்தான்.

கலுழன் யுகாந்த காலங்களில் பிரசண்ட மாருதம் வெளிப்பட்டாலெப்படியோ அப்படியே சொர்க்கலோகமெல்லாந் தத்திக்கெட்டுத் தடுமாற மிகுந்த காற்றைத் தனது சிறகினாலுண்டாக்கி, பார்ப்பவர்களுக்கெல்லாம் மனந் திடுக்கிட்டுக் கலங்கிச் சித்திரப் பதுமைபோல் அசைவற்று நிற்கத் தனது பராக்கிரமத்தைக் காட்டி, மஹாவேகத்துடன் அமிர்தமிருக்கும் இடத்திற்கு வந்தான். அந்த அமிர்தத்துக்குக் காவலாளிகளாயிருக்கிறவர்களோடுகூட இந்திரன் கட்டளைப்படி வந்திருக்கிற அஷ்டவசுக்களும் மற்ற தேவகணங்களும் ஒருமிக்கக் கூடி, தங்கள் தங்கள் கையிலிருக்கிற வேல் - வாள் - கதை - சூலம் - பிண்டி - பாலம்-சக்கரம்-தோமரம்-இருப்புலக்கை - ஈட்டி - பாங்கு - கடாரி - சுருள்கத்தி முதலிய ஆயுதங்களைக் கலுழன்மீ தெறிந்து எதிர்த்து அட்டகாசஞ்செய்து நின்றார்கள். கலுழன் கண்டு புன்சிரிப்புக்கொண்டு, தனது சிறகினாலே அப்படைகளையெல்லாம் சிதற அடித்து, அச்சிறகினாலும் சிறகின் காற்றினாலும் - காலினாலும்-கால் நகத்தினாலும் புடைத்து, மூக்கினால் எவரையும் அண்டவொட்டாமற் பாய்ந்து கொத்தித் தேவகணங்களையெல்லாந் திக்கிற் கொருவராயோடிப் பதுங்கும்படியாகத் துரத்தினான். அதனாலே தேவகணங்களெல்லாம் ஒருவர் போனவழி ஒருவர் போகாமலோடினார்கள். அதுகண்ட அனலன் - அனிலன் - ஆபச்சைவன் - சோமன் - வரன்-துருவன்-பிரத்தியூசன் - பிரபாசன் என்னும் அஷ்டவசுக்களும் வந்து எதிர்த்து, தங்கள் கைவில்லை வளைத்துச் சோனைமாரிபோல் சரவருஷஞ் சொரிந்தார்கள். உடனே அக்கலுழன் அச்சரங்களையெல்லாம் தன் சிறகினால் தவிடுபொடியாக்கி, அந்த வசுக்கள் பிடித்திருக்கும் வில்களைத் தன் காலினாலெற்றி முறித்தான். அதற்கவர்கள் மிகுந்த கோபங்கொண்டு, அவரவர்கள் தவஞ்செய்து

பெற்ற இந்திராஸ்திரம் - சந்திராஸ்திரம் - நாகாஸ்திரம் - அக்கினியாஸ்திரம் - வாயுவாஸ்திரம் - மாயாஸ்திரம் - குபேராஸ்திரம் - வருணாஸ்திரம் - அந்தகாஸ்திரம் - சூரியாஸ்திரம் - இடியாஸ்திரம் - பிரம்மாஸ்திரம் முதலான திவ்யாஸ்திரங்களை எடுத்துவிட்டார்கள். அவைகளைக் கண்டு ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைத் தியானித்து ஒரு அஸ்திரமாகிலும் தன்மேல் படாமலிருக்கத் தன் சாகசத்தினால் தப்பித்துக்கொண்டு அவ்வசுக்களைத் தன்காலால் புடைத்துத் தள்ளினான். அவ்வசுக்கள் உடனே திக்குத்திசை தெரியாமல் மயங்கி மூர்ச்சையடைந்தார்கள். கலுழன் மீறி அமிர்த கலசத்தினருகில் வந்தான். அந்த அமிர்த கலசத்தினருகில் வடவாமுகாக்கினிபோல் அக்கினி காவலிருந்தது. அதைக் கண்டு அடா! இதற்கென்ன செய்கிறதென்று யோசித்து, உடனே ஆகாயத்திலெழும்பி வானநதியில் முழுகி ஜலத்தைச் சிறகிலேந்திவந்து அந்த அக்கினியில் விட்டு, க்ஷணநேரத்தில் அவித்து அப்புறஞ் செல்லுகையில் ஒரு சக்கரம் சுழன்றுகொண்டு மேல்வந்தது. அதைக் கண்டு விரைவில் தன் உடலைச் சுருக்கி அச்சக்கரத்துக்குத் தப்பித்துக்கொண்டு அமிர்தகலசத்தை எடுக்கிறபோது, அந்த அமிர்தகலசத்தைப் பின்னிக்கொண்டிருந்த இரண்டு நாகஞ் சீறி எழுந்தன. அந்நாகங்களை ஒரே அறையாகத் தன் கால் நகத்தால் அறைந்து உடலைப் பிளந்துவிட்டு அமிர்தகலசத்தை எடுத்துக்கொண்டு மிகுந்த மகிழ்ச்சியுடன் கலுழன் திரும்பினான். இந்தச் சேதியைத் தூதுவரால் இந்திரன் கேட்டு அதிவேகமாய் வந்து தன் கையிலிருந்த வஜ்ராயுதத்தை விட்டெறிந்தான். அந்த வஜ்ராயுதம் வந்து கலுழன்மேல் விழுந்து ஓர் இறகைப் பறித்துக்கொண்டு போயிற்று. அப்போது கலுழன் இந்திரனைப் பார்த்து, தேவராஜனே! நீ யார்? நானார்? வேறொருவருமல்ல. இருவரும் காசிபருடைய புத்திரர்தான். ஆனால் நீ மூத்தவன், நீயே என்மேல் வச்சிராயுதத்தை ஏவினால் அதைப் பழுதாக்கலாமா? அதற்காக ஓர் இறகு கொடுத்தேன். இனிமேலென்னைச் செயிக்கலாமென்னும் ஆசைவைக்காதே" என்று சொல்லி அமிர்தகலசத்தை எடுத்துக் கொண்டு கேசரிமார்க்கத்திற் சென்றான்.

அதை இந்திரன் பார்த்து, "இனி நம்மால் இக்கலுழனை வெல்ல முடியாது, நமக்காதாரமன அமிர்தத்தை நாமடைய வேண்டியதற்குமுன் இந்த அமிர்தத்தை நமக்குக் கொடுத்த ஸ்ரீமந் நாரா

யணமூர்த்தியை நினைத்தால் ஒருவழி யுண்டாகும்" என்று கருதி, "ஓ ஹரிஹரி! கோவிந்தா! வைகுந்தவாசா! அநாதரக்ஷகா! அன்பர்க் கெளியோனே" என்று இந்திரன் பலவாறு தோத்திரஞ் செய்தான். எங்கு நிறைந்திருக்கிற ஸ்ரீமந் நாராயணமூர்த்தி, வைகுந்தத்தைவிட்டு, அமிர்தகலசத்தை எடுத்துச் செல்லுகின்ற கலுழன்முன் சங்கு - சக்கரம் - வாள் - கதை - கோதண்ட பாணியாய்த் தோன்றினார். கலுழன் அவரைக் கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, "ஓ பரந்தாமா! ஓ பரமதயாளா! ஓ பக்தரக்ஷகா! ஓ பன்னகசயனா! ஓ கோவிந்தா! ஓ மாதவா! ஹரிஹரி!" என்று துதிக்கத் திருமால் மகிழ்ந்து, "ஓ கலுழனே! அருளுடைமை - அன்புடைமை - ஒழுக்கமுடைமை - வலியுடைமை முதலியவற்றைப் பெற்ற எல்லாரிலும் நீ மகா சிலாக்கியவான். ஆதலால் உன்னை நான் காணவந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்றார். கலுழன் மகிழ்ந்து, "ஓ ஐயனே! நல்லொழுக்க வழியில் நின்று பிசகாதவனாய்த் தங்களிடத் தன்புள்ளவனாய் எந்நாளும் அழிவில்லாதவனா யிருக்கக் கிருபை செய்யவேண்டும்" என்று கூற, திருமால் அவ்வாறு வரங் கொடுத்துக் கலுழனைப் பார்த்து, "ஓ ககபதீ! நீ நமக்கு வாகனமாகவும் துவசமாகவு மிருக்கவேண்டும்" என்று சொன்னார். கலுழன் மகிழ்ந்து "அப்படியே ஆகிறேன்" என்று கூற, உடனே திருமால் வைகுந்தத்திற்கு எழுந்தருளினார். அந்த வேளையில் இந்திரன் கலுழனை நெருங்கி, "ஓ பன்னகவைர! நீயும் நானும் வேறல்ல; நான் காசிபர் மனைவிகளில் அதிதி பெற்ற புத்திரன். நீயோ விநதை பெற்ற புத்திரன். ஒருவர்க்கொருவர் சகோதரர்கள்தான். ஆதலால் எங்களுக்கு ஆதாரமாயிருக்கிற அமிர்தத்தைக் கொடுத்தால் உன்னால் அமிர்தங்கிடைத்த தென்று நினைத்துக்கொள்வோம், கிருபை செய்" என்றுகூற, கலுழன் இந்திரனைப் பார்த்து, "ஓ தேவராஜனே! எனது அன்னை உனது அன்னை யல்லவா? அவள் ஒருவர்க் கடிமையா யிருக்கிறது நலமா? ஆகையால், அவ்வடிமையை நீக்கக் கொண்டுபோகிறேன். நீ யேன் தடுக்கிறாய்?" என்று கூற, இந்திரன் அதைக் கேட்டு, "ஓ கலுழனே! உன்னிஷ்டப்படி நீ கொண்டுபோ. ஆனால், எனக்கொரு வாக்குச் சகாயஞ் செய். அஃதென்னெனில், அமிர்தத்தைக் கொண்டுபோய்க் கத்துருவி னிடத்திற் சேர்த்து, 'எங்கள்

அடிமைத்தொழில் நீங்கிற்று?' என்று கேட்டுக் கொண்டு, உன் தாயும் நீயும் வெளிப்படுங்கள். அப்போது ஆதிசேஷன் முதலானவர்கள் அமிர்தத்தைப் புசிக்க அந்தக் குடத்தை மொய்த்துக் கொள்ளுவார்கள். அந்த வேளையில் நீ ஆதிசேஷன் முதலானவர்களைப் பார்த்து, "இது தேவாமிர்தமாயிற்றே. ஸ்நானஞ் செய்து சுசியாய்ப் புசியுங்கள்" என்று கூறினால் அவர்கள் ஸ்நானஞ் செய்யப் போவார்கள். அப்போது நான் ஒரு மாயஞ் செய்து அமிர்தத்தைக் கொண்டுபோகிறேன்" என, கலுழன் அதற்குச் சம்மதித்து, "அவ்வாறு சொல்லுகிறேன் நீ எனக்கொரு வரங்கொடுக்க வேண்டும். அதென்ன வென்றால், என்னை மதியாமல் எனக்கு அதிக வேலையிட்ட ஆதிசேஷன் முதலானவர்கள் எனக் கிரையாக வரங் கொடு" என்று வினவினன். இந்திரன் அந்த வரத்தைக் கொடுத்து, ஒருவித மாயவேடங்கொண்டு அக்கலுழனுடனே சென்றான். கலுழன் அமிர்தகலசத்தைக் கத்துருவினிடத்தில் சேர்த்து, "அம்மா! இதோ அமிர்தகலசங் கொண்டு வந்தேன். இதை ஏற்றுக் கொண்டு எங்கள் அடிமைத் தொழிலை நீக்கு" என்று வேண்டினன். கத்துரு ஒருவர்க்கும் அகப்படாத அமிர்தத்தைப் பார்த்த மாத்திரத்தில் அதிக மகிழ்ச்சியடைந்து "ஓ கலுழனே! இன்று முதல் நீங்கள் கருத்துக் கிசைந்த விடத்திற் சென்று சுகமாயிருங்கள். இனி யடிமையென்கிற பெயரே இல்லை" என்று கூறினள். கலுழன் மகிழ்ந்து தன் தாயை அழைத்துக் கொண்டு வெளிப்பட்டான். அப்போது ஆதிசேஷன் முதலானவர்கள் அமிர்தகலசத்தைக் கண்டு, மிகுந்த ஆவலோடு வந்து புசிக்க மொய்த்துக் கொண்டார்கள். கலுழன் அது கண்டு, "ஓ கத்துரு புத்திரர்களே! இதென்ன இலேசான வஸ்துவா? தேவாமிர்தமல்லவா? இதனை அசுசியாய்ப் புசிக்கலாமா? சுசியாய்ப் புசியுங்கள்" என்று சொல்லித் தன் தாயுடன் வைகுந்தம் போய் ஸ்ரீமந் நாராயண மூர்த்திக்கு வாகனமும் துவசமு மாயினன். இந்தக் கலுழபகவான் சரித்திரத்தைக் கேட்டவர்களுக்கு இகபர சுகமிகும்.

இங்கே ஆதிசேஷன் முதலானவர்கள் கலுழன் கூறியபடி சுசியாய்ப் புசிப்பது நலமென் றெண்ணி ஸ்நானஞ் செய்துவரச் சென்றார்கள். அந்த வேளையில் இந்திரன் ஒருவித மாயவேடங் கொண்டு அந்த அமிர்த கலசத்தை யெடுத்துக்கொண்டு தனது

லோகத்திற்சென்று அந்த அமிர்த கலசத்துக்கு முன்னிருந்த காவலைவிட அதிகமாகக் காவல்வைத்து மிகுந்த மகிழ்ச்சியுடனிருந்தான். ஸ்நானஞ் செய்யப்போன ஆதிசேஷன் முதலானவர்கள் அதனைமுடித்து மகா சுசியுடனே அமிர்தகலசம் வைத்திருந்த இடத்துக்கு வந்து பார்த்தார்கள். அவ்விடத்தில் அமிர்த கலசத்தைக் காணாமல் திடுக்கிட்டுத் தாயாகிய கத்துருவின் இடத்திற் சென்று "தாயே அமிர்தகலச மெங்கே?" என்று கேட்டார்கள். அவள் "ஐயோ மக்களே அங்கிருந்ததே எங்கு போயிற்று." என்று அலறிக் கையை நெரித்துக்கொண்டு வந்து பார்த்தாள். அங்கு அமிர்தகலச மில்லாமையைக் கண்டு "ஆ புத்திரர்களே உங்களைப் போல் உலகத்தில் அபாக்கியவான்களில்லை. கைக்கு எட்டின பொருள் வாய்க்கு எட்டாமற் போயிற்று. இனி அதற்காகத் துன்பப்படுவதில் ஒரு பயனுமில்லை. மகாபலவானான கலுழன் அடிமையும் நீங்கிற்று 'கலையு மப்பைக் கண்டு கட்டியிருந்த விதையை வட்டிக்கு விட்டான்' என்கிற பழமொழி நமக்குத் திருஷ்டாந்தமாயிற்றே" என்று கூறிச் சென்றாள். ஆதிசேஷன் முதலானவரும் ஏங்கி "ஐயோ மகாபராக்கிரமசாலியாகிய கலுழனால் கிடைத்த அமிர்தத்தைப் புசிக்கிறதற்கு நமக்குப் பிராப்தி இல்லை" என்று வருத்தப்பட்டு அவ்வமிர்த கலசத்தை வைத்திருந்த தர்ப்பை மணக்கிறதைப் பார்த்து, இந்தத் தருப்பையில் கொஞ்சித்து அமிர்தம் சிந்தினதாயிருக்கிறதென்று நினைத்து யாவரும் ஒன்றாகக்கூடி அத்தருப்பையை நாக்கினால நக்கினார்கள். அப்படி நக்கின மாத்திரத்தில் அவர்கள் நாக்குகளெல்லாம் இரண்டு பிரிவாகப் பிளந்தன. அதன்மேல் ஆதிசேஷன் முதலானவர்கள் துன்பமுற்று இருந்தார்கள். சிலநாள் சென்றபின்பு ஆதிசேஷன் தன்னந்தனியே இருந்து கலுழன்பெற்ற வரங்களையும் திருமாலுக்கு வாகனமும் துவசமுமாயின திறத்தையும் நினைத்து "இனிநாம் கலுழனுக்கிரையாவதேயன்றிப் பிழைக்கப்போவதில்லை. நமது நம்பிமார்களோ துஷ்டர். இந்தத் துராத்மாக்களை விட்டு நீங்கி நாம் பிழைக்கும் வழியைத் தேடிக் கொள்ளவேண்டும்" என்று பலவாறு சிந்தித்து ஒரு வனத்திற் சென்று பிரமனை நினைத்து அநேககாலந் தவத்திலிருந்தான். பிரமன் அந்த ஆதிசேஷனுக்குப் பிரசன்னமாய் "ஓ அனந்தனே, உனக்கு வேண்டிய வரமென்ன? கேள் தருகிறேன்" என்றான். ஆதிசேஷன் அநேகவிதமாய்த் துதித்து "ஐயனே! ஜனமே

ஜயமேஜய மகாராஜன் செய்கிற சர்ப்பயாகத்தில் மடியும்படி எனக்கு நேரிட்டிருக்கிற அன்னையின் சாபத்தை நீக்கவும், கலுழனால் துன்பப்படாமலிருக்கவும், என் சகோதரர்களின் சம்பந்தம் எனக்கில்லாமலிருக்கவும் கிருபை செய்ய வேண்டும்" என்று வேண்டினான். பிரமதேவர் "ஓ ஆதிசேஷா! உன் சகோதரியின் வயிற்றில் ஒரு புத்திரன் உதிக்கப்போகிறான். அவனால் சர்ப்பயாகத்தின் இம்சை நீங்கும். நீ பாதாளலோகத்திற் சென்று அங்கிருக்கிற சர்ப்பங்களுக்கெல்லாந் தலைவனாகி, இந்தப் பூமியைத் தாங்கிக்கொண்டிரு; கலுழன் பயமும், உன் சகோதரர்களின் தொடர்ச்சியுமில்லாமலிரு" என்று கட்டளையிட்டுத் தமது லோகத்திற்குச் சென்றார். பின்பு ஆதிசேஷன் பிரமதேவரிட்ட கட்டளைப்படி பாதாளலோகத்திற் சென்று இவ்வுலகத்தைத் தாங்கி அங்கிருக்கும் பாம்புகளுக்கெல்லாம் தலைவனாய் இனிது வீற்றிருந்தான். இந்த விருத்தாந்தத்தைக் கத்துருவின் புத்திரர்கள் கேட்டு மிகுந்த வருத்தத்தை யடைந்து தாயிட்ட சாபத்தை நினைத்துத் துன்பப்படுகிறவர்களா யிருந்தார்கள்.

அமிர்தங்கொணர்ந்த சருக்கம் முற்றிற்று

---

## 7. ஜரத்காருமுனிவர் சருக்கம்

---

ஜரத்காரு என்னும் பெயருடைய ஒரு முனிவர் இளமையிலேயே எல்லாவற்றையும் நீக்கி இல்லறங் கெட்டதென்று விலக்கி, துறவறத்தையே அநுசரித்து மனம் - புத்தி - சித்தம் - காயம் என்பவைவற்றை ஒரு வழிப்படுத்திச் சுத்தஞான சொரூபியாய் விளங்கி பிரமசரியத்தின் ஒழுக்கநெறி பிசகாமல் தமக் கிச்சையான வனங்களில் சஞ்சரித்து வந்தார். அவ்வாறிருக்கையில் ஒருநாள் அவர் ஒரு வனத்திற் சென்றார். அவ்வனத்தில் உயர்ந்து பருத்துத் தழைத்து தளிர்த்திருக்கிற ஓர் ஆலமரந் தோன்றிற்று. அம் முனிவர் அந்த மரத்தருகிற் சென்று அந்த மரத்தை நோக்கினார். அதில் அறக்கடவுளாகிய இயமன் கட்டளையின்படி இருபத்தொரு புருஷர்கள் வௌவால்போல் தலைகீழாய்த் தொங்கித் துன்பப்பட்டுக்கொண்டிருப்பதைக் கண்டு "அடடா! இவர்கள் யாரோ மகாமுனிவர்கள். மிகுந்த வருத்தமான தவஞ் செய்கிறார்கள். இப்படித் தவஞ்செய்

வதை நாம் எந்த நூலிலும் கண்டதில்லை. கல்வி கரையில்லை யாதலால் இப்படியுந் தவஞ்செய்யச் சாஸ்திரங்கள் கூறியிருக்கின்றதோ என்னமோ, எல்லாம் இவர்களைக் கண்டு வணங்கி வினவினால் தெரியும்" என்று மதித்து மரத்தடியிற் சென்று அவர்களைப் பார்த்து வணங்கி, "ஓ மகாத்மாக்களே! இப்படிப் பெருவருத்தத்தோடு தவஞ்செய்கிற காரணம் என்ன?" என்று வினவினான். இந்த வசனத்தை அந்த இருபத்தொரு புருஷரும் கேட்டு "ஓ மகாத்மாவே! நாங்கள் தலைகீழாகத் தொங்குகிறோமேயொழியத் தவஞ் செய்யவில்லை. எங்கள் மரபில் ஜரத்காரு என்று ஒரு புத்திரன் பிறந்திருக்கிறான். அவன் இளமையிலேயே இல்லறத்தை வெறுத்துத் துறவறத்தை யனுசரித்து பிரமசாரியாயிருக்கிறான். அதனாலே யமன் கோபங்கொண்டு 'உங்கள் மரபு விளங்கவில்லை யாதலால், நீங்களெல்லாரும் நரகவேதனைக் குள்ளாகுங்கள்" என்று இந்த மரத்தில் தலைகீழாயிருக்கக் கட்டளையிட்டான். அக்கட்டளைப்படி நாங்கள் தொங்குகிறோம்" என்றார்கள். ஜரத்காரு இதைக் கேட்டதும் திடுக்கிட்டு நடுநடுங்கிச் சரீரம் வெயர்த்து மொழி குழறிச் சாஷ்டாங்கமாக அவர்களுக்கு நமஸ்காரஞ் செய்து "ஓ ஐயன்மீர்! ஜரத்காரு என்பவன் நான்தான். கோபித்துக் கொள்ளாதீர்கள். இல்லறம் நல்ல பயனைக் கொடுக்காதென்று கருதித் துறவறத்தை மேற்கொண்டேன். இனி உங்கள் நிமித்தம் கிரகஸ்தனாகின்றேன். ஆனால் எனக்கு ஒரு வரங் கொடுக்கவேண்டும். அஃதென்னவெனில், என் பெயர்கொண்ட ஸ்திரீயை விவாகஞ் செய்து கொள்கிறேன். அப்படி சித்திக்கும்படி கிருபை செய்யுங்கள்" என்று வேண்ட அவர்கள் அவ்வாறு வரங்கொடுக்க அவ்வரத்தைப் பெற்ற ஜரத்காரு அவர்களை வணங்கி விடைபெற்றுக் கிரகஸ்தனைக் கருதித் தன் பெயர்கொண்ட ஸ்திரீயை நாடி எங்கணுந் தேடி இந்தக் கத்துருவுக்கு ஜரத்காரு என்னும் பெயரால் ஒரு பெண்ணிருப்பதாய்க் கேள்விப்பட்டு அவர்கள் இருக்கிற இடத்துக்கு வந்தான்.

கத்துருவும் தக்ஷகன் முதலான புத்திரர்களும் விரைவிலெழுந்து எதிர்கொண்டுபோய் அவரை அழைத்து வந்து பொற்பீடமளித்து அதில் வீற்றிருக்கச் செய்து வந்தனை வழிபாடு செய்தார்கள். அப்போது கத்துரு பெற்ற ஜரத்காரு என்னும் பெண்ணும் வந்து அவரை வணங்கி நின்றாள். ஜரத்காருமுனிவர் யாவர்க்கும் பல ஆசிகள் வழங்கி தக்ஷகன் முதலானவர்களை நோக்கி "ஓ

நாககுமாரர்களே! இதோ நிற்கிற பெண் யார்? இவள் பெயரென்ன? இவளை யாருக்காவது விவாகஞ் செய்துகொடுத்தீர்களா? கூறுங்கள்" என்று வினவ, தக்ஷகன் "ஓ ஐயனே! இந்தப் பெண் எங்கள் தங்கை. இவள் பெயர் ஜரத்காரு. இவளுக்கு இன்னும் விவாகமில்லை" என்று கூற முனிவர் மிகுந்த மகிழ்ச்சியடைந்து தமது விருத்தாந்தத்தை விளம்பி "இப்பெண்ணை எனக்கு விவாகஞ் செய்து கொடுங்கள்" என்று கேட்டார். தக்ஷகன் முதலானவர்கள் திடுக்கிட்டு "இதென்ன ஆச்சரியம்! நமது தங்கையை விவாகஞ் செய்துகொடு வென்று இந்த மகாத்மா கேட்கிறார். மறுத்தோமானால் என்ன சாபம் நேரிடுமோ" என்று பயந்து ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறபோது, அதிலொரு நாகம் தேனில்விழுந்த ஈயைப்போல் மயங்குஞ் சகோதரர்களை நோக்கி, "ஓ சகோதரர்களே! நீங்களேன் மயங்குகிறீர்கள்? சில நாட்களுக்குமுன் நமக்கு வந்த சாபத்தையும் கலுழன் பெற்ற வரத்தையும் நினைத்து நித்திரை செய்கிறபோது ஜனமேஜய மகாராஜன் சர்ப்பயாகத்தைச் செய்யவும் அந்த யாகத்தில் நாமெல்லோரும் இறக்கவும், நமக்காகத் தேவர்களெல்லாம் பிரமனிடத்து முறையிடவும் அப்பிரமன், தேவர்களே நீங்களேன் வருத்தப்படுகிறீர்கள்? தக்ஷகன் முதலானவர்களோடு ஒரு பெண் பிறந்திருக்கிறாள். அவளை ஒரு முனிவர் விவாகஞ் செய்கிறார். அவர் கிருபையினால் அவளிடத்தில் ஒரு புத்திரன் உதிக்கிறான். அதனால் நாகங்களுக்கு நேரிடும் துன்பம் நீங்கும்—, என்று சொல்லவும் கனவு கண்டேன். அக்கனவை நினைவென்று நினைத்திருந்தேன். இப்போது திருஷ்டாந்தமாயிற்று. இந்தமுனிவர் கருத்தின்படி நமது தங்கையை இவருக்கு விவாகஞ்செய்து கொடுக்கிறதே நமக்கெல்லாம் நலம்" என்று கூற, தக்ஷகன் முதலானவர்கள் மகிழ்ச்சியடைந்து அம்முனிவரை வணங்கி "ஓ ஐயனே! உமது நினைப்பின்படி எங்கள் சகோதரியாகிய ஜரத்காருவை விவாகஞ் செய்துகொள்ளும்" என்றுவிடை கூறி நல்ல சுப முகூர்த்தத்தில் அம்முனிவருக்கு ஜரத்காருவை மணஞ்செய்வித்துக் களிப்படைந்தார்கள்.

முனிவர் தம் மனைவியாகிய ஜரத்காருவை அழைத்துக் கொண்டு ஒரு வனத்திற்குச் சென்று பர்னகசாலை ஒன்று இயற்றி அதிலிருந்து மனைவி பணிவிடை செய்யத் தாம் தவத்திலிருந்தார். இப்படிச் சிலநாட் சென்றபின்பு, ஒருநாள் முனிவர் தமது

மனைவி செய்துவருகிற பணிவிடைக்கு மகிழ்ச்சி யடைந்து மனைவியை யழைத்து "ஓ பெண்ணே! மணம்புரிந்த காலமுதல் இதுவரைக்கும் நீ செய்துவந்த உபசாரங்களினால் உன்மீது எனக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. இனி இருவருங் கூடிக் குலாவி வாழ்ந் திருக்கலாம். ஆனால், ஒன்று சொல்லுகிறேன், அஃதென்னவெனில், நீ எனக்கொரு குற்றஞ் செய்வாயானால் அன்றையதினமே உனக்கும் எனக்கும் சம்பந்தமில்லை. இந்தச் சொல்லை உறுதியாய் நினைத்துக்கொள்" என்று கூறி அன்றுமுதல் ரதியும் மதனனும் போலக் கலந்து வாழ்ந்திருந்தார்கள். இப்படிச் சிலநாட் சென்ற பின்பு ஒருநாள் அந்திவேளையில் இந்த முனிவர் நித்திரைசெய் தார். அந்தவேளையில் ஜரத்காரு "ஓ!! சூரியனஸ்தமிக்கிறானே! முனிவர்களெல்லாம் சந்தியாநுஷ்டானஞ் செய்கிறார்களே! நமது கணவனார் நித்திரை செய்கிறாரே! இந்த வேளையில் நமது கணவனை எழுப்பவேண்டும்" என்று கருதி கணவனிடத்து வந்து நின்று "இவரை எழுப்பினால் ஒருவேளை கோபங்கொள்வார். எழுப்பா விட்டாலும் குற்றங் கூறுவார். இதற்கென்ன செய்வது" என்று நினைத்துத் தெய்வச்செய லெப்படியோ அறியேனென்று சஞ்சலப்பட்டுக் கணவனது பாதத்தைப் பிடிப்பது போலப் பற்றினாள். உடனே முனிவர் நித்திரைவிட்டு எழுந்து கோபங்கொண்டு "பெண்ணே! நீ நித்திரை பங்கஞ்செய்ததினால் இனி உனக்கும் எனக்கும் சம்பந்தமில்லை" என்று சொல்லிவிட்டு எழுந்து தம் கருத்துக் கிசைந்த இடத்துக்குப் போக யத்தனித்தார். அந்த வேளையில் ஜரத்காரு கணவன் காலில் விழுந்து வணங்கி "ஓ ஸ்வாமி! சந்தியாநுஷ்டான காலமாயிற்றே. இன்னும் நித்திரை செய்கிறீர்களே! என்று எழுப்பினேன் வேண்டாப் பெண்டின் கைபடக்குற்றம் கால்படக்குற்றம் என்று சொல்லும் பழமொழி போல் குற்றமில்லாதவற்றைக் குற்றமாகப் பாவித்து என்னைத் தூறி வெளிப்பட்டீர். எனக்கொரு வழிகாட்டுமையா" என்று மிகுந்த ஆறுமையோடு வேண்ட, "பெண்ணே! நீ ஏன் வருத்தப் படுகிறாய்? உன் வயிற்றில் ஒரு புத்திர னிருக்கிறான். அவனாலே உனக்கும் உன் சுற்றத்தாருக்கும் நலமுண்டாகும். ஆனதால் உன் தாய்வீடு போய்ச்சேர்" என்று கட்டளையிட்டு முனிவர் மனைவியைப் பிரிந்து சென்று தவத்தி லிருந்துவிட்டார். பின் ஜரத்காரு தாய்வீடு வந்து சேர்ந்து தன் விருத்தாந்தத்தைத்

தாங்க்கும் சகோதரர்களுக்குஞ் சொல்ல, அவர்கள் மிகுந்த வருத்த மடைந்து “ இனி என்ன செய்கிறது வருத்தப் படாமல் சும்மாயிரு. அம்மா ” என்று ஆதரித்து வந்தார்கள். சிலநாள் சென்ற பின்பு அவள் மாணிக்கம்போல் ஒரு புத்திரனைப் பெற்றாள். தக்ஷகன் முதலானவர்கள் அப் புத்திரனை மிகுந்த அன்புடனே வளர்த்து அவனுக்கு ஆஸ்திகனென்று பெயரிட்டு ஆதரித்து வந்தார்கள். அப்புத்திரன் சகல கலைக்கியான சொரூபியாகிய ஜரத்காரு முனி வழியாய்த் தோன்றினவனுதலால் ஞானசொரூபியாய்த் திரிமூர்த்தி களாலும் அளவிடப்படாத தவசிரேஷ்டனு யிருந்தான். கேட்டீரோ ஜனமேஜய மஹாராஜனே! காரணங்கள் இப்படி யிருக்க நீர் ஏன் சர்ப்பயாகஞ் செய்ய ஐயப்படுகிறீர்? விரைவில் யாகத்தை நிறைவேற்றும்” என்று உதங்கமுனிவர் கூற அரசன் உதங்கமுனி வரை வணங்கி “ஓ ஐயனே! தாங்கள் இது வரையில் கூறிவந் தது தகுதிதான். ஆனல் அந்தத் தக்ஷகன் எனக்கொரு குற்ற முஞ் செய்யவில்லையே. நான் எப்படி யாகத்தைச் செய்வது” என்று ஆக்ஷேபித்தான். அதற்கு உதங்கமுனிவர் “ அரசனே! அந்தத் தக்ஷகன் எனக்குச் செய்த குற்றம் பெரிதல்ல. உமக்குச் செய்த குற்றந்தான் பெரிது. இது வரையில் அந்த விருத்தாந்தம் உமக்குத் தெரியாதா? ஆ ஆ இதென்ன ஆச்சரியம்” என்றார். அரசன் “ ஐயனே! அத் தக்ஷகன் எனக்கொரு குற்றமுஞ் செய்ய வில்லை. யான் அறியேன். அப்படி யேதாயினும் ஒரு குற்றம் அத் தக்ஷகன் செய்திருந்தால் விவரித்துச் சொல்லும்” என்று வினவ, “ ஓ அரசனே! அவன் உமக்குச் செய்த குற்றத்தைக் கூறுகின் றேன் கேளும்” என்று உதங்கமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

ஜரத்காரு சருக்கம் முற்றிற்று

## 8. பரிக்ஷித்துமகாராஜன் சருக்கம்

“ கேளும் ஜநமேஜய மஹாராஜனே! குருகுலதிலகனுன உன் பிதா பரிக்ஷித்து மஹாராஜன் இந்த அத்தினபுரவாசியா யிருந்து, ஐம்பத்தாறு தேசங்களிலும் தன்னுணை நடாத்தி நீதி யுடன் அரசு செலுத்தி வருகிற நாளில், ஒருநாள் வேட்டையாட யத்தனித்து மந்திரி முதலாகிய தளங்களுடனே காட்டிற் சென்று

யாளி - சிங்கம் - புலி - கரடி - யானை - செந்நாய் முதலாகிய விலங்கினங்களை நாசப்படுத்தி வருகிற போது ஒரு வேங்கையானது வேடர்கள் போட்ட வலையைத்தாண்டி ஓடிற்று. அதனைக் கண்டு வேடர்கள் ஓடி வந்து அரசனுக்குக் கூற, அரசன் கேட்டுக் கோபங்கொண்டு, "ஆ! வலையையுங் கடந்ததா? எங்கே அந்தப் புலி" என்று வாயுகதியோடு கலந்த குதிரையின் மேலேறிப் புலியைத் தேடிக்கொண்டு புறப்பட்டான். அப்புலி அதிவேகமாய்க் காடு மலை முதலியவற்றில் விழுந்து ஓடிற்று. அரசனும் விடாமற் பின் சென்று புலியைத் துரத்துகிறபோது, புலி ஒரு பெரிய மலையிலேறி அருவிக் கருகில் மறைந்து விட்டது. புலி மறையவே அரசன் நான்கு திசைகளிலும் சுற்றிச் சுற்றித் தேடியுங் காணாமல், மகா உக்கிரத்துடனே அம் மலையைவிட் டிறங்கிவந்தான். அப்படி வருகிறபோது அவ்வழியி லோரிடத்தில் பயிரவ முனி யென்பவர் விழித்த கண்ணுடனே தவஞ்செய் திருந்தார். அவரை அரசன் கண்டு வணங்கி, "ஓ முனிநாதா! இவ்வழியாய் ஒரு புலி போயிற்றா? சொல்லுமையா?" என்று கேட்டான். அம்முனிவர் யோகத்திலிருப்பவ ராதலால், ஒன்றுஞ் சொல்லாமல் மௌனமா யிருந்தார். அதன் மேல் அரசனுக்குக் கோபம் பிறந்தது. உடனே பக்கத்தி லிறந்து கிடந்த சர்ப்பத்தை வில்லினாலெடுத்து அதைஅவர் கழுத்தில் மாட்டிவிட்டுப், பின்பு அப்புலிபோன சாடையிற் சென்று தேடலுற்றான். அவ்வாறு அதைப்பல விடங்களிலுந் தேடிக் காணாமல் மறுபடியுந் தன் சேனைகளோடு கலந்து, முன் போலவே அந்த அத்தினபுரத்தில் வந்து அரசுசெலுத்தி வரலானான். காட்டில் பயிரவ முனிவர்க் கெதிரில் மற்றொரு பெரியவர் தவஞ் செய்து கொண்டிருந்தார். அவர் உன் தந்தையாகிய பரிக்ஷித்து மஹாராஜன் பயிரவமுனிவர் கழுத்தில் இறந்தபாம்பை யெடுத்துச் சுற்றும் போது பார்த்திருந்து, உடனே அம் முனிவரின் புத்திரராகிய சிரிங்கமுனிவர் தவஞ் செய்கின்ற இடத்துக்குப்போய் நடந்த விருத்தாந்தத்தைச் சொல்ல, அந்தச் சிரிங்கமுனிவர் கோபங்கொண்டு "என் தந்தை கழுத்தில் இறந்த பாம்பைச்சுற்றின அரசன் இன்றைக்கேழாவது நாள் தக்ஷகனென்கிற பாம்புக் கிரையாகக்கடவன்" என்று சபித்துத் தன் தந்தையிடம் வந்து, கழுத்தில் சுற்றியிருக்கிற பாம்பை எடுத்தெறிந்து வணங்கி நின்றான். பயிரவமுனிவர் யோகநிலையை விட்டுப் பிரிந்து, ஐம்பொறிகளின் வழியாய் ஐம்புலனைச் செலுத்தி நோக்கினார். எதிரே

புத்திரன் இருப்பதைக் கண்டு, "ஆ மகனே! நீ தவஞ்செய்வதை விட்டு இவ்விடத்துக் கேன் வந்தாய்?" என்று வினவ, சிரிங்கமுனிவர் "ஓ தந்தையே! யாரோ ஓர் அரசன் புலியைத்தேடிவந்து தங்களைக் கண்டு இந்த வழியாய்ப் புலிபோயிற்றோ வென்று வினவினதாகவும், அதற்குத் தாங்கள் விடை கொடுக்கா திருந்ததாகவும், அதன் மேல் அவ்வரசன் கோபங்கொண்டு இதோ கிடக்கிற இறந்த சர்ப்பத்தைத் தங்கள் கழுத்தில் சுற்றிவிட்டுப் போய்விட்டதாகவும் இம் முனிவர் வந்து சொன்னார். உடனே கோபங்கொண்டு இன்றைக் கேழாநாள் தக்ஷகனென்கிற பாம்புக்கு அந்த அரசன் இரையாகக் கடவதென்று சபித்து விட்டுத் தங்களிடத்துக்கு வந்து பார்த்தேன். இம் முனிவர் கூறியபடி கழுத்தில் பாம்பிருந்தது. அதை எடுத்தெறிந்து நின்றேன்" என்றார். பபிரவமுனிவர் ஞான திருஷ்டியால் நோக்கி வந்தவன் இன்னனென் றுணர்ந்து மிகுந்த வருத்தத்தையடைந்து, புத்திரனைப் பார்த்து ஒரு வசனஞ் சொல்லுகிறார்—

"அப்பா மகனே! உண்டி முதலியவற்றைச் சுருக்கலும், உயிர்க் கிடையூறு செய்யா திருத்தலுமாகிய இவ் விரண்டுந்தானே தவத்துக்கு உருவம். இதனை யுணர்ந்திருந்தும், உலகாதிபனை குருகுல சிகாமணிக்குக் கடினமான சாபத்தைக் கொடுத்தாய். ஐயோ! அந்தப் பரிக்ஷித்து மகாராஜன் இருக்கின்றதனா லல்லவா தரும தேவதை நாலு பாதத்தில் நடக்கின்றது. அவ்வரசன் இறந்துவிட்டால் இனி எவன் வருவானோ? உலகம் எவ்வாறுமோ? 'மனழயின்றி மானிலத்தார்க் கில்லை, மழையும், தவமிலா ரில்வழி யில்லை தவமும், அரசிலா ரில்வழியில்லை, அரசும், இல்வாழ்வா ரில்வழி யில்" என்று சொல்லு மேலோர் வாக்கியத்தின்படி, உலகி லிருப்பவர்கள் எல்லா நலமும் மழையினா லடைய வேண்டும். அம்மழை தவத்தினாற் பெருகும். அத்தவம் அரசனால் நிலைபெறும். எல்லா நூல்களையும் கற்று மநுசாஸ்திர விதி பிசகாமல் செங்கோல் செலுத்தி, நம்போலியர்க் கெல்லாம் யாதொரு குறைவும் வாராம லிருக்கப் பாதுகாத்து வரும் அரசன், ஏதோ கிஞ்சித்துப் பிசகிப் போனாலும் நாம் பிசகி விபரீத சாபமிடலாமா?" என்று சொல்லி வருத்தப்பட்டார். சிரிங்கி முனிவர் தந்தையை வணங்கி, "தந்தையே நான் கோபத்தினால் முன் பின் யோசியாமல் கடினசாப மிட்டுவிட்டேன். அச்சாபத்தை நீக்கிவிடுவோ மென்றால், இன்னும் அவ்வளவு தவம் நான்

அடையவில்லை. இதற்கென்ன செய்வேன்" என்று "தந்தை" யோடு தானும் வருத்தப்பட, பயிரவமுனிவர் தமதருகி லிருந்த வர்களில் சிலரை நோக்கி, 'ஓ முனிவர்களே! நீங்கள் பரிக்ஷித்து மகாராஜனிடத்திற் சென்று அவரைக் கண்டு சாபம் வந்த வரலாற்றைச் சாற்றி, ஏழுநாளைக்கு மாத்திரம் பாம்பு வராதிருக்கிற இடத்திலிருந்து தப்பித்துக் கொள்ளச் சொல்லுங்கள்' என்று சொல்லி அனுப்புவித்தார். அம் முனிவர்கள் அவ்வாறே உனது தந்தையைக் கண்டு, சாபம்வந்த விருத்தாந்தத்தைச் சொல்லி "ஏழுநாளைக்கு மாத்திரம் பாம்பு வராதிருக்கிற இடத்திலிரும்" என்று சொல்லிவிட்டுப் போனார்கள். அவர்கள் போன பின்பு உனது தந்தை மந்திரி முதலாகிய புத்திமான்களிடத்தில் ஆலோசித்து, அவர்கள் கூறிய யுக்தியின்படி கடலில் ஒரு பெரிய ஸ்தம்பத்தை நாட்டி, அந்த ஸ்தம்பத்தின்மேல் ஒரு திவ்யமண்டபமியற்றி, அதில் அரவின் விஷத்தை அடக்கு மருத்துவர் மந்திரவாதிகளோடு இன்னுஞ் சில காவலாளிகள் தன்னைச் சூழ்ந்திருக்க ஆறு நாள் பரியந்தம் யாதொரு குறைவுமில்லாமல் இனிது வீற்றிருந்தார்.

ஏழாவதுநாள் தக்ஷகனென்பவன் சிரிங்கிமுனிவர் இட்ட சாபத்தைநிறைவேற்றக் கருதிப் பாதாளலோகத்தைக் கடந்து பூலோகத்தில் வந்து, இங்கே உன் தந்தை இருக்கிற எச்சரிக்கையை அங்கங்கே சொல்லிக் கொள்ளுகிறதை லறிந்துகொண்டு, ஓர் ஆலமரத்தடியில் வந்து நின்று, "மகா எச்சரிக்கையா யிருக்கிற அரசனை எவ்வாறு நாம் கொல்லுகிறது. இந்தக் காத்திரமான தேகத்தோடு செல்லுவோமானால் ஒரு வீரன் நம்மைக் கொன்று போடுவான் அப்படி யல்லவென்று அரசனை விட்டுப் போவோமென்றால் நமது தலை ஆயிரஞ் சுக்கலாகப் பிளந்துபோமே! இதற்கென்ன செய்வது?" என்று யோசித்திருக்கிற தருணத்தில் காசிபனென்னும் பெயரையுடைய ஒரு பிராமணன் அதிவேகமாய் ஓடி வருவதைக் கண்டான். அப் பிராமணன் சேரவருகிறதற்கு முன்னமே தக்ஷகன் தனது தேகத்தை மறைத்துத், தானும் ஒரு பிராமணன் போல் வேஷங் கொண்டிருந்தான். காசிபனென்னும் பிராமணன் விரைவில் அருகில் வந்தான். அந்தப் பிராமணனைத் தக்ஷகன் கண்டு, "ஓ ஐயனே! அதிவேகமாய் வருகிற நீர் எவ்விடத்துக்குப் போகவேண்டும்? நீர் நினைத்து வந்தகாரிய மென்ன? சொல்லும்" என்று வினவினான்

காசிபன் " ஓ பிராமணு! சந்திரகுல திலகனுன பரிக்ஷித்து மகாராஜனை அரவுதீண்டச் சாபம் நேரிட்டிருக்கிறதாயும், அதற்கு மருத்துவர்களையும் மந்திரவாதிகளையும் அழைப்பிக்கிறதாயும் கேள்வி. அதற்காக அந்த அரசனிடத்திற் சென்று என் மந்திரவன்மையைக் காண்பித்து, என்னை அடிமையாகக் கொண்டிருக்கிற தரித்திரத்தை அதமாக்கக்கருதி, அரசனிடம் விரைவாகச் செல்லுகிறேன்" என்முன். தக்ஷகன் 'ஓ பிராமணு! அந்த அரசனைக் கொல்ல வருகிற சர்ப்பமென்ன எளிதா? சொர்க்க மத்திய பாதாளலோகங்களிலிருக்கிற சர்ப்பங்களுக் கெல்லாம் தலைமையான சர்ப்பம். அது கடிக்கிறதே இல்லை. ஒரு முனிவரிட்ட சாபத்தின்படி கடித்துக் கொல்ல வருகிறது. அந்த விஷம் சந்திர சடாதரனுகிய பரமன் ஒருவன் தவிர மற்றவர்களுக்கு அசாத்தியமா யிருக்கும். அதை நீ யடக்குகிறேனென்று நினைத்து வந்ததை யோசிக்கும் போது, தரித்திரக் கொடுமை யென்று தோற்றப்படுகின்றதே யன்றி மந்திர சக்தி இருக்கிறவனென்று தோற்றப்பட வில்லை" என்முன்.

அச் சொல்லைக் கேட்ட மாத்திரத்தில் காசிபனுக்குக் கோபம் பிறந்து, "பிராமணு! நீர் என்ன சொன்னீர்? அனந்தன் தக்ஷகன் முதலானபேரொடு எல்லாப் பாம்புகளும் ஒன்முய்க் கூடி ஒருவனைத் தீண்டினுலும், க்ஷணப்பொழுதில் அவ் விஷத்தை நீக்கிச் சுகப்படுத்துவேன்" என்று உறுதியாகக் கூற, தக்ஷகன் பார்த்துச் சிரித்து, "ஓ பிராமணு! நான் தான் தக்ஷகன். இதோ யிருக்கிற ஆலமரத்தை என் விஷாக்கினியாலே பஸ்மீகரப்படுத்துகிறேன். உன் மந்திரப் பலத்தினுல் முன் போல் மரந்தளிர்த்திருக்கும்படி செய்கிமுயா?" என்று கேட்டான். பிராமணன் "நல்லது அப்படியே என் மந்திரபலத்தைக் காண்பிக்கிறேன்" என்முன். உடனே தக்ஷகன் தனது ரூபத்தைக் கொண்டு அந்த ஆலமரத்தைக் கடித்து விஷத்தைக் கக்கினுன். அந்த ஆலமரம் பஸ்மீகரமாயிற்று. பிராமணன் பஞ்சாக்ஷரத்தோடு கலந்த சஞ்சீவி மந்திரத்தை ஒரு தரம் உச்சரித்தான். அந்த ஆலமரம் முன் போல் தளிர்த்துத் தழைத்து நின்றது. தக்ஷகன் அதனைப் பார்த்து, 'ஓ! ஓ! மோசம் வந்தது. இதென்ன விபரீதம்? இந்த மகாபுருஷன் அரசனிடத்துச் செல்லுவானுனல் நாம் கடித்ததென்ன பலன்? இந்தப் புருஷன் அரசனிடத்துச் செல்லாதிருக்கும்படி செய்ய வேண்டும், என்று மனதில் நினைத்து, "ஓ

மகாத்மாவே! இவ்வளவு வருத்தப்பட்டு வருகிறது திரவியத்துக் குத்தானே. இருமை யின்பத்திற்குங் காரணம் திரவியமாதலால் உமக்கு வேண்டிய திரவியத்தை நான் கொடுக்கிறேன். அரச னிடத்துச் செல்லாமல் உமதிடத்துக்குச் செல்லுகிறீரா?" என்று தக்ஷகன் கேட்டான். காசிபன் எனக்கு வேண்டிய பொருளைக் கொடுத்தாற் போய் விடுகிறேன்" என்று சம்மதித்தான். தக்ஷ கன் அந்தக் காசிபனுக்குத் திருப்தியடையத் திரவியத்தைக் கொடுத்து அனுப்பிவிட்டான். அக்காசிபன் தன்னிடத்துக்குப் போய்ச் சுகப்பட்டான்.

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இந்தச் செய்தி தக்ஷ கனும் அக்காசிபனு மறிந்ததேயன்றி வேறொருவரு மறியார் கள். பின் அஃதெப்படி வெளிப்பட்டதென்றால், அந்த ஆல மரத்தில் இரண்டு பிராமணப் பிள்ளைகள் இலைபறித்திருந்தார்கள். மரம் பஸ்மீகரமானபோது அவர்களும் பஸ்மீகரமானார்கள். மரம் தளிர்த்தபோது அவர்களும் முன்போலானார்கள். பின்பு அவர் கள் அம்மரத்தை விட்டு வந்து நாடு நகரங்களிற் பிரசித் தப்படுத்தினார்கள். இங்கே தக்ஷகனானவன் தனது தேகத்தோடு சென்றால் சாபம் நிறைவேறாதென்று கருதிப் பிராமணனைப் போல் வேஷங்கொண்டு, தனது விஷத்தை ஒரு எலுமிச்சங் கனியாகக் கையிலேந்திக் கடலருகில் வந்து, அரசனிருக்கும் எச் சரிக்கையைக் கண்டு வியந்து அந்த மண்டபத்துக்குச் சென்றான். அங்கிருந்த காவலாளிகள் யாரோ ஒரு பிராமணனென்றெண்ணி அவனை மறிக்காம லிருந்துவிட்டார்கள். தக்ஷகன் காலதாமசஞ் செய்யாமல் விரைவிற் சென்று உமது தந்தையைக் கண்டான். உடனே உமது தந்தை எழுந்து வந்தனை வழிபாடு செய்து, ஒரு பொற்பீட மளித்து அவனை இருக்க வேண்டிக்கொண்டான். அத் தக்ஷகனாகிய பிராமணன் அப்போதாயினும் மனமிரங்காமல், தான் கொண்டுவந்த எலுமிச்சங்கனியை அரசனிடம் கொடுத்தான். அதனை உமது தந்தை வாங்கி, அதில் வாசனை இருப்பதை நோக்கி ஆக்கிராணித்தான். உடனே இந்தத் தக்ஷகனாகிய பாவி பிராமண வேஷத்தை நீக்கிப் பூநாகத்தைப்போ லுருவங்கொண்டு, உமது தந்தை காசியிற் கவ்வி மறைந்தான். தக்ஷணம் உமது தந்தைக்கு விஷந் தலைக்கேறி, ஒரு நிமைநேரத்தில் பரமபதஞ் சேர்ந்தான். இந்தச் சேதி மந்திரி முதலாகிய பலரும் அறிந்து வந்து பார்த்து,

அலறிக் கூக்குரலிட்டுப் புலம்பி, அரசனுக்குச் செய்யுங் கிரியைகளை நடாத்தி அவனை அடக்கஞ்செய்து, பின்பு நகரத்திற்கு வந்து உமக் குப்பட்டங் கட்டினார்கள். மகாபாதகனாகிய தக்ஷகன் செய்த குற்றந் தோன்றிற்றா? இவ்வகைப்பட்ட துராத்மாவையும் அவனோடு சம்பந்தப்பட்டவர்களையும் பஸ்மீகரப்படுத்துவது குற்றமா? ஓ அரசனே! இனித் தடையில்லாமல் ஸர்ப்பயாகஞ்செய்ய யத்தனி யும்" என்று உதங்கமுனி கூற, ஜனமேஜய மகாராஜன் இந்த விருத்தாந்தத்தைக் கேட்டுக் காலாக்கினி உருத்திரன்போற் சீறி, "ஓ ஐயனே! மகாபாதகனாகிய தக்ஷகனையும், அவனோடு சம்பந் தப்பட்டவர்களையும், இன்றைய தினத்திலேயே பஸ்மீகரமாக்கு கிறேன். அந்தச் சர்ப்பயாகத்தின் விதியென்ன? அதற்கு என்ன வேண்டுஞ் சொல்லுமையா" என்று வேண்ட, உதங்கமுனிவர் சொல்லுகிறார்.

பரிக்ஷித்துமகாராஜன சருக்கம் முற்றிற்று

## 9. ஸர்ப்பயாகச் சருக்கம்

"ஓ அரசனே! வேதாகமங்களில் வல்ல பிராமணர்களையும், தவசிரேஷ்டராகிய முனிவர்களையும் அந்த யாகத்துக்குத் தகுந்த சமித்து ஓமத்திரவிய முதலானவைகளையும் அழைப்பியும்" என்று உதங்கமுனிவர் கூறினார். அரசன் அவைகளை யெல்லாம் செய்யும் படி மந்திரிகளுக்குக் கட்டளையிட, மந்திரிகள் ஐம்பத்தாறு தேச அரசர்களுக்கும் முனிவர்களுக்கும் விண்ணப்பப் பத்திரிகை எழுதித் தூதுவர்கள் கையிற் கொடுத்தனுப்பி, யாகசாலையைச் சாஸ் திர விதிப்படி இயற்றி, அதற்கு வேண்டிய வஸ்துக்களையும் சேகரித்துவைத்து அரசனிடத்து வந்து வணங்கி, "ஆண்டவனே! தங்கள் கட்டளைப்படி எல்லா வஸ்துக்களும் சேகரமாயின. அரசர்க் கும் முனிவர்க்கும் விண்ணப்பப் பத்திரிகை போயிருக்கிறது" என்று புகன்றனர். அரசன் கேட்டுச் சந்தோஷமடைந்து முனிவர் வருகிற வழியைப் பார்த்துக்கொண் டிருந்தான். அத்தருணத்தில் அரசன் தூதுவர்கள், நாடு - தேசம் - காடு - மலை முதலியவற்றிற் சென்று, விண்ணப்பப் பத்திரிகைகளை அவ்வவ்விடத்தி லிருக்கிற அரசருக்கும் முனிவருக்குங் கொடுத்தார்கள். கொடுத்த தக்ஷணம்

விண்ணப்பத்தின் கருத்தை யுணர்ந்து அரசர்களெல்லாரும் வந்து ஜனமேஜய மகாராஜனைக் கண்டு வணங்கி, அரசன் இட்ட கட்டளை யின்படி அவரவர்களுக்குத் தகுந்த இடத்தி லிருந்தார்கள். பின்பு அகத்தியமுனி - அத்திரிமுனி - ஆங்கீரசமுனி - இரணியமுனி - உரோமமுனி - ஏரண்டமுனி - கலைக்கோட்டுமுனி - காசிபமுனி - கௌதமமுனி - சந்தகுன்முனி - சச்சிதானந்தமுனி - சனகமுனி- சனற்குமாரமுனி - சுகமுனி - துருவாசமுனி - நாரதமுனி - பதஞ்சலிமுனி - பரத்துவாசமுனி - பராசமுனி - பற்பமுனி - பிருகுமுனி - பிஞகிமுனி - புலத்தியமுனி - மார்க்கண்டமுனி - வசிட்டமுனி - வான்மீகமுனி - விசுவாமித்திரமுனி - வியாக்கிர பாதமுனி - வியாசமுனி முதலான முனிவர்கள், "உலகாதிப னொன்று செய்யக்கருதி நம்மை வருவித்தால் போகத்தான் வேண் டும்" என்று நினைத்து ஒன்றுகூடி வந்தார்கள். அரசன் எதிர் கொண்டுபோய் வந்தனை வழிபாடுகளைச் செய்து அவர்களை வரவேற்று பொற்பீடமளித்து இருக்கச் சொல்லிச் சோடச வுப சாரஞ் செய்து, மஹா பயபக்தியுடனே எதிர்நின்றன். முனிவர்க ளெல்லாரும் மிகுந்த மகிழ்ச்சியடைந்து பலஆசீர்வாதங்கள் வழங்கி, "ஓ மஹாராஜனே! இனித் தாமதஞ் செய்யாமல் யாகத்தை நிறை வேற்றும்" என்று நவின்றனர். அரசன், வியாசர் - வசிஷ்டர் - கலைக்கோட்டுமுனி இவர்களைக் குருவாகக்கொண்டு, தானும் தன் மனைவியும் ஸ்நானஞ்செய்து யாகதீட்சை பெற்றுப் பீடத்திலிருந்து வேதவேதியர்கள் மந்திரங்களை யுருவேற்ற யாகத்தைச் செய்தான். மந்திரங்களை உச்சரிக்க உச்சரிக்க சொர்க்க மத்திய பாதாள லோகங்களிலிருந்த சர்ப்பங்களெல்லாம் திரண்டுவந்து யாகத் தில் விழுந்து மடிந்தன. கத்துருவின் புத்திரர்களின் சந்ததிக ளெல்லாம் வெந்து சாம்பரானது மன்றி, அவள் புத்திரர்களும் அந்த மந்திர உறுதியினால் உடன் முழுதும் தளர்ந்து மிகுந்த வருத் தத்துக் குள்ளாயினர். அதில் ஆதிசேஷன் - தக்ஷகன் - அனந்தன் - வாசுகி இவர்கள் தவிர, மற்றவர்களெல்லாம் யாகத்தில் வந்து விழுந்து மடிந்தார்கள். அரசன் வேதவியாசரை நோக்கி, "தக்ஷகன் முதலானவர்கள் இன்னும் வரவில்லையாதலால் விரைவில் வரும்படி செய்யுங்கள்" என்று விதித்தான். அவர்கள் மந்திர தேவதைகளை அதிகமாகத் தூண்டினார்கள். அம் மந்திரதேவதைகள் உடனே ஓடி, ஆதிசேஷன் முதலானவர்களைச் சுற்றிக்கொண்டு இழுக்க ஆரம்

பித்தீது." அதன்மேல் அவர்கள் மனங்கலங்கி, நிலைதளர்ந்து நெஞ்சுலர்ந்து, திகில்டைந்து, மாதா சாபத்தை நினைத்து வருந்தித் துன்பப் பட்டார்கள். இவர்களில் தக்ஷகன் இந்திரபதவியிற் சென்று இந்திரனை வணங்கி, முறையோ! முறையோ! என்று கூவி, "என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று பணிய, இந்திரன் தக்ஷகன் முறையைக் கேட்டு, எப்போதும் உலகிலுள்ள அரசர்கள் அபயமென்று வந்து சரணடைந்தவர்களைக் காப்பாற்றுகிறார்கள். நாம் அவ்வரசர்களுக்கு மேலான அரசனாயிருந்தும், இந்தத் தக்ஷகன் நமக்குத் தோழனாயிருந்தும், இவனைக் காப்பாற்றாமற் போனால் நமது பெருமை என்ன?" என்று தனக்குள் தானே மதித்து, "ஓ தக்ஷகா! நீ அஞ்சாதே என்னருகி லிரு. அந்த ஜனமேஜய மஹாராஜனால் உனக்குக் கெடுதிவராமல் நான் காப்பாற்றுகிறேன்" என்று உறுதிகூற, தக்ஷகன் சிறிது மகிழ்ந்து இந்திரனிடத் திருந்தான்.

இரண்டாயிரம் யோசனை உயர்ந்திருக்கிற மந்திரகிரியை இரண்டாயிரஞ் சுற்றுச்சுற்றி எடுத்துவந்து தேவர்களுக்கு அமிர்தமுங் கொடுத்த ஆதிசேஷன் மந்திரதேவதைகளின் தொந்தரைக்குள்ளாகிச் சிந்தைநொந்து மிகுந்த துன்பமடைந்து, எந்தவிதத்தில் தப்பிப்பிழைக்கப் போகிறோமென்று மனங்கலங்கி, தன்னைப்பெற்ற தாயாகிய கத்துருவிடத்துக்கு வந்து வணங்கி, "அம்மா! நீ முன்பின் யோசிக்காமல் சாபமிட்டாயே: அந்தச் சாபம் நிறைவேறுகிறகாலம் வந்து என்னுடன் பிறந்தவர்கள் மடிந்தார்கள். இதோ இறக்க நானுஞ் செல்லுகிறேன்" என்று கூறிக் கோவென்று கதறித் துக்கித்தான். இதனைப் பார்த்துக் கத்துருவும் ஜரத்காருவும் கையை நெறித்து, "இனியென்ன செய்யப் போகின்றோம்? எல்லாரும் மடிந்தார்களே" என்று கூக்குரலிட்டுப் புலம்பினார்கள். ஆதிசேஷன் ஜரத்காருவைப் பார்த்து, "அம்மா! நீயேன் வருத்தப்படுகிறாய்? இந்த வேளையில் உன் புத்திரனாகிய ஆஸ்திகனை ஜனமேஜய மகாராஜனிடத்தி லனுப்புவித்தால் மடிந்தவர்கள் போக மற்றவர்கள் பிழைப்பார்கள். ஆதலால் அவ்வளவு உபகாரஞ்செய் அம்மணி" என்று சொல்ல, அவள் களிப்படைந்து தன் புத்திரனிடத்திற் சென்று, "அப்பா மகனே! உன் மாமன்மார் எல்லோரும் ஜனமேஜய மஹாராஜன் செய்கிற சர்ப்பயாகத்தில் மடிந்தார்கள். இன்னும் நாலைந்து பேர்கள்தான் இருக்கின்றார்கள். அவர்களு மடிவதற்கு முன்னமே ஜனமேஜய மஹாராஜ

னிடத்திற் சென்று அந்த யாகத்தை நிறுத்தும்படி கேட்டுக்கொள் ", என்றாள். ஆஸ்திகர் "நல்லது தாயே" என்று வணங்கி, விடை கொண்டு காவிகாம்பர தண்டு கமண்டலதாரியாய் அநேக முனிவர்கள் தம்மைச் சூழ்ந்துவர ஜனமேஜய மகாராஜன் யாகஞ் செய்கிற இடத்துக்கு வந்து, தமது வரவைக் காவலாளிகளால் அரசனுக்குத் தெரிவித்து, அரச னுத்தரவின்மேல் யாக பண்டபத்திற் சென்று, அங்கிருக்கும் முனிவர்களை வணங்கி நின்றார். உடனே அரசன் எழுந்து வணங்கிப் பொற்பீடமளித்து அவரை இருக்கச் சொல்லிச் சோடச உபசாரஞ் செய்து, பயபக்தியுடனே யெதிரில் நின்றான். ஆஸ்திகமுனிவர் அரசனுக்குப் பல ஆசிகள் வழங்கி, "ஓ அரசனே இவ்வுலகத்தில் வீரம் கோபமுதலிய கொலைத்தொழிலுக்கும், புகழுக்கும், புஜபல பராக்கிரமத்திற்கும், வாய்மைக்கும், அருளுக்கும், தருமத்துக்கும், யாகத்துக்கும், தானத்துக்கும், அரசுக்கும், செல்வத்திற்கும், அழகுக்கும், சாந்தத்துக்கும் நீ யொருவனேயன்றி உனக்கு ஒப்பானவர்கள் வேறொருவருமில்லை. மேலும் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியாகிய வியாசர் உனக்குக் குருவாயமைந்தபோது, உனக்குக் குறையென்ன? நீ இந்த மூன்று லோகத்தையும் தகிக்கக் கருதினாலும் அப்படியே செய்வாய். அவ்வளவு வல்லமையுடைய மஹா முனிவர்களையும் தகுந்த பராக்கிரமத்தையும் பெற்றிருக்கிற நீ, உன் தந்தையைக் கொன்ற தக்ஷகனைக் கொல்லக் கருதிச் சர்ப்பங்களை யெல்லாம் வதைத்தாய்! இனி உனக்கு ஒப்புவமை யாரிருக்கின்றார்கள்? உங்கள் முன்னோர்களில் ஒருவனான விஜயன் அபிமன்னனைக் கொன்ற சயிந்தவனைக் கொல்லுகிறே னென்று உறுதிகூறி, மறுநாள் அந்திவேளையிற் கொன்றான். அதுபோல நீயும் செய்தாய். உன்னைப்போல் பராக்கிரமசாலி இவ்வுலகத்தி லில்லை. ஆதலால், ஒரு காரியத்திற்காக உன்னிடத்தில் வந்தேன்" என்றார். அரசன் இத்துதியைக் கேட்டுத் தனக்குள் தானே வருத்தமுற்று "இவர் யாரோ மஹாமுனிவர் யாது காரியத்தைப் பற்றி வந்தாரோ?" என்று நினைத்து "என்னிடத்துக்கு வந்த காரியத்தைத் தெரிவித்தால் அக்காரியம் என்னுயிரா யிருந்தபோதிலும் கொடுப்பேன்" என்று கூற, ஆஸ்திக முனிவர் "ஓ அரசனே! தற்காலத்தில் யாகதீட்சை பெற்றிருக்கிற கோலத்தை நீக்கி யாகத்தை நிறுத்தவேண்டும். அதுதான் நான் நாடிவந்த காரியம்" என்றார்.

அந்த யாகமண்டபத்தி லிருக்கிற முனிவர்களும் அரசனை நோக்கி, "ஓ அரசனே இம்முனிவர் கருத்தின்படி யாகத்தை நிறுத்தும். இம்முனிவர் யாரென்றால் ஜரத்காரு முனிவருடைய புத்திரன். இவர் மகாதவசி, திரிமூர்த்திகளும் ஸ்துதிக்கின்ற மகத்துவத்தையுடையவர். இவர் வாக்குக் கெதிர்வாக்கு இல்லை" என்றார். அவ்வரசன் ஆஸ்திகமுனிவரை வணங்கி "ஐயனே! தங்கள் கருத்தின்படி யாகத்தை நிறுத்தினேன்" என்று சொல்லி வேதவேதியர்களை நோக்கி, யாகத்தைப் பூர்த்திசெய்யுங்கள்" என்று வேண்ட, அந்த வேளையில் இந்திரனருகிலிருந்த தக்ஷகனை மந்திர தேவதைகள் போய்ச்சூழ்ந்து, தக்ஷகனையும் அவனைக் காப்பாற்றுகிறேனென்று உறுதிகூறிய இந்திரனையும் பிடித்திழுத்துக் கொண்டு யாக குண்டத்துக்குச் சரியாய் அந்தர ஸ்தானத்தில் வந்தன. இங்கே அரசன் கட்டளைப்படி வேதவேதியர்கள்யாகத்தை பூர்த்தி செய்யவே, மந்திர தேவதைகள் இழுத்துவந்த இந்திரனையும் தக்ஷகனையும் விட்டுவிட்டன. உடனே இந்திரனும் தக்ஷகனும் தங்கள் இருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள். பின்பு அரசன் யாகத்தைப் பூர்த்திசெய்து, வேதவேதியர்களுக்கெல்லாம் திருப்தி யடையச் சொர்னமாரி பெய்து, கோதானம்-பூதானம் - கன்னிகாதானம் - முதலானவை கொடுத்து, முனிவர்களுக்கு வேண்டியவற்றை யுதவி அவரவர்கள் இருப்பிடத்திற்குச் செல்ல வணங்கி விடை கொடுத்து, வந்த அரசர்களுக்கு மகிழ்ச்சியுண்டாக வேண்டியவற்றை வரிசை வரிசையாகக் கொடுத்து மகிழ்ந்தான். ஆஸ்திக முனிவர் அரசனைப் பார்த்து, 'ஓ அரசனே! எனக்கு நீ கொடுத்த ஒரு வரத்தினால் மான் மழு சதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்திரதராகிய பரமன் பூணூல் பெற்றார். சங்குசக்கர கதாகட்க கோதண்டதரனாகிய திருமால் சயனம் பெற்றார். திசைமுகன் பெருமை பெற்றார். வஜ்ரப்படையையுடைய இந்திரன் உயிர் பெற்றான். தேவர்கள் அமுதங் கடைகிற மத்துக்குத் தாம்பு பெற்றார்கள் என்றால், நீ பெற்ற புகழுக்கு அளவில்லை. இனி உனக்கொரு குறைவுமில்லை" என்று வாழ்த்தி அரசனிடத்து விடை பெற்றுத் தன் தாயினிடத்துச் சென்று, நடந்த விருத்தாந்தத்தை நவின்று வணங்கி விடைகொண்டு தவத்துக்குச் சென்றார்.

ஸர்ப்பயாகச் சருக்கம் முற்றிற்று.

# 10. ஜனமேஜயனைப் பிரமஹத்தியடைந்த சருக்கம்

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! அப்பால் அரசன் உதங்கமுனியை வணங்கி, "ஓ சுவாமி! என் தந்தை ஆறுநாள் பரியந்தம் என்ன காலக்ஷேபம் செய்திருந்தார்" என்று வினவ, உதங்கமுனி "ஓ அரசனே! உன் தந்தை சுகமுனிவரிடம் ஸ்ரீமத் பாகவதத்தைக் கேட்டுக்கொண் டிருந்தார்" என அரசன் மகிழ்ச்சி யடைந்து அவ் வுதங்கமுனியை வணங்கி விடைகொடுத்தனுப்பி விட்டுக் கோடிசூரியப் பிரகாசம் பொருந்திய சிங்காதனத்தில் இனிது வீற்றிருந்து அரசு செலுத்திப் பிரமசாரி - கிரகஸ்தன் - வானப்பிரஸ்தன் - சந்நியாசி - ஆதுலர் - தெய்வம் - பிதிரர் - விருந் தினர் - சுற்றத்தார் முதலானவர்களுக்கு யாதொரு குறைவராம லிருக்க அவரவர்களுக்குத் தகுந்தபடி வேண்டியவற்றை யுதவித் தன்னுயிர்போல் மன்னுயிர்களைக் காப்பாற்றி வந்தான். ஒருநாள் மந்திரி முதலானவர்கள் புடைசூழச் சிங்காதனத்தி லிருக்கிற தருணத்தில் பயிலவமுனி - வைசம்பாயனமுனி-ஐயமுனி - சுமந்த முனி - நாரதமுனி - தேவலமுனி - சுகமுனி முதலாகிய மாணாக் கர்களுடனே வேதவியாசர் வந்து தமது வரவைக் காவலாளிகள் மூலமாகத் தெரிவித்தார். உடனே அரசன் எழுந்து எதிர்கொண்டு போய் வணங்கி அழைத்துவந்து பொற்பீடமளித்து இருக்கச் சொல்லி, சோடச உபசாரஞ்செய்து வணங்கி எதிர்நின்றான். வியாசரும் அவருடைய மாணாக்கரும் அரசனுக்குப் பல ஆசி கள் வழங்கிச் சிங்காதனத்தி லிருக்கக் கட்டளையிட்டார். அரசன் சிங்காதனத்தி லிருந்து தவசிரேஷ்டராகிய வியாசமுனிவரை நோக்கி, "ஐயனே! எங்கள் முன்னோர்களாகிய பாண்டவர்களும் சுயோதனன் முதலாகியவர்களும் ஒருவர்க்கொருவர் விரோதப் பட்டு விணாய் மடிந்துவிட்டார்களாமே! அக்காலத்தில் தாங்கள் ஒரு புத்திசொல்லித் தடுத்தால் அவர்கள் மீறுவார்களா? 'தெருச் சண்டை கண்ணுக்கின்பம்' என்கிற பழமொழிபோல் வேடிக் கைப் பார்த்திருந்தீர்களோ? தாங்கள் வமிசகர்த்தாவாகவும் குல குருவாகவும் இருக்க, அவர்களை இவ்வாறுக்குவது தருமமா?" என, வியாசர் நகைத்து "ஓ அரசனே! நீ சிறுபிள்ளை என்ன சொன்னபோதிலும் எனக்கு மகிழ்ச்சியேயன்றி வருத்தமில்லை.

நீ இப்போது சொன்னபடி செய்ய யாராலுமாகாது. திரிமூர்த்திகள் வந்து தடுத்தபோதிலும் பாண்டவர்களும் சுயோதனர் முதலானவர்களும் கேளார்கள். ஏனென்றால், விதைப்பயன் யாரை விட்டது? அதை நீக்க எவராலு முடியாது. காலகதி அப்படியிருந்தது. அதற்காக என்னைத் தூற்றுவது தகுதியல்ல" என்றிசைத்தார். அரசன் சிரித்து "ஓ சுவாமி! சுயோதனன் முதலானவர்கள் ஒருவர் வார்த்தையைக் கேளாதவர்களா யிருந்தபோதிலும், பாண்டவர்கள் என்ன சொற்புத்தி கேளாதவர்களா? நீங்கள் தடுத்தால் அவர்கள் மீறுவார்களா? இது ஒரு உத்தரவா?" என்றான். வியாசர் "ஓ அரசனே! நீ வீண்வழக்கிடுகிறாய். உனக்கு அது திருஷ்டாந்தப்பட ஒன்று சொல்லுகிறேன். அதற்கு நீ தப்பித்துக் கொள்வாயானால் அப்பாண்டவர்களுஞ் சுயோதனாதியரும் மடிந்த குற்றத்தை என்பேரில் வைக்கலாம். அதற்குத் தப்பித்துக் கொள்ளாவிட்டால் காலகதியென் றுணர்ந்துகொள்" என்று கழற, அரசன் மகிழ்ந்து, "ஓ ஐயனே! அஃதென்ன" என்றான்.

வியாசர் "அரசனே! இன்றைக்குப் பத்தாவது நாள் உனக்கொரு பிரமஹத்தி வருகிறது. அதற்குமாத்திரம் நீ தப்பித்துக் கொள், பார்ப்போம்" என்று சொல்லி அரசனிடத்து விடைபெற்றுத் தமது ஆசிர்மத்துக்கு மாணுக்கருடன் எழுந்தருளினர்.

அரசன் சகல சாஸ்திர நிபுணராகிய வேதவேதியர்களையும் பண்டிதர்களையும் அழைப்பிக்கத் தனது மந்திரிகளுக்குக் கட்டளையிட்டான். மந்திரிகள் அக்கட்டளைப்படி அந்தக்ஷணம் வேதவேதியர்களையும் சாஸ்திரிகளையும் அழைப்பித்து அரசனுக்கு அறிவித்தார்கள். அரசன் வந்தவர்களுக்கெல்லாம் வந்தனை வழிபாடுசெய்து பொற்பீடமளித்து இருக்கச்சொல்லி அவர்களைப் பார்த்து "ஸ்வாமிகளே! இன்றையப் பத்தாநாளில் எனக்கொரு பிரமஹத்தி வருகிறதா யிருக்கிறது. அது வராமலிருக்க, ஓர் உபாயஞ் சொல்லுங்கள்" என்று வினவ, வேதவேதியர்களும் சாஸ்திரிகளும் யோசித்து, "ஓ அரசனே! ஓமங்களினாலும் யாகங்களினாலும் சகல பாபங்களும் நிவர்த்தியாகும். ஆதலால், அவற்றில் ஒன்றை இராப்பகல் ஒழிவில்லாமல் இந்தப் பத்துநாளுஞ் செய்தால் அந்தப் பிரமஹத்தி வந்து அடையாது" என்றுரைக்க அரசன்கேட்டு, மகிழ்ச்சியடைந்து "அப்படியே செய்வோம்" என்று அதற்கு

வேண்டிய கருவிகளை வருவிக்க மந்திரிகளுக்குக் கட்டளையிட்டான். மந்திரிகள் வேண்டிய சாமக்கிரியைகளை வருவித்து ஓர் ஓமகுண்ட மியற்றி அரசனுக் கறிவித்தார்கள். அரசன் அதற்கு மேல், "பத்துநாள்வரைக்கும் இரவும் பகலும் ஒழியாமல் மந்திரம் உச்சரித்து ஓமஞ் செய்யவேண்டும். அப்படிச் செய்தவர்க்கு வேண்டியவற்றைக் கொடுக்கிறோம். இதற்குச் சம்மதித்தவர்கள் வரலாம்" என்று வள்ளுவரைக் கொண்டு பறை சாற்றுவித்தான். இவ்வோசையைக் கேட்டவர்கள் யாவரும் பத்துநாள் கண்விழிக்க வேண்டுமாதலால் இது மிகக் கஷ்டமான வேலையென்று சும்மா விருந்து விட்டார்கள். அத்தருணத்தில் பிறவித் தரித்திரனாகிய ஒரு கிழப் பிராமணன் இவ்வோசையைக் கேட்டு, "நமது தரித்திரம் அதமாகுங்காலம் இதுதான்" என்று தீர்மானித்து அரசனிடம் சென்று ஆசீர்வாதஞ் செய்து, 'ஓ இராஜனே! நான் உமது கருத்தின்படி இரவும் பகலுமாகப் பத்துநாளும் இருந்து ஓமத்தை நிறைவேற்றுகிறேன்" என்றான். அரசன் மகிழ்ந்து அவ்வேதியனைக் குருவாகக்கொண்டு, தானும் தன் மனைவியும் ஸ்நானஞ்செய்து ஓமமண்டபத்திற் சென்று, வேதியன் மந்திரம் உச்சரிக்க ஒன்பதுநாள் பரியந்தம் யாகத்தைச் செய்துவந்தான். பத்தாவதுநாள் இராத்திரி ஓமத்தை நடத்தும் வேதியன் முதிர்ந்த வயதுடையவனாதலாலும், ஒன்பதுநாள் பரியந்தம் கண்விழித்திருந்ததினாலும், மிகுந்த தளர்ச்சியுடையவனாய்க் களைப்படைந்து வாயினால் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டே நித்திரை போனான். அந்த நித்திரையில் தானொரு பெருங்காட்டிற் சென்றதாகவும், அந்த விடத்தில் தன்னை ஒரு புலி பாய்ந்துகொல்ல யத்தனித் திருப்பதாகவுங் கனவு கண்டுகொண் டிருக்கையில் அரசன் "இதென்ன மந்திரத்தை உச்சரித்துக்கொண்டே வேதியன் நித்திரை செய்கிறான்" என்று தன்கையிலிருந்த தருப்பையினால் அவ்வேதியனைத் தட்டினான். உடனே வேதியன் மிகப்பயந்து அலறி எதிரிலிருக்கும் ஓமகுண்டத்தில் விழுந்தான். அந்த ஓமத்தீ வேதியனைப் பஸ்மீகரமாக்கிவிட்டது. அரசனுக்கு வியாசரிட்ட கட்டளைப்படி கெடுத்தப்பாமல் பிரமஹத்தி வந்தடைந்தது. அரசன் பிரமை கொண்டவனாய் "ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்! நாம் தருப்பையால் வேதியனைத் தட்டவும், அவ்வேதியன் திடுக்கிட்டு ஓமத்தில் விழுந்திறக்கவும் நேரிட்டனவே! இது வினைப்

ய்யனே! இதை வெல்லுதற்கு ஒருவராலுமாகாது. நமது குலகுருவாகிய வியாஸமஹாமுனிவர் கூடியதேசரி. இனி நாமடைந்த பிரமஹத்தியை அவ்வியாஸ மகாமுனிவர்தான் அகற்றவேண்டும்". என்று கருதி வேதவியாஸரைப் பலவாறு துதித்தான். அந்த வேளையில் அரசனையடைந்த பிரமம்ஹத்தி நீங்க வியாஸர் வருகிறது போல் உலகத்தையடைந்த இருள் நீங்கச் சூரிய னுதயமானன்.

உடனே வியாஸரும் முன்போலவே மாணுக்கருடன் அரசன் அரண்மனைக்கு வந்து, தமது வரவைக் காவலாளிகளால் தெரிவித்தார். அரசன் அவரை எதிர்கொண்டுபோ யழைத்துவந்து, தவிசளித்தல் - கைகழு நீர்தரல் - கால்கழுவ நீர்தரல் - முக்குடி நீர்தரல் - முப்புரி நூல்தரல் - நீராட்டல் - ஆடைசாற்றல் - தேய்வை பூசல் - மலர்சூட்டல் - மஞ்சளரிசி தூவல் - நறும்புகை காட்டல் - விளக்கிடல் - கற்பூரமேற்றல் - அமுதமேந்தல் - அடைக்காய்தரல்- மந்திரமலரா லருச்சித்தல் என்று சொல்லப்பட்ட சோடச உபசாரங்களுஞ் செய்து, "ஐயனே! தங்கள் மகிமை தெரியாமல் தங்களைத் தூறிக்கொண்டேன். என்பேரில் கோபிக்காமல் கிருபை கூர்ந்து, என்னைப் பற்றிய பிரம்மஹத்தி நீங்க ஒருவழி காட்ட வேண்டும். அல்லாமலும் இந்தப் பிரம்மஹத்தி வந்த விதத்தையும் கூறும்" என்று வேண்ட வியாஸர் நகைத்து, "ஓ அரசனே! ஓமஞ்செய்த வேதியன் நித்திரையில் தன்னைப் புலி அடிக்க யத்தனித்திருப்பதாகக் கனவு கண்டான். அந்த வேளையில் நீ தருப்பையால் தட்டவே, அந்த வேதியன் திடுக்கிட்டுப் பயந்து இறந்துபோய்விட்டான். இது வினைப்பயன். இதை ஒருவராலும் வெல்ல முடியாது. ஆதலால் ஐந்தாம் வேதமாகிய ஸ்ரீமஹாபாரதத்தைக் கேள். அதனாலே இந்தப் பிரம்மஹத்தி நீங்குவது மன்றி, உங்கள் முன்னோர்களுடைய காலகதியும் இன்னதென்று விளங்கும். இந்தப்பாரதம் நமது மூதாதைகளுடைய சரித்திரந்தானே யென்று இலேசாக நினைக்காதே. இது மஹா சிலாக்கியமானது. நான்கு வேதங்களோடு ஒப்பிட்டு, ஐந்தாம் வேதமென்று கூறப்பட்டது. இப்பாரதத்திற்கு வகுத்துள்ள பர்வங்கள் பதினெட்டினுள் ஆதி பர்வத்தை முற்றும் படித்துப் வேதியர்களுக்குப் பாயசத்தினல் திருப்தி செய்வித்தால், அவர்களுக்குப் புத்திர சந்தானம் உண்டாகும். சபாபர்வதத்தைப் பூரணமாகப் பக்தியோடு படித்துப் பாராயணர்களுக்குப் பசுவின்பாலால் திருப்தி பண்ணுவித்தால்,

அதிபாக்கியமுண்டாம். ஆரண்ய பர்வத்தை மனம் புறம்பே செல்லாமற் படித்து முடித்து அந்தணர்களுக்கு வாழைக்கனி முதலிய கனிகளால் திருப்தி ஆக்குவித்தால், வெற்றியுண்டாம். விராடபர்வத்தை விசுவாசத்தோடு முற்றும் படித்து வேதவித்துக்களாகிய வேதியர்களுக்குத் ததியோதனத்தால் திருப்தி செய்வித்தால், இஷ்ட பலன்கள் சித்திக்கும். உத்தியோக பர்வத்தை முழுதும் விசுவாசத்துடன் படித்துப் பிராமணர்களுக்குச் சந்தர்ப்பணஞ் செய்து நூதன வஸ்திர தானஞ் செய்தால், இஷ்டகாமிய சித்தியுண்டாம். பீஷ்மபர்வத்தை உள்ளன்போடு முடிய வாசித்துப் பிராமணர்களுக்குக் கருப்பஞ் சாற்றினுல் (அதாவது கருங்கழைகளைத் தந்து) திருப்தி செய்வித்தால், ஆடையாபரணங்கள் குறைவின்றிப் பெருகும். துரோண பர்வத்தைப் பிரீதியோடு படித்துப் பிரமணர்களுக்கு வெண்குடை கொடுத்தால், தானிய சம்பத்துண்டாகும். கர்ன பர்வத்தை அன்போடு முழுமையும் படித்துப் பிராமணர்களுக்குச் சொர்னதானம் பண்ணினுல், ஆயுள் விருத்தியுண்டாம். சல்லியபர்வத்தை முற்றும் படித்துப் பிராமணர்களுக்கு ஷட்ருசிரான்னங்களால் திருப்தி செய்வித்தால், பசுவிர்த்தியுண்டாம். சௌத்திக பர்வத்தைப் படித்து நிறைவேற்றிப் பிராமணர்க்குச் சந்தன புஷ்ப பலகாரங்களால் திருப்தி செய்வித்தால், திரவியலாபமுண்டாம். ஸ்ரீபர்வத்தை உள்ளன்போடு படித்து முடித்துப் பிராமணர்களுக்குத் திவ்விய போஜனஞ் செய்வித்தால், துக்க நிவாரணமாகும். சாந்தி பர்வத்தை முழுதும் படித்து வைதிக பிராமணர்களுக்குத் திவ்விய போஜனஞ் செய்வித்துத் தட்சணை கொடுத்தால், வாகனலாபமுண்டாம். அநுசாசனிக பர்வத்தைப் பக்திபூர்வமாகப் படித்து முடித்துப் பிராமணர்களுக்குக் கந்த புஷ்ப க்ஷத்திர தானஞ் செய்தால், மகதைசுவரிய முண்டாம். அசுவமேத பர்வத்தைச் சம்பூரணமாகப் படித்துப் பிராமணர்களுக்குப் போஜன திருப்தி செய்வித்தால், பெரும்பொருளுண்டாம். ஆசிரமவாச பர்வத்தைப் படித்து முடிந்தபின் பிராமணர்களுக்குச் சோடசதானஞ் செய்தால், இஷ்டசித்தி யுண்டாம். மௌசல பர்வத்தைப் படித்து முற்றுவித்துப் பிராமணர்களுக்குப் போஜன திருப்தி செய்வித்தால், பாபநிவர்த்தியுண்டாம். மகா பிரஸ்தானிக பர்வத்தைப் பிரீதியாக முழுமையும் படித்துப் பிராமணர்களுக்குப் பட்டுக்குடை

தானஞ் செய்தால், பெருஞ் செல்வமுண்டாம். சுவர்க்காரோகண பர்வத்தைப் பக்தி பூர்வமாகப் படித்து முடித்தபின் பிராமணர்களுக்குச் சந்தன புஷ்ப தாம்பூல போஜன வஸ்திர தட்சிணைகளால் திருப்தி பண்ணினால் அஷ்டைசுவரியமு முண்டாம். ஆகையால், இதின் மகத்துவம் உனக்குத் தோன்றவேண்டுமானால், ஒரு கரிய வஸ்திரத்தைக் கொண்டுவந்து பேழையி லடக்கிவைத்து இந்தப் பாரதக் கதையைக் கேட்பாயானால், கதை நிறைவேற நிறைவேற அந்தக் கரியவஸ்திரம் வெள்ளை வஸ்திரமாகிவரும். கரிய வஸ்திரமே வெள்ளை வஸ்திரமானால், அக் கதையைக் கேட்பவர்கள் அடையும் பயனுக்கு ஓரளவுண்டா?" என்று சொன்னார். அரசன் "ஓ ஐயனே! தேவரீர் கருத்தின்படி அந்த ஸ்ரீமஹாபாரதத்தைக் கேட்கிறேன்" என்றான்.

வியாஸர் தமதருகிலிருந்த வைசம்பாயனரை நோக்கி, "ஓ முனி சிரேஷ்டரே! ஸ்ரீமகா பாரதத்தை இந்த அரசனுக்கு விளங்க உரையும்" என்று கட்டளை யிட்டு, அரசனிடத்து விடை பெற்றுத் தமது ஆசிரமத்திற்குச் சென்றார். பின்பு வைசம்பாயனர் அரசன் செய்த வந்தனை முதலியவற்றை யேற்றுப் பல ஆசிகள் வழங்கி, "ஓ அரசனே! நீயும் உன் மனைவியும் ஸ்நானஞ் செய்து சுசியாய் வாருங்கள்" என்று விதித்தார். உடனே அரசன் விரைவிற் சென்று மனைவிக்கு ஸ்நானஞ்செய்யக் கட்டளையிட்டுத் தானும் ஸ்நானஞ் செய்து சகல நியமத்துடன் வந்து வைசம்பாயனரை வணங்கி, அவர் உத்தரவின்படி நல்ல சுசியான இடத்திலிருந்து, "ஓ ஸ்வாமி! இனி ஸ்ரீமஹாபாரதக் கதையை அடியேங்களுக்கு விளங்க உரைக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தான். உடனே வைசம்பாயனர் அப்பாரதக் கதாப்பிரசங்கத்தைக் குறித்துச் சங்கற்பாதி சற்கிரியாநியம பூசனைகளை யெல்லாங் கிரமப்படி நடாத்தி, தமது உபாசனா மூர்த்தியை அகத்தினும் புறத்தினும் ஆராதித்துத் தம் மெதிரில் அஞ்சலியஸ்தராய் நிற்கின்ற இருவரையும் ஆசனத்தி, விருக்கச் செய்து, அவர்களுங் கேட்போராதலால் அச் சங்கற்பாதி நியதிகளை அவர்களால் நடப்பித்து ஆசீர்வாதஞ் செய்து, "ஓ அரசனே! இந்த மேலான காவியத்தை யாவராயினுஞ் சிரத்தையோடும் பக்தியோடும் சகல புவனாதார ஸ்வரூபியாகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைப் பூசித்து வந்தனை வழிபாடு செய்து திரிகரணங்களும் ஒருமிக்க விருந்து கேட்பாராயின், அவர்களுக்கு - ஜனனம் - மரணம்

இடர் - வறுமை - வியாதி - துக்கம் - சோகம் - மோகம் - பாவம் - அரிஷ்டம் - பகை - பயம் - இடையூறு முதலிய துன்பங்களில் ஒன்றேனு நெருங்காது. அன்றியும் - சூரியகிரகணமுஞ் சந்திர கிரகணமு மாகின்றகாலத்தில் உருத்திரபூமியிற் சென்று, ஆயிர பாரம் பொன்னைக் கிரமப்படி சற்பாத்திரமறிந்து தானஞ் செய்த பயனும், போர்முகத்தினின்றுஞ் சயம்பெற்று வெற்றிமாலை சூடி வந்தவர்கள் பெறத்தக்க பயனும் அடைவார்கள். வேள்வி முன்னிலையில் யானை முதலிய சகல பொருள்களையுந் தக்ஷணையோடு தானங்கொடுத்தவர்கள் அடையும் பயன், இக்காவியத்தை ஒரு தரம் வாசிக்கின்றவர்கள் அடையும் பயனுக்குச் சரியாகாது. மேலும் - இக்காவியத்தைத் தன் கரத்தாலெழுதினவனும், ஒருவனுக்குத் திரவியந்தந்து எழுதுவித்தவனும், கோடி கன்னிகா தானங்களையுங் கோடி கோதானங்களையும் நல்ல நியமத்தோடு செய்தவன் அடையும் பயன் யாதோ, அதனைத் தடையின்றி யடைவன். இக்காவியத்தை யெழுதிவைத்திருக்கிற வீட்டில், அஷ்ட ஐசுவரியமும் வந்து குதிகொள்ளும். அன்றியும், பூதங்கள் - பிரேதங்கள் - பேய்கள் - பாலகிரகங்கள் முதலானவை நெருங்காவண்ணம், ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் சதாகாலமுஞ் குடியாயிருந்து அவ் வீட்டிலுள்ளோர்கட் கெல்லாம் எத்துன்பமும் அணுகவொட்டாமற் பாதுகாத்து வருவார். இக்காவியத்தை அனுதினம் பாராயணஞ் செய்கிற புண்ணியசீலர்கள், பிரமனாதி தேவர்களாலும் அகத்தியராதி முனிவர்களாலுந் தொழுதற் குரியவர்களாவார்கள். அவர்கட்கே, அணிமா - மகிமா - கரிமா - இலகிமா - பிராப்தி - பிராகாமியம் - ஈசத்துவம் - வசித்துவம் என்கிற அஷ்டமா சித்திகளுங் கைகூடும். அவர்கட்கே, கற்பக விருட்சம் - காமதேனு - சங்கநிதி - பதுமநிதி - சிந்தாமணி முதலானவைகள் எதிர்நின்று ஏவல்புரியும். அவர்களே, அக்கர விலக்கணம் - இலிகிதம் - கணிதம் - வேதம் - புராணம் - வியாகர்னம் - நீதி சாஸ்த்திரம் - சோதிட சாஸ்திரம் - தருமசாஸ்திரம் - யோக சாஸ்திரம் - மந்திரசாஸ்திரம் - சகுனசாஸ்திரம் - சிற்பசாஸ்திரம் - வைத்தியசாஸ்திரம் - உருவசாஸ்திரம் - இதிகாசம் - காவியம் - அலங்காரம் - மதுரபாடனம் - நாடகம் - நிருத்தம் - சத்தப்பிரமம் - வீணை - வேணு - மிருதங்கம் - தாளம் - அஸ்திரபரீக்ஷை - கனக பரீக்ஷை - இரதபரீக்ஷை - கஜபரீக்ஷை - அசுவபரீக்ஷை-இரத்தனப்

பரீக்ஷை - பூமிபரீக்ஷை - சங்கிராம விலக்கணம் - மல்யுத்தம்- ஆகருடணம் - உச்சாடனம் - வித்துவேடனம் - மதனசாஸ்திரம் - மோகனம் - வசீகரணம்-இரசவாதம் - காந்தருவவாதம் - பைபீல வாதம் - கவுத்துகவாதம் - தாது வாதம் - காருடம் - நட்டம் - முட்டி - ஆகாயப் பிரவேசம் - ஆகாய கமனம் - பரகாயப் பிரவேசம் - அதிரிசியம் - இந்திரஜாலம் - மகேந்திர ஜாலம் - அக்கினித்தம்பம் - ஜலத்தம்பம் - வாயுத்தம்பம் - திட்டித்தம்பம் - வாக்குத்தம்பம் - சுக்கிலத் தம்பம் - கன்னத் தம்பம் - கட்கத் தம்பம - அவத்தைப் பிரயோகம் என்கிற அறுபத்து நான்கு கலைஞானங்களினும் வல்லவராவார்கள். அன்றியும் - இக்காரியத்தை ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் ஸந்நிதியின் முன்னரிருந்து அன்புடன் கேட்பார்களானல் அவர்கள் கொலை - களவு - கள் - குருநிந்தை - பொய் ஆகிய பஞ்சமா பாதகங்களும், ஸ்திரீ ஹத்தி - கோஹத்தி - சிசுஹத்தி முதலாகிய அளவற்ற தீவினைகளும் நீங்கப்பெற்று, அழகு-குணம் - ஆயுள், குலம் - சம்பத்து - வித்தை - விவேகம் - தனம் என்கிற அஷ்ட பாக்கியங்களையும் அடைந்து, கிடைத்தற்கரிய இந்திர பதவியையும் பெற்று வாழ்வார்கள். மேலும் இக்காவியத்தை இம்மையிற் சூத்திரர்கேட்டால், மறுமையில் வைசியராவார்கள். வைசியர்கேட்டால், க்ஷத்ரியராவார்கள். க்ஷத்ரியர் கேட்டால், பிராமணராவார்கள். பிராமணர் கேட்டால், தேவராவார்கள். தேவர்கள் கேட்டால், ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய சாரூபத்தை யடைவார்கள். ஆசாரவீனர்களாயினும் இக்காவியத்தை ஆவலோடு கேட்பார்களாயின், பின்னர் தமக்கொருவர் நிகரில்லாத ஆசார பூஜிதராவார்கள். இக்காவியத்தைக் கன்னிகைகேட்டால், நல்லகணவனைச் சேருவள். மலடிகேட்டால், அழகிய மக்களைப்பெறுவள். தரித்திரன் கேட்டால், மிக்க பாக்கியமுடையவனுவன். வித்தையில்லாதவன் கேட்டால், சிறந்த வித்துவானுவன். அன்றியும், எவனெவன் எந்தெந்தப் பொருள்களையடைய இச்சை கொண்டிருக்கிருனே அவனவன் அந்தந்தப் பொருளை யடைந்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய கிருபையைப் பெற்று வாழ்ந்திருப்பான். இக்காவியத்தின் கேள்வி மகத்துவத்தாற் - குறள் - கூன் - ஊமை - செவிடு - குருடு - முடம் - உறுப்பு மயக்கம் - உறுப்பில் பிண்டம் ஆகிய எண்வகை யுடற்குறைகளும் நீங்கும். பதினெண் புரா

ணங்களை முழுவதுங் கேட்ட பயனும், சகல தீர்த்தங்களினுஞ் சென்றுமூடிய பயனும், இவ்வொரு பாரதக் கதைகளைக் கேட்பதினு லுண்டாகும். ஆதலால் எனது குருசுவாமிகள் இட்டருளிய கட்டளையின்படி அந்த மகாசிலாக்கியமுள்ள பாரதக்கதையைச் சாங்கோபாங்கமாகக் கூறுகிறேன். நீங்களிருவரும் ஒருமனதா யிருந்து கேளுங்கள்" என்று வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

ஜனமேஜயனைப் பிரம்மஹத்தியடைந்த சருக்கத்தோடு

ஸ்ரீமகாபாரதவரலாறு முற்றிற்று.

ஸ்ரீ

# ஸ்ரீ மகாபாரதம்

## ஆதிபர்வம்

### கண்ணன் துதி

ஆரணனை ஆரணத்துட் பொருளை யண்டம்
அளந்தானை அளக்கரிய ஆடலானைக்
காரணனைக் காரணங்கள் கடந்தோன் றன்னைக்
கண்மணியைக் கண்மணிக்கு ஒளியாய் நின்ற
பூரணனைப் பூரணப்பொற் கலசக் கொங்கை
பூமாது நாயகனைப் பொருவிற் செங்கை
வாரணனை வாரணமுன் வந்து தோன்றும்
மாதவனைக் காதலுடன் வணங்கி வாழ்வாம்.

### சூதபுராணிகர் வாக்கியம்

ஓ சௌனகாதி முனிவர்களே! சந்திரகுல சிகாமணியாகிய ஜனமேஜய மஹாராஜனை வைசம்பாயனர் பார்த்து "ஓ அரசனே ஸ்ரீ மகாபாரதம் ஆதிபஞ்சகம் -உயுத்தபஞ்சகம் - சாந்தித்திரயம் - அந்தியபஞ்சகம் என நான்கு வகுப்புக்களாய், இந்த நான்கும் ஆதிபர்வம் - சபாபர்வம் - ஆரண்ணியபர்வம் - விராடபர்வம் - உத்தியோகபர்வம் - பீஷ்மபர்வம் - துரோணபர்வம் - கர்னபர்வம் - சல்லியபர்வம் - சவுத்திகபர்வம் - ஸ்ரீ பர்வம் - சாந்திபர்வம் - அனு சாசநிகபர்வம் - அசுவமேதபர்வம் - ஆசிரமவாசபர்வம் - மௌசல பர்வம் - மஹாப்ரஸ்தானிகபர்வம் - சொர்க்காரோகணபர்வம் ஆகிய பதினெட்டுப் பர்வமாக இருக்கும். இருதிறத்தார் சேனைகளும் 18 அக்குரோணி. ஒரு அக்குரோணிக்குத் தொகை என்னெனில் தேர் - 1, யானை - 1, குதிரை - 3, காலாள் - 5, இது ஒரு பந்தி. இப்படி மூன்று கொண்டது, தேர் - 3, யானை - 3, குதிரை - 9, காலாள்கள் - 15, இது சேனு சமுகம். இப்படி மூன்று கொண்டது,

தேர் - 27, யானை - 27, குதிரை - 81, காலாள் - 125, இது கணகம். இப்படி மூன்று கொண்டது, தேர் - 81, யானை - 81, குதிரை - 243, காலாள் - 405, இது வாகினி. இப்படி மூன்று கொண்டது, தேர் - 243, யானை - 243, குதிரை 729, காலாள் - 1,215, இது புலுதம். இப்படி மூன்று கொண்டது, தேர் - 729, யானை - 729, குதிரை - 2,187, காலாள் - 3,645, இது சமுத்திரம். இப்படி மூன்று கொண்டது, தேர் - 2,187, யானை - 2,187, குதிரை 6,561, காலாள் - 10,935, இது சமாக்கியம். இப்படி பத்து கொண்டது, தேர் - 21,870, யானை - 21,870, குதிரை - 65,610, காலாள் - 1,09,350, இது அக்குரோணித் தொகை. பாண்டவர் இப்படி ஏழு அக்குரோணியும், சுயோதனன் முதலானவர் பதினொரு அக்குரோணியு முடைத்தாகி, இருதிறத்தாரும் போர்செய்தது பதினெட்டு நாள். இந்தப் பதினெட்டு நாளில் சேனாதிபதியா யிருந்தவர்கள் யாரெனில், பத்துநாள் வரைக்கும் காங்கேயன். ஐந்துநாள் வரைக்கும் துராணாச்சாரி. இரண்டுநாள் வரைக்கும் கர்னன். மற்ற ஒருநாள் உதயாதி பதினைந்து நாழிகை வரைக்கும் சல்லியன். மற்றப் பதினைந்து நாழிகை வரைக்கும் சுயோதனன். முடிவில் பாண்டவர்கள் வெற்றிபெற்று, உலக முழுவதையுங் கைக்கொண்டு அரசு செலுத்திப் பரமபதம் போய்ச் சேர்ந்தார்கள். இது காலகதி. இந்தக் காலகதியை யாவரு முணரும்படியாக இந்த ஸ்ரீ மஹா பாரதத்தை இலக்ஷத்திருபத்தையாயிரம் கிரந்தமாகச் செய்து வெளிப்படுத்தினவர் என் குருவாகிய வேதவியாசர். ஆதலால், அவர் பிறப்பை முன்னர்க் கூறுகிறேன், கேட்பாயாக" என்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

## 1. வேதவியாசர் உற்பவச் சருக்கம்

கையி லாழி யெடுத்தருள் கண்ணனை
மையு லாமழை வண்ணனைப் பாண்டவர்
உய்யவந் துத யஞ்செய்த பானுவை
வைய முண்டசெவ் வாயனை வாழ்த்துவாம்.

கடல் சூழ்ந்த நெடிய உலகத்தில் நீர்வளம்-நிலவளம் பெற்றுக் குடிவள முதலிய யாவும் விளங்குகின்ற நாடெவற்றினும் சிறப்புற் றிருப்பது சோதி நாடு. அந்தச் சோதி நாட்டிலிருந்து உலக முழுதும் தன்னை வணங்கச் செங்கோல் நடாத்தி வருகின்றவன் இரவி

குலதிலகனான வசுவென்பவன். அவ் வசு மந்திரி முதலானவர்கள் தன்னைச் சூழ்ந்துவர வெளிப்பட்டு, காட்டிற் சென்று வேட்டையாடி இளைப்பாற முனிவர்கள் தவஞ்செய்கிற ஒரு பெரிய சோலைக்கு வந்தான். அச் சோலையில் தவஞ் செய்துகொண்டிருந்த முனிவர்களை அவ்வரசன் பார்த்து "தவத்துக்கு மிஞ்சின பொருள் யாதொன்றுமில்லை. ஆதலால் நாமும் தவஞ்செய்ய வேண்டும்" என்று கருதி மந்திரி முதலானவர்களை அழைத்து "அன்பினர்களே! இதுவரைக்கும் அரசுசெய்து வந்ததுபோல் யாவர்க்கும் ஒரு குறைவும் வராமல் அரசு செலுத்துங்கள்" என்று கூறி, தனது முத்திரை மோதிரத்தைக் கொடுத்துவிட்டான். மந்திரி முதலானவர்கள் அரசன் முகக்குறியைக் கண்டு, தடுத்துப்பேசச் சக்தியில்லாதவர்களாய் அரசன் கட்டளைப்படி சேதிநாட்டில் வந்து யாதொரு குறைவும் வராமல் அரசுசெலுத்தி வந்தார்கள். இங்கே வசு வென்பவன் முனிவர்களிடத்திற் சென்று வணங்கி அவர்கள் கிருபையினால் தவநிலை சேர்ந்து அநேகநாள் தவஞ்செய் திருந்தான். இப்படி அருமையான தவஞ்செய்கிற வசுராஜன்முன், இந்திரன் வந்து "வசுராஜனே! உலகிலுள்ள எல்லா அரசர்களிலும் நீ மநு சாஸ்திர விதி பிசகாமல் செங்கோல் நடாத்தி தருமதேவதையை நாலு பாதத்தில் நடக்கச்செய்து குடிகளைக் காப்பாற்றி வருகிறவன்; அப்படிப்பட்ட நீ தவநிலைசேர்ந்து தவஞ்செய்கிற காரணமென்ன?" என்று வினவ, வசுராஜன் இந்திரனை வணங்கி "ஓ ஐயனே! தவத்துக்கு மிஞ்சின பொருள் வேறொன்று மில்லை" என்று நினைத்துச் சஞ்சலத்திற் கிடமாகிய உலகத்தை நீக்கி இத் தவத்தைச் செய்யக் கருதினேன்" என்றான்.

இந்திரன் "ஓ வசுராஜனே தவத்துக் குயர்ந்த பொருள் வேறொன்று மில்லை யென்பது உண்மைதான். அத் தவம் அரசனால் பெருக வேண்டுவதாதலால் அத் தவத்துக்கும் உயர்ந்தது அரசரன்றோ? அந்த அரசை மநுநெறி வழுவாமல் நடாத்தி வந்தால் அதைவிட மேலான பயன் என்ன இருக்கின்றது? ஆதலால் உனக்கென்ன வரம் வேண்டுமோ அந்த வரத்தைக் கொடுக்கிறேன். அதைப் பெற்று முன்போலவே அரசு செலுத்திவா" என்று கூறினார். வசுராஜன் "ஐயனே! எங்கெந்த லோகங்களைக் காண விரும்புகிறேனோ அந்தந்த லோகங்களைக் காணவேண்டும்" என்று சொல்ல இந்திரன் அவ்வரசன் கருத்தின் படி ஒரு திவ்ய

விமானமும் சத்துருவை நாசஞ் செய்ய ஒரு கால்தண்டமும் கமல மாலையும் சொர்ண நிறமும் கொடுத்து விட்டு இந்திரன் தனதிருப்பிடத்திற்குச் சென்றான். வசுராஜன் அவ் வரத்தைப பெற்றுக்கொண்டு தவநிலை விட்டுத் தன் நாட்டிற் சென்று, காவி காம்பர சடாதார தண்டு கமண்டலங்களை நீக்கிக் கங்கை முதலாகிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து நல்ல வஸ்திரங்களை உடுத்து மகரகுண்டல ஆரகேயூர கடககங்கண முதலான ஆபரணங்களை யணிந்து மல்லிகை, முல்லை முதலாகிய பரிமள மிகுந்த நறுமலர் மாலைகள் சூடிச் சந்தனம் புனுகு கஸ்தூரி கற்பூர சவ்வாது பூசி நவரத்ன மிட்டிழைத்த சிங்காசனத்தில் இனிது வீற்றிருந்து தேசத் தரசர்களெல்லாம் வணங்க வேத வேதியர்கள் பல ஆசிகள் கூற மகுடாபிஷேகனாகி மநுசாஸ்திரவிதி பிசகாமல் முன்போலவே அரசு செலுத்தித் தனக்கு நான்கு வரங்கொடுத்த இந்திரனுக்கு மகிழ்ச்சியுண்டாகச் சிறந்த திருவிழா நடத்திவந்தான். அதனாலே நீர்வளம் நிலவள மிகுதியாகிக் குடிவள மிகுந்தது. இச் செய்கையை மற்ற அரசர்கள் கண்டுங் கேட்டும் அவரவர்கள் தனித் தனியே இந்திரனுக்குத் திருவிழா நடத்தினார்கள். அதனாலே இந்திரனுக்கு அதிக மகிழ்ச்சி யுண்டாகி எல்லா வளமும் பெருகும் படி நீர் வளத்தைப் பெருகச் செய்தான். இப்படி உலகமுழுதுஞ் சுகமடைந்தது.

இப்பால் அந்த வசுராஜன் இந்திரன் கொடுத்த விமானத்தின் மேலேறித் தன் கருத்தில் நினைத்த லோகங்களுக்கெல்லாம் சென்று அவ்விடத்தி லிருக்கும் அதிசயங்களைப் பார்வையிட்டுக்கொண்டு அரசு செலுத்தி வருகிறநாளில், ஒருநாள் மந்திரி முதலானவர்கள் புடைசூழ வேடிக்கையாக வெளிப்பட்டுத் தன் நகரத்தின் மருங்கில் இருக்கிற மிகவுங் குளிர்ச்சியை யுடைய சுத்தமதி யென்னும் பெயர்பெற்ற நதியருகில் வந்து அவ்விடத்தி லிருக்கிற விநோதங் களைப் பார்த்துக்கொண்டு வந்தான். அப்போது தனது பராக்கிரமத்தை மந்திரிகளுக்கும் மற்றவர்களுக்கும் அறிவிக்க வேண்டி அங்கே உயர்ந்து பருத்திருந்த கோலாகல மென்கிற வெற்பைத் தன் காலினால் எற்றி அந்நதியில் தள்ளித் தன் நகரத்திற்குச் சென்றான். பின்பு சுத்தமதியென்கிற நதி போகத்தை யனுபவிக்கக் கருதி ஒரு பெண்ணுருவந் தரித்து கோலாகலமென்னும் வெற்பைக் கணவனாகக் கொண்டு கூடி வசுபதத்தனென்கிற ஒரு புத்திர

ளையும் • கிரியை என்கிற ஒரு புத்திரியையும் பெற்ருள். அந்த இரண்டு மக்களையும் மிகுந்த அன்புடன் வளர்த்து வருகிறநாளில் கிரியையென்பவள் பேதைப்பருவம் பெதும்பைப் பருவங்கடந்து மங்கைப் பருவமான காலத்தில் ஒருநாள் தன்னந் தனியே அந்நதியினருகில் விளையாடிக்கொண் டிருந்தாள். அத் தருணத்தில் முன்போல வசுராசன் வேடிக்கையாக அந்நதி யருகில் வந்து விநோதங்களைப் பார்த்து வந்தான். அவன் நதி யருகில் விளையாடித் திரிந்த கிரியை என்பவளைக் கண்டு 'இந்தக் கன்னிகையார் மஹாரூபவதியாய் இரதியைப்போல் பிரகாசிக்கிருள். வதனமோ சந்திரபிம்பம். குழலோ முகில். நெற்றியோ மூன்ரும் பிறை, புருவமோ கரும்புவில், கண்ணோ, கருவிளமலர், நாசியோ குமிழம்பூ, கன்னமோ கண்ணாடி, வாயோ சேதாம்பல், பல்லோ முல்லை, கழுத்தோ கமுகு, முலையோ மலை; தோளோ வேணு, முன் கையோ மகரயாழ், அகங்கையோ தாமரை, இடையோ அந்தரம், அல்குலோ அரவப்படம், தொடையோ வாழைத்தண்டு, முழந் தாளோ ஞெண்டு, கணைக்காலோ வரால், பாதமோ புத்தகம். இவளுக்கொப்பு இவளேயன்றி வேருருவரில்லை" என்று அதிக மையலாகிப் பிரமைகொண்டு அந்தக் கிரியை விளையாடுகிறதைப் பார்த்து அரசன் சித்திரப் பிரதிமைபோல் நின்ருன். அதை மந்திரிகள் அறிந்து "ஓ ஓ நமது அரசன் அக்கன்னிகையின்மேல் மையலானுன்" என்று குறிப்பினு லுணர்ந்து அக்கன்னிகை இடத்திற் சென்று " ஓ அம்மணி! நீ யார்? உன் பெயரென்ன?" என்று வினவ, கிரியை "ஓ புண்ணியவான்களே! நான் இந்த நதியின் புத்திரி. என் பெயர் கிரியை" என்று கூறி அந்நதியிலிறங்கிவிட்டாள். மந்திரிகள் அரசனிடத்தில் வந்து 'ஓ அரசனே அப்பெண் இந்த நதியின் புத்திரியாம். அந்த அம்மனுக்குக் கிரியை என்னும் பெயராம்' என்று கூறினுர்கள். அதுகேட்ட அரசன் அந் நதியருகிற் சென்று "உலகுக்குத் தாயாகி எவர்களையும் பாதுகாக்கின்ற தேவதா சொரூபி! அடியேன் மனங்களிக்க நின்னிடமா யிருக்கிற கிரியை என்னும் கன்னிகையை மணஞ்செய்து கொடுக்க வேண்டும்! அம்மணி" என்று பிரார்த்தித்தான். அந்தச் சுத்த மதியென்னும் நதி ஒரு பெண் உருவந்தரித்து இரண்டு மக்களுடன் அரசன்முன் ருேன்றி இரண்டு மக்கள் வந்த விருத்தாந் தத்தையுஞ் சொல்லி 'அரசனே! நீ மஹா புண்ணியவானும் உலோ

காதிபனுமாதலால், உன் ஸ்திதிக்கு மகிழ்ந்து இந்த இரண்டுமக்களை யும் உனக்குக் கொடுத்தேன். கன்னிகையாகிய கிரியையை நீ மணம் புரிந்து இந்தப் புத்திரனைச் சேனாதிபதியாய் வைத்துக்கொள்" என்று கட்டளையிட்டு முன்போல் நதியுருவமாயினாள். அரசன் கிரியை யென்னும் கன்னிகையை ஐம்பத்தாறு தேசாதிபதிகளு மறிய வேதவேதியர் ஆசிகள் பகர மங்கலம் புனைந்து வசுபதத்த னுக்குச் சேனாதிபத்தியங் கொடுத்துப், பின்பு கிரியையோடு பள்ளி யறை சேர்ந்து பஞ்சணை மஞ்சத்திலிருந்து தாம்பூலந் தரித்து, ரு-வித ஆலிங்கனமும், கக-வித அதரபானமும், எ-வித நகக் குறியும், எ-விதத் தொழிலும், அ-வித தந்தக்குறியும் புரிந்து அமுத மிருக்கும் - டுரு - தானத்தையுமுணர்ந்து, அ-வித தாடன மும், அ-வித புட்குரலுமுண்டாக, கஉஅ-விதக் கரணங்களைப் புரிந்து, கலவிப்போரிலுண்டாகும் கக-வித நயமுமியற்றி, ஆகமு மாகமும் ஆவியுமாவியும் ஒன்றெனக் கட்டி முத்தமிட்டு, அவளது வட்டமிட்ட செப்புத் தனத்தைக் கைத்தலத்திற் பற்றிப் பிடித் துக் குழைத்துக் களித்து, இரதியுமதனுமெனக் கூடிக்கலந்து, அப்பருவக்கிரியை மகிழ்வுறச் சிறந்த லீலைகள் புரிந்து, சரசவை போக சையோக சம்போக மடைந்து வாழ்ந்துவருகிற நாளில் கிரியையென்பவள் கர்ப்பவதியாயினாள். அரசன் கர்ப்பங்கொண்ட தன் மனைவிக்கு நல்ல மாமிசங்களைக் கொண்டுவந்து கொடுக்கக் கருதி, மந்திரிமார்கள் - இரதகஜதுரகபதாதிகள் - வேடர்கள் - நாய்கள் - வலைஞர் முதலானவர்கள் புடைசூழ வெளிப்பட்டுக் காட்டிற்சென்று, யானை - கரடி - சிங்கமுதலான பெரிய மிருகங் களை அதஞ்செய்து, நல்ல ருசியான மாமிசமிருகங்களை வதைத்து, அதன் மாமிசத்தை எடுத்து அரண்மனைக்கு அனுப்புவித்து, சேனைகளோடு மஹா விநோதமுள்ள ஒரு சோலையில் வந்திறங்கி, அவ்விடத்தில் பெரிய மாளிகையைப்போல் வஸ்திரங்களினு லியற்றி, அக்கூடார மாளிகையில் சப்ரகூடமஞ்சமிட்டு அன்றிர வில் சயனித்திருந்தான்.

அப்போது சந்திரோதயமாயிற்று. இளந்தென்றல் வீசிற்று. புஷ்பங்களெல்லாம் பரிமளித்தன. அரசன் அதுகண்டு மிகுந்த காமங்கொண்டு, கிரியையினது உருவத்தை மனதில் நினைத்துத் தன்னந்தனியே புரண்டு அயர்ந்து நித்திரை செய்தான். அப்படி நித்திரை செய்தபோது, கிரியைவந்து தன்னைக்கூடிக் கலந்தது.

போது கனவுகண்டான். உடனே வீரியம் ஸ்கலிதமாயிற்று. பின் அரசன் விழித்து, "ஓ! ஓ! மோசம் வந்தது. நாம் காமவெறி கொண்டு நித்திரை செய்ததினால் வீரியம் வெளிப்பட்டது. இது வீணைப்போமானால் மகாகுற்றம் நேரிடும். இதற்கென்ன செய்கிறது" என்று சற்றுநேரம் ஆலோசித்து, தன்னெதிரில் வைத்திருக்கிற வல்லூறு என்கிற பக்ஷியைச் சைகை செய்தழைத்து, 'ஓ பக்ஷி அரசே! இதோ இருக்கிற வீரியத்தை எடுத்துப்போய் என் மனைவிக்குக் கொடு" என்று கட்டளையிட்டு, ஓர் இலையைப்பறித்து வட்டிலபோலத் தைத்து, அவ்வீரியத்தை அதிற் புகட்டி அந்த வல்லூறுவினிடத்திற் கொடுத்து அனுப்பினான். அந்த வல்லூறு அவ் வட்டிலைமூக்கினால் ஏற்றுக்கொண்டு, கிரியையினிடத்து வரக் கருதி யமுனையாறு வரைக்கும் வந்தது. அங்கு ஓர் ஆலமரத்தில் பசியினால் மிகுந்த வருத்தமடைந்த ஒரு இராஜாளி யிருந்தது. அஃதிந்த வல்லூறு செல்கிற அரவந் தெரிந்து பறந்து வந்து பார்த்து, "இஃதிரை யெடுத்துப் போகின்றது. இதை மறித்து அதைப்பறித்துப் புசிக்கலாம்" என்று கருதி வல்லூறைத் தடுத்தது. அந்த வல்லூறு இராஜாளியை நோக்கி, "நீ யேன் என்னை மறிக்கிறாய்? நான் அரசன் அலுவலாகச் செல்கிறேன். வீணாய் வருத்தந்துக்கிடம் வைத்துக்கொள்ளாதே. வழிவிடு" என்று கூற, இராஜாளி 'சீ! சீ! நானென்ன உன்னை விடுவேனா? உன் மூக்கிலிருக்கிற இரையை நான் புசிக்காமற் போகிறதில்லை" என்று எழும்பிப் பறந்தடித்தது. வல்லூறு' அதுகண்டு, "அடா!! நீ எனக்கொரு அணுமாத்திரம்" என்று இகழ்ந்து இதுவும் எழும்பிப் பறந்து அந்த இராஜாளியை அடித்தது. அப்படி இவ்விரண்டு பக்ஷிகளும் போராடுகிறபோது இராஜாளியினது மூக்கு அந்த வீரிய மிருக்கிற வட்டிலிற் பட்டு இலை கிழியவே, வீரியம் யமுனையாற்றில் இரண்டு துளியாய் விழுந்தது. உடனே வல்லூறு இராஜாளியை விட்டு விட்டு அரசனிடத்து வந்து நடந்த விருத்தாந்தத்தைக் கூறிற்று. அதை அரசன் கேட்டு மிகுந்த வருத்தமடைந்து, அன்றிராத்திரி அங்கிருந்து மறுநாள் காலமே தன் நகரம் வந்து சேர்ந்து மனைவியைக் கண்டு மகிழ்ந்து, முன்போல் அரசு செலுத்தி வந்தான்.

இங்கே யமுனையாற்றில் அப்சரஸ்திரீகளி லொருத்தி பிரமன் சாபத்தினாலே மச்சமாய் சஞ்சரித்திருந்தாள். அவள் இரண்டு பிரிவாக வீழ்ந்த அந்த வீரியத்தைப் புசித்தாள். அன்றுமுதல்

அவள் கர்ப்பவதியாகி, பிரசவகாலம் சமீபித்திருக்கிற தருணத்தில் மீன் பிடிக்கிற வலைஞர் வந்து அந்த யமுனையாற்றில் வலையை விசினார்கள். அப்போ தவ்வலையில் மீனமாயிருக்கிற அப்சரஸ்திரி அகப்பட்டாள். அதை வலைஞர் பார்த்து, "இந்த மீன் மிகவும் பெரிதாயிருப்பதுமன்றி இதன் வயிறும் பெருத்திருக்கின்றது. இதை நமது அரசனிடத்தில் சேர்க்கவேண்டும்" என்று கருதி அதைத் தாசராஜன் இடத்திற் சேர்த்துவிட்டார்கள். தாசராஜன் அந்த மீனத்தின் வயிற்றைப் பக்குவமாய்க் கிழித்துப் பார்த்தான். அதில் ஒரு புத்திரனும் ஒரு புத்திரியு மிருந்தார்கள். புத்திரர்களில்லையென்று மிகுந்த வருத்த மடைந்திருந்த தாசராஜன் அவர்களைக் கண்டு பரமானந்தத்தை யடைந்தவனாய், விழித்த கண் விழித்தபடி பார்த்திருக்கும் தருணத்தில், மீனமாயிருந்த அப்சரஸ்திரீ அந்தரத்தில் ஒரு திவ்ய விமானத்திற்றோன்றி, "ஓ தாசராஜனே!" என்று அழைத்து, "அதோ உன்னருகி லிருக்கிற மீன் வடிவு நான்தான். அப்புத்திரர்களோ உலகமுழுதும் அரசுசெலுத்தும் வசுராஜன் வீரியத்தினால் வந்தவர்கள்" என்று அந்த விருத்தாந்தத்தைச் சொல்லி, பின்னும் அவ்வரசனைப் பார்த்து, "ஓ தசராஜனே! என் வரலாற்றைக் கூறுகிறேன் கேள். அந்தரவாசியாகிய அப்சரஸ்திரீகளில் நானும் ஒருத்தி. நான் பிரமனிடத்தில் பூசைக்குரிய பணிவிடைப் பெண்ணாயிருந்தேன். ஒருநாள் பூசைக்குச் சலந்திரட்ட யமுனையாற்றுக்கு வந்து அந்த ஆற்றிலிருக்கிற மீன்களின் விநோதங்களைப் பார்த்திருந்து, அதனால் பூசைவேளை தப்பினபின்பு பிரமனிடத்திற் சென்றேன். பிரமன் என்னைப் பார்த்து, 'ஓ பெண்ணே இவ்வளவுநேரம் என்னசெய்தாய்?' என்று கேட்டதின்பேரில் உண்மையைக் கூறினேன். அதன்மேல் பிரமன் சினங்கொண்டு "நீ மீன் விநோதங்களைப் பார்த்திருந்தமையால், அவ்வாற்றிலேயே மீனமாக இரு" என்று சாபமிட்டார். அதன்மேல் நான மிகுந்த துன்பமடைந்து பிரமனை மிகவும் வேண்டிக்கொண்டேன். பிரமன் மகிழ்ந்து வசுராஜன் வீரியம் யமுனையாற்றில் விழப்போகிறது. அதை நீ புசிப்பாய். வலைஞர்கள் பிடித்துத் தாசராஜனுக்குக் கொடுப்பார்கள். தாசராஜன் உன் வயிற்றைக் கிழிப்பான். அப்போது நீ பெற்ற சாபந் தீரும்" என்று கூறினார். அப்படியே இன்றையதினம் அச்சாபந் தீர்ந்தது" என்று கூறி, முன்போற் பிரமனிடத்திற் சென்றாள். அதைக்கேட்ட தாசராஜன் திடுக்கிட்டு

இம்மக்கள் நமது அரசனாகிய வசுராஜனுக்குப் பிறந்தவர்கள். இனி இவர்களை நாம் வைத்திருப்பது தகுதியல்ல. அரசனிடத்திற் சேர்த்து அரசனிட்ட கட்டளையின்படி நடப்பது உத்தமம்" என்று கருதி, அம்மக்களைப் பொற்றட்டிலேந்தி அரசனிடத்திற் கொண்டு வந்துவைத்து அப்சரஸ்திரீ கூறியவற்றைத் தெரிவித்து நின்றான். அரசன் மகிழ்ந்து மக்களை எடுத்துக்கொண்டு அவ்வருட்புத்திரனுக்கு மச்சாரசன் என்று பெயரிட்டு வளர்த்துத் தன் சேனைக்குத் தலைவனாக வைத்துக்கொண்டு, புத்திரியைத் தாசராஜனுக்குக் கொடுத்து அனுப்பினான். தாசராஜன் மிகுந்த களிப்புடன் அந்தப் புத்திரிக்கு மச்சகந்தி என்று பெயரிட்டு வளர்த்துவந்தான். அந்த மச்சகந்தி பேதைப் பருவங்கடந்து பெதும்பைப் பருவத்தையடைந்து, தந்தையாகிய தாசராஜனிடத்திற் சென்றுவணங்கி, 'ஐயா! எனக்கு ஒரு படகு கொடுத்தால் நமது குலாசாரப்படி யமுனையாற்றிலிருந்து வருகிற பெரியோர்களுக்குப் படகுவிட்டுக்கொண்டிருக்கிறேன்' என, தாசராஜன் அவ்வாறே சிறிய படகு ஒன்றுசெய்து கொடுத்தான். மச்சகந்தி அப்படகை சிலபோரால் எடுத்து யமுனையாற்றில் விடுத்து வருகிற பெரியோர்களுக்கும், மற்றவர்களுக்கும் படகுவிட்டுக்கொண்டிருந்தாள்.

இப்படிச் சிலகாலஞ் சென்றபின்பு ஒருநாளில் பிரமன் மைந்தன் வசிஷ்டன், வசிஷ்டன் மைந்தன் சத்தி, சத்தி மைந்தன் பராசரர். அந்தப் பராசர மஹாமுனி தம்மாலே உலகத்துக்கு நன்மை யுண்டாக வேண்டுமென்றும் அதற்கு ஒரு புத்திரனைப் பெறவேண்டுமென்றுங் கருதி இருபத்தேழு நக்ஷத்திரங்களில் ஒரு நக்ஷத்திரம் உச்சமாகிற காலத்தில் ஒரு ஸ்திரீயைக் கூடவேண்டும் என்று யோசித்து அந்தக் காலம் வருகிற பரியந்தம் தவத்திலிருந்தார். அந்தக் காலம் சமீபித்தது. அதுகண்டு தவநிலைவிட்டெழுந்து நகரங்களுக்குச் செல்ல அதிவேகமாய் வந்தார்; குறுக்கே யமுனையைக் கண்டார். அந்த யமுனையோ மிகவும் பெருக்கெடுத்திருந்தது. பராசரர் அதை யறிந்து அவ்வாற்றங் கரையில் படகோடிருக்கும் மச்சகந்தி யருகில்வந்து "பெண்ணே நானொரு கோரிக்கையை உட்கொண்டு நகரத்துக்குப் போக வந்தேன். 'வழியில் இந்த ஆறு தோன்றிற்று. இதைக் கடந்து போவோமென்றால் பெருக்கெடுத்திருக்கின்றது. தயவு செய்து படகை விடுவாயானால் ஆற்றைக் கடந்து என் கோரிக்கையை முடித்துக்கொள்'

வேன்" என, மச்சகந்தி - "ஓ ஐயா பெரியவரே! ஆறே பெருக் கொடுத்திருக்கின்றன. உம்மை மாத்திரம் படகிலேற்றிச் செல்வதற்கில்லை. படகுக்குத் தகுந்த பாரமில்லை. ஒருவேளை கவிழ்ந்தால் மோசம் வரும். சற்றுநேரமிருந்தால் யாராவது இன்னுஞ் சிலபேர்கள் வருவார்கள். அப்போது தடையின்றி உம்மை அக் கரையிற் சேர்க்கிறேன்" என, பராசரர் மச்சகந்தியைப் பார்த்து, "ஓ பெண்ணே! படகுக்குத் தகுந்த பாரம் எவ்வளவோ அவ்வளவுக்கு நான் பாரமாயிருப்பேன். நீ சந்தேகப்படாமல் படகைவிடு" என்று கூற, மச்சகந்தி "இவர் யாரோ மஹாத்மாவென்று நினைத்து, "ஓ ஐயா! வாரும் படகிலேறும்" என்றாள். பராசரர் மகிழ்ச்சியடைந்து, தமது தவமகிமையால் படகுக்குத் தகுந்த பாரமிருக்க நினைத்துப் படகிலேறினார். மச்சகந்தி படகை யாற்றிற் செலுத்தி வருகிறபோது படகு கனத்திருப்பது தெரிந்து, இவர் மஹா தவசி என்று மனதில் நினைத்து, மிகுந்த ஜாக்கிரதையுடன் படகைத் தள்ளி வருகிறாள். படகிலிருந்த பராசரர் ஆகாயத்தை நோக்கினார். அப்போது இவர் நாடிய நக்ஷத்திரம் உச்சத்தில் வருகிற தருணமாயிருந்தது. அதைப் பார்த்து மிகுந்த வருத்தமடைந்து "ஓ! ஓ! நாம் கோரியகாலம் வருகிற தருணமாயிற்றே: இனி யென்ன செய்யப் போகிறோம்" என்று வருத்தப்பட்டு, 'இனி இந்தப் படகைத் தள்ளும் பெண்ணினிடத்தாவது காலந்தப்பாமல் கூடவேண்டும்" என்று நினைத்து, மச்சகந்தியைப் பார்த்து, "ஓ பெண்கள் நாயகமே! இவ்வளவு வருத்தப்பட்டு வந்தும், நான் என் மனதிற்கொண்ட கோரிக்கை நிறைவேற்றுவதற்குக் காலந் தப்பிப்போகின்றது. நான் கொண்ட கோரிக்கை யென்னவென்றால், இதோ வானத்திலிருக்கிற நக்ஷத்திரம் உச்சியில் வருகிறபோது ஒரு ஸ்திரீயைச் சேர்ந்து, உடனே ஒரு புத்திரனைப் பெறக் கருதிவந்தேன். நக்ஷத்திரமோ இன்னும் சற்று நேரத்திற்குள் உச்சமாகப்போகின்றது. நானோ ஆற்றிலிருக்கிறேன். ஆதலால் நீ கிருபை கூர்ந்து, "என்னை அணைவாயானால் என் கோரிக்கை நிறைவேறுவதுமன்றி, இவ் வுலகத்தில் நீயும் அழிவில்லாத புகழைப் பெறுவாய்" என்று இனிய வார்த்தைகளாற் கூறினார்.

அந்தமொழியைக் கேட்டமாத்திரத்தில் மச்சகந்தி நாணமுற்று, 'ஆ! பெரியவராயிருக்கிற இவர் நம்மைப் புணர அழைக்கிறார்" என்று மனதில் நினைத்து, "ஓ ஐயனே! நீர் மஹா

தவசி! நானோ இன்னும் மங்கைப்பருவ மடையாதவள். என்னைப் பார்த்து உம்மைக் கூடென்று சொல்வது தகுதியா? அரும்பைக் கசக்கி முகர்ந்தால் பரிமளிக்குமா? அதுபோல் பருவகால மல்லாத என்னைக் கூடவேண்டுமென்று கருதினது முறைமையா? அப்படியல்லவென்று புணரயத்தனித்தாலும், என் உடல்முழுது மச்சகந்தம் வீசுகிறது. நீர் அதை எப்படி சகிப்பீர். மேலும் நான் கன்னிகை. இதை யோசிக்காமல் இவ்வாறு கூறுவது தருமமா?" என்ன, பராசரர் மச்சகந்தியைப் பார்த்து, 'ஓ பெண்ணே! உன்னுடலில் இருக்கு மச்சகந்தம் நீங்கி, இன்றுமுதல் பரிமள கந்தியென்று உனக்குப் பெயராகக்கடவது. நீ என்னைக் கூடினும் முன்போலக் கன்னிகையாகவே இருப்பாய்" என, மச்சகந்தி இவ் வசனத்தைக் கேட்டவுடன் உடல் முழுதும் பரிமளம் வீசுகிறதைப் பார்த்து, "ஓ! ஓ! இவர் தவசிரேஷ்டர். இவர் பேச்சை மறுக்கக்கூடாது" என்று கருதி "ஓ ஸ்வாமி! தங்கள் கருத்துக் கிசைந்தபடி நானும் சம்மதித்தேன். ஆனால் நான் மங்கைப் பருவத்தினளல்ல. தாங்கள் நினைத்த நினைப்புக்குத் தகுதியான காலமு மிடமு மில்லை. இது பகற்காலமாகவும் திவ்யநதியாயுமிருக்கிறது. இதற்கென்ன செய்கிறது?" என்று கூறப் பராசரர் மச்சகந்திக்கு மங்கைப் பருவத்தை அநுக்கிரகஞ் செய்து, ஆற்றின் மத்தியில் ஒரு திட்டுத் தோன்றும்படி உண்டாக்கி, திருநீற்றில் கொஞ்ச மெடுத்து ஆகாயத்தில் ஊதினர். உடனே ஆயிரங் கதிர்களோடு பிரகாசிக்கிற சூரியனை மறைக்க மூடுபனி சூழ்ந்தது. அப்பனியினால் இரவுபோ லாயிற்று. அப்போது பராசரர் மச்சகந்தியைப் பார்த்து, "ஓ பெண்கள் நாயகமே! உன் கருத்தின்படி மங்கைப் பருவத்தை உனக்குக் கொடுத்ததுமன்றி, தகுந்த இடத்தையும் காலத்தையும் சேகரித்தேன். இனித் தடையின்றி என்னை அடைவாயாக" என்று வேண்ட, மச்சகந்தி அதிக மகிழ்ச்சியை அடைந்து கருத்தொத்து, அந்த ஆற்றின் மத்தியில் தோன்றிய திட்டில் இறங்க, இருவருங் கூடிக் கலந்தார்கள். அப்போது பராசரருக்கு வீரியம் ஸ்கலிதமாயிற்று. உடனே பராசரர் எழுந்து, யாதொன்றும் பேசாமல் ஆற்றைக் கடந்து நடந்தார். மச்சகந்தி உடனே கர்ப்பவதியானாள். பின் மூன்றே முக்கால் நாழிகைக்குள் பரப்பிரம வஸ்துவாயும் என் குருவாயும் விளங்கும் வேதவியாசர் உதயமானார். சேனும் ஜனமேஜய மஹாராஜனே!

இப்படி வேதவியாசர் உதயமானபோதே, மான்தோல் - புலித் தோல் - காவிகாம்பரஜடாடவிதாரராய், வேதத்தைக் கையிற் பிடித் துக்கொண்டு உதயமானார். மச்சகந்தி அவரைப்பார்த்து மஹா வியப்படைந்தனள். அவர் தமது தாயை வணங்கி, "ஓ அம்மணி! என் தந்தை எங்கே என்று கேட்டார். மச்சகந்தி "அப்பா மகனே! உன் தந்தை அதோ செல்கிறார்" என, வேதவியாசர் தாயை நோக்கி, "ஓ அம்மா! நீ நினைத்தபோது வருகிறேன்" என்று வாக்குத்தத்தஞ்செய்து தந்தையிடத்திற் சென்று, அவரோடு தாமுந் தவஞ்செய்திருந்தார். அப்போது சில காலமாய் உலகத் தில் காலகதியால் வேதங்கள் ஒன்றாகக் கலந்து, கருத்துக்கள் வேறாய்ப் பலவிதமாக மாறுபட் டிருந்தன. அந்த வேதத்தை அவ் வேதவியாசர் சிக்கறுத்து, இருக்கு - எசுர் - சாமம்-அதர்வணம் என்று நான்கு வகையாகப் பிரித்து, பதினெண் புராணங்களை வெளிப்படுத்திப், பின்பு யாவருக்கும் புண்ணியலோகத்தை யளிக் கும் இந்த ஸ்ரீமஹா பாரதத்தை நான்கு வேதங்களோடு ஐந்தாம் வேதமென்று யாவரு மேற்றுக்கொள்ள, ஸ்ரீமஹா கணபதி தனது கொம்பை யெழுத்தாணியாகவும் மஹாமேருவை ஏடாகவுங் கொண் டெழுத முடித்தார்.

ஸ்ரீவிநாயகமூர்த்தி இம்மஹா பாரதத்தை எழுதவேண்டிய காரண மென்னெனில், பராசரரும் வேதவியாசரும் இதற்கு முன் னம் கைலாசபதியைத் தரிசிக்கச் சென்றார்கள். அப்போது கைலாசபதி பராசரரை நோக்கி உனக்குப் பின் னிற்கிறவர் யாரென்று வினவ, பராசரர் "ஓ ஸ்வாமி! என்னால் உலகத்துக்கு நலமுண்டாகவேண்டு மென்று கருதி இப்புத்திரனைப் பெற்றேன் இவனுக்கு வியாசனெனப் பெயரிட்டேன்" என்றுகூற, சாம்பமூர்த்தி மகிழ்ச்சி யடைந்து, "ஓ பராசரரே! இந்த வியாசனால் உலகத் துக்கு உண்டாகும் நலமென்ன?" என்று வினவ, பராசரர் - "ஓ ஸ்வாமி! இப்போது மாறுபட்டிருக்கிற நாலுவேதமும் சீர்ப்பட்டு இவனால் வழங்கப்போகிறதுமன்றி, நாலு வேதங்களுக்கும் சமான மாய் ஐந்தாம் வேதமென்று பெயர் வழக்கத்தக்க ஸ்ரீமகா பாரதக் கதையென ஒன்று செய்யப்போகிறான். அதனாலே உல கத்தில் தர்மார்த்த காமமோக்ஷம் என்கிற புருஷார்த்தங்கள் நான்கும் பரிஷ்காரமாய் விளங்கப்போகிறது" என்றுகூற, சாம்ப மூர்த்தி மகிழ்ந்து, "இனிமேல் நடக்கப்போகிற ஸ்ரீமகா பாரதத்தை

இப்போதே எழுதுகிறதாய் நீர் கூறியபடியால், நமது குமாரனுகிய விநாயகமூர்த்தியை எழுதச்சொல்லுகின்றேன். உமது புத்திரனைச் சொல்லச்சொல்லும்" என்று உரைக்க, பராசரர் அதற்கொப்புக்கொண்டு வியாசரை நோக்கினுர். வியாசர் அக்குறிப் புணர்ந்து ஸ்ரீமகா பாரதத்தைக் கூறத் தொடங்கினுர். விநாயகர் எழுதினுர். அதுதான் ஆதிபாரதம். பின்பு வியாசர் கூறியதற்கும் பாரதம் நிறைவேறினதற்கும் ஒத்திருந்தது. அதனுற்றுன் இந்த ஸ்ரீமகா பாரதம் எல்லா நூலினும் மேலாகச் சிறப்படைந்தது. பின்பு வியாசர் அந்த ஸ்ரீமகாபாரதத்தைச் சபாலக்ஷங் கிரந்தமாக்கி, எனக்கும், நாரதர் - சுகர் - தேவலன் - சுமந்தர் முதலானவர்களுக்குங் கற்பித்து, சொர்க்கலோகத்துக்கு நாரதரையும், யக்ஷருக்குச் சுகரையும், பிதுர்த் தேவதைகளுக்குத் தேவலனையும், பூலோகத்துக்குச் சுமந்தரையும் நியமித்து உமக்குச் சொல்ல இப்போது எனக்குக் கட்டளை யிட்டார். அந்த ஸ்ரீமகா பாரதம் வேதமென்று கொள்வதற்குக் காரண மென்னெனில், பாரத வீரர்கள் திருமால் முதலாகிய தேவர்களாதலால், அப் பாரதத்தை வேதமென்று கூறப்பட்டது" என்று வைசம்பாயனர் சொல்ல, ஜனமேஜய மஹாராஜன் கேட்டு வைசம்பாயனரை வணங்கி ஒரு வசனஞ் சொல்லுகிறுன்: "ஸ்வாமி! பாரதவீரர் எங்கள் மூதாதைகளாயிருக்கத் தேவர்களென்று உரைத்தீர்களே, அந்தக் காரணத்தை எனக்கு விளங்க உரைக்க வேண்டும்" என்று வேண்ட, வைசம்பாயனர் சொல்லுகிறுர்—"கேளும் மஹாராஜனே! பிரபஞ்ச உற்பவஞ் சொல்லி அதன் மேல் பாரதவீரர் உற்பவஞ் சொன்னுல் விளங்கும். ஆதலால், பிரபஞ்ச உற்பவம் முன்னஞ் சொல்லுகிறேன்" என்று, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினுர்.

**வேதவியாசர் உற்பவச்சருக்கம் முற்றிற்று**

---

## 2. பிரபஞ்ச உற்பவச் சருக்கம்

கண்ணன் துதி

உருவ மாயரு வாயகம் புறத்தினு முலாவும்
ஒருவன் மூவுல கோரடி யளந்தசே வடிகள்
வருவ தாகியும் போவதா கியுந்தடு மாறுங்
கருவெ னும்பெருங் கடற்கரை யேறலாங் கலமே.

கிரேதாயுகத்தில் சூரியவமிச திலகனாகிய கார்த்த வீரியார்ச்சுனன் சமதக்கினியினது சிரசைத் துணித்த காலத்தில், அந்தச் சமதக்கினி மனைவி இருபத்தொருதரம் தன் மார்பில் புடைத்தழுதாள். இந்தச் செய்தி சமதக்கினிக்கு மூத்த குமாரரான பரசுராமர் கேள்விப்பட்டு, தாயிடத்து வந்து வணங்கி, "ஓ அம்மணி! நீ வருத்தமுறாம லிரு. நீ அடைந்த வருத்தத்துக்கு எண்மடங்கான வருத்தம் அந்தச் சூரியவமிச ராஜஸ்திரீக ளெல்லாம் அடையவும், சூரியவமிசம் இவ்வுலகி லில்லாமற் போகவும் சங்கரித்து, அந்த அரசர்க ளுதிரப் பிரவாகத்தில் என் பிதாவுக்குச் செய்யுங் கர்ம முதலியவற்றை முடிக்கிறேன். அஞ்சாதே" என்று உறுதி கூறிப் போர்க்கோலங் கொண்டு, உலகிலுள்ள இரவிகுல அரசர்களை யெல்லாம் அதஞ்செய்து, அவர்கள் உதிரப் பிரவாகத்தில் தந்தைக்குச் செய்யுங் கடனை நிறைவேற்றி, உலகத்தைக் காசிபருக்குத் தத்தஞ் செய்து தாம் தவத்திலிருந்தார். காசிபர் உலகமுழுதையுங் கைப்பற்றி, மநுசாஸ்திரவிதி பிசகாமல் சொங்கோல் செலுத்தி வருகிற நாளில், சூரியவமிச ராஜஸ்திரீக ளெல்லாம் ஒருமிக்கக் கூடி, "இனி நாம் பூமியிலிருந்து பயனென்ன? கணவனிறந்த போது மனைவியு மிறக்க வேண்டும். எக்காலத்தும் கணவனைவிட் டிருக்கலாகாது. நமக்குக் கணவனுமில்லை புத்திரருமில்லை. ஆகையால் நாமெல்லோரும் அக்னிப்பிரவேச மாவதே உத்தமம்" என்று ஆலோசித்து யாவரும் அக்கினிப் பிரவேசமாக யத்தனித்தார்கள். அதைக் காசிப ரறிந்து "ஓ! ஓ! மோசம் வந்தது. நீதி தெரியாமல் சூரியவமிச ஸ்திரீகளெல்லாம் அக்கினிப் பிரவேச மாகிறார்கள். அவர்களுக்குச் சில நியாயஞ் சொல்லி, முன் போல் சூரியவமிசத்தைப் பெருகச் செய்யவேண்டும்" என்று அந்தப் பட்டத்தரசிகளிடத்திற் சென்று, "ஓ ராஜஸ்திரீகளே! நான் சொல்லும் வசனங்

களின்படி நின்று உலகத்தை யாதரியுங்கள். அதனால் இம்மை மறுமை லாபம் சித்திக்கும். வீணாய் நெருப்பில் விழுந் திறந்தால் இம்மை மறுமைலாபங் கெட்டுப் பிசாசாவீர்கள். ஆதலால் சற்று நில்லுங்கள்" என்று மறுத்தார். அந்த ராஜஸ்திரீக ளெல்லாம் காசிபரை நோக்கி நமஸ்காரஞ் செய்து, "ஓ ஐயனே! நாங்கள் இப்பூமியி லிருந் தென்ன பயன்? கணவ னிறந்தபோதே மனையாளும் இறக்க வேண்டியது தருமம். ஆதலால் எங்களுடைய கணவர்களெல்லோ ரும் இறந்த பின்பு நாங்கள் இருந்தென்ன லாபம்? எங்கள் கருத்தின் படி உத்தரவு கொடுத்தால் நாங்கள் அக்கினிப்பிரவேச மாகிறோம்," என்று கூற, காசிபர் சொல்லுகிறார்: "ஓ பட்டத்தரசிகளே! ஸ்திரீ களுக்கு முக்கியமான கடமை என்னெனில்; புத்திரனைப் பெற்றுக் குலத்தைப் பெருகச் செய்கிறது. அதை விட்டு இறக்கிறது தகுதி யல்ல. ஆதலால் நான் வேதத்திற் கூறிய விதியைச் சொல்லு கிறேன். அவ்வாறு நீங்கள் சம்மதித்துப் புத்திரனைப் பெற்றுக் குலத்தை விர்த்தியாக்குங்கள்" என்று கூற, பட்டத்தரசிகள் காசி பரை நோக்கி, "ஓ ஐயனே! எங்களைக் குறித்து வேதத்தில் என்ன சொல்லுகின்றது சொல்லும்" என்று கேட்க, காசிபர் சொல்லு கிறார்:—

"ஓ பட்டத் தரசிகளே! 'புருஷனிருந்தாலும் புத்திர னில்லா மற் போனால், பட்டத்தரசிகள் அந்தந்தப் பட்டத்து ஆசாரியரைச் சேர்ந்து புத்திரனைப்பெற்றுக் குலத்தை விர்த்திசெய்யலாம்' என்று வேதத்தில் முறைபிடுகிறது. ஆகையால் நீங்க ளெல்லாம் உங்களு டைய ஆசாரியரைச் சேர்ந்து புத்திரர்களைப் பெற்றுக் குலத்தை விர்த்தியாக்குங்கள். இதனாலே ஒரு கெடுதியு மில்லை. நீங்கள் யாவரும் நெருப்பில் விழுந்து மடிவது தரும மல்ல. இனி விருப்ப முடன் நான் சொன்னபடி சேர்ந்து கருப்பமடையுங்கள்" என்று கட்டளையிட, பட்டத்தரசிகள் சற்று நேரம் யோசித்து, "இந்தக் காசிபரோ பிரமனுடைய புத்திரர். இவர் சொல்லுக்குப் பழுதுவரக் கூடாது. இவரும் பொய்ம்மை கூறார்" என்று ஒப்புக் கொண்டு காசிபரை வணங்கிச் சொல்லுகிறார்கள்.—"ஓ மஹானுபாவா! வேதமே ஸ்வரூபமாக இருக்கிற நீர் ஒரு கட்டளை யிட்டால் இந்தி ரன் முதலான தேவர்களே கடக்கமாட்டார்க ளென்றால், பூலோ கத்து ஸ்திரீஜாதிகளாகிய நாங்கள் கடக்கப் போகிறோமா? தங் கள் கருத்தின்படி நடக்கிறோம்" என்று கூற, அவரவர்கள் தங்கள்

தங்கள் குலாசாரியரை அழைப்பித்து, காசிபர் கூறிய கட்டளை யைத் தெரிவித்துக் கூடிக் கலந்து, எவ் வெட்டுப் புத்திரர்களையும் இரண்டிரண்டு புத்திரிகளையும் பெற்று வளர்த்து, சூரிய குலத்தை விர்த்தியாக்கினார்கள். அப்போது காசிபர் தமதுவசத்தி லிருக்கிற பூமியை அந்தந்தப் பட்டத்தரசிகளுடைய புத்திரர்களுக்குப் பகுத்துக் கொடுத்து முடிசூட்டி, அரசுசெய்யக் கட்டளையிட்டார் அந்தந்தப் பட்டத்துப் புத்திரர்கள் மனுசாஸ்திரவிதி பிசகாமல் அரசுசெலுத்தி வருவதால், பிணிபயம் - கள்ளர்பயம் - சத்துரு பயம் - விஷபயம் - ஐம்பூதபயம் முதலானவை யாதும் இன்றித் தருமதேவதை நான்கு பாதங்களினாலும் நடந்தது. அதனாலே உலகில் பிரஜைகள் பெருகினார்கள். அப்பால் பூமிதேவி பிரஜா பாரத்தைச் சுமக்கச் சக்தியில்லாமல் மிகுந்த வருத்தமடைந்து, இந்தப் பிரஜாபாரத்தைத் திரிமூர்த்திகள் தீர்க்க வேண்டுமே ஒழிய மற்றொருவர் தீர்க்கமாட்டார்க ளென்று கருதி, அந்தத் திரிமூர்த் திகள் ஒன்றாகக்கூடி யிருக்கிற சமயத்தைப் பார்த்து வந்து, அந்த மும்மூர்த்திகளையும் கண்டு வணங்கி "ஓ மஹாமூர்த்திகளே! பூமி யில் அரசர்கள் மனுசாஸ்திரவிதி பிசகாமல் அரசுசெலுத்துகிறார் கள். அதனால் பிரஜைகள் விர்த்தியாகி எனக்குப் பாரமாயிற்று. அவர்களைச் சுமக்க என்னால் சக்தியில்லை" என்று முறையிட்டாள். அதை மும்மூர்த்திகளும் ஆலோசித்து, பூமிபிராட்டியைப் பார்த்து "ஓ லோகமாதாவே! நீ வருத்தப்பட வேண்டாம். இதோ ஸ்ரீமந் நாராயணமூர்த்தியும் தேவர்களும் அசுரர்களும் மனுஷ தேகராய் உலகில் வந்து உன் பாரத்தை நீக்குவார்கள். அஞ்சவேண்டாம். உனது இருப்பிடத்துக்கு நீ போய்ச் சேர்" என்று கட்டளையிட்டு பின்பு ஸ்ரீமந்நாராயணமூர்த்தியும் தேவர் அசுரர் முதலானவர் களும் மானுஷதேகமெடுத்து, பூமிபாரத்தை நீக்கிப் பூமி தேவியை ஆதரித்தார்கள். அந்த விருத்தாந்தத்தை விவரமாகக் கூறுகிறேன் கேள்" என்று வைசம்பாயனர் சொல்லுவதாயினார்.

"சிருஷ்டித் தலைவனாகிய பிரமனுடலில் அத்திரி-அரிசி - புலத் தியன் - கிரன் - கிருத்து - புலகன் என்னும் ஆறு புத்திரரும், அப்பிரமன் வலது பாதத்தின் பெருவிரலில் தக்கனும், இடது பாதத்துப் பெருவிரலில் தரணியென்னும் ஒரு பெண்ணும் உதித் தனர். அந்தப் பிரமன் உடலி லுதித்த ஆறுபுத்திரர்களில், அரிசி யின் புத்திரன் காசிபர். அக்காசிபரால் இவ்வுலகம் விர்த்தியாயிற்று.

அதுஃ எவ்வகையெனில், பிரமன் வலதுபாதத்துப் பெருவிரலில் பிறந்த தக்கனென்பவன், பிரமன் இடதுகாற் பெருவிரலிற் பிறந்த தரணி யென்பவளைக் கூடி ஆயிரம் புத்திரர்களைப் பெற்றான். அப் புத்திரர்கள் பிரமசாரியத்தை மேற்கொண்டு தவஞ்செய்து ஞான பத மடைந்தார்கள். அதைத் தக்கன் கேட்டு, மறுபடியும் தரணி யென்பவளைக்கூடி ஐம்பது பெண்களைப் பெற்றான். அந்த ஐம்பது பெண்களில் கீர்த்தி - லட்சுமி - துருதி- மேதா - புஷ்டி - சிரத்தை - கிரியை - விருத்தி - இலச்சாமதி என்னும் பதின்மரைத் தரும னென்கிற மநுவுக்கும், அஸ்வனி - பரணி - கார்த்திகை - ரோகணி - மிருகசீரிடம் - திருவாதிரை - புனர்பூசம் - பூசம் - ஆயிலியம் - மகம் - பூரம் - உத்திரம் - அஸ்தம் - சித்திரை - சுவாதி - விசாகம் - அநுஷம் - கேட்டை - மூலம் - பூராடம் - உத்திராடம் - திருவோ ணம் - அவிட்டம் - சதயம் - பூரட்டாதி - உத்திரட்டாதி - இரே வதி என்னும் இருபத்தேழு பெண்களைச் சந்திரனுக்கும், அதிதி - திதி - தநு - காலை - ஆயு - சிங்கை - மநு - சுரபி - முனி - குரோ தவசை - அருங்கை - விநுதை - கத்துரு என்னும் பதின் மூன்று பெண்களைக் காசிபருக்கும் விவாகஞ் செய்து கொடுத்தான். இவர்களில் அதிதிக்குத் தாதுருமித்ரன் - அரியமான் - சக்கரன் - வருணன் — அமிசுபகன் — தரணி - இருதுவான் — விவசுதன் - பூஷன் - சவித்திரன் - துவஷ்டரன் - விஷ்ணு ஆகிய பன்னிரண்டு சூரியர் பிறந்தார்கள். திதியென்பவளுக்கு, இரணியன் பிறந்தான். அந்த இரணியனுக்குப் பிரகலாதன் பிறந்தான். பிரகலாதனுக்குக் கும்பன் - நிகும்பன் - விரோசனன் என்னு மூவரும் பிறந்தார்கள். அவர்களில் விரோசனனுக்குப் பலிசக்ரவர்த்தி பிறந்தான். பலிக்குப் பாணாசுரன் பிறந்தான். தநுவென்பவளுக்கு, விப்பிர சித்தி - நமுசாசி - சங்கவருணன் - பலோமன் - விலோமன் முதலாகிய நாற்பதுபேருக்கும் சந்ததி விர்த்தியாகி அளவற்ற அசுரர்களுதித்தார்கள். காலை யென்பவளுக்கு, விநாசன் — குரோ தனன் முதலாகிய ஐம்பது புத்திரர்கள் பிறந்து அபிவிர்த்தி யானார்கள். ஆயுவுக்கு, விஜயன் - விஜரன் - வீரன் - விருத்திரன் என்னும் நாலு புத்திரர்கள் பிறந்து விர்த்தியாயினார்கள். சிங்கிகை யென்பவளுக்கு, இராகு பிறந்தான். மநுவென்பவளுக்கு, வீம சேனன் - உக்கிரசேனன் முதலாகிய பதினாறு கந்தர்வர் பிறந் தார்கள். சுரபியென்பவளுக்கு, மேனகைமுதலாகிய அப்சரஸ்திரீ

களும் தேவசுரபிகளும் பிறந்தனர். முனியென்பவளுக்கு, கணன் பிறந்தான். குரோதவசைக்கு, மற்றொரு கணன் பிறந்தான். அநுகை யென்பவளுக்கு, சித்தகணங்கள் பிறந்தார்கள். விநதைக்கு, அருணனும் - கருடனும் பிறந்தார்கள். அருணனுக்கும் அவன் மனைவி சேநிக்கும் சம்பாதி சடாயு பிறந்தார்கள். கத்துருவுக்கு, ஆதிசேஷன் வாசுகிமுதலாகிய நாற்பூநாலு உரக பதிகளும் ஜரத்காரை என்கிற ஒரு புத்திரியும் பிறந்தார்கள். இது காசிபர் சந்ததி.

இது போலவே அப் பிரமன் புத்திரர்களாலும் அப் புத்திரர் வருக்கத்தாராலும் உண்டான உற்பவங்களைச் சொல்லு மிடத்து, அங்கீரசனுக்குப் பிரகஸ்பதி முதலாகிய புத்திரர்களும் யோகசித்தி யென்னும் ஒரு புத்திரியும் பிறந்தார்கள். அதில் பிரகஸ்பதிதேவ குருவானன். அத்திரிக்கு வேத வேதியர்களும் பிரமரிஷிகளும் பிறந்தார்கள். புலகனுக்கு வச்சிரவாகு முதலாகிய அரக்கர்கள் பிறந்தார்கள். அதில் வச்சிரவாகு வென்பவனுக்குக் குபோன் பிறந்தான். புலஸ்தியனுக்கு, கின்னரர் கிம்புருடர் பிறந்தார்கள். கிருதுவுக்கு அழிவில்லாத நிலைமையையுடைய நாலுமுனிவர்கள் பிறந்தார்கள். பிரமன் புத்திரனுகிய தேவலனென்கிற முனிக்குப் பிரசாபதி பிறந்தான். அந்தப் பிரசாபதிக்குத் தூமிறை - புத்தி - மனஸ்வனி - ரதைசுசனை - சாண்டிலி - பிரபாசலை என்னு மேழு மனைவிக ளுண்டு. அவர்களில் தூமிறைக்கு வருணனும், புத்திக்கு துருவனும், மனஸ்வநிக்குச் சோமனும், ரதைக்கு நகுஷனும், சுவசனைக்கு - அனிலனும், சாண்டிலிக்கு - அக்னியும், பிரபாசலைக்கு - பிரபாசன் - பிரத்தியூசன் முதலாகிய வசுக்களும் பிறந்தார்கள். வருணனென்கிற வசுவுக்குத் திரவணனும், துருவனென்கிற வசுவுக்குக் காலனும், சோமனென்னும் வசுவுக்கும் மனோகரமென்னும் பெண்ணுக்கும், புரோசனன் - வர்ச்சிசன் - சிசிரன் - பிராமணன் - வருணன் - புரதை என்கிற பிள்ளைகளும் பெண்ணும் பிறந்தனர். புரதை யென்பவளுக்குப் பதினெழு கந்தர்வர் பிறந்தார்கள். நகுஷனென்கிற வசுவுக்குச் சோதி பிறந்தான். அனிலனென்னும் வசுவுக்கும் சிவை யென்பவளுக்கும் புரோஜனனும் அவிக்யாதகதி யும் பிறந்தார்கள். அக்னியென்கிற வசுவுக்கு குமாரன் பிறந்தான். பிரத்யூஷ னென்னும் வசுவுக்கு முனிவனுகிய தேவலன் பிறந்தான். பிரபாசனனென்கிற வசுவுக்குப் பிரகஸ்பதி சகோதரி

யாகிய யோகசித்திக்கும் விசுவகன்மன் பிறந்தான். தரனென்கிற வசுவுக்குப் புத்திரர்களாக மாதேவன் - அரன் - உருத்திரன் - சங்கிரன் - நீலலோகிதன் - ஈசானன் - விசயன் - விமதேவன் - பவோற்பவன் - சுரபாலி - சௌமியன் என்னும் ஏகாதச ருத்திரர்கள் பிறந்தார்கள். பிரமன் வலதுகையில் தருமனென்கிற மநுபிறந்தான். அந்தத் தருமனுக்குச் சமன் - ராமன் - அருஷன் என்பவர் பிறந்தார்கள். அந்த மூவரும் கிரமமாய் அப்பிராப்தி நிருதி - நந்தி என்கிற மூன்று மனைவியரோடு வாழ்ந்திருந்தார்கள். சவித்துக்கும் வடவாக்கினி ரூபமாகிய துவஷ்டாவுக்கும் அசுவனி தேவதைகள் பிறந்தார்கள். பிரமன் மார்பிலே பிருகுமுனிவர் பிறந்தார். அந்தப் பிருகுக்குச் சுக்கிரன் பிறந்தான். அந்தச் சுக்கிரன் அசுரர் குருவானான். சுக்கிரனுக்கு துவஷ்டா - தாத்திரி-பத்திரன்-கன்னன் என்கிற நான்கு புத்திரர்கள் பிறந்து அசுரருக்குப் புரோகிதர்களானார்கள். பிருகுமுனிக்குச் சவுனகன் பிறந்தான். அந்தச் சவுனகனுக்கும் மநுவாகிய யயாதிபுத்திரி சுகன்னிக்கும் சனகன் - உருசிகன் முதலாகிய நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். உருசிகனுக்குச் ஜமதக்கினி பிறந்தான். ஜமதக்கினிக்கும் ரேணுகைக்கும் புத்திரரும் புத்திரிகளுமாக நான்குபேர் பிறந்தார்கள். அவர்களில் மூத்த குமாரன் சிரேஷ்டனானான். மறுபடியும் பிரமனுக்குத் தாதை-விதாதை - அலக்குமி என்னு மூன்று ஸ்திரீகள் பிறந்தார்கள். அவர்களில் அலக்குமி அனேகம் புத்திரர்களைப் பெற்றாள். வருணனென்பவனுக்கும் சேஷ்டைக்கும் தருமனென்று ஒரு புத்திரனும் சுனந்தை என்று ஒரு பெண்ணும் பிறந்தார்கள். தருமனுக்கும் நிருதி யென்பவளுக்கும் மஹாபயன் - பயன் - மிரததீவு என்கிற மூவரும் பிறந்தார்கள். மற்றும் அத்தருமனுக்குக் காகி - சேனை - பாசினி - திரிதராஷ்டரை - சுகி யென்னும் ஐந்துபெண்கள் பிறந்தார்கள். இவர்களில் காகி யென்பவளுக்குக் காக்கைகள் பிறந்தன. சேனை என்பவளுக்குப் புறாக்கள் பிறந்தன. திரிதராஷ்டரைக்கு விச்சுளிகள் பிறந்தன. பாசினி யென்பவளுக்குப் பருந்துகளும் ஆந்தைகளும் பிறந்தன. சுகியென்பவளுக்குக் கிளிகள் பிறந்தன. முன் கூறிய காசிபமுனி மனைவியாகிய முனியென்பவளுக்கு மறுபடியும் மிருகை - மந்தை - அரிணி - பத்திரமதி - மாதங்கி - சார்த்தூலி - சுவேதை - சுரசை என்கிற எண்மரும் பிறந்தார்கள். இவர்களில் மிருகை யென்பவளுக்குப் பன்றி முத

லாகிய மிருகங்கள் பிறந்தன. மந்தையென்பவளுக்கு உயிருள்ள பல ஜெந்துக்கள் பிறந்தன. அரிணிக்குக் குரங்கினம் பிறந்தது. பத்திரமதிக்கு ஐராவதம் பிறந்தது. ஐராவதத்துக்குத் தேவ நாகங்கள் பிறந்தன. மாதங்கி என்பவளுக்கு யானைகள் பிறந்தன. சார்த்தூலி யென்பவளுக்குச் சிங்கங்களும் புலிகளும் பிறந்தன. சுவேதை யென்பவளுக்குத் திக்குக் கஜங்கள் பிறந்தன. சுரதை என்பவளுக்கு உரோகிணி - பத்திராங்கி - கந்திருவை என்கிற மூன்று ஸ்திரீகள் பிறந்தார்கள். உரோகிணிக்கு மான்கள் பிறந்தன. பத்திராங்கிக்கு மரங்களும் கொடிகளும் புதர்களும் பிறந்தன. கந்திருவைக்குக் குதிரைகள் பிறந்தன. இதுவே பிரபஞ்ச உற்பத்தி. இனிப் பாரதவீரர் உற்பத்தியைக் கூறுகிறேன்" என்று வைசம்பாயனர் ஜனமேஜய மஹாராஜனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

பிரபஞ்ச உற்பவச்சருக்கம் முற்றிற்று.

---

## 3. பாரதவீரர் உற்பவச் சருக்கம்

---

### கண்ணன் துதி

இணையி லாதவ னிறப்பொடு பிறப்பெனுங் கடற்கோர்
புணையு மானவன் புனிதர்கண் மனத்துறை புனிதன்
பணைகொ டிண்புயப் பாண்டவர்க் கிகத்தினும் பரத்துந்
துணைய தானவன் றுணைப்பத நமக்கினித் துணையே.

சிறப்புப் பொருந்திய வரத்தினையடைந்த யாதவகுல சிகாமணியாகிய வசுதேவருக்கு, தேவகி என்றும் உரோகிணி என்றும் இரண்டு மனைவிய ருண்டு. அவர்களில் தேவகிக்குக் கிருஷ்ணஸ்வாமி என்றும் உரோகிணிக்குப் பலராமனென்றும் இரண்டுருவமாகத் திருமால் அவதரித்தார். அஷ்டலட்சுமிகள் அம்சமாய் ருக்மிணி முதலாகிய எட்டுப் பட்டஸ்திரீகள் பிறந்தார்கள். அப்சரஸ்திரீகள் அம்சமாய் கோபியர்கள் பிறந்தார்கள். சனற்குமாரர் முதலாகிய முனிவர்களும் அம்முனிவர் புத்திரர்களும் குந்திபோஜன் முதலாகிய யாதவ அரசர்களாய்ப் பிறந்தார்கள். பிரபாசனென்கிற எட்டாம்வசு அம்சமாய்க் காங்கேயன் பிறந்தான்.

அசுரகுலகுருவாகிய சுக்கிராச்சாரி அம்சமாய்த் துரோணாச்சாரி பிறந்தார். காமக் குரோதத்தின் அம்சமாய் அசுவத்தாமன் பிறந்தான். ஏகாதசருத்திரர் அம்சமாய் கிருபாச்சாரி பிறந்தார். சூரியன் அம்சமாய்க் கர்னன் பிறந்தான். துவாபரயுக புருஷன் அம்சமாய்ச் சகுனி பிறந்தான். கந்தர்வர்க்கு அரசனாகிய அமிசன் அம்சமாய்த் திரிதராஷ்டிரன் பிறந்தான். வசுமதி என்னும் தேவதை அம்சமாய்க் காந்தாரி பிறந்தாள். திரிதராஷ்டிரனுக்கும் காந்தாரிக்கும் கலிபுருஷன் அம்சமாய்ச் சுயோதனன் பிறந்தான். விச்சிரவாகுவென்னும் அசுரன் வழியிற்றோன்றிய அசுரர்கள் அம்சமாய்ச் சுயோதனன் தம்பிமார்கள் பிறந்தார்கள். இரணியகசிபன் அம்சமாய்ச் சிசுபாலன் பிறந்தான். பிரகலாதன் அம்சமாய்ச் சல்லியன் பிறந்தான். பிரகலாதனுக்கு இளையவனாகிய அநுகுலாதன் அம்சமாய்த் துஷ்டகேது பிறந்தான். சிபி அம்சமாய்ச் சுருதசேனன் பிறந்தான். பாஷக்கலன் அம்சமாய்ப் பகதத்தன் பிறந்தான். விப்பிரசித்தனென்னும் அரக்கன் அம்சமாய் ஜராசந்தன் பிறந்தான். நயசீரன் அம்சமாய் நஸ்வசீரன் பிறந்தான். சங்கன் சுகனமூர்த்தி வேகவந்தன் முதலானவர்கள் கேகய ராஜர்களாகப் பிறந்தார்கள். கேதுவந்த னென்பவன் அம்சமாய்ச் சுதரிசனன் பிறந்தான். சுவர்ப்பானு என்பவன் உக்கிரசேனனாய்ப் பிறந்தான். சங்கமன் சோமகனாய்ப் பிறந்தான். அசுவபதி அம்சமாய்க் கிருதவன்மன் பிறந்தான். உருஷபாவன் தீர்க்கபிரக்கியனாய்ப் பிறந்தான். நஜரன் அம்சமாய் மல்லன் பிறந்தான். அஸ்வக்கிரீபன் அம்சமாய் உரோசமானன் பிறந்தான். சூக்குமனென்பவன் பிருகத்திருது வாய்ப் பிறந்தான். துருவென்பவன் அம்சமாய்ச் சேனபிந்தன் பிறந்தான். சகரன் அம்சமாய்ப் பிறத்திவிந்தியன் பிறந்தான். விருபாக்ஷன் அம்சமாய்ச் சித்திரவன்மன் பிறந்தான். பவுத்திரன் அசாங்கன் அம்சமாய் கிருபபாக்வீகர் பிறந்தார்கள். சந்திரவக்கரன் அம்சமாய்ப் பூரிசிரவன் பிறந்தான். நிகும்பன் அம்சமாய் ருஷிகன் பிறந்தான். மயூரன் அம்சமாய் விசுவன் பிறந்தான். சுபாரன் அம்சமாய்க் குரோதகீர்த்தி பிறந்தான். அந்தக் குரோத கீர்த்திக்கு நந்தகன் - கண்டன்-வேஷன்-சித்தராத்தகீஷன்-சுவீரியபாகு-மஹாவீரியன் - குதரன் - சித்திராதன் - நீலன் - வீரதாமன்-தந்தவக்தரன்-துரஜயன் - ஜனமேஜயன் - ஏகல்வயன் - எனப் பல அசுரர்கள்

பிறந்தார்கள். பக்தாஸ்தன் அம்சமாய் நந்தகன் பிறந்தான். திர்க்கசிகுவன் அம்சமாய்க் காசிராஜன் பிறந்தான். விஜயன் அம்சமாய் வசுமித்திரன் பிறந்தான். சித்தென்பவன் அம்சமாய்ப் பரசுராஷ்டரன் பிறந்தான். விரன் அம்சமாய்ப் பவுண்டிர மச்சன் பிறந்தான். உருத்திரன் அம்சமாய் மணிமந்தன் பிறந்தான். காலபுத்திரர் அம்சமாய் ஜயசேனன் - பராசிதன் - நாதிகன்-கிஷ்காதிபன்-ஸ்ரீமந்மகோதன் - மத்தியன் - சமுத்திரசேனன் - புரகதன் என எட்டு அரசர்கள் பிறந்தார்கள். குரோதவசை புத்திரனாகிய கனைன் அம்சமாய் கஜபுத்திரன் பிறந்தான். அஸி என்னும் அரக்கன் அம்சமாய்ச் சிகண்டி பிறந்தாள். பிரகஸ்பதி அம்சமாய்ப் புருகக்கீர்த்தியென்னு முனி பிறந்தான். மருத்துவர் அம்சமாய்ப் பாஞ்சாலன் - விராடன் - சாத்தகி பிறந்தார்கள். திரிகுணன் அம்சமாய் விதுரன் பிறந்தான். யக்ஷக அரசன் அம்சமாய்ப் பாண்டுராஜன் பிறந்தான். சித்தி புத்தி என்கிற தேவதைகள் அம்சமாய்க் குந்தி மத்திரை இரண்டு பேர் பிறந்து அந்தப் பாண்டுராஜனுக்கு மனைவியாயினர். யமன் அம்சமாய்த் தருமராஜன் பிறந்தான். வாயு அம்சமாய் பீமன் பிறந்தான். இந்திரன் அம்சமாய் விஜயன் பிறந்தான். அசுவனி தேவர்கள் அம்சமாய் நகுலன் சகாதேவர் பிறந்தார்கள். ஸ்ரீதேவி அம்சமாய்த் திரௌபதி பிறந்தாள். அக்கினி அம்சமாய் த்ருஷ்டத்தூய்மன் பிறந்தான்.

இது பாரதவீரர் உற்பத்தி. இவர்கள் உலகத்திற் பிறந்து பல்கிப் பெருகி முடிவில் போர்க்கோலங்கொண்டு பூமிபாரத்தை நீக்கி அவரவர்கள் இருப்பிடத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இந்த உற்பத்தியைக் கேட்டவர்கள் யாவராலும் அளவிடப்படாத பிரம்மானந்தத்தை அடைவரென்று வைசம்பாயனர் சொல்ல, ஜனமேஜய மஹாராஜன் கேட்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்து வைசம்பாயனரை வணங்கிச் சொல்லுகிறான்: "ஓ ஸ்வாமி! தேவர்களும் அரக்கரும் இவ்வுலகத்தில் அரசர்களாகப் பிறந்தார்களென்று உரைத்தீர்கள். இவ்வுலகத்தில் பிரம்ம க்ஷத்ரிய வைசிய சூத்திரரென்கிற நான்கு வருணங்களும் வந்த வரலாற்றையும் எங்கள் வமிச பரம்பரையையும் விளங்க உரைக்கவேண்டும்" என்று வேண்ட "ஓ அரசனே தக்கன் மகளான அதிதிக்கும் காசிபருக்கும் சூரியன் பிறந்தான். சூரியனுக்கும் சாயாதேவிக்கும் வைவ

சூதன், யமன் சனி யமுனை தபதி என்னும் ஐந்து மநுக்கள் பிறந்தார்கள். இவர்களில் வைவசுதமநுவால் பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் நான்கு வருணங்களு முண்டாயின. இனி உன் மரபினது விருத்தாந்தத்தையும் உன் மரபிலுதித்த அரசர்கள் சரித்திரத்தையுஞ் சொல்லுகிறேன் கேள்" என்று வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

பாரதவீரர் உற்பவச்சருக்கம் முற்றிற்று

---

## 4. குருகுலச்சருக்கம்

---

கண்ணன் துதி

சங்கமுந் திகிரியுந் தனுவுந் தண்டமுஞ்
செங்கைவா ளுடனருட் செலுத்துஞ் சீரியோன்
மங்குனேர் வடிவமும் வனச வுந்தியும்
பங்கயப் பதமுமியான் பார்க்கும் பாங்கெலாம்

ஆதியில் திருமாலும் தேவருங் கூடித் திருப்பாற் கடல் கடைகிறபோது மந்தரகிரியாகிய மத்துச் சுழலத் தானே தறியாயிருந்தும் விஷந்தோன்றியபோது அவ்விஷத்தின் ஜுவாலை அடங்க அவ்வமுதத்திற் றோன்றியும் உலகம் குளிர்ச்சிபெறத் தனது சோடச கலைகளை வீசியும் எங்கும் பிரகாசிக்கப் பரமன் சடாடவியி லினிது வீற்றிருந்தும், சகல லோகங்களிலு மிகவும் சிறப்புற்றோங்கிச் சந்திரன் - புதனென்கிற ஒரு புத்திரனைப் பெற்றான். புதன் புரூருவனைப் பெற்றான். அப் புரூருவராஜன் ஆறு சாஸ்திரம் - நாலுவேதம் அறுபத்து நாலு கலைக்கியான முதலானவைகளை யுணர்ந்து, தருமதேவதை நான்கு பாதத்தினாலேயும் நடக்க அறத்தை நடாத்தி, மநுசாஸ்திரவிதி பிசகாமல் செங்கோல் செலுத்தி, சக்கரவர்த்தி யென்கிற பெயரை வகித்து, மஹா சிறப்புடன் அரசு செய்திருந்தான்.

இப்படிச் சிலநாள் அரசு செலுத்தி வருகிற காலத்தில், ஒரு நாள் சொர்க்கலோகத்துக் கதிபதியாகிய இந்திரனுடைய நாடகசாலைப் பெண்களில் ஊர்வசி யென்பவள், மலர் கொய்து

விளையாட, பூங்காவனத்திற்குச் சென்றாள். அவளை அசுரர்கள் மறித்து, துராக்கிரதமாகத் தங்கள் தேரி லேற்றித் தங்களிருப் பிடத்துக்குக் கொண்டு போனார்கள். அப்போது அந்த ஊர்வசி மிகவும் நடுங்கி, என்னை யாதரிப்பவ ரில்லையா வென்று ஓலமிட் டிரைந்தாள். அந்த ஓசையை இந்திரன் முதலாகிய தேவர் கள் கேட்டு, அவ்வசுரரோடு போராடச் சக்தி யற்றவராய்ச் சும்மா இருந்து விட்டார்கள். இந்த ஓசையைப் புரூரவச்சக்கர வர்த்தி கேட்டு, தன்னருகிலிருந்த சாரதியை அழைத்து, "ஓ சாரதி! தெய்வப் புரவியைப் பூட்டி என் இரதத்தைக் கொண்டுவா" என்று கட்டளை யிட்டான். அச்சாரதி அரசன் கட்டளைப்படி தெய்வப் புரவியைப் பூட்டி இரதத்தைக் கொண்டுவந்து நிறுத்தி னான். புரூருவச்சக்கரவர்த்தி அந்த இரதத்திலேறி ஆகாசத்திற் சென்று, அந்த ஊர்வசியைக் கொண்டுபோகிற அசுரரை மறித்து, தன் வில்லை வளைத்துச் சரமாரிபொழிந்து, அரைநொடியில் அவர் கள் கையிலிருக்கிற வில்முதலாகிய படைகளை முறித்து அதஞ் செய்து, ஒருவர் போனவழி ஒருவர் போகாமலோட அவர்களைத் துரத்திவிட்டு, அந்த ஊர்வசியைத் தன் இரதத்தில் ஏற்றிக்கொண்டு அவள் விருத்தாந்தத்தைக் கேட்டான். அந்த ஊர்வசி தான் வந்த தையும், வந்த இடத்தில் அசுரர் பிடித்ததையும சொல்லி, தனதி ருப்பிடத்தையுங் கூறினாள். அரசன் அந்த ஊர்வசியின் சௌந்தரி யத்தைக் கண்டு மிகுந்த காதலுடையவனாகி, "இந்த ஸ்திரீயை நாம் கூடுவோ மென்றால் இவள் சொர்க்கலோகத்துக் கதிபதியாகிய இந்திரனுடைய நாடகசாலைப் பெண்ணாதலால் இந்திரனது உத்தர வில்லாமல் புணரக்கூடாது" என்று கருதித் தன் இரதத்தை இந்திரலோகத்திற் செலுத்தி, இந்திரனிடத்திற் சென்று அந்த ஊர்வசியைக் கொலுவில் நிறுத்தி இந்திரனை வணங்கிச் சொல்லு கிறான்—"ஓ தேவராஜனே! இதோ நிற்கிற ஸ்திரீயை அசுரர் பிடித்துப் போயினர். இவள் முறையிட்டுச் சென்றாள். இவள் முறையிட்டதைக் கேட்டு அவ்வசுரரை அடித்துத் துரத்தி விட்டு இவளை நான் மீட்டு வந்தேன். இவள் தங்களுடைய நாடகசாலைப் பெண்ணாதலால் என் மனதில் ஒன்றைக் கருதித் தங்களிடத்துக்கு வந்தேன்" என்று கூற, இந்திரன் கேட்டு மகிழ்ந்து, "ஓ புரூருவச் சக்கரவர்த்தி! நீ மகா நீதியையுடையவன். மேலும் உலகத்தில் தருமதேவதை நான்குபாதத்தில் நடக்கச் சக்கர நடாத்துகிற

கனவூரன்? அன்றியும் எங்களால் வெல்லக்கூடாத அசுரரை வென்று இந்த ஊர்வசியை மீட்டுவந்த மகா பராக்கிரம சாலியாகிய நீ நினைத்தகாரியம் நிறைவேறாமற் போகுமா? உன் கருத்தி லிருப்பதை வெளிப்படுத்தினல் அக் காரியத்தை நிறைவேற்றுகிறேன். வெளியிடுவாய்" என்று கேட்க, புரூருவச் சக்கரவர்த்தி இந்திரனை நோக்கி "ஓ ஐயனே! இந்த ஊர்வசி மிகுந்த சௌந்தரியத்தை யுடையவளாயிருக்கிறாள். இவளோடு யான் கூட மனங் கொண்டிருக்கிறேன். இவள் தங்கள் சுவாதீன மாதலால் தங்களுத்தர வில்லாமல் இவளைப் புணருதல் தகுதியல்ல வென்று மதித்துத் தங்களிடத்தில் அறிக்கை யிட்டேன். இது தான் என் கருத்து. தாங்கள் கிருபை கூர்ந்து என்ன கட்டளை இடுகிறீர்களோ அக்கட்டளைக் குள்ளாகிறேன்" என்றான். இந்திரன் மகிழ்ந்து அரசனைப் பார்த்து, "ஓ அரசனே! இந்த ஊர்வசியை அசுரர் கொண்டு போகாததற்கு முன்னம் இவள் என்சுவாதீனம். இப்போது நீ அவ்வசுரரை வென்று இவளை மீட்டுக் கொண்டதால் இவள் உன் சுவாதீனம். இது மநுசாஸ்திரவிதி. இந்த மனுசாஸ்திரவிதி நீ யறிந்திருந்தும், இவளை அபகரிக்காமல் என்னிடத்தில் கொண்டு வந்து விட்ட உன் புனிதமான குணத்தை என்னால் துதிக்க இயலாது. மிகுந்த பிரயாசைப்பட்டு இவளை மீட்ட உன் கருத்து மகிழ்வெய்த அவளைக் கூடிக் கலந்து வழக்கடவாய்" என்று கட்டளை யிட்டு, ஊர்வசியைப் பார்த்து, "ஓ பெண்ணே! உன்னை மீட்டுவந்த இந்தப் புரூருவ சக்கரவர்த்தியோடு உலகத்திற் சென்று கூடி வாழ்ந்து ஒரு புத்திரனைப் பெற்று வைத்து, யதாப்பிரகாரம் என்னிடத்துக்கு வந்து சேர்வாய்" என்று கட்டளை யிட்டான். இந்தக் கட்டளையை இருவருஞ் சிரமேற் கொண்டு தேரிலேறி, உலகத்தில் வந்து இரதியும் மதனும்போற் கூடி வாழ்ந்தார்கள்.

பின்பு ஊர்வசி ஆயுவென்கிற புத்திரனைப் பெற்று வைத்து முன் போல் இந்திரனிடத்திற் சென்றாள். இந்த ஆயுவென்கிற புத்திரன் சகலகலை வல்லவனாகி, தந்தையினும் எண்மடங் கதிகமாய்த் தருமத்தைச் செய்து தன்னுயிர் போல் மன்னுயிரனைத்தையுங் காத்து அரசுபுரிந்தான். அந்த ஆயுவுக்கு நகுஷன் பிறந்தான். அந்த நகுஷன் மநுசாஸ்திரவிதி பிசகாமல் அரசுசெலுத்தி நூறு அஸ்வமேதயாகஞ் செய்து, சொர்க்கத்துக்குத் தலைமையாகிய

இந்திரப் பட்டம் பெற்று, பழைய இந்திரன் மனைவியாகிய புலோமிசைமேல் காதல் கொண்டு, அப்புலோமிசையை அழைத்துவரச் சில தேவதூதரை விட்டான். அதையவ ளறிந்து குருவிடத்து முறையிடப் பிரகஸ்பதி "ஓ அம்மணி! நீ அஞ்சாதே, உன்னிடத்து வந் தழைக்கிற தூதருக்கு ஒரு உத்தரவு சொல்லு. அஃதென்னெனில்: பழைய இந்திரன் என்னிடத்துக் கெவ்வாறு வருவானோ அவ்வாறு உங்கள் அரசனை வரச்சொல்லு மென்றால், அந்தப் புதிய இந்திரன் சப்த முனிவர்களால் சுமக்கப்பட்ட முத்துச்சிவிகையில் வருவான். அப்போது அவன் சும்மாவிராமல் ஏதாவதொரு வசனஞ் சொல்லுவான். அதன்மேல் அம் முனிவர்க்குக் கோபமுண்டாகிச் சபிப்பார்கள். பின்பு உன் மனத்துயரம் நீங்கும்" என்று புகலவும் அவள் குருவுரைத்த சூட்சியை மனதில் வைத்துத் தேவதூதரை நோக்கி, "ஓ தேவதூதர்களே! உங்கள் அரசனாகிய இந்திரனை என்னிடத்துப் பழைய இந்திரன் எவ்வாறு வருவானோ அவ்வாறு வரச்சொல்லுங்கள்" என்றாள். தூதர் இந்திரனாகிய நகுஷனுக்குப் புலோமிசை புகன்றவற்றைச் சொன்னார்கள். உடனே நகுஷனனவன் அகஸ்தியர் - அத்திரி - ஆங்கீரசர் - கவ்தமர் - காசிபர் - புலத்தியர் - வசிஷ்டர் என்னும் ஏழு முனிவர்களையும் அழைப்பித்துச் சிவிகையைக் கொண்டுவரச்சொல்லி, அச்சிவிகையில் ஏறிச் சென்றான். அப்போது சும்மாவிராமல் விரைவிற் செல்லுங்களென்னும் பொருள் கொடிந்தும் (ஸர்ப) என்னும் தேவ மொழியை அவன் கடுகடுத்துக் கூற, இந்தக் கடின மொழியை அகஸ்தியர் கேட்டு, "எங்களை மதிக்காமல் விரைவிற் செல்லச் சொன்னபடியால், நீ பெரும்பாம்பாய்ப் போகக்கடவாய்" என்று சாபமிட்டார். அச்சாபத்தை யேற்ற நகுஷன் மிகுந்த நடுக்கமுற்றவனாய் அகஸ்தியரை வணங்கி, "ஓ ஐயனே! இந்தச் சாபம் என்றைக்குத் தொலையும்?" என்று வேண்ட அகஸ்தியர் மனமிரங்கி, "ஓ நகுஷனே! உன் சந்ததியில் தருமன் - பீமன் - அர்ச்சுனன் - நகுலன் - சகாதேவன் என்னும் ஐவர் பிறக்கப் போகிறார்கள். அவர்கள் ஒரு காரியார்த்தமாய் வனத்துக்கு வருவார்கள். அவர்களில் பீமனை நீ விழுங்குவாய். அப்போது உன் சாபம் நீங்கும்" என்று சாபமுடிவுங் கூறி, அவ்வகஸ்தியர் முதலானவர்கள் அவரவ ரிருப்பிடத்துக்குச் சென்றார்கள். நகுஷன் அகஸ்தியர் சாபப்படி பெரும்பாம்பாக வனத்தி லிருந்தான்.

# யயாதிராஜன் சரித்திரம்

---

இந்த நகுஷன் உலகத்திலிருக்கும்போது இவனுக்கு யயாதி-சங்கியாதி - பிரயாதி என்று மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் யயாதியென்பவன் ஒன்முகிய கடவுளினது திருவடியை மனதில் நிறுத்தி, இம்மை மறுமையென்னு மிரண்டினது தன்மையை உணர்ந்து, சாத்துவிக ராசஸ தாமஸமென்னு மூன்றில் நன்னிலைக்க னின்று சாத்துவிகத் தன்மையை அதிகமாகக் கொண்டு அறம் - பொருள் - இன்பம் - வீடென்னு நாற்பொருள் களைத் தேர்ந்து, மந்திரிகள் - புரோகிதர் - சேனுதிபதியர் - தூதர்-சாரணர் என்னும் அரசர்க்குப் பொருந்திய கூட்டம் ஐந்தையும் பெற்று, படை - குடி - பொருள் - அமைச்சு - நட்பு - அரண் என்னும் அறுவகைப் பொருள்களையு மடைந்து, நாவல் - இரலி - குசை - கிரவுஞ்சம் - புஷ்கரம் - தெங்கு - கமுகு என்னும் ஏழு தீவுகளும் தன் ஆணையில் நடக்க, இராஜாங்கம் - மக்கள் - சுற்றம் - பொன் - மணி - நெல் - வாகனம் - அடிமை என்னும் அஷ்ட ஐசுவரியத்தைப் பெற்று, கீழவிதேகம் - மேலவிதேகம் - வடவிதே கம் - தென்விதேகம் - வடவிரேபதம் - தென்னிரேபதம் - வட பரதம் - தென்பரதம் - மத்திமகண்டம் என்னும் நவகண்டத் துக்கும் அதிபதியாகி, செங்கோல் - மலை - ஆறு - நாடு - ஊர் - மாலை - புரவி - யானை - முரசு - கொடி என்கிற தசாங்கத்தை வகித்து, கங்கை - யமுனை - சரஸ்வதி - நருமதை - காவேரி - குமரி - கோதாவரி - சிந்து - தாம்பிரபரணி - துங்கபத்திரை - கிருஷ்ணி என்னும் பதினெரு திவ்யநதி தீரங்களிலுஞ் சத்திரங்க ளியற்றி, அன்னதான முதலிய தானங்களை நடாத்தி, தரும தேவதையை நான்கு பாதத்திலேயும் நடப்பித்து, தன்னுயிர் போல் மன்னுயிரையும் பாதுகாத்து மநுசாஸ்திரவிதி பிசகாமல் அரசுசெலுத்தி வந்தான். இன்னும் இந்த யயாதியினுடைய சிறப்பை என் குருவாகிய வேதவியாச மஹாமுனிவரே புகழ்வா ரென்முல், என்னல் அவ்வரசனது சிறப்பை யுரைக்க வசமா? அவ்வளவு சிலாக் கிய சிரேஷ்டனுகிய யயாதி அரசுசெலுத்தி, அசுரர்குல குருவாகிய சுக்கிரபகவான் பெற்ற தெய்வயானை யென்னும் ஸ்திரீயை விவாகஞ்செய்து, அந்தத் தெய்வயானையினிடமாய் இரண்டு புத்திர

ரையும், அசுரர்குலத் தலைவனாகிய விடபன்மன் மகளான சன்மிஷ்டையைக் கூடி அவளிடமாய் மூன்று புத்திரரையும் பெற்றான்" என்று வைசம்பாயனர் உரைக்க ஜனமேஜய மஹாராஜன் கேட்டு வியப்படைந்து, "ஓ ஸ்வாமி! மனுசாஸ்திரவிதி பிசகாமல் அரசுசெலுத்தும் யயாதி மஹாராஜன், பிரம்மகுலஸ்திரீயை மணம் புரிந்தா னென்றுரைத்தீர்கள். பிராமணர் மாத்திரம் மற்ற மூன்று குலத்து ஸ்திரீகளை மணம் புரியலாமென்றும், மூன்று குலப்புருஷர் பிரம்மகுல ஸ்திரீயை மணம்புரியலாகா தென்றும் வேதம் முறையிடுகின்றது. யயாதி பிரம்மகுல சுக்கிராசாரியின் மகளான தெய்வயானையை எவ்வாறு மணம்புரிந்தான்? அசுரர்குலத் தலைவனாகிய விடபன்மன் மகளான சன்மிஷ்டையினிடமாய் எவ்வாறு புத்திரரைப் பெற்றான்? அந்த வரலாற்றை விளங்க உரைக்க வேண்டும்". என்று வேண்ட வைசம்பாயனர் கூறுகிறார்.

"கேளும் ஓ அரசனே! முன்னம் விடபன்மன் என்னும் பெயரையுடைய ஓர் அரக்கன் மிகுந்த பராக்கிரமசாலியாய் உலகத்தில் அரசுசெலுத்தி, சொர்க்கலோகத்தையுங் கைப்பற்றிப் படையெடுத்து, இந்திரனோ டெதிர்த்து யுத்தஞ்செய்தான். இந்திரன் தனது தேவப்படைகளைக்கொண் டெதிர்த்து, அந்த விடபன்மன் என்கிற அரக்கன் ஒருவன் தவிர மற்றவர்களை யெல்லாம் கண்டதுண்டமாகக் கண்டித்து வெற்றிபெற்றான். விடபன்மன் தன் சேனை முறிந்ததையும் இந்திரன் வெற்றிபெற்றதையும் மனதில் நினைத்து அதிக துன்பத்தை அடைந்து தன் குருவாகிய சுக்கிரபகவானிடம் வந்து வணங்கி "ஓ ஐயனே! என் சத்துருவாகிய இந்திரன் என் சேனைகளை அதமாக்கி என்னையும் பாழாக்கினன். உங்களைப்போ லொத்த மஹாத்மா எனக்குச் சொந்தமாயிருந்தும் நான் அபஜயப்பட்டால் உலகம் உங்களைப் பழிக்குமேயன்றி என்னைப் பழிக்காது. ஆகையால் யான் வெற்றியடையும்படி ஓர் உபகாரஞ் செய்யவேண்டும்" என்று வேண்ட, சுக்கிரபகவான் சிரித்து விடபன்மனைப் பார்த்து "ஓ விடபன்மனே! நானென்ன யுத்தரங்கத்துக்கு யோக்கியனா? நான் உன் கருத்தின்படி யுத்தரங்கத்தை மேற்கொண்டால் எனக்குக் குருவென்கிற பட்டம் ஏது? நீ என்னிடம் வந்து முறையிட்டதால் உனக்கு நான் ஓர் உபாயஞ் சொல்லுகிறேன். அஃதென்னென்னில், இப்போது மடிந்த உன் சேனைகளனைத்தையும் இனி

முடிகிற சேனைகளையும் எழுப்பித் தருகிறேன். அதனால் நீ தேவர்களை வெற்றிபெறுவாய்" என்று விளம்ப, விடபன்மன் பரமானந்தமடைந்து, "ஓ ஐயனே! இவ்வளவு சகாயஞ் செய்தால் இந்திராதி தேவர்களை யெல்லாம் சண்டமாருதத்தைக் கண்ட மேகம் பறப்பதுபோல் பறக்க அடித்து வெற்றிபெறுகிறேன்" என்று வணங்க, சுக்கிரபகவான் தாம் கூறியபடி இறந்த சேனைகளைச் சஞ்சீவி மந்திரத்தைச் சொல்லி எழுப்பிவிட்டார். விடபன்மன் அந்தச் சேனைகளைக்கொண்டு இந்திரனை எதிர்த்து, தேவப்படைகளை முறிய அடித்து வெற்றிபெற்று இனிது வீற்றிருந்தான். இந்திரன் மிகுந்த வருத்தமடைந்து, "சுக்கிராசாரியரா லல்லவோ விடபன்மன் வெற்றி பெற்றான். நமது குருவால் நாம் வெற்றியடைய வேண்டும்" என்று நினைத்து, தன் குருவாகிய வியாழபகவானிடத்திற் சென்று வணங்கி, "ஐயனே! என் சத்துருவாகிய விடபன்மன் சுக்கிராசாரியரால் வெற்றி பெற்றான். சந்திர சடாதர சாம்பவமூர்த்திக்கு ஒப்பாகிய தாங்கள் எனக்குக் குருவாயிருந்தும், நான் வெற்றியடையாதிருந்தால் உலகம் யாரை இகழும்? ஐயனே! கிருபைகூர்ந்து நான் வெற்றியடைய இரட்சிக்க வேண்டும்" என்று வேண்ட, வியாழபகவான் மிகுந்த வருத்தமடைந்து, 'ஓ தேவராஜனே! என்னால் யுத்தஞ்செய்யச் சக்தியுண்டா? இல்லையே. சுக்கிரபகவான் மிகுந்த தவஞ்செய்து காளகண்ட திரிநேத்திரனை பரமனிடத்துச் சஞ்சீவி மந்திரத்தைப் பெற்றான். அந்த மந்திரத்தினால் இறந்தவர்களை யெல்லாம் எழுப்பிவிடுகிறான். அதனாலே விடபன்மன் வெற்றியடைந்தான். அந்த மந்திரம் சுக்கிரபகவானொருவனுக்கேயன்றி மற்றச் சொர்க்கமத்திய பாதாள லோகங்களி லிருப்பவர்களுக்குள் இல்லை. நானென்ன செய்வேன்?" என்றார். அதைக் கேட்ட இந்திரன் சுக்கிராசாரி கற்றிருக்கிற மந்திரத்தை எவ்விதத்திலாவது கிரகித்துக் கொண்டுவரத்தக்க சாமர்த்தியத்தை யுடையவர் விண்ணுலகத்தி லில்லையா?" என்று அங்கிருப்பவர்கள் வதனத்தை நோக்கினான். அங்கிருந்தவர்களில் வியாழபகவானுடைய புத்திரனாகிய கசன் இந்திரனைப் பார்த்து "தேவராஜனே! நீ வருத்தப்பட வேண்டியதில்லை. நான் அந்தச் சுக்கிராசாரியிடத்திற் சென்று பணிசெய்பவனாயிருந்து, அவர்க்கு என்மேல் கிருபை வரும்படி நடந்து, அந்த மந்திரத்தை அவர் அநுக்கிரகஞ்செய்ய யான்

கற்றுக்கொண்டு வருகிறேன்" என்று உறுதிகூறிச் சுக்கிராசாரியா ரிடத்துக்கு வந்து அவரைக்கண்டு வணங்கி 'ஐயனே! உமதிடத் தில் பணிவிடைக்காரனு யிருக்கிறேன். என்மேல் என்றைக்கு மிகுந்த அன்பு கூருகிறீர்களோ அன்றைய தினத்தில் மஹா அருமையான தவத்தைச்செய்து சாம்பவ மூர்த்தியிடத்துப் பெற்ற சஞ்சீவி மந்திரத்தை எனக்குக் கிருபை செய்யவேண்டும்" என்று புகலச் சுக்கிராசாரி தம்மனதில் கனவருத்தமடைந்து, "நாம் அந்தச் சஞ்சீவி மந்திரத்தை அருமையான தவஞ்செய்து பெற்றோம். அம்மந்திரத்தினு லல்லவா அசுரர்கள் நம்மிடத்தில் அன்புடைய வராயிருக்கிறார்கள். அந்த மந்திரத்தை இவனுக்குச் சொல்லி விட்டால் அதன்மேல் அந்த மந்திரம் நமக்குப் பலிக்காது. அந்த மந்திரத்தைச் சொல்லாதிருக்கலாமென்றால் எப்படியாவது பணி விடைக்காரன்மேல் சந்தோஷப்படவரும். அந்தக் காலத்தில் அவசியம் சொல்லவேண்டியதுதான். இவனைப் பணிவிடை செய்ய வேண்டாமென்பது, தருமசாஸ்திர விரோதமாகும்" என்று தம் மனதுக்குள் நினைத்து கஜனைப் பார்த்து "கஜனே! நீ தேவ குல குருவின் புத்திரன். நீயே வந்து பணிவிடைக்காரனு யிருக் கிறே னென்றதினுல், நான் உன்னை வைத்துக்கொள்ள வேண்டியது தான். ஆனுல் நீ எனக்குச் சந்தோஷம்வர நடக்கிறதினம் என் றைக்கோ அன்றையத் தினம் உன்கருத்து மகிழும்படி செய் கிறேன்" என்று சொல்லி அந்தக் கஜனைப் பணிவிடைக்கார னுய் வைத்துக்கொண்டார்.

அதுமுதல் கஜன் அந்தச் சுக்கிராசாரிக்கு எல்லாப் பணி விடைகளையும் செய்துவருவதுமன்றி, அந்தச் சுக்கிராசாரியின் புத் திரியாகிய தெய்வயானையோடு நித்தம் வேதசாஸ்திரங்களைப் பாராயணஞ்செய்து வருவான். இப்படிச் செய்துவந்ததினுலே யும் நல்ல அழகுடையவனு யிருந்ததினுலேயும் இந்தக் கஜன் பேரில் தெய்வயானை மிகுந்த காதல் கொண்டாள். இப்படிச் சில காலம் சென்றபின்பு, சுக்கிராசாரியாரிடத்துக் கஜன் பணிவிடைக் காரனு யிருப்பதை அசுரர்தலைவராகிய விடபன்மன் என்பவன் கேள்வியுற்று, தன் தூதர்களை அழைத்து, "தூதர்களே! நமது குரு கற்றிருக்கிற சஞ்சீவி மந்திரத்தைக் கற்றுக்கொண்டுபோகக் கஜன் என்கிறவன் அவருக்குப் பணிவிடைக்காரனுய் அவ்வாசாரி யாரிடத்தி லிருக்கிறுன். ஆகையால் நீங்கள் அந்தச் சுக்கிராசாரிக்

குத் தெரியாமல் அந்தக் கஜனைக் கொன்றுவிடுங்கள்" என்று உறுதியான கட்டளையிட்டான். தூதர் அக்கட்டளையைச் சிரமேற் கொண்டு, கஜனைக் கொலைசெய்யச் சமயம் பார்த்திருந்தார்கள். ஒருநாள் கஜன் தருப்பை சமித்தை முதலானவைகளைக் கொய்து வரக் காட்டிற்குச் சென்றான். அந்தச் சமயம் பார்த்து அரக்கர் வந்து கஜனைச் சூழ்ந்து கழுத்தை யறுத்துப் பூமியிற் புதைத்துப் போயினர். தெய்வயானை க்ஷணப்போதாயினும் கஜனைக் காணாமல் இருக்கமாட்டாள். அன்றையத்தினம் வருகிறவேளை தப்பியும் கஜன் வராதிருக்கவே அவள் மிகுந்த வருத்தமடைந்து, தன் தந்தையாகிய சுக்கிராசாரியாரிடத்து வந்து வணங்கி, "ஓ ஐயனே! தங்களுக்குப் பணிவிடை செய்திருக்கிற வேளைபோக மற்றவேளை என்னோடிருந்து வேத சாஸ்திரங்களைப் படித்துவருங் கஜன் இன்றையத்தினம் இன்னும் வரவில்லை. அந்தக் கஜனை எங்கனுப்புவித்தீர்கள்?" என்று வினவி "அந்தக் கஜனை விரைவில் வரும்படி கிருபை கூருமையா" என்று வேண்டினள். சுக்கிராசாரி தமது ஞான திருஷ்டியினால் கஜன் அடைந்த கதியைக் கண்டு கனவருத்தமுற்று, சஞ்சீவி மந்திரத்தை யுச்சரித்து இறந்த கஜனை எழுப்பினர். உடனே கஜன் நித்திரையிலிருந்து எழுந்தவன்போலெழுந்து, சுக்கிராசாரியரிடம் வந்து வணங்கித் தெய்வயானையிடம் சென்றான். தெய்வயானை மிகுந்த மகிழ்ச்சியடைந்து "தேவகுரு புத்திரா! இன்றையத்தினம் எங்குற்றாய்? இந்நேரம் வரையில் வராதிருந்ததற்குக் காரண மென்ன?" என்று வினவ கஜன் "நான் காட்டிற் சென்றவிடத்தில் களைப்பினால் அயர்ந்து தூங்கிவிட்டேன்" என்றுகூறி, முன்போல் தன்வேத முயற்சியிலிருந்தான். இப்படிச் சிலநாட் சென்றபின்பு அசுரர்குலத்தலைவனான விடபன்மன் கஜன் பிழைத்ததைக்கேட்டு, கொலைத்தொழிலுக்குரிய அசுரரிற் சிலரை அழைத்து, 'ஓ அசுரரே! முன்னம் ஏவலாளிகளால் இறந்த கஜன் நமது குருவினால் பிழைத்திருக்கிறான். நீங்கள் சென்று நமது குருவுக்குத் தெரியாமல் அந்தக் கஜனைப் பிடித்துக் கொலைசெய்து, அவனை மதுவோடு சேர்த்து நமது குருவுக்கே அந்த மதுவைக் கொடுத்துப் பானஞ்செய்யச் செய்வித்து வாருங்கள்" என்று கட்டளையிட்டான். அசுரர் அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு சென்று, சமயம் பார்த்து அக்கஜனைப் பிடித்துக் கொலைசெய்து அவனை மதுவிற் கலந்து

அந்த மதுக்குடத்தைச் சுக்கிராசாரியரிடத்துக் கொடுத்து, "ஐயனே! இந்தமது திவ்யமானது. தங்களுக்குப் பாத காணிக்கையாகக் கொண்டுவந்த எங்கள் பேரில் கிருபை கூர்ந்து இந்த மதுவைத் தாங்கள் உட்கொள்ளவேண்டும்" என்று வேண்ட குடியருக்குக் கள் வலியக்கிடைத்தால் பிரம்மானந்தத்தை அடைந்தவரைப்போல் அதிக மகிழ்ச்சியைக் கொண்டு முன்பின் யோசிக்காமல் புசிப்பது வழக்கமாதலால், இந்தச் சுக்கிராசாரியும் முன் பின் யோசியாமல் அந்த மதுக்குடத்தை யெடுத்து மடமடவென்று வாயில் விட்டுக்கொண்டார். பின்பு அசுரர் சென்று தமது இறைவனுக்கு நடந்ததைக் கூறினார்கள்.

இங்கே சுக்கிரபகவான் மதுவினால் அதிக மயக்கமடைந்திருக்கின்றார். தெய்வயானை கஜன் வராதிருப்பதைக் கண்டு தன் தந்தை இடத்து வந்து வணங்கி, "ஐயனே! கஜன் ஏன் இன்னும் வரவில்லை? அவன் எங்கு சென்றான்? விரைவில் அழைப்பியும்" என்று வேண்டினாள். சுக்கிராசாரி தெய்வயானையைப் பார்த்து "அம்மணி! பணிவிடை செய்பவனாகிய கஜனை நீ ஏன் அடிக்கடி வந்து கேட்கிறாய்? போனவன் வருகிறான்: உனக்கென்ன? நீ போய் வீட்டிலிரு" என்று கடிகடுத்துச் சொல்ல, தெய்வயானை மறுபடியுந் தந்தையை வணங்கி, "ஓ ஐயனே! சொர்க்கமத்திய பாதாளலோகத்தி லிருக்கிறவர்களில் உங்களைச் சகலகலை வல்லவரென்று மும்மூர்த்திகளும் மதித்திருக்க, தாங்கள் இப்போது வழங்கிய சொற்களை நோக்கினால் ஏதோ கிஞ்சித்து மதிமயங்கி இருக்கிறதாகத் தோன்றுகின்றது. ஏனென்றால் - எல்லாப்பொருள்களினும் சிறந்தது உயிர். அந்த உயிரினுஞ் சிறந்தது சிநேகம். அந்தச் சிநேகத்தினும் எனக்குக் கஜன் பாலிய சினேகம். அவனைப் பிரிந்தருக்க என்மன மென்ன கல்லா?" என்று மிகுந்த இரக்கத்தோடு இனியவசன முரைக்கச் சுக்கிராசாரி மகிழ்ந்து தெய்வயானையைப் பார்த்து, "ஓ அம்மணி! நீ வருத்தப்படவேண்டாம். அந்தக் கஜன் எங்கிருந்தாலும் அழைப்பிக்கிறேன். நீ வீட்டிற்குச் செல்" என்று விடைகொடுத்து, கஜன் எங்கிருக்கிறானென்று தனது ஞான திருஷ்டியில் நோக்கினார். அப்படி நோக்கும்போது சொர்க்க மத்திய பாதாளமென்னும் மூன்று தலங்களிலும் கஜனைக் காணாமல், எங்குற்றான் கஜனென்று ஐயுற்றுத் தம் யாக்கையுள் நோக்கினார். கஜன் தம் வயிற்றில் அடங்கியிருப்பதை நோக்கி, கள்

வேறியினால் புத்திமயங்கித் தமக்குக் கெடுதி வருவதை யோசிக்காமல் சஞ்சீவி மந்திரத்தை யுச்சரித்தார். உடனே கஜன் அவர் வயிற்றிற்றானே உயிர்பெற்றெழுந்தான். அதற்குள் சுக்கிராசாரியை அடிமையாகக் கொண்டிருந்த கள்வெறியும் நீங்கிற்று. சுக்கிராசாரி சுயபுத்தியை அடைந்து, வயிற்றில் கஜனிருப்பதை நோக்கி, 'அடா! மோசம் வந்தது. நமது சிஷ்யனாகிய விடபன்மன் தனக்கு நன்மைகிடைக்க ஒன்று நினைத்தான். அவனுக்குக் கெட்டகாலமாதலால் அந்த நினைப்பே கெடுதியானதுமன்றி, நமக்கும் கெடுதி நேரிட்டது. இனி என்னசெய்வது?" என்று துணிந்து வயிற்றிலிருக்கும் கஜனை அழைத்து "உன் கருத்தினபடி சஞ்சீவி மந்திரத்தைக் கற்பிக்கிறேன். எனக்கொரு உபகாரஞ்செய். அஃதென்னெனில் என் வயிற்றைக் கிழித்துக்கொண்டு தான் நீ வெளியில் வரவேண்டும். நீ வெளியில் வந்து சஞ்சீவிமந்திரத்தைச் சொல்லி மறுபடியும் என்னை எழுப்பிவிடு. அதுதான் எனக்குச் செய்யவேண்டிய உபகாரம்" என்றுகூற கஜன் சம்மதித்தான். சுக்கிராசாரி அவனுக்குச் சஞ்சீவிமந்திரத்தை உபதேசித்தார். கஜன் அங்கிருந்த வண்ணம் சஞ்சீவி மந்திரத்தை உணர்ந்து, சுக்கிராசாரியின் வயிற்றைக்கீறிக் கொண்டு வெளியில் வந்து, முன் போலவே சுக்கிராசாரியை எழுப்பி, அவர்க்கு வந்தனை வழிபாடுசெய்து தெய்வயானை யிடத்துச் சென்றான். தெய்வயானை மிகுந்த மகிழ்வடைந்து எதிர் வந்து, "ஓ தேவகுரு புத்திரா? இந்நேரம் எங்குற்றாய்?" என்று வினவ கஜன் தெய்வயானையைப் பார்த்து "ஓ கன்னிகையே! நான் சென்ற விடத்தில் கிஞ்சித்து நேரஞ்சென்றது" என்று ஒரு போக்காய் விடை கொடுத்து விட்டுச் சிலகாலம் பணிவிடைக்காரனாயிருந்து, ஒரு நாள் சுக்கிராசாரியை வணங்கி, "ஓ நாதனே! நான் உத்தேசித்துவந்த பொருள் தங்கள் கிருபையினால் கிடைத்தது. இனி என்னிருப்பிடத்துக்குச் செல்ல விடை கொடுக்க வேண்டும்" என்று வேண்ட சுக்கிராசாரி மகிழ்ந்து, "அப்பா கஜனே! நீ சுகமாக உன்னிருப்பிடத்துக்குச் செல்" என்று விடைகொடுத்தார். கஜன் சுக்கிராசாரியை வணங்கித் தெய்வயானையிடத்து வந்து, "ஓ கன்னிகையே! நான் நாடிவந்த பொருள் சித்தியாயிற்று. இனி என்னிருப்பிடத்துக்குச் செல்கிறேன். மகிழ்வுடன் விடைகொடு" என்றுரைக்க, தெய்வயானை திடுக்கிட்டு, "ஆ! இதென்ன ஆச்சரியம்? நாம் நினைத்திருக்கிற நினைப்பென்ன? இந்தக் கஜன் தன்னிருப்

அந்த மதுக்குடத்தைச் சுக்கிராசாரியரிடத்துக் கொடுத்து, "ஐயனே! இந்தமது திவ்யமானது. தங்களுக்குப் பாத காணிக் கையாகக் கொண்டுவந்த எங்கள் பேரில் கிருபை கூர்ந்து இந்த மதுவைத் தாங்கள் உட்கொள்ளவேண்டும்" என்று வேண்ட குடியருக்குக் கள் வலியக்கிடைத்தால் பிரம்மானந்தத்தை அடைந் தவரைப்போல் அதிக மகிழ்ச்சியைக் கொண்டு முன்பின் யோசிக் காமல் புசிப்பது வழக்கமாதலால், இந்தச் சுக்கிராசாரியும் முன் பின் யோசியாமல் அந்த மதுக்குடத்தை யெடுத்து மடமட வென்று வாயில் விட்டுக்கொண்டார். பின்பு அசுரர் சென்று தமது இறைவனுக்கு நடந்ததைக் கூறினார்கள்.

இங்கே சுக்கிரபகவான் மதுவினால் அதிக மயக்கமடைந்திருக் கின்றார். தெய்வயானை கஜன் வராதிருப்பதைக் கண்டு தன் தந்தை இடத்து வந்து வணங்கி, "ஐயனே! கஜன் ஏன் இன்னும் வர வில்லை? அவன் எங்கு சென்றான்? விரைவில் அழைப்பியும்" என்று வேண்டினாள். சுக்கிராசாரி தெய்வயானையைப் பார்த்து "அம்மணி! பணிவிடை செய்பவனாகிய கஜனை நீ ஏன் அடிக்கடி வந்து கேட்கிறாய்? போனவன் வருகிறான்: உனக்கென்ன? நீ போய் வீட்டிலிரு" என்று கடுகடுத்துச் சொல்ல, தெய்வயானை மறுபடியுந் தந்தையை வணங்கி, "ஓ ஐயனே! சொர்க்கமத்திய பாதாளலோகத்தி லிருக்கிறவர்களில் உங்களைச் சகலகலை வல்லவ ரென்று மும்மூர்த்திகளும் மதித்திருக்க, தாங்கள் இப்போது வழங் கிய சொற்களை நோக்கினால் ஏதோ கிஞ்சித்து மதிமயங்கி இருக் கிறதாகத் தோன்றுகின்றது. ஏனென்றால் - எல்லாப்பொருள் களிலும் சிறந்தது உயிர். அந்த உயிரினுஞ் சிறந்தது சிநேகம். அந்தச் சிநேகத்தினும் எனக்குக் கஜன் பாலிய சினேகம். அவனைப் பிரிந்தருக்க என்மன மென்ன கல்லா?" என்று மிகுந்த இரக்கத் தோடு இனியவசன முரைக்கச் சுக்கிராசாரி மகிழ்ந்து தெய்வ யானையைப் பார்த்து, "ஓ அம்மணி! நீ வருத்தப்படவேண்டாம். அந்தக் கஜன் எங்கிருந்தாலும் அழைப்பிக்கிறேன். நீ வீட்டிற்குச் செல்" என்று விடைகொடுத்து, கஜன் எங்கிருக்கிறானென்று தனது ஞான திருஷ்டியில் நோக்கினார். அப்படி நோக்கும்போது சொர்க்க மத்திய பாதாளமென்னும் மூன்று தலங்களிலும் கஜனைக் காணா மல், எங்குற்றான் கஜனென்று ஐயுற்றுத் தம் யாக்கையுள் நோக் கினார். கஜன் தம் வயிற்றில் அடங்கியிருப்பதை நோக்கி, கள்

வேறியினால் புத்திமயங்கித் தமக்குக் கெடுதி வருவதை யோசிக்காமல் சஞ்சீவி மந்திரத்தை யுச்சரித்தார். உடனே கஜன் அவர் வயிற்றிற்றானே உயிர்பெற்றெழுந்தான். அதற்குள் சுக்கிராசாரியை அடிமையாகக் கொண்டிருந்த கள்வெறியும் நீங்கிற்று. சுக்கிராசாரி சுயபுத்தியை அடைந்து, வயிற்றில் கஜனிருப்பதை நோக்கி, 'அடா! மோசம் வந்தது. நமது சிஷனாகிய விடபன்மன் தனக்கு நன்மைகிடைக்க ஒன்று நினைத்தான். அவனுக்குக் கெட்டகாலமாதலால் அந்த நினைப்பே கெடுதியானதுமன்றி, நமக்கும் கெடுதி நேரிட்டது. இனி என்னசெய்வது?" என்று துணிந்து வயிற்றிலிருக்கும் கஜனை அழைத்து "உன் கருத்தினபடி சஞ்சீவி மந்திரத்தைக் கற்பிக்கிறேன். எனக்கொரு உபகாரஞ்செய். அஃதென்னெனில் என் வயிற்றைக் கிழித்துக்கொண்டு தான் நீ வெளியில் வரவேண்டும். நீ வெளியில் வந்து சஞ்சீவிமந்திரத்தைச் சொல்லி மறுபடியும் என்னை எழுப்பிவிடு. அதுதான் எனக்குச் செய்யவேண்டிய உபகாரம்" என்றுகூற கஜன் சம்மதித்தான். சுக்கிராசாரி அவனுக்குச் சஞ்சீவிமந்திரத்தை உபதேசித்தார். கஜன் அங்கிருந்த வண்ணம் சஞ்சீவி மந்திரத்தை உணர்ந்து, சுக்கிராசாரியின் வயிற்றைக்கீறிக் கொண்டு வெளியில் வந்து, முன் போலவே சுக்கிராசாரியை எழுப்பி, அவர்க்கு வந்தனை வழிபாடுசெய்து தெய்வயானை யிடத்துச் சென்றான். தெய்வயானை மிகுந்த மகிழ்வடைந்து எதிர் வந்து, "ஓ தேவகுரு புத்திரா? இந்நேரம் எங்குற்றாய்?" என்று வினவ கஜன் தெய்வயானையைப் பார்த்து "ஓ கன்னிகையே! நான் சென்ற விடத்தில் கிஞ்சித்து நேரஞ்சென்றது" என்று ஒரு போக்காய் விடை கொடுத்து விட்டுச் சிலகாலம் பணிவிடைக்காரனாயிருந்து, ஒரு நாள் சுக்கிராசாரியை வணங்கி, "ஓ நாதனே! நான் உத்தேசித்துவந்த பொருள் தங்கள் கிருபையினால் கிடைத்தது. இனி என்னிருப்பிடத்துக்குச் செல்ல விடை கொடுக்க வேண்டும்" என்று வேண்ட சுக்கிராசாரி மகிழ்ந்து, "அப்பா கஜனே! நீ சுகமாக உன்னிருப்பிடத்துக்குச் செல்" என்று விடைகொடுத்தார். கஜன் சுக்கிராசாரியை வணங்கித் தெய்வயானையிடத்து வந்து, "ஓ கன்னிகையே! நான் நாடிவந்த பொருள் சித்தியாயிற்று. இனி என்னிருப்பிடத்துக்குச் செல்கிறேன். மகிழ்வுடன் விடைகொடு" என்றுரைக்க, தெய்வயானை திடுக்கிட்டு, "ஆ! இதென்ன ஆச்சரியம்? நாம் நினைத்திருக்கிற நினைப்பென்ன? இந்தக் கஜன் தன்னிருப்

பிடத்துக்குச் செல்கிறேனென்று நம்மிடத்தில் வந்து விடை கேட்கிறான். நமது கருத்தை வெளியிட்டால் அதன் மேல் இந்தக் கஜன் தன்னிருப்பிடத்துக்குச் செல்லான்" என்று மனதில் மதித்து, அந்தக் கஜனைப் பார்த்துக் கூறுகிறாள்.—

"ஓ கஜனே! நீ தேவகுருவின் புத்திரன். நான் அசுரர் குருவின் புத்திரி. நாமிருவரும் சமம். என்னை விவாகஞ் செய்துகொண்டு நீ இவ்விடத்திலேயே யிருந்து எல்லா நலமு மனுபவி. ஒரு வேளை இந்த விடத்திலிருக்க உனக்கு விருப்பமில்லா திருந்தால், என் தந்தையோடு சொல்லி உன் தந்தையையும் அழைப்பித்து என்னை விவாகஞ் செய்துகொண்டு, பின்பு உன் இருப்பிடத்துக்குச் செல்" என்று மிகுந்த பரிதாபத்துடனே இனிய வசனங்களினால் வேண்டிக் கொண்டாள். கஜன் இவ்வார்த்தைகளைக் கேட்டு இரண்டு கரங்களினால் செவிகளை மூடிக்கொண்டு "ஓ அம்மணி! வேதசாஸ்திரங்களைக் கற்றுணர்ந்து என்னிலும் எண்மடங்கதிகமான விவேகத்தைப் பெற்றிருந்தும், நீ என்ன சுத்தமவுடிகர்போல வசனிக்கிறாய்? உன் தந்தையிடத்து அநேகவேத சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்ததுமன்றி, யாவராலும் பெறுதற் கருமையா யிருக்கிற சஞ்சீவி மந்திரத்தையும் பெற்றேன். உலகத்தில் மக்களைப் பெற்றோன் - இடர் தனைத் தீர்த்தோன் - அன்புடன் அன்னம் அளித்து இரக்ஷித்தோன் - நூலைக் கற்பித்தோன் - ஒன்றை யுபதேசித்தோன் ஆகிய இந்த ஐந்துபேரும் தந்தை யென்று வேதங்களில் முறையிட்டிருக்க, அதை யுணர்ந்த நான் உன்னை விவாகஞ் செய்வது தகுதியா? என் குருபுத்திரியாகையால் நீ எனக்குத் தங்கையாயினை" என்று கூறினான். தெய்வயானை, "அடடா!! மோசம் வந்தது. நாம் இலவைக்காத்த கிளிபோ லாயினோம்" என்றேங்கி அனலிடு மெழுகுபோல் மனம் உருகி, நமது மொழியை மறுத்தா னென்று கோபங் கொண்டு கஜனைப்பார்த்து "ஓ கஜனே! என் கருத்துக்கு விரோதப்பட்டு என் மொழியை மறுத்தமையால், நீ விசுவாச காதகனானாய். நீ என் தந்தையிடத்திற் கற்ற சஞ்சீவி மந்திரம் உனக்குப் பலிக்காமற் போகக்கடவது" என்று சாபமிட்டாள். கஜன் இந்தச் சாபத்தைக் கேட்டு, "ஓ குருபுத்திரியே! நீ இட்ட சாபப்படிக்கு மந்திரம் எனக்குப் பலியாமற் போனாற் போகட்டும். என்னிடத்தில் கற்றுக் கொண்டவர்க்குப் பலிக்குமே அது போதும். நீ தருமசாஸ்திர முதலியவற்றைக் கற்றுணர்ந்தும் அந்தச் சாஸ்தி

நத்துக்கு விரோதமாக என்னைச் சபித்தபடியால், உன்னை மறை யவர் மணம் புரியாமல் பூலோகத்தரசர் மணம் புரியக்கடவது" என்று சபித்துவிட்டுத் தன்னிருப்பிடத்துக்குச் சென்று தந்தை தாளில் வணங்கி, சஞ்சீவி மந்திரத்தை அவருக்கு உபதேசஞ் செய்து, அவரால் இந்திரனுக்கு வெற்றியடைவித்தான்.

இங்கே தெய்வயானை அசுரர் குலத்தலைவராகிய விடபன்மன் புத்திரி சன்மிஷ்டையினோடு சிநேகஞ் செய்து, பந்தாடல் - கழங் காடல் - மலர் கொய்தல் முதலாகிய விளையாட்டுத் தொழில் களில் பிரியாமல் விளையாடிவருவாள். ஒரு நாள் தெய்வயானை யும் சனமிஷ்டையும் சோலையிற் சென்று மலர் கொய்து விளை யாடி, அச் சோலையிலிருக்கும் தடாகத்தில் நீராடினார்கள். அப் போது ஒரு சுழற்காற்றுத் தோன்றி, கரையில் வைத்திருக்கும் வஸ்திரங்களை யெல்லாம் ஒன்றாகக் கலக்கச் செய்தது. அதனால் சன்மிஷ்டையினுடைய தாதிகள் தங்களுக்குக் கிடைத்த துகிலை யெடுத்து உடுத்துங் கொண்டார்கள். சன்மிஷ்டை யென்பவள் தெய் வயானையின் வஸ்திரத்தை யெடுத்து உடுத்துக் கொண்டாள். தெய் வயானைக்கு அத்தாதிகள் சன்மிஷ்டையின் வஸ்திரத்தை யெடுத் துக்கொண்டு போய்க் கொடுத்தார்கள். அதைப் பார்த்து "இது என் வஸ்திரமல்ல; இது சன்மிஷ்டையின் வஸ்திரம்" என்று கூறி, "இவ்வஸ்திரத்தை வைத்து என் வஸ்திரத்தைக் கொண்டு வாருங் கள்" என்று தாதிகளுக்குக் கட்டளை யிட்டாள். தாதிகள் தெய் வயானையை வணங்கி, "ஓ அம்மணி! உன் வஸ்திரத்தைச் சன் மிஷ்டை தரித்திருக்கிறாள்" என்று சொல்லினர். அதைக் கேட்டு "இவ்வஸ்திரத்தை நான் கையினாலேயுந் தொடேன்" என்று அவள் மறுத்தாள். இந்தச் செய்தி சன்மிஷ்டைக்குத் தெரிந்து தெய் வயானை யருகில் வந்து, "ஓ குருபுத்திரியே! சொற்பமாகிய உன் வஸ்திரத்தை நான் உடுத்து என்னுடைய உயர்ந்த வஸ்திரத் தைக் கொடுத்தால் ஏன் வெறுக்கிறாய்?" என்று வினவ, தெய்வ யானை சன்மிஷ்டையைப் பார்த்து, "ஓ சன்மிஷ்டாய்! எப்படி யிருந்த போதிலும் நீ ராஜ புத்திரிதானே! நான் உன் தந்தை யின் குருபுத்திரி. மேலும் நான் பார்ப்பனி! நீ யுடுத்திய அழுக்கு வஸ்திரத்தை நான் உடுத்துக்கொள்வேனா?" என்றனள். சன்மிஷ்டை இந்த வசனங்களைக் கேட்டு மிகுந்த சினங்கொண்டு, "ஓ குரு புத்திரியே! கோடிவித்தை கற்றும் உன் தந்தை என் தந்தை

யிடத்து வந்து கையேந்தி நிற்கிறார்! நீ என்ன இவ்வளவு இறுமாப்படைந்து என்னை அற்பமாக எண்ணி என் வஸ்திரத்தை இகழ்ந்தாய்? உனக்கு அவ்வளவு வாயா?" என்று கடுகடுத்துச் சீறி தன் தாதியரோடு தானும் அந்தத் தெய்வயானையைப் பிடித்து ஒரு பாழுங்கிணற்றில் வீழ்த்திவிட்டுப் போனாள். இங்கே கிணற்றில் விழுந்த தெய்வயானை அக்கிணற்றின் அருகில் முளைத்துப் படர்ந்திருக்கும் ஒரு கொடியைப் பற்றிக்கொண்டு, பிராண பயமில்லாமல் தப்பி மிகுந்த பயத்தையடைந்து, உள்ளம் நடுங்கித் துக்கித்துக்கொண் டிருந்தாள். அந்தச் சமயத்தில் யயாதிமஹாராஜன் வேட்டைக்கு வந்து நல்ல ஜலந்தேடி, இந்தத் தெய்வயானை விழுந்திருக்கிற கிணற்றை எட்டிப்பார்த்து, அக்கிணற்றிலிருந்த தெய்வயானையைக் கண்டு திடுக்கிட்டு, "ஓ பெண்கள் நாயகமே! நீ யார்? உன் இருப்பிடம் எது? உன் தந்தை யாவர்? இக்கிணற்றில் விழுந்திருக்கவேண்டிய காரணமென்ன?" என்று கேட்க, தெய்வயானை அரசனைப் பார்த்து "ஓ அரசனே! நான் சுக்கிராசாரியின் புத்திரியாகிய தெய்வயானை" என்று சொல்லி சன்மிஷ்டை தன்னைக் கிணற்றில் தள்ளிவிட்டுப்போன விருத்தாந்தத்தைச் சொல்லாமல் வேறொருகாரணத்தைச் சொல்லி "என்னைக் கரையேற்றும்" என்று வேண்டினாள். அரசன் வியப்படைந்து, புயலனைய தன் கரத்தால் தெய்வயானையினது மலர்போன்ற கரத்தைப்பற்றி எடுத்துக் கரையிற் சேர்த்து, உன்னிருப்பிடத்துக்கு நீ செல்" என்று விடை கொடுத்துவிட்டு நால்வகைச் சேனையோடு நகரம் வந்து சேர்ந்தான்.

இங்கே தெய்வயானை ஒரு சோலையில் வந்து தன்னந்தனியே இருந்து மிகுந்த துன்பத்தை அடைந்தவளாகி "நாம் சந்திரசடாதர சாம்பமூர்த்திக்கு ஒப்பாகிய சுக்கிராசாரியின் புத்திரியாயிருந்தும், ஓர் அசுரன்மகள் சன்மிஷ்டை நம்மைக் கிணற்றில் தள்ளவும் நாம் பூலோகத் தரசர்களில் யாரோ ஒரு மஹாராஜனது வலக்கைபற்றி வெளியில் வரவு மாயிற்றே. நாம் இதுவரைக்கும் ஒரு புருஷனைத் தொட்டறியோம். அப்படி இருந்தும் பூலோகத்தரசன் நம்மைத் தொட்டான். இனி அந்த அரசனைத்தான் நாம் மணம்புரியவேண்டும். அவனைவிட்டு மற்றொருவரை மணம் புரிந்தால் கற்புக் கழிவுவரும். அதென்ன நாம் பிராமண ஸ்திரீயாயிருந்தும் நமக்கு இவ்வகைப்பட்ட வினை வாய்ந்தது?

இவையெல்லாம் வியாழபகவானுடைய புத்திரனாகிய கஜனிட்ட சாபத்தின் பயனேயாம்" என்று தீர்மானித்து, பின்பு சன்மிஷ்டைசெய்த செய்கையை நினைத்து கனவருத்த மடைந்து ஓர் மரத்தருகி லிருந்தாள். அப்போது சன்மிஷ்டையின் தந்தையாகிய விடபன்மனுடைய சாரதி ஏதோ ஒரு காரியார்த்தமாய் அச்சோலையில் வந்து, இந்தத் தெய்வயானையைக் கண்டு மிகுந்த ஆச்சரியமடைந்தவனாய் அந்த அம்மானை வணங்கி, "அம்மணி! நீ எங்கள் அரசனுடைய குருபுத்திரியல்லவா? இந்த இடத்தில் தனியே இருக்கிற காரண மென்ன?" என்று வினவினான். தெய்வயானை அந்தச் சாரதியைப் பார்த்து, "ஓ சாரதி! உன் அரசன் மகளும் நானும் நீராட இவ்வனத்துக்கு வந்தோம். வந்த விடத்தில் என் சேலையை உன்னரசன் மகள் உடுத்துக்கொண்டு தன் சேலையை எனக்குக் கொடுத்தாள். அதை உடுத்துக்கொள்ள மனஞ் சகியாமல் அச்சேலையை வேண்டாமென்று நான் மறுத்தேன். அதன்மேல் அவள் கோபங்கொண்டு என்னை இந்தக் கிணற்றில் தள்ளி விட்டுப் போய்விட்டாள். இந்தச் செய்தியை நீ என் தந்தைக்கு மாத்திரம் தெரியப்படுத்துவாயானால் இப்போது நானடைந்திருக்கும் துன்பத்தை நீக்கினபலன் உன்னைச் சேரும். இவ்வளவு உபகாரஞ்செய்" என்று சொல்ல, சாரதி சம்மதித்து விடைபெற்றுச் சுக்கிராசாரியரிடஞ் சென்று வணங்கி, தெய்வயானை கூறியவற்றை ஆதியோடந்தமாகச் சொல்லித் தன்னிருப்பிடத்துக்குச் சென்றான். சுக்கிராசாரி திடுக்கிட்டு, "நமது புத்திரியைச் சன்மிஷ்டை கிணற்றில் தள்ளிவிட்டாளா? ஐயோ நாம் தவத்தாற் பெற்ற புத்திரியாயிற்றே. அவளுக்கு இந்தக்கதி வந்ததை யோசித்தால் இதைவிட ஆச்சரிய மென்ன இருக்கின்றது" என்று வருத்தமடைந்து அதிவேகமாய் அந்தத் தெய்வயானை யிருக்கும் சோலையில் வந்து, புத்திரியைக் கண்டு மிகுந்த காதலோடு தழுவி, "ஓ அம்மணி! உனக்கும் இவ்வகைப்பட்ட துன்பம் வருமா? நாள்தோறும் சன்மிஷ்டையோடு விளையாடி வருகிறவளாதலால், இன்றைத் தினமு மப்படியே விளையாடி வருவாயென்று எண்ணி உன்னைத் தேடாம லிருந்துவிட்டேன். என்மேற் சினங்கொள்ளாமல் இரு" என்று இனிய வசனங்கள் கூறத்,தெய்வயானை தந்தை காலில்விழுந்து ஓ வென்று கதறி அழுது "ஐயா நீசனாகிய அசுரராஜன் புத்திரி என் வஸ்திரத்தை எடுத்து உடுத்துக்கொண்டதுமன்றி

என்னையுந் தூறி என்னுயிர்க்குங் கெடுதிவரக் கிணற்றில் வீழ்த்திப் போயினுள். இனி என்ன நமது பிழைப்பு! சுத்த அற்பரிடத்தும் அருமை தெரியாதவரிடத்து மிருந்து நித்தம் கோடிகோடி பொருள்தேடிச் சீவனஞ் செய்வதைவிட, விவேகிக ளிடத்தும் அருமை அறிகின்றவரிடத்தும் சிறுமைபட்டுக்கொண்டு சொற்ப சீவனஞ் செய்வது மேலான நன்மையென்று நூல்களால் அறிந்திருக்கிறோம். ஆதலால் இனி மஹாபாதகனுகிய விடபன்மனிடத்தில் அரைநாழிகையு மிருக்கக்கூடாது" என்று முறை யிட்டாள். சுக்கிராசாரி தெய்வயானையின் கண்ணீரைத் துடைத்துத் தழுவி "ஓ அம்மா! நீயும் சிறுபெண். சன்மிஷ்டையும் சிறுபெண்: ஒருவர்க் கொருவர் சச்சரவுபட்டபோது சன்மிஷ்டை பாலிய புத்தியால் தெரியாமற் கெடுதியைச் செய்தாள். அதற்காக அந்தச் சன்மிஷ்டையின் தந்தையை வெறுப்பது தகுதியல்ல. அம்மணி! இப்போது உன் கருத்தின்படி இந்த இடத்திலேயே சௌக்கிய மான இடமாய் ஒன்றைப் பார்த்து இருப்போம் வா" என்று இனிய வசனங்கள் கூறி இருவரும் ஒரு சோலையிற் சென்று பர்னசாலை யொன் றியற்றி அதிலிருந்தார்கள்.

இப்படி இரண்டொரு தினம் சென்ற பின்பு விடபன்மன் தன் சபைக்குச் சுக்கிராசாரியர் வராதிருப்பதை நோக்கி, மந்திரிகளைப் பார்த்து; "ஓ அமைச்சர்காள்! நமது குலகுருவாகிய சுக்கிரபகவான் இரண்டு மூன்று தினமாய்ச் சபைக்கு வரவில்லை. அஃதென்ன விசாரியுங்கள்" என்று கட்டளையிட, மந்திரிகள் தூதுவரை அனுப்பினுர்கள். தூதுவர் சுக்கிராசாரியின் மனைக்குச் சென்று பார்த்துச் சுக்கிராசாரியைக் காணுமல், மீண்டு வந்து மந்திரிகளை வணங்கி, "ஓ ஆண்டகையீர்! சுக்கிராசாரியார் வீட்டி லில்லை" என்றுர்கள். அதை மந்திரிகள் கேட்டு அரசனுக் கறிக்கையிட, அரசன் திகிலடைந்து, "ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்! நமது குரு நம்மையன்றி ஒரு காரியத்தையும் அனுசரியார். அப்படி யிருக்க, அவர் எங்குற்ருர்?" என்று ஐயங்கொண்டு மந்திரி முதலானவர்களை நோக்கி, "ஓ நண்பர்களே! நமது குரு எங்கிருந்தாலு மறிந்து வந்து ஒரு முகூர்த்தத்திற்குள் எனக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று மஹா உக்கிரத்துடனே கட்டளை யிட்டான். மந்திரி முதலானவர்கள் கேட்டுத் திடுக்கிட்டு, எதிர் பேசமல் அரசனிட்ட கட்டளைப்படி தேட யத்தனித்தார்கள். அப்போது

விடபன்மனுடைய ரதசாரதி "அடடா வீணே மந்திரி முதலானவர்கள் திரிந்தலையப் போகிறார்கள். இந்த வேளையில் நாம் அறிந்ததைத் தெரிவியாமல் இருப்பது மஹா துரோகமாகுமே" என்று மதித்து, விரைந்து சென்று சுக்கிராசாரியைத் தேடிச்செல்லுகிற மந்திரிகளை மறித்து, "சுக்கிராச்சாரி இருக்கிற இடத்தையும் அவர் அரசனுத்தரவின்றிச் சென்றதையும் நான் தெரிவிக்கிறேன் வாருங்கள்" என்று அழைத்துக்கொண்டு, அரசன் சபைக்குவந்து வணங்கி, "ஓ ஆண்டவனே! தங்கள் குமாரத்தியும் தங்கள் குருபுத்திரியும் ஒரு வனத்திற்சென்று நீராடினதாகவும், அங்கொரு சுழற்காற்றுண்டாய் அவர்களுடைய வஸ்திரங்களைக் கலந்கவைத்ததாகவும், அப்போது தங்கள் குமாரத்தி குரு புத்திரியின் வஸ்திரத்தை உடுத்துக் கொண்டதாகவும், அதன் மேல் குரு புத்திரி கோபங்கொண்டு இகழ்ந்ததாகவும், பின்பு தங்கள் குமாரத்தி சினங்கொண்டு குரு புத்திரியைக் கிணற்றில் விழ்த்தினதாகவும், அப்போது பூலோகத்து அரசரிலொருவர் அவ் வனத்தில் வந்து அந்தக் குரு புத்திரியை எடுத்ததாகவும், அந்தக் குருபுத்திரி என்னுடன் சொல்லி இந்தச் சேதியைத் தன் தந்தைக்கு மாத்திரம் தெரிவிக்கக் கட்டளையிட்டாள். நான் அக்கட்டளைப்படி வந்து நமது குருவுக்கு அந்தச் சங்கதியைத் தெரிவித்தேன். அவர் புத்திரியினிடம் போயிருக்கிறார்" என்றான்.

விடபன்மன் இதைக் கேட்டதும் மிகுந்த வருத்தமடைந்து விரைவிலெழுந்து, அந்தச் சாரதியை அழைத்துக்கொண்டு மந்திரி முதலானவர்களோடு தெய்வயானை இருக்கும் சோலைக்குச் சென்று அவ்விடத்தில் தெய்வயானையும் குருவும் இல்லாமையைக் கண்டு அச் சோலைக் கருகிலிருக்கும் வனங்களில் வந்து பார்த்தான். அங்கொரு வனத்தில் பர்னசாலை யொன்றியற்றி அதில் சுக்கிராசாரி தவஞ் செய்திருத்தலைக் கண்டு, சரேலென்று சென்று சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, மிகுந்த பயபக்தியுடனே எதிர் நின்று கைகூப்பி, "ஓ ஐயனே! சிறியோர் செய்த பிழை பொறுப்பது பெரியோர்கள் கடமை. அதிலும் தங்கள் மனதுக்கு வருத்தம் நேரிடும்படி செய்த குற்றவாளி பெண்பால். அப் பெண்பாலும் பாலியத்தை யுடையவள். 'பேதமை யென்பது மாதர்க் கணிகலம்' என்று நூல்களால் அறிந்திருந்தும், எல்லாந் தெரிந்த தாங்கள் மனம் வேறுபட்டு என்னை வெறுத்தது மிகுந்த ஆச்சரியமா யிருக்

கிறான் :- "ஓ தேவர்களே! ஓ முனிவர்களே! எக்காலத்திலும் கண்டறியாத இந்த அழற்சி எவ்விடத்திலிருந் துதித்தது? இதனால் சொர்க்கலோகமெல்லாம் கருகிப் பொல்லா வருத்த மடைகிற போது பூலோகம் எவ்வாறு அவஸ்தைப்படும்? இந்த அழற்சியோ வடவையையும் வாட்டவல்லதா யிருக்கின்றதே! ஆதலால் விரைவில் அஃதுண்டான விதத்தை உணர்ந்து உரையுங்கள்" என்று வினவத், தேவர்கள் முதலானவர்கள் இந்திரனை வணங்கி "ஓ ஆண்டவனே! இமயமலைச் சாரலில் விசுவாமித்திரமுனி அகோரமான தவஞ் செய்கிறார். இஃது அத்தவத்தி லெழுந்த தபாக்கினி. இதைத் தணிக்க யாவராலும் இயலாது. இதற்குத் தாங்களே ஒரு யுக்தி சொல்லவேண்டும்" என்று கூற, இந்திரன் அதுகேட்டு, அந்த விசுவாமித்திரன் மற்ற முனிவர்களைப் போன்றவனல்லன். பிரம சிருஷ்டிக்குப் பதில் சிருஷ்டிக்கத்தகுந்தவன். அவன் தவத்தை யழிக்க யத்தனித்து நாமெல்லா மொன்றாகக் கூடித் தடுப்போமாயினும் அவன் நம்மை பஸ்மீகரப்படுத்துவான்; வடவையை யேவினால் அஞ்சாமல் அதனை யுட்கொள்வான். சப்த மேகங்களையும் சண்டமாருதத்தையும் விட்டால் அவைகளை அரைநொடியில் தபாக்கினியால் கொளுத்திப் போடுவான். இந்த அண்டரண்ட பிரம்மாண்டங்களெல்லாம் இடிந்துவிழுந்தாலும் பூலோகம் சொர்க்கலோகமாய்க் கீழ்மேலானாலும் அஞ்சாத உறுதியான மனத்தையுடையவன். அவன் தவத்தை அழிப்பதற்கு ஸ்திரீகளேயன்றி வேறெவராலும் வேறு எந்த யத்தனங்களினால், அழியமட்டாது" என்று தீர்மானித்து மேனகையை அழைத்து வரத் தேவதூதர்களுக்குக் கட்டளை யிட்டான். தூதர் மேனகை இடத்துச் சென்று தேவராஜன் கூறியவற்றைச் சொல்ல, மேனகை அதுகேட்டு விரைந்தோடி வந்து, இந்திரனை வணங்கி, "ஓ சுவாமி! என்னை அழைப்பித்த காரணத்தைத் திருவுளம் பற்றவேண்டும்" என, இந்திரன் அம்மேனகையைப் பார்த்து, "ஓ பெண்ணே! இமயமலைச்சாரலில் விசுவாமித்திரன் அகோரமான தவஞ்செய்கிறான். அத்தவத்திலெழுந்த அக்கினி பூலோகத்தாரையும் சொர்க்கலோகத்தி லிருக்கிறவர்களையும் வருத்துகின்றது. நீ விரைவாகச்சென்று விசுவாமித்திரன் தவத்தை அழித்துவரவேண்டும்" என்றுரைக்க மேனகைகேட்டுத் திடுக்கிட்டு, "ஓ சுவாமி! அந்த விசுவாமித்திருடைய தன்மையையெல்லாந் தேவரீர் அறிந்திருந்தும் புலிபிடித்து மானை அனுப்பிவைப்பதுபோல் என்னை

அனுப்புவிக்க யத்தனிப்பதை நோக்கினல் தங்களுக்கு, நான் மிகுந்த குற்றஞ் செய்ததாகவும், அதற்குப் பயத்திற் செய்யுந் தண்டனைக்கீடாக நயத்திற் செய்யுந் தண்டனையாக இருக்கின்றது. ஓ சுவாமி! என் மனமறியத் தங்களுக்கு நான் ஒரு குற்றமுஞ் செய்ததில்லையே" என்று பிரிய வசனம் புகல, இந்திரன் நகைத்து "ஓ பெண்ணே! நீ ஒரு குற்றமுஞ் செய்யவில்லை. உலகத்துக்கு ஒரு கெடுதி வந்தால் அதனை அரசன் நீக்கி உலகத்தை யாதரிக்க வேண்டும். இப்போது விசுவாமித்திரனல் உலகத்துக்கு வந்த கெடுதியை நான் நீக்கவேண்டும். இந்தக் கெடுதி என்னல் நீக்கப் படுவதல்ல. உன்னல் நீங்கும். அது எப்படியென்றல், சினத்திலும் - கொலைத்தொழிலிலும் - சாபத்திலும் - தவத்திலும் - ஒவ்வொருவர் உயர்ந்திருப்பார்கள். இந்நான்கும் ஒருவர்க்கே இருந்தாலும், பெண்ணென்ற விடத்து அவை சிறிதுஞ் செல்லா. ஆதலால் இந்த வேளையில் நாங்களெல்லாரும் சுகப்பட நீ அந்த விசுவாமித்திரனிடத்துச்சென்று, உன் வல்லமையால் அவனை மயக்கித் தவத்தை யழித்து வரவேண்டும்" என்று கூற, மேனகை மகிழ்ந்து இந்திரனை வணங்கி, "ஓ சுவாமி! யாவரேனும் ஐம்புலனையும் அடக்கி அறிவைப் பிரமனிடத்துச் செலுத்திச் சித்திரம்போலசைவற்று யோகத்திலிருந்தாலும், அவர்களை அரைநொடிப் போதில் கைவசப்படுத்த எனக்குத் தெரியும். இதோ சென்று விசுவாமித்திரன் தவத்தைப் பொன்றுவித்து வருகிறேன்" என்று விடைபெற்றுத் தன் அரண்மனைக்கு வந்து ஸ்நானஞ்செய்து வஸ்திராபரணதிகளோடு குங்குமமுந் தரித்து, பரிமளவாடை வீச அரண்மனையைவிட்டு வெளிப்பட்டு, கண்டவர்கள் காமவெறிகொண்டு திப்பிரமையுற்றுப் பின் தொடர்ந்து நிற்க, இமயமலைச்சாரலில் விசுவாமித்திர முனிவர் தவஞ்செய்கிற இடத்தில் வந்து தென்றற் காற்றுவாடையில் நின்றள்.

இப்படி இவள் நின்றமாத்திரத்தில், வனசம்-சூதம்-அசோகு-முல்லை - நீலம் என்கிற ஐந்து பாணத்துக்குத் தலைவனகிய மதனராஜன் கௌசிக ராஜனகிய விசுவாமித்திரனை எதிர்த்து, கருப்புச் சிலையை வளைத்து வண்டுநாணியேற்றிக் குணத்தொனி செய்து முன்னம் இச்சையை விளைவிக்கின்ற தாமரைமலர்க் கணையை எடுத்து அவ்விசுவாமித்திரன்மேற் றொடுத்தான். அப்போது விசுவாமித்திரன் தவநிலைவிட்டுக் கண்ணை விழித்துப் பார்க்கும்

போது" மேனகை யணிந்திருக்கிற சந்தனம் - புனுகு - கஸ்தூரி - கர்ப்பூரம் - சவ்வாது - குங்குமம் முதலான பரிமளங்களோடு, அளியின் மிகுந்த நறுமலர்க் காற்றினை யுணர்ந்தான். அதனை மதனராஜன் கண்டு, இதுதான் சமயமென்று கருதிப் பரபரப்பாகக் காம வெம்மையை யுண்டாக்கும் சூதமலரைத் தொடுத்தான். உடனே விசுவாமித்திரன் விருச்சிகங் கொட்டப் பட்டவனைப்போல் தவநிலை விட் டெழுந்து, அப்பரிமளக் காற்றின்வழிச் சென்றான். அங்கே ஒரு சந்தன மரத்தடியி லிருக்கிற மேனகை "இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா ?" என்கிற பழமொழிபோலக் கடைக்கணோக்கத்தை விசுவாமித்திரன்மேல் வைத்து, மற்றோர்பொருளை நோக்குவதுபோல் பராமுகமாக இருந்தாள். இவ்வளை விசுவாமித்திரன் கண்ட மாத்திரத்தில் மதனராஜன் கனைத்துச் சிரித்து, மஹா உக்கிரத்தோடு சகிக்கக்கூடாத வருத்தத்தைக் கொடுக்கும் அசோக மலர்க்கணையைத் தொடுத்தான். விசுவாமித்திரன் அதனால் மனங் கலங்கி அவளருகிற் சென்று,"ஓ பெண்ணரசே! முனிவர்க்கு விரோதியாகிய மதனராஜன் என்னை மிகுந்த துன்பத்துக் குள்ளாக்கினான். அவனை வென்று வெற்றிபெற என்னாற் சக்தியில்லாமல், அவன் பாணத்தினால் அடிபட்டுப் பிடிபட்டு முறிபட்டு வெறிபட்டு ஓடிவந்தேன். தெய்வ கடாக்ஷத்தினாலே உன்னைக் கண்டேன். நீ தனமாகிய மலையையும் - அல்குலாகிய அகழியையும் - துடையாகிய பொற்கம்பத்தையு முடைத்தாகிய நல்ல காவலைச் செய்யாநின்ற கண்களாகிய வாயிலோடும் கூடிய உன் மனக்கோட்டையை என்வசப்படுத்தி, மதனராஜன் பாணத்தால் என்மார்பிற் றோன்றிய புண்ணுக்கும் அதனாலுண்டாகும் சுரத்துக்கும் உன் ஸ்தனவேது கொடுத்து இதழ்மருந் தளித்து ஆதரிக்கவேண்டும்" என்று இனியவசனங்களால் பலவாறு வேண்ட, மேனகை விசுவாமித்திரனை வணங்கி, "ஓ ஸ்வாமி! நீரோ காமம்-வெகுளி-மயக்கமென்பனவற்றை நீக்கிக் கருத்தைப் பிரமனிடத்துச் செலுத்திச் சற்றும் அசைவில்லாமல் தவத்திலிருக்கிறவர். உமக்கு இவ்விச்சை உண்டானதை நோக்கும்போது மிகுந்த ஆச்சரியமாக இருக்கின்றது. ஆயினும், அபயமென்று வந்தவர்களை யாதரிப்பது முறைமையன்றோ ? அம் முறைப்படி தேவரீர் கருத்து மகிழ என் மனக்கோட்டையை உமது வசமாக்கிக்கொள்ளலாம். ஆனால் ஒரு சந்தேகம். அஃதென்னவென்றால் முனிவர்களெல்லாரும்

ஸ்திரீவிரோதிகள். நீரும் முனிவரானபடியால் உம்மை ஆதரிப்பதற்கு எனக்குக் கிஞ்சித்து அச்சமுண்டாகின்றது" என்று கூற, விசுவாமித்திரன் சிரித்து "ஓ பெண்கள் நாயகமே! நீ சொல்லியது சரிதான். விரோதியாயிருந்தபோதிலும் அவ் விரோதி சகிக்கொணாத துன்பமடைந்துவந்து முறையிட்டு அபயமென்று விழுந்தால், அவனைக்காப்பாற்றுவது முக்கியமான கடமை. மேலும் உபகாரஞ் செய்கிறவர்க்கு அபாயம் வருவதில்லை. வந்தாலும் உபகாரஞ் செய்யச்சொல்லி நூல்கள் முறையிடுகின்றன. ஆதலால் இந்த வேளையில் என்னை யாதரிக்கவேண்டும்" என்று வணங்க, மேனகை மகிழ்ந்து, விசுவாமித்திரன் களிப்புறத்தன் மனக்கோட்டையை அவன் வசப்படுத்தி அம்முனிவரன் கொண்ட காம நோயை மாற்றினான். விசுவாமித்திரன் வீரிய விர்த்தியால் மேனகையிடமாக நான் பிறந்தேன். மேனகை தெய்வலோகப் பெண்ணாதலால், அவளுக்குப் பிறந்த என்மேல் பிரீதியில்லாமல் என்னை ஓரிடத்தில் வைத்துப் போயினாள். விசுவாமித்திரர் முழுதுந் துறந்தவராதலால் என்னைக் காப்பாற்றாமல், அவர்சிந்தைக்கிசைந்த விடத்துச் சென்றார்.

பின்பு எனக்குச் சூரியச் சுடரினால் துன்பம் வராமல் சகுந்தலைப் பக்ஷிகள் வந்து தமது இறகுபந்தரிட்டுப் பாதுகாத்து வந்தன. அவ் வழியில் முனிசிரேஷ்டராகிய கண்ணுவர் வந்து, நானழுத குரலோசையைக் கேட்டு, அவருடைய சிவந்த கரங்களிலென்னை ஏந்தி ஆசீரமத்துக்கு எடுத்துவந்து சகுந்தலையென்று பெயரிட்டு, மிகுந்த அன்புடன் வளர்த்துவந்தார், இது என் வரலாறு"—என்று சொல்லி ஒருபால் மறைந்து ஒதுங்கி நின்றாள். இவையனைத்தையும் அரசன்கேட்டுப் பிரம்மானந்தத்தை அடைந்து, "இவள் கௌசிக ராஜனாகிய விசுவாமித்திரனுக்கும் தெய்வலோகப் பெண்ணாகிய மேனகைக்கும் பிறந்தவள். நாம் கொண்ட கருத்தின்படி இவளை மணத்தல் தகுதிதான்" என்று மனதில் நினைத்துச் சகுந்தலையைப் பார்த்து, "ஓ பெண்கள் நாயகமே! நீ கௌசிக ராஜனாகிய விசுவாமித்திரன் புத்திரியாதலால், தடையின்றி உன்னை யான் மணக்கத் தகும். இனி என்பேரில் கிருபை கூர்ந்து என்னை யாதரிக்கவேண்டும்" என்றான். சகுந்தலை மிகுந்த நாணமுற்று முகத்தைக் கோட்டி, காலால் நிலத்தைக் கீறிப் பூமியைப் பார்த்தவண்ணமாய், "ஐயா! இது முற்றுந் துறந்த மஹாத்மாக்களிற்

சிரேஷ்டராகிய கண்ணுவர் ஆசிரமம். இதில் வந்தும் விரக்தியைப் பாராட்டாமல் என்னைக் கூடுமென்று சொல்லுவது அரசருக்குத் தகுதியல்ல. அவ்வாறு கூடுவோமென்றாலும், அருமைபாராட்டி வளர்த்த என் பிதாவாகிய கண்ணுவர் மனத்துக்கு அருவருப் புண்டாகும். உம்மையே நேரிற் கண்டு ஏதேனும் வினவுவாராயின், அதற்கு மறுமொழி என்ன வென்று கூறவல்லீர்?" என்று கேட்டாள். அரசன் மகிழ்ந்து, "ஓ பெண்ணரசே! நீயேன் ஐயப்படுகிறாய்? பெண்ணாகப் பூமியிற் பிறந்த போதே ஒரு புருஷன் முன்னமே பிறந்திருப்பான். மேலும் பெண்களைப் பெற்றவர்கள் ஒருவருக்கு அப் பெண்ணை விவாகம் செய்து கொடுப்பார்களே யன்றி, மனையில் வைத்திருக்கப் போகிறதில்லை. கண்ணுவரோ மகா தவசிரேஷ்டர். மேலும் பிரம்மசாரி, ஆதலால் உன்னை எந்த அரசர்களுக்காவது மணஞ் செய்விக்கவே போகின்றார். கும்பிடப் போனதெய்வம் குறுக்கே வந்தது போல் அரசர்களில் ஒரு வனாகிய நானே வந்துவிட்டேன். நீ கிருபை கூர்ந்து என்னை யாதரித்து விரகநோயைத் தீர்த்தால், கண்ணுவர் களிப்படைவாரே யன்றி விரோதியார். ஆதலால் இந்தவேளை என்னை வருத்தும்படி வந்த ஐங்கணைவேளை முதுகிட்டோடும்படி செய்" என்று வேண்டச் சகுந்தலை அரசன் கூறியவற்றை நிதானித்து ஒப்புக் நோக்கிக் கொண்டு ஒருத்தரம் சொல்லுகிறாள்—

உலகிலுள்ள பெண்கள் மணஞ் செய்யாமல் ஒரு புருஷனைக் கூடினால், அப் பெண்ணை உலகத்தார் இகழ்வாரே யன்றிப் புகழார்கள். ஆதலால் தங்கள் கருத்தை என் தந்தையாகிய கண்ணுவர்க்கு அறிவித்துத் தமது கருத்தின்படி விவாகத்தை நிறைவேற்றின பிறகு என்னுடைய கையைப்பற்றுவது தங்களையொத்த காவலர்க்குத் தகுதி—என்றவளியம்ப, அரசன் சிரித்து, "ஓ பெண்கள் பெருமானே! நீ கூறிய வசனம் எவ்வாறிருக்கின்றதெனில், விஷம் தலைக்கேறி ஸ்மரணையற்றுப் பூமியில் விழுந்தவனுக்கு, அவன் சிநேகன் மந்திரங் கற்றுக்கொள்ள மலைவாசிகளிடத்துச் சென்று சூரிய கிரகணத்தை நாடியிருப்பது போலிருக்கிறது. காமவெறி கொண்டு அவகோலமாயிருக்கிற என்னைப் பார்த்தும், நீ மணஞ் செய்து கூடென்றால், அது காறும் நான் எவ்வாறு சகிப்பேன்? என் விரோதியாகிய மதன் எவ்வாறு நீங்குவான்? ஆதலால் உன் கருத்தின் வண்ணமும், உன் தந்தையாகிய கண்ணுவமுனிவர்

கருத்துக் கிசையவும் நானொரு உபாயஞ் சொல்லுகிறேன். அஃதென்னெனில் - உலகத்தில் பெண்களை விவாகஞ் செய்து கூடுவது தகுதிதான். அந்தவிவாகம் எட்டுவகைப்படும். அவை யாவன - பிரமம் - பிரசாபத்தியம் - ஆரிடம் - தெய்வம் - காந்தர்வம் - அசுரம் - இராக்கதம் - பைசாசம். இவற்றுட் பிரமசாரிக்குக் கன்னிகையைத் தீமுன்னர்க் கொடுப்பது, பிரமமணம். தலைமகனினத்தார் வேண்டத் தலைமகளினத்தா ருடன்பட்டு அவளை ஓமத்தீ முன்னர்க் கொடுப்பது, பிரசாபத்திய மணம். ஒன்றிரண்டு பசுவுமெருதும் வாங்கிக்கொண்டு நங்கையைத் தீமுன்னர்க் கொடுப்பது ஆரிடமணம். வேள்வியால்வந்த பெண்ணை அக்கினி முன்னர்க் கொடுப்பது, தெய்வ மணம். கொடுப்பாருங் கேட்பாருமின்றி இருவருந் தன்னிடத் தெதிர்ப்பட்டுத் தாமே கூடுவது சாந்தருவ மணம். பெண்ணுக்குப்பொன்பூட்டிச் சுற்றத்தார்க்குப் பொன்வேண்டுவன கொடுத்துக்கொள்வது அசுர மணம், பெண்ணின் பெண்ணினத்தாரு முடன்படாமல் வலிதிற் கொள்வது, இராக்ஷச மணம். துயின்றுளைச்சென்று கூடுவது, பைசாசமணம். இவற்றுள் கொடுப்பாருங் கேட்பாருமின்றி இருவருந்தனித்தவிடத் தெதிர்ப்பட்டுத் தாமேகலத்தலாகிய இந்தக் காந்தருவமணம் புரிந்து இருவருங் கூடுவோம்.'' என்று அரசன் கழறச் சகுந்தலை மெய்தான்! இப்போது நீர் பெற்றிருக்கிற காமநோய்க்குத் தகுந்தபடி இனியவசனஞ் சொல்லிக்கூடி, காமநோய் தீர்ந்தபின்பு உன்னை யார் கண்டவனென்று மாறுபடப் பேசி வேறொரு ஸ்திரீயை மணம்புரிந்தால், நான் அவமாவது மன்றி என் வயிற்றிற் பிறந்த புத்திரனும் சுகமடையானே. இதற் கென்ன உத்தரவு?'' என்று கேட்க அரசன் நகைத்து, "ஓ பெண்கள் நாயகமே! உலகத்தில் அரசரா யிருக்கிறவர்களுக்கு வெற்றியும் பாக்கியமும் கொடுக்கின்றது வாய்மை. அவர்கள் அவ்வாய்மையை மறப்பார்களானல்,மும்மூர்த்திகளை நோக்கி அநேகமான தவஞ் செய்து சிலாக்கியமான பாக்கியத்தையும் அநேக திவ்யாஸ்திரங்களையும் பெற்றிருந்தாலும் அது அவைகளை யெல்லாம் நாசப்படுத்தி, குடிக்கக்கஞ்சியும் கட்ட வஸ்திரமுமின்றி வருந்தச் செய்யும். நானோ வாய்மையிற் பிறழாமலிருக்கும் அரசருக் கெல்லாம் அரசன். நான் சத்தியத்தைக் கடக்கமாட்டேன். ஆதலால் உனக்கொரு உறுதியான வாக்கியம் கூறுகிறேன். அஃதென்னெனில்

நீயே என்மனைவி. உன் வயிற்றிலுதிக்கும் புத்திரனே என் பட்டத்துக் குரியவன். இதற்குச் சாக்ஷி ஆகாயவாணியும் பூமிதேவியுமேயாம். இனித் தாமதஞ்செய்யாமல் என்னைக் கூடுவது நின்கற்புக் கழகு" என்று வற்புறுத்திக் கூறினான். அப்பால் சகுந்தலை சம்மதித்து மிகமகிழ்ச்சி அடைந்து, அரசன் மகிழ்வெய்தக் கடைக்கணித்து, காமக்குறியைத் தெரிவிக்கின்ற குறுநகைபுரிய அரசன் அது கண்டு, ஐந்துவித ஆலிங்கனத்தோடு பதினொருவித அதரபானமுதலியவற்றை முறைப்படி இயற்றி, சுந்தரமிகுந்திடு சகுந்தலை மனங்களி துளங்க ரதிகேளி விளையாடி மலர்சூடி, "ஓ பெண்கள் சிரோமணியே! நானே வேட்டையாடவந்தேன். வந்த விடத்தில் உன்னைக் கண்டேன். கருத்து மகிழ்வெய்தப் புணர்ந்தேன். இனி என் சேனைகளோடு கலந்து நகரஞ்சென்று, மந்திரிகளால் உன்னை அழைத்துக் கொள்ளுகிறேன். நீ வருத்தப்படாமல் மகிழ்வுடன் விடைகொடு" என்று வேண்டச் சகுந்தலை கிஞ்சித்து வருத்தமடைந்து, "ஓ அரசனே! புருஷர் சொல்லுக்கு மனைவியர் மறுத்துக்கூறுவது தகுதியல்ல. ஆதலால் உமது இஷ்டப்படி செய்யுங்கள். ஆனால் என்னை மாத்திரம் மறக்காதிருக்கப் பிரார்த்திக்கிறேன்" என்று மிகுந்த ஆர்வமையோடு விடைகொடுத்தனள். அரசன் அவ்விடையைப் பெற்று மீண்டு மந்திரிகளோடு கலந்து, காட்டிற் கலைந்திருந்த சேனைகளெல்லாம் ஒன்று கூடித் தன்னைச்சூழ்ந்து வர முன் போல் நகரம் வந்து சேர்ந்து அரசுசெய்திருந்தான்.

இங்கே சகுந்தலையானவள் கணவன் பிரிந்த வருத்தத்தோடு திவ்ய ஞானியாகிய கண்ணுவர்க்கு என்ன உத்தரவு சொல்லப் போகிறோமென்னுங்கவலைக் காட்பட்டவளாய், "ஐயோ! கற்றறிவில்லாத ஸ்திரீஜனங்களுக்கே கலவிக்குறிகள் தெரியுமென்றால் சகலகலை வல்லவராய் உண்மை ஞானத்தைப் பெற்றவர்க்குத் தெரியாமற் போகுமா? நாம் என்ன காரியம் செய்து விட்டோம்? காமிகள் யாவற்றுக்கு மஞ்சார்களென்பது நமக்குத் திருஷ்டாந்தமாயிற்றே! இனி நாம் என்ன செய்யப்போகிறோம்!" என்றேங்கிப் பயந்திருக்கிற தருணத்தில் திரிகால ஞானியாகிய கண்ணுவமுனிவர் வந்து விட்டார். அவர் வரவே கலவியால் வெளுத்த இதழையும் - வியர்வையால் நிறைந்த முகத்தையும் - வேகத்தினால் சிவந்த விழியையும் - பல்லாதிகளாற் பட்டகுறிகளையும் - ஆலிங்கனாதிகளாற் கலைந்த அளகத்தையும் - புத்திரனிருக்கும் ஆலிலைபோன்ற

வயிற்றையு முடைத்தாகிய சகுந்தலை திடுக்கென்றெழுந்து; நமது முகக் குறியினாலும் - அனுபவத் திறத்தாலும் - நாம் முடித்துக் கொண்ட காரியத்தை அறிந்து கொண்டிருப்பாரென நாணமேற் கொண்டு மெல்லென நடந்து, கல்விப் பிரவாகமாகிய கண்ணுவருடைய திவ்ய சரணாம்புயத்தில் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, "சுவாமி! 'பேதைமை யென்பது மாதர்க்கணிகலம்' என்பதற் கிணங்க சுவாமிகளுக் கறிக்கையிடாமல் ஒரு நொடிப் போதில் ஊழின் வசத்தினளாய் மயங்கி, எளியாள் செய்த குற்றத்தைப் பொறுத்து இரக்ஷிக்க வேண்டும்" என்றிரந்தாள்.

அது கேட்டுத் தாம் வெளியிற் சென்றது முதல் அது காறு நடந்த காரியங்களைத் தமது ஞானதிருஷ்டியாற் கண்டுணர்ந்த கண்ணுவர், அதற்கு மகிழ்ச்சியடைந்து, சகுந்தலையை நோக்கி "அம்மணி! உன் உதரத்திலிருக்கிற புத்திரன் இந்த நெடியகடல் சூழ்ந்த உலகத்தை யெல்லாம் ஆளும்படியான வல்லமையை யுடையவன். உன்னைக்கூடின அரசனோ துஷ்யந்தமஹாராஜன். நீ நல்ல காரியஞ் செய்தாய். அதற்கு உன் மேல் மகிழ்ச்சியன்றிக் கோபமில்லை. நீ அஞ்சாமல் நடந்த விருத்தாந்தத்தைக் கூறு" என்று சொல்லவும், சகுந்தலை அரசன் வந்ததையும், தான் அவ்வரசனுக்கு மரியாதை செய்ததையும், அரசன் தன்னை யாரென்று கேட்டதற்குச் சொன்ன வரலாற்றையும், அதன் மேல் அரசன் விரகதாபப்பட்டு ஆகாயவாணியையும் பூதேவியையும் சாக்ஷிவைத்துக் காந்தர்வமணம் புரிந்து கூடிப் பின்பு மந்திரிகளால் அழைத்துக் கொள்ளுகிறேனென்று சொல்லிச் சென்றதையும் விளங்க உரைத்தாள். கண்ணுவர் கேட்டு மகிழ்ச்சியடைந்து, "அம்மணி! உலகத்தில் பெண்கள் பெறும் பேறு என்னவென்றால் கல்வியையும் - வல்லமையையும் - அழகினையும் - வாலிபத்தையும் - செல்வத்தையும் பெற்ற புருஷனை யுடைத்தாய், புத்திரபாக்கியத்தையும் பெறுவது மிகுந்த அருமையான பேறு. இந்தப் பேறு எல்லாப் பெண்களுக்கும் கிடைக்காது. நீ தவசிரேஷ்ட சிகாமணியாகிய விசுவாமித்ர முனிவருக்கும் மேனகைக்கும் பிறந்தவளாதலால், அவர்கள் வழியால் நீ சகலபாக்கியமும் பெற்றாய். இனி உனக்கு ஒரு குறைவுமில்லை. சுகமாயிரு" என்று வாழ்த்தினார். இதைக் கேட்டசகுந்தலை பரமானந்தத்தை யடைந்தவளாய்க் கண்ணுவரை வணங்கி அந்தப்புரத்திற் சென்றிருந்தாள்; இவ்வாறு சென்ற

பின்பு, முதன்மாதத்தில் வெறுக்கத்தக்க பதார்த்தங்களில் விருப்பமும் - குறைவுற்ற பசியும் - உணவில் வெறுப்பும் - புளி யேப்பமுமுடைத்தாய், இரண்டா மாதத்தில், அடிவயிறு கருக்குழியைச் சார்ந்து ஒட்டி உள்ளடங்கி, மூன்றுமாதத்தில் மார்பினரம்புகளெடுத்து, நான்கா மாதத்தில் முகம் வெளுத்து முலைகறுத்து மசக்கை என்னும் நோயுற்று, ஐந்தாமாதத்தில் சுளுக்கு நோயும் வயிற்றுப் புரட்டலு முண்டாய், ஆறுமாதத்தில் கண்களின் அடிநிமைக்கடுத்த நரம்பு பிரகாசமாகவும் கண்களினது நிறம் பேதமாகவும் காணப்பட்டு, ஏழாமாதத்தில் உட்காரும் போதும் எழுந்திருக்கும் போதும் புத்திரக்கருவாதலால் வலக்கையை அடிக்கடி ஊன்றி, எட்டாமாதத்தில் முலையிற் கிஞ்சித்துப் பாலுண்டாகி, ஒன்பதாமாதத்தில் அதிக வருத்தமும் இளைப்புடனே வலப்பக்கத்தில் பிண்டமிருக்கிற தென்று அறியுந்தன்மையையு முடைத்தாய்ப், பத்தாமாதத்தில் கருப்பவேதனைப்பட்டு யாவரும் விருப்பமுறத்தக்க சிறப்பினை வகிக்கப் போகிற புத்திரசிகாமணியைப் பெற்றாள்.

அப் புத்திரனுக்குக் கண்ணுவர் பல ஆசிகள் கூறி, செய்யும் சடங்குகளை யெல்லாங் கிரமப்படி நிறைவேற்றிப் **பரதன்** என்று பெயரிட்டு, ஐந்து வயதுக்கு மேல் வேதாகமங்கள் அறுபத்து நாலு கலைக்கியானங்கள் முதலியவற்றைப் போதித்து, ஏழாமாண்டு முதல் வில்வித்தை - அம்புவித்தை - யானையேற்றம் - குதிரையேற்ற முதலியவைகளையுங் கற்பித்து மஹாவிருப்புடன் வளர்த்து வந்தார். அப் புத்திரனுக்குப் பன்னிரண்டு வயதான காலத்தில் கண்ணுவர் சகுந்தலையை அழைப்பித்து, "அம்மணி! இனி நீ உன் கணவனாகிய துஷ்யந்தமஹாராஜனிடத்துச் சென்று இன்பமுடன் வாழ்ந்திருக்க வேண்டியதே முறை. உன்னை மந்திரிகளால் அழைப்பித்துக் கொள்கிறே னென்று சொல்லிப் போன அரசன் இதுவரைக்கும் உன்னை அழைத்துக் கொள்ள வில்லை. இராச்சிய சம்பத்தினாலே உன்னை மறந்துவிட்டான் போலும்! இதோ நமது சீடர்களிற் சிலரை அனுப்புகிறேன். அவர்களைத் துணையாகக் கொண்டு நீ அத்தினபுரத்திற்குச் செல்" என்று கட்டளையிட்டுச் சீடர்களை அழைத்து, "சீடர்களே! இந்தச் சகுந்தலையை அத்தினபுரத்தில் விட்டு வாருங்கள்" என்று சொன்னார். சகுந்தலை மனவருத்தமடைந்து, கண்ணுவருக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, "சுவாமி! இதுவரைக்கும் யாதொரு குறைவும் வராமல்

என்னைப் பாதுகாத்தீர்கள். எனக்கு மாதா - பிதா - குரு-தெய்வும்- தாங்களேயன்றி வேறில்லை. எப்போதும் ஸ்திரீஜாதிகளுக்குக் கணவன் வீடு சதமேயன்றித் தாய்வீடு சதமல்ல. நானும் ஸ்திரீயர்தலால் மரபு வழக்கப்படி தங்கள் கட்டளையை மீறுமற் செல்லுகிறேன். இதுவரைக்கும் எப்படி என்மேற் கிருபை வைத்திருந்தீர்களோ, அப்படியே இனிமேலும் எளியேன்மீது கிருபைகூர வேண்டும்" என்று இனிய வசனங்களுடன் வணங்கி விடைபெற்று, சீடரைத் துணையாகக் கொண்டு, புத்திரனோடு தானும் ஆசிரமத்தைக் கடந்து, அத்தினபுரத்தருகில் வந்து சீடரை அனுப்பிவிட்டுத் தான் தன் புத்திரனோடு நகரத்துட் சென்றாள். அப்போது அந்நகரத்திலிருப்பவர்கள் இந்தச் சகுந்தலையையும் இராஜ சிங்கமாகிய பரதனையும் பார்த்து, மிகுந்த ஆச்சரியமடைந்து, "ஆ! ஆ! இந்த அம்மனைப் பார்த்தால் ஸ்ரீமகாலட்சுமியைப்போ லிருக்கின்றாள். அருகிற் செல்லுகிற வாலிபனைப் பார்த்தால் மன்மதன்போ லிருக்கின்றான். இவ்வளவு சௌந்தரியமுள்ள இவர்கள் பாதசாரியாய் இந்நகரத்துட் பிரவேசித்த காரணமென்ன?" என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக் கொள்ள, சகுந்தலை, இராஜன் கொலுமுகவாயிலில் வந்து, அங்கிருக்கும் காவலாளிகளைக்கொண்டு தன் வரவை அரசனுக்குத் தெரிவித்து, அரசன் உத்தரவின்மேல் கொலுவிற் சென்று, கணவனுதலால் புத்திரனோடு தானும் வணங்கி நின்றாள். அங்கு அரசனோடு வீற்றிருக்கும் 181 - மந்திரிகளும், 566, - பட்டவர்த்தனரும், 3371, - மகுடவர்த்தனரும், இமபண்டிதர் - இராஜபுரோகிதர் - ஆசிரியர்கள் - 56 - தேசாதிபர்கள் முதலானவர்களும் சகுந்தலையையும் பரதனாகிய வாலிபனையும் நோக்கி, அவர்கள் அழகுக்காக மிகுந்த மகிழ்ச்சியையும், இந்த இராஜசபைக்கு வரும்படி இவ்விருவருக்கும் யார் என்ன தீங்கு செய்தார்களோ வென்கிற ஏக்கத்தையுங் கொண்டிருந்தார்கள். அரசன் தன்னை வணங்கிய சகுந்தலையையும் புத்திரனையும் உய்த்து நோக்கி, 'ஆ! ஆ! நாம் வேட்டையாட வனத்திற் சென்றபோது, கண்ணுவர் ஆசிரமத்தில் இவளைக் கண்டு பரவசமடைந்து, காந்தர்வமணம் புரிந்து கலந்து, மந்திரிகளால் அழைத்துக் கொள்ளுகிறோமென்று சொல்லி வந்துவிட்டு, இதுவரைக்கும் நாம் அழைக்காதிருந்ததினுல் இவளே வந்துவிட்டாள். இனி நாம் இவள் கருத்துக்கு விரோதம் வராமல் அழைத்துக்கொண்டோமானுல் இதோ இருக்கிற நமது புத்திரனுக்கு நமக்

குப்பின் நமது மந்திரி முதலானவர்கள் பட்டங் கட்டுவிக்கமாட்டார்கள். இவளை நீக்கி விடுவோமானால், இவள் மனம் நோகும். அதனால் நமது அரசுக்குக் கெடுதிநேரிடும். இதற்கென்ன செய்கிறது' என்று சற்றுநேரம் ஆலோசித்து, 'நாம் இவளை நிராகரிப்போம். அப்போது, நாம் சாக்ஷிவைத்த ஆகாயவாணி வந்து, இச்சபையி லிருக்கிறவர்கள் யாவரு மொப்புக்கொள்ள அக்காலத்தில் நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லுவாள். அப்போது அத்தாக்ஷி முன்னிலையில் அழைத்துக்கொண்டு, நம்மால் அவள் அடைந்த வருத்தத்தை மாற்றுவோம்" என்று மனதுக்குள் தீர்மானித்துச் சகுந்தலையைப் பார்த்து "ஓ பெண்ணே! நீ யார்? உன் பெயரென்ன? உன்னருகிலிருக்கிற சிறுவன் யார்? உன்னிருப்பிடம் எது? நீ இந்த ராஜசபைக்கு வரவேண்டிய காரணமென்ன?" என்று வினவ, சகுந்தலையானவள் மிகவுந் திடுக்கிட்டு, "ஆ! இதென்ன ஆச்சரியம்? அரசன் நம்மை யாரென்று வினவுகிறார். இவரிப்படி கேட்டது யாது எண்ணங்கொண்டோ தெரியவில்லையே. ஒருவேளை செல்வச்செருக்கினால் நம்மை அவமானப்படுத்தக் கருதி இருக்கிறாரோ? அல்லது மறந்துவிட்டாரோ? என்னமோ எல்லாம் சற்றுநேரத்திற்குள் தெரியவருகிறது. நாம் உண்மையைக் கூறினால் தெய்வம்விட்ட கதியாகட்டும்" என்று தனக்குத்தானே யோசித்து, அரசனை வணங்கி, "ஓ மஹாராஜனே! நான் உமது மனைவி. என் பெயர் சகுந்தலை. இதோயிருக்கிற சிறுவன் உமது புத்திரன். என்னிருப்பிடம் கண்ணுவர் ஆசிரமம். முன்னம் நீர் என்னைக் கூடிப் பிரியுங் காலத்து மந்திரிகளால் அழைத்துக் கொள்ளுகிறேனென்று சொல்லிவந்து இதுவரைக்கும் என்னை அழைக்காமல் இருந்துவிட்டதினால்; நானே உமது இடத்துக்கு வந்துவிட்டேன்" என்று மறுமொழி வழங்கினாள். அரசன் இம்மொழியைக் கேட்டுப் புத்திரனையும் மனைவியையும் பார்த்து மகிழ்வைப் பரியாசமகிழ்வாற் செய்யுஞ் சிரிப்பாக வெளியிற்காட்டக் கருதிக் கலகலவென்று நகைத்து, அன்புடன் நோக்கும் நோக்கைக் கடும்பார்வையாகத் தாக்கி, "மந்திரிகளே! இதென்ன ஆச்சரியம்? இதோ இருக்கிற பெண் என் மனைவியாம். அவள் அருகிலிருக்கிற சிறுவன் என் முடியைத் தாங்கும் புத்திரனும், இவள் கூறுவது மிகுந்த ஆச்சரியத்தைத் தருகிறது. பொய்யை மெய்போற் பசப்புகிறாள். ஆ! ஆ! நன்றாயிருக்கின்றது" என்று ஏளனஞ்செய்து, சகுந்தலை

யைப்பார்த்து, "ஓபெண்ணே நானோ அரசன். நான் கண்ணுவர் ஆசிர்மத்துக்கு என்ன காரணத்தால் வரப்போகிறேன்? அப்படி வந்தாலும் தனித்து வருவேனோ? இதென்ன விந்தை? நானுன்னைக் கூடின தெப்படி? அந்த வரலாற்றை யாவருக்குந் தெரிய உரை" என்று கூற, சகுந்தலை மிகுந்த வருத்தமடைந்து சொல்லுகிருள்—

'வேந்தே! நீர் வேட்டைக்கு வந்தபோது வெளியே யாவரையும் நீக்கி ஒருவராய்த் தனித்துக் கண்ணுவமுனிவர் ஆசிரமத்துக்கு வர, நான் கண்டு எழுந்து மரியாதைசெய்து பொற்பீடமளித் திருக்கச்சொல்ல இருந்து என் வரலாற்றைக் கேட்டு மையலாகி, பூமிதேவி ஆகாயவாணி இவர்களைச் சாக்ஷிவைத்து, நாம் நடத்திக்கொள்ளப்போகிற காந்தர்வ விவாகத்தினுற் பிறக்கும் புத்தினுக்கு முடிசூட்டுகிறேனென்று உறுதிமொழிகூறி, அக்காந்தர்வ விவாகஞ்செய்து என்னைக்கூடிப் பிரியும்போது, 'மந்திரிகளால் உன்னை வரவழைத்துக் கொள்ளுகிறேன்' என்று வாக்குதத்தஞ் செய்துவந்து, கூறிய அவ்வாக்குதத்தத்தை இப்போது மறந்துவிட்டீர். பின்பு நான் கருப்பவதியாகி ஒரு புத்திரனைப் பெற்றேன், கண்ணுவர் அப்புத்திரனுக்குப் பரதனென்று பெயரிட்டு, புத்திரோற்சவ முதலிய சட்கருமமு நடாத்தி, நாலுவேதம்-ஆறு சாஸ்திரம்-அறுபத்து நான்கு கலைக்கியான முதலிய சாஸ்திரங்களையும், அரசர்க்குரிய வில்வித்தை முதலியவைகளையும் பயிற்றுவித்து, என்னையும் இப்புத்திரனையும் உமது நகரத்தில் விட்டுவரச்சொல்லித் தமது சீடருக்குக் கட்டளையிட, அச்சீடர் அவ்வாறு உமது நகரத்திற் கொண்டுவந்துவிட்டுப் போயினர். நான் உமது சபைக்கு வந்தேன்" என்ருள்.

அரசன் இவ்வசனங்களைக் கேட்டு, இவையெல்லா முண்மையென்றுணர்ந்தும் தன் கருத்து நிறைவேறக்கருதி முகம் வேறுபட்டு, மஹா உக்கிரத்தோடு கடுகடுத்த முகம்போல் தன்முகத்தைக் காட்டி, மின்னுமல் இடி இடித்தா லெப்படியோ அப்படிப்போல் அதட்டி "ஆ! ஆ! பெண்ணே! நானென்ன அரசனல்லவா? நான் வேட்டையாடப் புறப்பட்டால் ஒருவனுகப் புறப்படுவேனே? அல்லது வேட்டையாடுகிற தருணத்தில் ஏதாவதொரு மிருக மீறி ஓடிற்ருனல், அப்போது சேனைகளை விட்டுப்பிரியலாம். அப்படிப் பிரிந்தகாலத்தும் உயிர்க்குயிராயிருக்கிற மந்திரிகள் பிரிவார்களா? நான் எவ்விடத்துச்

சென்றாலும் அவ்விடத்துக்கு யாதொரு தடையுமின்றி அவர்கள் உடனிருப்பார்களே. நான் தனித்து வருகிறதென்ன? அப்படித் தான் தனித்துவந்தாலும், முனிவர் ஆசிரமத்தில் வரவேண்டிய காரணமென்ன? வழிதப்பி முனிவர் ஆசிரமத்துக்கு வந்தாலும், அந்த இடத்தில் ஒரு ஸ்திரீயிருந்தால் மோகிக்கக் கூடுமா? இதை யெல்லாம் யோசித்தால் சுத்தப் பொய்யாயிருக்கின்றதேயன்றி உண்மையென்று உன்னருகிலிருக்கிற சிறுவனும் நம்பமாட்டான். இதுவுமன்றி நீ சொல்லுகிறது என்னவென்றால், ஆகாயவாணி பூமிதேவியறிய என்னைக் காந்தருவமணம் புரிந்தாயென்கிறாய். அது சபைக்குதவுமா? 'முழுப் பூசனிக்காயைச் சோற்றோடு மறைத்தவள்.' என்று உலகத்தார் சொல்லக்கேட்டிருந்தேனேயன் றிக் கண்டறியேன். இன்றையதினம் அதை உன்னிடம் கண்டேன். உலகாதிபனான என்பேரிலேயே வழக்காடத் துணிந்துவந்த உன்னை இன்னும் சற்று நேரம் இச்சபையில் வைத்திருந்தால் 'யானை யைச் சுளகால் மறைத்த கதை போல்' எல்லாம் என்னதென்று கைக்கொள்வாய்போலிருக்கின்றதே. உன்னைப்போல் ஸ்திரீகளை நான்கண்டதில்லை. இனி அரைநொடிப்போழுதாகிலும் இவண் நிற்க வேண்டுவதில்லை. வந்த வழியே நோக்கிச் செல்" என்று கடு கடுத் துக் கூறினான்.

சகுந்தலை இவ்வார்த்தைகளைக் கேட்டு ஆறாத்துயருடன், "ஆ! ஆ! தெய்வமே! ஆதியில் இந்த அரசனைக் கண்டபோது, 'பெண்கள் பெறும் பேறு இன்று பெற்றோம்' என்று விருப்புற்று, அரசனைக் கூடி மிகுந்த களிப்படைந்திருந்தேனே. இன்றையத்தினம் இவ்வர சன் சொல் அளவற்ற களிப்பை அதமாக்கிச் சகிக்ககூடாத துன்பத் தைக் கொடுக்கிறதே. இதற்கென்ன செய்வேன்? ஐயோ! இன்னும் சற்று நேரமிருந்து நடந்த விசேஷங்களை விவரித்துக் கூறுவோ மென்றால் ஏவலாளிகள் தள்ளிவிடுவார்போல் தோற்றுகின்றது. இனி நாம் என்ன செய்யப் போகிறோம்" என்று தனக்குத் தானே மனதில் நினைத்து, அரசனைப் பார்த்து, "பிரபுவே! உலகத்தில் யாரேனுமொருவர் கொலை - களவு - காமம் - சூது - வாது - முத லான அக்கிரமங்களில் ஒன்றைச் செய்தால், அவர்களை அரசன் தண்டிப்பது மரபு. அவ்வரசனே வாது. சூது அக்கிரமத்துக்குப் பாத்தியப்பட்டால், அவனைத் தண்டிப்பவர் யார்? ஒருவருமில்லை. நீர் உலகாதிபன். உமது வாக்குக் கெதிர்வாக் குண்டா? இல்லை.

ஆதலால் 'வேலி பயிருக்காதாரம்; அவ்வேலி தானே ப்பிரை மேய்ந்தால் விளையுமாறெப்படி?'. மலைபோன்ற புயமுடைய மன்னனே! என்னைக் கண்டபோது சத்திய வாக்குடனும் நிலை பெற்ற அறிவுடனும் இன்சொல்லுரைத்தீர்! என்னைக் கலந்து பிரிந்த பிறகு கல்லைப்போல் மனமும் கரவடமுங்கற்று, இப்போது இப் படிப் பேசுவீரென்று அப்போது பேதையாகிய அடியேன் அறியா மற் போனேன்! மாரிபோற் பொழியுங் கரத்தையுடைய வள்ளலே! உடலும் உயிரும்போலவும், மலரும் மணமும் போலவும், இரத்தின மும் ஒளியும் போலவும், கணவனுடன் ஸ்திரீகள் இங்கித மாகப் பொருந்தி வாழ்வதல்லாது, அன்னியரைப்போல் ஒருவருக் கொருவர் பிரிவுற்றுத் துன்பத்தால் வருந்தித் துயரப்படாகின்ற தோகையர் என்போலு முண்டோ? இறைவனே! தனக்கு வழிபடு கடவுள் - தனக்குண்டாகிய இன்பம் - தனக்குள்ள வலிமை - தன்க் கிசைந்த அழகு - இன்னுமுள்ள சுபங்க ளியாவும் தனது நாயக னென்றே வந்தித்துச் சிந்திக்கும் பதிவிரதைகளை மனநோவச் செய் வது விவேகமோ? நீதியோ? தருமமோ? ஐயோ! அநீதியும் அசத் தியமும் உம்மிடத்திலிருக்குமானால் நன்னீதியும் சத்தியமு மிருக்கு மிடமெங்கே? அரசருக்குண்டாகிய பெருமை - கீர்த்தி - இன்பப் பேறு - வெற்றி முதலிய சகல கருமங்களுங் கற்புடைய மனை வியைப் படைத்தவர்க் குண்டென்றும், அவர்கட்கே உரிமையென் றும் வேதத்திற் சொல்லியிருப்பதை அறிந்திருந்தும், என்னையும் அருமை மகனையும் அவமதித்துத் தள்ளிவிடுவது ஞாயமோ? அண் ணலே! தனது தலைவராயினோர் வாழ்வைப் பெற்றாலும் தாழ்வைப் பெற்றாலும், இருந்தாலும் இறந்தாலும், கூடப்பொருந்தி அநுபவிப் பவளாகிய குலநாயகியின் மனந் தளரும்படிக்கு மேலெழுந்து இறக்கையை யாட்டி உள்ளிருக்கு மீனை வெளிப்படுத்தி வீழ்ந்து உறிஞ்சிக்கொண்டு தேகத்தில் ஜலம் ஒட்டாமல் உதறிவிட்டுப் போகின்ற மீன் கொத்திக் குருவியைப்போல் பசையற்றுப் பற்றற் றுப் போகின்ற புருஷரை யடுத்தால், அவர் அவளைக் காப்பரோ? ஒரு புத்திரன் பிறக்கவேண்டுமென்று புத்திரகாமேஷ்டியாகமும் - தருமமும்-விரதமும்-நோன்பும் செய்து, சத்திரம் - சாவடி - மடம் - தடம் - சோலை - சாலை - தெய்வப் பிரார்த்தனை-மந்திரம் - தந்திரம் - சக்கரம்-ஔஷதம் முதலிய முயற்சிகளை நடத்திப் பிள்ளையைப்பெற் றுக்கொள்வார்கள். திவ்வியமான குமாரனைக் கண்டும், "நீயாரோ

நாஞேரா" என்று வெறுத்தபேர்களை எக்கதையிலுங் கேட்டறியேன், எக்காசினியிலுங் கண்டறியேன். ஓ! சந்திரவம்சோத்தாரகனே! இவ்விடத்தில் சந்ததியைக் குறித்துச் சலிக்க உம்மைக் கண்டேன். மேலும் நெருப்பிற் கொளுத்திய தீபமும் - காட்டிய வஸ்துவைக் காட்டும் கண்ணுடி நிழலும் - வெவ்வேறு பெயரைப் பெற்ருலும், பொருளொன்றே யல்லது வேறில்லை. அதுபோல் தந்தையின் ஸ்வரூபமே புத்திர ஸ்வரூபமென்று புராதனமாகிய வேதஞ் சொல்லுவது பொய்யாகுமோ? ஐயா! தங்கள் கான்முளையாகிய இச்சிறுவனை யாரோவென்று அவமதித்தால், அந்த அவமதிப்பு உமதல்லவோ? ஏனிதை யோசிக்கவில்லை? இறைவனே! நூறுவாவிகள் வெட்டிய பலன் ஒரு தடாகம் வெட்டியதனுலுண்டாகும். நூறு தடாகம் வெட்டிய பலன் ஒரு யாகஞ் செய்தால் கிடைக்கும். நூறு யாகஞ் செய்த பலன் ஒரு சற்புத்திரனைப் பெற்ருலுண்டாகும். நூறு சற்புத்திரனைப் பெற்ற பலன் சத்தியந் தவருதிருக்கிற் கிடைக்குமென்று சுருதி முறையிடுகின்ற தூணர்ந்தும், சொற் சோர்வு படப்போமா? தோன்றலே! இஃதன்றியும் உலகாளும் மன்னர்களுக்கு முக்கியமாயிருக்க வேண்டியது குற்றமற்ற இல்லாளும், சொல்லுதற்கருமையான மைந்தனும், சத்தியவாக்கும், நன்னீதியும், நடுவு நிலைமையுமாம். இவைகளை யோசிக்குமிடத்தில் என்னையும் இப்புத்திரனையு மகிழ்ச்சியுடன் சேர்த்துக்கொள்ளுவீராஞல், மற்ற சத்திய முதலிய யாவும் உமக்கெளிதி லுண்டாகும். ஓ இராஜ சிங்கமே! உம்முடைய புத்திரன் பிறந்த அன்றைக்கு நினைத்தற்கரிய யாகங்களெல்லாஞ் செய்தபோது, "ஆழி சூழ்ந்த அம்புவியனைத்தும் ஒருகுடையில் ஆள்வான். சத்துரு ஜயமும் படைப்பான்" என்று ஒரு அசரீரிவாக்குப் பிறந்தது. அத்தகைய பராக்கிரமமுடைய மகனை ஆதரித் தருள்செயக்கடவீர்" என்ருள்.

இவ்விதமாகச் சகுந்தலை சொன்ன மொழியனைத்துங் குறைவில்லாமற் கேட்ட துஷ்யந்த மகாராஜன், 'ஓ பிறைபோன்ற நெற்றியையுடைய மின்னே! முதலில் நான் உன்னை இன்னுளென்றறியமாட்டேன். ஏன் பன்னிப் பன்னிப் பேசுகிருய். நீ அன்னம்போல் நடந்து முன்பிருந்த இடம்போய்ச் சேர்" என்று பொன்போற் சாயலையுடைய அணங்குக்குக்கூறி அரசன் வேறு வேலையிலிருப்பவன்போல் உள்ளமுடைந்து விசனப்பட்டுக்கொண் டிருந்தான். அப்போது சகுந்தலை, ஆற்ருெணுத் துன்பத்திலாழ்ந்து,

வேலாயுதமுடைய மன்னனை நோக்கி, "வேந்தே! நீர் பூர்வத்தில் கண்ணுவரிஷியின் ஆசிரமத்திற்கு வந்து, சந்தோஷ வார்த்தை சொல்லிப் புணர்ந்து, சத்தியம் ஒருநாளுந் தப்பேனென்று உபசரித்து, இருவர் மனமும் ஒன்றுபடக் கலந்து, என்னை இல்லாளாக அனுபவித்தது உண்டு. அப்போது பேசிய சொற்களெல்லாம் இப்போது மறந்து சொல்கிறீர். இது என்ன மர்மமோ? அல்லது தர்மமோ? என் கர்மமோ? இவையெல்லாம் உமது குற்றமன்று. என்னுடைய தீவினையேயாகும். நான் பிறந்தபோதே யாவற்றையும் துறந்துவிட்டேன். என் பெற்றோர்கள் என்னை இழந்து விட்டார்கள். இப்போது என்பட்சத்திற் சிறந்தவர் என்று எண்ணி இருந்த நாயகன் மறுத்துவிட்டார். என்னைப்போற் பெண்ணுருக் கொண்டவர்களில் மஹா தீய பாவிகள் வேறுண்டோ? விசுவாமித்திரருக்கும் மேனகைக்கும் பெண்ணாய்ப் பிறந்தும், கண்ணுவ மஹாரிஷியின் கண்ணருளால் வளர்ந்தும், சிங்கசனாதிபதியாகிய சந்திர குலத்து இராஜாதி இராஜனுக்கு உரிய மனைவியாய் விளங்கியும், சூரியனைப்போன்ற வீரியனை யீன்றும், என்னைப்பற்றிய துன்ப நீங்கிற்றில்லை. ஆதலால் ஒருவரையும் வெறுக்கத்தக்கதன்று. இது யான் செய்த பாவம். ஆகிலும் இவ்வுலகில் நல்லோர் - புல்லோர் - புருஷர் - ஸ்திரீகள் - பசு - பக்ஷி - இவை முதலிய யெல்லாவற்றிற்குங் காரணனாகிய கடவுள் ஒருவனுண்டானால், அவன் உள்ளபடி யாவற்றையும் வெளிப்படுத்திக்காக்கக் கடமைப்பட்டவன்; இக்காரியத்தை முடிவு செய்ய மற்றெவராலு மாவதன்று" என்று கூறித் தன் பிள்ளையின் கரத்தைப் பற்றித் திரும்பினாள்; பின் மீண்டும் அரசனைப் பார்த்து, "அரசே, நீர் சுகமாக வாழும். நான் செலவு பெற்றுக்கொள்ளுகிறேன். பிறகு என் தலைவிதி" என்று சொல்லி, மகாதுன்பத்தோடு இராஜ சபையை விட்டு இரண்டடி எடுத்து வைத்தாள். இதற்குள் அரசனுக்கு மனங்கலங்கி, "இன்னும் ஆகாயவாணி பூமிதேவி ஏன் வரவில்லை? நாம் பொய் முதலாகிய குற்றங்களை நீக்கி அரசு செய்தாலும், தற்காலத்தில் இந்தச் சகுந்தலைக்காக இச்சபை யறிய நடந்ததை இல்லையென்று மறுத்தோமே, அதனால் வரவில்லையோ? அல்லது இன்னும் என்ன நேரிடப் போகின்றதோ? கண்ணுவர் சாபாநுக்கிரக சமர்த்தராயிற்றே! அவர் இவ்விருத்தாந்தத்தை அறிந்தால் மிகுந்த வருத்தமடைவரே, ஐயோ! இதற்கென்ன செய்வோம்" என்று பலவாறு மனதில்

நினைத்து, தன் கண்ணையுங் கருத்தையும் சகுந்தலைமீது வைத்து வாடியிருந்தான்.

அத்தருணத்தில் ஆகாயவாணி "ஓ அரசனே இந்தச் சகுந்தலை மஹா பதிவிரதை. ஆதியில் இவளை நீ புணரும்போது என்னைச் சாக்ஷி வைத்தாய். இவள் சொல்லியவையெல்லாம் உண்மைதான். இனித் தடையின்றி இவளை மனைவியாகக்கொண்டு, அச் சிறுவனுக்கு பட்டங் கட்டுக. அச் சிறியவனால் உன் வமிசம் பெருமையடையும். விரைவில் சகுந்தலையை ஆதரி" என்று சொல்ல, அரசன் பேரானந்தத்தை அடைந்து ஓடோடி வந்து, சகுந்தலையினது இரண்டு கரங்களையும்பற்றி அழைத்து, சிறுவனாகிய பரதனை வாரித் தழுவி முத்தமிட்டுச் சபையைப் பார்த்துச் சொல்லுகின்றான்—

கேளுங்கள் சபையோர்களே, சிலகாலத்துக்கு முன்பு வேட்டையாடக் காட்டிற்குச் சென்றபோது ஒரு மானைத் துரத்திச் சென்று, மந்திரியும் நானும் தனித்து ஒரு சோலையிற் போய் அதிலிருக்கும் தடாகத்தில் ஜலபானஞ் செய்து, களை நீங்க ஓர் மரத்தடியிலிருந்து, சற்றுநேரம் சென்ற பின்பு நான் தனியே அவ்வன விநோதத்தைப் பார்க்கச் சென்றேன். என் கண்ணுக்குக் கண்ணுவர் ஆசிரமந் தோன்றிற்று. அதிற் சென்றபோது இம்மடவாரலைக் கண்டு, ஆகாயவாணி முதலானவர்களைச் சாக்ஷி வைத்துக் காந்தருவ விவாகஞ் செய்துகொண்டேன். ஆனால் அழைப்பித்துக்கொள்ளுகிறேனென்று சொல்லிவிட்டு வந்தேனேயன்றி, கூறியபடி அழைத்துக்கொள்ளவில்லை. அதன்மேல் இவள் என் சபைக்கு வந்துவிட்டாள். வந்த இவளை அங்கீகரிப்பேனானால் எனக்குப் பிற்காலம் என் புத்திரனாகிய இச்சிறுவனுக்குக் கிஞ்சித்து மரியாதைத் தாழ்வு வருமென்று யோசித்து, சாக்ஷிகளாயிருக்கிற ஆகாயவாணி முதலானவர்களிலொருவர் வாக்குக் கொடுக்கிறவரைக்கும் உண்மையை வெளிப்படுத்தாதிருக்கவேண்டுமென்ற எண்ணங்கொண்டு தாறுமாறான உத்தரவு கொடுத்துவந்தேன். இப்பால் எனது கோரிக்கை முடியவும் அவள் படுந்துயர் தீரவும் சபையிலுள்ளோர் சந்தோஷங் கொள்ளவும், முன்பு எங்களுக்குள் அந்தரங்கமாய் நடந்த காரியங்களனைத்தையும் அசரீரி யாவருங் கேட்கும்படியாய்க் கூறியபடியால், இனி இப்புத்திரனை எனக்குப் பின்பு என்னைப்போல் அங்கீகரியுங்கள். நடந்ததெல்லா முண்மைதான். இவளையும் இப்புத்திரனை

யும் நான் ஒப்புக்கொண்டேன்” என்று சொல்ல, மந்திரி முத லானவர்கள் திடுக்கென்றெழுந்து, சகுந்தலைக்கு நமஸ்காரஞ் செய்து, “ஓ லோகமாதாவே! எங்களை யாதரிப்பது தங்கள் கிருபை. எளியேங்கள் மீது விரோதம் வைக்காமல் ஆட்கொள்ள வேண்டும்.” என்று வேண்டி வணங்கினர். சகுந்தலை மந்திரி முதலானவர்களை யாசீர்வதித்து, “மந்திரிகளே! நீரோட்டத்திற் பட்ட தெப்பமும் அரசன் வழிப்பட்டவர்களும் ஒன்றுதலால், அரசன் ஒன்றை இகழ்ந்தால் அவனையடுத்த அமைச்சராதியோர் ஒக்க இகழவேண்டியது. ஒன்றைப் புகழ்ந்தால் ஒக்கப் புகழவேண் டும். அப்படி இருந்தும் என்னோடு தர்க்கித்த அரசனோடு கூடி யாதொன்றும் பேசாமல் ‘உள்ளக் கருத்து வள்ளலுக்குத் தெரியும்’ என்ற மூதுரைப்படி நிதானித்திருந்தது உங்களுடைய மேலான அறிவைக் காட்டுகின்றது. இனியுங்களுக்கொரு குறைவுமில்லை” என்று ஆதரித்தாள். பின்பு அரசன் சகுந்தலையோடு அந்தப்புரத் திற் சென்று கூடிக்குலாவிச் சகல இன்பத்தையும் அநுபவித்து வருகிற நாளில் ஒருநாள் அரசன் உலக இன்பத்தின்மேல் வெறுப் புற்று, மறுமைப்பயனை யடையவேண்டுமென்று கருதித் தன் புத்திர னாகிய பரதனை அழைத்து, வேதவேதியர்கள் ஆசிகள் கூற ஐம்பத் தாறு தேசத்தரசர்களும் மந்திரிகளுங் கொண்டாட மகுடாபிஷே கஞ் செய்வித்து, தான் தன் மனைவியோடு காட்டிற் சென்று அரு மையான தவத்தைச் செய்தான். பின்பு, சின்னாட்களுக்குள் துஷ் யந்த மகாராஜனும் சகுந்தலையும் பரமபதஞ் சேர்ந்தார்கள்.

இங்கே பரதமகாராஜன் மநுசாஸ்திர விதி பிசகாமல் செங் கோல் செலுத்தி, அநேக யாகங்களைச் செய்து தேவர்களுக்கு மகிழ் வுண்டாக்கி, தரும தேவதை நான்குபாதத்தில் நடக்கத் தன்னுயிர் போற் பிறவுயிரையும் பாதுகாத்து, கேகய அரசன் மகளான சுனந் தையை மணம் புரிந்து சுகமாக வாழ்ந்தான். அவன் முதல் சந்திர வமிசத்துக்குப் பரத வமிசமென்றும், அம்மரபின் அரசர் கதைக் குப் பாரதமென்றும் பெயர். இந்தப் பரதனுக்குஞ் சுனந்தைக்கும் பௌமன் பிறந்தான். பரதன் அப் பௌமனுக்கு மகுடாபிஷேகஞ் செய்துவிட்டு, காட்டிற் சென்று தவத்தைச்செய்து பரமபதமடைந் தான். அப் பௌமன் தசானவர்த்தன் மகளான விசையை மணம் புரிந்து சுஹோத்திரனைப் பெற்றான். சுகோத்திரன் வீமராஜன்

புதல்வியாகிய கௌசலா தேவியை மணந்து அஸ்தனைப் பெற்றான். அஸ்தன் சூரகேது மன்னன் மகளான சந்தனவதி சமேதனாகி, மநு சாஸ்திரவிதி பிசகாமல் அரசு செலுத்தி, இந்நகரத்தைப் புதுக்கி வீதிகளேற்படுத்தினன். அதனால் அஸ்தினாபுரமென்று இந்நகரத்துக்குப் பெயராயிற்று. அஸ்தனுக்கு நிகும்பன் பிறந்தான். நிகும்பன் பட்டாபிஷேகனாகிச் சுதேவையை மணந்து, அவளிடமாய் அரசர்மீளி என்றொரு புத்திரனைப் பெற்றான். அரசர்மீளி மகுடாபிஷேகனாகி உருக்காதேவி கௌசலாதேவி விசாலாதேவி என்கிற மூவரை மணந்து, நூற்றிருபத்துநான்கு புத்திரர்களைப் பெற்றான். அப் புத்திரர்களில் சவ்வருணனென்பவன் மாத்திரம் அரசுக்கு யோக்கியனா யிருந்தான். அரசர்மீளி சவ்வருணனுக்குப் பட்டங் கட்டித் தான் பரமபதமடைந்தான்.

---

## சவ்வருணராஜன் சரித்திரம்

---

சவ்வருணன் அரசு செலுத்தி வருகிறகாலத்தில் ஒரு நாள் வேட்டையாட யத்தனித்து, மந்திரிகள் வேடர் முதலானவர்கள் புடைசூழக் காட்டிற் சென்று, யானை - சிங்கம் - புலி - கரடி - சார்தூல முதலிய பெரிய மிருகங்களை நாசஞ் செய்தான். அதனால் அவனுக்குக் களையுண்டாகி, ஒரு வனத்திற் சென்று, அதிலிருக்குந் தடாகத்திலே ஜலபானஞ்செய்து களைமாறி, ஒரு மரத்தின் நீழலிற் சற்றுநேரமிருந்து, அவ்வன விநோதங்களைப் பார்க்க யத்தனித்து உலாவி வருகிறபோது, சூரியன் மகளான தபதி அங்கிருந்தாள். அவளைச் சவ்வருணன் கண்டு அவளுடைய அழகுக்கு மகிழ்ந்து மையலாகி அவளருகிற் சென்று, "பெண்கள் நாயகமே! நீ மகா ரூபவதியா யிருக்கிறாய். ஆதலால், நான் உன்னைக் காதலிக்கிறேன். நீ என்னை விவாகஞ் செய்துகொள்" என்று கூற, தபதி புன்னகை காட்டி மறைந்தாள். சவ்வருணன் திடுக்கிட்டு, "ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்? நமது கண்முன் தோன்றிய மாது எப்படி மறைந்தாள்? இவளைக் காண்பதெவ்வண்ணம்" என்று சவ்வருணன் அவ் வனமுழுதிற் தேடி, மிகுந்த காமவெறிகொண்டு திரிகிறதைத் தபதி கண்டு மனமிரங்கி அவன் கண்முன் தோன்றி, "ஓ அரசனே! நீ யேன் வீணாக வருத்தப்படுகிறாய்? நான் சூரியன் புதல்வி. என்

தந்தையோடு ஒரு வார்த்தை சொல்லிவிட்டு என்னை விவாகஞ் செய்துகொள்" என்று உத்தரவு கொடுத்து மறைந்தாள். சவ்வருணன் இம் மொழியைக் கேட்டு, சூரியனை நாம் காண்பது எவ்வண்ணமென்று மிகுந்த வருத்தமடைந்து, நகரத்துக்குவந்து இரவும் பகலும் தபதிமேற் காதலாகி ஏக்கங்கொண்டு தூக்கமின்றி யிருந்தான்.

இப்படி யிருக்கிறநாளிற் சூரியகுல அரசருக்குக் குருவாகிய வசிஷ்டர் இந்தச் சவ்வருணனுக்கும் குருவாதலால் அவனை அவர் பார்க்கவந்தார். சவ்வருணன் எழுந்து எதிர்கொண்டுபோ யழைத்து வந்து, பொற்பீட மளித் திருக்கச்சொல்லி, சோடச உபசாரமுஞ் செய்து எதிர் நின்றான். வசிஷ்டர் சவ்வருணனுக்குப் பல ஆசிகள் வழங்கி, அவனுடைய பிரகாசமான தேஜஸோடுங் கூடிய தேகம் இளைத்திருப்பதைக் கண்ணுற்றுத் தமது ஞான திருஷ்டியினாற் பார்த்தார். சூரியன் குமாரத்தியாகிய தபதியால் நேரிட்ட விரக நோயென்று அறிந்து, "நாம் குருவாயிருந்தும் இந்தச் சவ்வருணன் வருத்தமடைகிறதா? இக்கணம் இந்நோயைத் தீர்க்க வேண்டும்" என்று கருதித் திடுக்கென் றெழுந்தார். சவ்வருணன் அதனைக் கண்டு, திகிலிட்டுப் பயந்து, குறுக்கே வந்து நமஸ்காரஞ் செய்து "ஸ்வாமி! அடியேனுக்கு அநேககாலம் தரிசனம் கொடுக்காமலிருந்து இப்போது தரிசனம் கொடுத்தும், ஒன்றும் வசனியாமல் திடீரென் றெழுந்து செல்கிறதை நோக்கினால் எளியேன் மீது தாங்கள் சித்தம் வெறுப்புற்றிருக்கின்றதாகத் தோன்றுகின்றது. தங்கள் கருத்தை வெளியிட்டால் தாங்கள், மகிழும்படி நடந்து கொள்ளுகிறேன்" என்று வேண்ட, வசிஷ்டர் சவ்வருணனைப் பார்த்துச் சொல்லுகிறார்—

"ஓ சவ்வருண! இடம் - பொருள் - ஏவல் முதலியவற்றைப் பெற்ற நீ வாடியிருப்பதை என் ஞானதிருஷ்டியினால் நோக்கும்போது, சூரியன் புதல்வியாகிய தபதியின்மேல் மோகங்கொண்டு, அதனால் நீ வாடியிருக்கிறா யென்பதை அறிந்தேன். அதற்காகச் சூரியனிடத்துச் செல்லுகிறேன். நீ அஞ்சாமலிரு" என்று வாழ்த்தி விடைபெற்றுக் கணப்பொழுதுக்கு லக்ஷத் திருபத்தையாயிரம் யோசனை தூரம் போகின்ற சப்தமாவென்னும் பரி பூட்டிய ரதத்திற் செல்கின்ற சூரியனை வந்து கண்டார். சூரியன்

அதிக பயபக்தியுடன் அவரை வழிபட்டு "ஐயனே! அதி வேகத் தோடுங் கூடிய என் இரதத்துக்கு முன்வந்து நின்ற காரணமென்ன? அதனை எளியேன்மீது கிருபை வைத்துத் திருவுளம்பற்றவேண் டும்" என்று கூற, வசிஷ்டர் சூரியனைப் பார்த்து, "ஆதித்தனே! உலகத்திலிருக்கும் அரசர்களுக்கெல்லாம் சிரேஷ்டனாகவும் சந்திர வமிச திலகனாகவும் என்னைக் குருவாகக் கொண்டிருக்கிற வனுமாகிய சவ்வருணன், உன் புத்திரியாகிய தபதியின்மேல் காதலாகி அரசாங் கத்தையும் கவனியாமலிருக்கிறான். நான் அவனுக்குக் குருவாகவிருந் தும் அவன் வருத்தப்படுவது தகுதியல்ல. ஆதலால் நீ களிப்புடன் உன் புத்திரியைச் சவ்வருணனுக்கு விவாகஞ் செய்விக்கவேண்டும்" என்று கேட்டார். ஆதித்தன் மிகவு மகிழ்ந்து வசிஷ்டரை வணங்கி "ஓ சுவாமி! தங்களுடைய வாக்கினால் மிகுந்த யோக்கியன் சவ் வருணன் என்றபோதே, அடியேனுக்கு வேறொரு திருஷ்டாந்தம் வேண்டுவதில்லை. ஆனால் நான் செய்யும் தொழில் தங்களுக்குத் தெரியுமாதலால், நான் எவ்வாறு செய்வது. தாங்களே என் புத் திரியை யழைத்துக்கொண்டு போய் விவாகத்தை நிறைவேற்றுங்கள்' என்று சொல்லி, வசிஷ்டரை வணங்கி விடைபெற்றுத் தன் தொழிலை நிறைவேற்றச் சென்றான். வசிஷ்டர் தபதியிடத்துவந்து, அவள் செய்த பூஜையை ஏற்றுக்கொண்டு, நடந்த விருத்தாந்தத் தைச் சொல்லி அழைத்துக்கொண்டு, ஐம்பத்தாறு தேசத்து அர சர்களும் வேதவேதியர்களும் மற்ற பந்து ஜனங்களுமறிய விவா கத்தை நிறைவேற்றினார். சவ்வருணன் வசிஷ்டருக்குச் சாஷ் டாங்க நமஸ்காரஞ்செய்து, "ஓ ஆண்டவனே! நான் கொண்ட கருத்தை வெளிப்படுத்தாததற்கு முன் அதை அறிந்து, அவ் வெண் ணத்தை நிறைவேற்றிச் சந்திர வமிசத்தைப் பாதுகாத்த தயா நிதியே" என்று துதிசெய்ய, வசிஷ்டர் மகிழ்ந்து, பல ஆசிகள் வழங்கி விடைபெற்றுத் தமது ஆசிரமத்துக்கு எழுந்தருளினார். பின் சவ்வருணன் தபதியிடம் ஒரு புத்திரனைப் பெற்று, அப் புத் திரன் குருவினருளால் கிடைத்தவனாகையால் அவனுக்குக் குரு வென்று பெயரிட்டு வளர்த்துவந்தான். அவனால் இந்தச் சந்திர வமிசத்துக்குக் குருகுலமென்று பெயராயிற்று. அப் புத்திரன் மகுடாபிஷேகனாகித், தன் தந்தையிலும் எண்மடங் கதிகமாகத் தருமத்தை நடாத்தி, அநேக யாகங்களைச் செய்து, தன்னுயிரைப் போல் மன்னுயிரையுங் காப்பாற்றி, மகததேசாதிபதி புத்திரியாகிய

சுவாலையை மணம்புரிந்தான். அவன் யாகஞ்செய்த இடத்துக்குக் குருக்ஷேத்திரமென்று பெயராயிற்று. அவர் அவ்வளவு பிரபலமாய் அரசுசெய்து ஒரு புத்திரனைப்பெற்று, அவனுக்குப் பரிக்ஷித்தென்று பெயரிட்டுத், தன் மகுடத்தை அவனுக்குச் சூட்டிப் பரமபதம் சேர்ந்தான்.

குருகுலச்சருக்கம் முற்றிற்று.

---

## 5. சம்பவச் சருக்கம்

---

### கண்ணன் துதி

சித்தசித்தொ டீசனென்று செப்புகின்ற மூவகைத்
தத்துவத்தின் முடிவுகண்ட சதுர்மறைப் புரோகிதன்
கொத்தவிழ்த்த சோலைமன்னு குருகையாதி நெஞ்சிலே
வைத்தமுத்தி நாதனன்றி வானநாடர் முதல்வர்யார்.

ஓ ஜனமேஜய மகாராஜனே! அப் பரிக்ஷித்து மகாராஜன் கேகய தேசாதிபதி புத்திரியாகிய சுபத்திரியை மணந்து, பிரதீபனென்று ஒரு புத்திரனைப் பெற்று, அவனுக்கு முடிசூட்டிப் பரமபத மடைந்தான். பிரதீபன் பீமராஜன் புதல்வியாகிய சுனந்தையை மணந்துத், தேவாபி - சந்தனு என்னும் இரண்டு புத்திரர்களைப் பெற்றான். இவ்விருவரில் மூத்தோனாகிய தேவாபி காட்டிற் சென்று தவஞ்செய்திருந்தான். இளையோனாகிய சந்தனு மகுடாபிஷேகனாகித், தன்னுயிரைப்போல் மன்னுயிரைக் காப்பாற்றிச், சிலநாளில் மிகவும் சிறப்புற்று விளங்கிப், பாகீரதியை மனைவியாக வைத்துக்கொண்டு, அவளிடமாய் பீஷ்மாசாரியைப்பெற்று, அப்பால் மச்சகந்தியைக்கூடிச், சித்திராங்கன் - விசித்திர வீரியன் என்று இரண்டு புத்திரர்களைப் பெற்றான். இவர்களில் சித்திராங்கன் யுத்தகளத்தில் மடிந்தான். விசித்திரவீரியன், மகுடாபிஷேகனாகிக், காசிராஜன் புதல்வியரில் இருவரை மணந்து சந்ததியில்லாமல் இறந்தான். அந்த இரண்டு ஸ்திரீகளில் ஒருத்தியை எனக்குக் குருவாகிய வேதவியாச மூர்த்தி மணந்து, திருதராட்டிரனையும் பாண்டுராஜனையுந் தந்து, மற்றொரு ஸ்திரீயினிடமாய் விதுரனைப் பாலித்தார். இம் மூவரில் மூத்தோனாகிய திருதராட்டிரன் காந்தாரியை மணந்து சுயோதனன் முதலாகிய நூறு புத்

திரனைப் பெற்றான். இளையோனாகிய பாண்டுராஜன் குந்தி - மாத்ரி என்னுமிரண்டு ஸ்திரீகளை மணந்து, குந்தியினிடமாய்த் தரும ராஜன் - பீமன் - அர்ச்சுனன் - என்னு மூவரையும், மாத்ரி யினிடமாய் நகுலன் - சகாதேவன் என்னும் இருவரையும் பெற்றான். இந்த ஐவர்க்கும் பூர்வ புண்ணியவசத்தாற் பாஞ்சாலியாகிய திரௌபதை மனைவியானாள். இந்தப் பாஞ்சாலி தரும ராஜனுக்குப் பிரதிவிந்தனையும், பீமனுக்குச் சுருதீசனையும், அர்ச்சுனனுக்குச் சதாநீகனையும், சகாதேவனுக்குச் சுதசேனனையும் பெற்றாள். மற்றுந் தருமராஜன் சுயம்வர மூலமாக மாளவ தேசாதிபதி புத்திரியாகிய வேதிகையை மணம்புரிந்து, மிகுந்த சாந்தத்தையுடைய சாதேயனைப் பெற்றான். பீமன் சலதரை என்னும் கன்னிகையை மணந்து சுகுணனையும், இடும்பி என்னும் அரக்கியை மணந்து மிகுந்த அழகையுடைய கடோர்கஜனையும் பெற்றான். அர்ச்சுனன் சுபத்திரையை மணந்து அபிமன்னனையும், உரகபதி மகளாகிய நாககன்னியை மணந்து அரவானையும் பெற்றான். நகுலன் இலகீர்மதியென்னும் கன்னிகையை மணந்து, மித்திரனைப் பெற்றான். சகாதேவன் விஜையையை மணந்து, வேத்திரனைப் பெற்றான். இந்த ஐவர்க்கும் பிறந்த பன்னிரண்டு புத்திரர்களில், அர்ச்சுனன் புத்திரனாகிய அபிமன்னன் விராடன் மகளாகிய உத்தரையை மணந்து, உன் தந்தையாகிய பரிக்ஷித்து மகாராஜனைப் பெற்றான். அப்பரிக்ஷித்து மாத்திரையென்னுங் கன்னிகையை மணந்து ஜனமேஜய னென்னும் பெயரை வகித்த அரசனே! உன்னைப் பெற்றான். நீ கற்புடைய இவ்வபுஷ்டையைக் கூடிச் சதாநிகனைப் பெற்றாய். சதாநிகன் வைதேகியை மணந்து அஸ்வமேதனைப் பெற்றான். இனி அஸ்வமேதனுக்கு யார் பிறப்பார்களோ தெரியாது. இதுதான் சந்திரவமிச பரம்பரை. சந்திரன் முதல் அஸ்வமேதனீறாக நாற்பத்தேழுதலைமுறையாயின. ஓ அரசனே! சந்திர குல அரசர்களின் சரிதைகளைச் சொல்ல எவரால் முடியும்? ஒன்றாகிய பரப்பிரம ஸ்வரூபி ஸ்ரீமந்நாராயணராகிய வேதவியாசரது அநுக்கிரகத்தினால் நான் கிஞ்சித்துச் சொன்னேன்" என்று வேதவியாசரைத் தியானித்து அஞ்சலி செய்தார்.

இவையனைத்தையுங் கேட்ட ஜனமேஜயன் பிரம்மானந்தத்தை யடைந்து, இரண்டு கண்களிலும் ஆனந்தக் கண்ணீர் ததும்ப இரண்டு கைகளையும் சிரமேற்கொண்டு, வேதவியாசரைத்

தானுந் தியானித்து, வைசம்பாயனரை வணங்கி, "ஓ ஸ்வாமி! தாங்கள் கூறியவற்றை யெல்லாங் கேட்டு மகிழ்வடைந்தேன். அடியேன் கருத்தில் ஒரு விருப்பமிருக்கின்றது. அஃதென்ன வென்றால்: சந்தனு மஹாராஜன் பாகீரதியை மணந்து பீஷ்மாசாரியைப் பெற்றதும், வேதவியாசரால் திருதராட்டிரன் முதலானவர்கள் பிறந்ததும், அவர்களால் நூற்றுவராதியோர் வந்ததும், இவை யெல்லாம் விளங்க உரைக்கவேண்டும்" என்று வேண்ட, வைசம்பாயனர் ஜனமேஜய மஹாராஜனை நோக்கி, "ஓ விவேகத்திற் சிறந்த அரசனே! முன்னம் சந்தனுராஜன் சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேள்" என்று சொல்லத் தொடங்கினார்.

## சந்தனுராஜன் சரித்திரம்

பிரதீபனுடைய இளையகுமாரனாகிய சந்தனுவென்பவன், இளமையிலேயே நாலுவேதம் - ஆறு சாஸ்திரம் - அறுபத்துநாலு கலைக்யானம் முதலியவற்றை அப்பியாசஞ்செய்து, எல்லாக் காரியங்களினுஞ் சுகுண சிகாமணியாய் விளங்கினான். இவனது நற்குண நற்செய்கைகளைக் கண்ட பிரதீபன் மனமகிழ்ந்து, தன்பட்டத்தை அவனுக்குக் கொடுக்க நினைத்து, வேதவேதியர்களையும் ஐம்பத்தாறு தேசத்தரசர்களையும் அழைப்பித்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் அழகிலுயர்ந்த அச்சந்தனுவுக்கு மகுடாபிஷேகஞ் செய்து, தேவர்களுக்குத் திருப்தி செய்வித்து, பிரமசாரியர் - கிரகஸ்தர் - வானப்பிரஸ்தர் - சன்யாசிகள் - ஆதாரமற்றுத் துறக்கப்பட்டவர் - ஆதுலர் - தன்னிடத்து வந்திரந்தவர் - விருந்தினர் - சுற்றத்தார் முதலானவரைப் பாதுகாத்துத் தன்னுயிர்போல் மன்னுயிரனைத்தையும் கருதி, எவர்க்கும் யாதொருகுறைவும் வராதிருக்கச் செங்கோல் செலுத்தி வருகிறநாளில், ஒருநாள் வேட்டையாட யத்தனித்து, மந்திரிகள் - வேடர்கள் முதலாகிய சேனைகளோடு நகரத்தைவிட்டு வெளிப்பட்டுக் காட்டிற் சென்று வேட்டையாடி, மந்திரி முதலானவர்களைப் பிரிந்து தனித்து விடாய்ப்பட்டுக், கங்காநதி தீரத்துக்கு வந்தான். அங்கே கங்காநதி முகில்போலக் கறுத்து, சைவலத்தைப் போல் நெருங்கி, கொன்றைக் காயைப்போல் நீண்டு, கருமணலைப் போற் சொலித்து விளங்குகின்ற குழலையும் பார்ப்பவர் கண்ணைக்

கிரகிக்கும் வனப்புடைத்தாகிப், பொன்னிறமாகிய சிந்தூரத்திலக மிட்டுச் சிறந்த மூன்றும்பிறை போன்ற நெற்றியையும்; மதனன் கைக் கரும்பு விற்போன்ற கரும் புருவத்தையும், வாளை நிகர்த்த கண்களையும், சந்திரபிம்பத்தை யொத்த வதனத்தையும், வள்ளை போன்ற செவியையும், ஆம்பலனைய இதழையும், முல்லைமலரனைய பல்வரிசையையும், கமுகையொத்த கழுத்தையும், வேய்புரை தோளையும், பொருப்பனைய இருதனத்தையும், நூலனைய மருங்குலை யும், அரவப்படம் போன்ற அல்குலையும், கமலமொத்த அடியையு முடைய பூலோகப் பெண்ணுருவந் தரித்து, சந்தனுராஜன் அருகி லிருக்க விருப்புற்றவளாதலால், தன்னந் தனியே யிராமல் சந்தன மரத் தருகி லிருந்தாள். விடாய்ப்பட்டுக் கங்கையைத் தேடிச் சென்ற சந்தனுமஹாராஜன் அவளைக் கண்டு பிரமை கொண்டு, விடாய் தணியும்படியாகக் கங்கை வெள்ளத்திற் படியவந்த கருத்தை விட்டு, இம்மங்கையின் வனப்பென்னுங் கடலிலாழ்ந்து, அக்கடலுட் பூத்த முகமாகிய கமலத்தினிடத்துத் தன்னிரு கண்களாகிய வண்டு களைப் படியவைத்து, அவ்விடத்துத் தோன்றிய மயலாகிய மது வைப் பருகித் தாகவிடாய் நீங்கிக், காமவிடாய் கொண்டு, "ஆ! இம் மங்கை பூதலமங்கையோ? பூமங்கையோ? திருமங்கையோ? வர மங்கையோ? வான்மங்கையோ? நீர்மங்கையோ?" என்று ஐயமுற்று, கண்ணிமைப் பதினாலும் நிலத்திற் காலூன்றி நிற்றலினாலும் மாலை வாடுவதினாலும் வெயர்வுண்டா யிருத்தலினாலும் பூதலமங்கை யென்று நிச்சயித்து, அவளருகிற் சென்று, "ஓ பெண்கள் நாயகமே! நீ யாருடைய புத்திரி? இந்த வனத்தில் தன்னந்தனியே இருக்க வேண்டிய காரணமென்ன?" என்று வினவ, பாகீரதி "நான் திரு மால் புத்திரி. பிரமன் சாபத்தால் இங்கு வந்தேன்" என்று ஒரு போக்காக உண்மையை வெளிப்படுத்தினாள். அதைக் கேட்ட சந் தனுமஹாராஜன் அவளை மணக்க வேண்டு மென்கிற விருப்பத்தி னாற் சாபத்தின் வரலாற்றைக் கேட்க விருப்பமுறாமற் றுரிதப்பட்டு "ஓ பெண்கள் சிரோமணி! பிரமன் சாபத்தினால் இங்கு வந்தது உண்மையா யிருக்குமானால், இவ்வுலகத்தில் என்னைவிட உயர்ந்தவ ரில்லை. மேலும், எனக்குப் பட்டத்தரசியில்லை. ஆதலால் நீ என்னை மணஞ்செய்து கொள்" என்று இனிய வசனங்களினால் வேண்ட, கங்காதேவி இவ்வசனங்களைக் கேட்டு நாணங் கொண்டவளாய்ச் சந் தனம் பொருந்திய தனது மார்பை நோக்கிய வண்ணம், "ஓ சந்திர

குலோத்தாரகனை மகாராஜனே! நீர் இப்போதுரைத்த கருத்தின் படி நடக்கிறேன். ஆனால் ஒரு உறுதி கூறுகிறேன்; அவ்வுறுதிக்கு எப்போது கெடுதிவருமோ, அப்போதே நம் ஒருவர்க்கொருவர் சம்ப ந்த மில்லை. அவ்வுறுதி யென்ன வென்றால் - என்வயிற்றிற் பிறக்கும் சிறுவர்களைப் பார்ப்பவர்கள் குலை நடுங்கும்படி கொடிய கொலை செய்து விடுவேன். அதற்கு நீர் தடைசொல்லாம லிருக்கவேண் டும். அப்படிக்கு மனமிருந்தாற் கைகொடும்" என்று கேட்க, இதைக்கேட்ட அரசன் அதிகக் காமவெறி கொண்டவனாதலால் அதற்கொப்புக்கொண்டு கைகொடுத்துக், கங்காதேவியை நகரத்திற் கொண்டுவந்து, நகரத்தாரும் மற்ற அரசர்களும் வேத வேதியர் களும் சூழ அக்கினி சாக்ஷியாய் மணம்புரிந்து, இரதிமதனு மிவ் விருவருந்தாம் என்று யாவரும் மகிழ்ந்து புகழ வாழ்ந்து வருகிற காலத்தில், பாகீரதி கருப்பந்தரித்து ஒரு புத்திரனைப் பெற்று, உடனே அச்சிசுவைத் தாதிகளுள்ளம் நடுங்கக் கங்கையிலெறிந்து விட்டாள். இந்தச் செய்தி அரசனுக்குத் தெரிந்தது. அவன் கன வருத்தமடைந்து, முன் கொடுத்த வாக்குத்தத்தத்தை நினைத்து, ஒன்றுமறியாதவனைப்போ லிருந்துவிட்டான். இந்தப் பாகீரதியோ புத்திரனைப் பெறுகிறதுங் கங்கையிலெறிகிறதுமாக ஏழு புத்திரர் வரையில் நஷ்டஞ்செய்து வந்து, மறுபடியும் கருப்பவதியாயினாள். இந்தப் பாகீரதி செய்து வருகிற கெட்ட செய்கையைக் கண்டுங் கேட்டு மிருக்கிற பிரஜைகள் பலவாறு இகழ்ந்ததுமன்றி ஸத்தியந் தப்பாமல் அரசு செய்துவருகிற அரசனையும் நிந்தித்தார்கள். இந்தச் செய்தி தனக்குத் தெரிந்திருந்தும் அதுகாறுங் கேட்காதிருந்த அர சன், எட்டாவது புத்திரனைப் பாகீரதி எப்போது பெறுவாளென்று மிகுந்த ஜாக்கிரதையோடு காலம் பார்த்திருந்தான்.

---

## பீஷ்மர் உற்பவம்

இப்படி யிருக்குந் தருணத்திற் பாகீரதி பத்து மாதமும் நிறை வேறி, எட்டாவது புத்திரனைப் பெற்றாள். அதை அங்கிருந்த தாதிக ளால் அரசன் கேள்வியுற்று, அதிக விரைவில் அந்தப்புரத்திற்குச் சென்று, பிரசவித்த இடத்தில் அச்சமில்லாமற் பிரவேசித்துச், சிசுவைக் கையி லேந்திக்கொண்டு, கங்காதேவியின் பாதத்தில் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, "ஓ பாகீரதி! என்னால் சந்

திரவமிசம் விர்த்தியாக இச்சிறுவனை யெனக்குத் தானமாகக்கொடு. ஆதியில் உனக்குக் கொடுத்த வாக்குத்தத்தத்தை மறந்தவனல்ல. பிள்ளைப் பிச்சை கேட்கிறேன். கிருபை கூர்ந்து அளிக்கவேண்டும்" என்றுவேண்ட, பாகீரதி கடுகடுத்து, மஹா உக்கிரத்தோடு அரசனை நோக்கி "இவ்வுலகாதிபரான நீர் கூறிய கட்டுரை மறந்து, என் விரதத்துக்குக் கெடுதி நினைத்தபடியால், இன்று முதல் உனக்கும் எனக்கும் சம்பந்த மில்லை" என்று சொல்லிவிட்டு, எழுந்து செல்ல யத்தனித்தாள். அரசன் அதுகண்டு, "ஆ! பெண்கள் பெருமாட்டீ! உன்னைப் பிரிந்து அரைநொடிப்போதாவது உயிர் தரித்து வாழேன். நீ எங்குற்றாலும் அங்குவந்து உனக்குப் பணிவிடை வேண்டுமானாலுஞ் செய்வேன்" என்று மறிக்க, பாகீரதி நகைத்து, "ஓ அரசனே! இனி நீ என்னை நம்பாதே. நான் கொண்ட கருத்து நிறைவேறிற்று. நான் வந்ததும் உன்னிடமாய் எட்டுப் புத்திரரைப் பெற்றதும் வினைவசம். நீயும் வினைவசத்தாற் சந்திரவமிச அரசனாகப் பிறந்தாய்" என்று சாற்ற, இதைக்கேட்ட அரசன் திடுக்கிட்டு, "ஓ பெண்ணரசியே! முன்னம் உன்னைக் கண்டு யாரென்று கேட்டபோது, பிரமன் சாபத்தால் இங்கு வந்திருக்கிறேனென்றுரைத்தாய். அந்த வேளையில் நான் காம வெறியால் அச்சாபத்தின் வரலாற்றைக் கேளாமலும், நீ கூறிய உறுதி மொழியைக் கவனிக்காமலும் வாக்குத்தத்தஞ் செய்து உன்னை மணம் புரிந்தேன். இன்றையத்தினம் அந்தச் சாபத்தின் வரலாற்றையும், என்னிடமாயெட்டுப் புத்திரர்களைப் பெற்ற விதத்தையும் என்பிறப்பையும் விளங்க உரைக்கவேண்டும்" என்று கேட்க, பாகீரதி அரசனைப் பார்த்து "ஓ அரசனே! முன்னம் சத்தியலோகத்திற் பிரமதேவனானவன் இந்திரன் - அக்கினி - இயமன் - நிருதி - வருணன் - வாயு - குபேரன்-ஈசானன் - அஷ்டவசுக்கள் - முப்பத்துமுக்கோடி தேவர்கள் - நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள் - கின்னரர் - கிம்புருடர் - கருடர் - கந்தர்வர் - சித்தர் - வித்தியாதரர் முதலானவர்கள் புடைசூழச் சபை கூடி இருக்கிற தருணத்தில், வானதியாகிய கங்கையும் அச் சபைக்குச் சென்றாள். அங்கே ஒரு காற்றுண்டாய்க், கங்கை, அணிந்திருந்த வஸ்திரத்தை விலக்கிற்று. அதனால் கங்கையினது அவயவந் தெரிந்தது. அப்போது அச்சபையிலிருந்த யாவரும் மஹாபதிவிரதையான கங்கைக்கு மானக்கேடு வந்ததேயென்று கனவருத்தமடைந்து, அவரவர்கள் அக்கங்கையினது அவயவத்தை

நோக்கொணு தென்று கருதித், தங்கள் தங்கள் நயனத்தை மூடிக் கொண்டார்கள். அங்குவந்திருந்த மேற்றிசைக் காவலாளியாகிய வருணன் மாத்திரம், அக்கங்கையின் அவயவத்தின்மேற் கண்ணைக் செலுத்தினுன். பிரமன் அதுகண்டு, மிகுந்த சினங்கொண்டு வரு ணனை அழைத்து, "ஓ வருணு! தேவர்களுக்குள் உயர்ந்த பீடத்தி லிருந்தும், பூலோக புருஷரைப்போல் அசேதனப் புத்தியைக் கைக் கொண்டு, மஹாகற்புடைய கங்கையின் அவயவத்தைக் கண்ணுற் ருய், கண்ணுற்றபோதே ஜனனமுண்டாயிற்று. ஆதலால் நீ இப்போ திருக்கிற உயர்ந்த பீடத்தை நீங்கிப், பூலோகத்திற் சந்திரவம்ஸ ராஜபரம்பரையிற் ருேன்றி, நெடுநாள் ராஜ்ய சம்பன்னனுய் நீ, காதல்கொண்ட கங்கையை மணந்து சில புத்திரரைப் பெற்றுப் பின் னுஞ் சிலகாலமிருந்து, மறுபடியும் முன்போல் உன் பீடத்தைச் சேரக்கடவை" என்று சாபமிட்டுக், கங்கையை நோக்கி, "ஓ லோக மாதாவே! இத்தேவசபையில் உன்னவயவந் தோன்றினபடியால், நீயும் பூலோகத்திற் சென்று மங்கையா யுதித்துச், சந்திரவமிச ராஜனை மணந்து புத்திரரைப் பெற்று, முன்போல் ஒரு நதி உருவ மாகக்கடவை" என்று சாற்றினுர். அவ்வருணன் அச்சாபத்தை ஏற்றுச் சந்திரவமிச பரம்பரையிற் ருேன்றி, குருகுலசிகாமணியா யிருக்கும் பிரதீபனுக்குப் புத்திரனுகப் பிறந்து, சந்தனுவென்னும் காரணப் பெயர் வகித்தான். அவன்தான் நீ. பின்பு கங்கையாகிய யான் அச்சாபத்தை நிறைவேற்றக் கருதிப் பூலோகத்தை நோக்கி வருகிறபோது, அனவன் - அனிலன் - ஆபச்சைவன் - சோமன் - தரன் - துருவன் - பிரத்தியூசன் - பிரபாடன் என்கிற அஷ்டவசுக் களும் வாடின முகத்துட னெதிர்ப்பட்டு, எனக்கு நமஸ்காரஞ் செய்து நின்ருர்கள். நான் அவர்களை வாழ்த்தி, "அஷ்டவசுக் களே! நான்தான் பிரமதேவர் சாபத்தினுலே பூலோகத்திற் சென்று பெண்ணுகப் பிறக்கப்போகிறேன். அதற்காக என் முகம் வாட வேண்டியது. நீங்களேன் முகம்வாடி யிருக்கிறீர்கள்?" என்று வினவினேன். வசுக்கள் எனக்கு மறுபடியும் நமஸ்காரஞ் செய்து "அம்மணி! 'தேடிப்போன மருந்து திருஷ்டிக்ககப்பட்டது' போலாயிற்று தங்கள் தரிசனம். வசிஷ்டர் சாபத்தினுல் நாங்கள் பூலோகத்தில் மானிடராய்ப் பிறக்கப் போகிறேம். அதற்காக முகம் வாடிச் செல்லுகிறபோது உம்மைக் கண்டோம். இனி எங்களுக்கு யாதொருகுறைவுமில்லை. எங்கள் சாபத்தின் வரலாற்றைச் சொல்லு

கிறோம். அதனைக் கேட்டு, அவ்வாறு எங்களைக் கிருபைகூர்ந்து ஆதரிக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டு, "ஓ பாகீரதி! முன்னம் தவசிரேஷ்ட சிகாமணியாகிய வசிஷ்டரைத் தரிசிக்கத் தேவர்களெல்லாருஞ் சென்றார்கள். அவர்களோடு நாங்களும் போய் வசிஷ்டருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தோம். வசிஷ்டர் வந்தவர்களையெல்லாம் ஆதரித்து ஆசிர்வாதஞ் செய்து, இன்றையத்தினம் யாவரும் நமது அன்னம் புசிக்கவேண்டும்" என்று கட்டளையிட்டார். அவர் வாக்குக்கு அழிவு வரக்கூடாதென்று யாவரும் ஒப்புக்கொண்டோம். வசிஷ்டர் காமதேனுவை அழைத்து, அவ்விடத்தில் வந்திருந்த யாவருக்கும் அன்னமிட உத்தரவு செய்தார். அது அவர் கட்டளைப்படி சிற்றுண்டி முப்பழம் - பொரிக்கறி - முதலியவற்றோடு அன்னமிட்டது. யாவரும் புசித்தபின்பு சந்தனம் புஷ்பம் தாம்பூல முதலிய வற்றைக் குறைவின்றிக் கொடுத்து அது போய்விட்டது. பின்பு நாங்கள் யாவரும் அவரவிருப்பிடத்துக்குச் சென்றோம்.

இப்பால் எங்களில் ஒருவனாகிய பிரபாசன், நாங்கள் வசிஷ்டரிடத்திற் சென்றதையும் காமதேனு இருந்திட்டதையும் தன் மனைவியினிடம் சொன்னனும். அதனைக்கேட்ட அவன் மனைவி அக் காமதேனுவின் மேல் இச்சைகொண்டு, 'அதனை எனக்குக் கொண்டு வந்து கொடுத்தால்தான் உன்னோடு இணங்குவேன். இல்லாவிட்டால் இணங்கேன்' என்று பிணங்கினளாம். அதற்கு இந்தப் பிரபாசன் மறுத்துக் கூறச் சக்தியில்லாதவனாய், அவள்மேற்கொண்ட காதலினால் அக் காமதேனுவைக் கொண்டு வருகிறேனென்று வாக்குத்தத்தஞ் செய்து, எங்களிடத்து வந்து சங்கதியைத் தெரிவித்து எங்களையும் துணைபடச் சொல்லிக் கேட்டுக்கொண்டான். அதற்கு நாங்கள் வசிஷ்டருடைய மகத்துவத்தை, எடுத்துக்காட்டி மறுத்தோம். அதன்மேல் பிரபாசன் நீங்கள் என்னுடன் கூடத் துணையாக வந்திருங்கள்; நான் அக் காமதேனுவைக் கொண்டுவந்து விடுகிறேன்" என்று வேண்டிக்கொண்டான். வினைவழி மனஞ் செல்லுகிறது உண்மையாதலால், மறுத்த நாங்கள் ஒப்புக்கொணடு வசிஷ்டர் இருப்பிடத்துக்குச் சென்றோம். அப்போது இவன் தனியே சென்று, அக் காமதேனுவைப் பற்றிக்கொண்டு வந்து, மனையாள் களிக்க வீட்டிற் சேர்த்தான். பின்பு வழக்கமாக அக் காமதேனுவினிடத்துத் தருப்பை சமிதை முதலியவற்றைப் பெற்று ஓமஞ்செய்கிற முனிவர்கள், அன்றுகழிந்த மறுநாள் உதயத்தில்

வந்து, காமதேனுவை அழைத்தார்கள். அப்போது காமதேனு வராதிருப்பதைக் கண்டு, வசிஷ்டரிடத்துச் சென்று வணங்கிக், "காமதேனு எங்குற்றதையா?" என்று வினவ, வசிஷ்டர் ஆச்சரியப் பட்டு, நமது காமதேனுவை அசுரர்கள் பற்றமாட்டார்கள். இந்தப் பூலோகத்தார் பற்றுவது மஹாதுர்லபம். மற்றத் தேவர் முதலானவர்கள் நினைக்கவே மாட்டார்கள். ஆயின் காமதேனு எங்குற்றது? சுபாவத்தில் அக் காமதேனு மிகுந்த பராக்கிரம முடையதாயிற்றே" என்று பலவாறு நினைத்து, தமது ஞானதிருஷ்டியால் நோக்கினர்; காமதேனுபோய்ச் சேர்ந்திருக்கிற இடந் தெரிந்து, மிகுந்த சினங் கொண்டு, இந்த அஷ்டவசுக்கள் அஷ்டதிக்குப் பாலகருக் கிணை யானவரா யிருந்தும், நம்மை மதிக்காமல் காமதேனுவைக் களவு செய்தாரே" என்று கடுகடுத்து ஒரு மந்திரத்தை யுச்சரித்தார். அந்த மந்திர தேவதைகள் ஓடோடியும் வந்து, எங்கள் எட்டுப் பெயரையும் பற்றி இழுத்துக்கொண்டுபோய் வசிஷ்டர் பாதத்தில் வீழ்த்தின. நாங்கள் மனங்கலங்கி, அநேக உபசார வழிபாடுகளைச் செய்து, பயபக்தியுடனே அவரை நமஸ்கரித்தோம். வசிஷ்டர் எங்களை உற்று நோக்கி, "அடா! துராத்மாக்களே! என்னைச் சற்றும் எண்ணமல் என் காமதேனுவைக் களவு செய்தமையால், நீங்கள் பூலோகத்தில் மானிடயோனியிற் பிறக்கக்கடவது" என்று சபித்தார். நாங்கள் மனவருத்தமடைந்து நமஸ்காரஞ் செய்து, "ஓ சுவாமி! நாங்கள் தங்களுடைய காமதேனுவைப் பற்ற உண்மையான கருத்தைக் கொண்டவர்களல்ல. எங்களி லொருவனகிய பிரபாசன் மாத்திரமே அக் கருத்தை யுடையவன். அது தங்களுக்கு நன்ருய்த்தெரிந்திருக்கலாம். ஆகவே யாவருக்கும் ஒரே மாதிரியான சாபங் கொடுப்பது தகுதியல்ல. ஆதலால் எளியேங்கள் மீது சுவாமிகள் கிருபை கூர்ந்து பாதுகாக்கவேண்டும்" என்றூர்கள். அதனல் வசிஷ்டர் தாம் கொண்ட கோபம் சிறிது தணிந்து, "ஓ அஷ்டவசுக்களே! உங்களில், எழுவர் இந்தக் கெட்டசெய்கைக்கு அதிகமாகப் பாத்தியப் படாமையால், அவ் வேழுபேரும் என் சாபப்படி மானிடயோனியிற் பிறந்தாலும், உடனே கங்கையி லெறியப்பட்டு இறந்து பழைய தேவரூபங் கொள்ளக்கடவர்! அதிகமாகப் பாத்தியப்பட்ட பிரபாசன் மாத்திரம் மானிடயோனியிற் பிறந்து, நெடுங்காலம் வரையில் பூலோகத்தி லிருக்கக் கடவன். அப்படி யிருந்தாலும் இவன் தன் மனைவி முன்னிலையில் இக்கெட்ட செய்கையைச் செய்தபடியால்,

பூலோகத்தில் அவன் மனைவியை அடையமாட்டான்; மற்றப் பூலோக இன்பங்களையும் அதிகப் புகழையும் பெறக்கடவன்" என்று சாபம் கொடுத்தார்.

அச் சாபத்தை ஏற்றுக்கொண்டு, 'நம்மைப் பெற்றவுடன், கொலைசெய்பவர்கள் யார்? பூலோக ஸ்திரீகள் செய்ய மாட்டார்களே' என்று ஏங்கிக்கொண்டு வருகிற நாங்கள் எங்கள் முன்னே, தங்களைக் கண்டோம். எங்கள் குறையையும் விண்டோம். தாங்கள் பிரமன் சாபத்தினால் பூலோக ஸ்திரீயாகப் போகின்றபடியால், தங்கள் கருப்பத்தில் யாங்கள் ஜனிக்கிறோம். நாங்கள் ஜனித்தவுடன் எங்கள் மீது கிருபை கூர்ந்து, எங்களை எங்கள் சொற்படி கங்கையிலெறிந்து விடவேண்டும்" என்று பிரார்த்திக்க, நான் அதற் கொப்புக்கொண்டு, "வசுக்களே! நான் சந்தனு மகாராஜன் மனைவியாகப் போகிறேன். வருஷத்துக்கொருவராக வந்து பிறவுங்கள்" என்று கட்டளையிட்டுக், கங்காநதியருகில் வந்து, பூலோக ஸ்திரீபோல் உருவங்கொண்டேன். காலகதி இப்படி யிருந்தபடியால், உன்னிடத்தில் மர்மமாக வாக்குத்தத்தம் பெற்றுக்கொண்டு, இதுவரைக்கும் அவ்வாறு நடந்தேன். இன்றையதினம் நீ மறுத்தபடியால், உனக்கும் எனக்கும் இனிச் சம்பந்த மில்லை" என்று சாற்ற, அரசன் மிகுந்த ஆச்சரியத்தை அடைந்து, "ஆ! பாகீரதி! உனது ஸ்வரூபந் தெரியாமல் பூலோக ஸ்திரீ யென்றே நான் இலேசாக நினைத்திருந்தேன் இன்றையத்தினம் உன் வரலாறும் என் வரன்முறையும் தெரிந்தன. இதோ இருக்கிற சிறுவன் - நெடுங்காலம் இருப்பானென்று கூறினையே, இவனால் என்ன விளையுமோ? அதனையும் அருளவேண்டும்" என்று வேண்ட, கங்கை "ஓ அரசனே! வசிஷ்டர் சாபப்படி இச் சிறுவன் மனைவியின்றி மற்றப் பூலோக இன்பங்களை யெல்லாம் அடைந்து, ராஜராஜாக்களெல்லாம் நடுங்கிப் பணியும் பராக்கிரம வியாக்கிரம்போல இனிது வீற்றிருந்து, சந்திரகுல மூதாதையாய் விளங்குவன்" என்று புகல, அரசன் இவ்வசனங் கேட்டுக் கங்கையை நோக்கி— "ஓ பாகீரதி! இச்சிறுவன் மனைவியின்றி, இருப்பா னென்றபோது இப்புத்திரனோடு சந்திரவமிசம் அதமாகுமே. ஆதலால் சிலகாலம் நீயும் நானும் கூடி வாழ்ந்து, ஒரு புத்திரனைப் பெற்று வைத்து, இருவரும் அவரவர்கள் யதாஸ்தானம் போய்ச் சேருவோம்" என்று வேண்டினான்,

பாகீரதி அரசனைப் பார்த்துச் சிரித்து "ஓ அரசனே! ஸ்திரீகளுக்குப் புருஷ இன்பம் ஒன்றேயன்றி மற்ற இன்பங்களில் இச்சையில்லை. புருஷருக்கோவெனில் ஸ்திரீ இன்பத்தோடு பல வித இன்பங்களுமுண்டு. அதுபோல நீரும் புருஷனுகையால் பூலோக இன்பத்தை வெறுக்கவில்லை. இன்னுஞ் சிலகாலம் நீர் அரசு செலுத்த வேண்டும். அப்போது என்னிலும் எண்மடங் கதிகமான அழகை யுடைய ஒரு மாதை மணம்புரிவீர். அவள் வயிற்றில் சந்திரகுல மரபுக்குப் புத்திரருண்டாவார்கள். நீர் வருத்தப் படாமல் எனக்கு உத்தரவு கொடும். மேலும் இப்புத்திரனைப் பாதுகாத்து வளர்ப்பது உமக்கு அதிக வருத்தமாய் இருக்கும். என்னிடத்திற் கொடும். நான் இவனை 16-வயது வரைக்கும் வளர்த்து, சகல கலைக்கியான ஸ்வ ரூபியாக்கி, வில் வித்தை முதலாகிய யாவற்றையும் கற்பித்து உன் னிடத்திற் சேர்க்கிறேன். அல்லது கங்கை யருகில் வந்தால், அவ் விடத்திலாவது ஒப்புவிக்கிறேன்" என்று உணர்த்தி, புத்திரனை அடைந்து அரசனை ஒருதரம் முத்திபிட்டு அணைத்தாள். அதற்கு அரசன் மகிழ்ந்தானாயினும், அவளது பிரிவைச் சகிக்கமாட்டாதவ னாய், அதிக மனவருத்தத்தோடு "நல்லது பெண்ணே போய்வா" என்று ஒருகாற் சொல்லியவுடன், கங்கை ஓரடி எடுத்துவைத்துப் பின்பு மாயமாய்ப் போயினுள். அரசன் அதுகண்டு திகைத்து, அதுமுதல் கங்கைமீது காதல்கொண்டவனாய்ப் பெகு வருத்த மடைந்து, பின்பு சித்திரக்காரரை அழைத்து, கங்கையினது உரு வத்தைப்போல் எழுதச்சொல்லி, அவ்வுருவத்தைப் பார்த்துக் காலத்தைக் கழித்து வந்தான்.

இப்படிச் சிலகாலஞ் சென்றபின்பு, ஒருநாள் அரசன் கங்கை கூறிய வாக்கை நினைத்து, வருஷத்தைக் கணக்கிடுகிறபோது - 16 - வருஷமாயிற்று என்று தெரிந்தது. உடனே அரசன் மந்திரி முதலானவர்களை நோக்கி, "நான் வேட்டையாடவேண்டு மாதலால் தகுந்த தளத்தோடு புறப்படுங்கள்" என்று கூறித், தன் வீட்டிற் குச் சென்று பலவகைப் பதார்த்தங்களோடு அன்னம் புசித்து ஆடை ஆபரணலங்கிரதனாய் வேட்டைமுடி தரித்து, வில்லம்பு கையிலேந்தி, ஒரு திவ்வியப் புரவியிலேறி வெளிப்பட்டாள். இதற் குள் இங்கே மந்திரி முதலானவர்கள் சகல சேனைகளோடு வெளிப் பட்டு அரசனோடு கலந்தார்கள். அரசன் காட்டிற் சென்று, யானை - சிங்கம் - கரடி - புலி - செந்நாய் காண்டாமிருக முதலிய பல மிருகங்

களைக்கண்ட துண்டமாகக் கண்டித்துக் கொன்றான். வந்த மந்திரி முதலானவர்களும் அநேக மிருகங்களை வதைத்தார்கள்.

இப்படி அவரவர்கள் நாலுதிசையிலுஞ் சென்று மனம்போன படி வேட்டையாடுகிறபோது, அரசன் மந்திரி முதலானவர்களைப் பிரிந்து தனியே வேட்டையாடிவிடாய்ப்பட்டு முன்போல் கங்கா நதியைத் தேடிச்சென்று "இவ்விடத்திற்றானே முன்னம் கங்கை யென்னும் பெண்ணைக் கண்டது" என்று நிதானித்து, "இப்போது முன்போலவே ஒருவேளை வந்திருப்பாள். மேலும் நமது புத்திரனையும் காணுகிற தருணமான நாள்" என்று மனதில் நினைத்து, அவளிருக்குஞ் சோலையை நோக்கும்போது, அச் சோலையில் கங்கையினது தேககாந்தியைப்போல் சண்பக மலர்களும், தனத்தைப்போல் கோங்கு மலர்களும், இடையைப்போல் வல்லிக்கொடி யசைதலும் கண்டு, கங்கை வந்து நின்றதுபோல் அரசன் கண்ணுக் குத் தோன்ற அதிக மகிழ்வுகொண்டு, நெருங்கி நோக்கும்போது கங்கையைக் காணாமையால் திகைத்து உருவெளித் தோற்றமென் றுணர்ந்து, அந்த வேடிக்கையைப் பார்த்துக்கொண்டே கங்கா நதியை ஒரு கண்ணினாலும் மதவேள் வருகிற தென்றிசையை ஒரு கண்ணினாலும் நோக்கி நின்றான். அப்போது, தாமரை - நீலோற்பலம் - ஆம்பல் - சைவலம் - வள்ளை முதலியவைகளெல் லாம் அரசன் கண்ணுக்குக் கங்கையினது, முகம்-கண் - செவ்வாய்- அளகம் - செவி என்னும் அவயவங்களைப்போல் தோன்றின. அதனைக்கண்டு மகிழ்ச்சியடைந்த அரசன் மேலும் உய்த்து நோக் கும்போது, ஜலநிதியென்று யாவராலும் கொண்டாடப்பட்ட கங்கா நதி யென்று உணர்ந்து வியப்படைந்து, அக் கங்கையை நினைத்துக் கொண்டு நதியருகில் நின்றான். அப்போது அக் கங்கையாற்றின் மத்தியில் ஒரு வாலிபன் விற்பிடித்து அம்பு தொடுத்து விளையாடத் தோன்றினான். அரசன் அவனைக் கண்டு, மன்மதன் வந்துவிட் டானோ வென்று திடுக்கிட்டு, கருப்புவில் இல்லாமையைக் கண்டு, அவனல்லவென்று தேறி, சாம்பமூர்த்தி யநுக்கிரகத்தினாற் கங்கையி னிடமாய்ப் பிறந்து காங்கேயனென்று பெயரைக்கொண்ட முருகக் கடவுளோ வென்று ஐயுற்று ஆறுமுகமில்லாமல் வேறுமுகங் கொண் டிருப்பதால் அவருமல்லவென்று தெரிந்து; அப்பால் "இவ்வாலிப னார் ? நமது மனைவியாகிய கங்கையின் புத்திரனோ ?" என்று நினைத்தான். அப்போது, அச் சிறுவன் அரசனை நோக்கி, "ஆ !

ஆ! இவரார்? நிதானித்து நோக்கினால் க்ஷத்ரியனைப்போற் காணப் படுகிறார். வேட்டைமுடி தரித்திருக்கிறார். வில்லம்பு உடையவ ராய் விளங்குகிறார். இவரது சாமர்த்தியத்தை அறிவோம்" என்று தன் வில்லில் தொடுத்திருந்த மோகனாஸ்திரத்தை விட் டான். அவ்வஸ்திரம் பிசகாமல் அரசன் மார்பிற் பட்டது. மோகனாஸ்திரம் படவே அரசனுக்கு மோக மதிகப்பட்டது. அவன் தாபசோபத்துடனே ஸ்மரணையற்றுப் பூமியில் விழுந் தான். அரசன் விழுந்த செய்கையைச் சிறுவன் கண்டு திகி லடைந்து, "இளம்பிள்ளை பயமறியாது" என்பதுபோல பாலிய சேஷ்டையால் பயப்படாமல் மோகனாஸ்திரத்தைத் தொடுத்து விட்டோம். அரசனோ பூமியில் விழுந்து விட்டான். இனி யென்ன செய்கிறது" என்று அதிக விரைவில் மாதாவாகிய கங்கையிடத்துச் சென்று, பயங்கொண்டவனாய் ஒன்றுஞ் சொல் லாமல் ஒளித்தான். அக் கங்கைப் புத்திரனது முகக்குறியைக் கண்டு, "நமது புத்திரன் முகம் என்ன வேறுபட் டிருக்கின் றது. தினந்தோறும் குறி கற்றுக்கொள்ளச் சென்றால் நெடுநேர மிருந்து வருவான். இன்றையத்தினம் போன உடனே திரும் பினதுமன்றிப் பயந்த முகத்துடனே யிருக்கிறான்" என்று கருதி, ஞானதிருஷ்டியினாற் பார்த்தாள். அதனால் சந்தனுமகாராஜன் வந்ததும், அவன் தன்மேற் காதல்கொண்டு தன் வரவை எதிர் பார்த்திருந்ததும், அந்த வேளையிற் சிறுவன் மோகனாஸ்திரத்தைத் தொடுத்ததும், அதனாலவ்வரசன் களைத்ததும், அதுகண்டு சிறுவன் பயந்ததுந் தெரிந்துகொண்டு, அதிவேகமாய்க் கங்கையைவிட்டு வெளியில் வந்து, அரசன் அடைந்திருக்கும் கதியைக்கண்டு, தான் தேவதையா யிருந்தாலும், தனக்கவன் சிலநாள் கணவனாயிருந்த சம்பந்தத்தினால் அனலிடு மெழுகுபோல் மனது உருகி, மிகுந்த ஆறுமையோடு அரசனருகில் வந்து, அவ்வரசன் ஸ்மரணை தப்பி யிருப்பதையறிந்து, அவனை எடுத்து மடியில்வைத்து, அநேக சயித் திய உபசாரங்களைச் செய்தாள். அதனால் அரசனுக்குச் சோப நீங்கிச் சற்றே தெளிந்து வருகிற தருணத்தில், "ஓ அரசனே" யென்று கங்கை ஒருதரம் அழைத்தாள். கங்கையின் குரலைக் கேட்டவுடன் அரசனும் சோகநீங்கி அலறி எழுந்தான். கங்கை முகத்தோடு முகமழுந்தத் தழுவி ஒரு முத்தமிட்டு, சற்றிடைந்து நின்று அரசனை நோக்கி, "ஓ அரசனே! முன்னம் நான் உமக்குப் பூர்வ ஜனனவர்லாற்றைப் போதித்தும் அதனைத் தெளியாமல்

ஜகமாயையிற் சிக்கி வருத்தப்படுகிறீர். இனி வருத்தப்பட்டதினல் நான் மறுபடியும் உம்மைச் சேரக்கூடுமா? என்மேல் வைத்த விருப்பத்தை வெறுத்து, நான் சொல்லும் சில வசனங்களைக் கேளும்.— முன்னம் உமக்குக்கொடுத்த வாக்குதத்தத்தின்படி உமது புத்திரனைக் கொண்டுவந்தேன். இவனைக் கைக்கொண்டால் சகல துன்பங்களும் நீங்கும். ஆனல் ஸ்திரீகளிடத்து அகப்பட்ட சிறுவர் கல்விப் பயிற்சி யுடையவரா யிருத்த லருமை. அப்படி இச்சிறுவனைக் கருதாதீர். இச்சிறுவனுக்கு வசிஷ்டர் முன்னிலையில் நாலுவேதம் ஆறு சாஸ்திரம் அறுபத்துநாலு கலைக்கியான முதலியவற்றைக் கற்பித்துத், தவசிரேஷ்ட சிகாமணியாகிய பரசுராமமூர்த்தி முன்னிலையில் அரசர்க்குரிய வில்வித்தை முதலியவற்றைப் பயிற்றுவித்து, சாம்பமூர்த்திக் கொப்பாகிய சனகாதி யோகீஸ்வரர்கள் முன்னிலையில் ஞானேபதேசஞ் செய்வித்து, ஆண்பிள்ளைகளுக் குரித்தாகிய சகல லக்ஷணங்களில் ஒன்றுகிலும் குறைவில்லாமல் ஓங்கச் செய்திருக்கிறேன். இவனலே சந்திரகுலம் மஹா சிறப்படையும். இனி இவனை நீர் கைப்பற்றிக்கொள்ளும். ஆனல் நானிவனை வளர்த்தமையால் இவனுக்குக் காங்கேயனெனப் பெயரிடும்" என்று சொல்லி, அருகிலிருந்த புத்திரனைப் பார்த்து, "அப்பா மகனே! இதோ இருக்கிற அரசர்தான் உன் தந்தை" என்று இயம்பினள். அச் சிறுவன் முன்னம் தான் மோகனஸ்திரம் தொடுத்த குற்றத்தை மனதில் நினைத்து நடுக்குற்று விரைவில், தந்தை தாளில் வணங்கி, "ஓ ஐயனே! அடியேன்செய்த குற்றத்தை மன்னிக்கவேண்டும்" என்று அநேகவிதமாகத் துதித்தான். புத்திரனில்லாமல் வருத்தமடைந்திருந்த அரசன், தரித்திரனுக்குத் தனப்புதையல் கிடைத்தாலெப்படியோ அப்படி மகிழ்ந்து, கங்கைமீது கொண்ட காதலை மறந்து, பாதத்தில் வணங்கிய புத்திரனை வாரித்தழுவி ஆசீர்வதித்து, உச்சிமோந்து, உடல்பூரித்து, இந்திரபதவி வாய்க்கக் கிடைத்தவன்போல் மகிழ்வடைந்து, புத்திரனை அருகில் வைத்துக் கங்கையை நோக்கினன். கங்கை அரசனைப் பார்த்து, "ஓ அரசனே! இனி என்னை நாடி வருத்தப்படாமலிரும்" என்று கூறி விடைபெற்றுக், கங்காஜலத்தில் மறைந்தாள். அரசன் புத்திரனை அழைத்துக்கொண்டு, மந்திரி முதலாகிய தளத்தோடு சேர்ந்து, சந்திரனும் புதனும் போல ஒரு இரதத்தின்மேற் புத்திரனும் தானும் ஏறி அத்தினபுரத்துக்கு வந்து, ஐம்பத்தாறு தேசத் தரசர்களையும் வேத வேதி

யர்களையும் மற்றக் குடிகளையும் அழைத்து, நல்ல சுப முகூர்த்தத்தில் - கங்கை - யமுனை - சரஸ்வதி முதலாகிய தீர்த்தங்களினால் புத்திரனுக் கபிஷேகஞ் செய்வித்து, இளவரசுப் பட்டத்துக்குரிய முடிசூட்டிக், கங்கை சொல்லிய கருத்தின்படி காங்கேயனென்று பெயரிட்டான். அன்றுமுதல் அச்சிறுவன் காங்கேயனென்று பெயர்கொண்டு, தந்தையிலும் சதமடங் கதிகமாகப் பிரஜைகளுக்கு நன்மையை விளைவித்துத் தன்னுயிர்போல் யாவரையும் பாதுகாத்துவந்தான்.

இப் புத்திரனுடைய குணாதிசயங்களைத் தந்தையாகிய சந்தனு மகாராஜன் கண்டு, சிறந்த மகிழ்ச்சி கொண்டு, இன்று முதல் உலக சம்ரக்ஷணையைக் குறித்து நாம் வருத்தப்பட வேண்டியதில்லையென்றும், எல்லாக்காரியங்களையும் புத்திரனிடத்து ஒப்புவித்துவிட்டோம். இனி நமக்கொரு சஞ்சலமில்லையென்றும், மகிழ்ச்சியாய் வாழ்ந்து வருகிறநாளில், ஒரு நாள் வேட்டையாட யத்தனித்து, சிற்சில மந்திரியர் தந்திரியர் முதலானவர்கள் புடைசூழ மேற்றிசைக் காட்டிற்சென்று, சிறந்த பல மிருகங்களை யோட்டியும், சில மிருகங்களை வதைத்தும், வேட்டையாடுகிறபோது நீர்வேட்கை மிகுந்து அதைத் தணித்துக்கொள்ள தன் சாரதியுடன் யமுனா நதிக்குச் சென்றான். அங்கே தாகவிடாய் தணிய ஜலபானம்செய்து, அங்கிருந்த விநோதங்களைப் பார்த்துக்கொண்டே உலாவியவண்ணம் சற்று இளைப்பாறினன். அங்கே அப்போது சிறந்த பரிமள வாடை வீசிற்று. அதனை அரசன் அறிந்து வியப்படைந்து சாரதியைப்பார்த்து, "ஓ சாரதி! இவ் வனத்தில் புஷ்பித்திருக்கிற புஷ்பஜாதி வாசனையல்லாமல் வேறே ஒரு சிறந்த பரிமள வாடை வீசுகிறது. அதனை அறியவேண்டும். நமது ரதத்தை மேற்றிசையிற் செலுத்து" என்று கட்டளையிட, சாரதி அரசன் கட்டளைப்படி ரதத்தை உந்தினான். சில தூரம் சென்றபின்பு, யமுனாநதியருகில் பராசரராற் பரிமளகந்தியென்று பெயர்வகித்த மச்சகந்தி யென்னும் ஒரு பெண் ஒரு மரத்தடியிலிருந்தாள். அரசன் அவளைக் கண்டு பிரமைகொண்டு, அப்பால் சிறிது தெளிந்து, "யாம் இதுகாறும் இவ்வளவு சுந்தரத்தையுடைய மாதரைக் கண்டதில்லை. இம்மாதோ மற்றொருவருடைய சுவாதீனத்துக் குட்படாதவளா யிருக்கிறாள்" என்று குறிப்பினாலறிந்து "இவளை நாம் மணம்புரியலாம்" என்று மனதில், நினைத்து,

"முன்னம் இவள் வரலாற்றைக் கேட்டறிவோம்" என்று தேரைவிட்டுப் பூமியிலிறங்கி, அவளருகிற் சென்று "ஓ பெண்கள் நாயகமே! நீ யார்? இந்த நதியிலிருக்கவேண்டிய காரணமென்ன?" என்று வினவ, பரிமளகந்தி அரசனை நோக்கி, "ஆ இவர் யாரோ ஓர் அரசர்" என்று வியந்து நாணமுற்று, பயபக்தியுடனே அஞ்சலிசெய்து "ஓ மண்டலேஸ்வரா! நான் நெய்தல் நிலத்துக்குரிய பரதவமிச ராஜனாகிய தாசராஜன் புத்திரி. குலாசாரப்படி நான் இந்நதியில் ஓடம் வைத்துக் கொண்டு வருகிறவருக்குப் படவு விடுபவள். நல்ல வெய்யில் வேளையாதலால் இம் மரத்தின் நீழலில் இருக்கிறேன்" என்று இயம்ப, அரசன் இந்த வசனங்களைக் கேட்டு, "இவள் தன் தந்தையின் அனுமதி யில்லாமல் நம்மை மணம் புரியாள். தாசராஜனிடத்துச் செல்வோம்" என்று கருதி, ரதத்திலேறிச் சாரதியை தாசராஜன் நகரத்துக்குச் செலுத்தச் சொன்னான். சாரதி அவ்வாறே ரதத்தைச் செலுத்தித் தாசராஜன் நகரருகில் நிறுத்த, அரசன் சாரதியால் தன் வரவைத் தாசராஜனுக்குத் தெரிவித்தான். தாசராஜன் அரசன் வரவைக் கேட்டு, "மண்டலேஸ்வரனாகிய மஹாராஜன் நம்மை அழைக்கவேண்டிய காரணமென்ன?" என்று ஓர் ஏக்கமும், "நம்மை ஒரு பொருளா யெண்ணி அழைத்துவரச் சாரதியை விட்டாரே" என்று ஒரு மகிழ்ச்சியுங் கொண்டு, விரைவில் காணிக்கை முதலானவைகளோடு வெளிப்பட்டு, அரசனிடத்து வந்து, தான் கொண்டுவந்த காணிக்கையை வைத்துச் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, பயபக்தியுடனே வாய்பொத்தி, "ஓ மண்டலேஸ்வரா! எளியேனை ஒரு பொருளாயெண்ணி வரவழைத்த காரணத்தைத் திருவுளம்பற்ற வேண்டும்" என்று மிருந்த வணக்கத்துடனே கேட்க, அரசன் காணிக்கை முதலியவற்றை யேற்று, தாசராஜனைப் பார்த்துச் சாரதியை எச்சரித்தான். சாரதி அச்சைகையை அறிந்து தாசராஜனைப் பார்த்து, "ஓ தாசராஜனே! உன் புத்திரியாகிய பரிமளகந்தியை என்னரசனுக்கு மணஞ்செய்துவைக்கவேண்டும். அதற்காகத்தான் இவ்விடம் வந்தது" என்று கூற, தாசராஜன் பரமானந்தமடைந்து, "ஓ ஐயா! இப்போது கூறியவாக்குக் கெதிர்வாக்கில்லை. ஏனென்றால்—அவரோ சாம்பமூர்த்தியினது திருமுடியிலிருக்கிற சந்திரனுடைய பரம்பரையிற் றோன்றி, சந்திரகுல அரசனென்று பெயர் வகித்து, என்போலியர்க்கு அரசராயிருப்பவர்களெல்லாரும் திறைகட்ட அரசு செலுத்திவரும் மஹாராஜன். எங்கள் குல

இழிவை யுணர்ந்தும் என் புத்திரியை மணஞ் செய்யக் காதல் கொண்டால் எனக்கு நலந்தான். ஆனால் ஒரு குறைமாத்திர மிருக்கின்றது. அதனைத் தெரிவிக்கிறேன். அதற்குச் சமாதானங் கூறிச் சுகமாக மணஞ்செய்து கொள்ளட்டும்" என்றான். பாகன் தாசராஜனை நோக்கி "அஃதென்ன" என்று வினவ, தாசராஜன், "ஓ சாரதி! எங்கள் குலம் இழிகுலம். இவ்விழிகுலத்துப் பெண்ணை அரசன் மணம் புரிந்து அப்பெண் வயிற்றிற் புத்திரர்கள் பிறந்தால், அப்புத்திரர்களுக்கு அரசன் மகுடாபிஷேகஞ் செய்யச் சந்திரவமிசத்தாரு மற்ற மந்திரி முதலானவர்களும் குடிகளும் ஒப்பமாட்டார்கள். அதன் பின்பு என் புத்திரியும் புத்திரிவயிற்றிற் பிறந்த புத்திரரும் அவலமாவார்கள். இதுதான் என் கருத்திலிருக்கிற குறை. இதற்கொரு வகை சொன்னாற் சுகமாக என் மகளை மணம் புரியட்டும்" என்று சொல்ல, சாரதி அரசன் முகத்தை நோக்கினான். அரசன் இவ்வசனங்களை யெல்லாம் நிதானித்து, "இதற்குத்தரம் நம்மாற் கூறச் சக்தியில்லை. இனி விரகாக்கினியால் சரீரம் வாதிக்கப் பட்டு, நாளுக்குநாள் பலஹீனமாய்ப் பூர்வ ஜனனத்தை யடையுங் காலம் நேரிட்டது" என்று தீர்மானித்து, தாசராஜன் கேள்விக்கு, உத்தரவு சொல்லாமற் சாரதி முகத்தை நோக்கி, "ஓ சாரதி! நமது நகரத்துக்கு ரதத்தைச் செலுத்து" என்று கட்டளை யிட்டான். சாரதி அவ்வாறு ரதத்தைச் செலுத்தி நகரத்திற் சேர்த்தான். அரசன் தேரை விட்டிறங்கி, ஒருவரோடும் வசனியாமல் அந்தப் புரத்திற் சென்று, கந்தர்ப்பன் பாணத்தினாற் சிந்தை நொந்து வருந்தி, தன்னைக் கவளங்கொண்ட காமநோயைச் சகிக்கமாட்டாதவனாய்ப் பஞ்சணைமெத்தையிற் படுத்து, பரிமளகந்தியின் வனப்பிற் கருத்தைச் செலுத்தினவனாய் ஏக்கங்கொண்டு, சிறிதுந் தூக்கமின்றிப் பலவாறு புரண்டு கொண்டிருந்தான். மந்திரி முதலானவர்கள் அரசன் கொலுமுகத்திற்கு வராதிருப்பதை யறிந்து, அரசனிடத்திற் சென்று வணங்கி, "ஓ மண்டலேஸ்வரா! இதுவரையில் யாதொரு குறைவின்றி மகிழ்வுடன் கொலுவீற்றிருந்த தாங்கள், ஏதோ ஒரு மனவியாதியைக்கொண்டு வெளியில் வராமலும் அக்கருத்தை வெளியிடாமலு மிருந்தால், வந்த மனவியாதி எந்த விதத்தில் நீங்கும்? கிருபை கூர்ந்து தங்கள் கருத்தை வெளியிட்டால், அதற்குத் தகுந்த முயற்சி செய்து நிறைவேற்றுகிறோம்" என்று புகல, அரசன் உண்மையை வெளிப்படுத்தாமல், "ஓ மந்திரிமார்

களே! ஏன் என்னை வருத்தப்படுத்துகிறீர்கள்? ஒருவர்க்குண்டா கும் யவ்வனமானது நீரிற்பிறந்த குமிழியை யொக்கும். யாக்கையோ அந்நீரிலெழுதும் எழுத்தாகும். செல்வமோவென்றால், அந்நீரி லுண்டாகும் அலையை நிகர்க்கும். இவ்வித அளவையுடைய தேகத்தைக்குறித்துப் பலவிதமாக யோசிக்க வேண்டுவதென்ன? ஏதோ சரீரக்கூறு நாளுக்குநாள் வாடிவருகிறது" என்று கடுகடுத் துக் கூற, மந்திரிகள் மனநொந்து, ஒன்றுஞ் சொல்லாமல் அரசனை வணங்கி விடைபெற்று, இளவரசுப் பட்டம் பூண்டு அரசு செலுத்தி வரும் காங்கேய மஹாராஜனிடத்து வந்து வணங்கி, "ஓ ராஜ ராஜேஸ்வரா! உமது தந்தை காட்டிற் சென்று வேட்டையாடி வந்த நாள்முதல், ஏதோ ஒரு மனவியாதியுற்று, சிந்தை நொந்து வருந்தி வெளிப்படாமல், அந்தப் புரத்திலேயே படுத்திருக்கிறார்" என்று விளம்பக் காங்கேயமஹாராஜன் கேட்டுத் திடுக்கிட்டு, மந்திரி முதலானவர்களுக்கே கருத்தை வெளிப்படுத்தாத நமது தந்தை நமக்கு வெளிப்படுத்துவ தருமையாதலால், அன்றைய தினத்தில் நமது தந்தைக்குத் தேரைச் செலுத்திய பாகன் யாரோ அவனை அழைத்து வினவினால் அரசன் கருத்து வெளிப்படும் என்று யோசித்து, சிலதூதரை யனுப்பி அச்சாரதியை அழைப்பித்தான். சாரதி காங்கேயமஹாராஜனுக்கு நமஸ்காரஞ்செய்து, "ஓ ஆண்ட வனே! எளியேனை அழைத்த காரணமென்ன?" என்று வேண்ட, காங்கேயன் "சிலதினத்துக்குமுன் என் தந்தை வேட்டையாடக் காட்டிற் சென்று திரும்பியதுமுதல் அவர் மனோவியாதியாயிருக்கி றார். அக்காட்டில் அவர் ஏதாவது ஓர் அதிசயத்தைக் கண்ட துண்டா? அப்படிக் கண்டிருந்தால் உனக்குத் தெரியுமல்லவா? தெரிந்திருந்தால் சொல்" என்று வினவ, சாரதி வணங்கி வாய் பொத்தி பயபக்தியுடனே நின்று, "ஓ ஸ்வாமி! அரசன் மேற் றிசைபிற்போய் வேட்டையாடித் தாகக்களை தாங்கி யமுனாநதியிற் சென்றபோது, அங்கே மிகுந்த பரிமளவாடை ஒன்றுண்டா யிருந் தது. அதனை அவர் அறியப்போனபோது, ஓர் மரத்தருகில் ஸ்ரீமஹாலக்ஷ்மியைப்போல் ஒரு கன்னிகை யிருந்தாள். அரசன் அக்கன்னிகையைக் கண்டு மயக்கங்கொண்டு, "நீ யார்? உன் தந்தை யார்?" என்று வினவ, அக்கன்னிகை "நான் பரதர்குலமடந்தை" என் தந்தை தாசராஜன்" என்றுங் கூறினாள். பின் நாங்கள் தாசராஜனிடஞ் சென்று அவளைக் கேட்டதற்குத் தாசராஜன் 'இப்

பெண் வயிற்றிற் பிறக்கும் புத்திரனுக்குப் பட்டங் கட்டுகிறதா யிருந்தால் உங்கள் கருத்தின்படி நடக்கிறேன்' என்று சொன்னான். அதைக் கேட்ட அரசன் ஒன்றுஞ் சொல்லாமல் நகரத்திற்கு வந்து விட்டார். இதுதான் எனக்குத் தெரியும்" என்று சொல்லி வணங்கினான். காங்கேயன் மனச்சஞ்சல நீங்கி, "இனி என் தந்தைக்கு வந்த மனோவியாதியை நொடிப்பொழுதில் நான் மாற்றிவிடுவேன்" என்று தீர்மானித்து, மந்திரிமார்-பட்டவர்த்தனர்-மகுடவர்த்தனர்-ரதகஜதுரகபதாதிகள் தன்னைச் சூழ்ந்துவர அச்சாரதியை அழைத்துக்கொண்டு, தாசராஜன் நகரத்திற்குச் சென்று, அந்தத் தாசராஜனை அழைப்பித்து, "ஓ தாசராஜனே! உனது குமாரத்தியை என் தந்தைக்கு மணஞ்செய்து கொடுப்பதற்கு உன் கருத்திலிருக்கிற குறை யென்ன?" என்று வினவ, தாசராஜன் வணங்கி "ஓ மஹாராஜனே! எங்கள் குலம் இழிகுலம். உங்கள் குலமோ மகாலட்க்ஷுமியுடன் பிறந்த சந்திரகுலம். அக்குலத்தரசர் என் புத்திரியை மணம்புரிவது தகுதியல்ல. அவர்களை இழிவு நோக்காமல் மணம்புரிய யத்தனித்தால் தடை சொல்லுகிறதற்கு யாவரால் முடியும்? ஆகிலுமொரு தடை யிருக்கின்றது. அஃதென்னெனில் - அவள் வயிற்றிற் பிறக்கும் புத்திரன் பட்டத்துக்குரியவனுவானா? அரசன்தான் பட்டாபிஷேகஞ் செய்தாலும் மற்றவர் சம்மதிப்பார்களா? மற்றவர் சம்மதித்தாலும் இப்பட்டத்துக்குத் தாங்கள் தலைமையாளியா யிருக்க என் பெண் வயிற்றுப் புத்திரர்களுக்குப் பட்டங் கிடைக்குமா? இதற்கு ஒரு ஒப்புமை கூறி, என் மகளை அரசனுக்கு மணஞ் செய்வியும்" என்று புகன்றான். காங்கேயன் இவ்வசனங்களைக் கேட்டுக் கலகலவென்று நகைத்துத் தாசராஜனை நோக்கி "ஓ தாசராஜனே! நீ என்ன அரசனா யிருந்தும் இராஜ தருமம் தெரியாதவன்போல் வசனிக்கிறாய்? வித்து சிலாக்கியமே யன்றி நிலம் சிலாக்கியமல்ல. அதுபோல் எக்குலத்து ஸ்திரீயா யிருந்த போதிலும் அரசனுக்குதித்த புத்திரனா யிருப்பானானல் அப்புத்திரனுக்குப் பட்ட முதலாகிய எல்லா நலமுமுண்டு. ஆனால் நான் பட்டத்துக்குடையவனா யிருக்கிறபடியால், உன் பெண் வயிற்றுப் புத்திரனுக்குப் பட்டங் கிடைப்பது அருமைதான். என் தந்தையின் மனோவியாதி உன்னால் நீங்கப்போகிறபடியால், என் பட்டத்தை உன் பௌத்திரனுக்குக் கட்டுகிறேன். மேலும் எனக்குப்பின் யாதொரு வழக்கு மில்லாமற்போக இன்றுமுதல் நான் ஒரு வைராக்

கிய விரதங் கைக்கொள்ளுகிறேன். அஃதென்னெனில், நான் ஒரு கன்னிகையை மணம் புரிவேனானால் எனக்குப் பிறக்கும் புத்திரர்கள் என் காலத்துக்குப்பின் வழக்கிடுவார்கள். ஆதலால் - சந்திரர் - சூரியர் முப்பத்துமுக்கோடி தேவர்கள்-ஆகாயவாணி முதலானவர்களும், ஸ்ரீமந் நாராயணமூர்த்தியு மறிய நான் ஒரு ஸ்திரீயை மணம் புரிகிறதில்லை" என்று உறுதியாக யாவரும் கேட்கக் கூறி, "இவ் வாக்கியத்திற்குப் பழுது தேடுவேனானால் தம் தந்தையரைப் போற்றாதவரும், தம்மை நம்பினவருக் கிடையூறு செய்தவரும், ஜலத்தில் ஆடையில்லாம லிறங்கினவரும், பெரியவர்களை மதிக்காம லுட்கார்ந்திருந்தவரும், தருமஞ் செய்பவரைத் தடுப்பவரும், பிச்சையிட்டுப் புசியாதவரும், எக்கதியை அடைவார்களோ, அக்கதியை நான் அடையக்கடவேன்" என்று சபதஞ் செய்தான்.

இதைக்கேட்ட மந்திரி முதலானவர்கள் திடுக்கிட்டுக் காங் கேயனை வணங்கி, "ஓ தருமமூர்த்தி! பட்டத்தைத்தான் கொடுத்து விட்டது தகுதி. மணம் புரிகிறதில்லை யென்று சபதஞ் செய்தது தருமமா? புத்திரனில்லாதவர்க்குப் புண்ணியலோக மில்லை யென்று வேத முறைபிடுகின்றதே: இதற்கென்ன செய்கிறது?" என்று வினவ அதற்குக் காங்கேயன் 'இது தந்தை மூலமாய் வந்த தேக மாதலால், இந்த யாக்கையா லத்தந்தை மனதுக்கு வருத்தம் நேரிடாமலிருந்தால், அச்செய்கையே புண்ணியலோகத்தைக் கொடுக்கும்" என்று விடை கொடுத்தான். இந்தக் காங்கேயன் கூறிய வற்றை அந்தரத்தில் முன்னமே வந்திருந்த இந்திரன் - அக்கினி - யமன் - நிருதி - வாயு - குபேரன் - ஈசானன் ஆகிய ஏழு திக்குப் பாலரும், அனலன் - அனிலன் - ஆபச்சைவன் - சோமன் - தரன்-துருவன் - பிரத்தியூசன் ஆகிய ஏழு வசுக்களும், முப்பத்து முக் கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிர முனிவர்களும், கின்னரர்-கிம்புருடர் - கருடர் - கந்தருவர் முதலானவர்களுங் கேட்டு, காங் கேயனுடைய மனவுறுதிக்கு மெச்சி மிகுந்த மகிழ்ச்சி யடைந்து, பாரிஜாத புஷ்பங்களை வருஷித்து, தேவதுந்துமிமுழங்க, அரம்பை யூர்வசி முதலியயோர் நடனஞ்செய்ய, அப்சரஸ்திரீக ளெல்லாரும் மங்களம்பாட, காங்கேயனை வாழ்த்தி அங்கு வந்திருக்கும் ஜனங்களை நோக்கி, "ஓ பிரஜைகளே! இந்தக் காங்கேயன் தந்தையின் சுகத்தின் பொருட்டே பட்டாபிஷேகத்தை நிராகரித்து விட்டதன்றி "மண மும் செய்து கொள்வதில்லை" யென்று வெறுத்துப் பீஷ்மஞ் செய்த

படியால், இன்றுமுதல் இவனுக்கு பீஷ்மாசாரி யென்று பெயராகுக" என்கூறி, பல ஆசிகள் வழங்கித் தங்கள் இருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள். இங்கே தாசராஜன் முதலானவர்களும் காங்கேயமகாராஜனை அநேகவிதமாகத் துதித்து, தேவர்கள் கூறிய நாமதேயத்தைக் கொண்டு யாவரும் ஒருதரம் கூவி நமஸ்காரஞ் செய்து, பேரானந்த மடைந்தார்கள். பீஷ்மாசாரி தாசராஜனைப் பார்த்து, "ஓ தாசராஜனே! என் தந்தைக்கு உன் புத்திரியை மணம்புரிய இன்னும் தடையென்ன?" என்று வினவ, தாசராஜன் பீஷ்மாசாரியின் மனவுறுதியை நன்குக மதித்து, இனித் தாமதஞ் செய்தால் மனதுக்கு விரோதம் வருமென்று கருதி, "ஓ மண்டலேஸ்வரா! என் புத்திரியை அழைத்து வருகிற தடையேயன்றி வேறொரு தடையுமில்லை" என்று கூறி வணங்கி விடைபெற்றுத் தன் அரண்மனைக்குச் சென்று, சில தூதுவர்களாற் புத்திரியை அழைப்பித்து ஸ்நானஞ் செய்வித்து, ஆடை ஆபரணங்கள் அழகுபெற அக்கன்னிகைக்குத் தரிப்பித்து, முத்துச் சிவிகையிலேற்றி, தானும் தன் சுற்றத்தார் முதலானவர்களுமாக பீஷ்மாசாரியிடத்து வந்து வணங்கி நின்றார்கள். பீஷ்மாசாரி பரிமளவாடை வீசுகிறதைக் கண்டு அதிக வியப்படைந்து, தாமும் மந்திரி முதலானவர்கள் புடைசூழப் பரிமள கந்தியை அழைத்துக்கொண்டு விரைவில் அத்தினபுரம் வந்துசேர்ந்து, அந்தப்புரத்திற்சென்று தந்தைதாளில் வணங்கி, "தந்தையே! தற்காலத்தில் தாங்கள் கொண்டிருக்கிற கருத்தை நிறைவேற்றத் தாங்கள் நாடிய கன்னிகையைக் கொண்டுவந்தேன். தாங்களெழுந்து வந்து அக்கன்னிகையை மணம் புரிந்து மனோ வியாதியை ஒழிக்கக்கடவீர்" என்று வேண்ட, அரசன், இவ்வசனங் கேட்டு அளவிலா மகிழ்ச்சியை அடைந்து தனது புத்திரனை வாரித்தழுவி உச்சியை முகந்து முத்தமிட்டு, "அப்பா புத்திரசிகாமணியே! என் கருத்தில் நாடிய பொருள் உனக்கு எவ்வாறு தோன்றிற்று? அதனைக் கூறுக" என்று வினவ பீஷ்மாசாரி தந்தையை வணங்கி, 'ஓ எந்தையே! தங்கட்கு நேர்ந்திருக்கு மனோவியாகூலத்தைச் சாரதியின் மூலமாயறிந்து, தாசராஜனிடத்துச் சென்று, அவன் கேட்ட கேள்விக்கு ஒப்புமை கூறி அக்கன்னிகையைக் கொண்டுவந்தேன்" என்று சொன்னார். அரசன், மந்திரிமுதலானவர்களை நோக்கி "மந்திரிகளே! தாசராஜன் கேட்ட கேள்வி யென்ன? அதற்கு என் புத்திரன் சொன்ன சமாதானமென்ன? அதனை ஒளியாமற் சொல்லுங்கள்" என்று வினவ மந்திரிகள் அரசனை வணங்கி, "ஓ மண்டலேஸ்

வ்ரா! உமது புத்திரனது மன உறுதி எங்களுடைய நாவினுற் சொல்ல வசமல்ல. ஆயினும் எங்களால் இயன்றமட்டுங் கூறு கின்றோம். அதனைக் கேட்டருள்வீராக" என்று, கூறி பீஷ்மா சாரி தன் அரண்மனையிலிருந்து சென்றது முதல் திரும்பி வந்து சந்தனுமகாராஜனைக் கண்ட வரையில் நடந்தவைகளை ஆதியோ டந்தமாகத்தெரிவித்துத் தாசராஜன் தனது குமாரத்தியை அரச னது வாசலில் கொண்டு வந்திருப்பதையும் அறிவித்தார்கள். அதைக் கேட்ட அரசன் ஆச்சரியமடைந்து, மூத்தகுமாரனுயிருந் தும் பட்டத்துக்குரியவனுதலை நீக்கினுனென்று ஒரு விதத்தில் வருத்தத்தையுங், தந்தைக்குப் புத்திரர் செய்யுங் கடமைக்கு எண்மடங்கதிகமான கடமையை இயற்றினுனென்று ஒரு விதத் தில் மகிழ்ச்சியுங்கொண்டு, புத்திரனை வாரித் தழுவி, "ஓ என் அரு மைச் செல்வனே! என் முன்னிலையில் நீ புண்ணியலோகத்துக் கேதுவாகிய மனைவியை நீக்கி நின்றபடியால், புண்ணியலோகம் உனக்குச் சித்திக்கக் கடவது; மேலும் உனக்கு யமவாதை யில்லா மல் நீ எப்போது உயிர்விட நினைக்கின்றனையோ அப்போது உன் உயிர் நீங்கக் கடவது" என்று இரண்டு வரத்தைக் கொடுத்துப் பஞ்சணைமெத்தையைவிட் டெழுந்து, கொலுமுகவாசலில் வந்து மந்திரிகளை நோக்கினுன். உடனே மந்திரிகள் பார்வையின் குறிப் புணர்ந்து, 55 - தேசத் தரசர்களுக்கு மணவோலை போக்கி, வேத வேதியர்களை அழைப்பித்து, நல்ல சுப முகூர்த்தத்திற் பந்தர்க்கால் நாட்டி, நகரமுழுதும் அலங்காரஞ் செய்யக் கட்டளையிட்டுக் கலியாணத்துக்கு வேண்டிய வஸ்துக்களை யெல்லாம் சேகரித்தார் கள். இதற்குள் 55 - தேசத் தரசரும் மற்ற பந்து மித்திரர்களும் வந்து சேர்ந்தார்கள். வந்தவர்களுக்கெல்லாம் மந்திரிகள் தகுந்த மரியாதைசெய்து விடுதிவிட்டார்கள். நகரத்தி லிருப்பவர்களும் மிகுந்த மகிழ்ச்சியடைந்து, மாடமாளிகை கூடகோபுரம் வீதி முதலியவற்றை நன்முக அலங்கரித்து, இலக்குமி சமேதனுகிய நாராயணமூர்த்தியின் நகரத்தைப்போற் செய்தார்கள். பின்பு மந்திரிகளும் பெரியோர்களும் அரசனுக்கு மணக்கோலஞ்செய்து கங்கைமுதலிய தீர்த்தங்களால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடை ஆபரணங்களினுல் அலங்காரஞ் செய்வித்து அழைத்துவந்து மண வறையில் வீற்றிருக்கச்செய்து, தாசராஜனிடத்துச் சென்று, அவன் புத்திரியாகிய பரிமளகந்திக்கு அந்தப்புரத் தாதிகளால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடை ஆபரணங்களினுல் அலங்காரஞ் செய்வித்து,

நல்ல சுப முகூர்த்தத்தில் அந்த ரூபவதியை அரசனிருக்கு மண வறையில் வீற்றிருக்கச் செய்தார்கள். அப்போது வேத வேதியர் களும் கலியாண மண்டபத்திலெய்தி, வேத மந்திரங்களை யுச்சரித் தார்கள். அச் சமயத்தில் தாசராஜன் எழுந்து, மன்னர் மன்னர் களுக்கெல்லாம் தகுந்த மரியாதையைச் செய்து, "ஓ ராஜராஜர்களே! இதோ அரச னருகிலிருக்கிற கன்னிகை என் புத்திரியல்ல. இக் கன்னிகையின் வரலாற்றைக் கூறுகிறேன். அதனை யாவருஞ் செவிகொடுத்துக் கேளுங்கள். முன்னம் சூரியவம்சத்து வசுராஜ னென்பவன் கிரிகையாகிய தன் மனைவி கருப்பவதியா யிருக்குங் காலத்து நல்ல மாமிசங் கொண்டுவந்து கொடுக்கக் கருதி வேட் டைக்குச் சென்றான்; அன்றிரவில் அவ்வனத்தில் நித்திரைசெய்யும் போது கிரிகைமேற்கொண்ட காதலால் அவன் வீரியம் வெளிப்பட் டது. அவ்வீரியத்தை ஒரு பக்ஷியினிடத்துக் கொடுத்துக் கிரிகையின் வசஞ் சேர்க்கச்சொல்லிக் கட்டளையிட, அப் பக்ஷி அக் கட்டளைப் படி வரும்போது யமுனாநதி மத்தியில் மற்றொரு பக்ஷி எதிர்த்துப் போராடிற்று. அதனால் அவ் வீரியம் அந் நதியில் விழுந்தது. அந் நதியிற் பிரமன் சாபத்தால் மீன் வடிவமாயிருந்த அப்சரஸ்திரீ யானவள் அந்த வீரியத்தை இரண்டு பிரிவாகப் புசித்துக் கருப்பவதி யானாள். சிலநாள் சென்றபின்பு எனக்குக் கீழ்ப்படிந்திருக்கிற வலைஞர் அந் நதியில் மீன்பிடிக்க வலை வீசியபோது, மீனமாயிருக்கிற அப்சரஸ்திரீ அகப்பட்டாள். அதனை அவர்கள் என்னிடத்தில் ஒப்புவித்தார்கள். நான் அந்த மச்சத்தின் வயிற்றைக் கிழித்துப் பார்க்கும்போது, இந்தக் கன்னிகையும் ஒரு புத்திரனு மிருந்தார் கள். அவர்களை நோக்கி வியப்புற்றிருக்குங் காலையில், மச்சமாயிருந்த அப்ஸரஸ்திரீ தான் முன்பிருந்த உருவைப் பெற்று, அந்தரத்தி னின்று வந்த தன் வரலாற்றையும் மக்களது வரலாற்றையும் கூறிப் போய்விட்டாள். அதன்மேல் இரண்டு மக்களையும் வசுராஜனிடத்து ஒப்புவித்தேன். அவ் வரசன் புத்திரனை எடுத்துக்கொண்டு, இக் கன் னிகையை எனக்குக் கொடுத்தான். மகளில்லாத நான் இந்தப் பெண்ணை மகளாகப் பாவித்து வளர்த்துவந்தேன். இக் கன்னி கை இராஜபுத்திரியே யாதலால், காக்கையினாற் பெற்று வளர்க் கப்பட்டுப் பருவம் வந்தபோது தன்னினத்தைத் தழுவும் குயிலினம் போல், சந்திரவமிச ராஜனுக்கே மனைவியானாள். இனி யாதொரு தடையுமின்றி மணத்தை நிறைவேற்றுங்கள்" என்று கன்னிகா தானஞ் செய்தான்.

இதைக்கேட்ட அரசர்களும் வேத வேதியர்களும் வியப் படைந்து, நல்ல சுப முகூர்த்தத்தில் மந்திராக்ஷதை முதலிய பூசைபெற்றிருக்கிற மங்கலத்தை அரசன் கையில் கொடுத் துப் பரிமளகந்தியின் கழுத்தில் அணிவித்து, வேதாகம விதிப்படி ஓமம் வளர்த்து யாதொரு குறைவு மில்லாமற் கலியாணத்தை நிறை வேற்றினார்கள். பின்பு பீஷ்மாசாரி மந்திரிமார் முதலானவர்களைக் கொண்டு அநேக தான தருமங்களைச் செய்வித்து, வந்த அரசர் களுக்கெல்லாம் தகுந்த பரிசுகொடுத்து, யாவரும் மகிழ்வுற உண்டி முதலியவற்றை யளித்து உபசரித்தார். அவ் வுபசரிப் பினால் எல்லோரும் ஆனந்தமடைந்தனர். அப்பால் தாசராஜன் முதலிய எல்லாரும் பீஷ்மாச்சாரி யிடத்தில் விடைபெற்று அவ ரவரிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

இங்கே சந்தனுமஹாராஜன் பரிமளகந்தியோடு வாழ்ந்து வரு கிற நாளில், சூரியனைப் போலவும் இரண்டு புத்திரர்களைப் பெற்று, சித்திராங்கதன் சித்திரவீரியன் என்று இருவர்க்கும் பெயரிட்டு வளர்த்து, நாலுவேதம் - ஆறுசாஸ்திரம் - அறுபத்துநாலு கலைக் கியான முதலியவற்றைப் போதித்து, வில்வித்தை முதலியவற் றையுங் கற்பித்தான். அப்புத்திரர்கள் 15 16 வயதுடையவர்க ளான காலத்து, சந்தனுமஹாராஜன் பரமபதஞ் சேர்ந்தான். பீஷ்மரும் இவ்விரண்டு புத்திரர்களும் தந்தைக்குச் செய்யவேண் டிய கடமைகளை இயற்றி, நீர்க்கடன் முதலியவற்றை நடாத்தி, பின்பு அவர், தாம்கூறிய வாக்குத்தத்தத்தின்படி ஐம்பத்தாறு தேசத்தர சர்களும் அறியத் தன் பட்டத்தைச் சித்திராங்கதனுக்குக் கட்டினார்.

சித்திராங்கதன் பட்டாபிஷேகஞ்செய்த் தந்தையிலும் எண்மடங் கதிகமாகத் தான தருமங்களைச் செய்து, தன்னுயிரைப்போல் மன் னுயிரைப் பாதுகாத்து வருகிற நாளில், அந்தரலோகத்திலிருக்கும் கந்தர்வவேந்தனாகிய சித்திராங்கத னென்பவன் "நமது பெயரைத் தரித்துப் பூலோகத்தில் ஒருமானிடன் அரசு செலுத்துகிறதா" என்று பொறாமை கொண்டு, "இவனுடன் எதிர்த்துப்போர் புரிந்து வெல்லுவோமென்றால் பீஷ்ம னிருக்கிறான். அவன் வில் லெடுத்தால் நமது உயிரைக் கொள்ளை கொள்ளாமல் விடான்" என்று அஞ்சி, "அவனோடு நேரிற் சென்று போர்புரிவது தகுதி யல்ல. ஆதலால் சமயம் பார்த்து இரவிற் சிரச்சேதஞ் செய்ய

வேண்டும்" என்று யோசித்து, அச்சமயம் எங்காளில் நேரிடு மென்று எதிர்பார்த்திருந்தான்.

இங்கே சித்திராங்கதன் ஒருநாள் இரவில் வேடிக்கையார்த்த மாய் ஓரிடத்திற் றனித்திருந்தான். அந்தச் சமயத்திற் கந்தருவர்க் கரசனுன சித்திராங்கதன் இச் சித்திராங்கதனுடைய சிரசைக் கொண்டுபோய்விட்டான். இந்தச் செய்தி பரிமளகந்தியறிந்து, பீஷ்ம ரிடத்துச் சென்று முறையிட்டுப் புலம்பினுள். பீஷ்மர் அது கேட்டு மனவருத்தமடைந்து, சித்திராங்கதன் என்னும் கந்தருவன் நேராக வந்து போராடப் பயந்து நமது சிராளனைக் கொன்ருன் அவனேடு போர்புரிவது தகுதியல்ல. இதோ யிருக்கிற 'சித்திரவீரிய னுக்குப் பட்டங் கட்டுகிறேன். அம்மணி வருத்தப் படவேண்டாம் என்று இனியவசனங்களாற் சில நீதியெடுத்தோதி, அச்சித்திரவீரிய னுக்குப் பட்டங் கட்டினுர்.

அச் சித்திரவீரியன் மநுசாஸ்திரவிதி பிசகாமல் தருமதே வதை நான்கு பாதத்திலும் நடக்கச் செங்கோல் நடாத்திவந் தான். இந்தச் சித்திரவீரியனுக்கு 20-வயதாயிற்று. பரிமளகந்தி, மூத்த குமாரனுகிய பீஷ்மரிடம் வந்து, "சிறுவனுக்கு மணம் புரிய வேண்டுமே அதற்குத் தகுந்த முயற்சி செய்வாயாக" என்று கூற, பீஷ்மர் அன்னைவாக்கியத்தை அங்கீகாரஞ் செய்து, அவ்வாறே மணஞ் செய்விக்கிறேனென்று உறுதி கூறி, தான் தனியே யிருந்து விவாக விஷயத்தைக் குறித்து யோசிக்கிற தருணத்தில் சில தூதர் கள் பீஷ்மரிடத்து வந்து வணங்கி, பயபத்தியுடனே வாய்பொத்தி எதிர் நின்று சொல்லுகிருர்கள்—

## பீஷ்மர் சித்திரவீரியனுக்கு விவாகஞ் செய்வித்தல்

"ஓ ஸ்வாமி! காசிதேசத்தரசன் அருமையான தவஞ் செய்து, அம்பை - அம்பிகை - அம்பாலிகை என்று மூன்று புத்திரிகளைப் பெற்று, மிகுந்த காதலோடு வளர்த்து வந்தான். அப்புத்திரிகள் பருவகாலத்தை அடைந்தார்கள். அரசன் அதுகண்டு சுயம்வரம் நாட்டி, ஐம்பத்தைந்து தேசத் தரசர்களுக்கும் தூதுவர்களால் தெரி வித்தான். தங்களுக்கு அச்செய்தியைத் தெரிவிக்க வந்தோம்" என்ன, பீஷ்மர் "நாம் ஐம்பத்தாறு தேசத் தரசர்களுக்கும் தலை வனுக இருக்க, இந்தக் காசிராஜன் ஏன் நமக்குத் தெரிவிக்கவில்லை,

தாசராஜனோடு சம்பந்தஞ் செய்ததை மனதில் வைத்தவனாயிருக்கிறான்போலும். நல்லது நாமேசென்று நமது தம்பிக்கு அம்மூன்று கன்னிகைகளையு மணஞ் செய்விப்போம். யாராவது நிந்தை கூறுவாரானால் அவர்களை யெல்லாம் யமபுரத்துக் கனுப்பி விடுவோம்" என்று மனதில் தீர்மானித்துத் தம்பியாகிய சித்திரவீரியனை அழைத்து, இவ்வரலாற்றைக் கூறி, அங்குத் தானே கங்கை முதலிய தீர்த்தங்களினால் திருமணக்கோலமுஞ் செய்வித்து, மந்திரி முதலானவர்களை அழைத்து, " காசிராஜன் சுயம்வரத்துக்குச் செல்லவேண்டும். ஒருவேளை யுத்தமும் நேரிடும். நீங்களெல்லாரும் போர்க்கோலங் கொண்டு நமது சேனைகளோடு வாருங்கள்" என்று கட்டளையிட்டுத், தாமும் போர்க்கோலங்கொண்டு தம்பியைத் தேரின் மேலேற்றிக் கொண்டு வெளிப்பட்டார். மந்திரி முதலானவர்களும் சேனைகளோடு வந்து கலந்தார்கள். பீஷ்மர் அதிவேகமாக ரதத்தை நடத்திக் கொண்டு கங்காதீரத்தினருகில் வந்தபோது, கங்கை தன் புத்திரனது வரவைப்பார்த்து மகிழ்ச்சி யடைந்து வதனத்தைத் தடவிக் கொஞ்சுகிறதுபோல, தென்றலாலெழும் கங்காநதியி னலைகளின் திவலை பீஷ்மர் முகத்திற்படிந்து மிகுந்த குளிர்ச்சியைக் கொடுத்தது. பீஷ்மர் அக்கங்கையருகிற் சற்றுநேர மிருந்து இளைப்பாறி, மீண்டும் ரதமேறி காசிநகரத் தருகிற் சென்றார். இந்தச்செய்தி தூதுவர்களாற் காசிராஜன் அறிந்து, தனது தளத்தோடு எதிர் கொண்டுவந்து பீஷ்மரை வந்தனை வழிபாடுசெய்து அழைத்துப் போய் மணப்பந்தலில் ஒரு திவ்ய சிங்காதனத்திலிருத்தி, செய்ய வேண்டிய மரியாதையைக் குறைவின்றி நிறைவேற்றினான். பீஷ்மர் தமது தம்பியைமுன்னிருத்தித் தாம் பின்னிருந்தார். பீஷ்மரைக் கண்ட அரசர்களுடைய முகமானது சந்திரனைக் கண்ட தாமரையைப் போல் வாடியிருந்தன. பின்பு காசிராஜன் தாதிகளை அழைத்து, "என் புத்திரிகளை அலங்காரஞ்செய்து அழைத்துக்கொண்டு வாருங்கள்" என்று கட்டளை யிட்டான். தாதிகள் அவ்வாறு அம்மூன்று புத்திரிகளையும் ஆடை ஆபரணங்களினால் அலங்காரஞ்செய்து மூவர் கையிலும் மூன்று மாலையைக்கொடுத்து அரசர்கள் நிறைந்திருக்கிற மணப்பந்தலுக்கு அழைத்து வந்தார்கள். அங்கே சில தாதிகள் அம்மூன்று கன்னிகைகளுக்கும் வந்திருக்கிற அரசர்களுடைய பேயர் ஊர் குலமுதலியவற்றைக் கூறிக்கொண்டு வந்தார்கள். இவ்வாறு கூறிவருகிறபோது சந்திரகுல திலகனாகிய சந்தனுமஹாராஜன் புத்திரன் சித்திரவீரியன் இருந்தவிடத்திற்கு அம்மூன்று

கன்னிகைகளும் வந்து நின்றார்கள். தாதிகள் அவ்வரசனது நாடு நகர முதலிய சிறப்புகளை எடுத்தோதி, மறுபடியும் அத்தாதிகள், “ஓ காசிராஜன் தவத்துதித்த கன்னியர்களே! இவ்வரசன் பரதர் குலத்துக் கதிபதியாகும் தாசராஜன் புத்திரியாகிய பரிமளகந்தியின் குமாரன்” என்று கூறினார்கள். அக்கன்னிகைகள் இவ்வசனங்களைக் கேட்டு அச்சித்திரவீரியனுடைய சௌவுந்தரியத்துக்கு மகிழ்ந்து மாலையிட யத்தனித்தபோது, பக்கத்திலிருந்த அரசர்களெல்லாரும் இழிகுலத்தானுக்கு மாலையிடுவது தகுதியா?” என்று கூறத் தொடங்கினார்கள். இவ்வாறு கூறிய மொழிகள் சபையிலிருக்கும் அரசர்கள் செவியிற் படுவதற்கு முன் பீஷ்மருடைய கைவில்லின் குணத்தொனி அவர்கள் செவியிற் பட்டது. உடனே தம்பி சித்திர வீரியனும் அவனோடு சேர்ந்த மந்திரி முதலானவர்களும் வில்லை வளைத்துக் குணத்தொனி செய்தார்கள். பீஷ்மர் கொண்ட கோபாக்கினிக்கு உருத்திர மூர்த்தியினுடைய நுதலாக்கினியும் ஓர் நிகரன்று. இப்பால் மலையிலிருந்து இரண்டு சிங்கங்கள் குதித்தாற் போல் சகோதரர்கள் இருவரும் மஹா உக்கிரங்கொண்டு சிங்காதனத்தை விட்டிறங்கி, வந்திருந்த அரசர் முகத்தைக் கடுகடுத்து நோக்கி, “ஓ சிறந்தகுலத்திற் பிறந்த அரசர்களே! இழிகுலத்திற் பிறந்த எங்களை வெற்றிகொண்டு இக்கன்னிகைகளை மணமாலை இடுங்கள், இந்த க்ஷணம் எங்களோடெதிர்க்கத் தயைசெய்து வாருங்கள்” என்றழைத்துச் சாரதிகளை நோக்க, சாரதிகள் அவர்கள் ரதத்தைக் கொண்டுவந்து எதிரில் நிறுத்த, அவ்விரதத்தில் பீஷ்மரும் சித்திர வீரியனு ஏறிக் கொண்டு தங்கள் தங்கள் ஜயசங்கத்தைவாயில் வைத்துத் தொனித்தார்கள். அரசர்கள் இவ்விருவர் கூறிய வசனங்களைக் கேட்டும், இவர்கள் கொண்ட போர்க் கோலத்தைக் கண்டும் மானந்தலைக்கொள்ள வெழுந்து போர்க்கோலங் கொண்டு, தங்கள் தங்கள் ரதங்களில் ஏறிச் சேனைகளோடு கலந்து, வீராவேச மேற்கொண்டவர்களாய்ச் ஜயசங்கமூதி வில்லை வளைத்துக் குணத்தொனி செய்தார்கள். பீஷ்மர் தம் சேனைகளை எச்சரித்து ரதத்தை அரசர்கள்மேற் செலுத்தினார். மற்ற அரசர்களும் தங்கள் தங்கள் சேனைகளை எச்சரித்து ஒரே முகமாக பீஷ்மர்மீது திரும்பினார்கள். அப்போது காலாளோடு காலாள்களும் - குதிரை வீரரோடு குதிரை வீரரும் யானை வீரரோடு யானை வீரரும் - தேர் வீரரோடு தேர் வீரரும் - வில்லாளிகளோடு வில்லாளிகளும் எதிர்த்து ஒருவரை யொருவர் வெற்றிபெற விரும்

பங்கொண்டு, வாள் - கதை - இருப்புலக்கை - பிண்டிபாலம் - வேல்- சக்கரம் - தோமரம் - ஈட்டி - எறிஈட்டி-பாங்கு - கடாரி - குடோரி- பல்லயம் - கத்தி - சுருள்கத்தி - சூலம் - முஷ்டி முதலாகிய படை களால், வெட்டியும் குத்தியும் -தள்ளியும் மிதித்தும் உதைத்தும் அடித்தும் போராடினர். அப்போது பீஷ்மரும் சித்திர வீரியனும் வளைத்திருக்கிற வில்லில் அனேக திவ்ய பாணங்களைச் சோனைமாரி வருஷித்ததுபோல் வருஷித்து, பகை யரசர்களுடைய சேனைகள் அனைத்தையும் சின்னபின்ன மாக்கினார்கள். இதனை நோக்கிய அரசர்கள். "ஆ! ஆ! கடலுடைபட்டதுபோ லிருக்கிற நமது சேனைகளை ஓர் வாவியுடைபட்டதுபோல் மேவியிருக்கிற சேனையை யுடைய பீஷ்மன் சின்னபின்ன மாக்கினான்" என்று சினங்கொண்டு, "எல்லாரும் ஒன்றாகக்கூடி, பீஷ்மரையும் சித்திரவீரியனையும் சூழ்ந்து அஷ்டதிசையிலும் நிறைந்து யுத்தஞ் செய்தாலன்றி நாம் வெற்றி பெறோம்" என்று உய்த்துணர்ந்து, தங்கள் தங்கள் கையில் வளைத் துப் பிடித்திருக்கிற கார்முகத்திற் போர்முகத்துக்குரிய கூறிய பாணங்களை ஒன்று - பத்து - நூறு - ஆயிரம் - கோடி - பத்து கோடி யாகத்தொடுத்து பீஷ்மர் சேனைகளை அதாகதப் படுத்துகிற போது, பீஷ்மர் கண்களிற் புகையெழ நோக்கி, அண்ட கடாகங் களும் பொடிபட அட்டகாசஞ்செய்து, தாமொருவராகவே எழுந்து, கார்முகத்தில் அனேக திவ்யபாணங்களைத் தொடுத்து, தம்மீதுந் தம்பிமீதும் சேனைகள்மீதும் வருகின்ற பாணங்களை யெல்லாம் கண்டதுண்டமாகக் கண்டித்து, மறுபடியுந் தமது வில்லில் திவ்ய அர்த்தசந்திர பாணங்களை அளவில்லாமற் றொடுத்துச் சில அரசர் களுடைய சாரதிகளையும் குதிரைகளையுங் குறைத்து, சில அரசர் களின் அவயவங்களைப் பழுதாக்கி, சில அரசர்களின் மகுடத்தை உடைத்து மார்பைப் பிளந்து, சில அரசர்களின் வில்லை முறித்துக் கவசத்தைப் பொடியாக்கி, சில அரசர்களி னுயிரைக் கொள்ளை கொண்டு, நன்றாகப் புஷ்பித்திருக்கிற தாமரைத் தடாகத்தில் யானை கள் விழுந்து கலக்கினாலெப்படியோ அப்படிச் சேனைகள்மீது கவிந்து சகல தளத்தையும் நாசப் படுத்தியபோது, உயிர் விட்ட அரசரும் உயிரின்மே லிச்சைவைத்த அரசரும்போக மற்ற அரசர்கள் யாவ ரும் ஒன்றாகக்கூடி, மறுபடியும் எதிர்த்து வில்லை வளைத்து, இந்தி ராஸ்திரம் - வருணாஸ்திரம் - வாயுவாஸ்திரம் - குபேராஸ்திரம் - சூரியாஸ்திரம் - யமனாஸ்திரம் முதலாகிய அஸ்திரங்களைத் தொடுத்து, மஹா உக்கிரத்துடனே நின்றார்கள். பீஷ்மர் அப்

பகைவர் தொடுத்த அஸ்திரங்களை யெல்லாம் ஏககாலத்தில் சேர்ந்தாற்போல் கவளீகரஞ் செய்யத் தகுந்த காந்தருவாஸ்திரத்தை எடுத்து நிறுத்தி, பூசை நைவேத்தியங்கொடுத்து, மந்திரோபதேசஞ் செய்து தொடுத்துவிட்டார். இந்த அஸ்திரம் வில்லை விட்டு வெளிப்பட்ட மாத்திரத்தில் ஒரு பக்கம் மின்னல் - ஒரு பக்கம் மழை - ஒருபக்கம் இடி முதலியவற்றை வெளிப்படுத்தி, அஷ்டதிக்குப் பாலகரையும் அஷ்டவசுக்களையும் அவரவர்கள் வாகனயுதங்களோடு உண்டாக்கிற்று. அதனல் எதிரிகள் விட்ட அஸ்திரங்களெல்லாம் நாசமாயின. உடனே பீஷ்மர் தமது சிலையை வளைத்து, அநேக முள்ளம்புகளையும் பிறைமுக அம்புகளையும் தொடுத்தார். இவ்வம்புகளினுல் அரசர்கள் யாவரு மன நொந்து, இனி பீஷ்மனேடு போராடுவது துன்பமென்றும் இவனிடத்தினின்றுந் தப்பி ஓடிப் போவதே நலமென்றுந் தீர்மானித்து, அவரவர்கள் வந்த திசையை நோக்கினர்கள். இந்தக்குறியைப் பீஷ்மர் கண்டு, உடனே தமது ஜயசங்கத்தைச் சப்தித்தார். சித்திர விரியனும் மற்றவர்களும் தங்கள் தங்கள் சங்கத்தைத் தொனித்தார்கள். அவ்வாறு தொனித்தும் ஓரரசரும் வந்தெதிர்க்கா திருத்தலை யுணர்ந்து, பீஷ்மர் தமது தளத்தில் ஜயபேரிகையை முழக்கக் கட்டளை யிட்டு, அம்பை - அம்பிகை - அம்பாலிகை என்கிற மூன்று கன்னிகைகளையும் முத்துச் சிவிகையி லேற்றிக்கொண்டு தமது நகரத்தை நோக்கிச் சென்றுர். அம்பை என்னுங் கன்னிகை தன் தாதியர்களில் ஒருத்தியை அழைத்து, " ஓ தாதி ! நான் சாளுவராஜன்மீது காதல் கொண்டிருக்கிறே ஞதலால் இந்தச் செய்தியை பீஷ்மாசாரிக்குத் தெரியப்படுத்து" என்று கூற, தாதி பீஷ்மாசாரியிடத்துச் சென்று வணங்கி அம்பையின் எண்ணத்தைச் சொல்ல, பீஷ்மர் அந்த அம்பை கொண்ட கருத்தின்படி சாளுவராசனை மணஞ் செய்து கொள்ள உத்தரவு கொடுத்து விட்டுத் தமது காவலாளிகளிற் சிலரைக் கூட்டிச் சாளுவ ராசனிடத்து அவளை விட்டு வரும்படி கட்டளையிட்டு, மற்ற இரண்டு கன்னிகைகளையும் அழைத்துவந்து, தமது நகரத்தை அலங்கரித்து, நல்ல முகூர்த்தத்தில் அவர்களைச் சித்திரவீரியனுக்கு மணஞ் செய்வித்தார் ; அச் சமயம் அநேக தான தருமங்கள் வேத வேதியர்கள் மகிழச் செய்து, நகரத்தி லுள்ளவர்களுக்கெல்லாம் விருந்து செய்வித்தார்.

பூமிப்பிராட்டி கமலப்பிராட்டி சமேதனுகிய திருமால்போல் விசித்திரவீரியன் அம்பாலிகை அம்பிகை என்னு மிரண்டு கன்னிகைகளுடன் மகிழ்ந்திருந்தான்.

பீஷ்மரிடத்து விடைபெற்றுச் சாளுவராஜனை மணம்புரியக் கருதிச் சென்ற அம்பை சாளுவராஜனைக் கண்டு வணங்கி "ஓ ராஜனே! நெடுநாளாக உன்மீது காதல் கொண்டிருந்த என்னை நீயே மணம்புரியவேண்டும். பீஷ்மர் என்னை அழைத்துப்போனதைக் குறித்து நீ யோசிக்க வேண்டுவதில்லை. ஏனென்ருல் என் கருத்தை நான் அவரிடம் வெளியிட்டேன். அதற்கவர் ஒப்புக்கொண்டு என்னை உன்னிடத்துக் கனுப்பினுர். ஆதலால் என்னை நீ தடையின்றி மணம் புரிய வேண்டும்" என்று வேண்ட, சாளுவராஜன் நகைத்து, "பெண்ணே! உன்னைப் பீஷ்மன் சிறையெடுத்துப் போன பின்பு நான் மணம் புரிந்தால் என்னேடொத்த அரசர்கள் நகைப்பார்கள். ஆதலால், நான் உன்னை மணம் புரியேன். பீஷ்மரிடத்திற் சென்று அவனையே நீ மணம்புரிந்துகொள்" என்று மறுத்துவிட்டான். அம்பை நெடுமூச்செறிந்து, மிகுந்த வருத்தத்தோடு அத்தினபுரத்துக்கு வந்து, பீஷ்மரைக் கண்டு வணங்கி "ஓ மஹாநுபாவா! சாளுவராஜனிடத்துச் சென்ற என்னைத் தாங்கள் சிறையெடுத்ததற்காக மணம் புரியேன் என்று மறுத்துவிட்டான். இனி உமது பாதமே புகலிடமாக எண்ணி வந்தேன். என் கருத்து மகிழ்வெய்தத் தாங்களாவது தங்கள் தம்பியாவது என்னை மணம்புரியுங்கள்" என்று நாணம் மடம்-அச்சம்-பயிர்ப்பு என்கிற நான்கையும் விட்டுச் சொன்னுள். பீஷ்மர் அதற்குச் சிரித்து அவளை நோக்கி "ஓ அம்பை! நீ ராஜகுமாரத்தியாயிருந்தும் அற்பஜாதி ஸ்திரீகள் வசனிப்பதுபோல் வசனிக்கிருய்: முன்னம் சாளுவராஜன் மீது காதல்கொண்டிருக்கிறேனென்று தாதி மூலமாய்த் தெரிவித்தாய். அக் காதலைக் கெடுக்கொணுதென்று உன்னைவிடுத்து மற்ற இரண்டு கன்னிகைகளையும் நான் என் தம்பிக்கு மணஞ்செய்வித்தேன். இப்போது சாளுவராஜன் மணம் புரியேனென்று சொன்னதாக என்னிடத்துவந்து முறைபிடுகிருய். நானே மணம்புரிகிறதில்லை யென்று தேவர்களறியச் சத்தியஞ் செய்திருக்கிறேன். என் தம்பிக்கோ இரண்டு மனைவிய ரிருக்கிருர்கள். மேலும் நீ ஒருவர்மீது காதல்கொண்டபடியால் அவனே உனக்குக் கணவனுவான். அவனையே எவ்விதத்திலேனும் களிப்புறச்செய்து நீ மணம்புரியவேண்டும். அவன் வெறுப்புற்று நீக்கி விடுவா

ஞானல் வேறொரு புருஷனைத் தேடுவது தகுதியல்ல. ஆகையால் உனக்கு இச்சையான இடத்திற்குச் செல்" என்று கடிகடுத்துக் கூற, அம்பை மிகுந்த துன்பத்தைபடைந்து, "நமது வாக்கினாலே நமக்கே கேடுதி தேடிக்கொண்டோம்." என்று தனக்குள் தானே நினைத்துக்கொண்டு, தன் நகரத்துக்கு வந்து தந்தை தாளில் வணங்கி, ஓவென்றலறி நடந்த விருத்தாந்தத்தை உரைத்தாள். காசிராஜன் இதற்கென்ன செய்கிறதென்று சற்றுநேரம் ஆலோசித்து, மகளைப்பார்த்து "உன்னை பீஷ்மன் மணம்புரியும்படி என்னாற் கூடியமட்டும் சில பெரியோர்களைக்கொண்டு தெரிவிக்கிறேன். அதன்மேல் ஒப்புக்கொண்டாலாயிற்று ஒப்புக்கொள்ளாவிட்டால் அவன் பலவான் நான் என்னசெய்யப் போகிறேன்? அப்பால் உன் தலைவிதி" என்று பிரிய வசனஞ்சொல்லிச் சில பெரியோர்களை விட்டுப் பீஷ்மருக்குச் சமாதானங்கூற, பீஷ்மர் மறுக்க, அச் செய்தியை அப்பெரியோர் காசிராஜனுக்குத் தெரிவிக்க, காசிராஜன் அதைத் தன் புத்திரிக்கு உரைக்க, புத்திரி இதனைக்கேட்டு மிகுந்த வருத்தமடைந்து, சில பெரியோர்களை அழைப்பித்து, பீஷ்மர் இப்பூமண்டலத்தி லிருக்கிறவர்களில் யார் சொல்லைச் சிலாக்கியமாயெடுத்துக்கொள்வாரோ அவர்களைத் தெரிவியுங்கள்" என்று வினவ, அப்பெரியோர்கள் அந்த பீஷ்மன் தனக்குக் குருவாயும் அதிக அன்பாயுமிருக்கிற பரசுராமருடைய வாக்கைத் தடுக்கான்" என்று விளம்பினார்கள்.

அப்பால் அம்பை அப்பரசுராமரிடத்துச் சென்று நமது குறையை நிறைவேற்றிக் கொள்ளுவோமென்றெண்ணி எழுந்து, தந்தையிடத்து விடைபெற்றுச் சிலதாதிகள் தன்னைச் சூழ்ந்துவர முத்துச் சிவிகையிலேறி, பரசுராமருடைய ஆசிரமத்துக்கு வழி கேட்டுக்கொண்டு செல்கிறபோது ஒரு வனத்தில் ஒரு முனிவர் எதிர்ப்பட்டார். அம்பை அவரைக் கண்டு, முத்துச்சிவிகையை விட்டிறங்கி அவரடியிற் பணிந்து, தன் ஊர் பெயர் தந்தைபெயர் தன்பெயர் எல்லாமெடுத்துரைத்து, தன் வரலாற்றையுங் கூறினாள். அம்முனிவர் கேட்டு வியப்படைந்து, "அம்மா! நான் உன் தந்தையின் சகோதரியின் புத்திரன். நீ இந்த வழியே சென்றால் இவ்வழி கந்தமாதனத்திற் கொண்டுபோய் விடும். அம்மலையிற் பரசுராமரிருக்கிறார். அவரைக்கண்டு உன் குறையைக் கூறுவாயானால் உன் கருத்து நிறைவேறும். மற்றொருவ

ரால் நிறைவேறுது" என்றுரைத்துப் போயினர். பின்பு அம்பை முத்துச் சிவிகையிலேறி, அவ்வழியே சென்று கந்தமாதனம் வந்து, பரசுராமருடைய ஆசிரமத்தைத் தேடிக் கண்டவளாய் அவ்வாசிரமத்தின் வாசற்படியி லிருந்த அம்மூர்த்தியின் மாணாக்கருக்கு நமஸ்காரஞ்செய்து "ஓ மஹாத்மாக்களே! நெடுந்தூரத்தி லிருந்து ஒரு ராஜகுமாரத்தி தங்கள் பாத தரிசனத்துக்காகக் கடைவாயிலில் வந்திருக்கிறாளென்று பரசுராம மூர்த்திக்குத் தெரிவியுங்கள்" என்றுகூற, அவ்வாயிலோர் அவ்வாறுசென்று பரசுராமமூர்த்தியை வணங்கிச் சொல்ல, பரசுராமமூர்த்தி வியப்புற்று உள்ளேவரக் கட்டளையிட்டார். வாயிலோர் அம்பையைக் கண்டு "ஆசிரமத்துக்கு வர உத்தரவாயிற்று" என்றார்கள். அம்பை ஆசிரமத்துட்சென்று, சந்திரசடாதர சாம்பமூர்த்திக் கொப்பாய் விளங்கும் பரசுராமரைக் கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, பயபக்தியுடனே வாய்பொத்தி எதிர்நின்றாள். பரசுராமர் அம்பையை ஆசீர்வதித்து, 'அம்மணி! நீ யார்? இவ்விடத்துக்கு வரவேண்டிய காரணமென்ன சொல்" என்று கேட்க அம்பை சொல்லுகிறாள்—

## பரசுராமருக்கும் பீஷ்மருக்கும் போர்

"ஓ ஸ்வாமி! நான் காசிராஜனுடைய ஜ்யேஷ்ட புத்திரி. நானும் என் சகோதரிகள் இருவரும் பக்குவகால மடைந்ததை என் தந்தை அறிந்து சுயவரம் நாட்டினார். அச்சுயவரத்திற் சந்திரகுல சிகாமணியாகிய சந்தனுமஹாராஜன் ஜ்யேஷ்ட புத்திரராகிய பீஷ்மாசாரி வெற்றிபெற்று எங்கள் மூவரையும் தம் தம்பிக்கு மணம் புரியக் கொண்டுபோகிறபோது, நான் சாளுவராஜன்மீது காதலாகி, அக்காதலை பீஷ்மருக்குத் தெரிவித்தேன். அவர் என் கருத்தின்படி என்னை விட்டுவிட்டார். நான் சாளுவராஜனிடத்துச் சென்றபோது அச்சாளுவராஜன் "ஒருவர் கைக்குள்ளாகிய உன்னை நான் மணம்புரியேன்" என்று மறுத்தான். மறுபடியும் நான் பீஷ்மாசாரியிடத்துச்சென்று, நாணம் - மடம் - அச்சம் - பயிர்ப்பென்கிற நான்கையும் விட்டு என்னை மணம்புரியும்படி அநேகவிதமாக வேண்டிக்கொண்டும், அவர் ஒப்புக்கொள்ளாமல் மறுத்துவிட்டார். தங்களிடத்து முறையிட்டுக்கொண்டால் அந்த பீஷ்மா

சாரிக்குச் சொல்லி என் மனக்குறையை முடிப்பேனென்று தங்களை நாடிவந்தேன். இனித் தங்களிஷ்டம் என் பாக்கியம்" என்று இரங்கினாள். அதற்கு பரசுராமர் மகிழ்ச்சியடைந்து, "அம்பை! உன் கருத்தின்படியே செய்கிறேன்" என்று பக்கத்திலிருந்த ஏவலாளிகளை நோக்கி, "என் ரதத்தைக் கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட ஏவலாளிகள் ஒரு நிமைநேரத்திற் சாரதியோடு சகல படைகளும் நிறைந்திருக்கிற மஹாரதத்தைக் கொண்டுவந்து நிறுத்தினார்கள். பரசுராமர் அம்பையோடு தாம் ரதமேறி, பத்தாவதுநாள் அஸ்தினாபுரத்துக்கு வந்து, தமதுவரவை பீஷ்மாசாரிக்குத் தெரிவித்தார். பீஷ்மாசாரி அவர் வந்த செய்தி தெரிந்தவுடன் திடுக்கென் றெழுந்து, பூசாதிரவியம் காணிக்கை முதலியவற்றை எடுத்துக்கொண்டு மந்திரிகள் புடைசூழ அதிவேகமாக வந்து, அவரைச்கண்டு வலம் வந்து, சோடச உபசாரங்களோடு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, பயபக்தியுடனே வாய்பொத்தி எதிர்நின்று "குருஸ்வாமி! எங்கள் குலத்தோர்செய்த மாதவமோ? நான்செய்த பூஜாபலமோ? தேவரீர் எளியேன்மீது கிருபை கூர்ந்து இந்நகரத்துக் கெழுந்தருளியது" என்று அநேக விதமாகத் துதித்தார். பரசுராமர் மகிழ்ந்து ஆசீர்வதித்து, பீஷ்மரை நோக்கி "அப்பா பீஷ்மா! நீ சந்திரவமிசசிகாமணியாக இருந்தும் விவாகமில்லாமலிருக்கிறது தகுதியல்ல. இதோ இருக்கிற அம்பையை மணம்புரி. அதன்மேல் இம்மை இன்பமடைதலோடு மறுமை இன்பமுமடைவாய். என் வாக்கைத் தட்டாமல் ஏற்றுக்கொள்" என்று கூற, பீஷ்மாசாரி இவ்வசனங்களைக் கேட்டு, இரண்டு செவிகளினும் கரத்தைவைத்து மூடி, நாம் செய்திருக்கிற சபதம் குருஸ்வாமிக்குத் தெரியாதாதலால் இவ்வசனங்களைக் கூறினார். அறிவித்தாற் பின்பு இவ் விஷயத்தைக் குறித்து வசனியாரென்று கருதி, பரசுராமரை வணங்கி, தந்தை வியாகூலம் தீரும் பொருட்டுத் தாம் செய்த சபதத்தை ஆதியோடந்தமாகத் தெரிவித்து, நான் மணம்புரிவதற் கில்லை" என்று கூறிப் பரசுராமரின் வாக்கையுந் தடுத்தார். பரசுராமர் நமது வாக்கைத் தடுத்தானே என்று சினங்கொண்டு, கண்களில் நெருப்பெழ நோக்கி, "அடா பீஷ்மா! என் வாக்கைத் திரிமூர்த்திகளுந் தடுக்கார்கள். நீ யொரு ராஜன் என் சொல்லைத் தடுத்தாயல்லவா? என் வாக்கின்படி அம்பையை மணம்புரிந்தா லாயிற்று. இல்லாவிட்டால் வில்லெடுத்

துப் போர்செய், உன் தலையைச் சூரியவமிச ராஜர்கள் தலைபோ லுருட்டுகிறேன்" என்று வீராவேசங்கொண்டு மஹா உக்கிரத் துடன் அழைக்க, பீஷ்மர் சற்றுலோசித்து, தேவர்களறியக் கூறிய சபதத்தைக் கெடுப்பதைவிட நமது குரு முன்னிலையில் தேகத்தை விடுதல் சிறப்பும் புகழுமாகும்" என்று தீர்மானித்து, பரசுராமரை வணங்கி "ஓ ஸ்வாமி! உமது வில் வணங்கினால் சொர்க்க மத்திய பாதாள லோகமும் வணங்கும். நான் ஒருவன் வணங்காதிருப் பனோ? ஆகிலும் நான் கூறிய சபதத்தைமாத்திரம் கைவிடேன்; அதற்காக உயிரைக் கொடுப்பேன். இது என் உறுதி! இனித் தங்களிஷ்டம்" என்றார். பரசுராமர் இவ் வசனங்களைக் கேட்டுக் கடுகடுத்து, வடவாமுகாக்கினியைப்போலக் கோபாக்கினி ஜொலிக்க பீஷ்மரை நோக்கி "அடா பீஷ்மா! கற்ற கல்வியெல்லாம் என் னிடத்தில் தானே ஓதவந்தாயல்லவா? நல்லது இனித் தாமதம் செய்யாமல் போர்க்கோலங் கொண்டுவா" என்று புகல, பீஷ்மர் சாரி "இனியொரு தீர்ப்பில்லை நமது உயிர் முடிவதே தீர்ப்பு" என்று நினைத்து நால்வகைச் சேனைகளையும் நீக்கி, பரசுராமரைப் போலத் தாமும் ஒரு தேர்க்காரராய்ப் போர்க் கோலங்கொண்டு யுத்தபூமியில் வந்து நின்றார்.

அப்போது பரசுராமரும் தமது ரதத்தை யுத்த பூமியிற் செலுத்தி பீஷ்மரை நோக்கி "அடா பீஷ்மா! இனி என்ன தாமசம்? எடு வில்லை! தொடு சரத்தை!" என்று புகல, பீஷ்மர் தேரிலிருந்தபடி பரசுராமருக்குஅஞ்சலி செய்து "ஓ சுவாமி! நான் மிஞ்சிப் பாணம் தொடுப்பது தகுதியல்ல. தாங்களே முன்னம் பாணம் தொடுக்கவேண்டும்" என்று வருந்திக் கேட் கப், பரசுராமமூர்த்தி சினங்கொண்டு, கலகலவென்று நகைத்து கண்களில் நெருப்புப் பொறி பறக்க நோக்கி, "நல்லது பீஷ்மா! உன் கருத்தின்படியே இதோ தொடுக்கிறேன் பாணத்தை" என்று சொல்லிச் சூரியவமிசத்தை நாசப்படுத்திய கோதண் டத்தை மூதண்டம் பிளக்க வளைத்து, நாணேற்றித் தேவர்கள் செவி செவிடுபடத் தக்கதாகக் குணத்தொனி செய்து, அண் டங்க ளிடியச் சங்கத்தொனி காட்டி, ஐந்து அர்த்த சந்திர பாணங் களைத் தொடுத்துச் சாரதியையும் குதிரைகளையும் இரண்டு பாணங் களினால் நோகச் செய்து, மூன்று பாணங்களால் பீஷ்மரை அடித் துக் களைப்படையும்படி செய்தார். பீஷ்மர் அந்த ஐந்து பாணங் களையும் ஏற்றுக்கொண்டு, தமது போர்முகத்துக்குரிய தார்

முகத்தை வளைத்து, நாணேறிட்டுக் குணத்தொனி செய்தார். அது கண்டு பரசுராமர் மஹாகூர்மை பொருந்திய மின்னலைப்போற் பளீர் பளீர் என்று ஜொலிக்கும் திவ்ய கணைகளில் நூறு கணைகளைத் தூண்டினர். பீஷ்மர் அந்த நூறு கணைகளுந் தம்மிடத்து வருவதற்குமுன் சில கணைகளைவிட்டுக் கண்டித்தார். பரசுராமர் கணைகள் வெட்டுண்டதை நோக்கி வெகுண்டு, பிறைமுக அம்பு - முள்ளம்பு - கூரம்பு முதலியவைகளைக் கோடி கோடியாகச் சோனை வருஷம் சொரிந்தாற் போல் ஓயாமல் தொடுத்தார். பீஷ்மர் எவ்வளவு கணைகள் தம்மிடத்துக்கு வருகின்றனவோ அவ்வளவு கணைகட்கு வெவ்வேறு கணைகளைத் தொடுத்து அறுத்துப் பூமியிற் றள்ளினர். பரசுராமர், பீஷ்மருடைய கைச்சாதுரியத்தைக் கண்டு சிந்தித்து மகிழ்ந்து, "இவனோடு ஜாக்கிரதையாயிருந்து போராட வேண்டும். ஏனென்றால் 'விளக்கில் தீவட்டி யுற்பத்தி'. இது யாவர்க்கும் தெரியும். தீவட்டி செய்கையி லுயர்ந்தது. அதுபோல் பீஷ்மன் நமது மாணாக்கனா யிருந்தாலும், நம்மைவிட எண்மடங் கதிகமான புத்தியும் சாதுரிய யுக்தியு முடையவனா யிருக்கிறான்" என்று நிதானித்து, ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம், நூறாயிரம், பத்து நூறாயிரம் கோடி, சதகோடி சங்கமாக சரங்களைத் தொடுத்து, பீஷ்மருடைய ரதத்தை அப்படி இப்படி அசையவொட்டாமற் சரக்கூடம் போட்டார்.

பீஷ்மர் அனேக பாணங்களை விடுத்துத் தம் இரதத்தைக் கவிந்திருக்கிற பாணங்களைக் கண்டித்து, இனி நாம் சும்மாவிருக்கிறது தகுதியல்லவென்று பரசுராமருக்கும் சாரதிக்கும் குதிரைகளுக்கும் சில பாணங்களைத் தொடுத்து நோகச் செய்து, பரசுராமருடைய ரதம் அப்பாற் போகவொட்டாமற் றமும் சரக்கூடம் போட்டார். பரசுராமர் கோபங்கொண்டு, கண்களை நெருப்பெழ நோக்கி, பிரமதண்டம் - காலதண்டம் - சத்தி முதலியவற்றை விடுத்ததுமன்றி, திவ்யாஸ்திரங்களையும் தொடுத்துச் சரக்கூட்டை அதஞ்செய்தார். பீஷ்மர் தம்மேல் வருகிற காலதண்ட முதலியவற்றை யெல்லாம் அவ்வவற்றைக்கொண்டு துணித்தார். பரசுராமர் கைமிஞ்சிச் சில கணைகளை விட்டுப் பீஷ்மர் மார்பைப் பிளந்தார். பீஷ்மர் சற்று நேரம் மூர்ச்சையாயிருந்து எழுந்து வில்லை வளைத்து, அநேக திவ்ய பாணங்களைத் தொடுத்து, குதிரைகளை ரத்தமயமாக்கிச் சாரதியைச் சல்லடைக் கண்களைப்போல்

துளைத்து, பரசுராமர் சரீரத்தைச் சக்கைசக்கையாகப் பிளந்தார். பரசுராமர் மனங்கலங்கி மூர்ச்சை யடைந்து மறுபடியும் எழுந்து, வில்லை வளைத்து, அதிக தீக்ஷிணியமான பாணங்களைத் தொடுத்து, பீஷ்மர் தம்மைத் துன்பப் படுத்தியதுபோலத் தாம் பீஷ்மரையும் துன்பப் படுத்தினர். அதற்கு பீஷ்மர் அஞ்சாமல் சஞ்சலப்படாமல் எதிர் நின்று, திவ்வியாஸ்திரங்களைத் தொடுத்துப் பரசுராமரை வருத்தப் படுத்தினர். இப்படி ஒருவர்க்கொருவர் விரோதப்பட்டுத் தேவர்களெல்லாரும் அஞ்ச திவ்வியாஸ்திரங்களையும் திவ்விய பாணங்களையும் தொடுத்து, அன்னந் தண்ணீர் ஆகாரமில்லாமல பத்துநா ளிரவும்பகலுமாகப் போராடினர்கள். முடிவில் பீஷ்மர் கை மிஞ்சிப் பரசுராமருடைய கை வில்லை யொடித்து, கவசத்தைப் பிளந்து, கொடியை அறுத்து, குதிரைகளைக் கொன்று, தேரைச் சிதல்சிதலாய்ப் பெயர்த்தெறிந்தார். பரசுராமர் இங்கு நின்றோமானல் மானத்திற்குச் சேதம் வருமென்று யோசித்து, "இனி அரசருக்கு வில்வித்தை கற்பிக்கிறதில்லை" என்று சபதஞ் செய்து, தேரைவிட்டுப் பூமியிற் குதித்துப் பதாதியாக ஓடிப் போனர். பீஷ்மர் அதுகண்டு ஜயசங்கத்தைத் தொனித்து, தேவர்கள் துதிக்கத் தமது நகரத்திற்குச் சென்றார்.

இப்பால் பீஷ்மரை மணம்புரிய வந்த அம்பை பரசுராமர் செய்கையைக் கண்ணுற்று மிகுந்த வருத்த மடைந்து, "நமது சகோதரிகளோடு செல்லுகிறபோது மௌனமா யிராமல் நமது கருத்தைப் பீஷ்மனுக்குத் தெரிவித்ததினலல்லவா இவ்வளவு துன்பம் நேரிட்டது. அதுவுமன்றி நமக்காக இந்தப் பரசுராமரும் போர்முகத்தில் முதுகிட்டோடினர். இனி நாம் செய்வதென்ன?" என்று தனக்குள் தானே யோசித்து, "இவ்வளவு வருத்தத்துக்குக் காரணம் பீஷ்மனுதலால் அவனைக் கொல்லாமல் விடுகிறதில்லை" என்று தீர்மானித்து, "அவனைக் கொல்ல நாமொரு சூரனுகவேண்டும். அதற்குத் தகுந்த பலம் சித்திக்க நல்ல தவஞ் செய்வோம்" எனக் கருதி, அப்பெண்ணுருவத்தைத் தவவுருவாகக் கொண்டு, ஒரு வனத்தில் வந்து தவநிலை இயற்றி, அநேக காலம் பதுமாசனத்திலிருந்தும், அநேக காலம் ஒரேநிலையாய் நின்றும், அநேக காலம் ஒரு பாதத்தை யூன்றியும், அநேக காலம் ஒருகாலின்மீது மற்றொரு காலை மடக்கிவைத்தும், அநேக காலம் இரண்டு கரங்களையும் தலைமீது குவித்து வைத்துக் கொண்டும், விழித்தகண் விழித்தபடி

யிருந்தும் காளியை நோக்கி அருமையான தவஞ் செய்தாள். காளி அம்பை செய்கிற தவத்துக்கு மகிழ்ந்து, பிரசன்னமாயினுள். அம்பை காளியை அநேகவிதமாகத் துதித்து, இரண்டு கண்களிலு மானந்தக் கண்ணீர் வடிய நோக்கி "எளியேன் செய்த தவத்துக்கு மகிழ்ந்து என்னை யொரு பொருட்டாக எண்ணி வந்த தாயே! உன் கிருபைக்கு என்ன உவமான மிருக்கின்றது" என்று புகழ்ந்தாள். காளி அம்பையை நோக்கி, "ஓ அம்பா! உன் கருத்தில் நாடியிருக்கிற பொருளென்ன? கேள் தருகிறேன்" என்று சாற்ற, அம்பை வணங்கி, "ஓ அம்மா! என்னை யாதொரு பலனு மடையாம விருக்கச் செய்த பீஷ்மனைக் கொல்ல வேண்டும். அது தான் நான் நாடியிருக்கிறேன்" என்று நவின்றனள். காளி அம்பையை நோக்கி, "ஓ அம்பையே! நீ இந்த ஜன்மத்தில் அந்த பீஷ்மனைக் கொல்லமாட்டாய். இந்த வடிவத்தை நீக்கி யாகசேனனிடத்தில் அலியாகப் பிறந்து, அதன்மேல் அவன் உன்னைப் பிள்ளை யென்று பாராட்டி மணமுதலியவற்றைச் செய்யப்போகிறுன். அப்பால் பாரதப்போர் வரும். அப்போருக்கு நீயும் செல்லுவாய். அக்காலத்தில் உன்னுல் பீஷ்ம னிறக்கப்போகிறுன்" என்று விளம்பிக் காளி மறைந்தாள். பின்பு அம்பை ஒரு தீக்குழி வளர்த்து, அதை வலம் வந்து வணங்கி, "நான் பீஷ்மனைக் கொல்லக் கடவேன்" என்று அத்தீயில் விழுந்து அவ்வுருவத்தை நீக்கி, யாகசேனனிடமாய்ப் பிறந்து வளர்கின்றுள்.

இங்கே அம்பிகை அம்பாலிகை என்னு மிரண்டு மனைவிகள் மீது மிகுந்த காதலாகி இரவும் பகலும் பிரியாமற் கூடிக் காமக் கடலி லாழ்ந்த சித்திரவீரியன் தன் வாயிற் பிறக்குஞ் சொல்லொன் றினுல் உலகமுழுமையும் வசப்படுத்தி, தனக்கு மாறுபட்ட அரசர் களை யெல்லாம் வீறிட்டழுது முதுகிட்டோடச் செய்து, எல் லாப் பகைகளையுங் கடிந்து மிகுந்த சிறப்புடன் செங்கோல் நடத்து கிறவனு யிருந்தும் அகப்பகையாகிய காமப்பகை ஒன்றை மாத்திரம் வகித்திருந்தான். அதனுற் சந்திரவமிசம் விர்த்தியாவதற்குப் புத்திரபாக்கியம் அற்றுப்போனது. மற்றப் பாக்கியங்களும் அவ் வாசைப் பெருக்கத்தினுற் புறம்பாயின. பல வியாதிகட்குந் தலைமை யாகிய பெருவியாதி தோன்றியது. அது மண்ணுலகிலிருக்குஞ் சகல வைபோகங்களையும் பற்றறச் செய்வித்து, விண்ணுலகிலிருக்கும் பரமபதத்துக்கு அவனை ஆளாக்கிவிட்டது. இந்தச் செய்தி

பீஷ்மரறிந்து, இரண்டு கண்களிலும் நீர் பெருகக் கோவென் றலறி, அன்னை சுற்றத்தார் மந்திரிமார் நகரத்தார் முதலானவர்கள் கதறிக்கொண்டு தம்மைச் சூழ்ந்து நிற்கத் தாம் அச்சித்திரவீரிய னுக்குச் செய்யுங் கடனை நிறைவேற்றி அவனை யடக்கஞ் செய்து, பின்பு அன்னைக்குத் தேறுதல் சொல்லித் தன்னந்தனியே யிருந்து, "ஆ! தெய்வமே! சந்திரவமிசம் புதன் முதல் சந்தனுமஹாராஜன் வரையில் வாழையடி வாழையாக விர்த்தியாய் வந்து, என்னுளில் விர்த்தி யில்லாமல் என்றலைமுறையோடு அற்றுப் போகும்படி நேர்ந்ததே! நானோ தந்தைக்காக மணம்புரியேனென்று தேவர்க ளறிய பிரதிக்ஷித்துக்கொண்டேன். தேவர்களும் அப்பெயரை எனக்கு நாட்டினார்கள். இனி நான் என்ன செய்வேன்" என்று தமக்குள் தாமே நினைந்து, தாமரையிலைச் சலம்போலத் தத்தளித்து மன வருத்த மடைந்திருந்தார்.

---

## பரிமளகந்திக்குப் பீஷ்மர் தரும சந்தானவிதி யுரைத்தல்

---

அதுகாலத்திற் சந்தனுமஹாராஜன் மனைவி பரிமளகந்தி தன் இரண்டு புத்திரர்கள் பரமபதஞ் சேர்ந்ததற்கு மிகுந்த வருத்த மடைந்து "குலம் விர்த்தியில்லாமற் போயிற்றே" என்ற வருத்தத்துடன் மூத்த குமாரனாகிய பீஷ்மரிடம் வந்தாள். பீஷ்மர் சிற்றன்னையின் சீரடி வணங்கி, "அம்மா! எளியே னிடத்து வந்த காரண மென்ன?" என்று வினவ, அவள் தன் கருத்தை வெளியிடக் கருதி "அப்பா மகனே பீஷ்மா! உலகத்தில் அரசுசெலுத்துகிறவர்களுக்குப் புத்திரனில்லாவிட்டால் தருமசந் தானம் பெற்றுக்கொள்வது தகுதி. பட்டத்துக்கு யோக்கியனாக நீ இருக்கிறபோது புத்திரர்களில்லையென்று வருத்தப்படுவது நீதியல்ல. நீ யொரு ஸ்திரீயை மணம்புரியாவிட்டாலும், என் புத்திரனுடைய மனைவியரைக் கூடிப் புத்திரசந்தான முண்டாக்கலாம். அதனால் தோஷமில்லை. 'மாதா சொல்லை வேதவாக்கியம்போல் எடுத்துக் கொள்ளவேண்டும்' என்று வேதங்கள் முறையிடுகின்றன. நீ என் வார்த்தையைத் தட்டாமல் ஒப்புக்கொள்" என்றுரைக்க, பீஷ்மர் திடுக்கிட்டு மிகுந்த துன்பமடைந்தவராய், இரண்டு செவிகளிலும் இரண்டு கரங்களை வைத்து மூடிக் கடவுளைத் துதித்து, சிற்றன்

ளைக்கு நமஸ்காரஞ் செய்து, "அம்மணி! என் தந்தையின் மனக் குறையை நீக்கத் தேவர்களுமறிய மணம்புரியேனென்று சபதஞ் செய்திருக்கிற என்னைப்பார்த்து இந்த வார்த்தை கூறுவது தகுதியல்ல. பட்டத்துக்குப் புத்திரனில்லாவிட்டால் தருமசந்தானம் பெற்றுக்கொள்ளுகிறது என்கின்றாய். அது உண்மைதான். மேலும் வேதவிதியும் அவ்வாறே கூறுகின்றது. அதற்கொப்பாக அநேக அனுபவங்களும் உண்டு. அவ்வாறு செய்து தருமசந்தானம் பெற்றால், எனக்குமாத்திரமல்ல; என்னோடொத்த அரசருக்கும் சம்மதந்தான். ஆதலால், அந்த விதிப்படியே செய்" என்று பீஷ்மர் பின்னுஞ் சொல்லுகிறார்:—"ஓ அம்மணி! முற்காலத்தில் பௌவியரென்று ஒரு முனிவரிருந்தார். அவர் சந்திர சடாதர சாம்ப மூர்த்திக்கு ஒப்பானவர்; சாபாநுக்கிரக சாமர்த்திய முடையவர். அவர் மமதை என்னும் கன்னிகையை மணந்து, அவள் மிகுந்த கற்பும் பொற்பு முள்ளவளா யிருந்ததினால், அவளைப் பிரியாமல் இருந்தார். சொர்க்கலோகத்துக் கதிபதியாகிய இந்திரனுக்குக் குருவாய் விளங்கும் வியாழபகவான் இந்த மமதையினது திருவுருவத்தைக் கண்டு மிகுந்த காதலுடையவராகி, இரவும் பகலு மதுவே ஏக்கமுற்று, நாளுக்குநாள் உடல் இளைக்கச்சகியாதவராய்த் தமது இருப்பிடத்தைவிட்டு அம்மமதை இருக்கு மிடத்தில் வந்தார். அங்கே அவள் கணவன் அவளை நீங்காமலிருக்கிறதைக்கண்டு சமயங்கிடைக்காமற் சஞ்சலப்பட்டுக்கொண் டிருந்தார். இப்படி இருக்கிறகாலத்தில் அந்த மமதை கருப்பமுற்று, கருப்பவாதனையால் அயர்ந்து மல்லாந்து படுத்து நித்திரை போய்விட்டாள். பவ்வியரென்கிற பிராமணர், மனைவி நித்திரைசெய்வ தறிந்து, இவளெழுந்திருப்பதற்கு முன்னம் ஸ்நானஞ் செய்து வருவோமென்று நினைத்துத் தடாகத்திற்குச் சென்றார். அந்த வேளையில் வியாழபகவான் அந்த மமதை யிடத்திற்கு வந்து, இவளை நமது சுய உருவத்தோடு புணர்வோமானால் விழித்துக் கொள்வாள். பின்பு சாபம் நேரிடும்" என்று கருதித் தம் ரூபத்தை மாற்றி, வேறொரு விதமாய் ரூபங்கொண்டு புணர்ந்தார். அந்த மமதையின் வயிற்றிலிருந்த சிசுவானது பவ்வியருடைய வீரியமாதலால், நல்ல பிரமக்கியானமுள்ளதா யிருந்தது. அது இந்த வியாழபகவான் செய்கிற துர்நடத்தையைக் கண்டு மனம் பொறாமல், கருப்பத்தி லிருந்தபடியே "ஓ தேவகுருவே! நீரோ தேவராஜனுக்குக் குருவாயிருக்கின்றவர். வேதாகமவிதிகள் உம்மால் மூன்று லோகங்களிலும் விளங்குகின்றன. அவ்வளவு சிலாக்கிய

ராகிய நீர் மானிடர்களில் சுத்த மூடராயிருக்கிறவர்களும் நடத்தாத துற்செய்கையை நடத்துகிறீர். இது உமக்குத் தருமமா" என்று கூற, வியாழபகவான் திடுக்கிட்டு, இச்சத்தம் எங்கிருந்து உற்பத்தியாயிற்றென்று நாலு திசையும் நோக்கிப், பின்பு கருப்பத்திலிருக்கிற சிசுவென்றுணர்ந்து, அதிகச் சினங்கொண்டு "ஓ சிசுவே! அநேகநாளாகக் கொண்டிருந்த என் காதலை நீ க்ஷணநேரத்தில் கெடுத்து என்னைப் பங்கப்படுத்தினதினால், உனக்கிரண்டு கண்களும் தெரியாமற் போகக்கடவன" என்று சாபமிட்டுப் போய்விட்டார். பின் அந்தச் சிசுவிற்கு இரண்டு கண்களுந் தெரியாமற் போயின. அதனால் அது வருத்தமுற்று மௌனமா யிருந்துவிட்டது. பின்பு மமதை துயின்றெழுந்து எப்போதும்போல் தன் கணவனோடு வாழ்ந்து வருகிறநாளில், பிரசவகாலம் சமீபித்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் இளஞ் சூரியனைப்போல் பிரகாசிக்கின்ற புத்திரனைப் பெற்றாள். தாய் தந்தையர் அப் புத்திரனுக்குப் பிரதானமான கண்ணில்லாம லிருப்பதைக் கண்டு கனவருத்த முற்றவர்களாயிருந்த போதிலும், அப் புத்திரனை வளர்ப்பதில் அதிக விருப்ப முடையவர்களாகிப் பாதுகாத்து, அவனுக்குத் தீர்க்கதமன் என்று பெயரிட்டு, உபநயனமில்லாமையை நோக்கி அவ் வுபநயன மளிப்பது போல் தங்கள் மரபிற்குரிய உபநயனச் சடங்கினைப் பொருந்தச் செய்தார்கள். இச் சிறுவராகிய தீர்க்கதமர் அன்றுமுதல் தாய் தந்தையர்களின் சுவாதீனத்தி லிராமற் பிரமசாரியத்தி னியல்பு பெற்று, வீடுகள்தோறுஞ் சென்று மாதவ கவளம் வாங்கிப் புசித்து வந்தார்.

இப்படி வருகிறகாலத்தில் ஒரு நாள் அவர் தீர்க்கதேவர் என்னு முனிவரிருக்குமிடத்துச் சென்றபோது, அவர் இச் சிறுவரது சௌந்தரியத்தைமுற்றும் நோக்கிக் கண்ணில்லா திருத்தலுக்கு வருத்தமுற்று, இவருக்கு ஞானக்கண் கொடுக்கவேண்டு மென்று கருதி, சிறுவரை, அருகி லழைத்து வரன்முறைகளைக் கேட்டு, பின்பு தம் வல்லமையினால் அச்சிறுவருக்கு நாலுவேதம் ஆறுசாஸ்திரம் அறுபத்துநாலு கலைக்கியானம் முதலியவற்றைப் போதித்தார். அச்சிறுவர் சகல கலைகளிலும் வல்லவராகி, ஆசிரியரை அன்போடு வணங்கி விடைபெற்று, முன்போலவே வீடுகள்தோறும் சென்று மாதவ கவளம் வாங்கிப் புசித்து வருகிற நாளில், அன்னமென்று வந்தவர்க்கு முன்னஞ்சென்று வந்தனை வழிபாடு செய்து மிருந்த

காதலோடு அன்னம் படைத்துவரும் விரதத்தை தன்னுயி ராகக் கொண்ட ஒரு வேதியர் வீட்டிற்குச் சென்று தாம் வந் திருப்பதைச் சதா வேதகோஷங் கொண்டிருக்குந் தமது வாயோ சையாற் றெரிவித்தார். அந்த வேளையில் அவ் வேதியர் போஜ னம் செய்கிற தருணமாயிருந்தும் அந்த ஓசையைக் கேட்ட மாத்திரத்தில் விரைந்துவந்து, தீர்க்கதமருக்கு உபசாரங்களைச் செய்து அழைத்துப்போய் தம்மோடு வைத்துக்கொண்டு, போஜ னஞ் செய்வித்தார். பின்பு தீர்க்கதமர் வேதபாராயணஞ் செய் தார். அதனை அவ் வேதியர் கண்டு, "ஆ! ஆ! இச் சிறுவர் கண்ணில்லாதிருந்தும் வேதமோதுகிறார். இதனை உய்த்து நோக் கினால் இவர் நல்ல தவசிரேஷ்டரின் புத்திரராக இருக்கவேண்டும்" என்று நினைத்துத் தீர்க்கதமரை யழைத்து அவரது வரலாற்றைக் கேட்டு மிகுந்த களிப்படைந்து, தன் புத்திரனைப்போல் பாவித்து வளர்த்து, தம் குமாரத்தியை அவருக்குக் கன்னிகாதானமாகக் கொடுக்கவேண்டும் என்று கருதி, நல்ல சுப முகூர்த்தத் தில் தன் குமாரத்தியை அத் தீர்க்கதமருக்கு மணஞ்செய்து கொடுத்துச் சிலநாள் வைத்திருந்து, பின்பு மருகராகிய தீர்க்கதமரை நோக்கி, "ஐயா! இனி உமது மனைவியோடு உமது கருத்துக் கிசைந்த விடத்துச் சென்று நன்மையை அனுபவியுங்கள்" என்று கூற, தீர்க்கதமர் சம்மதித்துத் தன் மனைவியை அழைத்துக் கொண்டு, ஒரு திவ்ய க்ஷேத்திரத்திற் பன்னகசாலையொன் றியற்றி, மனைவி பணிவிடை செய்யத் தாம் நல்ல தவம்புரிந்துகொண் டிருந் தார். இப்படி யிருக்கிறநாளில் ஒருநாள் அக் கன்னிகை பிரதோஷ காலத்தில் தன் கணவராகிய தீர்க்கதமரை வணங்கி, "ஓ மகாத் மாவே! இன்றையத்தினம் இந்த வேளையில் என்னைக் கூடிக் கலந் தால்தான் என் மனங் களிப்புறும், இல்லாவிட்டால் அதிகப் பாவம் உமக்குச் சித்திக்கும்" என்று கூற, தீர்க்கதமர் "ஆ! ஆ! பெண்ணே! உலகத்திற் பெண்ணாகப் பிறந்தவர்க்குப் புருஷ இன் பம் ஒன்றேயன்றி வேறொரு இன்பமில்லை. அது எனக்கு நன்றா கத் தெரியும். ஆகிலும் கலவித் தொழிலுக்குத் தகுதியான கால மல்லாத பிரதோஷ காலத்தில் கலவிக்கு அழைப்பது தகுதியல்ல. அப்படி அல்லவென்று கூடினால் அதிகப் பாவம் நேரிடுவதுமன்றி கருப்பந்தரித்தால் அக் கரு பலதோஷங்களுக்கும் பாத்திரமாயிருக் கும். ஆதலால், இந்த வேளை அக்கருத்தைமறந்துவிடு" என்று கூற அம்மங்கை கணவன் கூறிய வசனங்களை ஆற்றிற் கரைத்த புளிபோ

லாக்கிக், காமவெறிகொண்டு மேல்விழுந்து, கலவித்தொழிலை இயற்றச் சொல்லிப் பலவிதமாகத் தொந்தரை செய்தாள். உலகத்திற் புருஷர்க்குப் பேதைப் பருவமென்றும் - பாலப்பருவமென்றும் - யௌவனப் பருவமென்றும் - வார்த்திகப் பருவமென்றும் பருவம் நால்வகைப்படும். அவற்றுள், 5 - வயதளவும் பேதைப்பருவம், 16 - வயதளவும் பாலப்பருவம். 42 - வயதளவும் யௌவனப் பருவம். அதற்குமேல் வார்த்திகப் பருவம். யௌவனதசை அடைந்தவர்கள், பல சாஸ்திரங்களை அறிந்து அவற்றின் பயனை யுணர்ந்து அந்நெறியைக் கைவிடாது பற்றி நடக்கும் தீவிர அறிவிடையோரா யிருந்தாலும், மனமாகிய பொந்தில் ஒளித்திருக்கும் காமமென்னும் பைசாசத்தினால் கல்வி கேள்வி முதலியவற்றை மறந்தவராய்க் கார்காலத்து ஜலத்தைப்போலத் தெளிவின்றி அக் காமத்தின்வழிச் செல்வர். அந்த யௌவனதசை அடைந்த இந்தத் தீர்க்கதமர் தம் மனைவி வற்புறுத்தியதும் மனமயங்கி அவள் மகிழ்வெய்தக் கலந்தார். உடனே இவருடைய வீரியவிர்த்தியினின்றும் அக் கன்னிகை, காலபேதத்தினாற் கொடிய கிராதத்தன்மை பூண்ட நூறு புத்திரர்களைப் பெற்றாள். இல்லறத்திலிருந்து சகல பாக்கியத்தையும் சம்பாதித்து இனிது வீற்றிருக்கிற கிரகஸ்தரும் ஒரு புத்திரனை வளர்ப்பதற்கு அதிக வருத்தப் படுவாரென்றால், துறவற ஆசிரமத்திலிருந்து அதிலும் கண்ணில்லாத கணவனைப்பெற்ற அக் கன்னிகை தான் பெற்ற நூறு பிள்ளைகளை வளர்ப்பதற்கு அதிக வருத்த மெடுத்துக்கொள்ள வேண்டுமாதலால், அப் புத்திரரை வளர்ப்பதிலே அக் கன்னிகை அதிக சிரத்தை யுடையவளாய்க் கணவன்மீது அன்பில்லாதவளா யிருந்தாள். அதனைத் தீர்க்கதமர் கண்டு மனைவியை அழைத்து, "ஓ பெண்ணே! என்ன என்மீது எள்ளளவேனும் உள்ளன்பில்லாம லிருக்கிறாய்" என்று கேட்க அக் கன்னிகை கோபமடைந்து "இரவும் பகலும் உமது புத்திரரைப் பாதுகாத்து வருகிறதே பெரிய ஊழியமாயிருக்க, நீர் இப்படிச் சொல்வது தகுதியா?' என்று கூறி, "என்னை நிந்தித்தபடியால் "இனி உமக்கும் எனக்கும் சம்பந்தம் வேண்டியதில்லை" என்று கடுகடுத்தாள். தீர்க்கதமர் இவ் வசனங்களைக் கேட்டு அதிகக் கோபங்கொண்டு, அவருஞ் சில துர்வசனங்களை வழங்க அதன்மேல் ஒருவர்க்கொருவர் கலகமுண்டாயிற்று. இதில் அந்த மாது சினங்கொண்டு, முன்பின் யோசிக்காமல் தன் புத்திரர்களை அழைத்து "ஓ புத்திரர்களே! இந்தக் கண்ணில்லாதவனைத்

தூரத்தி லழைத்துப்போய் உயிருக்குச் சேதம் வராமல் நன்று யடித்து, ஒரு தெப்பங்கட்டி அதில் இவனை வைத்து வரிந்து கட்டி ஆற்றில் விட்டு வாருங்கள்" என்று கட்டளை யிட்டாள். அன்னையின் ஆதரவி லிருப்பவர்களாதலால் எள்ளளவேனுந் தாக்ஷண்யமில்லாமல் கண்ணில்லாத தந்தையை அவர்கள் இழுத்துப்போய் ஒரு வனத்தில் நிறுத்தி நன்றுயடித்து, மாதா சொற்படி அந்தத் தீர்க்கதமரைத் தெப்பத்தி லேற்றிக் கங்கையில் விட்டுப் போயினர். தீர்க்கதமர் அதிக துன்பத்தை அடைந்து, ஸ்ரீமந் நாராயணமூர்த்தியை மனதில் நினைத்து, "எந்தெந்தக் காலத்தில் எந்தெந்த வேதனை படவேண்டுமோ அந்தந்த வேதனையை அனுபவிக்கத்தான் வேண்டும். இது பூர்வஜந்மாந்திர கர்மம்" என்று தீர்மானித்து, எல்லாப் பாவத்துக்கும் மருந்தாகிய வேதத்தை யோதிக்கொண்டு கங்கையிற் செல்லும்போது, கங்கை இந்த மஹாபுருஷரது மகிமையை அறிந்து இரக்கமுற்று, இவருக்கு யாதொரு தீங்கும் நேரிடாதிருக்கப் பாதுகாத்து, நல்ல துறையருகில் அத் தெப்பத்தை யொதுக்கினள். அத் தெப்பம் கரையருகில் வந்தது. அப்போதும் பிறவிக் கடலைக் கடந்த இந்த தீர்க்கதமர் வேதபாராயணஞ் செய்வதிற் சோர்வடையாம லிருந்தார். இப்படி யிருக்கிற தருணத்தில் இரவிகுல திலகனான பலிச் சக்கிரவர்த்தி தனக்குப் புத்திரசந்தான மில்லாமையாற் கனவருத்த மடைந்து, கொலுவில் வந்திருந்து மந்திரிமார்களை நோக்கி, "ஓ புண்ணியவான்களே! நான் தருமதேவதை நாலுபாதத்தில் நடக்கக் கூடியமட்டும் அநேக தானதருமங்களைச் செய்தும், யாகாதிகளால் தேவர்களுக்குத் திருப்தி பண்ணியும், வருகிறேன். எனக்குப் புத்திர சந்தானமில்லா திருக்கின்றது. 'உலகத்தில் மானிடருக்குப் புத்திரசந்தான மில்லா விட்டாற் புண்ணியலோகமில்லை' என்று வேத முறையிடுகின்றது. ஆதலால், நான் எல்லாப் பாக்கியத்தைப்பெற்றும் புத்திரபாக்கியத்தைப் பெறாமலிருப்பது எனக்கு மிகுந்த வருத்தமா யிருக்கின்றது. அதுபற்றிப் புத்திர பாக்கியங் கிடைக்கக் கடவுளை நோக்கி அருமையான தவஞ் செய்ய வேண்டும். ஆதலால், நான் சென்று தவஞ் செய்து புத்திரசந்தானங் கிடைத்தால் இங்கு வருகிறேன். புத்திரசந்தானங் கிட்டாவிடின் புண்ணியலோக மடைகிறேன். நீங்கள் நானிருந்து அரசு செலுத்தியதுபோற் குடிகளுக்கு யாதொரு குறைவும் வராமற் செங்கோல் செலுத்துங்கள்" என்று தனது முத்திரை யோதிரத்தை

மந்திரிகள்கையிற் கொடுத்துத், தவவேடங்கொண்டு நகரத்தைவிட்டு வெளிப்பட்டுக், கங்காநதிக் கரை யருகில் வந்தான்.

அப்படி வந்தபோது தெப்பத்திற் கட்டு பட்டுக் கங்கைக்கரையில் வேதபாராயணஞ் செய்துகொண்டிருந்த தீர்க்கதம முனிவரை அவன் கண்டான். கண்டவுடன் அருகில் வந்து அவரிருக்கிற அவகோலத்தைப் பார்த்துத் திடுக்கிட்டு, "ஆ! ஆ! இவர் யாரோ பெரியவர். மேலும் அதிக நயமுடையவரா யிருந்தாலும் நயனமில்லாதவரா யிருக்கிறார். எந்தத் துராத்மாவோ இவரைக் கட்டித் தெப்பத்தில் வைத்துக் கங்கையில் விட்டு விட்டதாகத் தோன்றுகிறது" என்று கருதி, அவருக்கு நமஸ்காரஞ் செய்து, தனது பெயரைத் தெரிவித்து அவரைக் கட்டினின்றும் நீக்கி, வேறோரிடத்தில் தருப்பை ஆசனமிட்டு, அதிலிருத்தி, வந்தனை வழிபாடு செய்து, "ஓ ஸ்வாமி தங்களுடைய வரலாறு என்ன?" என்று வினவினன். தீர்க்கதமர் இருவினைக் குட்பட்டுக் கனவருத்த மடைந்தவர் சுகானந்தத்தை யடைந்தால் எவ்வளவு மகிழ்ச்சியடைவரோ அவ்வளவு மகிழ்ச்சி அகத்தும் புறத்து மடைந்து, அரசனை ஆசீர்வதித்து, தாம் பிறந்தது முதல் தெப்பத்திலேறிக் கங்கைக்கரையில் வந்தடைந்தவரையில் நடந்த விருத்தாந்தங்களை எடுத்தோதினர். இதைக் கேள்வியுற்ற அரசன் மிகுந்த வருத்த மடைந்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து "ஓ சுவாமி! தங்களையொத்தவர்களின் கிருபையினால் எல்லாப் பாக்கியங்களையும் பெற்றுச் செங்கோல் செலுத்தி இரவி குலஞ்சிறப்பெய்த வாழ்ந்து வந்தேன். ஆனால் புத்திரபாக்கியம் ஒன்று மத்திர மில்லை. அதனாற் கனவருத்த மடைந்து, தவம் புரிந்தாவது அல்லது தங்களை யொத்த துறவிகளாலாவது அப்புத்திர பாக்கியத்தைப் பெற்று, இரவிகுலத்தைப் பெருகச்செய்து புண்ணிய லோகத்தை யடையலா மென்று கருதி, என்னரசு முதலியவற்றை மந்திரிமார் வசத்தில் ஒப்புவித்துத் தவவேடங் கொண்டு வந்தேன்; வந்தவிடத்தில் தங்களைக் கண்டேன். இனி அந்தச் சஞ்சலமும் நீங்கின. தேவரீர் கிருபை கூர்ந்து என் னரண்மனைக் கெழுந்தருளி, என் மனைவியரிடத்து ஒரு புத்திரனைப் பாலியும்" என்று மிகுந்த அன்புடன் வேண்ட, தீர்க்கதமர் அரசன் கருத்துக் கிசைந்து அரண்மனைக்குச் சென்றார்.

அரசன் தீர்க்கதமருக்கு நல்ல விடுதியொன்று விட்டு, அறுசுவை முதலானவைகளோடுங் கூடிய அன்னம் உண்பித்துச் சகல பரிமள திரவியத்தோடு தாம்பூல மளித்து உபசரித்தான். பின்பு தன் மனைவியிடத்துச் சென்று, தான் சென்றதும் சென்றவிடத்து, ஒரு பெரியவரைக் கண்டதும் அவர் மூலமாகப் புத்திரசந்தானம் பெறக்கருதிய கருத்தையும் வெளியிட்டபோது மனைவி கிஞ்சித்து ஐயங்கொண்டு, அரசன் கருத்துக்கு விரோதம் வரப் பேசினுள். அதற்கு அரசன் சில நீதியை எடுத்தோதிச் சம்மதிக்கச்செய்து தீர்க்கதமரிடத்து வந்து வணங்கி, "ஓ சுவாமி! தேவரீர் இதோயிருக்கிற பள்ளியறையிற் சேரந்திரும்" என்று கூறி அழைத்துவந்து சேர்த்து, தன் மனைவியையும் எச்சரித்து, தானொரு விடுதியிற் போய்ச் சயனித்திருந்தான். அரசன் மனைவி கிஞ்சித்து நாணமுற்றவளாய்த் தன்னையொத்த தாதியை அழைத்து, தன்னைப்போல் ஆடை ஆபரணங்களினுல் அலங்காரஞ்செய்து தீர்க்கதம ரிருக்கும் பள்ளியறைக்கு அனுப்பிவைத்தாள். தாதி பள்ளியறைக்குட் சென்று தீர்க்கதமரைத் தழுவினுள். தீர்க்கதமர் வந்தவள் தாதியென்று ஞானக்கண்ணு லறிந்தும், "நமக்கேன்? அரசன் மனைவி மனம் வேறுபட்டிருந்தாலும் நம்மை நாடிய அரசன் கருத்துக்கு இசைய நாம் நடக்கவேண்டும்" என்று நினைத்து, அத்தாதியைத் தழுவிப் புணர்ந்தார். அப்போது தீர்க்கதமருடைய வீரிய விர்த்தியால் தாதியினிடமாகப் பதினொரு புத்திரர்கள் உற்பத்தியாயினர். இந்தச்செய்தி அரசனுக்குத் தெரிந்து கனவருத்தமடைந்து மனைவியிடத்துவந்து, "ஓ பெண்ணே! நான் கூறியதென்ன? நீ என்ன காரியஞ் செய்தாய்? தாதியி னிடமாக எத்தனை புத்திரர் பிறந்தாலும் பட்டத்துக்குரியவ ராவார்களா? நம்மிருவர்க்கும் நீர்க்கடன் முதலியவற்றைக் கொடுப்பதற்கு யோக்கியதையுண்டா? இல்லையே. இனியேனும் அவ்விரண்டு செய்கைகளுக்கும் உரித்தாகும் பொருட்டு நீயே அப்பெரியவரை அணைவாயாக" என்று பின்னுஞ் சில தர்மங்களை எடுத்தோதி, தீர்க்கதமரிடத்து வந்து வணங்கி, "ஓ சுவாமி! அடியேன் செய்த விண்ணப்பத்தின்படி தாங்க ளிசைந்தும் இடம் பேதப்பட்டது. ஆகையால் எளியேன்மீது கிருபைகூர்ந்து என் மனைவியினிடமாக ஒரு புத்திரனைப் பாலியும்" என்று மிகுந்த ஆருமையோடு வேண்ட, தீர்க்கதமர் சம்மதித்தார். அரசன் மனைவியை எச்சரித்து விட்டு,

முன்போல் தான் ஒரு விடுதியிற் சயனித்திருந்தான். அரசன் மனைவி ஸ்நானஞ் செய்து, நல்ல ஆடை ஆபரணங்களினால் அலங்காரஞ்செய்து, பரிமள திரவியத்தை யணிந்து, தீர்க்கதம ரிருக்கும் பள்ளியறையிற் சென்று அவர்க்கு நமஸ்காரஞ்செய்து, "ஓ சுவாமி! 'பேதைமை யென்பது மாதர்க்கணிகலம்' என்னும் நீதிவாக்கியத்திற் கிணங்க, முன்னமே நான் வராமல் தாதியை அனுப்பிவைத்த குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தாள். தீர்க்கதமர் முன் குற்றத்தை மனதில் நினைக் காமல் மகிழ்ந்து, அரசன் மனைவியைத் தழுவி, "உனக்கு ஒரு புத்திரனுண்டாகக் கடவது" என்று அநுக்கிரகஞ்செய்து மறைந் தார். அப்படியே ஒரு புத்திரனுண்டானான். இந்தச் செய்தி அரச னறிந்து, புத்திரன் பிறந்தானென்று மகிழ்ச்சி அடைந்து பள்ளி யறைக்குள் வந்து பார்க்கும்போது பெரியவரில்லாமையைக் கண்டு மனவருத்தமடைந்து இப்பெரியவர் துறவியாதலால் எவ னுற்றாரோ வென்று கருதி அப்பால் ஒருவிதமாகத் தேர்ந்து, அப் புத்திரனை அதிகக் காதலோடு வளர்த்து அவனுக்கு அங்கராஜ னென்று பெயரிட்டுப் பட்டத்துக்கு உரியவனாக்கிக் கொண்டான்.

மேலும் முன்னம் பரசுராமராற் சூரியவமிசம் நாசமடைய அச்சூரியவமிசப் பட்டத்தரசிகள் அக்கினிப் பிரவேசமாக யத்தனித்தபோது அச்செய்கையைக் காசிபருணர்ந்து அவர்களுக் குச் சில நீதிகளை யெடுத்தோதிச் சம்மதிக்கச்செய்து, ஆசிரி யர்களைப் புணர்ந்து புத்திரர்களைப் பெற்றுச் சூரியகுலத்தை விர்த்திசெய்யும்படி கட்டளையிட்டார். அந்தப் பட்டத்தரசிகள் அவ் வாறே தத்தம் ஆசிரியர்களைப் புணர்ந்து புத்திரர்களைப்பெற்றுச் சூரிய வமிசத்தைப் பெருகச் செய்தார்கள். இதுவுமன்றிக் கன் மாஷபாத மஹாராஜன் தனது மனைவியாகிய மதயந்தியைச் சாபத்தினால் கூடக்கூடாதவனாகி, பின்பு வசிஷ்டரைக்கொண்டு புத்திரபாக்கியத்தை யடைந்தான். வேதமும் சந்தானமில்லாத வர்கள் இவ்வாறு கர்ப்பதானம் பண்ணிக்கொள்ளலா மென்று முறையிடுகின்றது. ஆதலால், தாயே! நீ ஐயப்படாமல் எந்தப் பெரியோரைக் கொண்டாவது இப்போது கணவனில்லாதிருக்கிற பட்டத்தரசிகளிடமாகப் புத்திரனைப் பெற்றால் எனக்குச் சம்ம தந்தான். அவ்வாறு செய்ய யத்தனிக்கவேண்டும்" என்று பீஷ்மர் கூற, பரிமளகந்தி, "அப்பா மகனே! நான் பேதைப்பருவ மடைந்-

திருக்கிற காலத்தில் நான் பிறந்த குலாசாரப்படி யமுனாநதியில் வருகிற பெரியோர்களுக்குப் படகு விட்டிருந்தேன். அக்காலத்தில் தவசிரேஷ்ட சிகாமணியாகிய பராசரர் அவ்விடத்துக்கு வந்து என்னைப் படகுவிடச் சொன்னார். அப்படியே நான் அவர் ஒருவரைமாத்திரம் படகிலேற்றிக்கொண்டு செல்லுகையில் அவர் வல்லமையைச் சில செய்கைகளாற் கண்டு, மிகுந்த பயபக்தியுடன் நடந்துகொண்டேன். அப்போது பராசரர் வானத்தை நோக்கி என் முகத்தைப் பார்த்து, "ஓ பெண்ணே! நான் நாடி வந்த நக்ஷத்திரம் உச்சியில் வருகிற தருணமாயிற்று. அத்தருணத்தில் ஒரு ஸ்திரீயைக் கூடவேண்டுமென்று விரதங்கொண்டு வந்தேன். நதியால் தடைநேரிட்டது. நீ யாகிலும் அவ்விரதத்தைப் பாதுகாப்பாயாகிற் சந்திரசூரியரிருக்கிறவரையில் உலகத்தில் உன் பெயரிக்கும். ஆனதால் தாமதமின்றி என்னை அணைவாயாக" என்று கூற நான் நாணமுற்று, "சுவாமி! நான் மங்கைப்பருவமடையாதவள்: மேலும் மச்சகந்தத்தை யுடையவள். ஆதலால் உமது கருத்துக்கிசைவது எவ்வாறு" என்று மறுமொழி கூறினேன். உடனே அம் முனிவர் எனக் குண்டாயிருந்த மச்சகந்தத்தை நீக்கிப் பரிமளகந்தத்தைக் கொடுத்து, என்னை மங்கைப் பருவமாக்கி, "ஓ பெண்ணே! என்னோடு சேர்ந்தாலும் நீ கன்னிகையாகவே இருக்கக் கடவாய்" என்று ஆசீர்வதித்தார். அதனால் நான் மிகுந்த வியப்பையும் மகிழ்வையுங் கொண்டு, அவர் கருத்தின்படி களிப்பெய்தக் கூடினேன். அவருடைய வீரியவிர்த்தியால் அக்கணமே காவிகாம்பர தண்டு கமண்டல தாரியாய் வேதத்தைக் கையிலேந்தியபடி, ஒரு புத்திரன் என்னிடமாகப் பிறந்தான். அப் புத்திரனுக்கு வேதவியாசனென்று பெயர். அப் புத்திரன் என்னை விட்டுப் பிரியும் போது, "தாயே! நீ எப்போது நினைக்கின்றாயோ அப்போது நான் வருகிறேன்" என்று வாக்குத்தத்தஞ் செய்து போயிருக்கிறான். அந்த மஹாபுருஷனைக்கொண்டு அம்பிகை அம்பாலிகை யிடத்துப் புத்திரனை யுண்டாக்கிக் கொள்ளலாமென்று நினைக்கிறேன். இதில் உனக்குச் சம்மதந்தானா"? என்று வினவ, பீஷ்மர் அதிக மகிழ்ச்சி யடைந்து சிற்றன்னையை வணங்கி, "தாயே! அவ்வாறு செய்தால் 'பொங்கியும் பால் புறம்போகாதிருந்தது,' என்கிற பழமொழிக்கிணங்க திருப்திகரமாக முடியும். அவர் மூத்தகுமாரராக இருக்கிறபடியால், அச் செய்கை எனக்கு மாத்திரமல்ல மற்றும் யாவருக்குஞ் சம்மதமாகவே இருக்

கும். அவ்வாறே செய் அம்மணி" என்று உத்தரவு கொடுக்கப் பரிமளகந்தி, அந்தப் புரத்திற் சென்று தன் மருமக்கள்களாகிய அம்பிகை அம்பாலிகையை அழைத்து "ஓ பெண்களே! உங்கள் மூலமாகப் பட்டத்துக்குப் புத்திரன் வேண்டும். அதற்காக வேத விதிப்படி ஒரு ஆலோசனை செய்திருக்கிறோம். அவ்வாறு நீங்கள் நடந்து கொண்டு குலத்தை விருத்தியடையச் செய்யவேண்டும்" என்று அவ்வாலோசனையை வெளிப்படுத்திச் சகல நீதிகளையுந் தெரிவித்து, இருவரையுஞ் சம்மதிக்கச் செய்து, அவரவர்களை அலங்காமாக இருக்கச் சொல்லி, தான் என் குருவாகிய வேதவியா சரை வரும்படி மனதில் நினைத்தாள்.

## திரிதராஷ்டிரன் பாண்டு இவர்கள் உற்பவம்

இப்படி அவள் நினைத்ததைத் திவ்யக்கியான சொரூபியாகிய வேதவியாசருணர்ந்து, கணப்பொழுதில் தம் மாதாவாகிய பரிமள கந்தி யிருக்கிற விடத்துக்கு வந்து, தமது நெற்றியிலிருந்த திருநீற் றுற் பாதத்தைத் துலக்கி, அன்பின் ஆறுமையினாலே உண்டாகிய தமது கண்ணீராற் சுத்திசெய்து, மந்திர புஷ்பாக்ஷதைகளால் அருச்சனை புரிந்து, அஷ்டாங்க பஞ்சாங்காதி நமஸ்காரங்களால் வணங்கி, "தாயே! அடியேனை நினைத்த; காரணமென்ன?" என்று வினவப் பரிமளகந்தி "அப்பா புத்திரசிகாமணியே! உன்னைப் பெற்ற தின் பின்பு சந்திரவமிச சிரேஷ்டனான சந்தனுமகாராஜனுக்கு மனைவியாகி இரண்டு புத்திரரைப் பெற்றேன். அவர்களில் ஒரு வன் கந்தர்வனாலிறந்தான். மற்றொருவன் அம்பிகை அம்பா லிகை என்னும் இரண்டு ஸ்திரீகளை மணந்து, புத்திர பாக்கியம் ஒன்று தவிர மற்றப் பாக்கியங்களை யெல்லாம் அநுபவித்து இறந் தான். புத்திரனில்லாமையாற் கிரமமாக விளங்கிவந்த சந்திர வமிசம் பனிபெய்யும் சம்வச்சர மேகம்போ லானதுமன்றி, என் புத்திரனோடு அஸ்தமிக்கிறது. ஆகையால் என்மேல் கிருபை கூர்ந்து, எனக்கொரு இழிவு வாராமலிருக்கவும் சந்திரகுலம் விர்த்தியாகவும் உன் சகோதரனாகிய சித்திரவீரியன் மனைவிகளைக் கூடிப் புத்திரசந்தானம் பாலித்தருள்" என்று பகர்ந்தனள். மாதா கூறிய வாக்கியம் வேதவாக்கிய மாதலால் என் ஆண்டவனாகிய வேதவியாசர் அன்னை கூறியதற் கிசைந்து, சாஷ்

டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, "ஓ அம்மணி! உமது கருத்தின் படி நடக்கிறேன்" என்றுரைக்கப் பரிமளகந்தி அவ் வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் மகிழ்ச்சியடைந்து, உடனே மருமக்களிடத் துச் சென்று அவர்களை எச்சரித்து மறுபடியும் வந்து, புத்திரனு கிய வேதவியாச முனிவரைப்பார்த்து அந்தப்புரத்துக்குச் செல்லக் கட்டளையிட்டாள்.

அது கேட்ட வேதவியாசர் அந்தப் புரத்துக்குச் சென்று அம்பிகையிருக்கும் பள்ளியறையிற் புகுந்தார். அம்பிகை அம் முனிவர் வரவைக் கண்டு, எதிர்கொண்டுவந்து வந்தனை வழிபாடுகள் செய்து, பஞ்சணைபி லிருத்தினுள்; மகரகுண்டல ஆர கேயூர கடக கங்கண முதலாகிய ஆபரணு லங்கிருதனுகிய தன் கணவனைப் பார்த்து மகிழ்ந்தவளாதலால் காவிகாம்பர ஜடாதாரியாகித் தவத் தால் தேகமிளைத்து மீசை தாடியுடன் வேறுருவிதமாக இருக்கு முனிவரை நோக்கியதும் நாணமுற்று, இரண்டு நயனங்களையு மூடிக்கொண்டு பஞ்சணையிற் சயனித்தாள். முனிவர் மாதா வாக்கியத்தை நிறைவேற்ற வந்தவராதலால் அம்பிகை இருக்குங் கோலத்தைக் கண்டும் அவளைப் புணர்ந்து எழுந்து தாயிடத்து வந்து வணங்கி, "ஓ அம்மணி! உமது கருத்தின்படி கருப்பதானஞ் செய்தேன். புணருங்காலத்து அம்பிகை கண்ணைமூடிக்கொண்ட படியால் பிறக்கும் புத்திரன் நெடிய கடல் சூழ்ந்த உலகத்தி லிருக்கும் அரசர்களெல்லாம் பணிய ஆயிரம் யானை வல்ல மையை யுடையவனு யிருந்தாலும், நேத்திரமாத்திர மில்லா திருப்பான்" என்று விளம்பினுர். இதைக்கேட்ட பரிமளகந்தி வேதவியாசரைப் பார்த்து, "அப்பா மகனே! அரசருக்கு நேத்திரமில்லா விட்டால் நன்மையில்லை. ஆதலால் அம்பாலி கையினிடமாவது ஒரு புத்திரனை அளிக்கவேண்டும்" என் றிரந் தாள். முனிவர் அதற்கும் ஒப்புக்கொண்டு அம்பாலிகை இடத் துச் சென்றுர். அம்பாலிகை எழுந் தெதிர்வந்து வணங்கி, அழைத்துப் போய்ப்பஞ்சணைமஞ்சத்தி லிருத்தி, அம்முனி வரைக் கண்ணு ல்நோக்கின மாத்திரத்தில் மெய் நடுக்கங்கொண்டு, சரீரம் வியர்ப்ப வஸ்திரத்தால் மூடிச் சயனித்தாள். அம்பாலிகை அவ்வாறிருக்குங் கோலத்தைக் கண்டும் வாக்குத்தத்தின்படி முனிவர் அந்த அம்பாலிகையைப் புணர்ந்து எழுந்து, தாயிடத்து வந்து வணங்கி, "ஓ அம்மணி! அம்பாலிகை என்னைக் கண்டு

மெய்நடுக்கங் கொண்டு சரீரம் வியர்த்துத் தன் தேகத்தை வஸ்திரத்தால் மூடிக்கொண்டாள். ஆதலால், அவளிடமாகப் பிறக்கும் புத்திரன் மன்னர் மன்னனாக இருந்தபோதிலும், வியாதியை யுடையவனாய் வெளுத்திருப்பான்" என்று சொல்லி விடைபெற்றுத் தம திருப்பிடம்போய்ச் சேர்ந்தார்.

---

## விதுரன் உற்பவம்

---

இங்கே அம்பிகை ஒரு புத்திரனையும் அம்பாலிகை ஒரு புத்திரனையும் பெற்றார்கள். அம்பிகை பெற்ற புத்திரனுக்குத் திரிதராஷ்டிரன் என்றும், அம்பாலிகைபெற்ற புத்திரனுக்குப் பாண்டு என்றும் பெயரிட்டு மிகுந்த காதலோடு வளர்த்து வருகிற காலத்தில், பரிமளகந்தி "அச் சிறுவர்களைப் பார்த்து," ஒருபுத்திரன் பகைவர்க்கு அந்தகனாயிருந்த போதிலும் பார்க்கிற வருக்கும் அந்தகனாக இருக்கிறான். மற்றொருபுத்திரன் நல்ல விவேக வியாபகனா யிருந்தும் வியாதியை யுடையவனா யிருக்கிறான். ஆ! ஆ! இதென்ன குறைவந்து நேரிட்டது? இது தகுதி யல்ல. இனி ஒரு நல்ல புத்திரனை அடைய வேண்டும்" என்று யோசித்து, அம்பாலிகையை அழைத்து, "ஓ பெண்ணே! நீ முன் கூடிய முனிவரை மற்றுமொருதரம் உன்னிடத்துக்கு அனுப்புகிறேன். நீ நாணம் மடம் அச்சம் பயிர்ப்பென்னு நான்கினையு நீக்கிக் களங்கமற்று அவரை அணைவாயாக" என்று சில நீதிகளை எடுத்தோத, அப்பாலிகை அதற்கிசைந்தவள் போல் நடித்தாள். உடனே பரிமளகந்தி என் குருவாகிய வேதவியாசரை வரும்படி நினைத்தாள். அம்முனிவர் அக்கணமே வந்து அன்னையை வணங்கி, "ஓ அம்மணி! என்னை நினைத்த காரணமென்ன?" என்று வினவ, அன்னை, "அப்பா மகனே! முன்ன மளித்த இரண்டு புத்திரரும் அரசு புரியத்தகுதி யற்றவர்களா யிருக்கிறார்கள். முன் போல் மற்றுமொருதரம் அம்பாலிகையைப் புணர்ந்து நல்ல புத்திரனை அளிக்க வேண்டும்" என்று பகர்ந்தாள். முனிவர் அதற்கிசைந்து அம்பாலிகை யினிடத்துச் சென்றார். அம்பாலிகை தனது அன்னையை யொத்த ஒரு தாதியை அழைத்து, ஆடை ஆபரணங்களினால் நன்று யலங்காரஞ் செய்து அவளைப் பள்ளியறைக்கு அனுப்புவித்தாள். அத்தாதி வேதவியாசருக்கு நமஸ்காரஞ் செய்து அழைத்துப் போய் பள்ளியறையி லிருத்தி, தானே முந்தி

மதனகலை விதிப்படி ஆலிங்கன முதலியவற்றைப் புரிந்து, மூழுதுந் துறந்த முனிவருள்ளம் பூரிக்கப் புணர்ந்தாள். அம் முனிவர் மகிழ்ந்து அவளை அன்போடு தழுவி யணைந்து எழுந்து வந்து, அன்னையை வணங்கி, "ஓ அம்மணி! இப்போது பிறக்கும் புத்திரன் தென்றிசைக்கடவுளின் அம்சமாய் வருவான்; மேலும் சகலகலை வல்லவனாகி, மிகுந்த பராக்கிரமத்தைப்பெற்று, பாக்கிய சிலாக்கிய யோக்கியனாகவும் ஞானவானாகவும் இருப்பான். ஆனால் இடம் பேதப்பட்டது. அது தான் ஒரு குறையேயன்றி மற்றொருகுறையு மில்லை" என்று தாயை வணங்கி, "ஓ அம்மணி! இனி நீ எனக்கு இவ்வகைப்பட்ட வேலை யிடாம லிருக்கவேண்டும். இனி என்னிச்சையிற் செல்ல எனக்கு விடைகொடுங்கள்" என்று விடை பெற்றுத் தமது இருப்பிடம் போய்ச் சேர்ந்தார். இங்கே தாதியானவள் தென்றிசைக் கடவுளாகிய தருமன் அமிசைபெற்ற ஒரு புத்திரனைப்பெற்று, அப்புத்திரனுக்கு விதுரனென்று பெயரிட்டு வளர்த்து வந்தாள்" என்று வைசம் பாயனர் ஜனமே ஜயமகாராஜனுக்குக் கூறிமுடித்தார்.

---

## ஆணி மாண்டவியர் சரித்திரம்

---

ஜனமேஜய மஹாராஜன் வைசம்பாயனரை வணங்கி, "ஓ் சுவாமி! தென்றிசைக் கடவுளாகிய இயமன் விதுரனாகப் பூலோகத்தில் வரவேண்டிய காரணமென்ன? அதனை வெளியிட வேண்டும்" என்று வினவ, வைசனம்பாயனர் சொல்லுகிறார்: "கேளும் ஜனமே ஜய மஹாராஜனே! மாண்டவிய ரென்னும் முனிவர் முன்னம் தீர்த்தயாத்திரை முதலியவற்றைச் செய்து யோகத்திலிருக்க வேண்டுமென்று கருதி, சாளுவதேசத் தருகிலிருந்த ஒரு வனத்திற் பன்னகசாலை யொன் றியற்றி அதிலிருந்து, சத்தம் - பரிசம் - ரூபம் - ரசம் - கந்தம் என்னும் ஐம்புலனையும் மடக்கி, அறிவைப் பிரமத்தினிடத்திற் செலுத்தி, விழித்தகண் விழித்தபடி யோகத்திலிருந்தார். சில திருடர்கள் ஓரிடத்துக் கூடி, "இது வரையில் நாம் அற்ப குடும்பிகளிடத்துச் சென்று அவர்களுடைய சொற்ப ஸ்திதியைக் களவுசெய்து வந்தபடியால், நம்மை அடிமையாக்கிக் கொண்டிருக்கும் தரித்திரம் தொலையாமலிருக்கின்றது. உலகத்துக்குத் தலைமையாளியாயிருந்து அரசுசெலுத்திவரும் சாளுவமஹாராஜ

னுடைய அரண்மனையிற் சென்று, பொக்கிஷத்திற் கையைவைத்து, நல்லகாலமிருந்து தப்பிவந்து விட்டால் நம்மை வருத்தும் தரித்திரம் அதமாகும்; அல்லது நமக்கு அகாலதசையிருந்து அகப்பட்டுக்கொண்டால், அரசன் ஆக்கினைக் குள்ளாவோம். அப்போது 'கூண்டோடு போயிற்று குளிர்காய்ச்சல்' என்கிற பழமொழிபோல் உயிரோடு தரித்திரமும் போய் விடும். மேலும் 'எடுத்தாலும் பங்காருபெட்டி எடுக்க வேண்டும், இருந்தாலுஞ் சிங்காரக்கழுவி லிருக்க வேண்டும்' என்று யாவரும் சாதாரணமாகச் சொல்லுகிறார்கள். ஆகையால் அவ்வாறு செய்வோம் வாருங்கள்" என்று ஒருவரை ஒருவர் வினவியபோது, அவர்களில் உயிர்மேல் ஆசையுற்றவர் போக மற்றவர் துணிந்து, சாளுவராஜன் அரண்மனையிற் புகுந்து, தங்கள் நேர்ப்பினால் அங்கிருக்குங் காவலாளிகளின் கண்ணுக்குத் தோற்றாமல் மறைந்திருந்து, அன்றிரவு நடுநேரத்தில் அரசன் பொக்கிஷ அறையின் கதவைப் பிளந்து உட்பிரவேசித்து, தங்கள் கருத்துக்கிசைந்தமட்டுந் திரவியத்தை எடுத்துச் சிப்பங் கட்டிக்கொண்டு வெளிப்பட்டார்கள். அதற்குள் அரசனுக்கு ஒரு சொப்பனந்தோன்றி, திடுக்கென்றெழுந்து, அருகில் காவலிருக்குஞ் சேவகரை நோக்கி, "நமது பொக்கிஷத்தினருகில் ஆளரவம் கேட்கிறபடியால் அஃதென்ன போய் அறிந்து வாருங்கள்" என்று கட்டளையிட, சேவகர் பொக்கிஷமிருக்கிற அவகோலத்தைக் கண்டு, மறுபடியும் அரசனிடத்துச் சென்று வணங்கி, "ஓ சுவாமி! நமது பொக்கிஷத்துக் கபாடம் உடைபட் டிருக்கின்ற தல்லாமற் களவு போனதுபோலும் தோன்றுகின்றது" என, அரசன் கடுஞ்சினமுற்று, "ஆ! ஆ! நாம் உலகிலுள்ள குடிகளுக்குக் கள்ளர்பயமில்லா திருக்கச்செய்து வருகிறோம். நமது அரண்மனைக்கே கள்ளர் வருகிறதா யிருந்தால், நாம் நடத்திய செங்கோலும் காவலும் நன்றாயிருக்கின்றன" என்று தன்னைத் தானே நிந்தித்துக்கொண்டு, காவலாளிகளாகிய தலையாரிகளை அழைப்பித்து, "ஓ தலையாரிகளே! சில கள்ளர் நமது பொக்கிஷ அறையின் கபாடத்தை யுடைத்துத் திரவியத்தைக் கொள்ளையிட்டுப் போயினர். அவர்களைப் பிடித்து வந்தால் உங்கள் தலை யறுபடாதிருக்கும், இல்லாவிட்டால் உங்கள் தலை உடனே போய்விடும்" என்று உக்கிரத்தோ டுரைத்தான்.

அவ் வாக்கினையைக் கேட்ட தலையாரிகள் குலை நடுங்கி, அரசனுக்கு நமஸ்காரஞ்செய்து, பொக்கிஷத் தருகிற் சென்று, அங்கிருந்து காலடிக் குறியை நோக்கிக்கொண்டு அந் நகரத்தைக்

கடந்து, மாண்டவியர் யோகஞ் செய்கின்ற வனத்தில் வந்தார்கள். திருடர்கள் தலையாரிகள் வருகிற அரவத்தைத் தெரிந்து, "அடடா!! மோசம் வந்தது நம்மைப் பிடிக்கத் தலையாரிகள் வருகிறார்கள். நாம் இரண்டடி எடுத்து அப்பால் வைப்போமாகிற் பிடித்துக் கொள்வார்கள். இதோ இருக்கிற பன்னகசாலையிற் சற்றுநேரம் ஒளித்திருப்போம்" என்று கூறி அனைவரும் அந்த மாண்டவிய ரிருக்கு மடத்தில் ஒளித்தார்கள். தலையாரிகள் அடிச்சுவடு நோக்கிக் கொண்டு அப் பன்னகசாலையிடத்துச் சென்று, அங்கு விழித்த கண் விழித்தபடி யோகஞ் செய்கின்ற மாண்டவியிரை நோக்கி, யோகத்திலிருக்கிறாரென் றுணராமல் அவரை வணங்கி, "ஓ ஐயா! இவ்வழியாக யாராவது சென்றார்களா?" என்று வினவ, அவர் சித்திரப் பதுமைபோல் யோகத்திலிருக்கிறவ ராதலால், இவர்கள் கேட்ட கேள்விக்கு உத்தரவு கொடுக்காம லிருந்துவிட்டார். தலையாரிகள் "பெரியவர் பேசப்போகிறதில்லை. இந்தப் பன்னகசாலையையாவது சோதிப்போம்" என்று, சில தலையாரிகள் உள்ளே பிரவேசித்துக் கையாற் றடவிப் பார்க்கும்போது, ஒளிந்திருந்த கள்ளர்கள் எடுத்துவந்த திரவியத்தோடு அவர்களின் கைக் குள்ளாயினார்கள். உடனே தலையாரிகள், பாபிகளை யமதூதர் பாசக்கயிற்றாற்கட்டி இழுத்துப் போவதுபோலக் கள்ளரைக் கட்டி இழுத்துக்கொண்டு, விழித்தகண் விழித்தபடி யோகத்திலிருக்கும் மாண்டவிய ரிடத்துவந்து, "இவன் வெகுநாளைய திருடனாய்க் கள்ளருக்கெல்லாங் குருவா யிருத்தலால், நாம் கேட்ட கேள்விக்கு விடைகொடுக்காமல் யோகத்திலிருப்பவனைப்போல வேடங்காட்டி மௌனமாயிருந்தான். இவனையுங் கட்டிப் பிடித்துப் போகவேண்டும்" என்று ஒருவர்க்கொருவர் கலந்து பேசிக்கொண்டு, மாண்டவியரையுங் கட்டிப் பிடித்துப்போய் அரசன் சபையில் விட்டனர்.

அரசன் 'இக்கள்ளர்களைச் சிரச்சேதஞ் செய்யுங்கள்" என்று கட்டளையிட்டு, மாண்டவியரை உற்றுநோக்கித் தலையாரிகளைப் பார்த்து, "ஓ காவலாளிகளே! இதோ நிற்கிற பெரியவர் யார்? இவரை ஏன் கட்டிவந்தீர்கள்?" என்று வினவத் தலையாரிகள் அரசனை வணங்கி, "ஓ சுவாமி! இவன் திருடர்களுக்கெல்லா முதற் பாகம். இவனுடைய பர்ணசாலையில்தான் இந்தக் கள்ளரு மிருந்தார்கள். முதலிலே நாங்கள் இவனைப் பெரியவரென் றெண்ணி வணங்கி "இவ்வழியாக யாவராவது போயினரா" என்று வினவிய

திற்கு, விழித்த கண்ணுட னிருந்த இவன் ஒன்றுஞ் சொல்லாம லிருந்தான். பின்பு பர்ணசாலையைச் சோதனை செய்யும்போது கள்ளர் அகப்பட்டார்கள். ஆகையால் இவனையுங் கட்டிவந்தோம். இவனை விட்டால் இன்னம் ஐதை கூட்டுவான்" என்று சாதிக்க இதைக்கேட்ட அரசன் நீதிதவறாது நிலையிலிருக்கிறவனு யிருந்தும், மாண்டவியருக்கிருக்கிற பிராரத்துவ வினையின் வல்லமையினுல் கருத்து மயங்கி, "அப்படியானுல் இவனைக் கழுவிலேற்றுங்கள்" என்று கட்டளையிட்டான். காவலாளிகள் அக்கள்ளர்களைச் சிரச்சேதஞ்செய்து, மாண்டவியரைக் கழுவிலேற்றி அரசனுக்குத் தெரிவித்தார்கள்.

அரசன் காவலாளிகளைப் பார்த்து "ஓ காவலாளிகளே! கள்ளருக்கெல்லாம் குருவாயிருக்கிறவனென்று நீங்களே கூறிய படியால் அக்கழுமரத்திடியிற் பதிவிருந்து பார்த்துவாருங்கள். கள்ளர்கள் அவனைப் பார்க்கவருவார்கள். அப்படி வருகிற கள்ளரையும் பிடித்து வாருங்கள்" என்று கட்டளையிட் டனுப்பினுன். காவலாளிகள் அவ்வாறே கழுமரத்தடியிற் பதிவிருந்தார்கள். மாண்டவியர் "எல்லாங் கடவுள் செயலேயன்றி வேறொரு செயலில்லை" என்று துணிந்து, முன்பு வனத்தில் எவ்வாறு யோகத்திலிருந்தாரோ அவ்வாறே கழுமரத்தி லகப்பட்டும் யாதொரு துன்பமு மில்லாமல் விழித்தகண் விழித்தபடி யோகத்திலிருந்தார். சிலநாட் சென்றபின்பு பல தேவர்களும் அநேக முனிவர்களும் அவ்வழியாய் அந்தர்த்தானத்திற் செல்லும்போது, மாண்டவிய ரிருக்கிற கோலத்தைக் கண்டு பூமியிலிறங்கி, அவரை நோக்கிக் கனவருத்தமுற்று "தவசிரேஷ்ட சிகாமணியாகிய மாண்டவியரே! நீர் முழுதுந் துறந்தவராயிருந்தும் உமக்கு இப்படிப்பட்ட துன்பம் நேரிடும்படி வந்த காரணமென்ன? உலகத்தில் அசேதனராயும் இழிகுலத்தராயு மிருந்தாலும், ஜன்மாந்திர புண்ணிய மேலிட்டுத் தவவுருவம் அமைந்தாற் சகல பாவமும் நிவர்த்தியாம். அத்துடன் அகப்பற்று புறப்பற்றுகள் நீக்கியிருப்பாரானுல் அப்போதே பழவினையென்கிற பெயர் அற்றுப்போம். நீர் விவேகியாயும், சிறந்த குலத்திற் பிறந்தவராயும், முழுதுந் துறந்தவராயு மிருக்கிறவர். உமக்கு இந்தத் துன்பம் வந்ததை நோக்கினுல் எங்களுக்கே மிகுந்த ஆச்சரியமாக இருக்கின்றது. ஐயோ! நீர் இப்போது படுகிற இம்சை ராஜனுல் நேரிட்டதா யிருக்கின்றதே! அவ்வரசனென்ன மௌடிகனு? உருவத்தைப் பார்க்

கும்போதே யோக்கியர் அயோக்கியர் என்பதை யறிந்துகொள்ள வேண்டுமே! "கண்ணுக்கணிகலங் கண்ணோட்டம் அஃதின்றேல், புண்ணென்றுணரப்படும்' என்று நீதிவாக்கிய மிருக்க, உமது உருவத்தைக் கண்டும் உம்மை இவ்வளவு இம்சைக்குள்ளாக்கிய அரசன் இன்னும் உயிரோடிருக்கிறானு? தருமதேவதை இல்லையா? அவன் கழுவிலேற்றியபோது சுவாமிகள் எப்படி சகித்தீரோ? இப்போது என்ன வேதனையைக் கொடுக்கின்றதோ?" என்று மிகுந்த ஆருமையோடு பலவாறு வருத்தப்படுகிறதை மாண்டவியருணர்ந்து, 'ஓ தேவர்களே! ஓ முனிவர்களே! இந்தச் சாளுவ ராஜன் மற்ற ராஜாக்களுக்குள் நீதிமான். அவனை வெறுக்க வேண்டுவதில்லை. பிராரத்துவ சம்பந்த மிருந்தால் யார்தான் என்ன செய்யலாம்" என்று சொல்லி அவர்களுக்கு விடை கொடுத்து, முன்போல் யாதொரு துன்பமு மின்றி யோகத்தி லிருந்தார்.

இதனைப் பதிவிருந்த தலையாரிகள் கண்டு உள்ளநடுங்கி, அரசனிடத்து ஓடிவந்து, அவனடியில் அடியற்ற பனைபோல் விழுந்து வணங்கி, "ஓ மண்டலேஸ்வரா! தங்கள் கட்டளைப்படி கழுவி லிருக்கிறவ ரிடத்துப் பதிவிருந்தோம். கழுவி லிருக்கிறவர் கள்ளருக்குக் குருவல்ல. ஐம்புலக்கள்ளரையும் அதமாக்கித் தங்களை யொத்த அரசரையும் மற்றவர்களையும் வணங்கவைக்கும் மேலான தவசிரேஷ்டசிகாமணி. நாங்கள் பதிவிருக்கும்போது சில தேவர்களும் முனிவர்களும் அவரிடத்திற்கு வந்து, அவரிருக்கிற அவ கோலத்தைக் கண்டு துன்பப்பட்டுப் போயினர். இந்தச் செய்தியைத் தங்களுக்குத் தெரிவிக்க வந்தோம்" என்று கூற, இவ்வசனங்களைக் கேட்ட அரசன் மெய்மறந்து உள்ளம்நடுங்கி, "ஆ! ஆ! உலகாளும் அரசனுயினேன் தனக்குத் தூதுவர்களா லறிக்கையிடப்பட்ட ஒன்றை உடனே அங்கீகாரஞ் செய்யாமல், தான் ஒருவித வேடம்பூண்டு தனித்துச்சென்று, இது உண்மையோ பொய்யோ வென்று ஆராய்ந்துணர்ந்து, அதன்மேல் அச்செய்கைக்குச் சம்பந்தப் பட்டவருடைய குணுதிசயத்தை அக்கம் பக்கங்களி லிருப்பவர்களா லறிந்து, அதன்மேல் தீர்க்காலோசனை செய்து ஒரு தீர்ப்புச் செய்யவேண்டும். அதுதான் செங்கோலும் மநுசாஸ்திர முறைமையுமாம். இதனை மறந்து காவலாளிகள் சொல்லை நம்பிப் பெரியவரைக் கழுவி லேற்றினேம். இக்குற்றம் நமதே யன்றிக் காவலாளிகளால் நேரிட்டதல்ல" என்று தன்னைத்

தானே சேர்ந்துகொண்டு, சிங்காதனத்தைவிட் டிறங்கி மந்திரி முதலானவர்கள் சூழ்ந்துவர அதிவேகமாக வந்து மாண்டவிய ரிருக்கும் கழுமரத்தடியில் விழுந்து ஓவென் றலறி, 'ஓ சுவாமி உமது மகிமையை யறியாமற் செய்த குற்றத்தை மன்னித்து என்னைப் பாதுகாக்க வேண்டும். அரசுக் குரியவன் உலகத்தி லுள்ளவர்க்குத் தந்தையும் தெய்வமு மாவன். அவ்வரசனுக்குத் தந்தையும் தெய்வமும் தங்களையொத்த மஹாத்மாக்களாதலால், எளியேன் செய்த குற்றத்தை க்ஷமித்து என்னை இரக்ஷிக்கவேண்டும்" என்று பலவாறு துதித்துக் கழுமரத்தை மெதுவாய்ப் பூமியிற் சாய்த்து, அவருக்கு வருத்தமுறாமல் நெஞ்சிலிருக்கும் சூலத்தை வாங்க யத்தனித்தபோது, நெஞ்சிலிருக்கிற கழுமுனை வருத்துமாதலால் அதனைக்கண்டு அரசன் சகிக்காமல் அரத்தால் அச் சூலத்தை இருபுறமும் ராவிவிடக் கட்டளையிட்டான். கம்மியன் அவ்வாறு ராவிப்போட்டான். அவ்வாறு ராவியும் நெஞ்சிற்கழுவாணி மாத்திரம் நின்றுவிட்டமையால் அன்று முதல் ஆணி மாண்டவியரென்று அவருக்குப் பெயர் வந்தது.

பின்பு அரசன் மாண்டவியருக்குச் சோடச உபசாரமுஞ் செய்து பலவாறு துதித்தான். மாண்டவியர் மகிழ்ந்து, "அரசனே! நீ நீதிமான். எனக்கு வந்த துன்பம் பிராரத்துவ மாதலால் உன்மேல் எனக்குக் கோபமில்லை. நீ சுகமாக இரு" என்று வாழ்த்தி விடைகொடுத்துக் கழுமரத்தடியை விட்டு நீங்கி, முன்பே ஒரு வனத்தில் வந்து, சிலகாலம் யோகத்தி லிருந்து, ஒருநாள் தமக்குக் கழுமர நேரிட்டதைக் குறித்து யோசித்து, இவ்வகைப் பட்ட ஆக்ஞை நமக்கு வரவேண்டிய தென்ன? இந்தச் சந்தேகம் உலகிலுள்ள சீவகோடிகளுக்குத் தலைமையா யிருக்கிற யமனிடத்துச் சென்றால் தீரும்" என்று தெளிந்து, சில முனிவர்களுடனே யமபுரத்திற்குச் சென்றார். யமபுரத்துக் கதிபதியாகிய அறக்கடவுளென்று பெயர்பெற்ற யமன் எதிர்வந்து வணங்கி, அவரை அழைத்துப்போய் ஓர் ஆசனமளித்து இருக்கச்சொன்னான். முனிவர் யமனை நோக்கி, "தென்றிசைத் தலைவனே! யான் கழுவால் வருந்துவதற்குக் காரண மென்ன?" என்று வினவ யமன் வணங்கி, "சுவாமி! தாம் சிறுபிள்ளையா யிருக்குங்காலத்தில் தும்பிகளைப் பிடித்து அவற்றின் வால்களில் முட்களைக் குத்தித் துண்டிவிட்டீர். அதனால்தான் உமக்கு இத்துன்பம் நேரிட்டது" என்றான். அதைக் கேட்ட மாண்டவியர் யமனை நோக்கி, "தென்

றிசைத் தேவே! அவ்வகைப்பட்ட பாவம் புரிந்தபோதிலும் பின்பு வேதமோதினேன். வேதவிதிப்படி நடந்து துறவியாய்த் தவஞ் செய்தேன். விளக்கொளிபாய்ந்த விடத்து இருள் மாய் வதுபோலத் தருமமேலிட்ட விடத்துப் பாவ மாய்ந்துபோமென்று வேத முறையிட்டிருக்க, இதனை நோக்காமற் சகிக்கக் கூடாத இம்சையை ஏன் எனக்குக் கட்டளை யிட்டாய்" என்று கடுகடுத் துக் கேட்க, யமன் "சுவாமி! அதிக செல்வத்தைப் பெற்றவருக்கும் அரசுரிமை பெற்றவருக்கும் மமதை மேற்கொண்டிருக்கும். அதனால் உயிர்க்குக் கெடுதிநேரிடும். அக்கெடுதி நீங்கச் செல்வ வான்களுக்குப் பெரியோர்களும், அரசர்களுக்குப் பெரியோர் களோடு மந்திரிகளும் இருந்து, அவ்விருதிறத்தார் வேதாகமவிதி தப்புங் கலத்துத் தகுந்த புத்திசொல்லவேண்டும். இது மநு சாஸ்திரம், பெரியோர்களையும் மந்திரிகளையும் அடையாத செல்வ வான்களும் அரசரும் உகிலனுள்ள உயிர்களுக்கு இடையூறு செய் யுங் கருவியாக இருப்பது மன்றி அவ்விருவரும் எல்லாக் கெடுதிக் கும் உள்ளாவார்கள். ஆகையால் கடவுள் எனக்கொரு நியமஞ் செய்திருக்கிறார். அஃதென்னெனில், பெரியோர்களுக்குப் பதில் மலையையும், மந்திரிகளுக்குப் பதில் அக்கினியாற்றையும் வைத்து, 'ஓ தருமனே! நீதியினின்றுவழுவுவாயாகில் இம்மலை உன் தலையில் விழும். அப்பால் நீ அக்கினி யாற்றிற் பிரவேசிப்பாய்' என்று அறி வித்திருக்கிறார். இதோ பாரும் ஒருமயிரிற் பெரியமலை தொங்கு கின்றது. அதன்கீழ் என் சிங்காதனம் இருக்கின்றது. இச்சிங்கா தனத்தின் கீழ் அக்கினியா றிருக்கின்றது. கிஞ்சித்துப் பிசகுவே னானல் மலையறுந்து என்றலைமேல்விழும் அப்பால் அடியேன் சிங்கா தனத்தோடு அக்கினியாற்றிற் பிரவேசமாவேன். தங்களுக்கு நேரிட்ட துன்பம் நீதியல்லாததாயிருந்தால் தாங்கள் என்னைக் காண்பதுவுமுண்டா? நீங்கள் வருமுன்னமே நான் அக்கினியாற்றிற் பிரவேசமாயிருப்பேன்" என்றான். இவையனைத்தையுங் கேட்ட மாண்டவியமுனிவர் அதிகக்கோபங்கொண்டு, "ஓ தென்றிசைத் தலை வனே! பதின்மூன்று வயதுவரைக்குஞ் செய்த பாவ புண்ணியம் பிள்ளைகளைச்சாரா. அவைகளைப் பாவமென்று யார் சொல்லுகிறார் களோ அவர்களையே சேரும். ஆதலால் நீ இன்றுமுதல் நான் கூறியவாறே நீதி செலுத்தவேண்டும்" என்று கட்டளையிட்டுப் பதின்மூன்று வயதுக்குள் செய்ததீங்கை யென்மீது ஏற்றியபடியால் நீ பூலோகத்திற் சந்திரவமிச ராஜஸ்திரிகளின் தாதிவயிற்றிற்

பிறந்து விதுரனென்று பெயர் கொண்டு, அரசர் துதிக்கச் சிறப்புற்றிரு' என்று சபித்துவிட்டுத் தமக்கிசைந்த விடத்துக்குச் சென்றார். யமன் அச்சாபத்தை ஏற்று, அச்சாபப்படி தாதிவயிற்றிலுதித்தான்" என்று வைசம்பாயனர் சொல்ல, ஜனமேஜயன் உள்ளம் மகிழ்ந்து பூரித்து வணங்கி "ஓ சுவாமி! தென்றிசைக் கடவுளுடைய சரித்திரத்தைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தேன். இனி மூதாதைகளின் சரித்திரத்தை அறிய விரும்புகிறேன்" என்று வேண்ட வைசம்பாயனர் சொல்லுகிறார்.

கேளும் ராஜராஜேஸ்வரா! எனது குருவாகிய வேதவியாசர் அநுக்கிரகத்தினால் அம்பிகையிடமாகப் பிறந்த திருதராஷ்டிரனையும், அம்பாலிகை யிடமாகப் பிறந்த பாண்டுவையும், தாதியிடமாகப் பிறந்த விதுரனையும், பரிமளகந்தி பீஷ்மாசாரி இவ்விருவருமிகுந்த காதலோடு எடுத்து வளர்த்தார்கள். இம் மூன்று பிள்ளைகட்கும் இம் மூவகைப் பெயர் யாரால் யாதுகாரணத்தா லிடப்பட்டதெனில், வியாசமுனிவர் கூறியபடி அந்தச் சந்திரவமிசத்தாருக்கு ஆட்சி மூன்று தேசமாதலால் அதுபற்றி அம்பிகையிடத்துப் பிறந்தவனுக்குத் திருதராஷ்டிரன் என்று பெயரிட்டு, அம்பாலிகை யிடத்துப் பிறந்தவனுக்குப் பண்புபற்றிப் பாண்டுவென்று பெயரிட்டுத், தாதியிடத்துப் பிறந்தவனுக்கு விவேகத்தைப் பற்றி விதுரனென்று பெயரிட்டு, அரசர்க்குரிய உபநயன முதலாகிய கடனை இயற்றி, நாலுவேதம் ஆறுசாஸ்திரம் அறுபத்து நாலு கலைக்கியான முதலியவற்றைப் பீஷ்மர் போதித்து, வில்வித்தை யானை ஏற்றம் குதிரை ஏற்ற முதலியவற்றையுங் கற்பித்து வந்தார். சிறுவர்கள் பாலபருவ மடைந்தகாலத்திற் பாண்டு ராஜனுக்குப் பட்டங்கட்ட வேண்டுமென்று நினைத்த பரிமளகந்தியும் பீஷ்மரும் அவனிடத்துச் சொல்ல, பாண்டு தன் தமையனாகிய திரிதராஷ்டிரனுக்குப் பட்ட முரியதென்று தடுத்துவர, ஒரு நாள் பீஷ்மர் சிங்காதனத்தில் வந்திருந்து, மந்திரிமார் - சேனைத்தலைவர் - யூகத்தலைவர் - பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர் - குடிஜனங்கள் முதலியவர்களை அழைத்து அவர்களை நோக்கி, "ஓ புண்ணியவான்களே! இப்போது நான் பெற்றிருக்கிற பட்டத்தை மூன்று குமாரருக்குள் யாருக்குக் கொடுக்கலாம்; யோசித்துச் சொல்லுங்கள்" என்றார். மந்திரி முதலானவர்கள் நிதானித்து, "அரசுரிமைக்குப் பெருந்தன்மை இன்றியமையாதது. ஆகையால் மூத்த குமாரனாகிய திருதராஷ்டிர மகாராஜனுக்கு இப் பட்டத்

தைக் கொடுக்கலாம்" என்று யாவரும் சொல்ல, அதனைக் கேட்ட பீஷ்மர் அதிக மகிழ்ச்சி யடைந்து, நல்ல சுப முகூர்த்தத்தில் - 55 - தேசத் தரசர்களையும் வரவழைத்து, திரிதராஷ்டிரன் முதலான மூவர்களையும் கங்கை முதலிய தீர்த்தங்களினால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடையாபரணங்களால் அலங்கரித்து வேத வேதியர்கள் ஆசிகள் கூறத் திருதராஷ்டிரனைச் சிங்காதனத்திலிருத்தி, யாவரும் மங்களங்கூறி ஜயாவிஜீபவா வென்று வாழ்த்த பீஷ்மர் மகுடாபிஷேகஞ் செய்து, பாண்டுமகா ராஜனுக்கு இளவரசுப்பட்டங் கட்டி, விதுரனை எல்லா மந்திரிகட்குந் தலைமையான மந்திரியாக்கி, வந்த ஜனங்களுக்குச் சந்தனம் புஷ்பம் தாம்பூல முதலியவற்றைக் குறைவறவளித்து அனேக தான தருமஞ்செய்து, மந்திரிகள் தவிர மற்றவர்களுக்கு விடைகொடுத்து, பீஷ்மர் மிகுந்த மகிழ்ச்சியுடன் இனிது வீற்றிருந்தார்.

## காந்தாரிமணம்

திரிதராஷ்டிரன் மநுசாஸ்திரவிதி பிசகாமல் தான தருமமுதலியவற்றைச் செய்து செங்கோல் செலுத்திவந்தான். பாண்டு மகாராஜன் அரசர்களை யெதிர்த்து யுத்தஞ்செய்து சில தேசங்களைத் தன் தமையன்வசப் படுத்தினன். விதுரன் அவர்களுக்குங் காலத்துக்குத் தகுந்த புத்தி முதலியவற்றைச் சொல்லித் தருமம் வழுவாம லிருக்கச்செய்து வந்தான். இப்படி நடந்துவருங் காலத்திற் பரிமளகந்தி பீஷ்மரிடத்துக்கு வந்து 'நமது சிறுவர்கள் யவ்வன திசையை அடைந்திருக்கிறார்கள். விரைவில் விவாகஞ் செய்ய வேண்டும். அதற்குத் தகுந்த முயற்சி செய் வாயாக' என்று வார்த்தையாடிப் போயினள். பீஷ்மர் பாண்டுவுக்கும் விதுரனுக்கும் பெண்கிடைக்கும்; திரிதராஷ்டிரனுக்குப் பெண்கிடைப்பது அருமை. இதற்கென்ன செய்யலாம்? உலகத்திற் பெண்ணைப் பெற்றவர்கள் அப்பெண்ணை ஒருவர்க்குக் கொடுக்க யத்தனித்த காலத்து, தந்தை கல்வியை நோக்குவன். தாய் செல்வத்தை நோக்குவள். பெண்ணோ 'கைநிறைந்த பொன்னைவிடக் கண்ணிறைந்த கணவனே யினிது' என்கிற பழமொழிபோல் அழகை நோக்குவள். இம்மூவர் கருத்திலும் முற்கூறிய இருவர் கருத்துக் கிசைந்தபடி நமது புத்திரன் கல்வித்திறமும் செல்வச்செருக்கும்

பெற்றிருப்பினும், பின்கூறிய பெண் கருத்தின்படி அழகில்லாமல் அந்தகனு யிருக்கிறுன். ஆனுல் பெண்கருதிய கருத்து அதமம். ஏனென்ருல், அழகு நிலையல்ல, செல்வமும் அப்படியே. தந்தை கருதிய கருத்து எப்போதும் நிலைபெற் றிருக்கும். இதனையறிந் தவர்தான் இவனுக்குப் பெண்கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் வலியப் போர்செய்து பெண்கொள்ள வேண்டும்" என்று யோசித்துச் சில தூதர்களை அழைத்து, "எந்தத் தேசத்து அரசனுக்குப் பெண்ணிருக்கின்றதோ அந்தத் தேசத்துப் பெயரையும் அரசன் பெயரையும் பெண்ணின் திறத்தையு மறிந்து வந்து சொல்லுங்கள்" என்று கட்டளை யிட்டார். தூதர்கள் அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு, தேசங்கள்தோறும் போய் ஆராய்ந்து, எங்கும் காணுதவர்களாய் முடிவிற் காந்தாரதேசத்துட் சென்று, அத்தேசத்தை ஆளும் சுவேதமகாராஜனுக்கு ஒரு பெண்ணிருப்ப தாகக்கேள்விப்பட்டு, அப்பெண்ணின் குணுதிசயத்தையும் விசாரித் தறிந்து, பீஷ்மரிடம் வந்து சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, "ஓ மண்டலேஸ்வரா! தாங்கள் கூறிய கட்டளைப்படி தேசங்கள் தோறுஞ் செல்லும்போது காந்தார தேசத்துக்குச் சென்ருேம். அத்தேசத்துக்கு அரசன் சுவேத மகாராஜன். அவனுக்கு ஒரு புத்திரி உண்டு. அப்புத்திரியோ மகாலட்சுமியைப்போல் ரூப வதியா யிருக்கிருள்" என்று உரைக்க, உடனே பீஷ்மர் சாமபேத தான தண்டமென்னுஞ் சதுர்வித உபாயத்தை நன்ருயறிந்த சில மந்திரிகளையும் வேதியர்களையும் அழைத்து அத்தூதுவரோடு கூட்டி, "நீங்கள்போய் சுவேதமகாராஜனைக் கண்டு பெண் கேட்டு வாருங்கள்" என்று திட்டஞ்செய்து அனுப்பினுர். அம்மந்திரி முத லானவர்கள் பீஷ்மர் கட்டளையைச் சிரமேற்கொண்டு காந்தார தேசத் தரசனிடத்துச் சென்று தங்கள் வரவைக் காவலாளி களால் தெரிவிக்க, அரசன் அவர்களை அழைத்துத் தகுந்த மரி யாதைசெய்திருக்கச் சொல்லி, வந்தகாரண மென்னவென்று வினவ மந்திரிகள், "காந்தாரதேசத் தலைவனே! பூமண்டலாதிபதியா யிருந்த சந்தனு மகாராஜனுடைய சிரேஷ்ட புத்திரசிகாமணியான பீஷ்மாச்சாரியார் ஒரு காரியார்த்தமா யெங்களைத் தங்களிடத் தனுப்பினுர். அஃது என்னகாரிய மென்ருல், அந்த மகாமூர்த் தியின் சகோதரரின் மனைவிகளில் அம்பிகை இடமாகப்பிறந்து உலகமுழுதையும் ஒரு குடையிற் காத்துவரும் திரிதராஷ்டிர மகா ராஜனுக்கு மணம்புரியக்கருதி, உமது குமாரத்தியைக் கேட்டுவரச்

சொன்னார். அதற்காகத்தான் நாங்கள் வந்தோம். அதற்கு உமது கருத்தென்ன?" என்று வினவ, அரசன் மிகுந்த மகிழ்ச்சிகொண்டு, "மந்திரிமார்களே! இதுகாறும் என் பெண்ணைக் குறித்து நான் கொண்டிருந்த எண்ணத்திற்கு ஏற்றபடி நீங்கள் வந்து கேட்டது பழம் நழுவிப் பாலில் விழுந்தாலெப்படியோ அப்படிப்போலாயிற்று. எனக்கு மிகுந்த சந்தோஷந்தான். பீஷ்மர் சுகமாக வந்து என் புத்திரியைத் திருதராஷ்டிரமகாராஜாவுக்கு மணஞ்செய்துகொள்ளட்டும்" என்று புகல, பக்கத்திலிருந்த அரசர்களும் மந்திரிகளும் அவனை வணங்கி, 'ராஜராஜேஸ்வரா! தாங்களென்ன யாதொன்றையும் யோசிக்காமல் திரிதராஷ்டிரனுக்குத் தங்கள் குமாரத்தியைப் பாணிக்கிரகணஞ்செய்து கொடுக்கிறேன்' என்று சொல்லுகிறீர்கள். திரிதராஷ்டிரன் குணாதிசயங்களை அறிவீர்களோ?" என்று வினவ அரசன் அவர்களைப் பார்த்து, "திரிதராஷ்டிரன் குணாதிசயமென்ன?" என்று கேட்டுச்சங்கதியறிந்து வருத்தமுற்றுச் சற்று நிதானித்துப் பீஷ்மரிடத்திலிருந்து வந்த மந்திரிகளைநோக்கி "மந்திரிமார்களே! உங்களரசன் வரன்முறையை நோக்குங்கால் ஒருவிதத்திற் குற்றமுள்ளதாயிருக்கின்றது. அக்குற்றத்தை வேதவிதியென்று பரிகரித்துக் கூறியவாக்கைப் பாதுகாப்போமென்றாலும், உங்கள் அரசனுக்குக் கண்ணில்லை. மேலும் கன்னிகைகள் கைநிறைந்த பொன்னைவிடக் கண்ணிறைந்த கணவனே இனிதென்று சொல்லுவார்கள். ஆதலால் உமது அரசனுக்குப் பெண் கொடுப்பது தகுதியல்ல" என்று மறுக்க, மந்திரிகள் அரசன் வாக்கியத்தைக் கேட்டுக் கலகலவென்று நகைத்துச் சொல்லுகிறார்கள்—

"ஓ அரசர் சிகாமணியே! உலகத்தில் மேகம் நல்ல ஜலத்தைக் கொடுக்கிறது. அந்த ஜலம் எந்தெந்த நிலத்திற் படியுமோ அந்தந்த நிலத்தில் படிந்து வேறுபடுகிறது. அதுபோல் தாங்கள் நீடிய ஆலோசனை செய்து பெண்ணைக் கொடுக்கிறோமென்றொப்புக்கொண்டு, மந்திரிகளுடைய துர்ப்போதனையால் இப்போது மாறுபட்டு முன்சொல்லிய வாக்கை மறுக்கிறீர். அதனாற் கெடுதி விளையும். அக் கெடுதி என்னவென்றால், முதலாவது செங்கோல் செலுத்தும் அரசர்கள் ஒன்றைக் கொடுக்கிறோமென்று வாக்குதத்தஞ் செய்தால், பின்பு அவ் வாக்குத்தத்தத்திற்கு என்ன கெடுதி வந்தபோதிலும் அக் கெடுதிகளை அனுபவித்துத் தாம் கூறிய வாக்குத்தத்தத்தை நிறைவேற்ற வேண்டும். அப்படி நிறைவேற்றாமல்

விட்டுவிடுவது அரசுரிமைக்கு யோக்கியதை யல்ல. மேலும் ஒரு விஷயம் சொற்பகாரியமாக இருந்தபோதிலும் அதனை நன்றாய் நிதானித்து, அதனால் வரும் பலாபலனை அறிந்துகொண்டு, பெரியோர்களோடு யோசித்து, மந்திரிகளோடும் உசாவி, அதன்மேல் அக் காரியம் நன்மையுள்ளதாயிருந்தால் அங்கீகாரஞ் செய்யவேண்டும். யோக்கிய மல்லாததாயிருந்தால் 'சட்டிசுட்டது கை விட்டது, என்கிற பழமொழிக் கிணங்கக் கிணற்றிற் கல் போட்டது போல் சும்மா விருக்கவேண்டும். இது அரசர் தருமம். தாங்கள் அவ் விதியைக் கைவிட்டு, முன்னம் எங்கள் கருத்துக்கு ஒத்துப் பின்பு வேறுபட்டதே உமது வாக்குக் கழிவு வந்ததுமன்றி, இந்த வார்த்தைகளை எங்கள் தலைவ ரறிந்தால் அவருக்கு அதிக கோபமுண்டாகும். பின் அவர் உமது ஆக்கத்துக்குங் கெடுதி நேரிடப் போர்க்கோலங்கொண்டு வருவார். அப்பால் ஜயாப ஜய மெப்படியோ? மேலும் பிரமனுக்குத் தலைக் குறையுண்டு. திருமாலுக்கு விஷதோஷத்காற் கரியநிற முண்டு. சாம்ப மூர்த்திக்கு வாதக்காலுண்டு. இந்திரனுக்கு யோநிமயமான உடம்புண்டு. சூரியனுக்குப் பல்லில்லை. சந்திரனுக்குக் களங்கமுண்டு. ஆதிசேஷனுக்கு விஷமுண்டு. இப்படி மும்மூர்த்திகள் முதலானவர்க்கும் பழுதிருக்கின்றது. பூமண்டலத்தில் பழுதில்லாதவர்களில்லை. ஆதலால் மந்திரி முதலானவர்களின் துர்ப்போதனைக் குட்படாமல்,முன் கூறியபடி உமதுகுமாரத்தியை எங்களரசனுக்கு மணம்புரியுங்கள். அப்பால் உமதிஷ்டம். மேல் வருவதை நீர்தான் அனுபவிக்க வேண்டும்" என்று நயபயமாய்ப் பேசினார்கள்.

அரசன் மனங்கலங்கிச் சற்றுநேரம் மௌனமாயிருந்து, பின்பு வந்த மந்திரிகளை நோக்கி, "ஓ புண்ணியவான்களே! வருவதெல்லாம் வரட்டும். திரிதராஷ்டிர இராஜனுக்கு என் பெண்ணைக் கொடுக்கிறதில்லை" என்று கூறித் தகுந்த மரியாதை செய்து அவர்களை அனுப்பி விட்டார். மந்திரிகள் பீஷ்மரிடத்து வந்து, சுவேத மஹாராஜனிடஞ் சென்றதையும் அங்கு நடந்த விருத்தாந்தத்தையுங்கூறினார்கள். பீஷ்மர் கேட்டு மிகுந்த சினங்கொண்டு, சகல சாஸ்திர சிகாமணி யாதலாற் சற்று நிதானித்து, "ஆ! ஆ! நமது குமாரன் என்னதான் சாமர்த்திய அழகுடையவனா யிருந்த போதிலும் பிரதானமான கண்ணில்லாதவனா யிருக்கிறான். இவனுக்குப் பெண் கொடுப்பதற்கு யார் தான் சம்மதிப்பார்கள்.

'மூதுகிற் புண்ணிருக்கிறவன் செடியில் நுழைவானா?' என்னும் வாக்கியம் பொய்யாகாது. ஆயினும் இவ் விஷயத்திற் பின்னிட்டு நயத்திற் காரியத்தை நிறைவேற்றவேண்டும்" என்று யோசனை செய்திருந்தனர்.

இங்கே காந்தாரதேசத் தரசன் பீஷ்மரால் என்ன கெடுதி நேரிடுமோவென்று பலவாறு யோசித்திருக்கிற தருணத்தில், அந்தப் புரத்தி லிருக்கும் காந்தாரியைச் சில தாதிகள் கண்டு, "ஓ அம்மணி! இன்றையத் தினம் இராஜசபையில் ஒரு சங்கதி நடந்தது. அஃதென்ன வெனில் - அத்தினபுரத்துக் கதிபதியான திரிதராஷ்டிர மஹாராஜனுக்கு உம்மை மணஞ் செய்விக்க வேண்டு மென்று கருதிச் சில மந்திரிகள் வந்து உமது தந்தையைக் கேட்டார்கள். அவர்கள் கருத்துக்குச் சரியாய் உமது தந்தை யொப்புக் கொண்டு பின்பு அந்தத் திரிதராஷ்டிர மஹாராஜனுக்குக் கண்ணில்லா திருப்பதை மந்திரிகளாலறிந்து, முன் கூறிய வாக்கை மறுத்துப் பெண் கொடுக்கிற தில்லை என்று கூறினர். பெண் கேட்க வந்தவர்கள் சில நியாயஞ் சொல்லிப் போய் விட்டார்கள். இந்தச் சங்கதி உமக்குத் தெரியப்படுத்தினோம்" என்றார்கள். காந்தாரி சில தாதிகளைக் கூட்டிட்டு, அவர்களால் தந்தையைத் தன்னரண் மனைக்கு வரவழைத்து, அவர்க்கு வந்தனை வழிபாடு செய்து ஒரு பொற்பீடத்தி லிருக்கச் சொல்லி, "ஓ ஐயா! உமது வாக்கினால் எனக்கு ஒரு கணவனை நியமித்தபோதே அவர் தான் எனக்குக் கணவர். நீர் நியமித்த பின்பு அவருக்குக் கண்ணில்லை யென்று நீக்குவது தகுதியல்ல. இக்கணம் முன் கூறிய வாக்குத்தத்தத்தின் படி. என்னை அவ் வரசருக்கே மணஞ் செய்விராக. ஒரு வேளை கண்ணில்லாதவரென்று ஐயப்படுவீரானால் அதற்கு ஓர் உவமை கூறுகிறேன். உலகிலுள்ள பெண்கள் அவயவப் பழுதில்லாமல் அழகி லுயர்ந்தவர்களில் ஒருவரை மணம்புரிய வேண்டு மென்று கருதுவார்கள். அவர்களெல்லாரும் மத்திமஸ்திரீகள். உத்தம ஸ்திரீகள் தேகசவுந்தரியத்தை நோக்காமல் குணசௌந்தர்யத்தையே நோக்குவார்கள். அதனால் இராஜஸ்திரீயாகிய நான் இனி வேறொரு புருஷரை விரும்பேன். முன்பு நீங்கள் குறித்த கருத்தின்படி நிறைவேற்றுமையா" என்று வேண்டினாள். அரசன் அதிக மகிழ்வடைந்து கொலுவுக்கு வந்து மந்திரி முதலானவர்களை யழைத்து "ஓ மந்திரிகளே! திரிதராஷ்டிர மஹாராஜனுக்கே நமது குமாரத்தியைப் பாணிக்கிரகணஞ் செய்துகொடுக்கப் போகிறோம். நமது ரத

க்ஜதுரகபதாதிகளோடு யாவரும் பிரயாணமாகுங்கள்" என்று கட்டளை யிட்டான்.

பிறகு அவன் தன் அரண்மனைக்குட் சென்று, ஸ்நானஞ் செய்து போஜனமுண்டு ஆடை ஆபரணங்களை யணிந்து தாமொரு ரதமேறி, குமாரத்தியை அலங்கரித்து முத்துச் சிவிகையிலேற்றித் தனது சகல பரிசனங்களோடும் நகரத்தை விட்டு வெளிப்பட்டான். இதற்குள் மந்திரி முதலாகிய சேனைகளும் வந்து கலந்தார்கள். இப்பால் யாவரும் ஒன்றாகக்கூடிக் கடலொலிபோல் வாத்தியங்கள் முழங்க அதிக மகிழ்வோடு சென்று அஸ்தினாபுரத்தை யடைந்தார்கள். அரசன் தனது வரவைச் சில தூதர்களால் பீஷ்மருக்குத் தெரிவித்தான். தூதர்கள் "கல்யாண விஷயத்தைக் குறித்துப் பலவாறு யோசித்தும் ஒன்றும் பிரியாமல் தேனில் விழுந்த ஈயைப்போல் மயங்கியிருக்கிற பீஷ்மரை வணங்கி, "ஓ சுவாமி! தங்கள் குமார சிகாமணிக்கு விவாகஞ்செய்யத் தமது குமாரத்தியோடு காந்தாரதேசத் தலைவராகிய சுவேத மஹாராஜா வந்திருக்கிறார். இந்தச்செய்தியைத் தங்களுக்குத் தெரிவிக்கவந்தோம்" என்று கூறினர். பீஷ்மர் இவ்வசனங்களைக் கேட்ட மாத்திரத்தில் இம்மைப்பயன் யாவும் பெற்றவர்போல் மகிழ்வுற்றுச் சில மந்திரிகளை யழைத்து, "ஓ மந்திரிகளே! திருதராஷ்டிரனுக்குக் கல்யாணஞ் செய்துகொடுக்கத் தன் குமாரத்தியோடு சுவேதமஹாராஜன் நமது பட்டணத்தில் வந்திருக்கிறான். நீங்கள் எதிர்கொண்டு போய்த் தகுந்த மரியாதை செய்து அழைத்து வாருங்கள்" என்று கட்டளையிட்டார். உடனே அம்மந்திரிகள் சுவேத மகாராஜனைக் கண்டு, தகுந்த மரியாதைசெய்து அழைத்துவந்தார்கள். சுவேதமஹாராஜன் பீஷ்மரிடத்து வந்து வணங்கி, "ஓ மண்டலேஸ்வரா! தாங்களனுப்பி வைத்த மந்திரிகள் கூறிய கருத்துக்கு யானிசைந்து பின்பு மாறுபட்டதைக் குறித்துக் குற்றம் பாராட்டுவது தருமமல்ல. இதனைத் தாதியா லுணர்ந்த என் குமாரத்தி என்னை நேரில் வரவழைத்து. 'தாங்கள் முதன் முதலில் யாருக்குக் கொடுக்கக் கருதினீர்களோ அவரே எனக்குக் கணவர்' என்று கூறியபடியால் நான் வந்தேன். என்னை யாதரித்து உமதிஷ்டப்படி என் குமாரத்தியை உமது குமாரனுக்கு விவாகஞ் செய்யவேண்டும்" என்று இரந்தான். பீஷ்மர் சுவேதமஹாராஜனை யாதரித்து ஒரு விடுதியிலிருக்கக் கட்டளையிட்டுத் தன் மந்திரிகளை நோக்கி, "கல்யாணத்திற்கு

வேண்டியவைகளைச் சித்தஞ் செய்யுங்கள்" என்றுரைத்தார் மந்திரிகள் அக்கணத்திற் கல்யாணத்துக்குத் தகுந்த வஸ்துக்களைச் சேகரித்து, நாடுநகரங்களுக் கெல்லாம் மணவோலை போக்கி, அத்தினபுரியைத் தெய்வலோகத்தைப்போல் அலங்கரிக்கக் கட்டளையிட்டுப் பீஷ்மரிடத்து வந்து வணங்கி, "ஓ சுவாமி! தாங்கள் கட்டளையிட்டபடி கல்யாணத்துக்கு வேண்டிய வற்றைச் சித்தஞ் செய்து வந்தோம்" என்று விண்ணப்பஞ் செய்தனர். பீஷ்மர் எழுந்து, சிற்றன்னை யிடத்துக்குச் சென்று வணங்கிப் பெண்கேட்டது முதல் பெண்ணைப்பெற்ற அரசன் தன் நகரத்துக்கு வந்த வரையில் நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லப் பரிமளகந்தி மகிழ்வுற்று பீஷ்மரைநோக்கி, "அப்பா மகனே! நமது குலம் விர்த்தியாக விரைவிற் கல்யாணத்தை நிறைவேற்றுக" என்றாள்.

பீஷ்மர் மந்திரிகளை யழைத்து, நல்ல சுபமுகூர்த்தத்திற் கல்யாண மண்டபம் அலங்கரிக்கக் கட்டளையிட்டார். மந்திரிகள் அவ்வாறே கல்யாணமண்டபத்திற் பற்பல விநோதங்களை அமைத்தார்கள். இதற்குள் ஐம்பத்தைந்து தேசத் தரசர்களும் வேதவேதியர்களும் பந்து ஜனங்களும் வந்து குழுவினர். மந்திரிகள் வந்தவர்களையெல்லாம் தகுந்த மரியாதையுடன் கல்யாண மண்டபத்தி லிருக்கச் செய்தார்கள். உடனே பீஷ்மர் மந்திரிகளுக்கெல்லாந் தலைமை பூண்டிருக்கிற விதுரமஹாராஜனை அழைத்து, "உன் தமையனாகிய திரிதராஷ்டிரனை மணக்கோலஞ் செய்து அழைத்து வா" என்று கட்டளையிட்டு, சுவேதமஹாராஜனை நோக்கி மணமகளைச் சகல அலங்கிருதமுஞ் செய்து கொண்டுவரக் கட்டளையிட்டார். அப்படியே விதுரன் தன் தமையனாகிய திரிதராஷ்டிரனை வணங்கி, பீஷ்மாச்சாரியார் தனக்கு உத்தரவு செய்ததை விளம்பி அழைத்துப்போய் நல்ல கங்கை முதலிய தீர்த்தங்களினால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடை ஆபரணங்களினால் அலங்கிருதஞ்செய்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் மணப்பந்தலுக்கு அழைத்து வந்து உட்காரவைத்தான். சுவேதமஹாராஜனும் தாதிகளால் தன் குமாரத்தியை ஸ்நானஞ் செய்வித்து, ஆடை ஆபரணங்களினாற் கோலஞ்செய்து, வேதவேதியர்கள் ஆசிகள்கூற, மங்கலவோசை கடலொலிபோ லொலிக்கப் பல வாத்தியங்கள் கணகணவென்று முழங்க, சகல வைபவத்தோடும் அலங்கரித்த மணப்பந்தலுக்கு அழைத்துவந்து உட்காரவைத்தான். பீஷ்

மர் வேதவேதியர்களை நோக்கி, முகூர்த்தத்தை நடப்பிக்கும்படியாக உத்தரவு செய்தார். உடனே அப் பிரமக்கியான வேதியர்கள் வேதாகம விதிப்படி மந்திரங்களை உச்சரித்து, மங்களகரமான முகூர்த்தத்தில் மந்திராக்ஷதைகளாற் பூஜை பெற்றிருக்கிற திருமங்கல்யத்தைப் பெரியோர்கள் ஆசீர்வதிக்கச் சபைமுழுதும் காண்பித்துத் திரிதராஷ்டிரமஹாராஜனுடைய கையிற்கொடுத்து காந்தாரி கழுத்தில் தேவர்களும் மற்றயாவர்களும் புஷ்பவருஷஞ் சொரிந்து வாழ்த்தும்படியாகத் தரிப்பித்து இன்னும் செய்ய வேண்டிய முறைமைகளையு முடித்தார்கள். பின்பு பீஷ்மர் விதுரமஹாராஜனால் வந்தவர்களுக் கெல்லாம் யாதொரு குறைவும் வராமல் தாம்பூல முதலியவற்றை வழங்கி, அவரவர்களுக்கு வேண்டிய வஸ்துக்களைக் குறைவறக் கொடுத்து, அன்னதானம் - கோதானம் - பூதானம் - கன்னிகாதான முதலியவற்றைச்செய்து, வந்த அரசர்களுக் கெல்லாந் தகுந்த பரிசு கொடுத்து, அவரவர்கள் தங்கள் தங்கள் இருப்பிடம் போய்ச் சேரக் கட்டளையிட்டார். பின்பு திரிதராஷ்டிரனும் காந்தாரியும் அந்தப் புரத்திற் சென்று, இரதியும் மதனனும் போலக் கூடிக் கலந்து வாழ்ந்திருந்தார்கள்.

---

## கர்னன் உற்பவம்

---

பாண்டு மஹாராஜன் இளவரசுப் பட்டம் பூண்டு மநுசாஸ்திர விதி பிசகாமல் நடந்து வருகிறகாலத்தில், குந்திபோஜர் வம்ச பரம்பரையிற் றோன்றிய சூரசேனன் என்பவனுக்கு ஒரு புத்திரியுண்டு. அவளோ அழகில் இலக்குமியையும் - கல்வியில் வாணியையும் - கற்பில் அருந்ததியையும் ஒத்தவளாய் யாவருந்தொழப் பிரதை என்று பெயர் பெற்று வாழ்கிறகாலத்தில், அசுரர் பரம்பரையிற்றோன்றி ஐயப்பற்றையெல்லாந் துறந்து கோபத்தை மாத்திரம் குறைய விடாமல் இருக்கிற தூருவாச மஹாமுனிவர் அவ்வரசனிடத்துக்கு வந்தார். அரசன் அவரை எழுந்து யெதிர்கொண்டு போய் அழைத்து வந்து, பெற்பீடமளித்து இருக்கச் சொல்லி, சோடச உபசாரமுஞ் செய்து, பயபத்தியுடனே வாய்பொத்தி எதிர் நின்று, "ஓ சுவாமி! தாங்கள் இந்நகரத்துட் பிரவேசித்து எனக்குத் தரிசனங் கொடுத்தது இந் நகர்செய்த பூஜாபலமோ?

எங்கள் மேலோர் செய்த புண்ணியவசமோ? எளியேனுக்கு ஒன்றுந் தோன்றவில்லை" என்று இனிய வசனங்களால் அம்முனிவரைக் களிப்புறச் செய்தான். அம்முனிவர் வணங்கி நின்ற அரசனுக்குப் பல ஆசிகள் கூறி "ஓ அரசனே நான் சில நாள் இந்த இடத்திலிருந்து சாதுர்மாத விரதம் அநுஷ்டிக்க வேண்டும். எனக்கு ஊழியஞ்செய்ய ஓர் ஆள் அமைப்பாயாக" என்று கூற, அரசன் மகிழ்வடைந்து, "ஓ சுவாமி! தங்கள் கருத்தின் படியே இங் கிருக்கலாம். தங்கள் பணிவிடைக்கு யோக்கியதையுள்ள ஆள் என் குமாரத்தி ஒருத்திதான். அவளையே பணிவிடைப் பெண்ணாக வைத்துக் கொள்ளுமையா" என்று சொல்லித் தன் புத்திரியை அழைத்து, முனிவரிடத்தில் ஒப்புவித்தான். முனிவர் அக் கன்னிகையைப் பணிவிடைப் பெண்ணாகக் கொண்டு, இரண்டு மூன்று தினம் ஆத்மலாபத்தைக் கொடுக்கிற சிவபூஜை முதலியவற்றைச் செய்து வந்தார். இக் கன்னிகை பணிவிடை செய்வதில் மிகுந்த பயபத்தியும் அன்பும் உடையவளா யிருக்கவே முனிவர் "ஆ! ஆ! உலகத்தில் நமக்கு ஒரு நாழிகை உளம் பொருந்துப் பணிவிடை செய்பவர் இல்லை. இக் கன்னிகை யாதொரு குறைவும் வராமற் பணிவிடை செய்து வருகிறாள். இவளது குணாதிசயத்தை இன்னும் சிலநாளிருந்து பார்ப்போம்" என்று பின்னும் பலநா ளிருந்தார்.

அப்போது அக் கன்னிகை கழங்காடல் நீராடல் பூக்கொய்தல் முதலிய விளையாட்டுத் தொழில்களை விட்டுவிட்டு, அதிக ஜாக்கிரதையாய் நாளுக்குநாள் விசேஷப் பணிவிடைகளைச் செய்து வந்தாள். அதற்கு முனிவர் அதிக மகிழ்ச்சி கொண்டு, அக் கன்னிகையை அருகில் அழைத்து, "ஓ அம்மணி! இவ் வுலகத்தில் எனக்குப் பணிவிடை செய்தவர்கள் சாபத்தை அடைந்தார்களே யன்றி லாபத்தை அடைந்தவரில்லை. இப்போது நீ ஒருத்தியே என் மனமகிழும்படி பணிவிடை செய்து வந்தாய். அதனால் உன் மீது எனக்குப் பக்ஷமுண்டாயிற்று. ஆதலால் நான் உனக்குச் சில மந்திரங்கள் சொல்லுகிறேன். அவைகளைக் கற்றுக்கொள். அந்த மந்திரங்களை உச்சரித்தவுடன் அந்தந்த மந்திரங்களுக்குரிய தேவர்கள் பிரசன்னமாகி உன்னைக் கூடிக் கலந்து, தங்களைப்போன்ற புத்திரசந்தானங் கொடுத்துப் போவார்கள். இதனைப் பத்திரமாக மனதில் வைத்திரு" என்று திட்டஞ்செய்து, அவள் செவியில்

ஐந்து மந்திரங்களை உபதேசித்து ஆசீர்வதித்துத் தமது தபோவனத்துக்குச் சென்றார். இக் கன்னிகை அம் மந்திரங்களைக் கவனித்துத் தனது அரண்மனையில் வந்து தனக்குக் கட்டியிருக்கிற கன்னிகாமடத்திற் களிப்புற்றிருக்கிற நாளில், ஒரு நாள் சந்திரோதய மானவுடனே தன்னந்தனியே அம்மாடத்தின் மிசை உலாவிவருகிறபோது முனிவர் கூறிய மந்திரத்தை நினைத்து, பெதும்பைப் பருவமாக இருக்கிறோமே யென்று கிஞ்சித்தேனும் யோசிக்காமல் ஒரு மந்திரத்தை உச்சரித்தாள். அந்த மந்திரம் சூரியமந்திரமாதலால், உச்சரித்தவுடனே அதற்குரிய மந்திர தேவதை ஓடிப்போய்ச் சூரியனைப் பற்றிப் "பிரதை என்னுங் கன்னிகை உம்மை வருந்தி அழைக்கிறாள் வாரும்" என்று இழுக்கச் சூரியன் திடுக்கிட்டு "ஆ! இதென்ன ஆச்சரியம்? பூலோகத்து ராஜகன்னிகை நம்மை அழைக்கவேண்டியதென்ன? அவளுக்கு இந்த மந்திரம் ஏது? இதென்ன முழு மோசமா யிருக்கின்றது" என்று யோசித்தான். அப்போது தனது ஞானதிருஷ்டியால் நோக்க அக் கன்னிகை இன்னாளென்றும் அவளுக்கு மந்திரங் கிடைத்த காரணம் இன்னதென்றும் நன்றாய் விளங்கவே "இதுவே ஊட்டிவைக்கும் வினை. நாம் அவசியம் போகத்தான் வேண்டும். போகாவிட்டால் இந்த மந்திரோபதேசஞ் செய்த முனிவருடைய சாபம் நேரிடும். மேலும், நமது ஸ்வரூபத்தைக் காட்டினால் இதுகாலம் பேதப்படுவதுமன்றி நமது வரவை யாவரு மறிவார்கள்" என்று நினைத்துத் தனது ஸ்வரூபத்தை மாற்றி வேதியர் வேடங்கொண்டு, அதி வேகமாக அந்த மந்திர தேவதையை அழைத்துக்கொண்டு கன்னிகையிடத்துக்கு வந்தான்.

கன்னிகை வேதியனாகவந்த சூரியனைப் பார்த்துத் திடுக்கிட்டு, உள்ளம் நடுங்கிச் சரீரம் வெயர்த்து, மெய்மயிர்ச் சிலிர்த்துத் தன்னைத் தானே மறந்து, சற்றுநேர மயர்ந்து பின்பு தெளிந்து, "ஆ! தெய்வமே! நானிருக்குங் கன்னிகா மடத்தின்மேல் ஆண் பக்ஷிகளும் பறக்கொணா தென்றால், இதோ கோடி சூரியப் பிரகாசம் போல் ஒளி வீசும் தேகத்தையுடைய ஒரு மஹாபுருஷர் கன்னிகா மடத்துக்கு வருகிறதுமன்றி என்னையே பார்த்து வருகிறார். இவர் யாவர்? பூலோகவாசியானால் நமது தந்தை வைத்திருக்கிற காவலைக் கடப்பது அருமை. சொர்க்கவாசி யாயிருப்பின் பூலோகத்து ஸ்திரீகளை நோக்கக் கூடாது. ஆதலால் வருகிறவர்கள் யாரோ"

வென்று ஐயுற்று நின்ருள். அப்போது சூரியபகவான் வந்து எதிரே நின்று கன்னிகையைப் பார்த்து "ஓ கன்னிகையே! நான் நெடிய கடல் சூழ்ந்த உலகத்திலுள்ள இருளை நீக்கிப் பலபொருளையும் விளங்கவைக்கும் பானு. இரவுக்கு விரோதியாகிய என்னை இந்த இரவில் நீ அழைக்கவேண்டிய காரணம் என்ன ?" என்று வினவ, கன்னிகை கரங்குவித்து நமஸ்காரஞ் செய்து, "ஓ சுவாமி! அடியேன் சிறுவயதாயிருக்குங் காலத்துத் தவசிகாமணியாகிய தூருவாச முனிவர் வந்தார். அவருக்குப் பணிவிடை செய்தேன். அவர் களிகூர்ந்து என்னை யருகிலழைத்து ஐந்து மந்திரங்களை யுபதேசித்து, அவைகளின் பெருமைகளையும் எடுத்துக் கூறி ஆசீர்வதித்துப் போயினர். அவைகளி லொரு மந்திரத்தை உச்சரித்துப் பார்த்தேன். தாங்கள் வந்தீர்கள்" என்று நடுங்கிக் கூறினுள். சூரியன் கன்னிகையை நோக்கி, "ஓ பெண்ணே! இந்த மந்திரத்தைப் பெற்றபோதே சொர்க்கத்தி லிருக்கும் திதி என்கிற ஸ்திரீயின் பெருமை எவ்வளவோ அவ்வளவு பெருமையை நீ வகித்தாய். மேலும் உனக்கு நல்ல காலம். ஆதலால் இப்போது என்னை அணைவாயாக" என்று கூறக் கன்னிகை திடுக்கிட்டு, "ஆ! தெய்வமே! இதென்ன ஆச்சரியம்? நாமோ பெதும்பைப் பருவத்தை யடைந்திருக்கிருேம். இவரோ தேவருள் சிறப்பான சூரியபகவான். இவர் நம்மை அணையும்படி வற்புறுத்துகிருர். நாம் மறுத்தாற் சாபம் நேரிடும்போ லிருக்கிறது. தூருவாச முனிவர் இம் மந்திரத்தாற் புத்திர சந்தான மடைவா யென்று கூறி யிருக்கிருர். மந்திரசக்தியால் வந்த இவரைக் கூடாமல் நீக்கிவிடுவோமானல் அம் முனிவராலும் சாபம் நேரிடும். கூடுவோமானுற் கற்புடைமைக்கு அழிவு வருதலுமன்றிக் கன்னிகை பிள்ளை பெற்றனளென்று பலர் நிந்திப்பார்கள். கற்புடைமையையும் நிந்தனையையும் நீக்கி முனிவர் கூறியபடி கூடுவோமென்றுலும், கலவிக்குரிய மங்கைப் பருவத்தை இன்னும் நாமடையவில்லை. இதற்கென்ன செய்வது?" என்று சிந்தித்து "காலமல்லாத காலத்தில் மந்திரத்தை யுச்சரித்தபடியால் அதனுல் வரும் கஷ்டத்தை நாமே அனுபவிக்கவேண்டியது" என்று தீர்மானித்துக்கொண்டு சூரியபகவானை நோக்கி, "ஓ சுவாமி! இப்போது தாங்கள் கூறியபடி கூடுவதற்கு நானே பருவகால மடையாதவளாயிருக்கிறே ஞதலால், இதற்கு வகையென்ன?" என்று வினவ, பானு "ஓ கன்னிகையே! கலவிக்குரிய பருவத்தை நாம் கொடுக்கிருேம்,

நீ அணைவாயாக" என்று கூறி மங்கைப் பருவத்தை அநுக்கிரகஞ் செய்தான். உடனே அக்கன்னிகை மங்கைப்பருவமடைந்து, தனக்கு வந்த மங்கைப் பருவத்தை நோக்கி வியப்புற்றுச் சூரியனை வணங்கி, "ஓ சுவாமி! பெதும்பைப் பருவமாயிருந்த என்னை மங்கைப்பருவ மாக்கினீர்கள். இனிப் புணர்வதற்குத் தடைசொல்லொணுது. தடைகூருமற் புணர்வேனுனல் உலகிலுள்ளோர் கற்பிழிவானவ ளென்று நிந்தை கூறுவார்கள். ஆதலால் இதற்கென்ன செய் வேன்?" என்ருள். சூரியபகவான் "ஓ பெண்ணே! நீ அதற் கஞ்சாதே. நான் சொல்வதைக் கேள். என்னை அணைந்தால் உடனே உனக்கு ஒரு புத்திரனுண்டாவன். அப் புத்திரனை ஒரு பேழை யில் வைத்துக் கங்கையில் விட்டுவிடு. கங்கை அச் சிசுவைக் காப் பாற்றிக் கரைசேர்ப்பாள். மேலும் இப்போது உனக்குக்கிடைத் திருக்கிற மங்கைப்பருவமு நீங்கி முன்போலப் பெதும்பைப் பருவத் தை அடைந்திருப்பாய். ஆதலால், அஞ்சாமல் என்னை அணைவா யாக" என்ருன். பிரதை அதற்குச் சம்மதித்துச் சூரியபகவானை அழைத்துப் பொற்பஞ்சணை மெத்தையி லிருத்தித் தானும் உள் ளும் புறமும் ஒத்து ஐந்துவித ஆலிங்கன முதலியவற்றை இயற் றிக் கூடிக் கலந்தாள். உடனே சூரியன் தனது கிருபா நோக் கத்தை இவள்மேற் செலுத்தித் தனதிடத்துக்குச் சென்ருன்.

கேளும் இராஜாதிராஜனே! இங்கே கன்னிகை கருப்பவதி யாகி ஒரு முகூர்த்தத்துக்குள் மூன்றுலகமும் புகழத்தகுந்த சிறப் பினை வகித்த ஒரு புத்திரனைப் பெற்று, "இப் புத்திரனை வைத் திருப்போமாகுற் சூரியோதய மானவுடனே பலரு மறிவார்கள். அத ஞல் நமக்கும் நமது தந்தையின் கீர்த்திக்கும் பழுது நேரிடும்" என்று தனக்குள் யோசித்து, ஒரு பேழையில் தன் வஸ்திரத்தி லொன்றை விரித்து, அதில் அச் சிறுவனை வளர்த்தி, பல தேவதை களைத் துதித்துக் கங்கையில்விட்டு அக் கங்கையையும் பலமுறை துதிசெய்து வணங்கித் தன் கன்னிகா மாடத்துக்கு வந்தாள். வந்தவுடன் மங்கைப்பருவமும் கருப்ப உற்பத்திக்குறியு மாறி முன்போற் பெதும்பைப் பருவத்தை அடைந்து, சூரியபகவானை அணைந்தது முதல் நடந்தவையெல்லாங் கனவுபோ லெண்ணிச் சுக மாக இருந்தாள். இங்கே பிரதையால் விடுத்த பேழை கங்கையிற் செல்லும்போது கங்கை அதிக மகிழ்வடைந்து, அச் சிறுவனுக்கு யாதொரு குறைவு முருதிருக்க அலைகளாகிய கையினுல் அப்

பேழையை யேந்தி அஸ்தினபுரத்துத் துறையருகில் விட்டனள். உதயத்தில் அத்தினபுரத்துக்கு அரசனாகிய திரிதராஷ்டிர மஹாராஜனுக்குச் சாரதியாகிய ரதையனும் அவன் மனைவி ராதையும் ஸ்நானஞ் செய்யக் கங்கைக்கு வந்து, அங்குள்ள பற்பல வேடிக்கைகளைப் பார்த்துக்கொண்டு நிற்கும்போது பேழையைக் கண்டு, ஆவல் கொண்டு கங்கையிலிறங்கி, அப் பேழையைக் கரையிற் கொண்டுவந்து திறந்து, அதிலிருக்கும் சூரியப் பிரகாசமான புத்திரனைப் பார்த்தவுடன் பெருதசெல்வம் பெற்றவர்போலாகி, புத்திரபாக்கியமில்லாத ரதையனும் அவன் மனைவியு மனமகிழ்ந்து, அப் புத்திரனை எடுத்து உச்சிமுகந்து, உள்ளங்கால் முத்தமிட்டு, அவனிருக்கும் சுந்தரத்தை நோக்கிப் பூரிப்படைந்து, "புத்திரனில்லை யென்று வருத்தமுற்றிருந்த நமக்குக் கங்காதேவியே புத்திரனைப் பாலித்தாள்" என்று அந்த அம்மனைப் பிரார்த்தித்து வந்தனை வழிபாடு செய்து, புத்திரனையும் பேழையையும் எடுத்து வந்து தன் வீடுசேர்ந்து, தானதருமங்களைச் செய்து, நல்ல சுப முகூர்த்தத்தில் நாமகரண மிடவேண்டுமென்று கருதி என்ன பேரிடலாமென்று யோசித்திருக்கிறபோது சூரியபகவான் ஆகாயவாணியை அழைத்து, "ஓ ஆகாயவாணி! என் வீரிய விர்த்தியிலுண்டாகிய சிறுவன் ரதையன் வீட்டி லிருக்கிறான். அச் சிறுவனுக்குப் பெயரிட யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். சீக்கிரம் நீ போய் அச் சிறுவனுக்குக் கர்னனென்று பெயர் கூறிவா" என்று அனுப்ப அவ்வாறே ஆகாயவாணி ரதையன் முதலிய சபையோர்கள் செவிக்குக் கேட்கும்படி சொல்ல, அதைக் கேட்ட ரதையன் வியப்படைந்து ஆகாயவாணி கூறிய படி கர்னனென்று பெயரிட்டு, வேதியர்களுக் கெல்லாந் தான தருமஞ்செய்து, மிகுந்த அன்புடன் அப் புத்திரனை வளர்த்து, நாலுவேதம் - ஆறுசாஸ்திரம் - அறுபத்துநாலு கலைக்கியான முதலியவற்றைக் கற்பித்து, வில்வித்தை யானை ஏற்றம் குதிரை ஏற்ற முதலியவுங் கற்கச்செய்தான்.

---

## பரசுராமராற் கர்னன் சாபம்பெற்றது

---

திரிதராஷ்டிரன் முதலானவர்களுக்கு பீஷ்மர் வில்வித்தை கற்பித்திருப்பதைக் கர்னனுணர்ந்து, பூர்த்தியாக அவ் வில் வித்தையைக் கற்க வெண்ணிப் பரசுராமமூர்த்தி யிடத்து வந்து

சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, "ஓ சுவாமி! அநாதையாகிய அடியேன் வில்வித்தையின்மேற் விருப்புற்றிருக்கிறேன். தாங்கள் என்னுசை நிறை வேறக் கிருபாநோக்கம் புரிந்தருள வேண்டும்" என்று பலவாறு துதிக்கப் பரசுராமமூர்த்தி ஆசீர்வதித்து, "நீ என்ன பிராமணனோ?" வென்று கேட்க, கர்னன் ஆமென்றறைந்தான். பரசுராமர் உடனே அவனைத் தன் சீடனாக அமைத்துக் கொண்டு தாங்கற்றிருக்கும் வில்வித்தை முதலியவற்றை யெல்லாங் குறைவில்லாமல் அவனுக்குக் கற்பித்துவருகிற காலத்தில், கர்னன் க்ஷத்திரியத் தன்மையை வெளிப்படுத்தாமற் பிராமணத் தன்மையாகவே யிருந்து, வித்தைகளையெல்லாங் கிரகித்து, நெடியகடலைக் கையிலடக்கி உட்கொண்ட அகத்திய முனியைப்போல் அதிக விரிவாயும் அருமையாயு மிருக்கின்ற தனுர்வேத சமுத்திரத்தைப் பரசுராம மூர்த்தியால் எளிதிற் கடந்து, திரிமூர்த்திகளும் வியப்புறத்தகுந்த வித்தைகளிற் சிறப்புற்றும் ஒன்றுமறியாத பேதையைப்போல் அபினயித்து, அந்தப் பரசுராம மூர்த்திக்குப் பயபக்தியோடு பணிவிடை செய்துகொண்டு வந்தான்.

ஒருநாள் பரசுராமமூர்த்தி தன் இளப்பைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு கர்னனை அழைத்து, அவனது தொடையின்மேற் சிரசைவைத்துச் சயனித்து நித்திரை செய்தார். அப்போது தெய்வ கதியால் இரத்தவாரி யென்கிற ஒரு புழுவந்து கர்னனுடைய தொடைச்சந்தில் நுழைந்து துளைத்தது. அதற்குக் கர்னன் அஞ்சாமல், தொடையை அசைத்தாற் குருவுக்கு நித்திரைபங்கம் வருமென்று யோசித்து அசையாமலிருந்துவிட்டான். அந்த ரத்தவாரி யென்கிற புழு விடாமற்றுளைக்கவே கர்னன் தொடையிலிருந்து ரத்தவெள்ளமுண்டாகிப் பரசுராமர் தேகத்தை நனைத்தது. பரசுராமமூர்த்தி எழுந்து ரத்தவெள்ளத்தைக் கண்ணுற்றுப் பிரமைகொண்டு, அக்கர்னன் தொடையையும் முகத்தையும் நோக்கும்போது கர்னன் முகம் இந்த ரத்தத்துக்குக் கிஞ்சித்து மஞ்சாமலிருக்கிற குறிப்பைப் பார்த்து, ஐயமுற்று, "ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்? இவன் பிராமணனாயிருப்பானானால் ரத்தத்தைக் கண்டவுடன் உடல் நடுங்குவான், இவன் சிறிதும் அச்சமும் நடுக்கமு மில்லாதிருக்கிறபடியால் இவன் க்ஷத்திரியனேயன்றிப் பிராமணனல்லன்" என்று தீர்மானித்து அதிக கோபங்கொண்டு, "அடா கர்னா! நீ யார்? உண்மையை வெளிப்படுத்து" என்று வினவ, கர்னன் பதிற்சொல்ல நாவெழா

மல் மௌனமாயிருக்க, பரசுராமர் மிகவுஞ் சினங்கொண்டு "அடா கர்ணா! இந்த ரத்தத்தைக் கண்டு சற்று மஞ்சாம லிருந்தமையால் நீ க்ஷத்திரிய னென்பதற்குச் சந்தேகமில்லை. நானோ பீஷ்மன் முன்னிலையில் க்ஷத்திரியருக்கு வில்வித்தை கற்பிக்கிறதில்லை யென்று சபதம் செய்திருந்தேன். அச்சபதத்தைக் கெடுத்து என்னிடத்து வில்வித்தையைக் கற்றுக் கொண்டமையால் நீ என்னிடத்திற் கற்ற வில்வித்தை நல்ல சமர்முகத்தில் உதவாமற் போகக்கடவது" என்று சாபமிட்டார். கர்னன் அச்சாபத்தை ஏற்று மிகுந்த வருத்தமுற்றுத் தன் அரண்மனை சேர்ந்து வாழ்ந்திருந்தான்.

## குந்திதேவி மணம்

இங்கே குந்திபோஜன் பெற்ற குந்திதேவியாகிய பிரதை, பெதும்பைப் பருவங்கடந்து மங்கைப்பருவ மடைந்தாள். இவளை மிகுந்த அன்புடன் வளர்த்து வருகிற சூரசேனன் மங்கைப்பருவ மடைந்த தன் பெண்ணைக் கருதி சுயம்வரஞ் சாற்றி, ஐம்பத்தைந்து தேசத்தரசர்களுக்குத் திருமுக மெழுதித் தூதுவர்கள் கையிற் கொடுத்து அனுப்பினான். தூதுவர்கள் அந்தந்த அரசர்களுக்குத் திருமுகங் கொண்டுபோய்க் கொடுக்க, அத்திருமுகத்தின் கருத்தை யுணர்ந்த ஒவ்வொரு அரசர்களுந் தங்கள் தங்கள் ரதகஜதுரகபதாதியாகிய நால்வகைச் சேனையோடும் சூரசேனன் நகரத்துக்கு வந்தார்கள். பீஷ்மரும் அத்திருமுகத்தை யுணர்ந்து, பாண்டுராஜனை அழைத்துக் கங்கை முதலிய தீர்த்தங்களினால் ஸ்நானஞ் செய்வித்து, அங்கு அவனுக்குத் தானே மணக்கோலமுஞ் செய்து, நால்வகைப் படைகளுஞ் சூழ்ந்துவர அவனை யழைத்துக் கொண்டு சூரசேனமஹாராஜன் நகரத்துக்கு வந்தார். சூரசேன மஹாராஜன் வந்த அரசர்களுக் கெல்லாந் தகுந்த மரியாதையைச் செய்து விடுதிவிட்டு, சந்திரபலந் தாராபலங் கூடிய காலவேளையில் தன் மகளாகிய குந்திதேவியைக் கங்கை முதலிய தீர்த்தங்களினால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடை ஆபரணங்களினால் அலங்கிரதஞ் செய்தான்; பின்பு அரசர் சபைக்கு வருவித்தான். வந்திருக்கிற அரசர்களெல்லாரும் குந்திதேவியினது சௌந்தரியத்தைக் கண்டு மிகுந்த ஆச்சரியங்கொண்டிருந்தார்கள். குந்திதேவிக்குத் தாதிகள் அந்தந்த அரசர்கள் பெயரையும் தேசத்தையும்

பெருமையையும் எடுத்தோதிப் பாண்டுமஹாராஜன் அருகில் வந்து, "ஓ அம்மணி! இளஞ்சூரியனைப் போற் பிரகாசிக்கிற இவ் வரசன் சந்திரவமிசத்தி லுதித்தவன். அத்தினபுறத்துக் கதிபன். பாண்டு வென்னும் பெயரை யுடையவன். அரசருள் இராஜ சிங்கம்போன்றவன்" என்று கூறக் குந்திதேவி பாண்டுமஹாராஜ னைத் திருந்தநோக்கி, கையிலிருக்கும் பூமாலையை அப் பாண்டு மஹாராஜனது தோளில் வீசி வணங்கினாள். உடனே சூரசேனன் வேதவேதியர்களை அழைப்பித்து, மகளையும் மருமகனாகிய பாண்டு ராஜனையும் மணவறைபி லிருத்தி, நல்ல சுபமுகூர்த்தத் தில் அங்கு வந்துள்ள சகலதேயத் தரசர்களும் வியப்படைய மாங்கல்யத்தைத் தரிப்பித்து, அக்கினிபகவான் திருப்தி அடைய ஹோமமுதலிய சடங்குகளையு நிறைவேற்றினான்.

---

## மத்ராதேவி மணம்

---

அப்போது வந்திருந்த அரசருள் மத்திர தேசாதிபதி எழுந்து சூரசேனன் முதலான அரசர்களை நோக்கி, "ஓ அரசர்களே! நான் செய்யும் விண்ணப்பத்தை அங்கீகாரஞ் செய்ய வேண்டும். நான் மிகவும் அருமையான தவஞ்செய்து பெற்ற என் குமாரத்தி யாகிய மத்ராதேவியை இப் பாண்டு மாஹாராஜனுக்கு விவாகஞ் செய்துகொடுக்க விருப்பமுடையவனாக இருக்கிறேன். அம்முகூர்த் தம் நிறைவேறுகிற பரியந்தம் யாவரும் இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்" என்று கூறித் தன் குமாரத்தியை அழை த்து, நல்ல கங்கை முதலிய தீர்த்தங்களினால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடையாபரணங்களினால் அலங்காரஞ் செய்து மணப்பந்தலுக்கு அழைத்து வந்து, பீஷ்மர் முதலானவர்கள் களிப்புறக் கான்னிகா தானஞ் செய்து, நல்ல சுபமுகூர்த்தத்திற் பாண்டுராஜனால் மாங்கல்யந்தரிப்பித்து, வேதியர்கள் மகிழ்வெய்தத் தானதருமங் களைச் செய்து, வந்த அரசர்களுக்கு விருந்திட்டு, அவரவர்கள் தங்கள் தங்கள் இருப்பிடம் போய்ச் சேர விடை கொடுத்தனுப் பினான். இவ்வாறு எல்லாக் காரியங்களும் அமைதியாக நிறை வேறியபின்பு பாண்டுராஜன் குந்திதேவி மத்ராதேவி என்னும் இரண்டு தேவியரை ரதத்திலேற்றி, பீஷ்மருடனே தனது நகரம் போய்ச் சேர்ந்து, பட்டணத்தை வலமாக வந்து, குடி படை முத லியவைகள் மகிழ்வெய்த விருந்துடன் வெகுமதி செய்து, பூமிப்

பிராட்டி கமலைப்பிராட்டி சமேதனாகிய திருமால்போற் குந்தி தேவி மத்ராதேவி சமேதனாகிய பாண்டுராஜன் இன்பமுடன் வாழ்ந்து வருகிறான். அக்காலத்தில் ஒரு நாள் வேட்டையாட யத்தனித்து, மந்திரிகளோடு மற்ற நால்வகைச் சேனைகளையும் வில்லியர் வலைஞர் வேடர்களையும் பிரயாணமாகும்படி கட்டளை யிட்டுத், தான் அந்தப்புரத்துட் சென்று, ஸ்நானம் செய்து போஜன மருந்தி, வஸ்திராபரணங்களை யணிந்து, வேட்டை முடிதரித்து, வில்லம்பு முதலிய படைகளை யெடுத்துக்கொண்டு, மனைவியரிடத்துச் சென்று "நான் வேட்டையாடக் காட்டிற்குச் செல்கிறேன், எனக்கு விடை கொடுங்கள்" என்று கேட்க மனைவிய ரிருவரும் அரசனை வணங்கி, "ஓ சுவாமி! எளியேமும் காட்டி லுள்ள விநோதங்களைப் பார்க்க நெடுநாளாக விருப்பங் கொண் டிருக்கிறோம். இன்றையத்தினம் தாங்களே செல்லுகிறபடியால் அடியேமும் வருகிறோம்" என்றனர். அரசன் அதற் கிணங்கி பீஷ்மர் பரிமளகந்தி இருவருடைய உத்தரவுபெற்று இரண்டு மனை வியரையும் அழைத்து ரதத்திலேற்றிக் கொண்டு நகரத்தைவிட்டு வெளிப்பட்டான். அதற்குள் நால்வகைச் சேனைகளோடு மந்திரி கள் வந்து சூழ்ந்தார்கள்.

## அமுதந்திமுனிவரால் பாண்டு சாபம்பெற்றது

அப்பால் யாவரும் ஒன்றாகத் திரண்டு சகல வாத்தியங்களும் கடல்போல் ஒலிக்க ஆரவாரத்துடனே காட்டிற் சென்று, யானை - புலி - கரடி - சிங்கம் - கண்டாமிருகம் - மான் - பன்றி - முயல் முதலியவற்றைக் குத்தியும் வெட்டியும் அடித்தும் கிழித்தும் நானாவிதமான விலங்கினங் கலங்கி உயிர்சோர வேட்டை யாடுகிற போது, ஒரு பெரிய காண்டாமிருகம் அரசன் கண்ணுக்குத்தோன்றி மறைந்தது. அரசன் அதைக் கண்டு வதைசெய்ய வேண்டு மென்று பின்றொடர்ந்து வருகிற போது, வழியில் அமுதந்தி என்னு முனிவர் தாமும் தம் மனைவியுமாக அநேககாலம் தவத் திலிருந்து ஒருநாள் காமத்தின்மேல் கருத்தைச் செலுத்தித் தன் மனைவியை அழைத்தார். மனைவி அக்குறிப்புணர்ந்து, "ஓ சுவாமி! அடியேன் கருத்தும் காமத்திற் சென்றிருக்கின்றது. ஆனால் ஒரு

விண்ணப்பம். இக்காம மென்பது உலகிலுள்ள எல்லாவுயிர்க்கு முள்ளதுதான். இவ்வுயிர்களில் எவ்வுயிர் அதிகக் காமத்தையுடையதோ அதை யுரைத்தால் அவ்வுருவங்கொண்டு புணரலாம். அப்போது இன்ப மதிகரிப்பது மன்றிப் பகற்காலத்துக்கும் அஞ்ச வேண்டிய தில்லை" என்று பகர்ந்தனள். முனிவர் தமது மனைவி கூறியதற்கு மகிழ்வடைந்து, "ஓ பெண்கள் நாயகமே! எல்லாவுயிர்களிலும் மான்ஜாதி அதிகக் காமத்தை யுடையதாதலால் அந்த மானுருவ மெடுத்துப் புணரலாம்" என்று கூற இருவரும் அவ்வுருக் கொண்டு புணர்ந்திருந்தார்கள். பாண்டுராஜன் அஃதுணராமல், தனக்கெதிரில் மான் அகப்பட்டதென்று கருதித் தன் வில்லில் தொடுத்திருக்கிற அம்பை யெய்தினன். அந்த அம்பானது குறி பிசகாமல் ஆண்மானின்மேற் பட்டுருவிற்று. உடனே முனிவர் தம் உருவங்கொண்டு, மிகுந்த கோபத்துடன் அரசனை நோக்கி, "ஓ அரசனே! நீ சந்திரவமிச தராபதியாயிருந்தும் கெடுதி சம்பாதித்துக்கொண்டாய். வேட்டையாடுகிறபோது எதிர்ப்பட்ட மிருகங்களைக் கொல்லுகிறதென்று விதியிருந்தாலும், புணர்ச்சியிலிருக்கும் உயிர்களைக் கொல்லுதல் புண்ணியமல்ல. இவ்வாறு மநு சாஸ்திரம் உரைத்திருக்க, அதை யுணர்ந்தும் கலவியிலிருந்த என்னுயிரை உன் அம்பினாற் கொள்ளை கொண்டாய். ஆதலால், நீ உன் மனைவியரோடு கூடினால், அக்கணமே உன்னுயிர் நீங்கக் கடவது" என்று சாபமிட்டுப் பூமியில் விழுந்து இறந்தார். அவர் மனைவி கணவனிறந்ததைக் கண்டு உடனே தானும் உயிரைவிட்டாள். அரசன் இச்செய்கையை நோக்கி, "அடடா! மோசம் வந்தது; நாம், முனிவர் மான் வேடம் பூண்டிருக்கிறார் என்பதை உணராமல் சுபாவமான மானென்று நினைத்து அம்பை எய்தோம். நம்மா லிரண்டுயிர்கள் சேதமாயின. இதற்கென்ன செய்வது" என்று ஏங்கி மனஞ்சலித்தவனாய்த் திரும்பிச் சேனைகளோடு வந்து கலந்து மந்திரிகளை நோக்கி, "ஓ மந்திரிகளே! இம்மை இன்பங்களில் முக்கியமான இன்பம் காமம். அக்காமத்துக்கு ஒரு முனிவராலே அபாத்திரனானேன்" என்று அவ்வரலாற்றைக்கூறி, "இனி நான் அரசினுக் குரியவனாயிருந்தும் என்ன பயன்? துறவறத்தை அடைந்து தவத்தைச் செய்து நல்லகதி யடைகிறேன். நீங்களெல்லாரும் நகரத்துக்குச் சென்று, என் மூதாதையாகிய பீஷ்மருக்கும் இன்னுமற்றவர்களுக்கும் என் விருத்தாந்தத்தைத் தெரிவியுங்கள்" என்று கட்டளையிட்டான். மந்திரி முதலானவர்கள் அதைக்கேட்டுக்

கனவருத்தமடைந்து, நால்வகைச் சேனையோடும் நகரம் வந்து, பீஷ்மர் முதலிய அரசர்களை வணங்கி, பாண்டுராஜனுக்கு நேரிட்ட அபாக்கியத்தைச் சொன்னார்கள். பீஷ்மரும் பெரியராஜனும் பரிமளகந்தியும் மகா துக்கத்தோடு மிகுந்த வருத்தமடைந்து, யாதொன்றுந் தோன்றாம லிருந்துவிட்டார்கள்.

இங்கே பாண்டுராஜன் இரண்டு மனைவியரையு மழைத்துத் தனக்கு நேரிட்ட சாபத்தின் வரலாற்றைச் சாற்றி, "இனி நான் தவத்துக் குரியவனே யன்றி உங்களிருவர் போகத்திற் குரியவனன்று. உங்கள் தாய்வீடுசேர மனமிருந்தால் சேரலாம். அல்லது உங்கள் மாமிவீடு சேர மனமிருந்தால் போய்ச் சேர்ந்திருக்கலாம். ஆனால் உங்கள் கருத்தென்ன?" என்று வினவ, மனைவியரிருவரும் இவ் வசனங்களைக் கேட்டவுடன் செவியில் நாராசத்தை யூற்றியதுபோல் மனவருத்தமடைந்து, அடியற்ற கூந்தற் பனைபோல் அரசன் திருவடியில் விழுந்து, "ஓ அரசரேறே! என்ன வார்த்தை உரைத்தீர்? கணவனைவிட்டு உயிர்வைத்து வாழ்வதைவிட இறப்பது மிகுந்த நலமென்று ஸ்திரீகளுக்கு விதியிருக்க, உம்மைவிட்டுப் பிரிந்து நாங்கள் உயிரோடு வாழமாட்டோம். தேவரீருக்குப் பணிவிடைப் பெண்களாகவேனு மிருப்போமே யல்லது தங்களுக்குப் பிரியமாகிய நாங்கள் ஒருகாலும் பிரியோம்" என்று இயம்ப அரசன் அம் மனைவியர் கருத்துக் கிசைந்து, அவ் விருவரையு மழைத்துக்கொண்டு ஒரு வனத்திற் சென்று, மணி மகுடத்தை நீக்கிச் சடைமுடி தரித்து, ஆடை ஆபரணங்களை நீக்கிக் காவி காம்பர தண்டு கமண்டல தாரியாகி, தவஞ்செய்திருக்கும் பெரியோர்களை அடுத்து உபதேசம் பெற்று, தவத்தாலடையும் சிலாக்கியமான பாக்கிய மெதுவோ அதனை யடையவாளேந்திய கரத்தால் ஓமதிரவியங்களை யேந்திச் சிலநாள் ஓமத்தை வளர்த்தும் - சிலநாள் ஜலத்தில் நின்றும் - சிலநாள் ஒருகாலூன்றியும் - சிலநாள் பஞ்சாக்கினி மத்தியிற் பொருந்தியும் தவஞ்செய் திருந்தான். இத்தன்மையா யிருக்கிற காலத்திற் கருத்தை பிரமத்தினிடத்திற் செலுத்தித் தவஞ்செய்து திவ்யக் கியானத்தை யடைந்த மகாமுனிவர்க ளெல்லாரும் வந்து, தவஞ்செய்கிற பாண்டுராஜனது மனவுறுதியைக் கண்டு, மிகுந்த மகிழ்வையும் வியப்பையு மடைந்து, அப் பாண்டுராஜனுக்கு வேதத்தினுட் கருத்தை விளங்க வுரைக்க, பாண்டுராஜன் நாளுக்கு

நாள் தவத்தில் அதிக முயற்சியை யுடையவனுகி, தவத்தாலடையும் பயனுகிய மனப்பகையை வென்று அறிவின் மயமாக நின்ருன்.

ஒருநாள் அவன் வடபுறத்திலிருக்கும் சிரிங்க வனத்துக்குச் செல்லக் கருதி மனைவியரை விட்டுத் தனியே சென்று, அவ் வனத்திலிருக்கும் சதானந்த முனிவர் முதலியோர்களைக் கண்டு வணங்கி நின்ருன். சதானந்த முனிவரும் இன்னுஞ் சில முனி வர்களும் ராஜமுனிவனைக் கண்டு மகிழ்வடைந்து பல ஆசிகள் வழங்கி, அரசனுக இருந்தும் தவசிரேஷ்டனுகிய தன்மையை நோக்கிச் சகல கலைக்கியானுதி நுட்பங்களையும் மஹா மந்திரங் களின் ரகசியத்தையும் போதித்தார்கள். பாண்டுராஜன் அம் மஹாமுனிவர்கள் கூறிய கருத்தை யுட்கொண்டு, மறுபடியு முன் போலத் தவத்திலிருந்தான். இவ்வாறு சிலநாட் சென்றபின்பு ஒரு நாள் சதானந்தர் - வசிஷ்டர் - வால்மீகர் - விச்வாமித்திரர் முத லான முனிவர்கள் கைலாயத்தைத் தரிசிக்கக்கருதி வடதிசையை நோக்கிச் செல்லும்போது, வழியில் பாண்டுராஜன் தவஞ்செய்கிற வனத்துக்கு வந்து அப்பாண்டுராஜனைக் கண்டார்கள். பாண்டு ராஜன் திடுக்கென் றெழுந்து, வந்தவர்களுக்கு வந்தனை வழிபாடு செய்து பயபக்தியோடு எதிர்நின்ருன். முனிவர்கள் பாண்டு ராஜனுக்கு ஆசிகள் வழங்கி "ஓ ராஜமுனியே! நாங்கள் கைலா யத்தைத் தரிசிக்கக்கருதி வடதிசை நோக்கி வந்தோம். உம்மை யும் பார்த்துப்போவோமென்று இங்கடைந்தோம்" என்றுரைக் கப் பாண்டுராஜன் முனிவர்களை வணங்கி "ஓ சுவாமிகளே! அக் கைலாயத்தை அடியேனுந் தரிசிக்க வேண்டுமென்னும் அபேக்ஷையுள்ளவனு யிருக்கின்றேனுதலால் நானும் வருகிறேன்" என்று இயம்பி அவர்களைப் பின்றொடர்ந்து சென்ருன். அம் முனிவர்கள் அதற்கு ஒன்றுஞ் சொல்லாமற் கைலாயத்தருகிற் சென்று நின்று ராஜனைப்பார்த்து, "ஓ ராஜமுனியே! எங்களு டன் இதுவரைக்கும் பின்றொடர்ந்துவாச் செய்தது நீ செய்த தவப்பயன். இனி நீ வரக்கூடாது. ஏனென்ருல், உலகத்தில் அளவற்ற புண்ணியத்தைச் செய்தபோதிலும் புத்திரனில்லாத வர்க்குப் புண்ணியலோகமில்லை. ஆதலால் உனக்குப் புத்திர னில்லை. நீ கைலாயத்தைத் தரிசிப்பதற்கு யோக்கியனல்லன்" என்று மறுக்கப் பாண்டுராஜன் மனங்கலங்கி அம்முனிவர்களுக்கு வந்தனஞ்செய்து "ஓ சுவாமிகளே! புத்திர னில்லாவிட்டாற் புண்

ணியலோக மில்லையென்று கட்டளையிட்டீர்கள். அஃதுண்மை தான். அடியேன் புணர்ச்சிசெய்தால் மரணமடைவதாகச் சாபம் நேரிட்டிருக்கின்றது. எளியேன் என்னசெய்வேன்? தங்களு டைய கிருபையிருந்தால் எல்லா நலங்களையும் ஒருநொடிப் பொழுதி லடையலாம். ஆதலால் அடியேன்மீது கிருபைவைத்துக் கைலாயத்தைத் தரிசிக்க அருள்புரிய வேண்டும்" என்று வேண்ட முனிவர்கள் அரசனைநோக்கிப் புன்னகைபுரிந்து சொல்லுகிறார்கள்.

## பாண்டுவுக்கு முனிவர் தருமசந்தானவிதி யுரைத்தல்

"ஓ ராஜமுனிவரே! நாங்களே வேதவிதியை விலக்குவ மானால், உலகிலுள்ளவர்கள் அவ்வேதத்தை மதிப்பார்களா? வல் லமை யிருக்கின்றதென்று மீறி நடப்போமானால், எளியவர்க்காசை சொல்லிப் பலதரந் தன்னிடத்துக்கு வரும்படி செய்து பின்பு ஓர் உதவியுஞ் செய்யாமற் கடிந்து இல்லையென்று கைவிரிப்பவன் எக்கதியடைவானோ அக்கதி எங்களுக்கும் வருமாதலால், நாங்கள் கூறுவதைக் கேள். புணர்ச்சிசெய்தால் மரணமடைகிறதென்று உனக்குச் சாப மிருக்கிறபடியால், தேவர் அல்லது முனிவர் இவ் விருதிறத்தாரி லொருதிறத்தாராற் புத்திரசந்தானம் பெற்றுக் கொள்ளலாம். வேதத்தில் தருமசந்தானம் பெறலாமென்று விதி யிருக்கின்றது. இவ்விதிப்படியே முன்னம் பரசுராமரால் நாச மடைந்த சூரியகுலம் முனிவர்களால் உலகில் விருத்தியாயிற்று. இன்னும் அநேக அநுபவமிருக்கின்றன. அவைகளைக் குறித்து உதாரணங் கொடுக்கவேண்டுவதில்லை. ஏனென்றால், உங்கள் பரம்பரையே போதுமான திருஷ்டாந்தமா யிருக்கின்றது. ஆத லால் நீ போய்ப் புத்திரசந்தானம் பெற்றுக்கொள்" என்று கூறி, இன்னுமவன் மனந்தேறும்படி பல அநுபவங்களையும் பற்பல விதிகளையும் தக்கபடி உபதேசித்து, அவ்வரசன் பின்றொடரா திருக்கத் தங்கள் சக்தியால் உருவத்தை மறைத்து அந்தரத்தான மாகச் சென்றார்கள். பாண்டுராஜன் மிகுந்த வருத்தத்தோடு முன்பு தவஞ் செய்திருந்த இடத்தை யணுகி, அங்கு தனித்திருக் கின்ற தன் இரண்டு மனைவியரையும் நோக்கி, "ஓ துணைவியர் களே! முனிவர்களெல்லாரும் கைலாயத்தைத் தரிசிக்கச் சென்

ரூர்கள்; யானும் அவர்களோடு சென்றேன். கைலாயத்தருகிற் போனபோது அம்முனிவர்கள் என்னைநோக்கி உனக்குப் புத்திரனில்லையாதலால் நீ கைலாயத்துக்கு வரக்கூடாது" என்று மறுத்து, 'தருமசந்தானமாகிலும் பெற்றுக்கொள்' என்று உத்தரவுகொடுத்து மறைந்துவிட்டார்கள். நான் இந்தப்பூதலத்திற் பிறந்து என்ன துர்ப்பாக்கியத்தை அடைந்தேன்? என்னைப் போற் பாவி உலகிலில்லை. நீங்களிருவரும் என் கருத்தின்படி நடந்தீர்களானால் அப்போது உலகிலுள்ள எல்லாப் பாக்கியத்தையும் பெறுவதுமன்றி, மேலான புண்ணியலோக வாழ்வையும் அடையலாம். அக்கருத் தென்னெனில், கோதானம்-பூதானம்-கன்னிகாதானம் - வஸ்திரதானம் - அன்னதானம் - சொர்னதான முதலிய தானங்களையும் இரப்போர்க்குக் குறிப்பறிந்தீதல் நல்ல விரதங்களை அநுட்டித்தல் அநேக யாகங்களைச் செய்தல் முதலிய சற்கருமங்களையும் இடைவிடாது செய்து வந்தாலும், ஒருவராலுங் கற்றுக்கொள்ளக் கூடாத மாதுரியத்தையுடைய மழலைச்சொல்லைப் பொழிந்து மார்பின்மேலும் தோளின்மேலும் ஏறி விளையாடிப் பிரியமானசொல்லாற் பிறர்மனதையு முருகச்செய்யும் ஒரு புத்திரபாக்கிய மில்லாவிட்டால், அது எல்லாபக்கியமும் நிறைந்து திருவிளக்கில்லாத வீட்டை நிகர்க்கும். ஆதலால் நீங்கள் மனமகிழ்ந்து யாரையாவது கூடிப் புத்திரனை யளித்தால் எனக்கு அதிகநல முண்டாகும். உங்களுக்குக் கணவனிருக்க மற்றொருவரை நான் சேரச்சொல்லுகிறே னென்பதில் ஐயமும் வருத்தமும் வேண்டுவதில்லை. முன்னம் பரசுராமரால் நாசமடைந்த சூரியவமிசம் அவ்வம்ச பட்டத்தரசிகளுக்கு ஆசிரியராகிய முனிவராற்செய்த கர்ப்பதானத்தினால் விருத்தியாயிற்று. இஃதன்றி மற்றோரரசனாகிய கன்மாடபாத னென்போன் தன் குருவாகிய வசிஷ்டரால் ஒரு புத்திரனைப் பெற்றுக்கொண்டான். பலிச்சக்கரவர்த்தி தீர்க்கதமனாற் புத்திர பாக்கியத்தை அடைந்தான். கேகய தேசத்து அரசன் சுரதன் அவன் பத்தினி சுரதசேனை. இவ்விருவரும் புத்திரனில்லாமற் பெரியோரைக்கொண்டு மூன்று புத்திரரைப் பெற்றுக்கொண்டார்கள்.

இவையன்றியும் உத்கிர்ஷ்டமான புத்திரர் ஆறுபேருண்டு. அவர்கள் யாரெனில், அவுரசன் - க்ஷேத்திரசன் - தத்தன் - குறித்திமன் - கூடசன் - அபவிந்தன் என்னு மிவர்களாம். இவர்களுள் -

பெண்ஜாதியிடத்திற் பிறந்தவன், அவுரசன். புருஷன் வமிசத்தில் மூத்தவருக்குப் பிறந்தவன், க்ஷேத்திரசன். சுவீகாரம் பெற்றுக் கொள்ளப்பட்டவன், தத்தன். தாய்தந்தை யில்லாமல் தன் ஞஸ்தியைக் கொடுத்து வளர்த்துக்கொள்ளப் பட்டவன் குறித் திமன். தன்பத்தினி தன் வமிசத்தாருடன் சேர்ந்து பெற்ற பிள்ளை, கூடசன். தாயும் தந்தையும் வளர்க்க நிர்வாகமில்லாமற் போட்டுவிட வளர்த்துக்கொள்ளப் பட்டவன், அபவிந்தன். இப் படியாவது ஆறு பிள்ளைகளைப் பெற்றுக்கொள்ள வேண்டும். இதற்கு வழியில்லாவிட்டால், நிகிர்ஷ்டமான பிள்ளைகள் ஆறுபேருண்டு அவர்கள் யாரெனில் கரனீனன் - சகோடகன் - பிறிந்திமன் - பவ னற்பவன் - சுயந்தத்தன் - சவுத்திரன் என்னு மிவர்களாம். இவர் களுள் கன்னிகை யீன்ற பிள்ளை கரனீனன். கல்யாணம் பண்ணும் போது கர்ப்பமாயிருந்து பெற்றபிள்ளை, சகோடகன். மதாபிதா விற்றுப்போட வாங்கி வளர்த்த பிள்ளை, பிறித்திமன். புனர்விவா கம் பண்ணிப் பெற்ற பிள்ளை, பவனற்பவன். ஒருவனுக்குப் பிள்ளை யென்று வந்து சரணம் புகுந்தவன் சுயந்தத்தன். பெண் வயிற்றிற் பிறந்து சொந்த பிள்ளைக்குச் சரியானவன் சவுத்திரன். இந்த ஆறுவித புத்திரசந்தானமாவது பெறவேண்டுமென்று வேத முறைபிடுகின்றது. எனக்கு வேறு வழியில்லை. நீங்கள் தடை கூறுமல் எந்த முனிவரையாவது கூடிப் புத்திரனைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று வேண்டினன். இவ் வசனங்களைக் கேட்ட இரண்டு மனைவியரும் அனலில் வீழ்ந்த அரவிந்த மலர்போல் வாடி, கணவன் திருவடியில் விழுந்து எழுந்து நின்று, "ஓ மஹாநுபாவா! நீர் வழங்கிய சொற்களை நிதானிக்குமளவில், மானங்கெட்டாற் கெடுக புத்திரனுண்டானுற் போதுமென்று நினைக்கிறதாய்த் தோற்று கிறது. இது தகுதியா? அவ்வாறு நாங்கள் செய்யலாமா?" என்று மறுக்க அரசன் மனைவியரை நோக்கி "புண்ணியவதிகளே! எனக் கில்லாத மானமும் ஈனமும் உங்களுக்கு வந்ததென்ன? கணவ னொரு கட்டளையிட்டால் அது கெடுதியா யிருந்தபோதிலும் அக் கட்டளைக் குட்பட்டு நடப்பது கற்புடைய மாதர்களி னிலக்கணம். நானே கெடுதியான கட்டளையை உங்களுக்கு இடவில்லை. தர்மத் தைப் போதித்து அதன்படி நடக்கச் சொன்னல் ஏன் மறுக்கிறீர் கள்? நான் கூறுவது பழுதல்ல. நானும் என் தமையன் திருதராஷ் டிரனும் தம்பி விதுரனும் என் தந்தையாகிய சித்திரவீரியனுடைய புத்திரரல்ல. எங்கள் வரன்முறையைச் சொல்லுகின்றேன் கேளுங்

கள்" என்று வேதவியாசரால் தாங்கள் வந்த வரலாற்றை ஆதியோடந்தமாகச் சொன்னான்.

## தருமன் உற்பவம்

அதுகேட்ட குந்திதேவி கணவன் சொல்லை மறுப்பது தகுதியல்லவென்று கருதி, "முடித்தாலும் நல்ல மலரை முடிக்கவேண்டும். ஆதலால், யாரைச் சேர்ந்து புத்திரபாக்கியம் பெறலாம்" என்று தனக்குள் ஆலோசித்திருக்கிற தருணத்தில், தூருவாசர் தனக்கு உபதேசித்த திவ்விய மந்திரங்களை நினைத்துக்கொண்டு கணவனை வணங்கி, "ஓ மஹானுபாவா! எளியேன் ஒரு விண்ணப்பம் செய்கிறேன். அது தங்கட்கு உத்தமமாயிருந்தால் அவ்வாறு செய்வேன். அதாவது நான் சிறுவயதாயிருந்தகாலத்தில் தூருவாசருக்குப் பணிவிடைப்பெண்ணாக இருந்தேன். அவர் யான் பயபக்தியுடனே செய்துவரும் பணிவிடைக்கு மகிழ்ந்து சில மந்திரங்களை உபதேசித்தார். அம்மந்திரங்களின் மாட்சிமை யென்னவென்றால் எந்தத் தெய்வத்தை நினைத்து மந்திரத்தை யுச்சரிக்கின்றேனோ அந்தத் தெய்வம் வந்து என்னைக் கூடி எனக்குப் புத்திரபாக்கியத்தைக் கொடுக்கும். அவ்வாறு செய்வது தங்களுக்குச் சம்மதமா?" என்று கேட்க, இவ்வசனங்களைக் கேட்ட பாண்டுராஜன் மகிழ்ந்து "ஓ! பெண்கள் நாயகமே! இப்போது நீ கூறிய வசனமெவ்வாறிருக்கிற தென்றால், சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பெய்தா லெவ்வளவு இனிப்பைக் கொடுக்குமோ அவ்வளவினிப்பைக் கொடுக்கின்றது. அவ்வாறு செய்வது மிகவும் உத்தமம். எனக்கு எல்லாவற்றினும் இதுவே சிறந்தது. அப்படியே செய்வாயாக." என்று கட்டளையிட்டான். அதற்குக் குந்திதேவி ஒத்துக்கொண்டு, பர்னசாலையிற் சென்று, இராஜ அரண்மனையிலிருக்கும் பள்ளியறைபோற் புட்பங்களால் அறையொன் றலங்கரித்து, அந்திவேளையில் நல்ல தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, ஆடை ஆபரணங்களை நிரம்பவணிந்து, மீண்டும் பர்னசாலையிற் புகுந்து, தூருவாசரைத் தியானித்து, அவர் கூறிய மந்திரங்களில் ஒன்றை உச்சரித்து யமனை நினைத்தாள். உடனே மந்திர தேவதைகள் விரைந்துச் சென்று யமனைச் சூழ்ந்து, "ஒரு ராஜ கன்னிகை உம்மை அழைக்கிறாள், வாரும்." என்று பற்றி இழுக்க, யமன் மந்திரதேவதைகளைக் கண்டு வியப்புற்று, அம்மந்திர தேவதைகளின் கருத்தின்படி பூலோகத்தி

கிறங்கி, குந்திதேவி யிருக்கிற பர்னசாலைக்குட் புகுந்தான். குந்தி தேவி அவனை எதிர்கொண்டு வந்து அழைத்துப்போய் மலரணையி லிருத்தி, சோட உபசாரமுஞ் செய்து, யானை மருப்பையும் கனகப் பொருப்பையும் வென்று வெற்றிபெற்ற முற்றுமுலையை யமனது மார்பூடுருவ அழுத்திப் புல்லினாள். யமன் சற்று ஆலோசித்து, "ஸ்திரீகள் வலிய அணைய யத்தனித்தால் யாராயிருந்த போதிலும் தடைகூறுமற் புணரவேண்டுமென்று வேத முறைபிடிகின்றதினால், இனி நாம் தடை சொல்லொணாது" எனக் கருதி அதிக மகிழ்வை யடைந்து, குந்திதேவியை இறுகத் தழுவி, ஆலிங்கன முதலிய புறத் தொழிலையும் சண்டவேக முதலிய அகத்தொழிலையும் புரிந் தணைந் தான். உடனே யமனது வீரியவிர்த்தியாற் குந்திதேவி வயிற்றிற் கருவுண்டாகி, குருவாரத்தில் நவக்கிரகங்களும் நல்ல நிலையிலிருக் கிற தருணத்தில் உலகையெல்லாம் ஒரு குடையி லாளத்தகுந்த சிறப்பினை வகித்த ஒரு புத்திரன் பிறந்தான்.

அப் புத்திரன் பிறந்த மாத்திரத்தில் தேவர்களெல்லாரும் கற்பக மலரை வாரி மாரிபோற்றூவி, துந்துமி வாத்திய முதலிய வைகள் முழக்கி, "ஜயா விஜயீபவா" என்று அக்ஷதைகளை இறைத்துப் பல ஆசிகளுங் கூறினார்கள். அரம்பை ஊர்வசி இரு வரும் நடனஞ்செய்ய, மேனகை திலோத்தமை முதலிய பெண் கள் பாடினார்கள். உலகத்திற் பட்டுப்போன மரங்களெல்லாம் தளிர்த்தன. கங்கை பொங்கிக் களித்தாள். பூக்காதமரங்க ளெல்லாம் புஷ்பித்துத் தேன்மாரி பொழிந்தன. தருமதேவதை அதிக மகிழ்வோடு நாலுபாதத்திலேயும் நடந்தனள். மேகங்கள் சப்தித்தன. குளிர்ந்த காற்று வீசிற்று. வேத வேதியர்களுக் கும் - தவசிரேஷ்ட சிகாமணிகளாகிய முனிவர்களுக்கும் - தங்க ளுக்குள் தற்செயலாய் மகிழ்வுண்டாக உள்ளம் பூரித்தவரானார் கள். இவ்வாறான நன்னிமித்த முண்டாகவே சதானந்தர்-வசிஷ் டர் - வால்மீகர் - விச்வாமித்திரர் முதலாகிய முனிவர்கள் இந் நிமித்தத்தைக் கண்டு வியப்படைந்து, "நிர் நிமித்தமாக இந்நிமித்த முண்டானதற்குக் காரண மென்ன?" என்று தங்களுக்குள் தாங்களே யோசித்து, தங்கள் தங்கள் ஞானதிருஷ்டியால் நோக் கும் போது பாண்டுராஜனுக்கு யமன் அம்சமாகப் புத்திரனுண் டானது தெரிந்து, "இனி உலகம் நன்மையை அடைவது மன்றி நமக்கும் அதிக நலமுண்டாம்" என்று மகிழ்வடைந்தார்கள். குந்தி தேவி புத்திரனைத் தழுவி எடுத்து வந்து, கணவன் கரத்திற்

கொடுத்தாள். கணவனுகிய பாண்டுராஜன் அப் புத்திரனைக் கண்ட மாத்திரத்தில் இருவினைகளாகிய ஆலேயி லகப்பட்டு வருத்த முற்று அவ்வினையை நீக்கிப் பரமபதமடைந்தவர்கள் எவ்வளவு மகிழ் வெய்துவார்களோ அத்தகைய மகிழ்ச்சி அடைந்து, புத்திரனை வாரி யணைத்து உச்சிமுகந்து, உள்ளங்கால் முத்தமிட்டு, பலகாற் கண்ணி லொத்திக்கொண்டு, இப் புத்திரனுக்கு என்ன பெயரிடலா மென்று யோசிக்கும்போது ஆகாயவாணி - "ஓ! பாண்டு ராஜனே! இந்தப் புத்திரனுக்குத் தருமராஜனெனப் பெயரிடு" என்று விளம்ப, பாண்டுராஜன் அந்த அசரீரி வாக்கியப்படி அதிக மகிழ்வோடு தருமராஜ னென்று பெயரிட்டு மூன்று தரம் அழைத்து, ஆங்கிருக்கும் பெரியோர்களுக்கும மற்றவர்களுக்கும் தன்னுற் கூடிய மட்டும் பேருதவியைச் செய்து, கண்ணையுங் கருத்தையும் புத்திரன் மீது வைத்துப் பாதுகாத்து வந்தான்.

கேட்டீரோ ராஜராஜேஸ்வரனை ஜனமேஜய மஹாராஜனே! அங்கே அஸ்தினபுரத்தில் நடந்த விருத்தாந்த மென்ன வென்றால் எங்கும் வியாபித்து எல்லாச் சமாசாரங்களையு மறிந்து வருகிற நாரதர், பாண்டுராஜன் புத்திரபாக்கியம் பெற்றதை அறிந்து, அஸ்தினபுரத்துக்குச் சென்றார். அவரை பீஷ்மர் திரிதராஷ்டின் விதுரன் முதலானவர்கள் எதிர்கொண்டுவந் தழைத்துப் போய் பொற்பீடமளித்து, சோடச வுபசாரத்துடன் சாஷ்டாங்க நமஸ் காரஞ் செய்து, "ஓ சுவாமி! அடியேங்கள் செய்த மாதவப் பேறல்லவா தங்களைத் தரிசிக்கச் செய்வித்தது" என்று பலவாறு புகழ்ந்து நின்றார்கள். நாரதர் அம் மூவருக்கும் ஆசிகள் வழங்கி, "ஓ புண்ணியவான்களே! ஒரு நல்ல செய்தி கொண்டுவந்தேன் கேளுங்கள். பாண்டு மஹாராஜன் வேட்டையாடக் காட்டிற்சென்று ஒரு முனிசிரேஷ்டனுற் சாபம்பெற்று, வருந்திப் பின்பு தவவேடம் பூண்டு தவத்திலிருந்து, சதானந்தமுனிவர் முதலிய முனிவரோடு கைலாயத்தைத் தரிசிக்கச் சென்றபோது முனிவர்கள் பாண்டு ராஜனைநோக்கி, "புத்திரனில்லாதவர்கள் புண்ணிய லோகத்தைப் பார்க்கொணு தாதலால் தருமசந்தானமாவது அடைவாயானல் உன் கருத்து மகிழ்வெய்தப் புண்ணிய லோகத்தைப் பார்க்கலாம்" என்று கூற, அதன் மேல் பாண்டுராஜன் மனைவியரிடத்து முறையிட, அம் மனைவியரில் குந்திதேவி தூருவாச முனிவராற் பெற்ற மந்திரங்களி லொன்றை நினைக்க, அந்த மந்திரத்துக்கு அதிதேவதையான யமன் வந்துகூடி ஒரு புத்திரனை அளித்துப்

போயினன். அப் புத்திரன் பிறந்தபோது நன்னிமித்தங்களுண் டாயின. உடனே ஆகாயவாணி பாண்டுவை அழைத்து, "இச் சிறுவனுக்குத் தருமராஜனெனப் பெயரிடும்" என்று கட்டளை யிட்டாள். பாண்டுராஜன் அவ்வாக்கின்படி "தருமராஜன்" என்று பெயரிட்டு மஹா களிப்புடன் வளர்த்து வருகிறான். இந்தச் செய்தியை உங்களுக்குச் சொல்லவந்தேன்" என்றார். இதைக் கேட்ட பீஷ்மர் திரிதராஷ்டிரன் விதுரன் மந்திரிகள் பிரதானிகள் முதலிய யாவரும் மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தார்கள். இந்தச் செய்தியை நிறைந்த கருப்பத்தோடு அந்தப் புரத்திலிருந்த காந்தாரி கேட்டு மிகுந்த வருத்த மடைந்து, "நாம் பட்டத்தரசன் மனைவியாயும் மூத்தவளாயுமிருக்க நமக்கு முன் நமது மைத் துனன் மனைவி புத்திரனைப் பெற்றாளே" என்று பொறாமை கொண்டு ஒரு குழவிக்கல்லை யெடுத்து அடிவயிற்றுக்கு நேரிற் பிடித்து, "இது என்பாவமா? இது என்தோஷமா? நானுண்டா யிருப்பது பிள்ளையா? பேயா? பூதமா? அல்லது பெருவயிறா? ஐயோ! என் தீவினைப்பயன் இவ்வாறும் இருக்குமா?" என்று இடித்துக்கொண்டாள்.

---

## துரியோதனாதியர் உற்பவம்

---

அப்போது காந்தாரி கருத்தரித்து முப்பத்தாறு மாதமாயின. கல்லாற் குத்திக்கொள்ளவே அக் கருப்பங் கலங்கி இரத்தம் வெளிப் பட்டது. இதைப் பார்த்த தாதிகள் பரிமளகந்திக்கு அறிவித்தார் கள். விரைந்தோடி அதை யவள் பீஷ்மராதியர்களுக்குத் தெரிவித் தாள். அவர்கள் கனவருத்த மடைந்தவர்களாய் அதற்கொரு உப சாரமுஞ் செய்யாமல் தம்மை மறந்திருந்தார்கள். அப்போது பரிமளகந்தி தனது முதற் குமாரராகிய முனிவரை நினைத்தாள். திவ்யக்யான ஸ்வரூபியாயும் எனக்குக் குருவாகியும் விளங்குகின்ற வேதவியாசர் அதுகாலையில் அதிவேகமாக வந்து, தாயைப்பணிந்து சங்கதி யறிந்து அந்தப்புரத்திற் சென்று, காந்தாரியைத்தேற்றி, அங் கிருப்பவர்களாற் சில பாத்திரங்களை அழைப்பித்து, அவற்றுள் பெரிய தவலை யொன்றில் அவ்வுதிரத்தை யேந்தி, மிகுந்த உதி ரத்தை (99) சிறு ஜாடியி லடைத்து, சிந்திய உதிரத்தை வாயகன்ற ஓர் பாண்டத்தில் நிரப்பிவைத்து, காந்தாரியை அழைத்து "ஓ

அம்மணி! பாவங்க ளெல்லாவற்றிலும் மேலான கெடுதியை விளைக்கின்ற பொறாமையாகிய பொருளை ஏன் வகித்திருக்கிறாய்? அதனால் மஹா பராக்கிரமசாலியாகி இவ்வுலகத்தை யெல்லாம் ஒரு குடையி லாளத்தகுந்த சிறப்பினை வகித்த புத்திரப்பேற்றைக் கெடுத்தனையே: இனி பொறாமையை மேற்கொண்டிராதே. இங்ஙனம் அமைத்த பாண்டங்களி லிருக்கிற நாதங்களின்மேற் கருத்துடையவளாய், இப் பாண்டங்களுக்குக் கருப்பச்சூடுபட அணைத்து நித்தம் நித்தம் நெய் - பால் - தேன் இம்மூன்றையும் அறுகினால் தோய்த்துத் தவலைகளின் பக்கத்தில் ஈரம் உலராமல் ஒத்திக் கொண்டு வருவாயானால், அதிலுள்ள கருவனைத்தும் உருவாகி, பெரிய தவலையி லிருக்கின்ற கரு முன்னதாக அதனையுடைத்துக் கொண்டு வெளிப்படும். மற்றச் சாடிகளி லிருக்கின்றவைகள் ஒவ்வொரு நாளைக் கொவ்வொன்றாகப் பிறக்கும். அது வரையில் அதிக ஜாக்கிரதையாகப் பாதுகாத்துவா" என்று கட்டளையிட்டு, சில மந்திரங்களை யுச்சரித்து, தாயிடத்தில் விடைபெற்றுத் தமதிருப்பிடம் போய்ச் சேர்ந்தார். காந்தாரி வியாசர் கூறியபடி அத்தவலைகளைப் பாதுகாத்து வந்தாள். அவ்வாறு காத்துவருகிற காலத்திற் பெரிய தவலையி லிருந்த உதிரம் உருவாயிற்று. ஆகவே அந்திப் பொழுதில் அசுர வேளையில் தவலையை யுடைத்துக்கொண்டு முதலையை நிகர்த்த ஒரு மதலை வெளிப்பட்டான்.

இப்பால் மற்றச் சாடிகளிலிருந்த உதிரமும் உருவாயிற்று. நாளுக்கு நாள் ஒவ்வொன்றாகச் சாடி மூடியைத் திறந்துகொண்டு அஸ்தினா புரத்திற் புத்திரர்கள் பிறந்தவுடனே ஓரியும் நாயும் ஒருங்கே அழுதன. இரத்தமழை பொழிந்தது. வெள்ளெலும்பும் சிவந்த மலரும் ஆகாயத்தினின்றும் விழுந்தன. இவ்வாறு பல துர்நிமித்தங்களுண்டாக, இந்த நிமித்தங்களைக் கண்ட பீஷ்மர் முதலானவர்கள் கனவருத்த மடைந்து, "இப் புத்திரர்களால் என்ன விபரீதம் நடக்கப் போகின்றதோ" என்று மனதுக்குள் நினைத்து அப் புத்திரருக்கு அரசருள் நடக்கும் சடங்குகளை யெல்லாங் குறைவற நடாத்தி, நல்ல பெரியோர்களை அழைப்பித்து நாமகரண மிடும்படி கேட்டுக்கொண்டார்கள். அப் பெரியோர்கள் இப் பிள்ளைகள் உதிரமாகித் தவலையிலிருந்து பிறந்தமையால், துரியோதன னென்று முதற்பிள்ளைக்குப் பெயரிட்டு, மற்றவர்க்கு - துச்சாதனன் - துர்த்தருஷன் - துன்முகன் - சலந்தன் - சகன் - சமன் - விந்தன் - அனுவிந்தன் - துருவாகன் - சுபாகு - துஷ்ப்தருஷ்ணன் - துஷ்

டந்தன் - சித்திரயோதி - துஷ்கிரமன் - விம்சதி - விகருணன் - சலசந்தி - சுலோசனன் - சித்திரன் - சித்திராசுவன் - சாருசித்திரன் - சாரசன் - துன்மருஷ்ணன் - விவிக்ஷன் - விகபசமன் - பூரணநாமன் - சுநாபன் - நந்தன் - உபநந்தன் - சேநாதிபதி - சுசேஷணன் - குண்டோதரன் - மகோதரன் - சித்திரத்துவம்சன் - சித்திரரதன் - சித்திரபாகு - அமித்திரசித்து - சித்திரபாணன் - சித்திரவன்மி - சுவன்மி - துருவிமோகன் - சித்திரசேனன் - சித்பரகண்டன் - சுசித்திரன் - சித்திரவன்மதரன் - அபராகிகன் - பண்டிதன் - விசாலாக்ஷன் - மார்பரன் - அசிதன் - சயந்தன் - சுவேச்சை - துர்ச்சயன் - துருடஅஸ்தன் - சுகஸ்தன் - பாதவேகன் - சுவரசேனன் - ஆதித்தகேதன் - பகாசி - நாகதந்தன் - உக்கிரசாயி - கவசி - கிஷங்கி - பாசி - தண்டதரன் - தனுக்கிரகன் - பீமரதன் - பீமவேகன் - பீமவாகு - அலோகலன் - பீமகருமன் - சுபாகன் - பிவிக்கிராந்தன் - அபயன் - ருடிகருமன் - துருடிரதன் - அநாதிருஷியன் - குண்டபேதி - விராவி - தீர்க்கலோசனன் - தீர்க்கவசன் - தீர்க்கபுஜன் - அதீர்க்கன் - தீர்க்கன் - தீர்க்கபாகன் - மகாபாகு - வியூடோரஸ்கன் - கனகத்துவசன் - மகரகுண்டன் - குண்டன் - குண்டசன் - அநசுவன் - சித்திரகன் - நுக்கிராயுதன் - பாலகீர்த்தி - கந்தாயு - விரோசன் - சகுண்டலன் - விகடன் - என்று தொண்ணூற்றொன்பது புத்திரர்களுக்கும் பெயரிட்டானபின், மற்றொரு தவலேயிலிருந்த உதிரம் கருவுருவாக, அத் தவலையை யுடைத்துக் கொண்டு ஒரு புத்திரி தோன்றினாள். அப் புத்திரிக்கு அப் பெரியோர்கள் துர்ச்சலை யென்று பெயரிட, பீஷ்மர் முதலிய யாவரும் அப் பிள்ளைகளையும் பெண்ணையும் அதிக மகிழ்ச்சியோடு சீராட்டி வளர்த்து வந்தார்கள்.

---

## பீமன் உற்பவம்

இந்த நூற்றொருவரில் துரியோதனன் உதித்த அத்தினமே நாரத முனிவர் சிருங்கிவனத்திற் சென்று பாண்டுராஜனைக் கண்டு, அவன்செய்த பூஜையை ஏற்றுப் பல ஆசிகள் கூறி “ஓ மஹாத்மாவே! திரிதராஷ்டிரன்மனைவி உங்களுக்குப் புத்திரன் பிறந்தானென்பதை அறிந்து, தன் வயிற்றில் ஒரு குழவிக்கல்லாற் குத்திக்கொண்டாள். அதனால் கருப்பங் கலங்கி உதிரப்பிரவாக முண்டாயிற்று. வியாசர் அதனை யுணர்ந்து, அவ்வுதிரங்களை நூற்றொரு

தவலைகளில் வைத்தார். அவையனைத்தும் கருவுருவாய்த் திரண்டன. இன்றையத்தினம் பெரிய தவலையை யுடைத்துக் கொண்டு ஒரு புத்திர னுண்டானான். மற்றத் தவலைகளி லிருக்கிற உதிரங்களும் நாளுக் கொவ்வொன்றாக உருவாகிப் பல புத்திரர் உதிப்பார்கள்” என்று சொல்லிப் போயினர். இவையனைத்துங் கேட்ட பாண்டுராஜன் தன் மனைவியாகிய குந்திதேவியை அழைத்து, “ஓ பெண்கள் நாயகமே! காந்தாரி இன்று ஒரு புத்திரனைப் பெற்ற தல்லாமல், இன்னும் நூறு புத்திரரைப் பெறப் போகின்றாளாம். நீ ஒரு புத்திரனைப் பெற்றாற் பயனென்ன? அருமையான தவத்தா லடையும் திவ்ய மந்திரங்கள் உனக்கு இலகுவாகக் கிடைத்திருக்க, நீ யேன் அந்த மந்திரங்களை வீணாக்குகிறாய்? வல்லமையிற் சிறந்த வாயுபகவானைக் கொண்டு ஒரு புத்திரனைப் பெறுவாயாக” என்று கட்டளையிட, குந்திதேவி கணவன் சொல்லிய கட்டளைப்படி ஸ்நானஞ் செய்து, பர்ணகசாலை சென்று நல்ல ஆடை ஆபரணங்களை அணிந்து, மலரணையிட்டு, அன்றிரவில் வாயுபகவானை நினைத்து ஒரு மந்திரத்தை யுச்சரித்தாள். அம்மந்திர தேவதைகள் ஓடோடியும் சென்று வாயுபகவானைச் சூழ்ந்தழைக்க, வாயுபகவான் குந்திதேவி யிருக்கும் பர்ணசாலைக்கு வந்தார். குந்திதேவி அவரை எதிர்கொண்டுபோ யழைத்துவந்து, மலரணையி லிருத்திச் சோடச உபசாரமுஞ் செய்து, தனது இருமுலைகளு மழுந்தப் புல்லினாள். வாயுபகவான் அதற்கு மனமகிழ்ந்தவராய்க் கட்டியணைத்துப் புணர்ந்தார். உடனே அவ்வாயுபகவான் வீரியவிர்த்தியாற் குந்திதேவி கருப்பமுற்று, கரிய மேகம்போல் நிறத்தையுடைய ஒரு புத்திரனை நல்ல சுபமுகூர்த்தத்திற் பெற்றாள். அப்புத்திரன் காந்தாரியினது பெருந் தவலையிலிருந்து வெளிப்பட்ட புத்திரனுக்கு ஒருநாள் இளையவனாயும், மற்ற நூறு புத்திரர்களின் வல்லமைக்கு மேலான வல்லமை யுடையவனாயுமிருந்தான். இவனைப் பாண்டுராஜன் பார்த்து, “இப்புத்திரனுக்கு என்ன பெயரிடலாம்” என்று யோசித்திருக்கும்போது ஆகாய வாணி பாண்டுராஜனை அழைத்து, “இப்புத்திரன் வல்லமையில் மாருதிக்கொப்பாக இருப்பானாதலால் இவனுக்குப் பீமனென்று பெயரிடுவாயாக” என்று கூறப் பாண்டுராஜன் அவ்வாறே பீமனென்று பெயரிட்டு மூன்று தரம் அழைத்து, தான தருமங்களைச் செய்து மகிழ்ந்திருந்தான். பீமன் பிறக்கும்போது தடாகம் ஏரி முதலானவைகளிலிருக்குஞ் சங்குகள் முழங்கின.

## அருச்சுனன் உற்பவம்

இங்கே குந்திதேவி கணவனை வந்து வணங்கி, "ஓ சுவாமி! இன்னுமிரண்டு மந்திரங்க ளிருக்கின்றன" என்று சொல்லப் பாண்டு ராஜன் "இந்திரனை நாடி ஒரு மந்திரத்தை யுச்சரி" யென்றான். குந்திதேவி அவ்வாறு இந்திரனை நினைத்து ஒரு மந்திரத்தை யுச் சரித்தாள். இந்திரன் வந்து மனமொத்துப் புணர்ந்தான். உடனே இந்திரன் வீரிய விர்த்தியாற் குந்திதேவி கருப்பமுற்று, பங்குனி மாதம் உத்திர நக்ஷத்திரம் பூர்ண சந்திரோதயத்தில் அருமை யான நன்னிமித்தங்கள் தோன்றவும் தேவர்கள் கொண்டாடவு மாக ஒரு புத்திரனைப் பெற்றாள். அப்புத்திரன் மதன்போல் வடிவும் திருமால் போல் வல்லமையும் பெற்று விளங்கினான். அப்புத்திரனைக் குந்திதேவி வாரித் தழுவி எடுத்துவந்து, கணவ னிடத்துக் கொடுத்தாள். பாண்டுராஜன் அப்புத்திரனுடைய சுந் தரத்தையும் இராஜ அமிசத்தையும் நோக்கி மகிழ்வடைந்து, "இப்புத்திரனுக்கு என்ன பெயரிடலாம்" என்று நினைத்த மாத்தி ரத்தில் முன்போலவே ஆகாயவாணி பாண்டுவை அழைத்து, "இப் புத்திரனுக்குப் பற்குணன் என்று பெயரிடு" என்றியம்ப, அவ்வாறே பாண்டுராஜன் பற்குணனென்று பெயரிட்டு மூன்றுதரம் அழைத் துத் தானதரு மங்களைச் செய்தான். இவ்வாறு மூன்று புத்திரர் களும் வளர்ந்து வருகிற காலத்தில் ஒரு நாள் மத்ராதேவி தன் கணவன் தனித்திருக்கிற வேளை யறிந்து வந்து வணங்கி ஒரு வசனஞ் சொல்லுகிறாள்.

## நகுலசகாதேவர் உற்பவம்

"ஓ சுவாமி! என் தமக்கையான குந்திதேவி வேறு, நான் வேறல்ல. அவள் வயிற்றிற் பிறந்த புத்திரர் என் வயிற்றிற் பிறந்த புத்திரர்தான். ஆகிலும் எனது கருப்பக்குறை தீர என் வயிற்றினிட மாக இரண்டு புத்திரரைப் பெறவேண்டுமென்று காதல்கொண் டிருக் கிறேன். தாங்களோ கலவிக்குரியவரல்லர். ஆனால், இக்காதல் தீரும் வகை கூறவேண்டும்" என்று வேண்ட, பாண்டுராஜன் மத்ராதேவி கொண்டிருக்கிற கருத்தை யுணர்ந்து, "ஓ பெண்ணே! உன் கருத்தின்படி இரண்டு புத்திரரைப் பெறும்படி செய்கிறேன்" என்று சொல்லிக்கொண் டிருக்கையிற் குந்திதேவி வந்துவிட்டாள்.

பாண்டுராஜன் குந்திதேவியை நோக்கி, "ஓ பெண்கள் நாயகமே! உன் தங்கை இரண்டு புத்திரரைத் தன் வயிற்றிற் பெறவேண்டுமென்று காதல்கொண்டு இருக்கிறாள். இன்னும் உன்னிடத்தில் இருக்கிற ஒரு மந்திரத்தை அவளுக் குபதேசித்து, அதன் விதியையுஞ் சொல்" என்று அன்புடன் உரைத்தான். அதற்குக் குந்திதேவி மகிழ்வடைந்து "ஓ சுவாமி! தாங்கள் இப்போது கூறிய கருத்தின்படி நடக்க முன்னமே நான் கருதினேன். ஆகையால் அவ்வாறே செய்கிறேன்" என்று சொல்லித் தன் தங்கையான மத்ராதேவியை வேறோரிடத்திற் கழைத்துப்போய் ஸ்நானஞ் செய்துவரச்சொல்லி, வந்தவுடன் மந்திரோபதேசஞ் செய்து அதன் விதியையுங் காட்டினாள். மத்ராதேவி கணவனிடத்து வந்து வணங்கி,"ஓ சுவாமி! நான் இரண்டு புத்திரர்களைப்பெறவேண்டுமாதலால் இதை எவ்வாறு அநுஷ்டிப்பது?"என்று வினவ, பாண்டுராஜன் "ஓ பெண்கள் நாயகமே! அசுவனி தேவர்களை நாடி மந்திரத்தை யுச்சரித்தால் இரண்டு புத்திர ருண்டாவர்" என்றான்.

மத்ராதேவி அன்றிரவில் ஸ்நானஞ் செய்து, நல்ல ஆடை ஆபரணங்களை அணிந்து! பர்ணசாலையைச் சுத்திசெய்து, மலரணையிட்டு, அசுவனி தேவர்களை நாடி அம் மந்திரத்தை உச்சரித்தாள். உடனே அசுவனி தேவர்கள் வந்து, அம் மத்ராதேவியைக் கூடிக் கலந்து சென்றனர். அசுவனி தேவர்கள் இருவராதலால் மந்திராதேவி கருத்தரித்து, முன்னும் பின்னுமாக இரட்டைப் புத்திரரைப் பெற்று அப் புத்திரர்களை வாரித் தழுவியெடுத்துவந்து கணவனிடத்துக் கொடுத்தாள். பாண்டுராஜன் அப் புத்திரர்களை உச்சி முகந்து, முகத்தோடு முகஞ் சேர்த்து முத்தமிட்டு, மடியில் வைத்து "இப் புத்திரர்களுக்கு என்ன பெயரிடலாம்"என்று யோசித்திருக்கும்போது முன்போல் ஆகாயவாணி, பாண்டுராஜனை அழைத்து, "நகுலனென்றும் சகாதேவ னென்றும் பெயரிடுவாயாக" என்று திருவாக்கருளினாள். பாண்டுராஜன் அவ்வாறு பெயரிட்டு மூன்றுதாம் அழைத்துத் தானதருமங்களைச் செய்தான். தருமராஜன் - பீமன் - பற்குணன் - நகுலன் - சகாதேவன் இவ்வைவரும் பாண்டு மைந்தர்க ளாதலால், பஞ்சபாண்டவரென்று பெயர்கொண்டு ஆங்காங்குச் சென்று விளையாடுகிறதும், மிகுந்த வணக்கத்துடன் முனிவர்களுக்கு மகிழ்வுண்டாக நடந்து பல வரங்களைப் பெறுகிறதுமாக இருந்தார்கள். இவ்வாறு இவர்கள்

நடந்துவருகிற நாளில் அவ் வனத்திலிருக்கும் முனிவர்களும் பெரியோர்களுங் கூடி, "இப் புத்திரர்கள் சிறந்த விவேகிகளாக இருக்கிறார்கள்" என்று உபநயனஞ் செய்து, நாலுவேதம் ஆறு சாஸ்திரம் அறுபத்துநாலு கலைக்கியான முதலியவற்றைப் போதித்து, இராஜபுத்திரர்க ளாதலால் தனுர் சாஸ்திரத்தையும் கற்பித்தார்கள். இச் சிறுவர்கள் விளக்குமுன் காண்பித்த கர்ப்பூரம் போல முனிவர்கள் கூறியவற்றை மனதிற் பதியவைத்து, அவர்கள் கருத்துக் கிசைந்தபடி விளையாடி வருவார்கள். அக்காலத்திலேயே இவர்களிற் சிரேஷ்ட குமாரனாகிய தருமன் வேதாகமாதிகளைப் பயின்ற விவேகிகளோடு பழகி அவைகளைக் கற்றுவருவான். பீமன் சிங்கம் - புலி - கரடி - யானை இவற்றை வாலைப்பற்றி இழுத்து, முனிவர்களிருக்கு மிடத்துக்குக் கொண்டுவந்து தரையிலுருட்டு வான்; அம் முனிவர்கள் பீமன் வல்லமைக்கு மெச்சி விட்டு விடச் சொன்னால் விட்டு விடுவான். பற்குணன் பற்பல பராக் கிரமத்தோடு திசையனைத்துஞ் சென்று, தனுர்வித்தை ஜால வித்தை முதலிய விநோதங்களைக் காட்டுவான். நகுல சகா தேவர்கள் நாற்றிசையோரு மகிழ்வெய்தக் கலைக்கியான விளை யாடல்களைக் கற்பார்கள். பாண்டுராஜன் - குந்திதேவி - மத் ராதேவி இவர்கள் தங்கள் புத்திரர்கள் இவ்வாறு விளையாடி வருவதைக் கண்ணுற்கண்டு பரமானந்தத்தை அடைந்து, தங்கள் கருத்தையும் கண்ணையும் அப்புத்திரர்கள்மேற் செலுத்தி இடை விடாமற் பாதுகாத்து வருகிற காலத்தில் வசந்தகாலம் கிட்டியது. அசோகு புன்னை சண்பக முதலிய மரங்களெல்லாம் புஷ்பித்து நறுமணம்வீசத் தென்றல் வந் துலாவிற்று. அக்காலத்திற் குந்தி தேவி ஸ்நானஞ்செய்ய நதிக்குச் சென்றாள். ஐவரும் தாயைப் பின்றொடர்ந்தார்கள்.

---

## பாண்டுராஜன் மரணம்

---

இங்கே பாண்டுராஜனும் மத்ராதேவியும் தனித்திருந்தார்கள். அக்காலம் முற்றுந்துறந்த முனிவருக்கு மோகமுண்டாகித் தங்கள் மனதை வசந்தப்பச்செய்யுங் காலமாதலாற் பாண்டுவுக்குக் காமமேலிட்டு, 'கெடுமதி கண்ணைக்குத் தோன்றாது' என்கிற பழமொழிபோல் தனக்கு நேரிட்டிருக்கிற சாபத்தைக் காலகதியால் மறந்து அதிக மோகங்கொண்டு, மத்ராதேவியைப் பார்த்துக்

கைசரச்ஞ் செய்தான். அந்த மத்ராதேவியும் கணவனுக்கு நேரிட்டிருக்கிற சாபத்தை நினையாமல் மறந்து மதிமயங்கி, கணவன் கருத்துக் கிசைந்து, மதனசாஸ்திர விதிப்படி ஆலிங்கன முதலியவற்றைச் செய்து புணர்ந்தாள். இரதியு மதனும்போலப் பாண்டுராஜனும் மத்ராதேவியும் கூடிப் புணருகிறபோது, வீரியங் கலிதமாகுந் தருணத்தில் அமுதந்திமுனிவ ரிட்ட சாபத்தின் படி ராஜன் பூமியில் விழுந்து மரணமடைந்தான். மத்ராதேவி கணவன் விழுந்ததை நோக்கி, இவர் நெடுநாள் புணர்ச்சியில்லா திருந்தபடியால் அதிகக் காமமேலிட்டுச் சோகமுற்று விழுந்தார் என்று அரசனுக்குச் சில சயித்திய உபசாரத்தைச் செய்தாள். அவ்வாறு செய்தும் அரசன் அசைவற்றிருப்பதைக் கண்டு தட்டி எழுப்பினாள்; அப்போதும் பேசவில்லை. இதென்ன விபரீதமென்று புரட்டிப்பார்த்தாள். அதற்கும் அசையாமல் கட்டையைப் போல் உடல் முழுதும் விரைத்துப்போகவே மனநடுங்கி, "ஓ! ஸ்திரீகளைப் புணர்ந்தால் மரணமடைவாயென்று அமுதந்தி முனிவர் சாபமிட்டிருந்தாரே, அதனை மறந்து அரசன் புணர்ந்தார். அதற்கு நாமும் ஒத்திருந்தோம். அவர் சாபப்படி இறந்துவிட்டார். இனி என்ன செய்யப்போகிறோம்" என்று ஓவென்றலறி, அரசன் மேல் விழுந்து, குபிலினமெல்லாம் நாணக் கதறியழுதாள். அதற்குள் குந்திதேவி ஸ்நானஞ்செய்து பர்னசாலையருகில் வந்தாள். அங்கு மத்ராதேவி யழுகிற குரலோசையைக் கேட்டுத் திடுக்கிட்டு "ஏன் நமது தங்கை யழுகிறாள்? அரசனுக்கு ஏதோ கெடுதி நேரிட்டிருக்கும். அதனால் தான் அழுகிறாள்" என்று மனதில் நினைத்து, ஐந்து புத்திரர்களும் ஆச்சரியப்பட்டுப் பின்னோடிவரத் தான் முன்னோடிவந்து, பர்னசாலையில் நுழைந்து கணவனை நோக்கும்போது கணவனிறந்திருப்பதை அறிந்து, "ஐயையோ!! ஈதென்ன கொடுமை! தெய்வமே" யென்று மேல் விழுந்து புரண்டு கோவென்று அலறத் தொடங்கினாள். அப்போது மத்ராதேவி நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லக் குந்திதேவி அதனைக் கேட்டு "இது காலகதி" என்று தீர்மானித்துப் புலம்புகிறபோது பிள்ளைகள் ஐவரும் தாதிமார் முதலானவரும் கோவென் றலறவே இவ்வோசையை அங்கு இருந்த முனிவர்களாகிய பெரியோர்களிற் சதானந்தர் வசிஷ்டர் வால்மீகர் முதலான தவசிரேஷ்டசிகாமணிக ளறிந்து, யாவருமொன்றாகத் திரண்டுவந்து, அரச

னிருக்கும் அவகோலத்தைக் கண்டு கனவருத்த மடைந்து, குந்தி தேவி மத்ராதேவி ஐந்து சிறுவர் தாதியர் முதலானவர்க்குத் தேறுதல் சொல்லி, பிள்ளைகளாகிய ஐவரைக் கொண்டு நடத்த வேண்டிய கிரியைகளை யெல்லாங் குறைவற நடாத்திப் பாண்டு ராஜனை அடக்கஞ் செய்தார்கள். இதற்குள் மத்ராதேவி குந்தி தேவியை வணங்கி, "ஓ அம்மணி! உன் கிருபையினால் நான் இரண்டு புத்திரர்களைப் பெற்றேன். இவர்கள் உன் புத்திரர்களே யன்றி என் புத்திரர்க ளல்லர். இனி நான் பூமியி லிருந்தாற் கண வனுக்கு நேரிட்டிருக்கிற சாபத்தை யறிந்திருந்தும் காமத்தை மேற்கொண்டு கணவனைக் கூடிக் கொன்று விட்டாள்" என்று உலகம் நிந்திக்கும். ஆதலால் அரைக்கணம் பூமியி லிரேன். கணவனோடே நானுமிறப்பேன்" என்று கூறினாள். குந்திதேவி அவளைத் தழுவி அணைத்துச் சமாதானஞ் செய்தாள். அவள் அப் படியுங் கேளாதவளாய் நகுல சகாதேவரைக் குந்திதேவியிடத் தொப்புவித்துத் தானும் உயிரை விட்டாள். குந்திதேவி நகுல சகாதேவரைக் கொண்டு செய்யவேண்டிய கடனைச் செய்து, மத்ரா தேவியை அடக்கஞ் செய்து, ஐந்து புத்திரர்களைத் தானே வைத்துக் கொண்டு அநாதைபோற் பரதவித்திருக்கிற தருணத் தில் வசிஷ்டர் - வால்மீகர் - விச்வாமித்திரர் - சதானந்தர் - இவர்க ளெல்லாருமொன்றாகக் கூடிவந்து, குந்திதேவியைக் கண்டு தேற்றி "ஓ அம்மணி! இச்சிறுவர் ஐவரும் சொர்க்கமத்திய பாதாள மென்னு மூன்று லோகத்தையும் ஆளத்தகுந்த வல்லமையுடைய வர்கள். அவர்களை வீணாகக்காட்டில் வைத்திருப்பதால் பயனென்ன? உன் நகரத்திற்குப் போய்ச்சேர்ந்து மூத்தவராகிய திரிதாராஷ்டிர னிடமிருந்தாற் புத்திரர்கள் சிறப்படைவார்கள். ஆதலால் அத் தினபுரத்துக்குச் செல்" என்று கட்டளையிட, குந்திதேவி அம் முனிவர்களுக்கு வந்தனஞ் செய்து, "ஓ சுவாமிகளே! அத்தின புரஞ் செல்ல அடியேனுக்கு வழிதெரியாதே! நான் என்ன செய் வேன்" என்று மறுமொழி கூற, முனிவர்கள் ஆலோசித்து "நாமே கொண்டு போய் அத்தினபுரத்தில் விடுவோம்" என்று தீர் மானித்து, குந்திதேவியையும் சிறுவர்களையும் அழைத்துப்போய் பீஷ்மர் திரிதராஷ்டிரன் இவர்கள் முன்னேவிட்டு, "ஓ புண்யவா ன்களே! இந்த ஐவரும் பாண்டுராஜன்புத்திரர். இதோ இங்கிருப்ப வள் குந்திதேவி" என்று தெரிவித்துப் பாண்டுராஜன் வேட்டை யாட்டக்காட்டிற் சென்றதுமுதல் மரணமடைந்த வரையில் நடந்த

விருத்தாந்தங்களைக் கூறி, "ஓ மஹா ராஜாக்களே! இப் புத்திரர்களை அற்பமா யெண்ணப் போகிறீர்கள். இவர்களால் இக் குலமும் இக் குவலயமு மல்லாமல், தேவர்களும் நாங்களும் சுகமும் கீர்த்தியும் அடையப் போகிறோம். இவர்களை மிகுந்த அன்புடன் வளர்த்து அரசுக்குரிய தொழிலையும் கல்வியையுங் கற்பித்து வாருங்கள்" என்று கட்டளையிட்டு, அவரவர்கள் செய்த வந்தனையை யேற்றுப் பல ஆசிகள் வழங்கித் தங்கள் தங்க ளிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். பீஷ்மர் திரிதராஷ்டிரன் இவ்விருவரும் குந்திதேவியையும் சிறுவர்களையும் ஆதரித்து, இனிய வசனங்களினால் தேறுதல் சொல்லி, குந்திதேவியை அந்தப்புரத்துக்கு அனுப்பி, புத்திரர்களை மடியில் வைத்துச் சீராட்டி மிகுந்த காதலோடு வளர்த்து வந்தார்கள். பின்பு பீஷ்மர் திரிதராஷ்டிரன் விதுரன் மூவருங் கூடிப் பாண்டுராஜனது நிர்யாணத்தை நமது சம்பந்திகளுக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று உத்தேசித்துத் திருமுகங்க ளெழுதி, குந்திதேவியைப் பெற்ற யாதவகுல சூரசேனமகாராஜனுக்கும், குந்திதேவியை வளர்த்த குந்திபோஜனுக்கும், சூரசேனன் குமாரனாகிய வசுதேவனிடமாய்ப் பிறந்து முன்னம் பூமிதேவிக்குக் கொடுத்த வாக்குதத்தத்தை நிறைவேற்றக் கருதியிருக்கிற ஸ்ரீகிருஷ்ணசுவாமிக்கும், மத்ர தேசத்துக் கதிபனான மத்திரராஜனுக்கும், திரிதராஷ்டிரனுக்கு அம்மானாகிய காந்தாரதேசத்துச் சுவேதமஹாராஜனுக்கும், மற்று முண்டான நெருங்கிய பந்துக்களுக்கு மனுப்பினார்கள். இத்திருமுகத்தை அவரவர்கள் கண்ணுற்று, அக்கணம் பிரயாணமாகி அஸ்தின புரத்துக்கு வந்தார்கள்.

இந்தச் செய்தியை பீஷ்மர் முதலானவர்க ளறிந்து, எதிர்கொண்டுபோய் அவரவர்களுக்குத் தகுந்த மரியாதைகளைச் செய்து அழைத்து வந்து, கொலுமுகக் கூடத்திலிருந்த திவ்யாசனங்களிலிருத்தி பாண்டுராஜன் மரணவரலாற்றை விளங்க வுரைத்தார்கள். வந்த அரசர்கள் மனங்கலங்கிக் கனவருத்த முற்று, இவை யனைத்துந் தெய்வகதி யென்று ஒரு விதமாகத் தேறி, அந்தப் புரத்திற் சென்று குந்திதேவியைக் கண்டு தேறுதல்சொல்லி மறுபடியும் கொலுமுகக்கூடத்தில் யாவரும் ஒருமிக்கக்கூடியிருந்த தருணத்தில் திரிதராஷ்டிரன் புத்திரர்களும் பாண்டுராஜன் புத்திரர்களும் வந்து, கொலுமுகக்கூடத்தி

லிருக்கும் குந்திபோஜன் முதலான அரசர்களுக்குச் சாஷ்டாங்க மாகத் தெண்டனிட்டு நின்றார்கள். வணங்கின புத்திரர்களை அவரவர்கள் வாரித்தழுவி ஆசீர்வதித்து, பாண்டுராஜன் புத்தி ரர்களாகிய ஐவரையும் நோக்கி, அச்சிறுவர்களின் தோற்றத்திற்கும் அவர்களது ஒழுக்கத்துக்கு மகிழ்ந்து பாண்டுராஜனை நினைந் துருகி, குந்திபோஜன் முதலான அரசர்கள், பீஷ்மர் திரிதராஷ்டி ரன் விதுரன் முதலானவர்களை நோக்கி, "ஓ அரசர்களே! துரியோ தனன் முதலாகிய நூற்றுவரும் பாண்டுராஜன் புத்திரர்களாகிய இந்த ஐவரும் உங்களுக்கொரு கண்ணாயிருக்கிறார்கள். ஒருவேளை காலகதியால் ஒருவரை யொருவர் பிரிவார்களானால், அப்போது, நடந்துகொள்வதற்கு நாங்கள் பாத்தியஸ்தராகையால் ஒருமொழி கூறுகிறோம். அஃதென்னெனில் திரிதராஷ்டிர மஹாராஜனுக்கு நூறு புத்திரர்கள். பாண்டுராஜனுக்கு ஐந்து புத்திரர்கள். இந்த இருதரத்தாருக்கும் இப்போதிருக்கிற சலநிதிபாஷாணம் மாவிடை மரவிடை அசையும்பொருள் அசையாப் பொருள் யாவும் சரி யொத்த பங்கேயன்றிக் குறைவான பங்கு கொடுப்பது தகுதியல்ல. இக்கருத்தை உட்கொண்டிருங்கள்" என்றுரைக்க, பீஷ்மர் முத லான மூன்றரசர்களும் "இது உண்மையே" என்று சொல்லி ஒத் துக் கொண்டார்கள்.

அதற்குள் அந்தப்புரத்திலிருந்து சிலதூதுவர் வந்து, "போஜன வேளையாயிற்று எழுந்திருங்கள்" என்று வணங்கினர். பீஷ்மர் முதலான அரசர்களும் வந்த அரசர்களும் எழுந்துபோய் ஸ்நா னஞ் செய்து பூஜைமுடித்து, உள்ளறையி லிட்டிருந்த பொற் பீடத்திலிருந்து, கைத்தல் - புளித்தல் - கார்த்தல் - கூர்த்தல் - துவர்த்தல் - தித்தித்தலென்னும் அறுசுவையோடுகூடிய - உண் டல் - தின்னல் - நக்கல் - பருகல் என்னும் நால்வகை யுண்டியை யும் புசித்து, கைகால்களைச் சுத்திசெய்து, விடாயாற்றி மண்ட பத்தில் வந்து, சந்தனம் - புனுகு - கஸ்தூரி - கற்பூரம் - சவ்வாது முதலிய கலவைச்சாந் தணிந்து, பரிமள மலர்மாலைகளைப் புனைந்து, தாம்பூலந்தரித்து, சற்றுநேர மிளைப்பாறிய பின்பு கொலுமுகக் கூடத்தில் வந்து யாவருமிக மகிழ்வோ டிருந்தனர். வந்த அரசர்க ளெல்லாரும் பீஷ்மர் முதலியவர்களிடத்து விடைபெற்றுத் தங்கள் தங்கள் நகரம் போய்ச் சேர்ந்தார்கள். இவர்களில் வசுதேவ புத் திரராயும் தருமராஜனுக்கு நல்லம்மானயும் பூமிதேவியினது சுமையைத் தொலைப்பதற்கு மிருக்கிற நீலமேக ஸ்வரூபனாகிய

ஸ்ரீ கிருஷ்ணபகவான் தருமராஜனுக்குப் பதினைந்து நாழிகை இளையவராதலால், அத் தருமராஜனை வணங்கி ஓரிடத்தில் தனியே அழைத்துப்போய், "ஓ மண்டலேஸ்வரா! உமக்கு இந்தத் திரித ராஷ்டிரனாலாவது அவன் புத்திரர்களாலாவது இன்னும் மற்றவர் களாலாவது ஒரு கெடுதி நேரிடுவதாயிருந்தால், அப்போது எனக் குத் தெரிவியும். நான் என் தமையன் தம்பி முதலானவர்களோடு வந்து அத்துன்பத்தை நீக்குகிறேன். இதனை உறுதியாய் நம்பி யிரும்" என்று தைரியஞ்சொல்லி மற்ற நால்வரிடத்திலும் விடை பெற்றுத் தமது நகரத்துக்குச் சென்றார். சுவேத மஹாராஜன் புத்திரர்கள் நூற்றுவரில் யாவர்க்கு மிளையவனாகிய சகுனி துரி யோதனனுக்கு நல்லம்மானாதலால் தன் தந்தையோடு சொல்லா மல் அத்துரியோதனனுக்குப் பக்கத்துணையா யிருந்துவிட்டான். பரசுராமரிடத்து வில்வித்தை கற்றுத் தேர்ப்பாகன் வீட்டிலிருக்கும் கர்னன் ஒருநாள் வேடிக்கை யார்த்தமாய் வீதியில் வரும்போது, துரியோதனன் கண்டு, பிராரத்துவ சம்பந்தத்தால் கிரேதுவாக ஓடி அவனைத் தழுவி, தமையனென்று முறைகொண்டு "ஓ அண்ணா! இன்று முதல் நாமிருவரும் பாலும் நீரும் போலும் - எள்ளும் எண்ணெயும் போலும் - உடலும் உயிரு ம்போலும் வேற்றுமையின்றி இருக்க வேண்டும். போஜன முதலியவைகளும் என்னோடு அருந்தவேண்டும். எக்காலத்தும் என்னை விட்டுப் பிரியா மலிரும்" என்று உறுதி கூறினான். கர்னன் அதற்கு ஒத்துக் கொண்டு, துரியோதனன் முதலான நூற்றுவரோடும் வேற்றுமை யின்றி இருந்தான். கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இதுவரையில் நூற்றுவர்க்கும் பாண்டவர்க்கும் விரோதமில்லை. இந்தச் சகுனி சேர்ந்ததின் பின்பு நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன் கேளும்" என்று கூறுகிறார்.

சம்பவச்சருக்கம் முற்றிற்று.

---

## 6. வார்ணாவதச் சருக்கம்

### கண்ணன் துதி

தொழுவார்தம் வினைதீர முற்கோல மாய்வேலை சூழ்பாரெயிற்
றழுவானை நன்னுமமொன்ருகி லுங்கற்றெரு ருருவோதினுர்
வழுவாத சுரராக நரராகப் புள்ளாக மாவாகப்புன்
புழுவாக வொன்றிற்பி றந்தாலு நரகிற்பு கார்காணுமே.

துரியோதனுதியர் நூற்றுவரும் பாண்டுமக்கள் ஐவருமாகிய இருதிறத்தாரும் வேற்றுமையின்றி ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள்போலக் கலந்து கற்றுணர்ந்த பெரியோர்களுடைய சினேகம் போற் குற்றம் பாராட்டாமல் நேசித்துப் பந்து கழற்காய் முதலிய சிறு பிள்ளைகளுக்குரிய விளையாடல்களைப் பேதமில்லாமல் விளையாடி வருகிற காலத்தில், பீமன் தன் விளையாட்டுத்தொழிலின் அவசரத்தினுற் போகிறபோதும் வருகிறபோதும் ஓடுகிறபோதும் நடக்கிறபோதும் கைகால் ஒருவர்மீது படுகிறபோதும் துரியோதனன் தவிர மற்றச் சிறுவர்களிற் சிலர் பூமியில் விழுவர்; சிலர் கண் சுழன்று வருத்தமுறுவர்; சிலர் களைப்பர்; சிலர் இளைப்பர்; இவர்களைப் பீமன் நோக்கி விழுந்தவரை யெடுக்கிறதும், வருத்தமுறுபவரை ஆதரிக்கிறதும், களைப்பவரைக் களையாற்றுகிறதுமாயிருப்பன். இதனைப் பீஷ்மர் முதலிய பெரிய அரசர்களும் மந்திரி பிரதானி முதலிய சேனைத்தலைவர்களும் பார்த்து வியப்படைந்து பீமனைப் புகழ்ந்து, "இவன் வல்லமையிற் கருடனை யொப்பன்" என்றும் "கல்லைப்போன்ற தேகமுடையவன்" என்றும் ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்வார்கள். இவ் வார்த்தைகளைத் துரியோதனன் கேட்டுப் பொருமை கொண்டு, மனதில் வருத்தமுற்று வருவான். இப்படி யிருக்கிற நாளில் ஒரு நாள் துரியோதனன், கர்னனையும் நல்லம்மானுகிய சகுனியையும் அழைத்துக் கொண்டு, தனியே ஒரு சிங்கார வனத்திலிருக்கும் சந்திரகாந்த மண்டபத்திற் புகுந்து, அங்கோரிடத்திலிருந்து "ஓ ஆப்தரே! உலகில் அரசர்கள் சிறிய பகைகளை வைத்துக்கொள்ளுகிறதில்லை. ஏனென்ருல் கயத்தின் நீரில் தன் சாயல் தோன்றுவதைக்கண்டு மகிழ்வுற்றிருக்கிற யானை அற்ப வுயிராகிய ஒரு தவளை அந்நீரை கலக்குமானுல் உடனே தன்னுருவழிந்ததாக எண்ணி வருந்திப்போம். ஆதலால் நான் அத்தினபுரத்துக்குச் சிரேஷ்ட

அரசனுடைய புத்திரன். இன்னுஞ் சிலநாட் சென்றால் அப்பட்டம் எனக்குக் கிடைக்கும். அக்காலத்தில் என் சகோதரர்களும் இவ்வைவரும் என்னிடமாகவே இருப்பார்கள். ஆனால், தருமன், பற்குனன், நகுலன், சகாதேவன் இவர்கள் என் சொற்படி நடப்பார்களாதலால், இவர்களைப்பற்றி எனக்குக் கவலையில்லை. இப்போதே பீமன் நடக்கிற அதிர்ச்சியில் என் சகோதரர்கள் அகப்பட்டு வருத்தப்படுகிறார்கள் என்றால், நான் பட்டத்துக்குரியவனாகுங் காலத்தில் அவனை ஒரு வேளை கடிந்து கொள்வேனானால், உடனே அவன் என்னை எதிர்த்துக்கொள்ளுவான். அப்போது அவனுக்குத் தகுந்த தண்டனை செய்ய யத்தனிப்பேனானால், நம்மையெல்லாம் அரை நொடியில் யமதண்டனைக் குட்படுத்தி விடுவான் போலிருக்கிறது. ஆதலால் இவனை எவ்விதத்திலாவது கொல்ல வேண்டும். அப்படிக் கொல்வதும் நம்மாலிறந்தானென்று ஒருவர்க்குந் தெரியக்கூடாது. அவ்வண்ணமான ஒரு தந்திரஞ் சொல்லுங்கள்" என்று வினவ, சகுனி "நான் சொல்வதைக் கேள்" என்றான்.

## பீமனைக் கங்கையில் வீழ்த்தல்

"ஓ மருமகனே! நீ யேன் கிலேசப்படுகிறாய்? இன்றைய தினம் நாமெல்லோரும் இங்ஙனே இருந்து, மற்ற உன் சகோதரர்களையும் அழைத்துவரச் செய்து விளையாடுவோமானால் அவர்களோடு ஐவரும் வந்து விளையாடுவார்கள். நாம் இன்றிரவில் இங்கேயே சயனித்துக்கொண்டால், நம்மோடு ஐவரும் சயனித்துக் கொள்வார்கள். அப்போது பீமன் கும்பகர்னனைப்போல் தூங்குவான். நாம் நடுராத்திரியில் எழுந்து அவனைக் கட்டித் தூக்கிக் கொண்டு போய்க் கங்கையிற் போட்டுவிட்டால், நீ கொண்டிருக்கிற துன்பம் நீங்கிவிடும். இதுதான் யுக்தி" என்று சகுனி கூற, அதற்குக் கர்னனும் இணங்க, துரியோதனன் அக்கருத்துக் கிசைந்து வெளியில் வந்து, அங்கிருக்கும் காவலாளிகளை அழைத்து "என் சகோதரர்களை இங்குவரச் சொல்லுங்கள்" என்று கட்டளையிட, தூதர்கள் ஓடித் துர்ச்சாதனன் முதலானவர்களுக்குச் சொல்லவே யாவரும் ஒன்றாகத் திரண்டு சிங்காரவனத்திற்கு வந்தார்கள். யாதொரு களங்கமுமில்லாத ஐவரும் அவர்களோடு கூடச்சென்றார்கள். துரியோதனன் வந்தவர்களை நோக்கி, "ஓ சகோதரர்களே!

நாமெல்லாம் இங்கேயே விளையாடுவோம்" என்று பந்தாடல் முதலியவற்றில் தன் சகோதரரோடு கருத்தைச் செலுத்தினன். பாண்டுமக்களும் அவர்களோடு கூட விளையாடினார்கள். பொழுது அஸ்தமனமாயிற்று. யாவரு மொன்றாகக் கூடி இன்றிரவை இங்கேயே கழிப்போமென்று தீர்மானித்துக்கொண்டு அரண்மனையி லிருந்து போஜனத்தைக் கொண்டுவரத் தூதர்களுக்கு உத்தரவு செய்ய, தூதுவர்கள் போசனங் கொண்டுவர, நூற்றுவரும் பாண்டு மக்களும் சகுனியும் கர்னனும் புசித்து, அவரவர்களுக்கு இஷ்டமான இடத்திற் சயனித்துக்கொண்டார்கள். அன்று விளையாடிய களைப்பி னால் யாவரும் அயர்ந்து நித்திரை செய்தாலும் துரியோதனன் கர் னன்சகுனி இம் மூவரும் நித்திரை கொள்ளாமலிருந்து, நடுராத்திரி யில் எழுந்து பீமன் நித்திரை செய்கிற விடத்துக்கு வந்து அவன் நெடுமூச்செறிகிறதைக் கண்டு, நாசிக்கு நேராகச் சென்றாற் காற்றி னால் வருந்த நேரிடுமென்று ஒரு பக்கமாய் வந்து, இந்திரஜித்து இலக் குமணமூர்த்தியை நாகபாசத்தாற் கட்டி யுருட்டினதுபோல் ஊனாங் கொடியாற் பிணித்து, மந்தரகிரியைத் திருப்பாற்கடலி லிட்டது போல் பீமனை யெடுத்துப்போய் கங்கையிற் போட்டுவிட்டார்கள்.

பின்பு பீமன் கங்கையில் விழவே தேகத்திற் சில்லென்று சலம்பட்ட மாத்திரத்தில் துயிலொழிந்து, கை கால்களை யுதறிக் கொண்டெழுந்திருக்கப் பார்த்தான். ஊனாங்கொடி தன்னைப் பிணித்திருப்பது தெரிந்து ஒரு முறைத்த திமிர்விட்டுக் கூவியெ ழுந்தான். உடனே கட்டறுந்து, முன்னொருபோது இந்திரனுக் குப் பயந்து கடலிலொளித்திருந்த மைனாக பர்வதம் சிறகு கொண் டெழுந்ததுபோலக் கங்கையை விட்டுக் கரையில்வந்து ஈரந்துடைத்து, சற்றுநேரம் சென்றபின்பு "அடடா!! நாமென்ன இங்குவந்து கங்கையில் விழுந்தோம். நம்மை யாராவது கட்டிக் கொண்டுவந்து போட்டார்களோ வென்று கருதுவோமானால் நமக் குப் பகைவர் யார்? ஒருவருமில்லையே, நாம் தூக்கத்தினாற் புரண்டுவந்து கங்கையில் விழுந்தோம். அப்படி புரண்டு வந்ததி னால் நம்மை ஊனாங்கொடி சுற்றிக்கொண்டது" என்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டு, இதை ஒருவரோடு சொன்னால் ஏளனஞ் செய்வார்கள் என்று நினைத்து, மீண்டுந்தான் படுத்திருந்தவிடத்தில் வந்து படுத்துக்கொண்டான். இதற்குள் பொழுது விடிந்தது. யாவ ரும் துயிலொழிந்து எழுந்திருந்தார்கள். எப்போதும்போல் அவ

ரவர்கள் தங்கள் கருத்தின்படி விளையாட எத்தனித்தார்கள். துரியோதனன் பீமன்வந்து விளையாடுவதைக் கண்டு, அதிக ஆச்சரியத்தையும்மனவருத்தத்தையு முற்றுச் சகுனி கர்ன னிருவரையும் சைகையா லழைத்துப்போய் "பீமன் வந்து விளையாடுவதைப் பாருங்கள்" என்றான். அவர்களும் உடனே அவனைப் பார்த்து, "சீ! சீ! நாம்கட்டினகட்டுப் பலமான கட்டல்ல" என்று தங்களைத் தாங்கள் நிந்தித்துக்கொண்டு கிணற்றில் கல்லைப் போட்டதுபோற் பிறர்க்குத் தெரியாமல் மௌனமாயிருந்தார்கள். இப்பால் முன் போலவே இருதிறத்தாரும் வேற்றுமை யின்றி விளையாடிவருகிற போது, சிலநாட் சென்றபின்பு துரியோதனன் சகுனியையும் கர்னனையும் தம்பிமார்களையும் ஓரிடத்தில் அழைத்துப்போய் உட்காரவைத்துக்கொண்டு "ஓ ஆப்தர்களே! முன்னம் பீமசேனனைக் கட்டிக் கொண்டுபோய்க் கங்கையி லழுத்திவந்தோம், அதற்குத் தப்பிப் பிழைத்தான். இனி அவனை உயிரோடு வைக்கலாகாது. வைத்தால் நமக்குக் கெடுதி நேரிடும். ஆதலால் அவனைக் கொல்வதற்கு உபாயமென்ன?" என்று வினவ, சகுனி சொல்லுகிறான்—

## சர்ப்பத்தால் பீமனைக் கடிப்பித்தல்

"ஓ மருகனே! நீ யேன் விசாரப்படுகிறாய்? ஒரு நிமைப் போதில் அப் பீமன் உயிரைக் கொள்ளையிடுகிறேன். அதற்கு உபாய மென்னவென்றால், நமது நகரத்திலிருக்கும் பாம்பாட்டுகிற ஜோகிகளிற் சிலரை ரகசியமாக அழைப்பித்து, அவர்களாற் சர்ப்பங்களை விட்டுப் பீமனைக் கடிப்பிக்கச் செய்வோமானால் தக்ஷணமே அவன் மரணமடைவன்" என்று கூற, துரியோதனன் அக்கருத்துக் கிசைந்து, நகரத்திலிருக்கிற ஜோகிகளிற் சிலரை ரகசியமாக அழைப்பித்து, தன்கருத்தை அவர்களுக்கு விளங்க வுரைத்து, அவர்களைச் சிங்காரவனத்தில் வந்திருக்கச்செய்து, தான் பீமனிடத்துக்கு வந்து, "ஓ தம்பி! நாமெல்லாரும் சிங்காரவனத்திற் சென்று விளையாடுவோம் வா" என்று அழைக்கப் பீமன் அதற்கிணங்கி அவர்களோடு சென்று, அன்று பகல் முழுவதும் ஓயாது விளையாடினான். பொழுதுபோகவே துரியோதனன் சில தூதர்களால் அரண்மனையிலிருந்து போஜனத்தை அழைப்பித்து, பீமனோடு மற்ற யாவரையும் வைத்துக்கொண்டு புசித்தான்.

பின்பு பீமனைப் பார்த்துத் துரியோதனன் "தம்பி பீமா! நீ தனியாகப் படுக்கிறவனாகையால் இதோ யிருக்கிற அறையிற் படுத்துக் கொள்" என்று கூறித் தான் தம்பிமார்களோடு போய்ச் சயனிப்பது போலச் சென்று சயனித்திருந்து, சற்றுநேரஞ் சென்றபின் எழுந்துபோய் முன்னமே வந்திருந்த ஜோகிகளை எச்சரித்துவிட்டு முன்போலவே வந்து சயனித்துக்கொண்டான். ஜோகிகள் பீமன் படுத்திருந்த அறைக்குள் வந்து, அவன் கொடிய நித்திரையிலிருப்பதை அறிந்து, இதுதான் சமயமென்று நினைத்து உடனே மந்திரத்தை யுச்சரித்தார்கள். மந்திரதேவதைகள் நல்ல காளசர்ப்பங்களை யெல்லாம் அழைத்து வந்துவிட்டன. ஜோகிகள் அப்பாம்புகளை நோக்கி, "ஓ சர்ப்பங்களே! இதோ படுத்திருக்கிற பீமனைக் கடித்து, உங்கள் விஷாக்கினியினாலே இவனைக் கொல்லுங்கள்" என்று கட்டளையிட, அவ்வாறே அவைகள் பீமனைக்கடித்து விஷத்தைக் கக்கிவிட்டுப் போய்விட்டன. ஜோகிகளும் போய்விட்டார்கள். அப்பால் பீமன் திடுக்கென்று விழித்து, "அடா! இந்த அறையில் மற்குணமென்னு மூட்டுப் பூச்சிகள் மிகுதியாயிருக்கின்றனவாதலால் நம்மைக் -கடிக்கின்றன" என்று தீர்மானித்து, நூற்றுவர் படுத்திருக்கிற அறையுட் சென்று அவர்களோடு தானும் சயனித்திருந்தான். பீமன் வாயுபகவானுடைய புத்திரனாகையால் விஷம் அவனைத் துன்பப்படுத்தவில்லை. பொழுது விடிந்ததும் நூற்றுவரும் துயிலொழிந்து எழுந்தார்கள். அவர்களோடு கூடப் பீமனும் எழுந்து முன்போலவே ஒன்றாகச் சேர்ந்து விளையாடினான். இதைக் கண்ட துரியோதனன் அதிக வியப்பை அடைந்து, கர்னன் சகுனி இவர்களுக்குச் சொன்னான்.

## பீமனை வசிநாட்டிக் குதிப்பித்தல்

அவ்விருவரும் பீமனைக் கண்டு அதிக வியப்படைந்து, இவ்வைவரும் தேவபிண்டமென்று நம்முடைய பெரியோர்கள் கொண்டாடி வருவது சரியாகவே யிருக்கின்றது. இப்பீமனுக்கு எதிலும் அழிவு வரவில்லை. இனி மற்றொரு தந்திரத்தினாற் கொலை செய்ய வேண்டுமென்று கருதி, சில நாட்சென்ற பின்பு நகரத்திலிருக்குந் தச்சர்களை இரகசியமாக அழைப்பித்து, கங்கைத் துறையில் எழுக்களினாலும் இரும்புகளினாலும் செம்மரங்களினா

லும் விசினாட்டச் சொல்லித் திட்டஞ் செய்து, துரியோதனன் பீமனிடத்து வந்து "தம்பி பீமா! இக்காலம் வெப்பமா யிருப்ப தால் கங்கைத்துறைக்குச் சென்று நீர் விளையாடலாம் வரு கிறாயா?" என்றழைக்க, பீமன் அதற்கிணங்கித் துரியோதன னோடு கங்கைத்துறையருகிற் சென்றான். துரியோதனன் "தம்பி பீமா! நீ நீர் விளையாட்டில் திறமையாள னாயிற்றே! இத்துறையி லிருந் தெழும்பி அத் துறையிற் குதிப்பாயா?" என்று வினவ, கிஞ்சித்தேனும் கபடமில்லாத பீமன் "ஓ அண்ணேன்! இக்கங் கைத் துறையில் இங்கிருந்து அங்கு குதிப்பதும் அங்கிருந்து இங்கு குதிப்பதுமா பெரிது? இதோ குதிக்கிறேன் பார்" என்று சொல்லிக் கங்கைத்துறையை நோக்கினான். தெய்வானுகூல மாக இவன் கண்ணுக்கு ஜல ஓட்டமான கங்கைத் துறையில் வண்டு கள் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. அவைகளைப் பீமன் கண்டு அதிக வியப்படைந்து, "ஆ! ஆ! இதென்ன ஜல ஓட்டமான கங்கைத் துறையில் வண்டுகள் உட்கார்ந்திருக்கின்றன" என்று உய்த்து நோக்கும் போது ஜலத்துக்கு மூன்றங்குலங் கீழ் வசிமுனைகள் தோற்றப்பட்டன. அவைகளைப் பீமன் கண்டு, "நமக்கென்ன? சொன்னவாக்குத் தப்பாமல் வசியைக் கடந்து அப்பாற் குதிப் போம்" என்று கருதி அங்கிருந்து ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து வசி யில்லாத இடத்திற் குதித்து விளையாடி மற்றொரு துறையாகக் கரை யேறினான். துரியோதனன், பீமன் வசியைக் கடந்து குதித்த தற்கு மெச்சி, இந்த வசிக்குந் தப்பினனே யென்று கனவருத்த முற்றுத் தானும் ஒரு புறத்திற் குதிப்பவன்போலக் குதித்து வெளியே வந்து, பீமனோடு அரண்மனை சேர்ந்து, சகுனி கர்னன் தம்பிமார் இவர்களோடு கலந்து பேசிக்கொண்டு, முன் போலவே பாண்டு மக்களோடு வேற்றுமை யின்றி மருவியிருந்தான்.

---

## பீமனுக்கு விஷவிருந்திடல்

இவ்வாறு சிலநாட் சென்ற பின்பு, துரியோதனன் கர்னனை யும் - சகுனியையும் ஓரிடத்தில் தனித்து வரும்படி செய்து, "ஓ ஆப்தர்களே! இன்னும் என்ன செய்யலாம்; பலவித தந்திரஞ் செய்தோம். பீமன் அந்தத் தந்திரங்களுக் கெல்லாந் தப்பிப் பிழைத்தான். இப்போதென்ன யோசிக்கிறீர்கள் சொல்லுங்கள்"

என்ருன். அப்போது சகுனி "ஓ மருமகனே! அந்தப் பீமனைக் கொல்வது பெரிதா? அதற்காக நீ வருத்தப்படாதே. நமது வேலைக்காரரிற் சிலரை அழைத்துச் சிங்காரவனத்திற் சமையற் செய்யத் திட்டப்படுத்தி, அன்னத்திலும் பதார்த்தங்களிலும் வசநாபியைக் கலந்து, நமக்கு நாபியில்லாமல் வேறே சமைக்கத் திட்டஞ் செய்து, "பீமனை மாத்திரம் சாப்பிடக் கூப்பிட்டால் அவன் போஜனப் பிரியனுகையால் வருவான். நாம் எல்லோரும் ஒன்ருகக்கூடி உட்கார்ந்து நஞ்சிட்ட அன்ன முதலியவற்றை அவனுக்கிட்டு, நல்ல அன்னத்தை நாம் புசிப்போம். பீமன் புசித்துத் தலைமயக்குற்று இறப்பான்" என்று கூற, துரியோதனன் அம்மான் கூறியபடி வேலைக்காரர்களை இரகசியமாக அழைத்து சமையற் செய்யவிட்டு, பீமனிடத்துக்கு வந்து "தம்பி பீமா! இன்றையத் தினம் நமது சிங்காரவனத்தில் விருந்து நடத்தப்போகிருேம்; நீயும் வருகிருயா?" என்று கேட்க, பீமன் அதற்கு ஒத்துக்கொண்டு அவர்களோடு சிங்காரவனத்திற் சென்று, கைகால்களைச் சுத்தி செய்து, பொற்பீடத்திலே தனித்தனி துரியோதனன் சகுனி கர்னன் இவர்களோடு தானும் உட்கார்ந்தான். வேலைக்காரர்கள் நஞ்சிட்ட அமுதைப் பீமனுக்குப் படைத்து, நஞ்சில்லாத அமுதைத் துரியோதனன் முதலானவர்களுக்குப் படைத்தார்கள். பீமன் அவ்வன்னத்தையும் பதார்த்தத்தையும் விடாமற் புசித்தான். உடனே நாபியின் தீக்ஷண்ணியத்தால் தாக மேலிட்டு, அவன் வேலைக்காரரைத் தண்ணீர் கேட்டான். இந்த வசனங்களைத் துரியோதனன் அறிந்து, வேலைக்காரரை எச்சரித்து, "சீக்கிரத்தில் தாகத்துக்குக் கொண்டு வந்து கொடுங்கள்" என்று மிகுந்த பரிவோடு சொல்லுகிறவனைப் போலே சொல்ல வேலைக்காரர் அந்த ஜலத்திலும் அதிகமாக விஷத்தைக் கலந்து கொண்டு வந்து கொடுத்தார்கள். பீமன் அந்நீரை வாங்கி அருந்திஞன். உடனே மயக்கம் அதிகமாகி ஸ்மரணைதப்பிப் பூமியில் விழுந்தான். பீமன் பூமியில் விழுந்தவுடனே துரியோதனன் முதல் மூவரும் எழுந்து வந்து, "நமதெண்ணப்படி இன்று முடிந்ததாகையால் இனி என்ன யோசனை? இவனை இரகசியமாகக் கொண்டுபோய்க் கங்கையிற் போடவேண்டும்" என்று யோசித்து, இவர்கள் மூவருங்கூடி பீமனைவாரி எடுத்துக் கொண்டுபோய்க் கங்கையில் ஒரு பக்கமாகப் போட்டுவிட்டுச் சிங்காரவனத்துக்கு வந்து, சஞ்சலமின்றிக் கைகால்களைச் சுத்தி செய்து கொண்டு, சந்தனம் புனுகு கஸ்தூரி

முதலியவற்றைப் பூசி, புஷ்பமாலைகளை யணிந்து ஆடையாபரணாதிகளை அழகா யுடுத்துக் கொண்டு, வேடிக்கையாய் மற்றத் தம்பிமார்களையு மழைத்துக் கொண்டு அரண்மனை வந்து சேர்ந்தார்கள்.

---

## பீமன் நாகலோகஞ் சென்று விஷாமுத பானஞ் செய்தல்

---

இவ்வாறு மகாகளிப்புடன் அரண்மனை வந்து சேர்ந்த யாவரும் திரிதராஷ்டிரனையும் பீஷ்மரையும் வணங்கி, "ஓ ஐயன்மீர்! நாங்கள் பெருநாள் கொண்டாட விருப்புற்றிருக்கிறோம். அந்நாளைக் கொண்டாட உத்தரவு கொடுங்கள்" என்று வினவ அப்பெரிய அரசர்கள் அவர்கள் கருத்துக்கிசைந்து, "அப்படியே பெருநாளைக் கொண்டாடுங்கள்" என, துரியோதனன் தன் தம்பிமார்களோடும் சிநேகிதர்களோடும் மகா களிப்புடன் பெருநாளைக் கொண்டாட யத்தனித்தான். இந்தச் செய்தி நகரத்தாருக்குத் தெரிந்து, தங்கள் தங்கள் வீடுகளையெல்லாம் நன்றாய் அலங்காரஞ் செய்து, தோரணங்கள் கட்டி வீதிகளைச் சிங்காரித்தார்கள். துரியோதனன் இவ்வாறான விளையாட்டிலிருக்கிறான். அங்கே கங்கையாற்றில் பீமன் விழுந்த விடம் பிலத்துவாரமா யிருந்தது. பீமன் அப்பிலத்துவாரத்தின் வழியிற் சென்று, அதல விதல சுதல தராதல இரசாதல மகாதலமென்னும் ஆறு உலகங்களையுங் கடந்து பாதாள லோகத்திற் போய் விழுந்தான். விழுந்தவுடன் அங்கிருக்கும் நாகவீரர்களாகிய பெரும்பாம்புகள் கண்டு, "ஓ! ஓ! பூலோகத்திலுள்ளவன் இவ்வுலகத்துக்கு வந்து விட்டான்" என்று சினங்கொண்டு, "இவனை உயிரோடு வைக்கலாகாது" என்று நினைத்துக் கும்பு கும்பாகக் கூடி பீமனைக் கடித்தன. பெரும்பாம்புகள் கடித்தமாத்திரத்தில் வசநாபியின் கொடுமை அழிந்து, பீமன் துயின்றெழுந்தவன் போல் எழுந்தான். அந்நாகங்கள் வாடாமலெழுந்த பீமனைப்பார்த்து, "நீ யார்? நீ இங்கே வந்த காரியமென்ன?" என்று வினவ, பீமனுக்குப் பேசச் சக்தியில்லாமற் கைச்சைகையால் குடி நீர் கேட்டான். நாகங்கள் அதைக் கண்டு தங்கள் அரசனாகிய வாசுகியை வணங்கி, "ஓ சுவாமி! யாரோ ஒரு மனிதன் பிலத்துவாரத்தின் வழியாய் வந்து விழுந்தான். விழுந்தவனை யாங்கள் கூடி

ன்றாய்க் கடித்தோம். அவ னிறந்துபோகாமல் எழுந்து எங்களைக் குடி நீர் கேட்கிறான்" என்று சொல்ல, வாசுகி வியப்படைந்து, "ஓ நாகங்களே! நீங்கள் கடித்தும் இறக்காம லிருக்கிறா னல்லவா? இதோ யிருக்கிற விஷாமுத கலையங்களைக் கொண்டுபோய்க் கொடுங்கள். எத்தனை கலையங் குடிக்கிறானோ பார்ப்போம். இக்குடங்களி லிருக்கிற விஷாமுதத்தைக் குடித்தும் இறக்காதிருந்தால், அவன் வாயுபகவானுடைய அம்சமாயிருக்கவேண்டும். ஆகையால் உடனே எனக்குத் தெரிவியுங்கள்" என்றான். அவ்வாறே அந்நாகங்கள் விஷாமுத கலையங்களை எடுத்து வந்து பீமனுக்குக் கொடுக்கவே பீமன் வாங்கி வாங்கி எல்லாக் கலையங்களையும் புசித்துத் தாகந்தணிந்து, முன்னிருந்த பலத்தைவிட அதிக பலவானாகி மகாரூபத்தோடு விளங்கினான். இதனை நாகங்கள் கண்டு ஓடி வாசுகிக்குத் தெரிவித்தன. அதைக் கேட்ட வாசுகி உடனே எழுந்து வந்து பீமனைப் பார்த்து, "நீ யார்? இவ்விடத்துக்கு என்ன காரணமாக வந்தாய்" என்று வினவ பீமன் வாசுகியை வணங்கி "ஓ நாகேந்திரா! நான் சந்திரவமிச சிகாமணியாகிய சந்தனு மகாராஜனுடைய பெயரனாகும். பாண்டுமகாராஜாவின் மனைவி குந்திதேவியின் புத்திரன். என் பெரிய தந்தையின் புத்திரனாகிய துரியோதனன் சிங்காரவனத்தில் விருந்து செய்தான். அந்த விருந்துக்கு நான் போயிருந்து அன்னம் அருந்தினேன். அதுதான் யானறிவேன். இவ்விடம் வந்தது எனக்குத் தெரியாது" என்று கூற வாசுகி தன் ஞானதிருஷ்டியால் நோக்கித் துரியோதனன் செய்த சூதை யுணர்ந்து, அதைத் தன் மனதுக்குள் வைத்துக் கொண்டு பீமனைத்தன் அரண்மனைக் கழைத்துப்போய் போஜன மிட்டு, கலவைச் சாந்தும் புஷ்பமாலையும் தாம்பூல முதலானவைகளு மளித்துத் தனக்கொப்பாக வைத்திருந்தான்.

இங்கே தருமராஜன் - பற்குனன் - நகுலன் - சகாதேவன் - இந்நால்வரும் சகோதரனாகிய பீமனைக் காணாமற் கனவருத்தமுற்று, நாடுநகர முழுதுந் தேடி, கண்களில் ஆறுபோல் நீர் சொரியக் கோவென்று புலம்பிப் போய்த் தாயாகிய குந்திதேவியை வணங்கி, "ஓ அம்மணி! எங்கள் சகோதரனாகிய பீமன் எங்களை விட்டுப்பிரிந்தான். அவன் எங்கேயோ அலுவலாகப் போயிருப்பான் வருவானென்று இரண்டு மூன்று நாள் பார்த்தோம். வராதிருப்பதைக் கண்டு பலவிடங்களில் தேடித் திரிந்தோம். இதுவரையில்

அவனைக் காணேம். தாங்கள் அவனுக்கு ஏதாவது வேலை இட்டீர்களா ?" என்று உருகின சிந்தையும் அழுத கண்ணுமாக நின்று வினவினார்கள். இவ்வசனங்களைக் கேட்ட குந்திதேவி இறந்தவளைப்போல் ஸ்மரணை யற்றுக் கீழே விழுந்தாள். சற்று நேரங் கழித்து மூர்ச்சை தெளிந்து, "ஆ! மகனே பீமா!" என்று கதறிப் புத்திரர்களைப் பார்த்து "உங்களையல்லாமல் நான் பீமனுக்கு வேலையிடுவேனா? ஒருவேளை உங்கள் மூதாதை யல்லது உங்கள் பெரிய தந்தை பீமனுக்கு வேலையிட்டார்களோ என்னவோ? அவர்களிடத்திற் சென்று வினவுவோம் வாருங்கள்" என்று நான்கு மக்களையும் அழைத்துக்கொண்டு பீஷ்மரிடத்துச் சென்று வணங்கி, "என் இளைய குமாரனாகிய பீமன் எங்கே?" என்று கேட்டாள். பீஷ்மர் திடுக்கிட்டுச் சற்று ஆலோசித்து, "ஓ! ஓ! பீமன் பலவானாதலால் துரியோதனன் பொறாமை கொண்டு என்ன சூது செய்து கொன்றுவிட்டானோ? மற்றென்னவோ" என்று ஐயுற்றுக் குந்திதேவியை நோக்கி, "ஓ அம்மணி! பீமனை நான் கண்டு நெடு நாளாயிற்று! 'பதறாத காரியம் சிதறாது' துரியோதனன் பெருநாட் கொண்டாடுகிறபடியால் ஒருவேளை அங்கிருந்தாலு மிருப்பான்: யாரையாவது போய்ப் பார்த்துவரச் சொல்லுகிறேன். சற்றுப் பொறு" என்று கூறிச் சில தூதர்களை அழைத்து, "பீமன் பெருநாள் கொண்டாடுகிற இடத்தில் இருக்கிறானா பார்த்து வாருங்கள்" என்று கட்டளையிட்டார். தூதர் சென்று எங்குந் தேடிப் பீமனைக் காணமல் ஓடிவந்து பீஷ்மரை வணங்கி, "சுவாமி! எங்கும் பீமராஜனைக் காணேம்" என்று சொல்லப் பீஷ்மரும் குந்திதேவியும் தருமராஜன் முதலாகிய நால்வரும் மிகுந்த கிலேசமுடையவரானார்கள். இவர்களில் பீஷ்மர் குந்திதேவியை நோக்கி "ஓ அம்மணி! நீ அஞ்சாதே. பீமன் உயிருட னிருக்கிறதும் இறந்ததும் பார்த்துச் சொல்லுகிறேன்" என்று ஒரு துணிவு கூறிச் சோதிட சாஸ்திரத்தில் வல்லவராகையால் ஆரூடம் பார்த்தார். பீமன் உயிருடனிருக்கிறதாகத் தெரிந்தது. உடனே குந்திதேவியைப் பார்த்து "ஓ அம்மணி உன் புத்திரனுக்கு அழிவில்லை. நாளதுவரையில் அவன் உயிருட னிருக்கிறான். இன்றைக்குள் அவன் வருவான். அஞ்ச வேண்டாம்" என்று அவள் மனதைத்தேற்றி அந்தப் புரத்துக்கு அனுப்பினார். குந்திதேவி அந்தப்புரத்துக்கு வந்து, தெய்வக்குறி தீபக்கு முதலிய வெல்லாவற்றையும் பார்த்து மனநொந் திருந்தாள்

தருமராஜன் முதலான நால்வரும், கிழக்கு - தெற்கு - மேற்கு - வடக்கு என்கிற நாற்றிசைக்கும் நால்வராகச் சென்று, கண்ணெளிக் கெட்டின வரையில் தேடி நின்றார்கள். இப்படி நிற்கிற தருணத்தில் அங்கே பீமன் வாசுகியை நோக்கி, "ஓ நாகேந்திரா! பூவு மணமும் போலவும் - பாலும் நீரும்போலவும் வேற்றுமை யின்றிப் பிரியாமலிருந்த என் சகோதரர்களும் என் தாயும் என்னைக் காணாமல் வருந்துவார்க ளாதலால், நான் பூலோகத்துக்குப் போகவேண்டும்" என்று வேண்ட வாசுகி பீமனை நோக்கி "ஓ பீமராஜனே! இங்கு வந்ததற்குப் பெரிதான லாபம் நீ அடைந்தாய். அஃதென்னவெனில் நீ தாகங் கேட்டபோது விஷாமுத கலயம் அறுபத்து நான்கு எடுத்துக் கொடுத்தனுப்பினேன். அக்கலயங்களை யெல்லாம் அருந்திச் செரிப்பித்துக் கொண்டாய். அவைகளால் உனக்கு முன்னமிருந்த பலத்தைவிடப் பதினாயிரங் கஜேந்திர பலமும் கிடைத்தது. இனி உலகத்தில் உன்னைவிட பலவானில்லை. ஆதலால் என் குமாரத்தியை விவாகஞ் செய்து கொண்டு உன் பதிக்குப் போ" என்று விளம்ப பீமன் "ஓ நாகேந்திரா! உமது திருவருளாலேதான் அடியேனுக்கு அதிகபலங் கிடைத்தது. அதற்கு நான் வந்தனஞ் செய்கிறேன். உமது குமாரத்தியை விவாகஞ் செய்துகொள்ளென்று கட்டளையிடுகிறீர். அக்கட்டளைப் படி நடக்க ஒரு தடை யிருக்கின்றது. அஃதென்னவெனில், எனக்குத் தமையனிருக்கிறார். அவருக்கு இன்னும் விவாகமில்லை. ஆகையால் தாங்கள் கூறிய கட்டளையைத் தள்ளக் கருத்துடையவனா யிருக்கிறேன். அதற்காகத் தாங்கள் கோபிக்காமல் என்னை யாதரித்து, என் சகோதரரைக் காணக் கிருபை செய்யும்" என்று வேண்ட வாசுகி மகிழ்ந்து, சில நாககுமாரர்களை அழைத்து, "இந்தப் பீமனை அத்தினபுரத்துக் கருகில் விட்டுவாருங்கள்" என்று கட்டளையிட்டுப் பீமனுக்கு மகரகுண்டல ஆரகேயூர கடக கங்கண முதலாகிய ஆபரணங்களை யளித்து ஆசீர்வதித்து அனுப்புவித்தான். உடனே நாககுமாரர்கள் பீமனை அழைத்துக்கொண்டு பிலத்துவாரத்தின் வழியாய்ச் சென்று, அத்தினபுரத்துக் கருகில் வந்து பீமனை நோக்கி, "ஓ அரசனே! இதோ நாம் அத்தினபுரம் வந்தடைந்தோம், எங்களுக்குவிடைதருவீராக" என்று விடைபெற்று நாககுமாரர்கள் மீண்டும் நாகலோகம்போய்ச் சேர்ந்தார்கள். பீமன் அத்தினபுரத்திற்குச் சென்றான். சென்றவுடன் அந்நகரத்திலிருப்பவர்கள் யாவருங் கண்டு மகிழ்வுகொண்டு கைதட்டி, "இதோ

பீமராஜன் வந்துவிட்டான் வந்துவிட்டான்" என்று அலைகடல் முழக்கம்போல் ஆரவாரித்தார்கள். இந்த ஓசையைக் கேட்ட தருமராஜன் முதலானவர்களும் ஓடிவந்து பீமனைக்கண்டு, மிகுந்த ஆருமையோடு கட்டித்தழுவி, "எங்குற்றாய் பீமா?" என்று வினவி அரண்மனைக்கு அழைத்துப் போயினார். பீமனவன் அங்கிருந்த பீஷ்மர் திருதராஷ்டிரன் முதலான பெரியோர்களுக்கு நமஸ்காரஞ் செய்து, குந்திதேவி முதலாகிய அன்னையர்களையும் வணங்கினான். அவர்கள் இவனை ஆசீர்வதித்து, வாரித்தழுவிக் கட்டி முத்தமிட்டார்கள்.

இவர்களில் பீஷ்மர் பீமனை யழைத்து, "அப்பா பீமா! நீ இந்த எட்டுநாள் பரியந்தம் எங்கிருந்தாய்?" என்று வினவ பீமன் "ஓ ஐயா! என் தமையன் துரியோதனன் சிங்காரவனத்தில் செய்த விருந்துக்கு என்னை யழைத்தான். அவ் விருந்துக்குப் போய் நான் புசித்தேன். பின்பு பாதாள லோகத்திற் சென்றிருந்து நாகேந்திரனாகிய வாசுகியின் கிருபையினால் இவண் வந்தேன்" என்று கூறித் தன்னை வினவியவர்களுக் கெல்லாம் இவ்வாறே புகன்றான். பீஷ்மர் மிகுந்த யுக்திசாலியாகையால் இவ் வசனங்களைக் கேட்ட மாத்தரத்தில், "ஓ! ஓ! ஏதோ மாறுபாடு நடந்திருக்கிறது" என்று தன் கருத்தில் நிதானித்து, இளமையிலேயே இவ்வளவு கெடுபுத்தியுடைய துரியோதனன் வரவர விபரீதத்தை விளைவிப்பான். இனி நாம் சும்மா விருப்பது தகுதியல்ல. அரசர்க்குரிய வில்வித்தை முதலியவற்றைக் கற்பிக்கவேண்டும். நாமே கற்பிப்போமென்றால், ஒருவன் சாமர்த்தியமுள்ளவனாக இருப்பான், ஒருவன் மந்த புத்தியுள்ளவனாக இருப்பான். கடைசியாக நாம் பாரபக்ஷத்தோடு கற்பித்ததாக எண்ணிப் பெற்றோர் நம்மைத் தூற்றுவர். அவை கட்கும் அஞ்சாமல் கற்பிப்போமென்றால். சிறுவர்கள் நம்மிடத்தில் பந்தம் பாராட்டுவதால் நமக்குச் சற்றும் பயப்படார். வில்லாசிரியனைக் கொண்டே கற்பிக்கவேண்டும்" என்று தீர்மானித்து, "இதற்கு யாரை நியமிக்கலாம்? வில்லாசிரியன் எங்கிருக்கிறான்?" என்று தம்மிடத்திலிருக்கும் பெரியோர்களை உசாவிய போது அப் பெரியோர்கள் சொல்லுகிறார்கள்:—

---

## கிருபாசாரி வரலாறு

"ஓ மண்டலேஸ்வரா! முன்னம் பிரமன் பௌத்திரராகிய சரத்துவந்த முனிவர் ஓர் அடர்ந்த வனத்திற் சென்று அருமையான தவஞ்செய்தார். அத்தவத்தை அழிக்க இந்திரன் தன்னுடகசாலைப் பெண்களில் அரம்பை என்பவளை அழைத்து, "ஓ பெண்ணே! பூலோகத்திற் சரத்துவந்தர் அருமையான தவஞ் செய்கிறார். நீ சென்று அத்தவத்தை அழித்து வா" என்று கட்டளையிட அரம்பை அக்கட்டளைப்படி வீட்டிற்சென்று ஸ்நானஞ் செய்து நல்ல ஆடை ஆபரணங்களை அணிந்து, காததூரமணக்கும் பரிமளத்திரவியங்களைப் பூசி, மலர்மாலை சூடி, இவளைக் கண்ட திவ்யக்கியான ஸ்வரூபிகளெல்லாம் எப்படி இவளைப் பின்றொடருவார்களோ அப்படியே இவள் சாயலைக் கண்ட மயிலும் குரலோசையைக்கேட்ட குயிலும் நடையைப் பார்த்த அன்னமும் பின்றொடரப்பூலோகத்தி லிறங்கி, சரத்துவந்தர் தவஞ் செய்யும் வனத்தில் வந்து அவர் நோக்கம் தன்மேற் பாயும்படியான இடத்தில் நின்றாள். சரத்துவந்தர் கண்விழித்துப் பார்த்து, தனக்கெதிரில் நிற்கிற அரம்பையைக் கண்டு மிகுந்த காதலோடு, "இவ்வளவு அழகு பொருந்திய பெண் உலகத்தி லிருக்கிறார்களா" என்று நினைத்துத் தன் கருத்தைக் கிஞ்சித்துக் காமத்தின் வழியிற் செலுத்தினார். உடனே வீரியம் வெளிப்பட்டு இரண்டு துளியாக அவரிருந்த தருப்பாசனத்தில் விழுந்தது. இந்தச் செய்கையை அரம்பை யறிந்து, "இனி நின்றோமாகிற் சாபம் நேரிடும்" என்று கருதி உடனே மறைந்து சொர்க்கலோகம் போய்ச் சேர்ந்தாள். சரத்துவந்தர் தமது வீரியம் வெளிப்பட்டதைக் குறித்து மனவருத்த மடைந்து, "மிஞ்சிப் போனதற்கு வியாகூலப்பட்டாற் பயன் என்ன" என்று ஒரு விதமாகத் தேறி, தன் கையிலிருந்த வில்லையும் திவ்யாஸ்திரங்களடங்கிய அம்புக்கூட்டினையும் அந்தத் தருப்பாசனத்தில் வைத்து விட்டு, மற்றொரு வனத்திற் சென்று நற்றவம் புரிந்திருந்தார். தருப்பாசனத்தில் விழுந்த இரண்டு துளி வீரியமும் மஹாமுனிவரது விந்தாதலாற் பழுதுபடாமல், ஒரு துளி பிள்ளையாகவும் மற்றொரு துளி பெண்ணாகவும் தோன்றி அழுதுகொண்டிருந்தன. அப்போது உமது பிதாவானவர் இளவரசுப் பட்டம் நீங்கி மகுடாபிஷேகஞகிச் செங்கோற் செலுத்தி வந்து, ஒரு நாள் வேட்டையாடக் காதல்கொண்டு, வில்லியர் - வலைஞர் - மந்திரிகள் - பிரதானி

கள் முதலானவர்கள் புடைசூழ நான்குவகைச் சேனைகளோடுங் காட்டிற் சென்று, அநேக மிருகங்களை அதமாக்கி வனத்திற்கு வரும்போது அச் சிறுவர்கள் அழுகுரலைக் கேட்டு விரைவிற் சென்று அம்மக்களை நோக்கி வியப்புற்று, "ஓ! ஓ! இம்மக்களைப் பார்த்தால் மஹா சுந்தரத்தோடு விளங்குகிறார்கள். இவர்களைப் பெற்ற தாய் தந்தையர் எங்கேயாவது அருகிலிருப்பார்கள். வனத்தைச் சுற்றிப் பார்த்து வரவேண்டும்" என்று தூதர்களுக்குக் கட்டளையிட்டார். தூதர்கள் வனமுழுதும் பார்த்துவந்து அரசனை வணங்கி, "ஓ சுவாமி! இவ்வனமுழுவதும் முனிவர் மயமே யன்றி இக்குழந்தைகளுக்கு உரியவரைக் காணோம்" என்று கூற, அரசன் மந்திரிகளை நோக்கி "ஓ மந்திரிமார்களே! பூலோகத்தில் அரசரா யிருக்கிறவர்கள் உலகிலுள்ளவர்க்கு யாதொரு குறைவுமுறாதிருக்க நடக்கவேண்டும். சத்துருவா யிருந்தபோதிலும் காட்டில் நின்று தவித்தால் அவர்களை ஆதரிக்கவேண்டியது நமது கடமை. இப்படி மநுநீதி முறையிடுகின்றதை யுணர்ந்தும், மிகவும் இளமையாகிய இம் மக்களது அழுகுரலைக் கேட்டும் விட்டு விட்டுப் போவது யோக்கியதையல்ல. நாம் எடுத்துப்போய் வளர்த்தால் இச்சிறுவருக்கு உரியவர்கள் ஒருவேளை நம்மை வந்து கேட்டால் அப்போது தடை சொல்லாமல் அவர்களிடத்து இச்சிறுவர்களைக் கொடுத்துவிடலாம். ஆதலால் இச்சிறுவர்களை இப்போது நாமெடுத்துப் போவோம்" என்று அவர்களோடுகூட வைத்திருந்த வில்லையும் அம்புக்கூட்டையும் அச்சிறுவர்களையும் மந்திரிகளிடம் ஒப்புவித்து அரண்மனைக்குக் கொண்டு வரும்படி கட்டளையிட்டு, அரண்மனை வந்தவுடன் அச்சிறுவர்களை மிகுந்த அன்புடன் வளர்த்து வந்தார். சரத்துவந்தர் ஒருநாள் "நமது வீரியம் எவ்வாறாயிற்றோ பார்த்து வருவோம்" என்று அவ்வனத்துக்கு வந்து தாமிருந்த இடத்தை நோக்கும்போது, வில்லும் அம்புக்கூடு மில்லாமையைக் கண்டு "நமது வீரியம் உருவாகிச் சிறுவர்களாக இருக்கவேண்டும். அச்சிறுவர்களைக் கைப்பற்றினவர் அவ்வில்லையும் கைப்பற்றி யிருக்கவேண்டும்" என்று நினைத்து, அச்சிறுவர்களை யார் கொண்டுபோயினர் அறியவேண்டுமென்று தமது ஞான திருஷ்டியால் நோக்கி, உமது பிதாவாகிய சந்தனுமஹாராஜன் எடுத்துப் போனதை யுணர்ந்து, இந்நகரத்துக்கு வந்து அரசனைக் கண்டார். அரசன் திடுக்கென்றெழுந்து, சரத்துவந்த முனிவரைப் பொற்பீடத்தி லிருத்திச் சோடச உபசாரமுஞ் செய்து, பயபக்தியுடனே எதிர் நின்று "ஓ சுவாமி!

எளியேன் மீது கிருபை வைத்து இவ்விடம் எழுந்தருளியதற்கு யான் என்ன புண்ணியஞ் செய்தேன்? இம்மனையை நாடிவந்த காரியமென்ன? ஏதாவ திருந்து வெளியிட்டால் தங்கள் கருத்தின் படி நடக்க விருப்புற்றிருக்கிறேன்" என்று வேண்ட, சரத்துவந்த மஹாமுனிவர் வணங்கிய அரசனுக்குப் பல ஆசிகள் வழங்கி "ஓ மண்டலாதிபதியே! நீர் வேட்டையாடி முனிவர் தவஞ் செய்யும் வனத்தில் வந்தபோது, என் வீரியத்தா லுண்டாகிய ஒரு பிள்ளை யையும் ஒரு பெண்ணையுங் கண்டு எடுத்துவந்தீரே; அக்குழந்தை களை நான் பார்க்கவேண்டும். கொண்டு வாரும்" என்றார். அரசன் அருகிலிருந்த மந்திரிகளை நோக்கினார். மந்திரிகள் அரசனது குறிப்புணர்ந்து அக்குழந்தைகளை எடுத்துவந்து அரசனிடம் கொடுத்தார்கள். அரசன் அக்குழந்தைகளைச் சரத்துவந்த முனிவ ரிடத்துக் கொடுத்து, "ஓ சுவாமி! தேவரீர் சொத்து தேவரீரைச் சேர்ந்தது" என்று வந்தனத்தோடு வணங்கினார். சரத்துவந்தர் அரசனை வாழ்த்தி இரண்டு மக்களையும் எடுத்துப்போய் தம்மிருப் பிடத்தில் வைத்து வளர்த்து, பிள்ளைக்குக் கிருபனென்றும், பெண் ணுக்குக் கிருபி யென்றும் நாமகரணமிட்டு, புத்திரனுக்கு - நாலு வேதம் - ஆறு சாஸ்திரம்-அறுபத்துநான்கு கலைக்கியான முதலிய வற்றைப் போதித்து, தநுர்சாஸ்திரத்தையும் - அதனது மர்மங்களை யும் - நன்றாக உணர்த்திப் பூரணமாகக் கற்பித்தார். அதன்மேல் வில்லாளிகளாகிய சகல அரசர்களும் துதிக்க அப் புத்திரசிகாமணி கிருபாசாரியென்று பெயர்பெற்று இதோ இருக்கிறார். இவரைக் கொண்டு நமது சிறுவர்களுக்கு வில்வித்தையைக் கற்பித்தால் நன்மையாயிருக்குமென்று சொல்ல, பீஷ்மர் அவரை அழைத்துச் சொல்லுகிறார்.

---

## துரோணாசாரி வரலாறு

---

"ஓ சுவாமி! அரசுக்குரியவர்கள் திரிதராஷ்டிரனுடைய புத் திரர்கள் நூறுபேர், பாண்டுபுத்திரர்கள் ஐந்துபேர். இந்த நூற் றைந்து புத்திரர்களுக்கும் தாங்கள் கிருபைகூர்ந்து இன்றுமுதல் வில்வித்தையைக் கற்பிக்க வில்லாசிரியராக இருக்கவேண்டும்" என்றார். கிருபாசாரி அதற்கு ஒத்துக்கொண்டு, நல்லமுகூர்த்தத்தில் நூற்றைந்து பேர்களையும் அழைப்பித்துக் குருவணக்கஞ் சொல்லி, வில்வித்தையைக் கற்பித்து வந்தார். குரு குமாரர்களாகிய இந்த

நூற்றைந்து பேர்களும் வில்வித்தையைக் கற்றுக்கொள்வதை நாள்தோறும் பீஷ்மருணர்ந்து, "இப் புத்திரர்களால் அதிக நல முண்டாகுமாதலால் எத்திசை யரசர்களும் பத்திசெய்து வணங் கும்படி நேரிடும். அதற்கு மூலகாரணமாக இருக்கிற வில்வித் தையை இன்னு மேலானவரைக் கொண்டு அதிகமாகக் கற்பிக்க வேண்டும்" என்று கருதியிருந்தார்.

ஜனமேஜயனே! முன்னொருபோது பாரத்துவாஜ மஹாமுனி வர் ஒரு வனத்திற்சென்று தவஞ்செய்து துரோண கும்பம் நிறுத்தி, மந்திராக்ஷதை முதலிய பூசா திரவியங்களாற் கருத்தனைக் கருத் தில் வைத்து ஆராதித்து அருச்சனைசெய்து வந்தார். இந்திரன் இந்தப் பாரத்துவாஜ மஹாமுனி செய்துவருகிற தவத்தை அழிக்க வேண்டுமென்று கருதி, மேனகையை அழைத்து, "ஓ பெண்ணே! பாரத்துவாஜ மஹாமுனி அருமையான தவஞ் செய்கிறார். அத் தவத்தாற் சொர்க்கத்துக்குக் கிஞ்சித்து வருத்தம் நேரிடும். அவ் வருத்தம் நேரிடாததற்கு முன்னம் நீ சென்று அவர் தவத்தை அழித்துவா" என்று கட்டளையிட, மேனகை இந்திரனை வணங்கி, "ஓ சுவாமி! சொர்க்க மத்திய பாதாள லோகங்களுக்குத் தலைமை யான அரசராயிருக்கிற தாங்கள் ஒரு கட்டளை யிட்டால் என்னால் மறுக்கத் தரமா? இதோ சென்று அந்தப் பாரத்துவாஜர் செய்கிற தவத்தை அழித்து வருகிறேன்" என்று விடைபெற்று வீட்டிற் சென்று ஸ்நானஞ்செய்து பரிமளவர்க்கங்களை மின்னலைப் பழித்த தேகத்தில் திமிர்ந்து, புஷ்பமாலை சூடி, ஆடை ஆபரணங்களினால் அலங்காரஞ் செய்து, நிலைபெற்ற தவசிரேஷ்டசிகாமணியாகிய முனி வர்களெல்லாரும் மனங்கலங்கிக் காமவெறிகொண்டு அலையும்படி சொர்க்கத்தை விட்டுப் பூலோகத்திற் சென்று பாரத்துவாஜர் தவஞ் செய்யும் வனத்தில் வந்து, அவரை நோக்கி அவருடைய மகி மைக்கு வியப்படைந்து, "மகா உறுதியாயிருந்து தவஞ்செய்கிற இவரை எவ்வாறு வசப்படுத்தப் போகிறோம்" என்று நினைத்து, "நா மணிந்திருக்கிற பரிமளவாடை அவர் நாசிமேற் படக் காற்று முகமா யிருந்தோமானால் தெய்வச் செய லெப்படியாக முடியுமோ பார்ப்போம்" என்று ஒரு சந்தனமரத்தடியில் வந்து நின்றாள். இந்த மேனகை அணிந்திருந்த பரிமள வாடையானது காற்றினால் பாரத்துவாஜர் நாசியிற் பட்டது. பாரத்துவாஜர் அவ் வாசனையை யுணர்ந்து, இத்தகைய வாடை எங்கிருந்து வீசுகின்றது என்று நோக்கும்போது, சந்தன மரத்தடியிலிருக்கிற மேனகையைத் தம்

எதிரிற் கண்டார். அவளைக் கண்டவுடன் பாரத்துவாஜர் அவ்ள்மேல் காதல் கொண்டார். அவர் அக்காதலோடு அவளை நோக்கின மாத்திரத்தில், உடனே அவருக்கு வீரியம் வெளிப்பட்டு எதிரிலிருக்கும் துரோண கும்பத்தில் விழுந்தது. இதைக்கண்ட மேனகை "இனி நின்றோமாகிற் பெரியோர் மனநோதல் நேரிடும். நாம் நாடிவந்த காரியம் நிறைவேறிற்று. இனி இங்கே ஒரு மாத்திரைப்போது மிருக்கொணாது" என்று கருதிச் சொர்க்கம்போய்ச் சேர்ந்தாள்.

பாரத்துவாஜர் வீரியம் வெளிப்பட்டதைக் குறித்து வருத்தமடைந்திருக்கிற தருணத்தில் பூரணகும்பத்தில் விழுந்த வீரியம் கருவுருவாகி, மூன்றேமுக்கால் நாழிகைக்குள் அக் கும்பத்தை விரித்துக்கொண்டு ஒரு புத்திரனாய் வெளி வந்தது. பாரத்துவாஜ மஹா முனி அப் புத்திரனைக் கண்டு மிகுந்த களிப்படைந்து, அவனை மிகுந்த அன்போடு எடுத்து அணைத்து, அவன் துரோணகும்பத்தில் உதித்தமையால் துரோணனென்று நாமகரணமிட்டு வந்தார். ஐந்து வயது சென்றவுடன் உபநயனஞ்செய்து, நாலுவேதம் ஆறுசாஸ்திரம் அறுபத்துநான்கு கலைக்கியான முதலியவற்றோடு தநுர்சாஸ்திரத்தையும் போதித்து, இப் புத்திரனைப் பிரமன் - மால் - சிவன் - என்கிற மூவருமதிக்க இன்னும் அதிகமாகக் கற்பிக்கவேண்டுமென்று கருதிப் பரசுராமரைக்கொண்டுஞ் சொல்லிவைத்து, அதுவும்போதாமல் அக்கினிகோத்திர முனிவரிடத்தில் அப்புத்திரனை அழைத்துக் கொண்டுபோய் விட்டார். அம்முனிவரன் துரோணாசாரியர் புத்தியையும் யுக்தியையும் மதித்தறிந்து, தாம் கற்றிருக்கிற தேவாஸ்திரப் பிரயோக மந்திரங்களை யெல்லாங் கற்பித்து வந்தார். இப்படி வருகிற காலத்திற் பாஞ்சால தேசத்துக் கதிபதியாகிய சோமகன் புத்திரனாகிய துருபதன் வில்வித்தையைக் கற்க அக்கினிகோத்திர முனிவரிடத்து வந்து வணங்கித் தன் கருத்தை தெரிவித்தான். அக்கினிகோத்திரமுனி துரோணாசாரிய ருக்குக் கற்பிக்கிறது போல் அவனுக்குங் கற்பித்துவந்தார். துரோணாசாரி வில்வித்தையிற் சிறந்தவராதலால் துருபதன் அவரையு மடுத்து, நல்ல வார்த்தை சொல்லி வந்தனை வழிபாடு செய்து வருவான். அதனால் துரோணாசாரியார் மனமகிழ்ந்து, தாம் கற்றிருக்கிற அருமையான வில்வித்தையிற் சில வித்தையை அவனுக்குக் கற்பித்தார். உடனே துருபதன் தந்தையின் அரசாங்கத்தைத் தான் நடத்துங்காலம் வந்தது. அக்காலத்தில் துருபதன் துரோணாசாரியை வணங்கி, "ஓ

சுவாமி! என் தந்தை பட்டணம் வரும்படி கட்டளையிட்டார். நான் போகிறேன். என் தந்தையின் செங்கோல் என் கைவசமானால் தங்களுக்கு என் தேசத்திற் பாதி பங்கிட்டுக் கொடுப்பேன். இதனை நான் ஒரு காலும் மறவேன்" என்று உறுதிமொழிகூறித் தன் முதலாசிரியராகிய அக்கினிவேசந்திர முனிவரையுங் கண்டு விடைபெற்றுக் கொண்டு தன் நகரத்துக்குச் சென்றான். அவன் தந்தை சோமகன் மிகவுஞ் சந்தோஷமடைந்து, தன் செங்கோலைப் புத்திரன் வசமாக்கித் தவத்திற்குப் போனான். துருபதன் ஏகசக்ராதிபதி போல் அரசு செய்திருந்தான்.

## அஸ்வத்தாமர் வரலாறு

இங்கே துரோணாசாரி வில்வித்தை யெல்லாவற்றையு முணர்ந்து, யாவரும் புகழப் பெயரெடுத்து, இனி தவத்தைச் செய்து சிலாக்கியமாகிய பாக்கியத்தை யடையக் கருதித் தந்தையிடத்து வணங்கி, தமது கருத்தை வெளியிட்டார். தந்தையாகிய பாரத்துவாஜர் புத்திரனைப் பார்த்து "அப்பா மகனே! நீ தவஞ் செய்கிறதற்கு இது காலமல்ல. முன்னங் க்ரகஸ்தாசிரம மடைந்து பின்பு துறவற மடையவேண்டியது" என்று விளம்பிக் கிருபாசாரி சகோதரியாகிய சௌபாக்கியவதி கிருபையைத் துரோணாசாரியார்க்கு விவாகஞ் செய்வித்தார். துரோணாசாரி கிருபி என்பவளோடு இல்லறத்திற் பொருந்தி சிறிதும் வழுவாமல் இல்லறத்தை நடத்தி வருங்காலத்தில், நாரதர் கிருபையினது நற்குண நற்செய்கையையும் கற்புடைமையையுங் கண்டு கைலாயத்திற்குச்சென்று, நந்திதேவரது விடைபெற்றுக் கைலாயத்தின் மத்தியிலிரா நின்ற கோடி சூரியப் பிரகாசமாக ஒளிசெய்யும் மஹா மண்டபத்து ளெழுந்தருளியிருக்கிற ஸ்ரீ சாம்பமூர்த்தியைக் கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து நின்றார். சாம்பமூர்த்தி நாரதரை இருக்கச் சொல்லி, "ஓ நாரதரே! நீர் உலகமெல்லாம் வியாபித்து எல்லாச் சங்கதிகளையு மறிந்திருக்கிறவராயிற்றே, ஏதாவது அதிசயமிருந்தாற் சொல்லும்" என்று வினவ நாரதர் "ஓ சுவாமி! பாரத்துவாஜர் புத்திரனாகிய துரோணாசாரியின் மனைவி கிருபி என்பவளுடைய கற்புடைமையை என்னென்று சொல்லுவேன். அவளைப்போல் கற்பிற் சிறந்தவர்கள் வேறொருவர் இல்லை. இவ்வுலகத்துள்ள பெண்டிர்களில் அவளுக்கொருவரை உவமித்தற்

கர்காது" என்று கூறி வணங்கி விடைபெற்றுத் தன் கருத்துக் கிசைந்த விடத்துக்குச் சென்றார். சாம்பமூர்த்தி அந்தக் கிருபை யினது கற்பினிலையை யறியவேண்டுமென்று துறவி வேடம் பூண்டு, கைலாயத்தை விட்டுத் துரோணாசாரி யிருக்கிற வளத் துக்கு வந்து, அவருடைய ஆசிரமத்துட் சென்றார். துரோணா சாரி துறவியைக் கண்டு எழுந்து வணங்கிப் பொற்பீடமளித் திருக்கச்சொல்லி, "சுவாமிகளே! தேவரீர் இவண் எழுந்தருளிய காரண மென்ன?" என்று வினவ, துறவி "ஓ புண்ணிய சீலரே! நான் பசியினால் வருந்துவதால் எனக்கு அன்னம்படைக்க வேண்டும்" என்றார். துரோணாசாரி மனமகிழ்ந்து, "ஐம்பொறி களின் வழியாகிய ஐம்புலன்களை அடக்கும் பெரியோர்களுக்கும் அடக்கக்கூடாமையானது பசிநோய். அப்பசிநோயை நீக்குவது அப் பெரியோர்களுடைய வல்லமைக்கு மேலான வல்லமையென்றும், இல்லறத்தானுக்கு இதைவிடத் தருமமில்லை யென்றும் வேதங் கள் முறைபிடுகின்றன. மேலும் நாம் இல்லறத்தி லிருக்கிறோ மாதலால் நம்மா லியைந்தமட்டும் அன்னமிட வேண்டும்" என்று மதித்துத் துறவியை வணங்கி "ஓ சுவாமி! தங்கள் இவ்விடத் திலேயே பசியாறலாம்," என்று இனிய வார்த்தை யுரைத்துத் தன் மனைவியிடத்துவந்து, "ஓ பெண்ணே! ஒரு பெரியவர் அன்னம் வேண்டுமென்று நமதிடத்துக்கு வந்தார். நீ அவர்க்குப் பசியடங்கி மகிழ்வெய்த நடந்து கொள்வாயாக. நான் ஸ்நானஞ் செய்து வரு கிறேன்" என்று ஸ்நானத்திற்குச் சென்றார். உடனே கிருபை ஸ்நா னம் செய்து பக்தியோடு சமையற் செய்து, துறவியிடத்து வந்து வணங்கி, "ஓ சுவாமி! நெடுநேரமாகப் பசியால் வருந்துவதால் எளியேன்மீது கிருபைகூர்ந்து எழுந்து வரவேண்டும்" என்று வணங்கினாள். துறவி எழுந்து உள்ளறையிற் சென்று, அங் கிட் டிருக்கும் பீடத்திலிருந்தார். கிருபி ஒரு தட்டிற் சில திவ்ய பதார்த்தங்களோடு அன்னத்தை எடுத்துவந்தாள். அதைத் தபசி கண்டு "ஓ புண்ணியவதி! எனக்கு அன்னம்படைப்பவள் நிரு வாணியாக இருந்து உண்பிக்கவேண்டும். அவ்வண்ணமாக அன் னம் படைத்தால் நான் புசிப்பேன், இல்லாவிட்டால் நான் புசி யேன்" என்றார். கிருபி "ஆ! இதென்ன விரதம்? நிருவாணி யாயிருந்து அன்னம் படைப்பது கற்புடைய மங்கையர்க்கழகல்ல. ஆயினும் அவ்வாறு செய்யாவிட்டால் நமது கணவன் கட்டளைக் குக் குறைவு வரும். இதிற் கணவன் கட்டளையை மீறுதிருப்பதே கற்

புடைமை. ஆதலால் இவரிஷ்டப்படி இருந்து அன்னமிடுதலே உத்தமம்" என்று மதித்து, வீட்டிற் சென்று வஸ்திரத்தை நீக்கித் தன்னுடல் முழுதையும் அளகத்தால் மறைத்துக்கொண்டு அன்னத்தை எடுத்துவந்தாள். அதுகண்ட துறவி அவள் கற்புடைமைக்கு மெச்சி, அவளது சுந்தரத்தை நோக்கினார். நோக்கும்போது துறவிக்கு வீரியம் ஸ்கலிதமாகி அது இந்தக் கிருபியின் கரத்திலிருந்த அன்னத்தில் விழுந்தது. உடனே துறவியு மறைந்தார். கிருபி அவர் வீரியம் விழுந்ததையும் உடனே அவர் மறைந்ததையுங் கண்டு, அந்த அன்னத்தட்டை அவ்வண்ணமே வைத்துக் கொண்டிருந்தாள்.

இதற்குள் ஸ்நானஞ்செய்யச் சென்ற துரோணர் வந்தார். கிருபி அவரை வணங்கி நடந்த விருத்தாந்தத்தைச் சொன்னாள். துரோணர் "துறவிக்கு இந்த நினைப் பேது? ஒரு வேளை நமது மனைவியின்மீது காதல் கொண்டு இராவணன்சீதை மேல் இச்சை வைத்துத் துறவிவேடந் தரித்ததுபோல் யாராவது வந்தாரோ?" என்று தமது ஞானதிருஷ்டியால் நோக்கினார். வந்தவர் கைலாசபதி யென்று தெரிந்து மனைவியை நோக்கி "ஓ பெண்ணே! துறவியாக வந்தவர் கைலாசபதி. அவர் வீரியம் வீணுகக்கூடாது. ஆதலால் நீயே இவ்வன்னத்தைப் புசி" என்று சொல்ல அக்கிருபி அவ்வன்னத்தை எடுத்துப்போய்த் தான் புசிக்காமல், துரோணுசாரியின் வாகனமாகிய பெண்குதிரை யிடத்து வைத்தாள். அக்குதிரை அவ்வன்னத்தைப் புசித்தது. உடனே அவ்வீரியம் கருவுருவாகி, மூன்றே முக்கால் நாழிகைக்குள் அக்குதிரையினின்று நாகரத்தினம்போல் ஒரு புத்திரன் பிறந்தான். துரோணுசாரி இதனை அறிந்து துரிதமாய் வந்து, அச்சிறுவனைப் பொற்றட்டிலேந்தி ஆசிரமத்தில் வைத்துக்கொண்டு, தாமும் தம் மனைவியும் அச்சிறுவனது சுந்தரத்தை நோக்கி மிகுந்த வியப்படைந்து, "இப்புத்திரனுக்கு என்ன பெயரிடலாம்" என்று யோசிக்கும் போது ஆகாயவாணி துரோணுசாரியை அழைத்து, "அச்சிறுவனுக்கு அஸ்வத்தாமன் என்று பெயரிடு" என்ன துரோணுசாரி அவ்வண்ணமே அஸ்வத்தாமனென்று நாமகரணமிட்டு, அச்சிறுவனை இருவரும் அதிக காதலோடு புல்லரிசி - பால் முதலியவற்றைக் கொடுத்து வளர்த்து வந்தார்கள். மேலும் தருமப்பால் வாங்கிவார்த்து வருவதால் பால் போதாமல் குழந்தை இளைத்துப் போயிற்று. இதைக் கிருபி கண்டு துரோணுசாரியை வணங்கி, "ஓ சுவாமி! இரவற்பால் வாங்கி

அருந்துவதிற் குழந்தை இளைத்துப் போகின்றது. உமக்கு அநேகம்பேர் மாணாக்கர் இருக்கின்றார்களே! அவர்களிடத்திற் சென்றால் ஒரு பசுவாகிலும் கொடுக்க மாட்டார்களா?" என்று தூண்டினாள்.

---

## துருபதனுக்குந் துரோணருக்கும் சம்வாதம்

---

அப்போது துரோணாசாரி பாஞ்சாலன் சொல்லிய உறுதியை நினைத்துக் கொண்டு மனைவியை நோக்கி "ஓ பெண்ணே! எனக்குப் பாலிய சிநேகனும் என்னிடத்தில் வில்வித்தையிற் சில அருமையான வித்தைகளைக் கற்றுக் கொண்டவனுமிருக்கிறவன் பாஞ்சாலன். அவனிடத்துச் சென்றால் வேண்டிய பாக்கியங் கிடைக்கும். ஆதலால் நாமிருவரும் அவனிடத்துச் செல்வோம் வா" என் றழைத்துக்கொண்டு பாஞ்சாலனுடைய நகரத்துக் கருகே வந்து, சிறுவனை மனைவிகையிற் கொடுத்து, அவளை அங்கு நிறுத்திவிட்டுத் தாம் தனியே பாஞ்சாலன் சபைக்குட் சென்றார். பாஞ்சாலன் இவரைப் பார்த்தவுடன் முன் கொடுத்த வாக்குத்தத்தத்தை நினைத்துக் கொண்டு, அதை நிறைவேற்ற மனமில்லாதவனாகிப் பாராதவன்போ லிருந்து விட்டான். துரோணாசாரி "அரசன் விசாரணையி லிருக்கிறதினால் நம்மை நோக்கவில்லை. இன்னுஞ் சற்றுநேரஞ் சென்றாற் பின்பு விசாரிப்பான்" என் றுன்னி அங்கோ ரிடத்தி லிருந்தார். அரசன் நீதி விசாரணைசெய்து விட்டுக் கொலுநீக்கி, அங்குள்ளவர்களை யெல்லாம் அவரவர்கள் இருப்பிடத்துக்குச் செல்லும்படி உத்தரவு கொடுத்தான். அந்த வேளையில் துரோணாசாரி அரசனைக் கண்டார். அப்போதும் அவன் அவருக்கு வந்தனை வழிபாடு செய்யாமல் "நீர் யார் காணும்? இங்கு ஏன் வந்தீர்?" என்று முகமறியாதவன் பேசுவது போற் பேசினான். துரோணாசாரி இவ்வசனங்களைக் கேட்டு, "நமக்கு மிவனுக்கும் சிநேகமாகி நெடுநாளாயிற்றே! ஞாபகமில்லாமல் நம்மை யாரென்று கேட்கிறான்" எனக் கருதிக் கோபங் கொள்ளாமல், "ஓ அரசனே! நீ என்னை யறியாயா? அக்கினிகோத்திர முனிவரிடத்து நாமிருவரும் வில்வித்தை கற்றுக் கொள்ள வில்லையா?" என்று புகன்றார். பாஞ்சாலன் அப்

போதாகிலும் வந்தனை வழிபாடு செய்யாமல், "என்ன காணும் விப்பிரரே! உன்னை அவ்விடத்தில் நான் ஒரு நாளுங் கண்டதே யில்லை. என் பொய் கூறுகிறீர்" என்று சீறினன். துரோணர் அரசனைப் பார்த்து "ஓ அரசனே! நீ என்ன சுத்தமறதியை யுடைத்தா யிருக்கிறாய்? என்னிடத்திலுள்ள வில்வித்தைகளில் அருமையா யிருக்கிற சில வித்தைகளைக் கற்றுக் கொண்டாயே! அது ஞாபகமில்லையா?" என்று கேட்க, அரசன் நகைத்து மந்திரி களை நோக்கி, "ஓ மந்திரிகளே! முன்னம் இவன், ஒரு ஆசிரிய னிடத்து நாமிருவரும் வில்வித்தை கற்கவில்லையா வென்று கேட் டான். இப்போது 'என்னிடத்தில் வில்வித்தை கற்றுக் கொண்ட வன் நீ யல்லவா, என்று சொல்லுகிறான். இப் பிராமணன் சொல்வது உண்மையா வென்பதை நீங்களே யோசியுங்கள்" என்று கூறத் துரோணருக்குஅதிகக் கோபமுண்டாகி, "அடா பாஞ்சாலா! நீ என்னிடத்தில் வில்வித்தை கற்பதற்குச் சரணுகதி யடைந்தபோது 'எனக்குப் பட்டமானவுடனே தங்களுக்குப் பாதி பூமி கொடுக்கிறேன்' என்று வாக்குத்தத்தஞ் செய்தாயே, அதையு மறந்தாயா?" என்று கேட்க அரசன் பின்னும் நகைத்து, மீண்டும் மந்திரிகளைப் பார்த்து "ஓ மந்திரிகளே! இந்தப் பிராமணன் சொல் லியவற்றைக் கேட்டீர்களா? முன்னம் நாமிருவரும் ஓர் ஆசிரிய ருடைய மாணுக்கரென்றான். பின்பு தன்னிடத்திற் கற்றவனென் றான். இப்போது பாதிபூமி உண்டென்றான். இதை யோசிக்கும் போது இந்தப் பிராமணன் வல்லிடிவழக்கனு யிருக்கிறானென்று தோன்றவில்லையா? இன்னுமிந்தப் பிராமணனை என்சபையில் வைத் திருக்கிறீர்களே" என்று கடுகடுத்தான். அதைக்கேட்ட மந்திரி கள் தம்மைச் சேவகர்களாற் சபையைவிட்டகற்றக் கருதுவதைத் துரோணர் அறிந்து, அரசனை நோக்கி, "அடா பாஞ்சாலா! என்னி டத்தில் மாணுக்கனுயிருந்தும் என்னைப் பரிகாசஞ் செய்தாய்; நீ வாக்குத்தத்தஞ் செய்தபடி பூமியைக் கொடேனென்கிறாய். ஆனால் இவைகளைப்பற்றி எனக்குக் கவலை யில்லை. எனக்கொரு குழந்தையுண்டு. அதற்குப் பாலில்லை. ஆதலால் எனக்கு ஒரு பசுவாகிலுங் கொடு" என்று கேட்க அரசன் சிரித்து "ஓ பிராமணு! முன்னமே நீ கேட்டிருந்தால் கொடுத்திருப்பேன். முன்பு சிநேக னென்று சொல்லிப் பின்பு ஆசிரியனென்றும் பங்காளியென்றுங் கூறி, இப்போது ஒரு பசு வேண்டுமெனச் சொல்லுகிறாய். இதைக் கேட்ட பெண்களும் நகைப்பாரெனில் இச்சபையார் நகைப்பது

அருமையோ ? போபோ பின்புத்தியுடைய பிராமணு'' என்று சேவகர்களுக்குச் சைகை செய்தான். சேவகர்கள் அருகில்வர யத்தனித்தார்கள். அதைத் துரோணுசாரி கண்டு அடங்காச் சினங் கொண்டு கோபச்சிரிப்பு சிரித்து, "அடா பாஞ்சாலா! இதோ யிருக்கிற வில்லுக்கே உன்னைப் பலியிடுவேன். நான் உன்னை எதிர்ப்பது தகுதியல்ல. உன்னேடொத்த இராஜ புத்திரர்க்கு என் வித்தையைக் கற்பித்து, அவர்களால் உன் மதத்தை யடக்கி, மடலோடு மடல்விரியத் தேர்க்காலிற்கட்டி என்னிடத் திழுத்து வரச்செய்து, அங்கிருக்கும் உன்னையொத்த அரசர் முன்னே பங்கப்படுத்தி உன் ராஜ்ய முழுதும் பெறுமல் போவேனுனல் என் கையிலிருக்கிறவில் வில்லல்ல! என் பெயரும் துரோணனல்ல! நானும் பிராமணனல்ல!" என்று சபதங்கூறிச் சபையைவிட்டு மனைவியிருக்கிற இடத்தில் வந்து, நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லிக் குழந்தையைக் குறித்து வருந்தப்பட்டார். கிருபி கணவனை வணங்கி "ஓ சுவாமி! நீரேன் வருத்தப்படுகிறீர் ? என் தமையன் கிருபாசாரி அஸ்தினபுரத்திற் குருகுலசிகாமணிகளாகிய திரிதராஷ்டிரன் பாண்டுவென்னு மஹாராஜாக்களுடைய புத்திரர் களுக்கு வில்வித்தை கற்பிக்கிறுர். அவரிடத்துச் செல்வோம் வாரும்" என்றழைக்கத் துரோணர் அதற்கு இசைந்து, அத்தின புரியை நோக்கிச் சென்று, நகரத்தருகில் வந்தபோது அங்கே குரு குலமக்கள் நூற்றைந்துபேரும் இரண்டுபிரிவாகப் பிரிந்து பந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவ்விளையாட்டில் பீமன் பந்தை எடுத்து வீசி எறிந்தான். அது துரியோதனன் முதலானவர்கள் கைக்குத் தப்பிக் கிணற்றில் விழுந்தது. உடனே துரியோதனன் பீமனிடத்து வந்து, "பீமா! நீ எறிந்த பந்து கிணற்றில் விழுந்தது. அதனை நீதான் எடுத்துக் கொடுக்கவேண்டும்" என்று கேட்க, பீமன் "சீ! சீ! நானெறிந்த பந்தை நீங்கள் பிடிக்காதபடியால் அது கிணற்றில் விழுந்தது. அதை நானெடுக்க வேண்டிய விதியில்லை" என்று மறுக்க, இப்படி இருதிறத்தாரும் பேசிக்கொண்டு கிணற் றைச் சூழ்ந்திருந்தார்கள். துரோணர் இவர்களைக் கண்டு அருகிற் சென்று "நீங்கள் யாருடைய புத்திரர்கள் ?" என்று வினவ, இரு திறத்தாரிற் பற்குணன் வந்து வணங்கி, "ஓ சுவாமி! நாங்கள் இந்நகரத்துக் கதிபதியாகிய ராஜபுத்திரர். நாங்கள் பந்து விளையாடினேம். அந்தப்பந்து கிணற்றில் விழுந்தது. அதற்காக நீயெடு நானெடு என்று வழக்கிட்டுக் கிணற்றைச் சூழ்ந்திருக்

கிறோம்" என்று கூற, துரோணர் சிரித்து, "உங்களுக்கு வில் வித்தை கற்றுக்கொடுக்கிற வில்லாசிரியர் கிணற்றில் விழுந்த பந்தை எடுக்கக் கற்றுக்கொடுக்கவில்லையா?" என்று சொல்லித் தமது வில்லைப் பற்குனன் கையிற்கொடுத்து, ஒரு சுப்பலையெடுத்து ஒரு சின்ன மந்திரத்தை அவன் செவியிலோதி, அந்தச்சுப்பலை அவ்வில்லிற் றொடுக்கச் சொன்னார். பற்குணன் அப்படியே அந்தச் சுப்பலை வில்லிற் றொடுத்துவிட்டான். அந்தச் சுப்பல் பந்தில் தைத்துக்கொண்டது. மற்றொரு சுப்பலை அச்சுப்பலின்மேற் றொடுக்கச்சொல்லி யோட்டி, அவ்வாறே பலசுப்பல்கள் தொடுத்து பற்குணன் பந்தை எடுத்தான். இதைக்கண்ட யாவரு மகிழ்ச்சி யடைந்து, துரோணாசாரியை வணங்கித் துதித்தார்கள். துரோணாசாரி அவர்களை ஆசீர்வதித்துக் "கிருபாசாரி எங்கிருக்கிறார்?" என்று வினவ, சிறுவர்கள் கிருபாசாரி இருக்கும் வீட்டின் குறிப்பைச் சொன்னார்கள். துரோணாசாரி கிருபாசாரி அரண்மனைக்குச் சென்றார். கிருபாசாரி இவர் வரவை அறிந்து எதிர்கொண்டுபோ யழைத்துவந்து, வந்தனை வழிபாடு செய்து, முதலில் தம் தங்கையை ஆதரித்துப் பிறகு மைத்துனராகிய துரோணாசாரியை நோக்கி, "ஓ மைத்துனரே தாங்கள் இன்று முதல் என்னை விட்டுப் பிரியாமல் இவ்விடத்திலேயே யிருக்க வேண்டும்" என்று வேண்டினார். துரோணர் அதற் கிணங்கி அவ்விடத்திலேயே தன் பத்தினியோடு மிருந்து, தமது குழந்தையை யாதொன்றுங் குறைவில்லாதபடி பாதுகாத்து வந்தார்.

இங்கே குருகுலமக்கள் பீஷ்மரிடத்து வந்து வணங்கி, "ஓ ஐயா! நமது நகரத்துக்கு ஒரு வில்லாசிரியர் வந்திருக்கிறார். அவர் திறத்தை எங்களாற் சொல்ல வசமல்ல. நாங்களாடும் பந்து கிணற்றில் விழுந்தது. அதனை நீயெடு நானெடு என்று வழக்கிட்டிருக்கிற தருணத்தில் அவர் வந்து பற்குணனுக்கு வில்லிற் சுப்பல்களைத் தொடுக்கும் மந்திரம் சொல்லிப் பந்தை வெளியிலெடுத்துக் கொடுத்து, இப்போது கிருபாசாரியார் வீட்டிற்குப் போயிருக்கிறார்" என்ன, பீஷ்மர் இவ்வசனங்களைக் கேட்டுக் கிருபாசாரியை வரும்படி செய்தார். கிருபாசாரி அதிக விரைவில் பீஷ்மரிடத்துக்கு வந்தார். பீஷ்மர் எழுந் தெதிர்கொண்டுபோய் அவரை யழைத்து வந்து, பொற்பீடத்தி லிருத்திச் சோடச உபசாரமுஞ் செய்து வணங்கி "ஓ சுவாமி! உமது மாளிகைக்கு யார் வந்தது சொல்லுமையா?" என்று கேட்க கிருபாசாரி "ஓ மண்டலேஸ்

அருமையோ? போபோ பின்புத்தியுடைய பிராமணு'' என்று சேவகர்களுக்குச் சைகை செய்தான். சேவகர்கள் அருகில்வர யத்தனித்தார்கள். அதைத் துரோணுசாரி கண்டு அடங்காச் சினங்கொண்டு கோபச்சிரிப்பு சிரித்து, "அடா பாஞ்சாலா! இதோயிருக்கிற வில்லுக்கே உன்னைப் பலிபிடுவேன். நான் உன்னை எதிர்ப்பது தகுதியல்ல. உன்னோடொத்த இராஜ புத்திரர்க்கு என் வித்தையைக் கற்பித்து, அவர்களால் உன் மதத்தை யடக்கி, மடலோடு மடல்விரியத் தேர்க்காலிற்கட்டி என்னிடத் திழுத்து வரச்செய்து, அங்கிருக்கும் உன்னையொத்த அரசர் முன்னே பங்கப்படுத்தி உன் ராஜ்ய முழுதும் பெறுமல் போவேனுனல் என் கையிலிருக்கிறவில் வில்லல்ல! என் பெயரும் துரோணனல்ல! நானும் பிராமணனல்ல!" என்று சபதங்கூறிச் சபையைவிட்டு மனைவியிருக்கிற இடத்தில் வந்து, நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லிக் குழந்தையைக் குறித்து வருந்தப்பட்டார். கிருபி கணவனை வணங்கி "ஓ சுவாமி! நீரேன் வருத்தப்படுகிறீர்? என் தமையன் கிருபாசாரி அஸ்தினபுரத்திற் குருகுலசிகாமணிகளாகிய திரிதராஷ்டிரன் பாண்டுவென்னு மஹாராஜாக்களுடைய புத்திரர்களுக்கு வில்வித்தை கற்பிக்கிருர். அவரிடத்துச் செல்வோம் வாரும்" என்றழைக்கத் துரோணர் அதற்கு இசைந்து, அத்தினபுரியை நோக்கிச் சென்று, நகரத்தருகில் வந்தபோது அங்கே குருகுலமக்கள் நூற்றைந்துபேரும் இரண்டுபிரிவாகப் பிரிந்து பந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவ்விளையாட்டில் பீமன் பந்தை எடுத்து வீசி எறிந்தான். அது துரியோதனன் முதலானவர்கள் கைக்குத் தப்பிக் கிணற்றில் விழுந்தது. உடனே துரியோதனன் பீமனிடத்து வந்து, "பீமா! நீ எறிந்த பந்து கிணற்றில் விழுந்தது. அதனை நீதான் எடுத்துக் கொடுக்கவேண்டும்" என்று கேட்க, பீமன் "சீ! சீ! நானெறிந்த பந்தை நீங்கள் பிடிக்காதபடியால் அது கிணற்றில் விழுந்தது. அதை நானெடுக்க வேண்டிய விதியில்லை" என்று மறுக்க, இப்படி இருதிறத்தாரும் பேசிக்கொண்டு கிணற்றைச் சூழ்ந்திருந்தார்கள். துரோணர் இவர்களைக் கண்டு அருகிற் சென்று "நீங்கள் யாருடைய புத்திரர்கள்?" என்று வினவ, இருதிறத்தாரிற் பற்குணன் வந்து வணங்கி, "ஓ சுவாமி! நாங்கள் இந்நகரத்துக் கதிபதியாகிய ராஜபுத்திரர். நாங்கள் பந்து விளையாடினேம். அந்தப்பந்து கிணற்றில் விழுந்தது. அதற்காக நீயெடு நானெடு என்று வழக்கிட்டுக் கிணற்றைச் சூழ்ந்திருக்

கிறோம்" என்று கூற, துரோணர் சிரித்து, "உங்களுக்கு வில் வித்தை கற்றுக்கொடுக்கிற வில்லாசிரியர் கிணற்றில் விழுந்த பந்தை எடுக்கக் கற்றுக்கொடுக்க வில்லையா?" என்று சொல்லித் தமது வில்லைப் பற்குணன் கையிற்கொடுத்து, ஒரு சுப்பலையெடுத்து ஒரு சின்ன மந்திரத்தை அவன் செவியிலோதி, அந்தச்சுப்பலை அவ்வில்லிற் றொடுக்கச் சொன்னார். பற்குணன் அப்படியே அந்தச் சுப்பலை வில்லிற் றொடுத்துவிட்டான். அந்தச் சுப்பல் பந்தில் தைத்துக்கொண்டது. மற்றொரு சுப்பலை அச்சுப்பலின்மேற் றொடுக்கச்சொல்லி மாட்டி, அவ்வாறே பலசுப்பல்கள் தொடுத்து பற்குணன் பந்தை எடுத்தான். இதைக்கண்ட யாவரு மகிழ்ச்சி யடைந்து, துரோணாசாரியை வணங்கித் துதித்தார்கள். துரோணாசாரி அவர்களை ஆசீர்வதித்துக் "கிருபாசாரி எங்கிருக் கிறார்?" என்று வினவ, சிறுவர்கள் கிருபாசாரி இருக்கும் வீட் டின் குறிப்பைச் சொன்னார்கள். துரோணாசாரி கிருபாசாரி அரண்மனைக்குச் சென்றார். கிருபாசாரி இவர் வரவை அறிந்து எதிர்கொண்டுபோ யழைத்துவந்து, வந்தனை வழிபாடு செய்து, முதலில் தம் தங்கையை ஆதரித்துப் பிறகு மைத்துனராகிய துரோணாசாரியை நோக்கி, "ஓ மைத்துனரே தாங்கள் இன்று முதல் என்னை விட்டுப் பிரியாமல் இவ்விடத்திலேயே யிருக்க வேண்டும்" என்று வேண்டினார். துரோணர் அதற் கிணங்கி அவ் விடத்திலேயே தன் பத்தினியோடு மிருந்து, தமது குழந்தையை யாதொன்றுங் குறைவில்லாதபடி பாதுகாத்து வந்தார்.

இங்கே குருகுலமக்கள் பீஷ்மரிடத்து வந்து வணங்கி, "ஓ ஐயா! நமது நகரத்துக்கு ஒரு வில்லாசியர் வந்திருக்கிறார். அவர் திறத்தை எங்களாற் சொல்ல வசமல்ல. நாங்களாடும் பந்து கிணற் றில் விழுந்தது. அதனை நீயெடு நானெடு என்று வழக்கிட்டிருக் கிற தருணத்தில் அவர் வந்து பற்குணனுக்கு வில்லிற் சுப்பல் களைத் தொடுக்கும் மந்திரம் சொல்லிப் பந்தை வெளியிலெடுத்துக் கொடுத்து, இப்போது கிருபாசாரியார் வீட்டிற்குப்போயிருக்கிறார்" என்ன, பீஷ்மர் இவ்வசனங்களைக் கேட்டுக் கிருபாசாரியை வரும் படி செய்தார். கிருபாசாரி அதிக விரைவில் பீஷ்மரிடத்துக்கு வந் தார். பீஷ்மர் எழுந் தெதிர்கொண்டுபோய் அவரை யழைத்து வந்து, பொற்பீடத்தி லிருத்திச் சோடச உபசாரமுஞ் செய்து வணங்கி "ஓ சுவாமி! உமது மாளிகைக்கு யார் வந்தது சொல்லுமையா?" என்று கேட்க கிருபாசாரி "ஓ மண்டலேஸ்

வரா, பரத்துவாஜருக்குப் புத்திரராயும் - என் சகோதரிக்குக் கண வராயு மிருக்கிற துரோணுசாரியர் வந்தார்" என்று விளம்ப, பீஷ்மர் அதிக மகிழ்ச்சியை அடைந்து, சில பெரியோர்களை விட்டுத் துரோணுசாரியை அழைத்துவரும்படி உத்தரவு செய்தார். அப் பெரியோர்கள் சென்று துரோணுசாரியைக் கண்டு வணங்கி, "ஓ சுவாமி! மகாராஜனுகிய பீஷ்மர் தங்களை அழைத்துவரச் சொன்னுர்" என்று கூற, துரோணுசாரியார் "அரசராயிருக்கிற வர் அழைத்தால் வரத்தான் வேண்டும்" என்று எழுந்து, அப் பெரியோர்களோடு பீஷ்மர் சபைக்கு வந்தார். பீஷ்மர் அவர் வருகின்றதை யுணர்ந் தெழுந்து, எதிர்கொண்டுபோய் அழைத்து வந்து, பொற்பீடத்தி லிருத்திச் சோடச உபசாரங்கள் செய்து அநேகவிதமாகத் துதித்தார். துரோணுசாரி "பாஞ்சாலன் சபை யிற் கூறிய சபதம் எவ்வாறு நிறைவேறப் போகின்றது" என்று ஏக்கத்தைக் கொண்டிருந்தாலும், வந்தனை வழிபாடு செய்து நிற் கும் பீஷ்மரை ஆசீர்வதித்து இருக்கச்சொல்லிக் கட்டளையிட்டார். பீஷ்மர் அவ்வாறே சிங்காதனத்தி லிருந்து, துரோணுசாரியின் திரு வுருவத்தை நோக்கி, வாடின முகத்துடனிருப்பதை உணர்ந்து, "ஓ சுவாமி! பிரம்குல திலகராயும் தவசிரேஷ்ட சிகாமணி யாயு மிருந்து, கல்வியி லருமையாயிருக்கிற வில்வித்தையிலும் மகாமூர்த்தியாகிய உமது முகம் வாடவேண்டிய காரண மென்ன? இவ் வுலகத்தில் யாவருக்கேனும் உள்ளத்திலொரு குறையிருந்தால், கண்ணுடி தன் வயப்பட்ட பொருளை யெவ்வாறு விளக்குமோ அவ்வாறு அவர்கள் முகம் அக் குறையை விளக்கும். அது போலத் தங்கள் முகம் ஏதோ ஒரு குறையைக் காட்டுகின்றது. ஆதலால் நீங்கள் கொண்டிருக்கிற குறையைத் தெரிவிக்கவேண் டும்" என்று செப்பத் துரோணுச்சாரி பீஷ்மருடைய புத்திநுட் பத்துக்கு வியப்படைந்து, "குறிப்பறிந்து கேட்கும் கோமானுக்கு நாம் கொண்டிருக்குங் குறையைச் சொல்லத்தான் வேண்டும்" என்று துணிவுகொண்டு தமது குறையைச் சொல்லுகிருர்—

---

## வில்லாசிரிய ரிருவரையும் பீஷ்மர் ஸன்மானித்தல்

"ஓ மண்டலேஸ்வரா! நான் வில்வித்தையைக் கற்க யத் தனித்து என் தந்தையிடத்தும் பரசுராமரிடத்துங் கற்று, இன் னும் சாதுரியமான வித்தையைக் கற்கவேண்டுமென்று கருதி, அக்கினி கோத்திரமுனிவரிடத்திற் கற்றுவருகிற காலத்தில், அவ

ரிடத்தில் பாஞ்சாலனும் வந்து வில்வித்தை கற்ருன். அவன் என்னையும் வழிப்பட்டு, என்னிடத்திற் சில வித்தையைக் கற்று, தனக்கு மகுடாபிஷேகமான காலத்திற் பாதிராஜ்யங் கொடுக்கிறே னென்று வாக்குத்தத்தஞ்செய்து போனன். பின்பு அவன் மகுடாபி ஷேகனுக இருக்கிற காலத்தில் நான் சென்றேன். என்னை அவன் அயலார்போ லெண்ணி ஏளனஞ் செய்தான். அதனுல் நான் சினங் கொண்டு ஒரு சபதஞ் செய்துகொண்டேன். அஃதென்ன வென் ருல், 'இராஜபுத்திரருக்கு என் வித்தையைக் கற்பித்து, அவர்களால் உன்னைப் போரில் வீழிட்டலறச் செய்வதுமன்றி, தேர்க்காலிற் கட்டி என் சபையில் இழுத்துவரச் செய்து பங்கப்படுத்துகிறேன்" என்று கூறிவந்தேன். அந்தச் சபதம் எப்போது நிறைவேறு மென் கிற ஏக்கமேயொழிய வேறில்லை' என்ருர். பீஷ்மர் துரோ ணரை வணங்கி "ஓ சுவாமி! உலகத்தில் அரசரா யிருக்கிறவர் தம்மை யடைந்தவர்க்கு ஒரு குறை நேரிட்டால், தங்க ளுடம் பின்மேல் இச்சைவைக்காமற் புகழுடம்பை வகிக்கவேண்டு மென்று கருதி, மேல்வரும் லாபத்தை நோக்காமல் அக் குறை தீர மனம் வாக்கு காயங்களினுற் சகாயப்படவேண்டும். இப்போது தாங்கள் கூறிய குறைக்கு நான் உதவி செய்வது, எனக்கு நல்ல லாபமாகத்தா னிருக்கின்றது. அதற்கு நான் ஒரு விண்ணப்பஞ் செய்கிறேன். அதனையேற்று உமது குறையைத் தீர்த்துக்கொள்ளும். அஃதென்னெனில், குருகுல மக்கள் நூற்றைந்துபேர் இருக்கிருர்கள். அவர்களுக்கு உமது வில்வித்தையைக் கற்பித்து, உமது குறையை நீக்கிக்கொள்ளும். மேலும் தாங்களுள்ளவளவும் இந்த ஆதீ னத்தை விட்டுப் போகவேண்டியதில்லை. எங்களைப்போன்று மகர குண்டல ஆர கேயூர கடக கங்கண மதாணிபதக்க முதலாகிய இராஜ பூஷணங்களை யணிந்து, ஆலோசனைக் கர்த்தர்களில் தாங் களும் ஒருவராக இருக்கவேண்டும்" என்று வேண்டி, கிருபா சாரிக்கும் இவ் வண்ணமாகவே சொல்லி, அப்போதே ஆபரணங் களைக் கொண்டுவரச் செய்து இருவர்க்குங் கொடுத்து, அதற்குத் தக்க இடம்பொருள் ஏவ லனைத்தையு மீந்தார். அஸ்வத்தாமா வென்னுஞ் சிறுவனும் நாளுக்குநாள் யாதொரு குறைவுமின்றி வளர்ந்து, நான்குவேதம் - ஆறுசாஸ்திரம் - அறுபத்துநாலு கலைக்கியான முதலியவற்றேடு, வில்வித்தை - மல்வித்தை - அஸ்திரவித்தை - சஸ்திரவித்தை முதலிய சகல வித்தைகளினும் மேதையாயினன்.

# குருபுத்திரர் நூற்றைவரும் வில்வித்தை பயிலல்

இதற்குள் குருகுலமக்கள் நூற்றைவரும் வந்தார்கள். பீஷ்மர் அவர்களை நோக்கி, "ஓ மக்களே! இதோயிருக்கிற பெரியவரிடத்தில் வில்வித்தையைக் கற்றுக் கொள்ளுங்கள்" என்று கூற, அவர்கள் அன்புடன் துரோணசாரியை வணங்கித் துதித்தார்கள். துரோணசாரி அவர்களுக்குப் பல ஆசிகூறினர். பீஷ்மர் அவர்களைப் பிடித்துத் துரோணசாரியிடத்தி லொப்புவித்து, "கற்றுக் கொடுப்பதற்கு உமக்கே அக்கரை யிருக்கிறபடியால் நான் தங்களுக்கு விரித்துரைக்க வேண்டியதில்லை" என்று வணங்கினர். துரோணசாரியார் வணங்கிய பீஷ்மரை ஆசீர்வதித்து விடை பெற்று, பீஷ்மர்விட்ட விடுதியில் வந்து போஜனஞ்செய்து இனிது வீற்றிருந்தார். பின்பு துரோணசாரியார் நல்ல சுபமுகூர்த்தத்தில் நூற்றைவரையும் அழைத்துக்கொண்டு, சிலம்பக்கூடத்துக்கு வந்து, தேவாராதனை செய்து, வில்வித்தையை அவர்களுக்குக் கற்பிக்கத் தொடங்கினர். துரோணசாரியார் பாஞ்சாலன் சபையிற் கூறிய சபதத்தை நிறைவேற்ற ஆவலுள்ளவராதலால், அப்புத்திரர்களுக்கு வில்வித்தையைக் கற்பிப்பதில் கவலையுள்ளவரா யிருந்து, யானையேற்றங் குதிரையேற்ற முதலியவற்றையுங் கற்பித்ததல்லாமல், தேரிலிருந்து யுத்தஞ்செய்யுந் திறமும், தேர்ச் சாரதி ஒருவேளை யில்லாதிருந்தால் அவரவர்களே சாரதித் தொழிலைச் செய்துகொண்டு யுத்தஞ்செய்யு மர்மமும், ஒருபாணம் பத்து, நூறு, ஆயிரம், பத்தாயிரம், லக்ஷம், பத்துலக்ஷம், கோடி இப்படி விர்த்தியாகும் பாணமந்திரத்தையும், மற்றுமுள்ள வாள் - கதை - தோமரம் - சத்தி - சூல முதலிய ஆயுத வித்தைகளுங் கற்பித்து, அஸ்திரப்பிரயோகமும் - அவ்வவ் வஸ்திரங்களுக்குத் தகுந்த மந்திரோபதேசமும் - பூஜாவிதியும் - தெளிவுற உணர்த்தி வருகிற காலத்தில், இந்தக் குருகுல குமாரர்கள் நூற்றைவரிற் பற்குணன் துரோணசாரி கற்பித்துவருகிற வில்வித்தைக்குத் தன் புத்தி சாதுர்யத்தினற் பதின்மடங் கதிகமாக வில் வினைதஞ் செய்துவருவான். துரோணசாரி இதை யறிந்து, இந்த நூற்றைவரில் இப் பற்குணன் வைகுந்தவாசியாயும் - அடியவர் விசுவாசியாயும் - தசரதமூர்த்தியாய் மிருக்கிற ஸ்ரீராமனை யொப்பானென்று மதித்து, அவன்மேல் மிகுந்த அன்புடையவராகி, வில்வித்தையில் அதிக சாதுரியமான வித்தைகளை யெல்லாங் கற்பித்து, ஒருநாள் அவனை யழைத்து, "அப்பா பற்குண!

இன்றையத்தினம் நான் ஒரு வித்தையைக் காண்பிக்கிறேன். அது எனக்கும் என் குருவாகிய அக்கினிகோத்திர முனிவருக்குமே யன்றி, மற்றவருக்குத் தெரியாது. அதனை யுனக்குச் சொல்லு கிறேன். அஃதென்னெனில், ஒரு பாணத்தை எடுத்துத் தூண்டி னால் அப்பாணம் நாலாகி நாலு திசைமுகத்தும் பரவும்" என்று பரிபாலித்து, இவ்வித்தைக்குரிய மகா மந்திரோபதேசமுஞ் செய் தார்; இப்படி இன்னு மகாமகிமையாகிய வில் விநோதங்களைக் கற்பித்து வருவார்; மற்றைக் குருபுத்திரர் நூற்றுநால்வர்க்கோ வென்றால் பற்குணனுக்கு முன் குறித்த வில் விநோதமொன்று தவிர, மற்ற வித்தைகளையெல்லாம் கற்பித்து வந்தார்.

---

## ஏகலைவன் கதை

---

இப்படிக் கற்பித்து வருகிற காலத்தில், ஒருநாள் குருகுமாரர் கள் நூற்றைந்துபேரும் போஜனத்துக்குச் சென்றார்கள். துரோ ணசாரியார் தனித்திருந்தார். அந்தச் சமயத்திற் குறிஞ்சிநிலத்துக் குரிய வேடராஜன் புத்திரனாகிய ஏகலைவன் வில்வித்தையின்மேற் சிரத்தை யில்லாதவனாகி, வீண் விளையாட்டிற் கருத்தைச் செலுத்தி, வயது வந்த காலத்தில் அவ்வித்தையில் ஆசையுடைய வனாகித் துரோணசாரியின் பெருமையைக் கேள்விப்பட்டு, அவரி டத்து வந்து வணங்கித் தன் கருத்தை வெளியிட்டான். துரோண சாரி ஏகலைவனை நோக்கி, "அப்பா! நான் குருகுமாரர்கள் நூற்றைந் துபேருக்கும் வில்வித்தையைக் கற்பிக்கிறேன். ஆதலால் எனக்கு ஒழிவில்லை" என்று மறுமொழி கூறினார். ஏகலைவன் பின்னு மொரு தரம் துரோணசாரியைப் பணிந்து, "ஓ சுவாமி! உம்மால் வில்வித்தையைக் கற்காமற் போனாலும், உம்முடைய அனுக்கிரகத் தினால் இந்த வில் வித்தையைக் கற்றுக்கொள்ளுகிறேன் பாரும்" என்று தன்னிருப்பிடத்துக்கு வந்து, ஒரு சிலம்பக்கூடங் கட்டி, துரோணசாரியைப் போல் உருவஞ் செய்து ஒரு மேடை மேல் நிறுத்தி, தான் அவ்வுருவின்முன் வந்து நின்று, "ஓ சுவாமி! இவ் வாறுதானா விற் பிடிக்கிறது? இப்படித்தானா சரந்தொடுக்கிறது? இந்த அஸ்திரத்துக்குத் தகுந்த மந்திர மிதுதானா?" என்று எல் லாம் தானே சொல்லிக்கொண்டு, அவ்வண்ணமாக அவ்வில் வித்தை யைப் பயின்று வந்தான். இவனுக்குத் துரோணசாரியின்மேற்

கொண்டிருக்கிற நம்பிக்கையே குருவாக இருந்து வில் வித்தைக ளெல்லாவற்றையும் கற்பித்தது. அதுவுமல்லாமல் துரோணசாரி யினிடத்து இன்னுமிருக்கிற சாதுரியமான வில் விநோதங்களும் இவனுக்குத் தனக்குத்தானே விளங்கின. இவ்வாறு ஏகலைவன் வில்வித்தையைக் கற்றுவருகிற காலத்தில், குருகுலமக்களாகிய நூற்றைந்து பெயரும் வேட்டையாட யத்தனித்து, வேடர் - வலை ஞர் - முதலியவர்களோடு கூடிக் காட்டிற் சென்று, அவரவர்கள் தனித்தனி தங்கள் தங்கள் கருத்துக் கிசைந்தபடி யானை - புலி - கரடி - சிங்கம் - பன்றி - மான் - காண்டா மிருக முதலியவற்றை வெட்டிக் குத்திக் கொன்று வேட்டையாடி வருகிறபோது, பற் குணன் ஒரு வனத்திற் சென்று மிருகங்களை அதமாக்கினான். அந்தப் பற்குணன் மிகுந்த அன்புடன் வளர்த்து வருகிற நாயா னது, ஒரு மிருகத்தைத் துரத்திக்கொண்டு போயிற்று. அம்மிருகம் அதன் கண்ணுக்குத்தோன்றாமல் மறையவே நாயானது தன் எஜ மானனைத் தேடி, ஏகலைவன் சிலம்பக்கூடமிருக்கிற வழியாக ஓடி வந்து துரோணசாரியைப்போற் செய்து வைத்திருக்கிற மேடையி னிடத்துச் சலவிசர்ச்சனஞ் செய்தது.

அதை ஏகலைவன் பார்த்துச் சினங்கொண்டு, தன் வில்லை வளைத்து அதன் மேல் ஒரு பாணத்தைத் தொடுத்தான். அந்தப் பாணம் நாலாகி நாயின் முகத்தில் நாலுதிசையிலும் பட்டன. உடனே நாய் பற்குணனிடம் வந்து ஓலமிட்டழுதது. பற்குணன் நாயை நோக்கி, முகத்தில் நான்குசரம் பட்டிருப்பதைப் பார்த்து, "அடடா!! இவ் வண்ணமாகச் சரந்தொடுப் பதற்குத் துரோண சாரியருக்கும் அக்கினிகோத்திர முனிவருக்கும் நமக்குந் தானே தெரியும். இந்தச் சுவானத்தின்மீது இவ் வண்ணமாகப் பாணம் பிரயோகித்தவர் யார்? அவரை நாம் பார்க்கவேண்டும்" என்று நினைத்து அச்சுவானத்தின்பின் சென்றான். சுவானம் ஏகலைவன் சிலம்பக்கூடத்திற்போய் நின்றது. பற்குணன் அச் சிலம்பக் கூடத்தில் சென்ற போது ஏகலைவன் பார்த்துத் திடுக்கிட்டு, "ஓ! ஓ! மஹாராஜாவின் புத்திரனாகிய பற்குணன் இங்குவர வேண்டிய தென்ன" என்று மனங்கலங்கி, ஓடோடியும் வந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து "ஓ சுவாமி! தாங்கள் இங்கு வந்தது அடியேன் செய்த மாதவப்பேறோ? அல்லது இவ்வனஞ் செய்த புண்ணியவசமோ? அல்லது எங்கள் குலஞ்செய்த பூஜா பலமோ?" என்று பலவாறு துதித்து நின்றான். பற்குணன்

வணங்கிய வேடனை ஆதரித்து, "அப்பா! இந்த சுவானத்தின் மேல் இவ்வண்ணமாகப் பாணந் தொடுத்தவர் யார்?" என்று கேட்க, ஏகலைவன் "ஓ சுவாமி! அது தங்களுடைய சுவான மென்று தெரியாது. அது இந்தவிடத்து வந்து என்குருவுருவ மிருக்கிற மேடையின் மேல் நீர் விட்டது. அதனைப் பார்த்து உடனே மனம் பொறுமல் நானே பாணம் எய்தேன்" என்றுகூற, பற்குணன் அவனைப் பார்த்து, "ஓ ஏகலைவனே! உனக்குக் குரு யார்?" என்று கேட்டான். ஏகலைவன் வணங்கிய முடியனாகி "ஓ சுவாமி! நான் வில்வித்தையின்மே லாவல்கொண்டு துரோணசாரியைக் கண்டு என் கருத்தை வெளியிட்ட போது, துரோணசாரி 'எனக்கு மிகுந்த அலுவலிருக்கின்றது. ஆதலால் உனக்கு வில்வித்தை கற்பிக்க இயலாது' என்று கூறினார். அதன் பின்பு அவருடைய திருவுருவத்தைப் போல் ஓர் உருவஞ்செய்து, அதனைக் குருவாக வைத்துக்கொண்டு வில்வித்தை கற்றுவருகிறேன்" என்று சொன்னான்.

பற்குணன் இந்த வசனங்களைக் கேட்டு அதிக வியப்படைந்து "ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்?" என்று சற்று ஆலோசித்து நமது குருவாகிய துரோணசாரியரே இவனுக்குக் குருவாக விருக்கிறார். இவன் மாறுபாடாகச் சொல்லுகிறான். இவனிருக்கட்டும். முன்னம் நமக்கு குரு ஒரு வில்விநோதங் கற்பித்து இது ஒருவர்க்குந் தெரியா தென்று சொன்னாரே. இந்த வேடன் அந்த வில்விநோதத்தைச் செய்தானே! எல்லாம் குருவைக் கண்டு அவர் கருத்தைத் தெளிய வேண்டும்" என்று மனதில் நினைத்து, மீண்டுங் காட்டிற் சென்று சில மிருகங்களை வதைத்து, பின்பு தமையன் தம்பிமார் முதலானவர்களோடு கூடி நகரத்துக்கு வந்து ஸ்நானம்பண்ணி போஜனஞ்செய்தான்; அப்பால் எல்லாரோடுந் தானும் சிலம்பக்கூடத்துக்கு வந்து, வழக்கப்படி வில்வித்தைகளை அப்பியாசஞ்செய்தான். அரண்மனைக்குப் போகும்போது யாவரும் ஆசிரியருக்கு வழக்கப்படி வணங்கி விடை பெற்றார்கள். இந்தப் பற்குணன் தூரநின்று அஞ்சலிசெய்து போயினான். துரோணசாரி பற்குணன் நடத்திய மரியாதையைக்கண்டு மனதுக்குள் கனவருத்த மடைந்து, "ஓ! ஓ! இவனால் நமது மனக்குறையை நிறைவேற்ற எண்ணியிருக்கிறோமே. இவன் இன்றையத்தினம் நம்மேல் வெறுப்புடையவனாய்த். தூரநின்று அஞ்சலிசெய்து போகவேண்டியதென்ன? இதனை அறியவேண்டும்" என்று எண்ணங் கொண்டிருந்

தார். ஒரு நாள் பற்குணனும் துரோணசாரியரும் தனியே சந்திக்க துரோணசாரியார் பற்குணனை நோக்கி, "அப்பா! உனக் கென்மேல் வெறுப்புண்டாக நான் என்ன செய்தேன். அதனைக் கூறுவாயாக" என்று வினவ, பற்குணன் வணங்கி "ஓ சுவாமி! முன்னமொரு வில் விநோதத்தை எனக்குக் கற்பித்து, இவ்வித்தை வேறொருவர்க் குந் தெரியாதென் றுரைத்தீர்கள். நமது மலைச்சாரலி லிருக்கும் ஏகலைவ னென்கிற வேடன் அவ்வித்தையைக் கற்றிருக்கிறான். அவனைக் கண்டு உனக்குக் குரு யாரென்று கேட்டபோது, தங்களுடைய நாமதேயத்தைச் சொன்னான். அன்று முதல் தங்கள்மீது வெறுப்புடையவனாக இருக்கின்றேன்" என்றான். துரோணசாரி அதிக வியப்படைந்து, "நல்லது பற்குண! அந்தவேடனை எனக்குக் காண்பிப்பாயா?" என்று கேட்டார். பற்குணன் காண்பிக்கிறேன்" என்ன இருவரும் அந்த வனத்திற்குச் சென்று, ஏகலைவ னிருக்கிற இடத்துக்குப் போயினர்.

ஏகலைவன் இவ்விருவர் வரவை யறிந்து, பரிந்துவந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, சிலம்பக்கூடத்துக் கழைத்துப் போய்ச் சோடச உபசாரமும் நடத்தி, கண்களில் ஆனந்த நீர் ததும்ப இரண்டு கரங்களையும் சிரமேற்கொண்டு, அநேக விதமாகத் துதித்து "ஓ சுவாமிகளே! எளியேன்மீது கிருபைகூர்ந்து என்னிடத்துக்குவர என்ன பாக்கியம் பெற்றேன்? நீங்களிருவரும் இங்கு வந்தகாரணம் என்ன?" என்று வினவ, துரோணசாரி வணங்கிய ஏகலைவனை ஆசீர்வதித்து, "ஓ வேடராஜனே! உனக்கு வில்லாசிரியன் யார்? நீ அதிக அருமையான வில்விநோதங்களைச் செய்கின்றனையாம். அதனைப் பார்க்க வந்தோம்" என்ன, ஏகலைவன் "ஓ சுவாமி! ஆதியில் வில்வித்தை கற்கத் தங்களிடத்துக்கு வந்தபோது எனக் கொழிவில்லை யென்று தாங்கள் மறுத்துவிட்டீர்கள். அதன் பின்பு நான் இவ்விடம் வந்து ஒரு சிலம்பக் கூடங்கட்டி, அதில் தங்களைப்போல் ஒரு திருவுருவஞ் செய்து வைத்து, அதன் முன்னிலையில் வில்வித்தையைக் கற்றேன். இதோ நான் கற்றிருக்கிற வில்வித்தையைக் காண்பிக்கிறேன்" என்று, ஆசாரிய வணக்கமுதலியன சாம்பிரதாயப்பிரகாரம் ஆவலுடன் காண்பித்தான். அவனுடைய பக்தி விசுவாசத்துக்கு மெச்சி, அவனை வாழ்த்தி, "குருவிசுவாசம் யாருக் கிருக்கின்றதோ அவர்களுக்குத் தெய்வானுகூலமுண்டு. தெய்வானுகூல முண்டானபோதே

எல்லாத்திறமு முண்டாகும். அப்பா பற்குண ! அதற்குத் திருஷ்டாந்த மிந்த ஏகலைவன்தான்" என்று துரோணர் கூறினார். அதற்குப் பற்குணன் குருவாக்கியத்தை மனதில் மதித்து, "அடா! இந்த ஏகலைவன் தனது பக்தி விசுவாசத்தினால் வித்தையில் திறமுடையவனானான். இதனை யுணராமல் ஆசிரியர்மேல் வெறுப்புற்றிருந்தோம்" என்று தன்னைத்தானே வெறுத்துக்கொண்டு, துரோணாசாரியருக்கு அதிக விருப்பமுண்டாக வந்தனை வழிபாடுகள் செய்தான். துரோணாசாரி மறுபடியும் ஏகலைவனை நோக்கி, "ஓ ஏகலைவா! நீ குருவிசுவாசி. ஆகையால், அருமையான வித்தைகளிற் தேர்ச்சி பெற்றாய். நாங்கள் போகவேண்டி யிருப்பதால் எங்களுக்கு விடை கொடு" என்றுரைக்க, ஏகலைவன் வணங்கி "ஓ சுவாமி! நான் எளியவனாயிருந்தாலும் தங்களுடைய திருவுருவத் தியானத்தால் வில்வித்தையைக் கற்றேன். இப்போது தாங்களே நேரில் எழுந்தருளியதால் குருதக்ஷணை கொடுக்கப் பிரியமுடையவனா யிருக்கிறேன். எளியேன்மீது கிருபை கூர்ந்து என்ன வேண்டுமோ அதனைக் கேளுங்கள்" என்றிசைத்தான். அதற்கு ஒன்றும் வேண்டாமென்று துரோணாசாரி மறுத்தார். ஏகலைவன் மறுபடியும் வேண்ட, அதன்மேல் பற்குணனுக்குத் தம்மேற் பக்தியும் பயமுமுண்டாகத் துரோணாசாரி அவ்வேடனைப் பார்த்து, "ஓ ஏகலைவா! நீ எனக்குத் தக்ஷணை கொடுக்க எண்ணமிருந்தால் உன் வலக்கைப் பெருவிரலைக் கொடு" என்று கேட்டார். ஏகலைவன் தக்ஷணம் சூரியெடுத்துத் தன் வலக்கைப் பெரு விரலை அறுத்துத் துரோணாசாரியின் பாதத்தில் வைத்து வணங்கினான். துரோணாசாரி அதிக மகிழ்வை அடைந்து, உள்ளம் பூரித்து "ஓ ஏகலைவா! முற்காலத்திற் குரு பக்தியிற் சிறந்தவன் உதங்கனென்று கேள்விப்பட் டிருக்கிறோம். இக்காலத்தில் நீதான் குருபக்தி யுள்ளவன். இதுவரையில் உனக்கு ஏகலைவனென்று பெயர் வழங்கி வந்தது. குரு விசுவாசத்தினால் வில் வித்தையைக் கற்றபடியால், இனி உனக்கு ஏகவில்லியென்று பெயர் வழங்கக்கடவது" என்று கூறி விடைபெற்றார். அப்பால் எல்லோரும் பட்டணம் வந்து சேர்ந்தார்கள். பற்குணன் அன்று முதல் குருவின்மேற் குரோதமின்றி முன்போலவே அன்புடையவனாகி வில்வித்தையைக் கற்றுவந்தான்.

## துரியோதனாதியர் ஆசாரியநிந்தை செய்தல்

இப்படி நூற்றுவரும் பாண்டுமக்களும் வில்வித்தையைக் கற்று வருகிறபோது, பாண்டுமக்கள் வில்வித்தையிலும் மற்ற ஆயுத வித்தைகளிலும் யாவரும் புகழும்படி நாளுக்கு நாள் திறமுடையவர்களானார்கள். இதைக் கண்ட துரியோதனன் பொறாமைகொண்டு, தன் தாதையிடத்தும் மூதாதையிடத்தும் சென்று வணங்கி, "ஓ ஐயன்மீர்! வில்லாசிரியர் பாண்டுமக்கள்மீது அன்புடையவராகி அவர்களுக்குமாத்திரம் அதிக வித்தையைக் கற்பிக்கிறார். எங்கள்மீது ஊக்கமுடையவராயில்லை" என்றான். பீஷ்மரும் திரிதராஷ்டிரனும் துரோணாசாரியை அழைத்து அவர்க்கு வந்தனை செய்து, "ஓ சுவாமி! குருமக்களாகிய நூற்றைவரையும் உமக்கு ஒரு நேத்திரமாகத் தாங்கள் கருதவேண்டும். அவ்வாறு கருதாமல் ஒருதிறத்தாருக்கு ஒருவிதம் மற்றொரு திறத்தாருக்கு ஒருவிதமாகக் கற்பிக்கிறீர்களாமே? அது தங்களுக்குத் தகுதியா?" என்று வினவ, அதற்குத் துரோணாசாரி கனவருத்தமுற்று "ஓ மண்டலேஸ்வரர்களே! உங்கள் மக்கள் நூற்றைவரையும் எனக்கு ஒரு கண்மணியாக எண்ணி வித்தையைக் கற்பித்துவருகிறேன். அவரவர்கள் புத்தி யுக்திக்குத் தக்கதாக வித்தை யேறுகின்றது. அதற்கு நான் என்ன செய்வேன்?" என்று அவர்களிடத்து விடைபெற்றுச் சிலம்பக்கூடத்துக்கு வந்து, நூற்றைவரையு மழைத்து, "ஓ குருபுத்திரர்களே! நாமெல்லாரும் கங்கைக்குப் போய் ஸ்நானஞ் செய்து வருவோம் வாருங்கள்" என்று அழைத்தார். குருபுத்திரர் அதற்கு ஒப்புக்கொண்டு யாவரும் ஒன்றாகத் திரண்டு துரோணாசாரியோடு கூடிக் கங்கைக்குச் செல்லலுற்றார்கள். அவ்வாறு செல்லும்போது துரோணாசாரி தம்மிடத்திலிருந்த அன்புடையவனா யிருக்கிற பற்குனனை நோக்கி, "அப்பா பற்குனா! நமது மாளிகைக்குச் சென்று எண்ணெயும் நலங்கும் வாங்கிவா. வருகிறபோது எண்ணெயின் வட்டிலையும் நலங்கின் வட்டிலையும் பூமியில் வைக்காமற் கொண்டுவா" என்று கூற, அவ்வாக்கியத்தைச் சிரமேற் கொண்டு அவர் மாளிகைக்குச் சென்றான். இங்கே துரோணர் மற்ற நூற்று நால்வரையும் அழைத்துக் கொண்டு கங்கையை நோக்கிப் போகிறபோது வழியில் ஒரு பெரிய ஆலமரந் தோன்றிற்று. துரோணாசாரி அம்மரத்தடியில் யாவரையு மழைத்துப் போய் துரியோதனனைப் பார்த்து, "அப்பா துரியோதனா! இதோ இருக்கிற ஆலமரத்தின் இலைகளையெல்லாம் ஒரு பாணத்தினால் ரந்தரஞ் செய்யும் ஒரு வில் விநோதம் காண்பிக்கி

றேன். "அதனை நீ கற்றுக்கொள்" என்று அருகி லழைத்துப் பூமியில் ஒரு சக்கரம் எழுதி, அச்சக்கரத்தில் பீஜாக்ஷரங்க ளமைத்து, அம்மந்திரத்தை அவன் காதி லுபதேசித்து வில்லை வளைத்துப் "பாணந் தொடு" என்று கட்டளையிட்டார். துரியோதனன் அவ்வாறு வில்லைவளைத்து ஒரு பாணத்தைத்தொடுத்தான். அப்பாணஞ் சென்று ஆலமரத்தின் இலைகளிலெல்லாம். ஒவ்வொரு ரந்தரமிருக்கும்படி செய்தது. அதைத் துரியோதனன் கண்டு மகிழ்வெய்தி ஆசிரியனைத் துதித்தான். பின்பு துரோணசாரி அங்கெழுதிய சக்கரத்தைக் கலைக்காமல் யாவரையு மழைத்துக்கொண்டு கங்கைக்குச் சென்றார்.

---

## துரோணர் முதலைவாயி லகப்பட்டது

---

இங்கே பற்குணன் குருபத்தினியைக் கண்டு வணங்கி எண்ணெயும் நலங்கும் வாங்கிக்கொண்டு அதிக வேகமாகக் கங்கையை நோக்கி வருகிறபோது, வழியில் ஆலமரந் தோன்றிற்று: அம்மரத்தடியில் வந்து சற்று நின்றான். அங்கே குருகுமாரர்கள் காலடி நெருக்கமாக இருந்தது. "அடடா! இங்கு நமது ஆசிரியர் ஏதோ ஒரு வில்விநோதம் செய்திருப்பார். அதற்காக நமது தமையன்மார் தம்பியர் முதலியவர்கள் கூடிப் பார்த்திருக்கவேண்டும்" என்று கருதி ஆலமரத்தடியைச் சுற்றிப் பார்க்கும்போது அங்கொரு சக்கரந் தோன்றிற்று. அந்தச் சக்கரத்தையும் சக்கரத்துக் குள்ளிருந்த பீஜாக்ஷரத்தையும் பார்த்து, அவைகளை மனதிலழுத்திக்கொண்டு மரத்தை நோக்கினான். அம் மரத்திலிருக்கிற இலைகள் துளைக்கப் பட்டிருப்பதை யுணர்ந்து, "அடடா! இந்த வித்தையைத் தான் நமது குரு இங்கு கற்பித்திருப்பார்" என்று அந்த மந்திரத்தை மனனஞ் செய்து, நாம் வில்லெடுத்துப் பாணம் தொடுப்போமென்றாற் கைகளில் எண்ணெய் வட்டிலும் நலங்குவட்டிலு மிருக்கின்றன. பூமியில் வைத்தாற் குருவின் கட்டளைக்கு விரோதம் வருகின்றது. ஆகிலும் நாம் இந்த இரண்டு வட்டில்களையும் அந்தரத்திலேற்றி அவை வருகிறதற்குள் பாணந் தொடுப்போமென்று வில்லைவளைத்து நாணேற்றிட்டு, ஒரு மந்திரக்கணையை யுந்தி வட்டில்களை அந்தரத்திலேற்றி, ஆசாரியரைச் சிந்தித்து மற்றொரு அஸ்திரத்தை யெடுத்து தூபதீப நிவேதனஞ் செய்து தூண்டினான். அப்பாணம் சென்று இலைக்கொரு துளையுண்டாக்கிற்று. இதற்குள் அந்தரத்திலெறிந்த

வட்டில்களும் வந்தன. அவைகளைக் கரத்திலேந்தி மரத்தை நோக்கினன். இலைகளெல்லா மிரண்டுதுளைபட் டிருந்தன. அதனைக் கண்டு மகிழ்வடைந்து பூமியிலிருந்த சக்கரத்தைக் கலைத்துவிட்டுக் கங்கைக்குவந்து குருவைக்கண்டு வணங்கித் தன் கரங்களினுற் குருவுக்கு எண்ணெய் தேய்த்து நலங்கிட்டுவிட்டு, தன் தமையன்மார்களும் தம்பிமார்களும் விளையாடும் துறையிற் சென்று நீர் விளையாடினன்.

துரோணுசாரி கங்கைத்துறையி லிறங்கி ஸ்நானஞ் செய்கிறபோது ஒரு முதலை வந்து அவர் காலைப் பற்றிக்கொண்டது. அதனாலே அவர் துன்பமுற்றுத் தமது சக்தியளவு காலை யுதறியும் அம் முதலை விடாது பற்ற, அதுகண்டு முற்காலத்தில் தாகத்திற்குச் சலமருந்தக் கயத்திற் சென்று முதலைவாயிற் சிக்கிய கஜேந்திரன் ஆதிமூலமென் றெப்படி அழைத்தானே அப்படியே குருகுலமக்களைக் கூவி அழைத்தார். அந்தச் சத்தம் நீர் விளையாடுகிற குருகுலமக்கள்காதிற் கேட்கவில்லை. பின்பு துரோணுசாரி அவ்வழியில் வருகிறவர்களோடு தாம்படும் அவஸ்தையைச் சொல்லியனுப்பினர். வழிபோக்கர்கள் குருகுலமக்களிடத்து வந்து, "ஓ ராஜகுமாரர்களே! உங்கள் ஆசிரியரை முதலை பற்றி இழுக்கின்றது. இவ்வளவுநேரம் அவருக்குப்பிராணனிருக்கின்றதோ போயினதோ" என்று புகன்றார்கள். அதுகேட்ட துரியோதனனும் அவன் தம்பிமார்களும் அதிவேகமாகவந்து கல்லுங்கட்டியுமெடுத்து அடித்தார்கள். அது முன் பற்றினதைவிட அதிகமாகப்பற்றிக் கங்கையில் வலிக்க, இதற்குள் பற்குணன் பார்த்து தன் வில்லைவளைத்து நாணேற்றிட்டு, ஒரு பாணத்தை எடுத்து வில்லிற் பூட்டி முதலையின் கண்டமும் அதன் உடலும் துண்டமாகப் போகும்படி தூண்டினன். அப் பாணம் ஆதிமூலமென்றழைத்த யானைக்குத் திருமாலேவிய ஆழிபோற் புகுந்து அம் முதலையைக் கண்டித்தது. அந்தக் கஜேந்திரன் எவ்வாறு ஆனந்தத்தை யடைந்து கரையேறினனே அவ்வாறு துரோணுசாரி முதலைவாயினின்று வெளிப்பட்டு அடங்கா மகிழ்வுகொண்டு பற்குணனைத் தழுவி, "அப்பா பற்குண! நீ யெனக்குப் பிராணுதாரமா யிருந்தாய். உன்னு லுயிர்பெற்றேன். உயிருதவி செய்தவற்குச் செய்யு முபகார மென்ன இருக்கின்றது? நீயே கஜேந்திர வரதன்" என்று பலவாறு புகழ்ந்து ஆடை ஆபரணங்களை யணிந்து, யாவரையு மழைத்துக்கொண்டு முன் வந்த வழியாக வந்து ஆலமரத்தருகிற் சேர்ந்து அம் மரத்தை நோக்கி

ஞர். அப்போது அந்த மரத்திலிருக்கிற இலைகளெல்லாம் இரண்டு துளையாக இருக்கின்றதைப் பார்த்து வியப்படைந்து "ஓ குரு குமாரர்களே! முன்னம் துரியோதனனுல் இம் மரத்தி னிலைகளை ஒவ்வொரு துளையாகத் துளைத்தோம். இப்போது இவ்விலைகளில் இரண்டு துளைகள் இருக்கின்றன. இதை யார் செய்தது?" என்று வினவப் பற்குனன் வணங்கி "ஓ சுவாமி! அடியேன் எண்ணெயும் நலங்கும் கொண்டு வருகிறபோது இம் மரத்தடியிற் சக்கரம் போட்டிருந்தது. அந்தச் சக்கரத்தையும் அதிலடங்கியிருந்த பீஜாக்ஷரத்தையும் என் மனதி லெழுதிக்கொண்டு ஆலமரத்தைப் பார்த்தேன். மரத்தினிலைகளெல்லாம் துளைபட்டிருந்தன. நாமும் அவ்வண்ணம் செய்வோமென்று கரத்திலிருந்த எண்ணெயின் வட்டிலையும் நலங்கு வட்டிலையும் தங்கள் கட்டளைக் கழிவுவாராமல் ஆகாயத்திற் போக்கி, அவைகள் வருகிறதற்குள் வில்லை வளைத்து ஒரு பாணத்தைத் தொடுத்து வட்டில்களைப் பிடித்துக்கொண்டேன். அந்தப் பாணம் இந்த இலைகளைத் துளைசெய்தது. ஆகையா லிரண்டு துளைபட்டிருக்கின்றன" என்றுரைத்தான்.

துரோணுசாரி மிக்க மகிழ்வடைந்து, "அப்பா பற்குனு! முன் செய்ததுபோல் இப்போது செய்தால்தான் என் மனதுக்குத் திருப்தியாயிருக்கும். எதோ செய் பார்ப்போம்" என்றிசைக்க, பற்குனன் வில்லை வளைத்து, ஒரு கணையினுல் இரண்டு வட்டிலையும் அந்தரத்திலெறிந்து ஒருபாணத்தை யெடுத்து மந்திரோபதேசஞ்செய்து தூண்டிவிட்டான். இதற்குள் அந்தரத்தி லெறிந்த வட்டில்கள் வர, அவைகளைப் பூமியில் விழவொட்டாமற் கைப்பற்றினுன். தொடுத்த பாணம் சென்று இலைகளை யெல்லாம் துளைத்துவிட்டது. துரோணுசாரியும் மற்றுமுள்ள குருகுல மக்களும் இதைக்கண்டு ஆச்சரியப்பட்டுப் பற்குனனைப் புகழ்ந்தார்கள். இவர்களில் துரியோதனன் மாத்திரம் பற்குனன் செய்ததைக் கண்டு மகிழாமற் பொருமைகொண்டு முகமாறுபட்டிருந்தான். துரோணுசாரி துரியோதனனை நோக்கி, "அப்பா துரியோதனு! பற்குனனது புத்தியையும் யுக்தியையும் பார்த்தனையா? அவனுக்குச் சொல்வதற்கு முன் நிலத்திலெழுதியிருந்த சக்கரத்தைக் கண்டு அதன்மேல் அந்த வித்தையைக் கற்றுக்கொண்டான். நீ யென்னிடத்திற் கற்றுக்கொண்டனையே இப்போது செய்" என்று சொல்லத் துரியோதனன் முன் செய்ததை மறந்து ஆலமரத்தோடு தானுமொரு மரமாய் வேலமரம்

போ லிருந்தான். துரோணுசாரி அதுகண்டு, "அப்பா துரியோதனு! அவரவர்கள் பூர்வம் செய்த பூஜாபலமெவ்வளவோ அவ்வளவுதான் கிடைக்கும். அதை நோக்காமல் எனக்கு நன்ருகக் கற்பிப்பதில்லை. பாண்டுமக்களுக்கு மாத்திரம் சிரத்தையோடு கற்பிக்கிருர்" என்று உங்கள் மூதாதைகளோடு முறையிடுகின்ருயே பார்த்தனையா? உனக்குச் சொல்லியதை நீ மறந்துவிட்டாய். அந்தப் பாண்டுபுத்திரன் நிலத்திலிருந்ததை மனத்திலிருத்தி அவ்வித்தையைக் கிரகித்தான். இதற்கு யாரை நோவது?" என்று யாவரையு மழைத்துக்கொண்டு நகரத்துக்குச்சென்று அவர்களெல்லோரையும் போஜனஞ்செய்துவரச் சொல்லி அனுப்பி விட்டுத் தாமும் மாளிகைக்குப் போனுர். குருபுத்திரர் போஜனஞ் செய்து சிலம்பக் கூடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். துரோணுசாரியும் நாளுக்குநாள் விசேஷமாய் வில்வித்தைகளைக் கற்பித்து வந்தார்.

இப்படிச் சிலநாட் சென்ற பின்பு வில்விநோதங்களிலு மற்ற ஆயுத வித்தைகளிலும் பாண்டுமக்கள் சிறப்புற்று யாவராலும் புகழப்பட்டார்கள். அதனைக் கண்டு துரியோதனன் மிகுந்த பொருமை கொண்டு, தாய் - தந்தை - மூதாதை - இவர்களிடத்துச் சென்று வணங்கி, "ஓ என்னருமைக் குரவர்களே! நாங்களெல்லாரும் துரோணுசாரியிடத்துப் பாண்டு மக்களைப்போல் தநுர்சாஸ்திரத்தையும் ஆயுதப் பரீக்ஷைகளையும் கற்றுவந்தாலும் துரோணுசாரியருக்கு அவர்கள்மீ திருக்கிற அன்பு எங்கள்மீ தில்லை. அவர்களுக்கு ஒருவிதமாகவும் எங்களுக்கு ஒருவிதமாகவுங் கற்பிக்கிருர்" என்று முறையிட, பீஷ்மர் - திரிதராஷ்டிரன் - விதுரன் முதலானவர்கள் சற்ருலோசித்து, தநுவாசாரியரை அழைத்துக் கேட்கவேண்டுமென்று தீர்மானித்துச் சில தூதுவர்களால் துரோணுசாரியரை வரவழைத்து, அவர்க்கு வந்தனை வழிபாடு செய்து ஒரு பொற்பீடத்திலிருத்தி, "ஓ சுவாமி! குருபுத்திரர் நூற்றைவரையும் ஒன்ருக நினைக்கவேண்டியது என்று முன்னமே ஒரு தரம் சொல்லியிருக்கின்ருேம். அதைவிட்டு இன்னமும் ஒருவரை ஒருவிதமாகவும் மற்ருெருவரை மற்ருெருவிதமாகவும் பார்க்கின்றீராமே; அது தங்களைப்போலொத்த ஞானவான்களுக்குத் தகுதியா?" என்று வினவத் துரோணர் அரசர்களை ஆசீர்வதித்து "ஓ அரசர்களே! நமது கையிலிருக்கிற விரல்கள் ஒன்றுக்கொன்று குறையாம லிருக்கின்றனவா? அதுபோல் மக்க

ளது புத்தியுக்தி எவ்வளவோ அவ்வளவுக்கு வித்தையேறுகின்றது. அதைப்பற்றி என்னை வினவுகிறது தங்களைப்போலொத்த மண்டலேஸ்வரர்களுக்குத் தகுதியல்ல" என்று மறுத்து, "உங்கள் புத்திரருடைய புத்தியுக்தியை நீங்களே யாதேனுமோர் காரியமூலமாகப் பரிக்ஷைசெய்து, நான் சொன்னதை ஆலோசித்துப் பாருங்கள்" என்று சொல்லி விடைபெற்றுத் தமதிருப்பிடம்போய்ச் சேர்ந்தார்.

---

## குருபுத்திரர் விநோதப்பரிக்ஷை

---

பீஷ்மரும் திரிதராஷ்டிரனும் மந்திரிமுதலானவர்களுடன் கூடி, குருபுத்திரர் நூற்றைந்துபெயரையு மழைத்து, திரிதராஷ்டிரன் புத்திரராகிய துரியோதனன் முதலாகிய நூற்றுவர் கையிற் கொஞ்சந் திரவியங்கொடுத்து, "நீங்கள் இந்தத் திரவியத்துக்கு வீடு நிறைந்த பதார்த்தம் வாங்கி வைத்திருங்கள்" என்றுகூறி, பாண்டு மக்களை யழைத்து அவர்கள் கையில் அவ்வாறே திரவியத்தைக் கொடுத்து, அவர்களுக்குச் சொன்னபடியே இவர்களுக்குந் திட்டஞ்செய்து அனுப்பினார்கள். நூற்றுவரும் ஓரிடத்திற் கூடி சகுனியையும் கர்னனையும் அழைத்து, "வீடு நிறைந்த பதார்த்தம் வாங்கி வைக்கச்சொல்லிக் கொஞ்சந் திரவியங் கொடுத்த நமது பெரியோர்கள் மனங்களிக்க என்ன பதார்த்தம் வாங்கலாம் சொல்லுங்கள்" என்று கேட்க, சகுனி கர்னன் முதலானவர்கள். யோசித்து "ஓ துரியோதனா! நமது பெரியோர்கள் கொடுத்த திரவியமோ கொஞ்சம். அதில் வீடுநிறைந்த பதார்த்தம் வாங்கிவரக் கட்டளையிட்டிருக்கிறார்கள். ஆதலால் வரகு வைக்கோல் வாங்கினால் வீடு நிறைந்திருக்கும். இதைவிட வேறொரு பதார்த்தம் வீடு நிறையாது" என்றார்கள். துரியோதனன் "ஆம்! ஆம்! இதுதான் சரி. இந்த யுக்தி பாண்டவர்களுக்குத் தெரியாது" என்றான். பின்பு அவர்கள் வடக்கு வீதியிலிருக்கும் ஒரு பெரிய வீட்டில் தங்கள் கையிலிருக்கிற தொகைக்கு வரகு வைக்கோல் வாங்கி அவ்வீட்டை நிரப்பி, யாராகிலும் பார்த்துப் பாண்டவர்கட்குச் சொல்லப் போகிறார்களென்று கபாடபந்தனஞ்செய்து, தெருத்திண்ணையிற் சகுனி கர்னன் முதலியவர்களோடு உட்கார்ந்திருந்தார்கள்.

தருமராஜன் தான் பெற்ற சொற்பத் தொகையை எடுத்துப் போய்த் தென்வீதியிலிருக்கும் வீட்டிற் சென்று, தன் தம்பிமார் நால்வரையு மழைத்து, "நமது பெரியோர்கள் வீடு நிறைந்த பதார்த்தம் வாங்கிவைக்கச் சொல்லிக் கொஞ்சந் திரவியங்கொடுத்தார்கள். அதில் பீமா! நீ ஒரு பொன்னை யெடுத்துப் போய் அறுசுவையோடுங் கூடிய பதார்த்தமும் அன்னமும் சமைத்து வை." என்றும் "பற்குண! நீ இந்த ஒரு பொன்னுக்குத் தாம்பூலம் - புஷ்பம் - கலவைச்சாந்து - பஞ்சவிடையங்கள் முதலானவைகள் சேகரித்துவை" என்றும் "நகுலா! நீ இந்த ஒரு பொன்னுக்கு விளக்கு நெய் வாங்கிவந்து வீடெங்குந் திருவிளக்கிடு" என்றும் "சகாதேவா! நீ மீதியிருக்கிற பொன்னுக்குத் திண்டு தலைக்கணை-பட்டுப்பாய் முதலியவற்றை வாங்கிப் போட்டுவை" என்றுங் கட்டளையிட்டார். தம்பியர் நால்வரும் அவரவர்களுக் கிட்ட கட்டளைப்படி நடத்தி ஸ்நானஞ் செய்து, அலங்காரமாக உடுத்துக் கொண்டு, தமையனாகிய தருமராஜனோடு தலைவாயிற்படியில் வந்து பெரியோர்கள் வரவுக் கெதிர்பார்த் திருந்தார்கள்.

பீஷ்மர் திரிதராஷ்டிரன் இவ்விருவரும் குருபுத்திரர் திறமையைப் பார்க்க மந்திரி முதலானவர்களை அழைத்துக் கொண்டு வடக்கு வீதியிலிருக்கிற துரியோதனனிடத்துச் சென்றார்கள். துரியோதனன் எதிர் கொண்டுபோய் நமஸ்காரஞ் செய்து, தந்தையையும் மூதாதையும் நோக்கி "ஓ ஐயன்மீர்! உங்கள் கருத்து மகிழ்வெய்த வீடுநிறைந்த பதார்த்தம் வாங்கிவைத் திருக்கிறேன்" என்று மேன்மை பாராட்டினான். திரிதராஷ்டிரன் "அப்பா மகனே! என்ன பதார்த்தம் வாங்கினாய்? சொல்" என்று வினவ, துரியோதனன் "தந்தையே! வரகுவைக்கோல் ஒன்றைத் தவிர மற்றப் பதார்த்தங்களால் வீடு நிறையாது, இது பெரிய வீடு. அவ்வரகுவைக்கோலை வாங்கிக் கதவைத் திறப்பதற்குக் கூட இடமில்லாமல் நிறைத்து வைத்தோம்" என்று சொன்னான். இதைக் கேட்ட திரிதராஷ்டிரன் முதலானவர்கள் உள்ளே போய்ப் பார்க்க இடமில்லாமையால் வெறுப்படைந்து, அங்கிருந்து தக்ஷணம் பாண்டுமக்களிருக்கிற இடத்துக்குச் சென்றார்கள். தருமராஜன் அஃதுணர்ந்து, தம்பியரோடு எதிர்கொண்டு வந்து வணங்கி அழைத்துப் போய்த் திருவிளக்கிட்டு அலங்காரமாகச் சிங்காரித் திருக்கும் வீட்டி லுட்கார்ரவைத்து, இனிய வார்த்தைபேசி, "ஓ

எங்க ளருமைத் தலைவர்களே! தாங்கள் இங்கிருந்து போஜனம் அருந்த வேண்டும்" என்று வருந்த, பெரிய அரசர்கள் அகமகிழ்ந்து, கைகால்கள் சுத்திசெய்து உள்ளறையிற் சென்று உட்கார்ந்தார்கள். உடனே பீமபாகமாகிய பதார்த்தங்களையும் அன்னத்தையும் வட்டிக்க, பெரிய அரசர்கள் போஜனஞ்செய்து பதார்த்தங்களிருந்த இனிமைக்கு மகிழ்ந்து, கைவா யலம்பிச் சபையில் வந்து உட்கார்ந்தார்கள். பற்குணன் தாம்பூலம் சந்தன பூஷ்பமாலைகளைக் கொண்டு வந்து வைத்தான். பெரிய அரசர்கள் மிகுந்த மகிழ்ச்சியடைந்து தருமராஜன் முதலாகிய ஐவரையும் நோக்கி, தங்கள் மகிழ்ச்சியைக் காட்டாமல் "அப்பா மக்களே! உங்களை வீடு நிறைந்த பதார்த்தம் வாங்கிவைக்கச் சொன்னோமே? அவைகள் எங்கே?" என்று வினவ, அவர்கள் அவ்விருவரையும் வணங்கி, "ஓ ஐயன்மீர்! வீடுநிறைந்த பதார்த்தமாவது திருவிளக்கே யன்றி மற்றொன்றில்லை. ஆகையால் நாங்கள் திருவிளக்கிட்டோம். வீட்டுக்கு வருகிறவர் புசியாமற் போவது தகுதியல்ல வென்று எங்களாற் கூடியமட்டும் சமையற் செய்து வைத்தோம்" என்றார்கள். பெரிய அரசர் மிகக் களிப்புற்று, மக்களைத் தழுவி முத்தமிட்டுச் சீராட்டி, மக்கள் நூற்றைவரையும் அழைத்துக் கொண்டு அரண்மனை வந்து சேர்ந்தார்கள். பின்பு இந்த இருதரத்தாரும் முன்போலவே துரோணாசாரியாரிடத்துச் சென்று வில்வித்தையைக் கற்றுவந்தார்கள். அன்று முதல் திரிதராஷ்டிரன் பீஷ்மர் இவர்களிருவருந் துரியோதனன், துரோணாசாரியார் மேற்சொல்லுங் கோளை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை.

---

## குருபுத்திரர் விற்பரிக்ஷை

---

இவ்வண்ணமாகச் சிலநாள் சென்ற பின்பு துரோணாசாரியார் பெரிய அரசர்களிடத்து வந்து, அவர்கள் செய்த பூசையைக்கொண்டு ஆசிகள் வழங்கி "ஓ அரசர்களே! குருகுமாரர்கள் நூற்றைந்துபேர்களுக்கும் யான் கற்றிருக்கும் வில்வித்தைகளெல்லாவற்றையும் கற்பித்திருக்கிறேன். ஆதலால் நல்ல வேளையில் விற்பிடித்த அரசர்கள் முனிவர்கள் எல்லாருமறிய இவ்வித்தையை அரங்கேற்ற வேண்டும்" என்றுகூறி அரண்மனைக்குச் சென்றார். பெரிய அரசர்கள் அதற் கிசைந்து ஒரு நாள் நியமித்து, அந்நாளில் "விற்

பிடித்தவர்கள் யாரோ அவர்களெல்லாம் வரவேண்டும்" என்று திருமுகமெழுதித் தூதர்கையிற் கொடுத்தனுப்பினார்கள். தூதர்கள் விற்பிடித்த அரசர்க்கும் முனிவர்க்கும் திருமுகம் அளித்தார்கள். திருமுகத்தைக் கண்ட தக்ஷணம் அரசரு முனிவரும் மிகுந்த ஆவல் கொண்டு ஆடை ஆபரணங்க ளணிந்து, இரதாரூடராய் அத்தின புரத்துக்கு வந்தார்கள். வந்த அரசர்களுக் கெல்லாம் பெரிய அரசர்களாகிய பீஷ்மர் திரிதராஷ்டிரன் இவர்கள் தகுந்த மரியாதைசெய்து விடுதிகள் விட்டார்கள். அவரவர்கள் தங்களுக்கு விட்ட விடுதிகளிற் பொருந்தி, ஸ்நானம்பண்ணிப் போஜனஞ் செய் திருந்தார்கள். பீஷ்மர் நகர்ப்புரத்தில் விசாலமாக இருக்கிற ஒரு இடத்திற் பிர்மாண்டமான காவண மியற்றினார். அதில் பீஷ்மர்,வந்த வர் களிருக்க ஆசனமிட்டு, திரிதராஷ்டிரன் - விதுரன் - மந்திரி - தண்டத்தலைவர் - மகுடவர்த்தனர் - பட்டவர்த்தனர் - பெரியோர் - நாட்டிலுள்ள குடிகள் - முதலானவர்களோடு, வேத வேதியர்க ளெல்லாருந் தம்மைப் புடைசூழ்ந்திருக்கக் கொலு வீற்றிருந்தார். அப்போது அவண் வந்திருந்த முனிவர்கள் அரசர்கள்முதலாயினோரை வரும்படி அறிக்கையிட விற்பிடித்த அரசரும் தநுர்சாஸ்திரம் படித்த முனிவரும் மற்றுமுள்ள யாவரும் காவணஞ்சேர்ந்து மரியாதைகளைப் பெற்று, தங்கள் தங்கள் தகுதிக்குத் தக்க ஆசனத்தில் இருந்தார்கள். மேலே சொர்க்கவாசிகளோடு இந்திரன் முதலாகிய தேவர்கள் தங்கள் தங்கள் வாகனத்தி லேறிக்கொண் அந்தரத்தில் வந்து நிறைந்தார்கள்.

பீஷ்மர் துரோணசாரியையும் குருகுமாரர்களையும் அழைத்து வரும்படி கட்டளையிட்டார். துரோணசாரி அதுணர்ந்து தமது மாணாக்கர் நூற்றைந்து பெயரையும் அழைத்துக்கொண்டு காவணத்துக்கு வந்தார். அவரைக் கண்டவுடன் பீஷ்மர் முதலான அரசர்களெல்லாரும் எழுந்து, எதிர்கொண்டுபோ யழைத்து வந்து ஒரு பொற்பீடத்தி லிருத்திச் சோடச உபசாரமுஞ் செய்து துதித்தார்கள். துரோணசாரியார் அவ்வரசர்கட்கெல்லாம் வந்தனை வழிப்பாடுகள் செய்து, "ஓ அரசர்களே! இது நல்ல சுப முகூர்த்த காலமாதலால் வில்லரங்கேற்றுங்கள்" என்று விளம்ப, பீஷ்மர் ஆயுதசாலைத் தலைவரை நோக்கி, ஆயுதப் பெட்டிகளைக் கொண்டுவரக் கட்டளையிட்டார். அப்படியே அப்பெட்டிகளைச் சபையிற் கொண்டுவந்து வைத்தார்கள். பீஷ்மர் துரோணசாரியரைப்பார்த்து, "ஓ சுவாமி! ஆயுதப்பேழைகள் இதோ யிருக்

கின்றது. இனித் தாமதப்படுத்தாமல் தங்களுடைய மாணக்கர் கற்றிருக்கும் வில்வித்தை முதலியவற்றை இங்கு வந்திருக்கும் படியான சகலரும் வியப்பெய்த விளையாடச் செய்யுங்கள்" என்று கட்டளையிட்டார். துரோணசாரி தமது மாணக்கரை நோக்கி, "ஓ குருபுத்திரர்களே! இது சமர் பூமியல்ல. பரிக்ஷைக்கூடம். ஆகையால் ஒருவர்க்கொருவர் விரோதமில்லாமற் கற்றவித்தை களை இச்சபை நிறைந்திருக்கிற யாவருங்கண்டு களிக்கக் காண்பி யுங்கள். இந்த ஆயுதப்பேழைகளைத் திறந்து அவரவர்களுக்கு இஷ்டமான ஆயுதங்களையெடுத்து விளையாடுங்கள்" என்றனர். குருபுத்திரர்கள் குருவே துணையென்று முனிவர்களையும் - சபை நிறைந்த அரசர்களையும் - பீஷ்மர் திருதராஷ்டிரன் முதலானவர் களையும் வணங்கித் தேவாராதனைசெய்து, பேழையைத் திறந்து அவரவர்களுக் கிஷ்டமான ஆயுதங்களைச் ஜயம் ஜயமென் றெடுத்துச் சபையில் நின்று ஒருவர்க்கொருவர் எதிர்த்து வில் - வேல் - வாள் - கதை - சத்தி - தோமரம் - சூலம்-பிண்டி பாலம்- பாங்கு - ஈட்டி - கடாரி - கண்டகோடாலி முதலிய ஆயுதங்களி னல் வெட்டியும், தட்டியும், எறிந்தும், குத்தியும், எத்தியும் யாவரு மகிழ விளையாடினார்கள்.

இவர்களில் துரியோதனனும் பீமனும் எதிர்த்துப் பல ஆயு தப் பயிற்சியைக் காண்பித்தார்கள். துரியோதனன் தன்னோடு பீமன் இளைக்காமல் நின்று விளையாடுவதற்குப் பொருமை கொண்டு, முன்னமே அப் பீமன்மீது வஞ்சினங்கொண்டு வயிரம் பற்றிய மனதையுடையவனுகையால் "இந்த வேளையில் விளை யாட்டுப்போலவே கதையினுல் ஒரே அடியாக அடித்து நீட்டி விட்டால் நமதுகுறை நீங்கும். மேலும் கொன்றுவிட்டதைக் கண்டு சபையோர் கேட்டால், 'நானென்ன செய்வேன்? சாஸ்திரப்படி விளையாடினேம். அவன் ஏமாந்திருந்தான். அதனுற் கைதவறி அடிபட்டது' என்று சொல்லி விடுவோம்" என்று அதிகக் கோபங் கொண்டு கதையைக் கையிலேந்தினன். பீமனும் கதையைக் கையிலேந்தி எதிர்த்து, மனதில் யாதொரு விகற்பமு மில்லாமற் கதாயுத வித்தையைக் காண்பித்து வருகிறபோது துரியோதனன் அதிகச் சினங்கொண்டு பீமன் உயிர் நிலையைப்பார்த்து அடித்தான். பீமன் அதனை யறிந்து, "அடடா! இவனென்ன விளையாடுகிற போது சத்துருவை அடிப்பதுபோல் நம்மை யடிக்கிறுன். நல்லது

நாம் ஜாக்கிரதையா யிருக்கவேண்டும்" என்று நினைத்துத் துரியோதனனோடு சமமாய் விளையாடி வந்தான். துரியோதனன் வரவர வெகுளி கொண்டு, அவன் உயிர்நிலையையே பார்த்துப் பார்த்து முகம் வெயர்த்து அடிக்கலுற்றான். பீமன் அவ் வடிகளுக்குத் தப்பித்துக் கொண்டு, இவன் ஏதோ ஒரு கபடத்தை மனதில் வைத்து நம்மைக் கொல்லக்கருதி யிருக்கிறபோது நாம் சும்மா யிருக்கலாகாதென்று வீராவேசங்கொண்டு மேகம் கர்ச்சிப்பதுபோற் கர்ச்சித்து, கையிலிருந்த கதையை அந்தரத்தி லெறிந்து அது கைக்கு வருவதற்குள் கையைப் பிசைந்து தோளைத்தட்டிக் கதையைக் கையிற் பற்றி, மலைநடந்து வருகிறதுபோல் துரியோதனனை எதிர்த்துக்கொண்டான்.

இப்படி இருவரும் ஒருவர்க் கொருவர் குத்தியும் தட்டியும் எத்தியும் போராடுகிறார்கள். இதனைச் சபையிலிருந்த பீஷ்மர் முதலானவர்கள் கண்டு, "ஓ! ஓ! மோசம் வந்தது. 'விளையாட்டுச் செய்கை வினையாக முடிந்தது' என்கிற பழமொழிபோல் இவ் விருவரும் ஆயுதப் பயிற்சியைக் காண்பிக்க வந்தவர்கள், ஆவியைக் கொள்ளைகொள்ள யத்தனிக்கிறார்கள். இதற்கு என்ன செய்வது" என்று மனநடுங்கி ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறபோது வில்லாசிரியராகிய துரோணாசாரியார் புத்திரன் அசுவத்தாமன் எழுந்து இருவர்க்கு மத்தியில்வந்து நின்று, "ஓ துரியோதனா! ஓ பீமா! நில்லுங்கள் நில்லுங்கள் ஒருவர்க்கொருவர் துவேஷங்கொண்டு ஆவியைக் கொள்ளை கொள்ளவா உங்களை ஆயுதப் பயிற்சி செய்யச் சொன்னது? சபாஷ்! நன்றாயிருக்கின்றது. ஒரு ஆதீனத்துப் புத்திரர் இப்போதே இவ்வளவு வயிரங்கொண்டிருந்தால், இனி வரவர எவ்வாறு இருப்பீர்கள்" என்று இடியிடித்ததுபோற் கூவினான். அக்கால இடிகேட்ட நாகங்கள் எவ்வாறு நடுங்கிப்போமோ அவ்வாறு துரியோதனன் - பீமன் இவ்விருவரும் குருபுத்திரன் வாக்கியத்தைக் கேட்டு ஒதுங்கி விட்டார்கள்.

இப்பால் பற்குணன், துரோணாசாரியார் முதலாகிய பெரியோரை வணங்கித் தன் வில்லை வளைத்து நாணேறிட்டுக் குணத்தொனி செய்து, முதுகிற் கட்டியிருந்த அம்புபெய் புட்டிலிற் கரத்தைவைத்து, ஒரு சரத்தை யெடுத்து மானதபூசையாய்த்

தூபதீப நைவேத்தியஞ் செய்து மந்திரோபதேசத்தோடு அவ்வில்லிற் றொடுத்துவிட்டான். அச்சரம் வானத்தி லெழுந்து மின்னல் இடி மழையோடு கூடிய மேகங்களையும், காற்றையும், பர்வதங்களையும், இன்னுமதிக வியப்படையத்தக்க விநோதங்களையும் காண்பித்தது. பின்னும் பற்குணன் மற்றொரு கணையைத் தொடுத்துத் தூப தீப நைவேத்திய முதலியவற்றைச் செய்து வில்லிற் பூட்டினன். அக்கணையொன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம், லக்ஷம், பத்து லக்ஷம், கோடி, சதகோடி, சங்கம், மகாசங்கம் என்னும் கணக்குக்கு அதிகப்பட்டு வானத்தை மூடிற்று. மேலும் பற்குணன் கஜாஸ்திரத்தை எடுத்துவிட்டான். அது அநேக யானை மயமாகவே, உடனே அக்கஜாஸ்திரத்துக்கு வயிரியாகிய கேசரியாஸ்திரத்தை விட்டான். அதனுல் மிகவாகிய சிங்க ரூபங்கள் வெளிப்படலும் அதனை மறுத்துச் சர்ப்பாஸ்திரத்தை விடுத்து, உடனே அதற்கு வயிரியாகிய கருடாஸ்திரத்தைத் தொடுத்து, அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகித்து அவ்வஸ்திரத்துக்குப் பிரதியாகிய வருணாஸ்திரத்தை யேவிக் கெடுத்துப் பின்பு இருளாஸ்திரத்தை உய்த்து, அதனைச் சூரியாஸ்திரத்தால் மறைத்து அசுராஸ்திரத்தை யுந்தி, உடனே அதனைக் கந்தர்வாஸ்திரத்தாற் சிந்தி, இன்னும் அநேகமாகிய தேவாஸ்திரங்களையும் அருமையான செய்கைகளையுஞ் செய்தான். இதனைக் கண்ட அரசர்களு முனிவர்களு மிகவும் மகிழ்ந்து பற்குணனைப் பலவாறு புகழ்ந்தார்கள்.

---

## கர்னன் வாது

---

இவ்வாறு யாவரும் பற்குணனைப் புகழ்ந்து கொண்டாடுவதைத் தேர்ப்பாகனிடத்து வளர்ந்தமையால் சுத்த க்ஷத்திரியனுயிருந்தும் நீறு பூத்த நெருப்புப்போ லிருந்த கர்னன் கேட்டு, தவசிரேஷ்ட சிகாமணியும் வில்வித்தையிற் சிறந்தவருமான பரசுராமரிடத்து வில் வித்தையைக் கற்று அதிகமான வன்மையையும் வில் திறமையையும் உடையவனு யிருந்தும் அவ்விரண்டையுந் தனக்குள் அடக்கிக்கொண்டிருந்த அடக்கத்தைச் சிதைத்தவனுய் உடனே எழுந்து சபையாரை வணங்கி "ஓ அரசர்களே! நீங்களெல்லாரும் வில் விநோதத்தின் திறமறியாதவர்கள்போல் 'ஆலையில்லாவூரில் இலுப்பைப்பூவே சர்க்கரை' என்கிற பழமொழிக்

இணங்கச் சிறுவனாகிய பற்குணன் செய்த வில் வித்தையைக் கண்டு மிகவும் வியந்து புகழ்ந்தீர்கள். யான் கற்ற வித்தையைக் காண்பிக்கிறேன். அதனையும் கிஞ்சித்து நோக்குங்கள்" என்று தன் வில்லை வளைத்து நாணேறிட்டு, பாசுராம மூர்த்தியைத் துதித்துக் குணத்தொனி காட்டி, சில சரங்களை எடுத்துத் தூபதீப நைவேத்தியஞ் செய்து வில்லிற் பூட்டி, மந்திரோபதேசத்தோடு தூண்டி, இந்திரன் குமாரனாகிய பற்குணன் ஏதேது விநோதஞ் செய்தானோ அதற்கு அதிகமாக அநேக வல்லமைகளைக் காட்டினான். அவைகளைச் சபையார் நோக்கிப் பற்குணனைப் புகழ்ந்ததிலும் பதின்மடங்கதிகமாக இவனைப் புகழ்ந்தார்கள். துரியோதனன் முதலாகிய நூற்றுவரும் அகங்களித்தார்கள். பற்குணன் மாத்திரம் கிஞ்சித்து நாணமுடையவனாயிருந்தான். அந்த வேளையில் கர்னன் பற்குணனை நோக்கி, "பற்குணா! நீ கற்ற வில் வித்தையை இங்கு வந்திருக்கும் விற் போரிடும் வேந்தர்கள் நோக்கும்படி காண்பிப்பாயா?" என்றான். அதற்குப் பற்குணன் மனம் நெய்யை விட்ட நெருப்புப்போ விருந்தாலும், இவன் தேர்ப்பாகனுக்கு வளர்ப்புப் பிள்ளையா யிருந்தும் அரசர் புத்திரர்போல் வருத்தப்பட்டு வில் வித்தையைக் கற்றுக்கொண்டா னென்கிற அருமையை மதித்துத் தணிவான மனத்துடனே "கர்னா! நீ யழைத்தபடி விற்போர் செய்ய இசைவேன். ஆனால் ஒரு சங்கடமிருக்கின்றது. அஃதென்னெனில் நீ எங்கள் தேர்ப்பாகனுக்கு அபிமான புத்திரன். நானோ இவ்வுலகாதிபனான ராஜபுத்திரன். நீயும் நானும் விற்போரிடுவது தகுதியல்ல. நீ வில்வித்தையிற் சிறந்தவன்றான் குறைவில்லை" என்றான்.

கர்னன் அதிகச் சினங்கொண்டு, "அடா பற்குணா! என்ன சொன்னாய்? இச்சபையார் முன் என்னைப் பங்கப்படுத்தாதவன் போற் பங்கம்படுத்த எண்ணி, நீ தேர்ப்பாகனுடைய புத்திரன் நான் இராஜபுத்திரனென்று ஜாதிமுன்னிலையில் இழிவு கூறினையல்லவா? சபாஷ்! ஆண் ஜாதி பெண் ஜாதி என்கிற இருவகைச் சாதியேயல்லாமல் மற்றொரு ஜாதியில்லை. உயர்ந்தோராவதும் தாழ்ந்தோராவதும், அவரவர்கள் கன்மத்தினாலே தான். நீ சிறுவன் உனக்கென்ன தெரியும்? நீ ராஜபுத்திரன் தான், நான் தேர்ப்பாகன் புத்திரன்தான்! ஆனால் நீயும் வில்லெடு நானும் வில்லெடுக்கிறேன். இச் சபையோர்கள் மகிழ்வெய்த என்னை ஜாதியீன

னென்றுரைத்த உன் முகமாகிய கமலத்தை இந் நிமிடத்திற் கொய்து அரங்கபூஜை செய்கிறேன்" என்று வில்லை வளைத்து நாணேறிட்டு, அங்கிருந்த அரசர் மன நடுங்க விற்குணம் பண்ணினன். அதற்குப் பற்குணன் அதிகச் சினங்கொண்டு கர்னனை நோக்கி "அடா கர்னா! என் முக சரோருகத்தைக் கொய்து அரங்க பூஜையா செய்யப் போகிறாய்? நல்லது. அதுவரையில் நீ யிருந்தாலன்றோ செய்வாய். இதோ என் கணையால் உன் தலையைப் பூமியி லுருட்டுகிறேன். ஒருவேளை இச்சபையிலிருக்கிற பெரியோர்களால் இந்த வேளை தடுக்கப்பட்டாலும் இனி எந்தவேளையிலாவது பலபேர றிய உன் சிரசைக் கொய்யாமல் விடேன். அப்படிச் செய்யாமல் விட்டால் நான் பிடித்தது வில்லல்ல. நானும் க்ஷத்திரிய னல்ல" என்று சபதங் கூறித் தன் வில்லை வளைத்து நாணேறிட்டுத் தேவரும் அரசரும் முனிவரும் திகைக்கக் குணத்தொனி காட்டினன்.

இதனைக் கண்ட பீஷ்மர் முதலான பெரியோர்கள், "இதென்ன விபரீதம்? இவ்விருவரும் என்ன காரணத்தாற் கடுஞ்சினமுற்று அடுந்தொழிற்குப் பிரவேசித்தார்கள்? இதற்கென்ன செய்வது" என்று வருத்தப்பட்டுக்கொண் டிருக்கிற தருணத்தில், முதிர்ந்த தேகத்தை யுடையவருந் தவசிலாக்கிய முடையவருமான கௌதமர் எழுந்து, காவி காம்பர சடாடவிகள் பக்கங்களிற் புரள ஓடோடியும் வந்து, இருவர் மத்தியில் நின்று, அவ் விருவரையும் நோக்கி வில் நாணைத் தளர்த்தச் சொன்னர். இருவரும் பெரியோர் வாக்கைத் தடுக்காமல் தங்கள் தங்கள் கையிலிருந்த வில்நாணைத் தளர்த்தினர்கள். அந்த வேளையில் பீஷ்மர் கோபங்கொண்டு, சபையை நோக்கி "கேளுங்கள் சபையோர்களே! துரோணசாரியார் தம்மிடத்தில் வில்வித்தையைக் கற்ற குருகுமாரர்கள் நூற்றைவரையும் அரங்கேற்ற வைத்தால், இந்தத் தேர்ப்பாகன் புத்திரனகிய கர்னன் நமக்கென்னவென்று சும்மா விராமல், தான்கற்ற வில்வித்தையைக் காட்ட வந்தான். ஆயினும் வித்தை எல்லோர்க்கும் பொதுவென்று ஒப்புக்கொண்டு, வில் வித்தையைக் காட்ட உத்தரவு செய்தோம். அப்படியே வில் வித்தையைக் காட்டினன். இவன் வில்வித்தையிலே தேர்ந்தவன்தான். அஃதிருக்கட்டும். இந்த ஆதீனத்துக்கு உடைய ராஜகுமாரனகிய பற்குணனை நோக்கி 'நாமிருவரும் விற்போரிடுவோம் வா' என் றெப்படி அஞ்சாமல் அழைக்கலாம். அதற்குப் பற்குணன் 'நீ தேர்ப்பாக

னுடைய புத்திரனாதலால் உன்னுடன் விற்போரிடுவது எனக்குத் தகுதியல்ல' என்று கூறினால், இவன் அந்தப் பற்குணன் முகமாகிய கமலத்தைக் கொய்து அரங்கபூஜை செய்கிறே னென்று எப்படி துணிவுட னுரைக்கலாம்? இஃது உங்களுக்குத் தருமமாக இருக்கின்றதா?'' என்றனர். அச் சபையிலிருந்த யாவரும் நீரோட்டத்திலே தெப்பம் செல்லும் தன்மைபோல் பீஷ்மர் கருத்துக்கு விரோதம் வாராம லவர்க்கேற்ற வசனங்களைப் பேசினார்கள். இதனைக்கேட்ட கௌதமர் சந்ததியாராகிய கிருபாசாரியாரும் அக்கர்னனைப் பார்த்து, "இந்த இராஜ சபையிற் கிஞ்சித்து மஞ்சாமல் என்னசொன்னாய்? கர்னா! தேர்ப்பாகனுக்குப் புத்திரனாகிய நீ ஏழுகடல் வளைந்த பூமிக்கதிபனாகிய மகா ராஜாதிராஜனுடைய மைந்தனுடன் நடுக்கமில்லாமல் இடுக்கமான சபதத்தைச் சொல்லலாமா? மநுநீதி - இராஜநீதி - வேதநீதி முதலிய யாவற்றிலும் ஜாதியாசாரம் - குலாசாரம் - வரன்முறை - ஆளடிமை இன்னதென்று விவரித்திருக்க நீ பெரிய சக்தியை யுடையவனை இலேசாகப் பேசவந்தாய். இனி இப்படி அத்துமீறிப் பேசாதே'; என்று கடுகடுத் துரைத்தார். இப்படிப் பீஷ்மரும் கிருபரும் கடுகடுத்துக் கூறிய வார்த்தையைக் கேட்டுச் சபையிலுள்ளோர் பலரும் நடுங்கினார்கள். அக் காலையிற் கௌதமர் வெகுண்டெழுந்து, அங்குள்ள அரசர் முதலானவர்களுடைய மனம் நடுங்கும்படியாக முன்னம் பீஷ்மரைப்பார்த்துப் பேசத்தொடங்கினார்—

---

## கர்னன் மகுடாபிஷேகம் பெறல்

---

"அடா பீஷ்மா! என்னசொன்னாய்? கர்னன் தேர்ப்பாகனுடைய புத்திரனென்றும், பற்குணன் இந்த ஆதீனத்துக்குரிய புத்திரனென்றும் கண்டவன்போலக் கூறிக் கர்னனை இழிகுலத்தானென்று இந்த இராஜசபை யறியச் சொன்னாயல்லவா? சபாஷ்! சபாஷ்! நன்றாயிருக்கிறது.! உலகத்தில் ஜாதியாசாரமுறை விசாரணை செய்தால் அத்திப்பழத்தைப்பிட்டால், அத்தனையுஞ் சொத்தை என்பதறியாயா? ஐயோ! அதுகிறையப் புழுவென்று குறியாயா? இந்த அண்டமும் அப்படித்தானல்லவா? ஆத்மகோடிக ளத்தனையுங் குற்றமே. நீ சாஸ்திர விசாரணை செய்ததும் அனர்த்தமே. நல்லது பீஷ்மா! திருமால் கருங்கற்றூணிற்

பிறந்தீர். சிவன் மூங்கிலிற் பிறந்தான். நெடிய கடல்நீரைக் குடித்த அகத்திய முனியும் அதோ யிருக்கிற துரோணாசாரியும், கும்பத்திற் பிறந்தவர்கள். முருகக்கடவுள் கங்கையிற் பிறந்தவர். இந்தக் கிருபன் தருப்பைப் புல்லிற் பிறந்தவன். ஐயா பீஷ்மரே! தாங்க ளெங்கே பிறந்தீர்கள்? தேவரீருற்பத்தி ஸ்தானம் தேவரீருக்குத் தெரியாமலிருக்க, ஒருவரை இழிவு கூறுவது எப்படி? இவ்வாறு பிறந்தவர்க ளெல்லாரும் உலகத்திற் சிறப்படைந்தார் களே யன்றிப் பிறந்த இடத்தால் இழிவடையவில்லை. ஆதலாற் கல்வியிற் கைதேர்ந்தவர்களுக்கும் கன்னிகாஸ்திரீகளுக்கும், கொடையி லுயர்ந்தவர்களுக்கும், அதிக வீரத்தை யுடையவர் களுக்கும், அஷ்டலட்சுமி சமேதராகிய அரசர்களுக்கும், குற்ற மற்ற ஞானிகளுக்கும், ஜாதிபேத நோக்குவதில்லை. அஃதிருக் கட்டும். உலகத்தில் வல்லமை யடைந்தவ னெவனோ, அவன்தா னுலகாதிபன். அவனைத்தான் நல்ல குலத்திற் பிறந்தோரும் வணங்குவார்கள். ஆதலால் சிறந்த குலத்திற் பிறந்தும் சிறப் பில்லாதிருந்தால், அவர்கள் சிறந்த குலத்தவ ரல்லர். கீழான குலத்திற் பிறந்து கீழானசெய்கை நீங்கி நின்றால், அவர்கள் கீழானவர்க ளல்லர். ஓ கிருபனே! நீ பெரியோர்களி லொருவனா யிருந்தும், இந்தக் கர்னனைக்குறித்துப் பேசியது தகுதியல்ல. நான் ஏதோ தாறுமாறாய்ப் பேசினேனென்று மனஸ்தாபம் வேண் டாம். ஓ பீஷ்மரே! இக்கணம் இக்கர்னனை உன்மனமகிழ்ந்து அரசனாக்கினால் என் மன மகிழும்" என்று கூறினார்.

பீஷ்மர் கௌதமருடைய வசனங்களைக் கேட்டுத் திடுக்கென் றெழுந்து வணங்கி, "ஓ சுவாமி! தங்கள் கருத்து மாத்திரமல்ல. இங்கிருக்கும் எல்லாருடைய கருத்துங் களிக்கும்படியாக இக்கணம் இக்கர்னனை அரசில்லாதிருந்த அங்கதேசத்துக்கு அரசனாக்கு கிறேன்" என்று கூறி அச்சபையிலுள்ளோர் அறியக் கர்னனுக்கு மகுடாபிஷேகஞ் செய்து, செங்கோல் ஆழி முதலியவற்றைக் கொடுத்து, இரதகஜதுரகபதாதிகளிலும் சில கொடுத்தார். இதனைப் யாவருங் கண்டு பரமானந்த மடைந்தனர். மற்றப் பாண்டுமக்களும் புகழ்ந்தார்கள். சபையிலிருந்த - அரசரும் - முனிவரும் - பெரிய அரசர்களிடத்தில் விடை பெற்றுத் தங்கள் தங்கள் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். அந்தரத்தில் வந்து வேடிக்கைப் பார்த்திருந்த தேவர்களும் தங்கள் தங்கள் யதாஸ் தானம் போய்ச் சேர்ந்தார்கள். இங்கே பீஷ்மர் முதலிய அரசர்

கள் தங்கள் பிள்ளைகளின் கல்விப்பயிற்சியைக் குறித்துத் துரோணு சாரியை அநேக விதமாகத் துதித்து, அவரவர்கள் புத்திர மித்திரர் களோடு தங்கள் தங்கள் அரண்மனைக்குப் போனார்கள்.

## பாஞ்சாலனோடு கௌரவபுத்திரர் உயுத்தம்

" கேளும் மஹாராஜனே! துரியோதனனும் கர்னனும், சாம்ப மூர்த்தியும் குபேரனும் போல நேசித்துப் பாண்டுமக்கள் திடுக்கிட உலகமுழுதும் தமதென்று கைக்கொண்டு வாழ்ந்து வருகிற காலத்தில் துரோணுசாரியார் பாஞ்சாலனுடைய சபையிற் கூறிய சபதத்தை மனதில் நினைத்து, " அடடா! நாம் புகன்ற சபதம் நிறைவேறு விட்டால் நமக்கென்ன பெருமை? நமது மாணுக்கர் கள் ஆயுதத்திறத்திலும், இரதகஜ துரக மிவைகளிலும், அதிகத் திறம்பெற்று வல்லமையாளரா யிருக்கிறார்கள். இவர்களைக் கொண்டு சபதத்தை நிறைவேற்றவேண்டு மென்று குரு புத்திரர் களை வரவழைத்துப் பல ஆசிகள் வழங்கி, "ஓ குருபுத்திரர் களே! என்னிடத்தில் வில்வித்தையைக் கற்றதற்கும், சகல அரசர்களுமறிய நீங்கள் வில்லரங்கேற்றிய தற்கும், எனக்கு இன்னுஞ் சிலதினத்திற் குருதக்ஷிணை கொடுக்கப் போகின்றீர்கள். அஃதெனக்குத் தெரியும். அவைகள் எனக்கு வேண்டாம். எனக் கொரு குறைவராமல் உங்கள் பெரியோர் என்னை யாதரித்து வருகி றார்கள். ஆதலால் நான் கேட்டுக்கொள்ளுகிறபடி செய்வீர்களானால், அது தான் எனக்குத் தக்ஷிணை" என்று சொன்னார். "குருசுவாமி! அஃதென்ன" என்று குருபுத்திரர்கள் வணக்கத்துடன் வினவ துரோணுசாரியார், " மாணுக்கர்களே! பாஞ்சாலன் என்னிடத்து வில்வித்தை கற்கும்போது 'பாதிராஜ்யங் கொடுக்கிறேன்' என்று சொல்லி, பின்பு இல்லையென்று மறுத்துப் பேசினது மன்றித் தன் சபையி லிருந்தவர்கள் நகைக்க என்னைப் பங்கப்படுத்தினான். அப்போது நான் சினங்கொண்டு, 'என் மாணுக்கரால் உன்னைப் புறங்கொண்டு, மடலோடு மடல்விரியத் தேர்க்காலிற் கட்டி இழுத்துவரச் செய்து, என் சபையில் உன்னைப் பங்கப்படுத்து கிறேன்' என்று சபதம் பண்ணினேன். என் வாக்கின்படி அந்தப் பாஞ்சாலனோடு போராடி, அவனைத் தேர்க்காலிற் கட்டிக்

கொண்டு வருவதே எனக்கு மேலான நன்மையுங் குருதக்ஷிணையும் ஆகும்" என்று கூறினார். இதனைக் கேட்ட குருபுத்திரர்கள் நூற்றைவரில் துரியோதனன் முதலாகிய நூறு பேர்களு மெழுந்து துரோணாசாரியரை வணங்கி, "சுவாமி! எளியேங்களுக்கு விடை கொடும். அந்தப் பாஞ்சாலனைக் கட்டிக்கொண்டு வருகிறோம்" என்று சொல்லி, ஆசாரியர் முதலிய பெரியோர்கள் விடைதரப் பெற்றுத் தங்கள் தங்கள் ரதங்களிமேலேறி, இரதகஜ துரகபதாதிகள் புடைசூழப் பாஞ்சால தேசத்துக்குச் சென்று, துருபதேயனிருக்குங் கோட்டையைச் சூழ்ந்து, வில்லை வளைத்து நாணேறிட்டுப் பாணங்களைத் தொடுத்துச் சிங்கநாதமும் அட்டகாசமுஞ் செய்தார்கள்.

அப்போது கோட்டைக் காவலாளிகள் பயந்து ஓடிவந்து பாஞ்சாலனை வணங்கி, "சுவாமி! யாரோ அத்தினபுரத்து அரசரின் புத்திரர்களாம். நூறு பெயர் இரதகஜ துரகபதாதிகளோடு வந்து, நமது கோட்டையை நாற்றிசையிலும் வளைத்து, வில்லைவளைத்துப் பாணங்களைத் தொடுத்துச் சிங்கநாதத்துடன் அட்டகாசஞ் செய்கிறார்கள்" என்று சொன்னார்கள். பாஞ்சாலன் "ஆ! இதென்ன ஆச்சரியம்? திரிமூர்த்திகளும் நமது நகரத்தின் மேல் யுத்தஞ் செய்யக் கிஞ்சித் தஞ்சுவார்களானால், இந்த அத்தினபுரத்து அதிபதிகள் எதிர்ப்பார்களோ? ஒரு வேளை பீஷ்மர் எதிர்த்தால் எதிர்க்கலாம். அவர் நீதிக்கு மாறுபடமட்டார். நாமொரு குற்றமுஞ் செய்யவில்லை. அப்படி யிருக்க, இப்போது வந்தவர் யார்? இன்னாரென்று அறியாமல் போராடுவது தகுதியல்ல" என்று சில தூதர்களை அனுப்பி விசாரித்துவரச் சொன்னான். அத்தூதர்கள் துரியோதனனுடைய சேனாசமுத்திரத்தினுட் புகுந்து, அவர்கள் படையெடுத்து வந்த காரணத்தை அங்கிருக்குஞ் சில தூதுவர்களா லறிந்துவந்து பாஞ்சாலனை வணங்கி, "ஓ ராஜமார்த்தாண்ட! முன்னம் துரோணாசாரி கூறிய சபதப்படித் தங்களைக் கட்டிக்கொண்டு போகத் திரிதராஷ்டிரன் புத்திரர்களாகிய துரியோதனன் முதலாகிய நூற்றுவரும் வந்திருக்கிறார்கள்" என்ன, பாஞ்சாலன் கோபச்சிரிப்புச் சிரித்து, அநேகயுத்தத்திற் கைதேர்ந்து சிறப்புடன் தன் பக்கத்தில்வீற்றிருக்கும் சோமதேயாதிகளை நோக்கி "ஓ சோமதேயாதிகளே! சில நாட்களுக்கு முன் நமது சபையில் ஒரு பிராமணன் வந்து சபதமிட்டான். அந்தச் சபதத்தை நிறைவேற்ற இன்று அத்தினபுரத்துக் கதிபதியாகிய திரி

தராஷ்டிரன் புத்திரர்களாகிய துரியோதனன் முதலாகிய நூற்று வரும் வந்து, நமது கோட்டையை வளைத்துச் சிங்கநாதம் செய்கிருர்களாம். நீங்கள் சென்று அச்சிறுவர்களை நமது தேசத்தினின்று ஓட்டி வாருங்கள்" என்று செப்பினுன். சோமகேயாதிகள் தக்ஷணம் தங்கள் தங்கள் இரதத்திலேறி, நால்வகைச் சேனையோடுஞ் சென்று, குருகுல புத்திரர் திறத்தைப் பார்த்து, இவர்கள் வில்லாளிக ளல்லவென்று தீர்மானித்து, ஒருதரம் வில்லை வளைத்து நாணேறிட்டுச் சில பாணங்களைத் தொடுத்துக் குருகுலமக்களோடு வந்த நால்வகைச் சேனைகளையும் சிதற அடித்து, அம்மக்கள் நூற்றுவரையும் வளைத்துக்கொண்டு அநேக பாணங்களைத் தொடுத்து, வில்லை முறித்து, நாணையறுத்து, தேரையுடைத்து, குதிரைகளைக்கொன்று, சாரதியைவெட்டி, மகுடத்தைப் பொடித்து, கவசத்தைக் கிழித்து, உடல் முழுவதும் இரத்தமயமாக்கிச் சிங்காதனஞ் சேர்ந்தார்கள். அதனுல் துரியோதனன் முதலானவர்கள் சமர்முகம் கண்டறியாதவராயும் சிறியவர்களாயும் இருந்தமையால், இரத்தப் பிரவாகத்தைக் கண்டு மனநடுங்கி, உயிர் பிழைத்தாற் போதுமென்று நினைத்துப் பாதசாரியாய்ப் புறங்கால் புட்டத்திற்பட ஓடி, அத்தினபுரியின் மத்தியில் வந்து திரும்பிப் பார்த்தார்கள்.

---

## பாஞ்சாலனேடு பாண்டுபுத்திரர் உயுத்தம்

---

இந்தச் செய்தியை துரோணுசாரி அறிந்து கனவருத்தமடைந்து மிகுந்த ஆருமையோடு பாண்டுமக்களை நோக்கித் தமது குறையைச் சொன்னுர். அதனைக்கேட்ட பாண்டவரிற் பற்குணன் எழுந்து பாதத்தில் விழுந்து, "ஓ சுவாமி! நீங்களேன் வருத்தப் படுகிறீர்கள்? என் பெரிய பிதாவின் புத்திரர்கள் சென்றமையால் நான் சும்மாவிருந்தேன். இதோ நானொருவனே போய் அந்தப் பாஞ்சாலனைக் கொண்டு வருகிறேன்" என்ருன் துரோணுசாரி பற்குணனை வாழ்த்தி, "அப்பா சுகுணபூஷண! எவ்விதத்திலேனும் என்னெண்ணத்தின்படி வெற்றி பெற்று வருவாயானுல், நான் என்றும் நன்றி குன்ருதிருப்பேன்" என்று ஆசீர்வதித்தனுப்பினுர். பற்குணன் குருவை வணங்கி, விடைபெற்று, தன் மூதாதையாகிய பீஷ்மரை வணங்கி, அவருடைய ஆசீர்வாதத்தையும் ரதத்தையும்

வாங்கிக்கொண்டு, தன் தம்பியாகிய நகுலனைச் சாரதியாக அமைத்துக்கொண்டு இரதகஜதுரக பதாதிகளோடு அத்தேரிலேறிச் சென்றான். இதற்குள் தருமராஜன் பீமராஜனை அழைத்து, "தம்பி பீமா! பற்குணன் தனியே போகிறானாதலால் நீ படைத் துணையாகச் செல்" என்று பகர, பீமன் விதுரனை வணங்கி அவன் ரதத்தை வாங்கிக்கொண்டு அதிலேறிச், சில சேனையோடும் சென்று பற்குணனுடன் கலந்தான். வடவாமுகாக்கினியும் ஊழிக்காற்றும் ஒன்றாகக்கூடின லெப்படியோ அப்படிப் பற்குணனும் பீமனுங் கூடிப் பாஞ்சாலன் தேசத்துக்குச் சென்று பாஞ்சாலன் கோட்டையை அணுகி, மேற்புறத்திற் பற்குணனும் கீழ்ப்புறத்தில் பீமனும் சூழ்ந்து, வில்லைவளைத்து நாணேறிட்டு, நகரத்திலுள்ளவர்கள் திடுக்கிட்டலறிப் பதறக் குணத்தொனி செய்து, சிங்கநாதத்துடன் அட்டகாச முதலானவைகளைப் பண்ணினார்கள். காவலாளிகள் கடுகியோடிவந்து பாஞ்சாலனை வணங்கி, "ஓ சுவாமி! இந்திரநீலம்போல் தேககாந்தியை யுடைய ஒருவர் மேற்கு வாசலிலும், காந்திரமான தேகத்தையுடைய யமனைப்போல் ஒரு திவ்ய புருஷன் கிழக்கு வாசலிலும் வந்து சூழ்ந்து, சிங்கநாத அட்டகாசஞ் செய்கிறார்கள்" என்று சாற்றப் பாஞ்சாலன் நகைத்து, தன்னருகி லிருக்கிற சோமகேயாதிகளை நோக்கி, "ஓ சோமகேயாதிகளே! முன்னம் வந்தவர் திரிதராஷ்டிரன் புத்திரர். இப்போது வந்தவர் பாண்டு புத்திரர். பாண்டுபுத்திரர்கள் தேவபிண்டம். ஆதலால் இவர்களோடு மிகுந்த எச்சரிக்கையோடு யுத்தஞ்செய்ய வேண்டும். முன்னம் மேற்குவாசலில் வந்திருக்கிற பற்குணனோடு நீங்கள் சென்று யுத்தஞ் செய்யுங்கள். பின்பு யான் வருகிறேன்" என்று விடைகொடுத்து, மந்திரி முதலானவர்களை நோக்கி, "ஓ மந்திரிகளே! நீங்கள் நமது சேனையோடும் கிழக்கு வாசலிற் சென்று, அங்கு வந்திருக்கிற பீமனோடு யுத்தஞ்செய்யுங்கள்" என்று அனுப்பிவிட்டு, தான் அரண்மனைக்குச் சென்று, ஸ்நானசந்தியாவந்தன முதலிய பூஜைகளை முடித்துப் போஜனஞ் செய்து, மகரகுண்டல ஆர கேயூர கடககங்கண முதலாகிய ஆபரணாலங்கிருதனாகி, முதுகிலும் அம்புப்பெய் புட்டிற் கட்டி, வில்லெடுத்துக்கொண்டு வெளியில் வந்தான். அதற்குள் சாரதி ரதத்தைத் திட்டஞ் செய்திருந்தான். அதிலேறி மேலை வாயிலை நோக்கி வருகிறான்.

இங்கே முன்னே புறப்பட்ட சோமகேயாதிகள் அரசன் கட்டளைப்படி ரதாரூடராய் மேலைவாசலுக்கு வந்து, அங்கு நிற்கும் பற்குணனை நோக்கி, அவன் தேககாந்தியையும் சுந்தரத்தையும் நிற்கிற திரத்தையுங் கண்டு வியப்புற்று, தங்கள் தங்கள் வில்லை வளைத்து நாணேறிட்டு, விற்குணத்தொனி செய்து, திவ்ய பாணங்களைத் தொடுத்து சிங்கநாதஞ் செய்தார்கள். பற்குணன் அவர்கள் தொடுத்து விட்ட பாணங்களை யெல்லாம் அறுத்துவிட்டு, அநேக பாணங்களை விடுத்து அவர்களை வருந்தும்படி செய்தான். சோமகேயாதிகள் களைப்படைந்து, "அடடா!! இவனோ சிறுவன். நாமோ அநேகயுத்தத்திற் கைதேர்ந்து பெருமையுற்று எவற்றிலும் பெரியோரென்று பெயர் பெற்றிருக்கிறோம். இச் சிறுவன் பாணமெடுப்பதும் தொடுப்பதும் கண்ணுக்குத் தெரியவில்லை. அதிக சாதுரியமாகப் பாணங்களைப் பிரயோகிக்கிறான். இவனோடு கிஞ்சித்து ஜாக்கிரதையாகவே இருந்து போராடவேண்டும். என்று சோனைமாரி பெய்வதுபோற் பாணமாரி பொழிந்தார்கள். அவ்வளவு சரங்களையும் பற்குணன் தனது ஒரு பாணத்தால் கண்டதுண்டமாகச் செய்து, ஒரு நொடிப்போதில் ஒன்று-பத்து-நூறு-ஆயிரம்-பதினாயிரம் - லக்ஷம் - பத்து லக்ஷம் - கோடி - சதகோடி - சங்கம் - மஹாசங்கம் - என்னும் அளவுக் கதிகப்படும் பாணங்களை எடுத்துத் தொடுத்து, தேரைச் சக்கைச் சக்கையாகப் பேர்த்தெறிந்து கொடியை யறுத்து குடையைமுறித்து, குதிரைகளைக்கொன்று, சாரதியைவெட்டி, வில்லைநறுக்கி, நாணியை யறுத்து, கவசத்தைப் பொடியாக்கி, மார்பைப் பிளந்து, உடல் முழுதும் ரத்தமயமாக நனைத்து, ரதகஜதுரகபதாதிகளை நாசஞ் செய்து சரங்களைப் பொழிந்து யாவரைங் கண்டதுண்ட மாக்கினான். சோமகேயாதிகள் வில்லின் மேலும் மற்ற ஆயுதங்களின் மேலுஞ் செல்லுங் கருத்தைவிட்டு ஸ்மரணை தப்பி விழுந்தார்கள். பலர் முதுகிட்டோடினார்கள். பலர் தத்திக்கெட்டுத் தடுமாறிச், சென்றார்கள். சிலர் விக்கிக் கக்கித் தங்கள் அரசனை நோக்கி நின்றார்கள். இதற்குள் பாஞ்சாலனும் வந்துவிட்டான்.

பற்குணன் பாஞ்சலனைக் கண்டு, "அடடா! இவன் குருத்துரோகி; இவனைச் சித்திரவதை செய்து கொல்லவேண்டும். நமது குரு இவனைக் கொல்லாமற் கட்டிவரக் கட்டளையிட்டிருப்பதால், மரணவஸ்தைக்குச் சரியான வருத்தத்தை இவனுக் குண்டாக்க வேண்டும். ஒருவேளை ஓடிப்போனாலும் போவான். இவனை

விடக்கூடாது" என்று கருமணலை வாரி இறைத்தாற்போற் பாணங்களைத் தொடுத்து, தேரை அசையவொட்டாமற் றடுத்துச் சரக்கூடம் போட்டான். இதனை அக்கினிகோத்திர முனிவரிடத்தும் துரோணாசாரியிடத்தும் வில்வித்தையைக் கற்று மிகுந்த திறம்படைத்து அநேக யுத்தத்திற் கைதேர்ந்து சிறப்புற்றிருக்கிற பாஞ்சாலன் கண்டு அடங்கா சினங்கொண்டு, போர்முகத்துக்குரிய கார்முகத்தை வளைத்து, நாணையிட்டுக் குணத்தோனிசெய்து, பிறைமுகப் பாணங்களிற் சில பாணங்களைத் தொடுத்து, தன்தேரை மூடியிருக்கும் பாணங்களை அறுத்து, அமோகமான பாணங்களைப் பற்குணன்மீது தூண்டினான். பற்குணன் அந்தப் பாணங்களில் ஒன்றைக்கூட விடாமல் ஒடித்து, வேறு சில திவ்ய பாணங்களை யெடுத்துத் தொடுத்தான். அப்பாணங்கள் வெளிப்பட்டு வந்து பாஞ்சாலனை வருத்தின. அதனால் அவன் உக்கிரங்கொண்டு, மீண்டும் அளவற்ற கணைகளைத் தொடுத்தான். இக்கணைகளால் இந்திரன் குமாரனாகிய விஜயன் மிக்க வருத்தமடைவானென்று யாவரும் பேசிக்கொண் டிருக்கையில், பற்குணன் அப்பாணங்களையெல்லாம் நடுவதுபாதியிற் கண்டித்து இவனோடு இவ்வளவு நேரமா போராடுவது" என்று மூலாக்கினியை மூட்டிக் கோலாகலக் கணைகளைமாட்டி அவன் வில்லை யொடித்து, சில பாணங்களால் தேர், குடை, கொடி, குதிரை, சாரதி இவைகளை யெல்லாம் அதமாக்கி, பின்னும் அநேகங்கணைகளைப் பிரயோகித்து மயிர்க்காலுக்கு மயிர்க்கால் தைக்கும்படி செய்து, அவன் அணிந்திருந்த மகரகுண்டல ஆரகேயூர கடககங்கண முதலாகிய ஆபரணங்களையும் கவசத்தையும் பொடியாக்கினான்.

---

## பாஞ்சாலன் பற்குணனாற் கட்டுப்படல்

---

இதனாற் பாஞ்சாலன் பிரமைகொண்டு ஒன்றுந் தோன்றாமல் மனங்கலங்கிச் சித்திரம்போல் அசைவற்றிருக்கிற தருணத்தில் பற்குணன் தன்தேரை அவனருகில் நடத்தி அவன் தேரிற் குதித்து, தனது விஜயவில் நாணால் அவனை மடலோடு மடல்விரியக்கட்டித் தன் தேர்க்காலிற் சேர்த்துச் சிங்கநாதஞ்செய்தான். இதனைக் கண்ட சோமகேயாதிகள் பற்குணன்மேல் விழுந்து, அநேகபாணங்களழுந்தத் தொடுத்தார்கள். பார்த்தன் அக்கணைகளைக் கண்ட

துண்டமாக்கி அவர்களையும் ஓடும்படி அடித்து, தன் ஜயத்தைச் சங்கத்தாற் கிழக்குவாசலி லிருக்கும் பீமனுக்குத் தெரிவித்தான். பீமன் தன்னோடு வந்தெதிர்த்த வீரரையெல்லாம் புறங்கண்டு, வென்றிகொண்டு அர்ச்சுனனுடைய சங்கத்தொனியைக் கேட்டு உடனே அர்ச்சுனனிடத்து வந்தான். பின்பு இருவருங்கூடிக்கொண்டு, கட்டின கட்டோடு பாஞ்சாலனை அத்தினபுரத்துக்குக் கொணர்ந்தார்கள். இந்தச்செய்தி துரோணரறிந்து, பீஷ்மர்-திரிதராஷ்டிரன்-கிருபாசாரி - மந்திரிகள் - பிரதானிகள் - வேதவேதியர்கள் - குடிபடைகள் யாவரையு மழைத்துவந்து கொலுக்கூடத்திற் சபை கூட்டிப் பற்குணன் வரவுக்கெதிர் பார்த்துக் கொண்டிருந்தனர். அப்போது அர்ச்சுனன் விற்குணத்தோனியுடன் ரதத்தை அதிவேகமாகச் செலுத்தித் துரோணாசாரியின் அரண்மனையின் அருகில் வந்து தேர்விட் டிறங்கி, பாஞ்சாலனைக் கட்டின கட்டோடு கொணர்ந்து துரோணாசாரியை வணங்கச்செய்து, தானும் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்தான். சபையிலிருந்த பெரிய அரசர்களும் மற்றவர்களும் பாஞ்சாலனைக் கட்டிக் கொண்டுவந்த பற்குணனைப் பார்த்து மகிழ்ந்து புகழ்ந்தார்கள். துரோணாசாரி நமஸ்காரஞ்செய்த பற்குணனை வாரித்தழுவி மடிமீதிருத்திப் பல ஆசிகள் கூறி "அப்பா பற்குணா! அன்று முதலைவாயிற் சிக்கி வருத்தமடைந்தபோது கஜேந்திர வரதன்போல் வந்து அம்முதலையைக்கொன்று என்னைப் பிழைக்கச்செய்தாய். இன்று எனக்கொப்பாகிய வன்மையுடைய பாஞ்சாலனைக் கட்டிவந்து என் சபதத்தை நிறைவேற்றினாய். உனக்கு நீயே ஒப்பன்றி வேறு ஒப்பானவர்கள் எவ்வுலகத்தினு மில்லை" என்று பலவாறு கொண்டாடி, கட்டோடுநிற்கிற பாஞ்சாலனை நோக்கிச் சொல்லுகிறார்—

"அடா பாஞ்சாலா! நீ ஆதியில் அக்கினிகோத்திர முனிவரிடத்து வில்வித்தை கற்கிறபோது என்னிடத்துஞ் சிலவித்தைகளைக் கற்றாய். அப்பேது "நான் மகுடாபிஷேகம் பெற்று வாழுங் காலத்திற் பாதி பூமி கொடுக்கிறேன்" என்று சொன்னா யல்லவா? அதை நானே வந்து கேட்கும்போது என்னோடு அன்புடன் வசனிக்காமல் கடுஞ்சொல் வழங்கினதுமன்றி, முன் சொன்ன வாக்குத் தத்தத்தை நிறைவேற்ற, மனமில்லாதவனாய் ஏளனஞ் செய்தாயல்லவா? அன்று நான் சினங்கொண்டு என் மாணாக்கரால் உன்னைத் தேர்க்காலிற் கட்டி என் சபையில் அழைத்துவரச் செய்து பங்கப்படுத்துகிறே னென்று ஒரு சபதஞ் செய்திருந்

தேனே, அச் சபதம் இன்று நிறைவேறிற்று. நீ செய்த வாக்குத்தத்தத்தின்படி எனக்குக் கொடுக்கவேண்டிய பூமி பாதியும், உன் விகித பூமியும், இன்று எனக்குச் சுவாதீனமாயிற்று. இனி அப் பூமிக்கும் உனக்கும் சம்பந்தமில்லை. ஆனால், இப்போது நான் உன் மீது கிருபையுற்று, எனக் குரியதாகிய பாஞ்சாலதேசத்தில் என் பங்கு பாதிபோக, மற்றைப் பாதியைத் தருமத்திற்கு உனக்குக் கொடுக்கிறேன். அதுவுமன்றி, உன்னுயிரையும் வாழ்வையும் உதவினேன். நீ இவற்றைக்கொண்டு முன்போலவே அரசு செலுத்தி, என் பாதி பூமிக்குங் கப்பங் கட்டிவா" என்று கூறிப் பற்குணனை நோக்கி, "அப்பா குழந்தாய்! இப் பாஞ்சாலன்செய்த குருத்துரோகத்திற்குத் தண்டனை இம்மட்டிற் போதும். இனி அவனைக் கட்டியிருக்குங் கட்டை அவிழ்த்து விட்டுவிடு" என்று கட்டளை யிட்டார். பற்குணன் உடனே அன்போடு அவிழ்த்து விட்டான். பாஞ்சாலன் கைகால்களை யுதறி, இராஜ சபையையும் துரோணாசாரியையும் பார்க்க வெட்கமுற்று நாணியிருந்தான். அக் குறிப்பை பீஷ்ம ரறிந்து, "ஓ பாஞ்சாலதேசாதிபதி! க்ஷத்ரியராய்ப் பிறந்தவர்கள் ஒருவர்கையி லொருவர் இழிவடைந்தால், அந்த இழிவை நோக்கி வருத்தப்படலாகாது. இழிவு செய்தவனை வெற்றிபெறுகிற காரியம் எதுவோ அதனை நாடுதல் வேண்டும். ஆதலால், நாம் சிறுவனால் கட்டுப்பட்டோமே யென்று மன வருத்தமுறாமல், இனி நடக்கவேண்டிய முயற்சி எதுவோ அதன் மேற் கருத்தைச் செலுத்து" என்றார்.

பாஞ்சாலன் திடுக்கென் றெழுந்து, சபையிலிருக்கிற பெரியோர்களையும் மற்றவர்களையும் நோக்கி, "கேளுங்கள் சபையோர்களே! இந்தத் துரோணர் துறவறத்தை அடைந்தும், சிறுவனாகிய யான் செய்த குற்றத்தை மன்னிக்காமல் ராஜசபையில் என்னை அவமானப்படுத்தினா ரல்லவா? என்னை இவ்வாறு கண்ட துரோணருயிரை வாங்க ஒரு புத்திரனையும், என்னுடன் கார்முகத்தை வளைத்துப் போர்முகத்தி லெதிர்த்து யுத்தஞ்செய்து வெற்றி பெற்றுவந்த சிறுவனுக்கு ஒரு பெண்ணையும் பெறுகிறேன்" என்று சபையாரறியச் சபதங்கூறி, மலைபோன்ற தேரிலேறி, இராகு விழுங்கி யுமிழ்ந்த மதியம்போல் தனது நகரத்தினை நோக்கிச் சென்றான்.

# பாஞ்சாலன் புத்திரகாமேஷ்டியாகஞ் செய்தல்

இங்கே குருகுலசிகாமணிகளாகிய நூற்றுவரும் பாண்டுமக்களும் பெரிய அரசர்கள் முதலானவரும் துரோணரை வணங்கித் தங்கள்தங்க ளிருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள். அங்கே பாஞ்சாலன் தன்னகரத்திற் சென்று, மந்திரி முதலானவரை அழைத்துத் தன் முத்திரை மோதிரத்தை அவர்களிடத்திற் கொடுத்து, "ஓ மந்திரிமார்களே! நானும் என் மனைவியும் வனத்திற்குச் செல்கிறோம். நான் எவ்வாறு செங்கோல் செலுத்தினேனோ அவ்வாறே நீங்களும் பிரஜைகளைக் காப்பாற்றி வாருங்கள்" என்று கட்டளையிட்டு, மனைவியை அழைத்துக்கொண்டு காட்டிற்குச் சென்று, பற்பல பெரியோர்களை யடுத்துச் சில மந்திரோபதேசங்களைப் பெற்றுத் தவஞ்செய்து, இன்னும் மேலான முனிபுங்கவர்களைக் காண வேண்டுமென்று வனங்கள் தோறும் திரியும்போது ஒரு வனத்தில் அழிவில்லாத தவசிரேஷ்டர்களும் திவ்யக்கியானிகளுமான உபையாசன் யாசன் என்று இரண்டு முனிவரிருந்தனர். அவர்களிடத்துப் பாஞ்சாலனும் அவன் மனைவியுஞ் சென்று வணங்கினார்கள். அவ்விருவரும் "நீங்கள் யார்? இவ்வனத்தில் வந்த காரணமென்ன?" என்று வினவப் பாஞ்சாலன் தன் ஊர் பெயர் முதலியவற்றை யெடுத்தோதி, துரோணாசாரியரால் தனக்கு நேரிட்ட துன்பத்தைச் சொல்லி, அவரைக் கொல்ல ஒரு புத்திரனும் - அந்தத் துரோணாசாரி சபதத்தை நிறைவேற்ற என்னோடெதிர்த்து யுத்தஞ் செய்த வாலிபன் தோளுக் கிசைய ஒரு புத்திரியும் பெற வேண்டுமென்று கருதிப் பெரியோர்களுடைய தரிசனஞ்செய்து வருகிறேன். அக்கருத்தை நிறைவேற்றத் தங்களாலே முடியுமென்று உண்மையாய் நம்பி வணங்கினோம்" என்றியம்ப, இரண்டு முனிவரும் பாஞ்சாலன் கூறியவற்றிற் கிசைந்து, "ஓ பாஞ்சால தேசாதிபதி! நீ கருதியிருக்கிற புத்திரபாக்கியம் புத்திரகாமேஷ்டி யாகம் செய்தால் கிட்டும்" என்று கூற, அரசன் அதற்கிசைந்து, சில தூதர்களைப் புத்திரகாமேஷ்டி யாகத்துக்குரிய திரவியங்களை அனுப்புவிக்கச் சொல்லி மந்திரிகட்குக் கட்டளையிட்டான். அப்படியே தூதர்கள் மந்திரிகளுக் கறிக்கையிட, மந்திரிகள் புத்திரகாமேஷ்டியாகத்துக்குரிய திரவியங்களைச் சேகரித்துக்கொண்டு, தாங்களும் வந்து அரசனைக் கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்தார்கள். அரசன் வணங்கிய மந்திரிகளை ஆதரித்து, வந்த யாகதிரவியங்களைக் கண்ணுற்று, முனிவரிடத்துச் சென்று நமஸ்காரஞ் செய்து, "ஓ சுவாமிகளே! புத்-

திரகாமேஷ்டி யாகத்துக்குரிய திரவியங்கள் வந்திருக்கின்றன. இனித் தாங்கள் எழுந்து அந்த யாகஞ் செய்யத் தொடங்க வேண்டும்" என்று வணங்க, முனிவர்கள் எழுந்து, விசால மான ஓர் இடத்தைப் பார்த்து அவ்விடத்து நின்று, அரசனுடைய ஏவலாளர்களால் பாககுண்டம் வெட்டுவித்து, அருகில் வேதிகைபோட்டு வேதவிதிப்படி யாகசாலையைப் புதுக்கி, நல்ல சுபமுகூர்த்தத்திற் பாஞ்சாலனையும் அவன் மனைவியையும் ஸ்நானஞ் செய்வித்து, யாகசாலையில் உட்காரவைத்து யாகதீக்ஷை செய்து, வேதவிதிப்படி யாகத்தைத் தொடங்கி, மந்திரத்தை யுச்சரித்து, அக்கினியை யுண்டாக்கி ஓமம் வளர்த்தி அரசனால் நெய்யைச் சொரிவித்து, தூபதீப நைவேத்தியத்துடன் சாங்க மாக யாகத்தை நடத்தி வருகிறபோது, அந்த ஓமகுண்டத்தின் அக்கினிச் சுவாலையிற் பிண்டத்தோடு ஒரு பொற்றட்டு தோன் றிற்று. அவ்வாறு தோன்றிய யாகபிண்டத்தை இரண்டு முனி வரும் எடுத்து, அரசன் மனைவியை அழைத்து அவள் கையிற் கொடுக்கிற தருணத்தில் அவள் பூப்பாயினள்.

---

## த்ருஷ்டத்தூய்மன் திரௌபதி இவர்க ளுற்பவம்

---

அதுகண்ட அரசன் - அடடா! இதென்ன விபரீதம்? பிண் டம் புசிக்குந் தருணத்தில் மனைவி பூப்பாயினளென்று கனவருத்த முற்றான். முனிவ ரிருவரும் அரசனை நோக்கி, "ஓ அரசனே! நீ அஞ்சாதே, இப்பிண்டம் பழுதாகாது. இதோ இருக்கிற ஓம குண்டத்திற் போடுவோம். அதில் உன் கருத்தின்படி ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் தோன்றுவார்கள்" என்று மற்றொரு மந்திரத்தைச் செபித்து அப் பிண்டத்தை ஓமகுண்டத்திற் போட் டனர். போட்டவுடன் அதில் நின்று மகரகுண்டல ஆரகேயூர கடககங்கண முதலாகிய ஆபரணாலங்கிரதனாகி, விற்பிடித்த கர மும் - முடிபொறுத்த சிரமும் - வயிரக்கவசத்தை யணிந்த மார் பும் விளங்க, சொர்னநிறமாகிய இரதத்தூற் சிங்கக்குட்டியைப் போல் ஒரு சிறுவ னுதித்தான். இச் சிறுவ னுதித்தவுடன், ஒற்றைச் சக்கரத்தையுடைய ரதத்திலேறி உதயகிரியிற்றோன்றும்

ஆதித்தனை நோக்கிய தாமரைகள் எவ்வாறு நன்னிறங் கொண்டு மலருமோ அவ்வாறு அங்குள்ளவர்கள் மனதில் மகிழ்வுற்று இமையா நேத்திரத்தைப் பெற்றவராகிப் பார்த்திருந்தார்கள். புத்திரன் தேரோடும் வெளியில் வந்தான். பாஞ்சாலன் தன்னருகி லிருக்கிற மந்திரிகளை நோக்கி, "ஓ மந்திரிமார்களே! அநேக நாளாகப் புத்திரபாக்கிய மில்லாமல் வருத்தமடைந் திருந்ததுவு மன்றி, என்னைப் பங்கப்படுத்தின துரோணரை வதைக்கக் கருதி அதற்காகவும் ஒரு வருத்தங் கொண்டிருந்தேன். இவ்விரண்டு வருத்தமும் நீங்கப் புத்திர னுதித்தான். இனி நீங்கள் நமது நகரத்துக்குத் தெரியப்படுத்திப் பட்டணத்தை அலங்கரிக்கச் செய்து, யாவரையும் பெருநாள் கொண்டாடும்படி செய்யுங்கள்" என்று கட்டளையிட மந்திரிகள் தூதுவர்களால் நகரத்தாருக்குத் தெரியப்படுத்தினார்கள். நகரத்தார் பெருமகிழ்வுற்றுத் தெருக் களில் தோரணங்கள் தூக்கி அலங்கரித்து, நகரிலுள்ளவரும் களித் துப் பெரும்பண்டிகை கொண்டாடினார்கள்.

இங்கே உபையாசன் யாசனென்கிற இருவரும் மற்றொரு பிண்டத்தை ஓமகுண்டத்தி லிட்டார்கள். இட்டவுடன் மின்னைப் பழிக்கு மருங்குலையும், வேயைப் பழிக்குந் தோள்களையும், பொன் னைப்பழிக்கு மேனியையும், பூவைப்பழிக்கும் பாதத்தினையும் உடை த்தாய், கோகனகத்திலுதித்த ஸ்ரீமஹாலட்சுமியைப் போல் ஒரு பெண் பிறந்தாள். உடனே ஒரு வில்லும் பிறந்தது. இப்பெண் பிறந்தபோதே ஆகாயத்திலிருந்து, "மண்மேலொருத்தி யரக்கர்குல மாளப்பிறந்தாள் வாமனூரற் கண்மேனின்று மிவள்பிறந்தாள் கழற் காவலர் தங்குலமுடிப்பா, ளேண்மேலேன் கோலினி" என்று ஒரு சொல்லும் பிறந்தது. அதென்னெனில், முற்காலத்தில், ராக்ஷதர் குலத்தை அதமாக்கச் சீதையென்று ஒரு பெண் பிறந்தாள். இன்று சாம்பவமூர்த்தியின் நெற்றிக் கண்ணினை யொத்த ஓமத்தீயில் இவள் பிறந்தாள். இக் கன்னிகை வீரகண்டாமணியைத் தரித்து வீரஜெயசிங்கம் போல் விளங்கும் அரசர்களை யெல்லாம் அதமாக் குவ ளென்பதாம். இதுவன்றிப் "புத்திரனுக்குத் த்ருஷ்டத்துய்ம னென்றும், புத்திரிக்குத் திரௌபதை என்றும் பெயரிடுங்கள்" என்று ஒரு வாக்கியமு முண்டாயிற்று. பாஞ்சாலன் முன் பிறந்த புத்திர னது புஜபல பராக்கிரமத்தையும், பின் தோன்றிய புத்திரியினது ரூபசவுந்தரியத்தையுங் கண்ணுற்று, நமது எண்ணத்துக்குத்

தகுதியானவர்கள்தான் என்று மனதில் மதித்து, நம்மைப் போற் புண்ணியவான்க ளில்லையென்னுஞ் சந்தோஷத்தி லழுந்தி, புத்திர பாக்கியத்தை யளித்த முனிவ ரிருவரையும் வணங்கி அவர்கள் மகிழ்வெய்தத் துதித்து, அவர்கள் கூறிய ஆசீர்வசனத்துடன் விடைபெற்று, புத்திரியையும் புத்திரனையும் மனைவிமந்திரிமார் முதலானவர்களையும் அழைத்துக் கொண்டு தன் நகரம் சேர்ந்து, இராஜவீதியை வலமாக வந்து தனது அரண்மனை புகுந்தான்.

---

## த்ருஷ்டத்தூய்மன் துரோணரை யடுத்து வில்வித்தை பயிலல்

---

த்ருஷ்டத்தூய்மன் நாலுவேதம் ஆறுசாஸ்திரம் அறுபத்து நாலு கலைக்கியான முதலியவற்றை யோதியுணர்ந்து, தன் குல வித்தையாகிய தநுர்வேதத்தையும் வில்லின் அப்பியாசத்தையும் கற்க விரும்பித் தந்தையிடத்து வந்து வணங்கி "ஓ ஐயா! எனக்கு வில்வித்தையைக் கற்றுக் கொடுப்பதற்குத் துரோணாசாரியரே யல்லாமல் மற்றொருவ ரில்லை. ஆதலால் அவரிடத்திற் சென்று வில்வித்தையை கற்று வருகிறேன். விடை கொடு" என்று வேண்டப் பாஞ்சாலன் நகைத்து "அப்பா மகனே! அந்தத் துரோணாசாரியரைக் கொல்லுவதற்காகவே நான், ்னைப் பெற்றேன். நீ அவரிடத்திலேயே சென்று வில்வித்தையைக் கற்கப் போகிறேனென்றது வெகுநேர்த்தி! வெகுநேர்த்தி!! நீ அவரிடத்துஞ் செல்லலாமா? சென்றாலும் அவர் வித்தையைக் கற்பிப்பாரா?" என்றான். அதற்குத் த்ருஷ்டத்தூய்மன் தந்தையை வணங்கி, "ஓ தந்தையே! நீர் தளர்வுறாது எனக்கு விரைவில் விடைகொடும். நான் சென்று என்மேல் அன்புண்டாகும்படி அவருக்குப் பணிவிடை செய்து வில்வித்தையைக் கற்று வருகிறேன்" என்று வேண்டப் பாஞ்சாலன் சம்மதித்து விடை கொடுத்தான். த்ருஷ்டத்தூய்மன் விடைபெற்று அத்தினபுரத்துக்கு வந்து, துரோணாசாரியைக்கண்டு வணங்கி தன் பெயரையும் தன் பெற்றோர் பெயரையுங் கூறித் தான் நாடிவந்த கருத்தை அறிவித்தான். உடனே துரோணாசாரி நகைத்து, "அடடா! இச்சிறுவன் பாஞ்சாலன் புத்திரன். பாஞ்சாலன் நம்மைக் கொல்லப் புத்திர காமேஷ்டியாகஞ்

செய்து இப்புத்திரனைப் பெற்றான். இவன் நம்மிடத்தில் தானே வில்வித்தையைக் கற்க நாடிவந்தான். இவனுக்கு நாம் கற்பிக்காமற் போவோமானால் இச்சிறுவனுக்குப் பயந்து துரோணர் வில் வித்தையைக் கற்பிக்க மனமில்லாதிருந்தாரென்று ஓர் அபகீர்த்தி உண்டாகும். ஆதலால், தெய்வகதியை ஒருவரால் தடுக்கக் கூடாது. நாம் உண்மையாக வஞ்சனையின்றி வில்வித்தையைக் கற்பிக்கத்தான் வேண்டும்" என்று தீர்மானித்து, வணங்கி நின்ற த்ருஷ்டத்தூய்மனை ஆதரித்து ஆசீர்வதித்து "அப்பா! உன் கருத்தின்படியே வில்வித்தையைக் கற்றுக்கொள்" என்று தநுர் வேதவிதி பிசகாமல் எல்லாவித்தையையும் பூரணமாய்க் கற்பித்தார். அவன் அவை யனைத்தையும் ஐயந்திரிபறக் கற்றுத் தேர்ந்து குருவாகிய துரோணாசாரியின் கிருபையைப் பெற்று, தன் நகரம் வந்து சேர்ந்து ராஜகாரியங்களை பார்வையிட்டுச் சுகமாக வாழ்ந்து வந்தான்.

## பரிமளகந்தி பரமபதமடைதல்

இங்கே திரிதராஷ்டிரன் புத்திரர்களாகிய நூற்றுவரும், பாண்டு மக்களாகிய ஐவரும், அரசர்களெல்லா மதிக்கத்தகுந்த திறத்தினையுடையவராகி வளர்ந்து வருகிற காலத்தில், பாரதமாகிய ஐந்தாம் வேதத்தை முந்திச் செய்தவரும் எனக்குக் குருவுமாகிய வேதவியாசர் திரிகாலவர்த்தமானங்களையு முணர்ந்த திவ்யக்கியானி யாகையால் குருகுல மக்களா லினிமேல் நேரிடும், கெடுதியை யுணர்ந்து, "இனி நாம் சும்மாவிருப்பது தகுதியல்ல. திரிதராஷ்டிரன் புத்திரரும் பாண்டு புத்திரரும் விரோதப்படுவார்கள். அவ் வேளையில் நமது தாயாகிய பரிமளகந்தி ஏதாவது ஒன்று சொல்லு வாள். அவ்விருதிறத்தாரில் துரியோதனன் முதலானவர்கள் அச் சொல்லின்படி நடக்கப்போவதில்லை. அதனால் நமது தாய்க்கு இழிவுவருவதுமன்றி, அவர்களோடிருந்தாற் சம்பந்த தோஷத்துக் குள்ளாவள். நம்மை யீன்றமாதா குற்றமுடையாவ ளாதல் நன்கல்ல வென்று தீர்மானித்து அத்தினபுரத்துக்கு வந்து, பரிமளகந்தி யிருக்கும் அந்தப்புரத்துட்சென்று, தாயைக்கண்டு சாஷ்டாங்கமாக வணங்கி, "ஓ அம்மணி! இவ்வுலகத்தில் அள வற்றகால மிருந்தாலுங் காயவின்ப மொன்றே யன்றி ஆத்மலாப

மில்லை.' ஆதலால், பெரியோர்கள் தேகாபிமானத்தை மேற் கொள்ளாமல் ஆன்மலாபத்தை அபிமானித்து உலகவியாபாரத் திற் சென்ற போதும், சோரநாயகியின் மனம் போலவும், திந்திருணி யோடு போலவுந், தங்கள் மனதை அவ்வாத்மலாபத்துக் கேது வாகிய சைதன்னியத்தினிடத்துச் செலுத்துவர். காயமோ நிலை யல்ல ஞாயமோ பலமல்ல. தாயே! இனி நீர் இவ்வுலகவாழ்க்கையை விட்டுத் தவவேடங்கொள்வதே தகுதி. திரிதராஷ்டிரன் புத்திர ரும் பாண்டுமக்களும் விரோதப்பட்டுக் கடும்போரிடப் போகிறார் கள். அதனைத் தாங்கள் பார்வையிடுவது தகுதியல்ல. சந்திரவமி சம் யயாதிமுதற் சந்தனுவரைக்கும் மநுநீதி பிசகாமல் நடந்து வந்தது. இனி மநுசாஸ்திரம் துரியோதனனுடைய க்ஷாத்திரத் துக்கு முன்னிற்காது. தாங்கள் விரைவில் ஆத்மலாபத்தைத் தேடிக்கொள்ளுங்கள்" என்று வணங்கி வருந்தப் பரிமளகந்தி வணங்கிய மகனைத் தழுவி ஆசீர்வதித்துப் புத்திரனுரைத்ததற், கிசைந்தாள். வியாசர் அன்னைக்கு மறுமைலாபங் கிடைக்கச் சில மந்திரங்களை யுபதேசித்துத், "தாங்கள் தவத்துக்குச் செல்லுங்கள்" என்று வணங்கி விடைபெற்றுத் தமதிருப்பிடம் போய்ச் சேர்ந் தார். பரிமளகந்தி தன் மருமக்கள்மாராகிய அம்பிகை அம் பாலிகை என்னு மிருவரையு மழைத்து, "யான் தவஞ்செய்து மறுமைலாபமடைய வனத்திற்குச் செல்லுகிறேன். உங்கள் கருத் தென்ன" என இருவரும் வணங்கி, "ஓ அத்தாய் கணவனிறந்த போதே இக்காயத்தை விரும்பாம லிருந்தோம், தங்களால் இது வரையில் இக்காயத்தைச் சுமந்தோம். தாங்களே தவத்துக்குச் செல்லும்போது எங்களுக்கு இவ்விடத்தில் வேலையென்ன? நாங்களும் கூட வருகிறோம்" என்றார்கள். பரிமளகந்தி மருமக் கள் மார்களையு மழைத்துக் கொண்டு, பீஷ்மர் முதலானவர்க ளிடத்து விடைபெற்று, அவர்கள் கண்ணும் கருத்தும் தங்களுக் குத் துணையாகவரக் காட்டிற் சென்று அருமையான தவத்தைச் செய்து, முடிவில் எக்காலத்தும் அழிவில்லாத பேரின்பத்தைக் கொடுக்கும் பரமபதத்தை யடைந்தார்கள்.

# தருமனுக்கு இளவரசுப்பட்டங் கட்டுதல்

அஸ்தினபுரத்துக் குருகுலமக்கள் நூற்றுவரும் பிறை வளர்வதுபோல் வளர்ந்துவருகிற காலத்தில், தருமராஜன் அன்புடைமை - ஒழுக்கமுடைமை - இனியவைகூறல் - நடுவுநிலைமை - பொறையுடைமை - வாய்மை - அருளுடைமை - அறிவுடைமை - முதலியவற்றைப் பெற்று, அழுக்காறு - கடுஞ்சொல் - சினம் - பேராசை - பொய்ம்மை - முதலியவற்றை நீக்கி, பெரியோர்கள் புகழ்ந்துரைக்கும் நன்னெறிக்கணின்று, உலகம் துதிக்கச் சிறப்புற்று விளங்கினான். பீஷ்மர் தருமராஜனுடைய நன்னெறியினைக் கேட்டுங் கண்ணுற்றும் மிகுந்த மகிழ்வை அடைந்து, தருமராஜனுக்கே இளவரசுப்பட்டங் கொடுக்கவேண்டுமென்று மனதில் தீர்மானித்து, நாமே பட்டங்கட்டினாற் பொறுமையே உருவாகத் திரண்டுவந்த துரியோதனன் முதலாகிய நூற்றுவருக்கும் மனமொப்பாதாகையாற் சபைகூட்டி அச்சபையார் கட்டளைப்படி நடக்கவேண்டுமென்று, ஒரு சபை கூட்டும்படி திரிதராஷ்டிரன் முதலானவர்க்கு ஆக்கியாபித்தார். பீஷ்மர் ஆக்கினைப்படி திரிதராஷ்டிரன் கொலுவிருந்து சபை கூட்டுவித்தான். அச்சபையில் வந்திருந்த ஆறுலக்ஷத்து அறுபத்தாறாயிரம் பட்டவர்த்தனரையும் மூன்று லக்ஷத்து முப்பத்திராயிர மகுடவர்த்தனரையும் பதினெண்ணாயிர மந்திரிகளையும் ஐம்பத்தாறுதேசத் தரசர்களையும் பதினெட்டு மண்டலாதிபதிகளையும் குடிகளையும் வேதவேதியர்களையும் பந்துக்களையும் வில்லாசிரியர்களையும் பீஷ்மர் நோக்கி, "ஓ சபையோர்களே! திரிதராஷ்டிர மஹாராஜனுக்கு உதவியாக இளவரசுப்பட்டம் ஒருவர்க்குக் கொடுக்கவேண்டும். அதற்குரியவராயிருப்பவர் திரிதராஷ்டிரன் புத்திரர் நூறுபெயர். பாண்டுபுத்திரர் ஐவர். இவர்களில் யாருக்கு இளவரசுப்பட்டங் கொடுக்கலாம். விளம்புங்கள்" என்று வினவ, சபையார் யாவரும் "ஓ மண்டலேஸ்வரா! இதுகாறும் யயாதிமுதல் திரிதராஷ்டிரன் வரையில் குணத்திலெப்படி யிருந்தபோதிலும் வயதிலுயர்ந்தவருக்கே பட்டங்கொடுத்து வந்திருக்கிறது. இப்போது பாண்டு மக்களவரில் தருமராஜனே தற்காலத்தில் செங்கோல் செலுத்தும் திரிதராஷ்டிரமஹாராஜன் புத்திரர் நூற்றுவருக்கும் வயதிலுயர்ந்திருப்பவன். அவன் அரசுக்குரிய தன்மையையும் பெற்றிருக்கிறான். ஆகையால் அவனுக்கே இளவரசுப்பட்டம் கொடுப்பது தகும்" என்றார்கள். திரிதராஷ்டிரனோடு விதுரன் முதலானவர்கள், அவ் வசனங்களைக் கேட்டு மகிழ்வுற்றார்கள்.

இவர்களில் திரிதராஷ்டிரன் சபையை நோக்கி, "ஓ சபையோர் களே! நான் பட்டத்துக்கு மாத்திர முரியவனாகிப் பட்டம் பெற்றேனேயன்றி, பட்டத்துக்குரிய செய்கைகளை யான் செய்தறியேன். என் சகோதரனாகிய பாண்டுராஜன் அரசுக்குரிய செய்கைகளைச் செய்து, அநேக தேசத்தையும் என் கைவச மாக்கிவைத்தான். ஆதலால் இந்தப் பாக்கியமனைத்தும் பாண்டுராஜனு லாயது. அப்படியிருக்கப் பாண்டுபுத்திரனாகிய தருமராஜனுக்கு இளவரசுப்பட்டம் கொடுப்பது தகும். இப்போதே யாவருமறிய இளவரசுப் பட்டங் கட்டுங்கள்" என்று பரிவுடன் விளம்பினன். அதை பீஷ்மர் முதலானவர்கள் கேட்டுக் களிப்படைந்து, தக்ஷணம் தருமராஜனை அழைத்து, ஜயப்பிரதானமான முகூர்த்தத்திற் கங்கை - யமுனை - துங்கபத்திரா - கோதாவரி - காவிரி முதலாகிய திவ்ய தீர்த்தங்களால் ஸ்நானஞ் செய்வித்து, மகரகுண்டல ஆரகேயூர கடககங்கணமுதலாகிய ஆபரணங்களினாலும் சரிகை வஸ்திரங்களினாலும் அலங்காரஞ்செய்து, சந்தனம் - புனுகு - கஸ்தூரி - கற்பூரம் - சவ்வாது முதலாகிய கலவைச் சாந்தணிந்து, நவமணிக ளழுத்திய சிங்காதனத்தி லிருத்தி, வேதவேதியர்கள், ஜயாவிஜீபவாவென்று மந்திராக்ஷதை கொடுத்துப் பல ஆசிகள் வழங்க, முரசு - எக்காளம் - தோற்கருவி - துளைக்கருவி - நரம்புக்கருவி முதலாகிய வாத்தியங்கள் கடலொலிபோல் முழங்க, மாங்கல்ய ஸ்திரீகள் மங்களம்பாட, ஐம்பத்தைந்து தேசத்தரசர்களும் தங்கள் தங்கள் கரகமலத்தைச் சிரமேற்குவித்துத் துதிக்க, சகலவித சம்பிரமத்தோடு சற்குணவானாகிய தருமராஜனுக்கு மகுடாபிஷேகஞ் செய்தார்கள். அச்சமயம் அந்தரத்தில் வந்திருந்த இந்திரன் முதலான தேவர்கள் கற்பகப்பூமாரி பெய்தார்கள். அந்தரத் துந்துமியுடனே மேனகையும் அரம்பையும் ஆடினார்கள். திலோத்தமையும் ஊர்வசியும் பாடினார்கள். இனி உலகத்தில் தருமதேவதை நாலு பாதத்தினாலே நடப்பாளென்று தேவர்கள் ஆனந்தத்தை மேற்கொண்டு புகழ்ந்து சொர்க்கஞ் சேர்ந்தார்கள்.

இங்கே பீஷ்மர், சபையில் வந்திருந்த யாவருக்கும் அவரவர்க்குத் தக்கபடி மரியாதைகளைச் செய்து, வேதவேதியர்களுள்ளம் பூரிக்கத் தானதருமங்களை நடாத்தினார். திரிதராஷ்டிரன் தனது முத்திரை மோதிரத்தைத் தருமராஜன் கையிற் கொடுத்துச் சபையை நோக்கி "ஓ சபையோர்களே! இன்று முதல் இந்தத் தருமராஜன் கட்டளைக் குட்பட்டு நடந்துகொள்ளுங்கள்" என்று

உறுதிபெற மொழிந்து விடைகொடுத்தான். வந்த மன்னர் முதல் யாவரும் பீஷ்மர் முதலானவரை வணங்கி, இளவரசுப்பட்டத்தைப் பெற்ற தருமராஜனைத்தொழுது, பழுதுபடாமொழி பெற்றுத் தத்தம் பட்டினம்போய்ச் சேர்ந்தார்கள். அன்றுமுதல் தருமராஜன் பெரியபிதாவாகிய திரிதராஷ்டிரன் பரித்த பூமியைத் தான் பரித்து, துரியோதனன் முதலாகிய நூற்றுவரையும் தன் சகோதரர்போற் பாவித்து, துரியோதனனைத் தன் சிங்காதனத்தில் வைத்துக்கொண்டு, எல்லாக் காரியங்களையும் அவனால் நடப்பித்துச் செங்கோல் செலுத்தி வருகிற காலத்தில், கள்ளர் பயம், விஷபயம், நோய்ப்பயம், சத்துருபயம் முதலியவை நீங்கி மாதமும்மாரிபெய்து, உலகமெல்லாம் வசுராஜன் காலத்து எவ்வளவு வளமையுற்றதோ அவ்வளவு வளமையுற்றுக் குடிகளெல்லாம் சீர்பெற்றார்கள். பெரியோர்கள் தருமராஜன் நடாத்தி வரும் செங்கோல் முறைமையைப் புகழத் தலைப்பட்டார்கள். பெரிய அரசர்களாகிய பீஷ்மர் - திரிதராஷ்டிரன் - விதுரன் - மந்திரிகள் முதலானவர்களெல்லாம் சிறுவனாகிய தருமராஜன் வாயிலிருந்து வெளிப்படுஞ் சொல்லைக் குருவாக்கியம் போற்றலைமேற்கொண்டு சொற்பழுதுறாமல் நடந்து வரலாயினர்.

---

## துரியோதனன் துராலோசனை

---

இவ்வாறு பெரிய அரசர்கள் முதலிய யாவரும் தருமராஜன் வாக்கியத்தைச் சிலாக்கியமாகப் பேணி நடந்து வருவதைத் துரியோதனன் கண்டு பொறாமைகொண்டு, ஒருநா ளிரவில் தனியே ஓரிடத்துச் சென்று, கர்னன் - சகுனி - துர்ச்சாதனன் - இவர்களை அழைத்து வைத்துக்கொண்டு "ஓ என் உயிருக்குயிரான ஆப்தர்களே! நெடுநாளாக என்கருத்தி லொன்றை வைத்திருக்கிறேன். உங்களைவிட அன்பர்க ளெனக்கில்லை யாதலால், ஒளியாமல் அதனை வெளியிடுகிறேன். நீங்கள் அதனைக்கேட்டு, இது தகுதி இது தகுதியல்லவென் றுரைப்பீர்களாகில், அவ்வாறு நடக்கக் காத்திருக்கிறேன். அஃதென்னெனில் என் பிதாவின் சகோதரனாகிய பாண்டுராஜன் உயிரோடிருக்குங் காலத்தில், வேட்டையாட வனத்திற் சென்று புணர்ந்து கொண்டிருந்த மானைக் கொன்றபோது அம்மானுருவமா யிருந்த அமுதந்தமுனிவ

ரானவர் 'இன்று முதல் நீ ஸ்திரீயைப் புணர்ந்தால் மரண மடைவாய்' என்று சாபமிட, அச்சாபத்தை யேற்று அக்கணம் அரசுரிமையை நீக்கித் தவவேடங்கொண்டு காட்டிலேயே சஞ்சரித்து இறந்து போனான். அவனது பத்தினியர்களிற் குந்திதேவி பெற்ற புத்திரனாகிய தருமராஜன் இளவரசுப்பட்டம் பெற்றிருப்பதும், அரசுக்குரிய பாண்டுராஜன் உயிரோடிருக்கும் போதும் அவன் இறந்தபின்பும் செங்கோற் செலுத்தி வந்த பெரிய ராஜன் புத்திரனாகிய நான் அந்தத் தருமனுக்குக் கீழ்ப்படிந்து அவனிடம் ஏவலைச் செய்வதும், உங்கள் கருத்துக்குத் தகுதியா யிருக்கின்றதா?" என்று துக்கித்தான். அதற்குச் சகுனி "அப்பா மருமகனே! உன் தந்தைக்கு நேத்திரமில்லாதிருந்தாலும் பல சாஸ்திரங்களை மூத்தோர்களாற் கேள்விற்று நாற்றிசையுந் தோத்திரஞ்செய்ய நீதி செலுத்தி வருகிறா ரென்று மதித்திருந்தேன். இப்போது ஐவர்மேற் பக்ஷமுள்ள பீஷ்மர் கருத்தின்படியே உன் பிதாபுத்தி மயங்கினார். மேலும் மந்திரிகளுக்கெல்லாம் தலைமையான மந்திரியாகிய விதுரனும், வில்லாசிரியராகிய கிருபாசாரியரும் துரோணாசாரியரும் அந்த ஐவர்மேல் பக்ஷமுள்ளவர்களாதலால், பீஷ்மர் கருத்துக்கிசைந்து தருமனுக்கு இளவரசுப்பட்டங் கொடுத்தார்கள். அதனால் தருமராஜன் சிறப்புற்று உலகமுழுமையும் தன்னொரு குடைநீழலிற் காத்துவருகிறான். இனி அதைக் குறித்து ஒரு பேச்சும் பேசவேண்டியதில்லை" என்று கடுஞ்சினத்துட னுரைத்துப் பின்னுஞ் சொல்லுகிறான்—

"ஓ மந்தரகிரிக் கிணையொத்த புயாசலத்தையுடைய துரியோதன மகாராஜனே! உலகத்தில் ஒரே கருப்பத்திற் பிறந்த அண்ணன் தம்பிமார்களே காலவித்தியாசத்தால் ஜன்மப் பகையாளிக ளாகிறார்கள். நியாயமாக நீயும் தருமராஜனும் பங்காளிகள். உனக்குச் சத்துரு அவன். அவனுக்குச் சத்துரு நீ. நீயே சத்துருவாகிய தருமனுக்கு வழிப்பட்டு வருவாயானால் இனி என்ன இருக்கின்றது? உலகத்திற் புத்தி யில்லாதவர்க்கு வலியுடைமை - பொருளுடைமை - வீரம் - முயற்சி - மேன்மை - நீதி - சுற்றம் - சிநேகம் இவை யெல்லா மிருந்தாலும் பயன்படா. அதற்குத் திருஷ்டாந்தம் நீயேயன்றி வேறொருவ ரில்லை" என்று கூற, அதற்குள் துர்ச்சாதனன் எழுந்து துரியோதனனை வணங்கி, "அண்ணா! இப்போது தாங்கள் கூறிய வசனம் தகுதியென் றுரைப்பதற்கு எனக்கு மனம் வரவில்லை. ஏனென்றால் ஐவரும் மஹா வீரத்தன்மை

யுடையவரென்று அவர்கட்கு நமது பிதா பூமிமுழுவதையும் இளவரசுப் பட்டங் கட்டிவைத்தார். இனி நாம் இப் பூமியின்கண் இருந்தென்ன பயன்? பெரியராஜாவின் புத்திரனுகிய உம்முடன் பிறந்த எனக்கும் என் சகோதரருக்கும் என்ன இலாபம். ஆனல் உடம்பிற் கட்டி யுண்டானல் உடம்பிற் பிறந்ததென்று நோக்காமல் உடனே அறுத்தெறிந்து விடுவதுபோல் நமக்கு நலமல்லாதவராகிய ஐவரைப் போரிட்டு வீறிட்டோடும்படி செய்தால் உம்மைப்போல் விவேகிகள் உலகத்தில் யார்? (பனங்காயையும் பங்காளியையும் பதம்பார்த்து வெட்டவேண்டும்) என்னும் பழமொழி கேட்டிருந்தும். நீங்களே முன்பின் யோசனைசெய்தால் நாங்களென்ன செய்வது?" என்றான்.

அதற்குள் கர்னமகாராஜன் துரியோதனனை நோக்கி, "தம்பி துரியோதனா! நீ என் முன்பின் ஆலோசனை செய்கிறாய்? மானிடஜென்ம மெடுத்தால் இம்மை மறுமை இன்பங்களை அடையவேண்டும். அதுதான் யாக்கை யெடுத்ததற்குப் பயன். உலகத்தில் இன்பமடைய வேண்டுமானுற் சாமம் - பேதம் - தானம் - தண்டம் - என்னும் சதுர்வித உபாயங்க ளுண்டு. அவற்றுள் அவரவர்களுக்குத் தகுதியான உபாய மெதுவோ அதனைச் செய்து, எதிரிகளைக் கைவசப்படுத்திப் பொருளை யடையவேண்டும். உனக்கும் அந்த ஐவருக்கும் இந்த அத்தினபுரம் சுவாதீனமா யிருந்தாலும், நீ பெரிய இராஜாவின் புத்திரனுகையால் இவ்வரசு உனக்கே சுதந்தரமாகும். இதை அறியாமற் பெரிய அரசர்கள் தருமனுக்கு இளவரசுப்பட்டங் கொடுத்தார்கள். அதனுல் அவ்வைவர்கள் மீறிப் போயினர். இப்போது அவர்களுக்குப் பட்டந் தகாதென்று வழக்கிட்டால் அவர்களே அப்பட்டத்தை விட்டுவிடவேண்டும். விடாமல் ஐவரும் மீறுவார்களானுல், அப்போது நடத்தவேண்டிய காரியத்திற்கு எனக்கு உத்தரவு கொடுத்தால் ஒரு முகூர்த்தத்திற்குள் அந்த ஐவரையுங் கொட்டாவி கொள்ளும்படி வெற்றிகொண்டு உனக்குப் பட்டாபிஷேகஞ் செய்து வைக்கிறேன். என் வல்லமையை அன்று வில்லரங்கேற்றுஞ் சபையில் அறிந்திருக்கிறு யல்லவா? அப்படிப்பட்ட மிகுந்த திறத்தையும் பலத்தையும் பெற்றிருந் தென்ன பலன்? 'காட்டுக்கெரித்த நிலவைப்போலும் ஆற்றிற் கரைத்த புளியைப்போலும்' பயன்படாம லிருக்கிறேன்" என்றான். அச்சொல்லைக் கேட்ட துரியோதனன் "அண்ணு! தாங்கள் கூறியபடி நேரிட்டு, அந்த ஐவரையும் போரிட்டு, அப்

போரில் யாவரும் வீறிட்டழுது முதுகுகாட்டி யோடும்படிசெய்து நமது பூமியை நாம் கைவசப்படுத்திக் கொள்ளலாம். அதற்கொரு சங்கடமிருக்கின்றது. அஃதென்னெனில், நமக்குப் பெரியோர்க ளிருக்கிறார்கள். அவர்க ளிருக்கும்போது நாம் யாதொன்றும் செய்வதுகூடாது. ஆதலால் தந்திரத்தினால் அந்த ஐவரை நீக்க வேண்டும். அதற்கொரு யுக்தி மாத்திரம் சொல்லுங்கள்" என்று துரியோதனன் கேட்கச் சகுனி சொல்லுகிறான்—

"அப்பா மருமகனே! நீ யேன் கிலேசப்படுகிறாய்? கர்னமஹா ராஜ னிருக்கும்போது ஐவரையும் வெற்றிகொள்வது நமக்கு அருமையல்ல. ஆயினும் தற்காலத்தில் ஐவர்மேற் போருக் கெழு வதுந் தகுதியல்ல. ஏதாவதொரு தந்திரத்தினால் ஐவரையும் இந்நகரத்தைவிட்டு வெளிப்படுத்துவோமானால் உன் கட்டளைக்கு உலக முட்படும். அதன் பின்பு ஐவர்க்கு ஒன்றுஞ் செல்லாது. அதற்கொரு தந்திரஞ் சொல்லுகிறேன். அஃதென்னவெனில், வேதத்திற் கூறிய யாகங்க ளனைத்தையுஞ் செய்வதற்கும் பிதிர்க் கருமஞ் செய்வதற்கும், இன்னும் கருத்தில் நினைத்த பொருளை யடைவதற்கும், ஆன்மலாபத்திற்குரிய மேலான தவத்தைச் செய் வதற்கும் யோக்கியமாக விளங்கி யிருப்பது கங்காநதி யருகிலிருக் கிற வாரணாவதம். அந்த வாரணாவதத்திற்கு அந்த ஐவரையும் போகும்படி உன் பிதாவைக்கொண்டு செய்வாயானால் ஐவரும் அந்த நகரத்துக்குச் செல்லுவார்கள். அதன் பின்பு உன் மன தின்படி யிருக்கலாம். ஒருவேளை ஐவர் மீறுவாரானால் அக்காலத் தில் தகுந்த தந்திரஞ் செய்தாவது அல்லது போரிட்டாவது ஐவ ரையும் வெற்றி கொள்ளலாம்" என்றான். துரியோதனன் அதற் கிசைந்து, மாமனாகிய சகுனியையும் தமையனாகிய கர்னனையும் தம்பியாகிய துர்ச்சாதனனையும் நோக்கி, இப்போது நாம் செய்த ஆலோசனையின் கருத்துப் பிறருக்குத் தெரியக்கூடாது" என்று சொல்லி, உடனே நால்வரு மெழுந்து தங்கள் தங்க ளிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். சில நாட்கள் சென்றவுடன் துரியோத னன் தன் பிதாவாகிய திரிதராஷ்டிரமஹாராஜன் தனியாயிருக் கிற வேளையறிந்து சென்று, பிதாவுக்குச் சாஷ்டாங்கமாக நமஸ் காரஞ் செய்தான். நமஸ்காரஞ் செய்த அரவங் கேட்ட கண்ணில் லாத திரிதராஷ்டிரன் யாரென்று கேட்க, "உமது மூத்தகுமாரனா கிய துரியோதனன் யான்" என்று சொல்ல, திரிதராஷ்டிரன் புத்தி

ரனை வாரித்தழுவி, "அப்பா மகனே ! நீ தருமராஜனேடு கொலு விருப்பவனுயிற்றே. என்னைக் காண வந்தது என்ன காரணம்" என்று கேட்கத் துரியோதனன் "ஐயா ! எனக்கொரு குறை இருக்கின்றது. அதனைத் தங்களுக்குத் தெரியப்படுத்த வந்தேன்" என்றுன். அதற்குத் திரிதராஷ்டிரன் "அப்பா துரியோதனு ! 56 தேசம் 18 மண்டலம். இவையெல்லாம் உன் சுவாதீனமாயிருக்க, இன்னும் உனக்குக் குறையென்ன? உன்கருத்திற் குடிகொண்டிருப்பதை வெளியிடு" என்றுகூறத் துரியோதனன் வணங்கிய முடியனுகி "ஓ மன்னர் மன்னராக விளங்கும் என்பிதாவே ! (காக்கைக்குந் தன்குஞ்சு பொன்குஞ்சு) அதுபோல் கொடிய பாவியாகிய புத்திரனைப்பெற்றவரும் அவனைப் பாவியென் றிகழாமல் ஆதரித்து வருவார்கள். நீங்களோ அக்கருத்தை யுடையவரா யில்லை. மேலும் புத்திரருக்குத் தந்தையே தெய்வமென்று வேதவாக்கியங்க ளுணர்த்தியிருந்தும், எங்கள்மீது உமக்குக் கிஞ்சித்தும் அன்பில்லாமல் எங்களை இழிவாக்கி, எங்களுக்குப் பகைவராகிய ஐவர்மீது அன்புவைத்து, தருமராஜனுக்கு இளவரசுப் பட்டங் கட்டிவைத்தீர். இந்த அநியாயத்தைத்தான் தங்களிடத்துச் சொல்ல வந்தேன்." என்றுன். இதனைக் கேள்வியுற்ற திரிதராஷ்டிரன் மனநடுக்கமுற்று, இருசெவியிலும் கையைவைத்து மூடிக்கொண்டு வருத்தமடைந்து, "ஓ ! ஓ ! மோசம்வந்தது யயாதிமஹாராஜன் முதல் இதுவரையில் சத்தியத்துக்குக் கெடுதி வராமற் செங்கோல் நடந்துவந்தது. இனி நமது புத்திரர்களாற் சத்தியங் கெடுவதுமன்றி, நமது வமிசமும் இழிவடையும்படி நேரிட் டிருக்கிறது. தருமராஜன் இளவரசுப் பட்டம் பெற்றதற்கு நமது புத்திரன் பொறுமைகொண்டானென்றல் இனி என்னயிருக்கின்றது? இயற்கையிலேயே நமது புத்திரன் அறிவி லுயர்ந்தவனல்லன். இவனேடு சேர்ந்திருப்பவர்களும் அறிவாளிக ளல்லர். அவர்க ளாலோசனையினல்தான் இப்புத்தி நமது புத்திரனுக் குண்டாயிற்று" என்று மனதில் நினைத்துப் புத்திரனை நோக்கிச் சொல்லுகிறுன்—

---

# திருதராஷ்டிரன் துரியோதனனுக்கு அறிவுறுத்தல்

அப்பா மகனே! நான் தருமராஜனுக்கு இளவரசுப் பட்டங் கொடுத்தது தகுதிதான். எவ்வாறெனில் இந்தச் சந்திரவமிசம் தோன்றினது முதல் இன்று வரையில் வயதி லுயர்ந்தவன் எவனோ அவ னெவ்வா றிருந்தபோதிலும் அவனுக்கே அரசுரிமை கொடுத்து வந்தார்கள். அதற்குத் திருஷ்டாந்தம் என் தம்பியாகிய பாண்டு ராஜன் அநேக தேசாதிபதிகளை வென்று புகழ்பெற்று விளங்கி யிருந்தும், கண்ணில்லாதவனாகிய நான்தான் அரசனாயிருந்தேன். மேலும் இப்போதிருக்கிற பாக்கியங்களெல்லாம் பாண்டுராஜன் தேடியவைகளே. ஆதலால், பாண்டுராஜன் கண்ணில்லாத எனக்கு முடிசூட்டி எல்லாக் காரியங்களையும் நடத்திவந்ததுபோல் நீ தரும ராஜன் இளவரசனாயிருக்க அவன் முன்னிலையில் அரசு நடத்தி வரவேண்டியது உன் கடமையாகும். வீணாய் நீதிக்கு விரோதந் தேடிப் பலபேர்களால் இழிவடையாதே. அந்தத் தருமராஜனும் இளவரசுப்பட்டம் பெற்றதிலிருந்து உன்னையல்லாமற் கொலுவிருக் கிற தில்லை. எந்தக் காரியத்தையும் உனக்குத் தெரிவித்து உன் அனுமதியின்படி நடத்தி வருகிறான். அவனைப்போற் குணத் திலும் ஒழுக்கத்திலும் உயர்ந்தவர்கள் நமது தலைமுறையில் ஒரு வருமில்லை. மகனே துரியோதனா இராஜமுகத்திற் பலபேர் பலவித மாக வசனிப்பார்கள். அவ் வசனங்களை அறிவுள்ளவர்கள் கேள்வி யுற்று, நல்லதை நல்லதாகவும் கெட்டதைக் கெட்டதாகவும் மன தில் மதித்துக்கொள்ள வேண்டுமே யன்றி, நல்லதைச் சொல்லிய வரைப் புகழுவாவது கெட்டதைக்கூறியவரை யிகழுவாவது கூடாது. அதனால் விரோதம் நேரிடும். விரோதம் நேரிட்டா லிராஜ ரகசியம் பிறருக்குத் தெரியவரும். பிறருக்குத் தெரிந்தால் அரசுக்கு மோசம் வரும். ஆதலால் இராஜனானவன் தன் மனதுக்குள்ளே அவரவர் திறத்தை யறிந்துகொண்டு, நீதிக்கு விரோதப்படாமல் காரியத்தை நடத்த வேண்டும். மரபுக்கும் நீதிக்கும் வழுவுறாமல் நடப்பதைக் கருத்திற் கடமையாய்க் கொள். துர்மந்திரிகளுடைய துரா லோசனைப் பேச்சை யுட்கொள்ளாதே" என்று உண்மையாய்ப் பேசினான்.

அதற்குத் துரியோதனன் "ஐயா! பரதராஜன் முதலாக அநேக தலைமுறை பரியந்தம் தத்தம் புத்திரருக்கே மகுடாபி

ஷேகஞ் செய்திருக்க, தாங்கள் ஐவர்மீது பக்ஷம் வைத்திருக்கிற விதுரன் - வில்லாசிரியர் - பீஷ்மர் முதலானவர்கள் புத்தியைக் கேட்டுத் தருமராஜனுக்கு இளவரசுப் பட்டம் கட்டிவிட்டீர். அப்படிக்கொடுக்கலாமா வென்று யான் கேட்டால், எல்லாம் தரும ராஜன் தந்தையினுடைய பாக்கியமேயன்றி என் பாக்கிய மொன்று மில்லை யென்று கைசோர விடுகிறதினால், அடியேனுக்கும் அடியே னுடன் பிறந்திருக்கிற சகோதரர்களுக்கும் இங்கு என்ன வேலை யிருக்கின்றது? தாங்கள் உத்திரவு கொடுத்தால் தேசப் பிரஷ்டத் துவமாய் வனத்திற் சென்று தவம்புரிந்து, இனியொரு ஜன்மத்திற் காவது இம்மை யின்பம் அனுபவிக்கப் பெறுகிறோம்" என்று கதறினான். இதைக்கேட்ட திரிதராஷ்டிர மகாராஜன் மனம் வேறாகி, காலகதியாற் புத்திரனாகிய துரியோதனன் கருத்துக் கிசைந்து சொல்லுகிறான்—

## திரிதராட்டிரன் துரியோதனன்கருத்துக் குட்படல்

அப்பா துரியோதனா! ஐம்பத்தைந்து தேசாதிபதிகளும் பதி னெட்டு மண்டலத்தரசரும் வணங்கச் சிங்காதனத்திலிருந்து அரசு செலுத்திச் சக்கரேசுவரனென்று பெயர் பெற்றதுவுமன்றி, நீதிபரனென்றும் பெயரெடுத் திருந்தேன். இப்போது தருமராஜ னுக்குச் சூட்டிய இளவரசுப் பட்டத்தை உனக்குக் கொடுத்தால் மன்னர் மன்னர் முதலானவர்கள் ஏளனஞ் செய்வார்கள். நீதிபர னென்கிற பெயருக்குக் கெடுதிவரும். ஆதலால் என் வாய்மைக் கழிவும் எனக்கொரு இழிவும் வராமலிருக்க ஒரு தந்திரஞ் சொன் னால், அவ்வாறு நடத்துகிறேன்" என்று மகனுடன் ஆலோசித் தான். துரியோதனன் மகிழ்வுற்று "தந்தையே! நீர் வருத்தப்படா திர். நான் கருதியிருக்கிற தந்திரப்படி நடத்தினால், உமக்கும் உமது வாய்மைக்கு இழிவுவராது. அப்படியே நடப்பிக்கிறே னென்று வாக்குக்கொடுத்தால், அதன்பின் என் கருத்தை வெளியிடுகிறேன்" என்று சொன்னான். திருதராஷ்டிரன் அப்படியே என்று கைபோட் டுக் கொடுத்தான். அப்பால் துரியோதனன். "ஓ ஐயா! பாண்டு மகாராஜன் இறந்துபோனநாட் சமீபிக்கும்போது தருமராஜனே அழைத்து, 'உன் தந்தைக்குத் திதி வருகிறது கங்காநதி யருகிற்

பிதிர் கருமத்திற்கும் மற்றவைகட்கும் மிகுந்த யோக்கியதையா யுள்ள வாரணாவத நகரத்திற்குச் சென்று பிண்ட முதலிய தானங் களைச் செய்துவந்தால், சாபத்தாலிறந்த என் தம்பி நற்கதி பெறு வான்' என்று தாங்கள் கூறவேண்டும். அவ்வாறு கூறினால் தரும ராஜன் ஒப்புக்கொண்டு, தம்பிமாருடனும் தாயாருடனும் அந் நகரத்துக்குச் செல்லுவான். பின்பு நீங்கள் 'சட்டிசுட்டது கைவிட் டது' என்கிற பழமொழிபோல் இங்கு மீண்டும் அவர்களை வர வழைக்காது சும்மாயிருந்துவிட்டால், அவர்கள் இங்கு வரமாட் டார்கள். நான் இவ்விடத்தில் இளவரசுப்பட்டம் தாங்கி, என்புத்தி சாதுர்யத்தினால் உலகமெல்லாம் என்னை வணங்கச் செய்து கொள்ளுகிறேன். ஒருவேளை விதுரன் - பீஷ்மர் - துரோணாசாரி- கிருபாசாரி - அசுவத்தமா இவர்கள் பாண்டுபுத்திரரோடு செல்வா ரென்று கருதுவீர்களாகில், அந்த ஐயம் உமக்கு வேண்டுவதில்லை. பீஷ்மர் இந்த ஆதீனத்தைவிட்டு நீங்கார். விதுரன் அந்த பீஷ் மரையும் உம்மையும் விட்டு நீங்கான். கிருபாசாரி பீஷ்மரைப் பிரியார். துரோணாசாரி மைத்துனனாகிய கிருபாசாரியை விட் டகலார். தந்தையைவிட்டு அஸ்வத்தாமா பிரியார். ஆகையால் நீங்கள் தருமராஜனை அழைத்துக் கட்டளையிடும்" என்று விளம் பினான்.

திரிதராஷ்டிர மகாராஜன் புத்திரன் கூறிய தந்திரத்துக்கு மகிழ்ந்து, "அப்பா புத்திர சிகாமணியே! உன் கருத்தின்படியே தருமராஜனை வாரணாவதத்திற் கனுப்புவிக்கிறேன். நீ அஞ்சாதே. இங்கே நடந்த விருத்தாந்தத்தை வெளிப்படுத்தாதே" என்று திட் டஞ் செய்து மகனை யனுப்பிவிட்டான். துரியோதனன் நம தெண்ணம் முடிந்ததென்று அதிக மகிழ்வை அடைந்து, சகுனி கர்னன் முதலானவர்களிடஞ் சென்று தன்னெண்ணம் நிறைவேறி னதைச் சொல்லிச் சந்தோஷகரமா யிருந்தான். இப்படிச் சிலநாட் சென்றபின்பு மண்டலேஸ்வரனாகிய திரிதராஷ்டிர மகாராஜன் கொலுமுகச்சாலைக்கு வந்தான். இராஜன் வரவைக் காணவே சபை யிலிருந்த மந்திரிகள் பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் மற்று முள்ளவர்கள் யாவரு மெழுந்து வந்தனை வழிபாடு செய்தார் கள். இளவரசுப்பட்டந்தாங்கி, இராஜசிங்கம்போல் விளங்கும் தரும ராஜன், தம்பிமார் நால்வரோடும் வந்து வணங்கினார். திரிதராஷ் டிரன் பெரியவர்களாகிய பீஷ்மர் - கிருபாசாரி துரோணாசாரி

முதலானவர்களைத் தொழுது, நவரத்தினமயமாகிய சிங்காதனத்தில் வீற்றிருந்து, சட்டதிட்ட முதலானவைகளோடு லோகவிசாரணையு நடாத்தி, அவ்வவற்றிலுள்ள நுட்பாநுட்பங்களை யறிந்துகொண்டு, சபையிலிருக்கிற யாவருங்கேட்க பீஷ்மரையும் துரோணுசாரி - கிருபாசாரி - விதுரன் - இவர்களையும் அருகில் அழைத்துச் "சற்குண சிரேஷ்டர்களே! பிரம்ம - க்ஷத்திரிய வைசிய - சூத்திரர் என்னும் நாற்குலத்திலும் என்னைப்போற் பாக்கியசாலி யில்லை. எவ்வாறெனில் நானே கண்ணில்லாதவன் என்னுடன் பிறந்த தம்பியாகிய பாண்டுவோ அவயவ ஈனம் இல்லாதவனுயிருந்ததுமன்றிச் சகல கலை வல்லவனும், அதிக சாமர்த்திய முடையவனும் விளங்கினுன். அவ்வகைப்பட்ட சிறப்பினையுடைய என் தம்பி கண்ணில்லாத என்னைச் சிங்காசனுதிபதியாக்கி, ஐம்பத்தைந்து தேசத்தரசர்களும் பதினெட்டு மண்டலாதிபதிகளும் வணங்கச்செய்து இந்திர லோகத்துக் கொப்பாகிய போகத்திலென்னை வைத்துத் தான் ஒரு சேவகனைப் போல் எனக்குப் பணிவிடை செய்து வந்த சிலாக்கிய சகோதரனைப் பெற்றிருந்தேன். இனி அவனைப்போற் சகோதரனைக் காணப்போகிறுனே?" என்று இரண்டு கண்ணிலும் நீர் சோரத் துக்கப்பட் டழுதான்.

இந்தத் திரிதராஷ்டிரன் மனதில் வைத்திருக்கிற கபடத்தை அறியாமல், உண்மையாக அழுகிறுனென்று பீஷ்மர் முதலானவர்கள் இனிய வசனங்களால் அவனைத் தேற்றி 'ஓ மண்டலேஸ்வரா! கபடநாடக சூத்திராவதாரியாகத் திருப்பாற் கடலிற் பள்ளிகொண்டிருக்கும் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியின் திருவிளையாடலா லமைந்தது இவ்வுலகம். ஆனுல் இவ்வுலகம் அழியும்வஸ்துவே. அழியும்போது இவ்வுலகிலுள்ள உயர்திணை - அஃறிணை என்னுமிவை யழியாதிருக்குமோ? இறப்பும் - பிறப்பும் - துயின்றெழுவதுபோ லல்லவா? ஆதலால் இறந்த சகோதரனுக்காகத் துயரப்படுதல் தகுதியல்ல" என்று சில திருஷ்டாந்த மெடுத்துக் காட்டினுர்கள். அப்பால் திரிதராஷ்டிரன் அழுவதை நிறுத்தித் தருமராஜனை நோக்கி "அப்பா தருமநந்தனு! உன் தந்தை உலக காரிய பாரத்தையும் தானே சுமந்து என்னைச் சுகமாக வைத்திருந்ததுபோல் நீயும் என்னைச் சுகத்தில் வைத்திருக்கிறுய். உன்னுல் என் சகோதரனுகிய பாண்டு இறந்த துன்பத்தை மறந்திருக்கிறேன். ஆனுல் அப்பாண்டுவை நற்கதியி லடைவிக்கத் தகுந்த புத்திரர்கள்தான் பிறந்தீர்கள்.

இறந்துபோன உன் தந்தைக்கு இன்னும் அதிக நலமுண்டாகும் படியான ஒரு எண்ணம் என் கருத்தி லிருக்கின்றது. அதனை வெளிப்படுகிறேன், அவ்வாறு நீ நடத்துவது உன் கடமை. அஃதென்னெனில் உலகத்திற் பிதிர்க்கருமஞ் செய்தலே நமக்கு முக்கியம். பிதிர்த்தினங்களிலும் மற்றப் புண்ணிய காலங்களிலும் கங்காநதிதீரத்திலிருக்கிற திவ்ய க்ஷேத்திரங்களிற் சங்கல்ப தர்பண யாக முதலியவற்றைச் செய்தால் அதிக நலமென்றும் மிகுந்த பலனென்றும் வேத முறைபடுகிறதினால், எனக்கு மிகுந்த நலனைத் தந்த என்தம்பி பாண்டுவுக்குச் சுபமுண்டாக கங்காநதியருகிலிருக்கின்ற நமது வாரணாவத நகரத்திற்குச் சென்று உன் பிதிர்க்கருமத்தைச் செய்தால், எனக்கு மிகுந்த மகிழ்வாயிருக்கும். அது உனக்குச் சம்மதந்தானா? என்றான். அதற்குத் தருமராஜன் வணங்கிக் கூறுகிறார்—

"என் பிரிய தந்தையே! உலகத்திலிருப்பவர்கள் புண்ணிய லோகத்தை யடையக்கருதி அருமையான தவத்தையேனும் செய்து ஒரு புத்திரனைப் பெறுகிறார்கள். அஃதெனக்குத் தெரிந்திருந்தும், இதுவரையிற் பிதாவுக்குரிய கடன்களிற் கருத்தைச் செலுத்தாமல் லோகவியாபாரத்தி லிருந்துவிட்டேன். இன்று தங்களாற் பிதாவுக்குரிய கடனைச் செய்யுங் கருத் துண்டாயிற்று. இனி அரைமாத்திரைப் போதாவது இங்கு இராமல் தாங்கள் சொன்னவண்ணம் வாரணாவதமென்னும் பதிக்குச் செல்கிறேன். அங்கிருக்குந் திவ்ய நதியில் நீர்க்கடன் முதலியவற்றைச் செய்து, என் பிதாவுக்கு நலத்தை யுண்டாக்குகிறேன். விடைகொடுக்கவேண்டும்" என்று மிகுந்த பக்தியோடு கேட்க, திரிதராஷ்டிரன் "அப்பா மகனே! இந்த அத்தினபுரத்திலிருந்து செலுத்திய இளவரசுப் பட்டத்தை அந்த வாரணாவதத்திலிருந்து செலுத்தலாம். அவ் வாரணாவதம் எவ்வகைப்பட்ட தென்றால், உன் தந்தைக்கு விருப்பமான இடம். வேதாகம கோஷ்டங்களும் சிவாகமங்களு மங்குண்டு. அது திவ்விய கங்காநதியை வஸ்திரமாகத் தரித்திருக்கின்றது. வேதாகமந் தெரிந்த பெரியோர்களுக்கெல்லாம் அந் நகரம் தாயென் றெண்ணத் தக்கது. பிரம்மா - விஷ்ணு - உருத்திரனென்னு மூவரும் தன்னை எக்காலத்தும் விட்டு நீங்காதிருக்கத்தக்க சிறப்பினை யுடையது. இதனை யல்லாமல் மாடமாளிகை கூட கோபுரங்களை யுடைத்தாகி அரசுக்கு யோக்கிதையாயு மிருக்கிறது" என்று சொல்லி, மந்திரி

களிற் சிறப்புற்றிருக்கிற புரோசன னென்பவனை அழைத்து, "ஓ புரோசனா! இந்த அருமையான குணத்தையுடைய தருமராஜனுக்கு மந்திரியாயிருந்து, மற்றச் சகோதரர்களுக்கும் யாதொரு குறையும் வராமல் இடம்பொருளேவல்களனைத்தையும் சேகரித்துக் கொடுத்து, நமது கெடிஸ்தல அதிகாரத்தைச் செலுத்தவேண்டிய முறைப்படி செலுத்தி, தருமராஜன் உருவும் நிழலும்போல அவனைவிட்டுப் பிரியாம லிரு" என்று கட்டளையிட்டுத் தருமராஜனுக்குப் பல ஆசிகள் கூறி விடை கொடுத்தான்.

## பாண்டவர் வாரணாவதஞ் சேர்தல்

தருமராஜன் தனது அன்னையாகிய குந்திதேவியையும், சகோதராகிய - பீமன் - பற்குணன் - நகுலசகாதேவர்களையும் அழைத்துக்கொண்டு, மந்திரியாகிய புரோசனன் பின்றொடர்ந்துவரத் துரோணாசாரி - அஸ்வத்தாமன் - பீஷ்மர் - விதுரன் முதலாகிய பெரியோர்களைப் பணிந்து விடைபெற்று, அரண்மனையை விட்டு வெளிப்பட்டார். இவ் ஐவரும் வெளிப்பட்ட மாத்திரத்தில் அந்நகரத்திற் குடிகொண்டிருக்குஞ் செல்வர்களும், பெரியோர்களாகிய பீஷ்மர், வில்லாசிரியர் முதலியவர்களும், 'இது துரியோதனனால் நேரிட்டது. ஆனால் தருமராஜன் இந்நகரத்தை விட்டு நீங்குவது திரிதராஷ்டிரன் புத்திரனாகிய துரியோதனன் முதலானவர் இம் மண்ணுலக வாழ்க்கையை விட்டு விண்ணுலக வாழ்க்கையை அடைவதற்கு நெருங்கிய காலம் சமீபித்ததைக் காட்டுவதாகும்' என்று தங்களுக்குள் தீர்மானித்து, தருமராஜனை வாழ்த்தி விடைகொடுத்தனர். மற்ற ஜனங்களோ வென்றால், தருமராஜனைப் போல் இனி எந்த அரசனைக் காணப் போகிறோமென்றும், இந்த நகரத்துக்கினி நல்ல நிலைமை வரப்போகிறதுண்டோ வென்றும் பலவாறு நினைத்து, "ஐயோ! திருமால்போற் கிருபையும் உருத்திரமூர்த்தி போற் பராக்கிரமமும் பெற்று விளங்கும் இவர்கள் இவ்விடம் விட்டு நீங்குவது என்ன காரணம்? பாவியாகிய துரியோதனன் செய்த வஞ்சனையாலோ? அல்லது அஷ்டமச்சனியாலோ இவர்களுக்கிந்த துன்பம் நேர்ந்தது? ஆ! ஆ! இஃதென்ன ஆச்சரியம்! பட்டத்துக்குக்குரிய புத்திரன் நகரத்தை விட்டு நீங்கக் கூடவந்த

பெரிய அரசர்கள் ஒன்றும் போசமல், திரிதராட்டிர மஹாராஜன் உத்தரவின்படி தாங்களும் விடைகொடுத்து நகரத்துக் கேகுகிறார்களே' யென்று மிகுந்த ஆறுமைகொண்டு, கண்ணையுங் கருத்தையும் ஐவர்மீது வைத்துச் சித்திரப் பிரதிமைபோற் சற்று மசைவின்றி நின்று விட்டார்கள்.

துரியோதனன் தருமராஜனை வணங்கி, "அண்ணா! நான் பாவியரிலும்பாவி. ஏனென்றால், என் பிதா உங்கள்மீது வைத்திருக்கிற அன்பைப்போல் என்னிடத்தில் வைக்கவில்லை. அஃதெப்படி தெரிகிற தென்றால், எத்தனை காலம் உலகத்தில் வாழ்ந்தாலும் அவை யெல்லாம் வாழ்வல்ல. திவ்ய நதிகளில் ஸ்நானம் செய்வதும், சிவபூசை முதலிய தேவதார்ச்சனை செய்வதுமே மேலானவாழ்வு. அத்தகைய வாழ்வினை அடைய உமக்கு உத்தரவு கொடுத்தாரே யன்றி எனக்கு உத்தரவு கொடுக்கவில்லை. எனக்குங் கட்டளை இட்டால் இப்போதே உங்களுடன் கூடவருவேன். நான் எவ்வாறு உங்களைவிட்டுத் தனித்திருக்கப் போகிறேன்" என்று உண்மையாக வருந்துபவன் போல் பாசாங்கு செய்தான். கிஞ்சித்தேனும் கபடில்லாத தருமராஜன் "அப்பா துரியோதனா! நீயேன் கிலேசப்படுகிறாய்? தந்தை வாக்கியம் வேதவாக்கியமாதலால், தந்தையின் கட்டளைப்படி எந்தைக்கு நலமுண்டாகத் திவ்விய க்ஷேத்திரத்துக்குச் செல்லுகிறேன். நீ தந்தை சொற்படி நின்று லோகவிசாரணை செய்துவா. நானும் போய் நீயும் வந்துவிட்டால் நமது அரசு எவ்வாறு நடக்கும்? நமது தந்தை கண்ணில்லாத வயோதிகத்தை யெப்படிச் சகிப்பார்? ஆதலால் நீ யிங்கேயே யிரு" என்று கூறி விடைபெற்று நடந்தார். துரியோதனன் மிகவும் அன்புடையவனைப்போல் பாசாங்கு செய்து புரோசனனென்கிற மந்திரியைத் தனியே அழைத்து, "ஓ புரோசனா! நீ நெடுநாளாக இந்தச் சமஸ்தானத்திற் காத்திருந்தும் இலவுகாத்த கிளிபோற் பயன் பெறாதிருந்தனை. இப்போது இந்தப் பாண்டுமக்களோ டிருந்து நான் கட்டளையிடுகிற பிரகாரம் நடப்பாயானால், ஐவரென்கிறபெயர் அதமாவதுமன்றி உன்னைப் பற்றியிருக்கிற தரித்திரமு மதமாகும். அப்படி நடக்க உனக் கிஷ்டமுண்டா?" என்று கேட்டான். புரோசனன் இனி நமக்கு நல்லகாலமென் றுன்னி, "அப்படியே நடக்கிறேன்" என்றான். துரியோதனன் "ஓ புரோசனா! நீ ஐவர் மீது அதிக பக்ஷமுள்ளவன்போல் ஏவல் முதலியவற்றைச் செய்து, அவர்கள் நம்பும்படி நடந்துகொண்டு, அரக்கு - பஞ்சு -

மெழுகு - குங்கிலியம் - அழிஞ்சில் மரம் - எண்ணெய் இவற்ருல் பெரிய கோட்டையொன்றியற்றி, அதில் அவர்களை வசிக்கும்படி செய்து, நித்திரை செய்யும்போது நெருப்பிட்டுக் கொல்வாயா? உனக்குத் தைரிய மிருக்கிறதா? ஏதோ சொல் பார்ப்போம்" என்ருன். பேராசைக்காரனுக்குப் புத்திமட்டாதலாற் பிறவித் தரித்திரனுகிய புரோசனன், துரியோதனன் கருத்துக்கிசைந்து "ஓ மண்டலேஸ்வரா! தாங்கள் எந்தெந்த காலத்தில் என்னென்ன கட்டளையிடுவீர்களோ? அக் கட்டளைப்படி நடக்கிறேன்" என்று விடை கூறித் தருமராஜனோடு வந்து கலந்தான். துரியோதனனும் மற்றுமுள்ள ஜனங்களும் நகரம்வந்து சேர்ந்திருந்தார்கள். விதுரமகாராஜனவன், துரியோதனன் புரோசனனைத் தனியே அழைத்துப் பேசியதைக் கண்டு, "அடடா!! இப் பாவி என்னமோ கெடுதிசெய்யக் கருதி இருக்கிருன்" என்று நினைத்துத் தருமராஜனிடத்துக்கு வந்து, "அப்பா தருமநந்தனு! துரியோதனன் என்னமோ மோசஞ்செய்யக் கருதியிருக்கிருன். புரோசனனை நம்பாமற் சாக்கிரதையாயிருங்கள்" என்று சொல்லிப் போனுர். தருமராஜன், தம்பிமார் அன்னை - மந்திரியாகிய புரோசனன் இவர்களை அழைத்துக்கொண்டு, நகரத்தை விட்டுக் காடுமலைகளை யெல்லாங் கடந்து, வாரணுவதமென்னும் நகரத்தருகில் வருகின்ருர். இவர்கள் வருகிற செய்தி அந் நகரத்துக் குடிகள் கேள்விப்பட்டு மிக்க மகிழ்ச்சி கொண்டு, சங்கீத வாத்தியத்துடன் எதிர்கொண்டுவந்து தருமராஜனைக் கண்டு வணங்கி அழைத்துப் போனுர்கள். புரோசனன் இவ் வைவரும் அந் நகரத்தில் தற்காலத்தி லிருப்பதற்குச் சந்திரவம்சத்தாருடைய பழைய அரண்மனையில் எல்லாப் பதார்த்தங்களையும் சேகரித்து வைத்து, இவர்களையும் அழைத்துப்போய் அவ் வரண்மனையி லிருக்கச் செய்தான்.

## துரியோதனன் அரக்குமாளிகை கட்டுதல்

கேளும் ஜனமேஜய மகாராஜனே! பாண்டுராஜன் இறக்கும்போது தருமராஜனுக்கு ஒன்பதாவது வயது. மற்றத் தம்பிமார்கள் ஒவ்வொரு வருஷம் குறைந்தவர்கள். அத்தினபுரத்தி லிருந்து வாரணுவதத்திற்குப் போனபோது தருமராஜனுக்கு வயது பதின்மூன்று. இதற்குமேல் நடந்த தென்னெனில், துரியோதன

னுனவன் - சகுனி - கர்னன் - துர்ச்சாதனன் இவர்களோடு ஆலோசித்து, அரக்குமாளிகை கட்டத் திர்மானித்து, சொர்க்கலோகத்திலிருக்கு மயனென்னும் தெய்வத் தச்சனுக்கு ஒப்பான கனக னென்னும் பெயர்கொண்டு தன்னுதினத்தி லிருந்த சிற்ப சாஸ்திரியை அழைத்து, அரக்குமாளிகை ஒன் றியற்றும்படி நல்ல வார்த்தைகளா லிசையச்செய்து, அவனை வாரணுவதத்திற் கனுப்பினுன். அதற்கு வேண்டிய சாமான்களை இரகசியமாக அனுப்பி, வெளிப்படையிற் பெரிய அரண்மனை கட்டுவதாகக் காட்டிக்கொண்டான். புரோசனனுக்கு மகிழ்வுண்டாக அடிக்கடி அநேக திரவியாபரணங்களைக் கொடுத்தான். விரைவில் முடிக்கும்படியாக அச் சிற்பிக்கும் நல்ல வார்த்தை சொல்லி யனுப்பினுன். புரோசனன் துரியோதன னனுப்பிய கனக னென்கிற சிற்ப சாஸ்திரியைக் கொண்டு, வாரணுவத நரகத்துக்குப் பக்கத்திலுள்ள விஸ்தாரமான ஓர் இடத்திற் குங்கிலியம் - அழிஞ்சில் - எண்ணெய் - பஞ்சு - அரக்கு - மெழுகு இவற்றுல் அஸ்திவார மெழுப்பி, முன்னம் சுற்று மதிலைச் சீர்திருத்திக் கட்டிக்கொண்டு, பின்னர் சொர்க்க மத்திய பாதாள லோகங்களி லிருக்கிறவர்க ளெல்லாரும் இந்த மாளிகையைப்போற் கண்டதில்லை யென்று மதிக்கத்தக்கதான உட்புரத்திற் சமையற்கட்டு - படுக்கைவீடு - சபாமண்டபம் - தென்றற்சாலை - போஜனச்சாலை - திருமஞ்சனச்சாலை - ஆடரங்கு - வித்வசபை - வேற்றரசர் சபை - சிங்காரமண்டபம் - உலாவியல் மண்டபம் இவை முதலியவற்றைப் புதுக்கினுன்; பொன்மயமாகவும் முத்து-பவளம்-பச்சை முதலிய நவமணி மயமாகவும் ஆங்காங்கு விசித்திர வேலை செய்தான்; மூன்றேமுக்கால் நாழிகைக்குள் வளைந்த மதில் முதலிய உட்புர மனைத்தும் வெந்து நீருகும்படி அம்மாளிகைக்கு அக்கினி மூலையில் சரவத்திவைத்து, நாற்புரமும் குபீரென்று பற்ற மருந்துகள் நிறைத்து, எல்லா வேலையையும் தன் அரசன் புத்திரனுகிய துரியோதனன் கூறிய இதமான வார்த்தைகளுக் கிணங்கி அச்சிற்ப சாஸ்திரி செய்தானுயினும், அவனுக்கு ஐவர்மீ துள்ள அன்பால் அவ் வைவரும் குந்திதேவியும் உயிர்ச்சேதமின்றித் தப்பிப் பிழைத்துப்போக பீமன் பள்ளியறைக் கருகில் ஐந்துகால் மண்டபமொன் றியற்றி, அம் மண்டபத்தின் நடுக்காலை அந்தரமாகவும் பார்ப்பவர்க்கு ஐந்து காலின் மேலும் பளுவிருக்கிறதாகவும் வைத்து, அக்காலின்கீழ் இடும்பாவனம் வரைக்கும் சுரங்கம் வைத்து, மற்றெல்லா வேலையையும்

தீர்த்துவிட்டு அத்தினபுரத்துக்கு வந்து, துரியோதனனுக்கு மாளிகைகட்டிய செய்தியைத் தெரிவித்துத் தன் அரண்மனையை நோக்கி வருகிறான்.

அப்படி வருகிறபோது அவனை விதுரமஹாராஜன் கண்டழைத்து, "அப்பா கனகா! வாரணாவதத்திலென்ன வேலை செய்கிறாய்? அதை ஒளியாமல் எனக்குச் சொல்" என்று கேட்கக் கனகன் "இவர் சத்தியவிரதர், அன்றியும் ஆஸ்தானபதி. இவர்க்கு நாம் செய்தவேலையை ஒளித்தோமானால் துரோகமாகும். ஒரு காலத்தில் வெளிப்பட்டால் நம் தலைபோவதுமல்லாமல் நம் குடும்பத்தையே நாசஞ்செய்து போடுவார். இதன்றித் துரியோதனன் தான் செய்வித்த வேலையை வெளிப்படுத்தா திருக்கக் கட்டளையிட்டிருக்கிறான். அரசன் கட்டளைப்படி நடந்தால் அதனால் வரும் பாவம் அவ்வரசனைச் சேருமென்று துணிந்து நாம் கெடுதியான வேலைக்குப் புத்திகெட்டுப் பாத்தியப்பட்டோம். ஆனால் பாண்டவர்கள் நல்லவர்கள். அவர்கள் பொருட்டு உண்மையைப் பேசாவிட்டால் நமக்குப் பாவம் நேரிடும்" என்று கருதி, தன்னைக் கொண்டு செய்வித்த வேலையின் மர்மங்களை யெல்லாம் விதுரனுக்குச் சாற்றினான். அதனை விதுரன் கேட்டுத் திடுக்கிட்டு மெய் சோர்ந்து, ஒன்றுந் தோன்றாமல் திப்பிரமைகொண்டு, கைகால்கள் அசைவின்றி நின்று, சற்றுநேரஞ் சென்று தம்மறிவுமீள, 'தெய்வமே! சந்திர வமிசத்தைப் பற்றிப் பற்பலபேர் நகைக்கலாயிற்றே! ஐயோ!! பாண்டுமக்கள் இளவயதிலே பிதாவைப் பறிகொடுத்து, இவ்விடத்தில் வந்து இளவரசுப் பட்டம் பெற்றுப் பின்பு துரியோதனனுடைய துராலோசனையினால் அதனையுமிழந்து வாரணாவதஞ் சேர்ந்து அங்கும் இவர்கள் உயிருக்குத் தீங்குவரும்படி நேரிட்டதே. இதென்ன தீவினை? ஆ! தெய்வமே! தெய்வமே!" என்று கனவருத்தமுற்று, கனகன் காலைப்பிடித்து வேண்டிக்கொள்வதற்குப் பதிலாக அவனிரண்டு கரங்களையும் பற்றி இறுகத்தழுவி, பற்பல உபசார வார்த்தைகளைச் சொல்லி, "அப்பா கனகா! உலகத்தில் இன்பமாகப் பெற்றோன் - இடர்தனைத் தீர்த்தோன் - அன்புடன் அன்னம் அளித் திரக்ஷித்தோன் - நூல்கற்பித்தோன் - உபதேசித்தோன் - இவ்வைவரும் பிதாக்கள். நீ பாண்டவர்களை வருக்கும் உயிர்ச்சேதம் வராமலும், அரசனாகிய துரியோதனன் கட்டளைக் கழிவுவராமலும் ஒரு தந்திரஞ் செய்வாயனால், அந்தப் பாண்டவர்களுக்கு நாங்களெல்லாம் பிதாக்களல்ல. இறந்து போன

பாண்டுமஹாராஜன் நீயே. இனி யுனக்குச் சொல்ல வேண்டிய தென்ன" என்று மிகுந்த ஆருமையோடு அணைத்து முத்தமிட்டான். கனகன் ஜாதியிற் கம்மியனு யிருந்தாலும் பதினெட்டுச் சிற்பிகளில் இவனும் ஒருவனுயும், யாவர்க்கும் மேலான கல்வி யுடையவனுயும், பாண்டவர்கள்மீது அதிகப் பிரீதி யுடையவனுயும் இருப்பவனுதலால் மனங்கனிந்து ஒருவசனஞ் சொல்லுகின்முன்—

"ஓ சுவாமி! தாங்கள் அஞ்சவேண்டாம். வஞ்சனைக்குக் கொள்கலனுகிய துரியோதனன் கட்டளைப்படி அரக்கு மாளிகை செய்தேன். அப்படிச் செய்தாலும் பாண்டவர்கள் ஐவரும் குந்திதேவியும் உயிர்ச்சேதமின்றித் தப்பிப் பிழைத்துப்போக அம்மாளிகையில் பீமன் பள்ளியறைக் கருகில் ஐந்து காலால் ஒரு மண்டபம் இயற்றி, அம்மண்டபத்தை நான்கு காலில் நிற்க வைத்து, நடுக்காலின் கீழ் மனிதர் சஞ்சாரமில்லாத இடும்பாவனம் வரையிற் செல்லும்படியாய் ஒரு சுரங்கம் வைத்திருக்கிறேன். அம்மாளிகை தீப்படுவதற்குள் இத்தந்திரத்தை பீமனுக்குத் தெரிவித்தால் அவனுல் மற்ற ஐவரும் தப்பித்துக் கொள்ளுவார்கள். இந்தக் கருத்தை பீமசேனனுக்கு நானே சொல்லி விடுகிறேன்" என்முன். இவ்வசனங்களைக் கேட்டமாத்திரத்தில் (உலகத்தில் ஒருவன் கல்விமானுயும் நன்றியறியுந் தன்மையை யுடையவனுயும், மண்டலேஸ்வரனுயு மிருந்து, ஏதோ ஒரு முகாந்தரத்தால் தன் பரிவாரங்களை விட்டுத் தனித்து காட்டிற் சென்று விடாய்ப்பட்டு நாவும் நாபியும் வறண்டு களைதாங்கிச் சோர்வுற்றகாலத்தில், புல்லரிசிக் கஞ்சி கிடைத்தால் அதற்கு அவன் எவ்வளவு மகிழ்வடைவானே அவ்வளவு) மகிழ்வை விதுரமகாராஜன் அடைந்து, அந்தக் கனகனுக்கு வேண்டிய வெகுமானங் கொடுத்து, பற்பல உபசாரங்களைச் சொல்லி, "அப்பா கனகா! இந்த விருத்தாந்தம் எங்கும் வெளிப்படாம லிருக்க வேண்டும்" என்று சொல்லித் திட்டம் செய்து அனுப்பிவித்தான். உடனே அக்கனகனும் "நல்லது ஐயா" வென்று நமஸ்கரித்துத் தன் வீட்டிற்குப் போனுன்.

---

## பாண்டவர் அரக்குமாளிகைகுற் குடிபுகுதல்

---

இங்கே புரோசனன் தருமராஜனிடத்துப் போலி அன்பு காட்டி மஹாஉபகாரிபோல் நடந்து வருகிருன். தருமராஜன் இந்தப்

புரோசனன் பிதாவினுல் அனுப்பிவிக்கப் பட்டபடியால் அவனைப் பிதாவைப்போற் பாவித்து, அவன் கருத்தின்படி தான் நடப்பதுமன்றித் தன் தம்பிமார்களையும் அவ்வாறு நடந்து கொள்ளும்படி செய்து வருகிறுர். இப்படி யிருக்கிற காலத்தில் ஒரு நாள் புரோசனன் தருமராஜனிடத்து வந்து "ஓ மண்டலேஸ்வரா! பெரிய அரசனுத்தரவின்படி தங்களுக்கு மஹா விநோதமுள்ள ஒரு மாளிகையேர்ப்படுத்தி வைத்திருக்கிறேன். அதில் நல்லதினத்திற் பிரவேசிக்க வேண்டும்" என்று அபிநயித்தான். தருமராஜன் தன் சபையிலிருக்கும் வேத வேதியர்களை நோக்கி, "ஓ சுவாமிகளே! கிரகப் பிரவேசத்துக்கு ஒரு தினம் நியமிக்க வேண்டும்" என்று நமஸ்கரிக்க; வேதியர்கள் நல்ல சுபமுகூர்த்த மொன்று நியமித்தார்கள். அந்த முகூர்த்தத்தில் ஐவரும் குந்திதேவியும் ஸ்நானஞ் செய்து பூஜை முடித்து, காசிவிஸ்வநாத மூர்த்தியைத் தரிசித்து, புதிய மாளிகைக்குப் புண்ணிய வசனஞ் செய்து, வேதியர்களுக்கும் மற்ற ஏழைகளுக்கும் வேண்டியவற்றையுதவி, குடிவந்தார்கள். தருமராஜன் அம்மாளிகையின் உன்னத விநோதங்களைப் பார்வையிட்டு அதிக மகிழ்வடைந்து, புரோசனனைப் புகழ்ந்து கொண்டாடினுர். அன்றுமுதற் பாண்டவர்கள் அம்மாளிகையிலேயே யிருந்து வந்தார்கள்.

இப்பால் புரோசனன், பாண்டவர்கள் அம்மாளிகையிற் குடிவந்திருப்பதைத் துரியோதனனுக்குத் தெரிவித்தான். துரியோதனன் கனகனென்கிற சிற்பியையும், சகுனி - கர்னன் - இவர்களையும் ஒரு அறையி லழைத்துப்போய், "ஓ ஆப்தர்களே! ஐவரும் அரக்கு மாளிகையிற் குடிபுகுந்தார்களாம். இனி அக்கினி மூட்டுதற்குத் தாமதமென்ன? இப்போது வருகிற கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி இராத்திரி பதினைந்து நாழிகைக்குச் சரியாய் அனலிட்டு விடுவோம்" என்றுன். அவர்களும் அதற்கிசைந்தார்கள். உடனே துரியோதனன் புரோசனனுக்குத் தெரிவித்தான். புரோசனன் அந்தச் சதுர்த்தசியை எதிர்ப்பார்த்திருந்தான். கனகனுனவன் ஒரு நாளிரவில் யாசகனைப்போல் வேடம்பூண்டு வாரணுவதத்துக்கு வந்து பீமனைக்கண்டு சாஷ்டாங்கமாகக் காலில் வீழ்ந்து பணிந்தான். அப்படி வணங்கினவனை பீமன் நோக்கி, "அப்பா நீயார்? என்னை வணங்கவேண்டிய தென்ன?" என்று வினவ கனகன், எழுந்து கைகட்டி நின்று, "ஓ ஐயனே! நானிந்த மாளிகை கட்டிய சிற்பி. உங்களுக்கு ஒரு விண்ணப்பம் செய்துகொள்ள வந்தேன்.

அதாவது இம்மாளிகை அரக்கு - பஞ்சு - அழிஞ்சில் - மரம் - எண்ணெய் - மெழுகு முதலியவற்றால் செய்யப்பட்டது. இது உங்களைக் கொல்லும்படி துரியோதனன் செய்த கபடம். இந்த மாளிகையில் நீங்கள் நித்திரை செய்யும்போது, அக்கினிமூலையில் வைத்திருக்கும் சரவத்தியில் நெருப்பிடக் கிருஷ்ணபக்ஷஞ் சதுர்த்தசி இரவில் 15-நாழிகைக்கு நல்லவேளை பார்த்திருக்கின்றது. நான் உங்கள்மீது அன்புள்ளவனாதலால் நீங்கள் யாதொரு தீங்குமின்றித் தப்பித்துக்கொள்ளவும், துரியோதனன் கட்டளைக் கழிவு வராமலிருக்கவும் ஒரு தந்திரஞ்செய்து வைத்திருக்கிறேன். அதனைத் தாங்கள் மனதில் வைத்து, சதுர்த்தசியினன்று மாளிகை நான்கு புறமுந் தீமுட்டிப் பற்று முன்னமே நீங்கள் தப்பித்துக்கொள்ளுங்கள்" என்று கூறி, "ஐயா பீமராஜனே! உமது பள்ளியறைக்கு அருகில் ஐந்துகால் மண்டபங் கட்டியிருக்கிறேன். அதின் நடுக்கால் அந்தரமாயிருக்கும். அந்த அந்தரக்காலை மந்தரகிரி போன்ற உமது புயத்தாற் தள்ளிவிட்டு அந்தக் கம்பமிருந்த பாறையைப் புரட்டினால், அதிற் சுரங்கவழி தோன்றும் அவ்வழியிலிறங்கிப்போய் இடும்பாவனஞ் சேரலாம்" என்றுரைத்து "எனக்கு விடை கொடுத்தருளும். நான் விரைவிற்சென்று விதுரமஹாராஜனுக்கு இச்செய்தியை விளம்பிப் போகவேண்டும்" என்று வேண்டினான். பீமன் துரியோதனனெண்ணிய எண்ணத்தைக் குறித்து வருந்தித் தாங்களாறுபேரும் அழியாமற் பிழைக்கும்படிக்கு உபாயஞ்சொல்லிய கனகனைத் தழுவிக்கொண்டு புகழ்ந்து மகிழ்ந்து, "அப்பா கனகா! அன்று நாங்கள் பாண்டுராஜன் வயிற்றிற்பிறந்தோம். இன்று உன்னுளவினால் இறந்த எங்கட்கு நீயே உயிருதவிசெய்தாய். உத்தமனே! உனக்கு நான் செய்யுமுபகார மென்ன யிருக்கின்றது? இதோ நான் பூண்டிருக்கும் பணிகளைக் கொடுக்கிறேன். இவைகளை அங்கீகரித்துக்கொள்" என்று தானணிந்திருந்த பணிகளை கழற்றிக் கொடுத்துப் பிரிய வசனஞ் சொல்லி விடை கொடுத்தனுப்பி விட்டு, மாளிகையிற் பிரவேசித்து, கனகனுரைத்த சூழ்ச்சியையெல்லாம் இரகசியமாகப் பார்வையிட்டு, தன் தமையன் தம்பிமார்களோடும் சொல்லாமல் தன் மனதில் வைத்துக்கொண்டு புரோசனனிடத்து எச்சரிக்கையாக யிருந்தான். சதுர்த்தசியும் வந்தது. அன்றையத்தினம் புரோசனன் உதயத்திலெழுந்து ஐவரிடத்து வந்து, மிகுந்த அன்புடையவனைப்போல் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, வாய்பொத்தி எதிர்நின்று, "ஓ சுவாமி தருமநந்தனா!

ஏதாவது அடியேற்குக் கட்டளையிடவேண்டியிருந்தா லிடுங்கள்" என்று வினவ, தருமராஜன் காலகதியாற் சொல்லுகிறார். "ஓ புரோசனா! நாமிந்நகரத்துக்கு வந்ததுமுதல் நாட்டைப் பார்த்தோமேயன்றிக் காட்டைப் பார்க்கவில்லை. ஆதலால் காட்டிற் சென்று நாம் வேட்டையாட வேண்டும்" என்று கூற, புரோசனன் அக்கணமே வேட்டைக்குத் தகுந்த முயற்சிசெய்தான். ஐவரும் காட்டிற்குச்சென்று பெரிய மிருகங்களெல்லாம் அதமாக வேட்டையாடி, நகரத்துக்கு வந்து அரக்குமாளிகை சேர்ந்து, ஸ்நானம்பண்ணி போஜனஞ்செய்த பின்பு புரோசனனை அழைத்து "அப்பா புரோசனா! நாங்கள் வேட்டையாடித் தேகம் அலண்டிருக்கிறோம். நீ இங்கிருந்து காவல் செய்திரு. நாங்கள் நித்திரைக்குச் செல்கிறோம்" என்று ஐவரும் படுக்கை யறைக்குட்சென்று மஞ்சத்திற் சயனித்துக்கொண்டு நித்திரை போயினர்.

## அரக்குமாளிகையில் தீயிடுதல்

இவர்களில் பீமன் மாத்திரம் கனகனென்கிற சிற்பி கூறியவற்றை மனதில் நினைத்து, "இன்றையத்தினம் இந்தமாளிகை எரிக்கப்படுமாதலால் நாம் ஜாக்கிரதையாக யிருக்கவேண்டும்" என்று நினைத்துக் கண்துயிலா திருந்தான். அக்கினி இடுகிறதற்குக் குறித்த முகூர்த்தம் நெருங்கிற்று. அந்த வேளையில் பீமன் எழுந்து புரோசனனிருக்கிற விடத்தில் வந்து பார்க்கும்போது, புரோசனனுக்கு இப்பூமியின் சம்பந்தம் அன்றோடு நீங்கிய படியால் இருந்த விடத்திலேயே தான் துயின்று விட்டான். அதனைப் பீமன் பார்த்து, "இந்தப் பாவி உள்ளனுங் கள்ளனுமாயிருந்து நம்மைக் கொல்ல நினைத்தான். ஆதலால் தெய்வ மிவனைப் பெருந்தூக்கத்திற் சேர்த்தது. இவனிப்படியே தூங்கட்டும். நாமே சரவத்திக்கு அனலிட்டு விடுவோம். அதன்மேல் தூங்குகிறவன் தூங்கிப்போவான்" எனக் கருதிச் சமையற் கட்டிற் சென்று, ஒரு கொள்ளிக் கட்டையை எடுத்து அக்கினி மூலையில் வைத்திருக்கும் சரவத்திக்கு நெருப்பிட்டு, ஓட்டோடியும் வந்து தருமராஜனை ஒரு புஜத்திலும்-குந்திதேவியை முதுகிலும் மற்றொருபுஜத்திற் பற்குணனையும்-இரண்டு தம்பியரை இரண்டு கைகளிலும் ஏந்திக்கொண்டு, ஐந்துகால் மண்டபத்தி னடுக்காலை யுதைத்துத்தள்ளி, அதனடியி லிருக்கும்

பாறையை எடுத்து உட்புகுந்து, முன்போல்அப்பாறையை மூடி விட்டு அதிவேகமாக அச்சுரங்கத்திற் சென்று இடும்பாவனத்தில் வந்து, அங்கு மூடியிருக்கும் பாறையைத் தலையால் முட்டிக் கிளப்பி, அஞ்சுதலைநாகம் அஞ்சுதல் நீங்கி ஆறுதலையுடன் வெளிப் பட்டா லெப்ப்டியோ அவ்வாறு ஐவரையுந் தாங்கி வெளியில் வந்து, அவ்விடத்தில் ஓர் சமமான பூமியில் தழைகளைப்பரப்பி, ஐவரையும் நித்திரை பங்கமில்லாமற் படுக்க வைத்து, தான் நித்திரை செய்யாமற் காவலிருந்தான். குந்திதேவி-தருமராஜன் - பற்குணன் - நகுலன் - சகாதேவன் இவர்கள் அதிக நித்திரை மயக்கத்தி லிருந்தபடியால் பீம னெடுத்துவந்தது அவர்களுக்குக் கனவுபோ லிருந்தது.

இங்கே சரவத்தியில் அனலிட்ட மாத்திரத்தில் குபீரென்று தணல் அதிகரித் தெழும்பிச் சுற்றுமதிலை வளைந்து, உள்ளிருந்த மாளிகையை முற்றும் நீறுக்கி விட்டது மன்றி மறந்து தூங்கிக் கொண்டிருந்த புரோசனனையும், துரியோதனன் கட்டளைப்படி விஷங்கலந்த தேனைக் கொடுக்க அம்மாளிகையில் வந்திருந்த ஐந்து வேடரையும், அவ்வேடர்களின் தாயையும் சாம்பராக்கிவிட்டது. வாரணுவதபுரியி லிருந்தவர்கள் யாவரு மெழுந்து, அரக்குமாளி கை எரிவதைக் கண்டு மன நடுங்கி, " ஐயையோ ! பிரம்மா - விஷ்ணு - உருத்திரன் முதலானவர்கள் மதிக்கத் தகுந்த சிறப்பினை யுடைய சந்திரவமிச சிகாமணிகளான ஐவருந் தாயும் வெந்து நீறுய் விட்டார்களே. இனி நாமென்ன செய்யப்போகிறும் ? ஹரி! ஹரி ! தெய்வமே ! தெய்வமே" என் றலறி வயிற்றி லறைந்து கொண்டார்கள். சிலர் தரையில் விழுந்து புரண்டு புரண்டு அழு தார்கள். சிலர் பிரமை கொண்டு நின்றுர்கள். இவ்வாறு யாவ ரும் வருத்தமடைந்து, உதயமானவுடன் அத்தினபுரத்துக்கு இச் செய்தியைத் தெரிவிக்கத் தூதரை அனுப்பினுர்கள். அந்தத் தூதர் கள் கடுகி வந்து, பீஷ்மர்-துரோணர்-கிருபர்-அஸ்வத்தாமர்-கர்னன்- சகுனி - விதுரன் - மந்திரிகள் - பட்டவர்த்தனர் - மகுடவர்த்த னர் முதலானவர்கள் புடைசூழக் கொலுவிருக்கும் துரியோத னன் காலில் விழுந்து, ஓவென் றலறி "ஓ மண்டலேஸ்வரா ! வாரணுவதத்தில் வந்து இளவரசுப்பட்டத்தைச் செலுத்திவந்த ஐவருந் தாயும் நூதனமாக இயற்றிய மாளிகையில் நித்திரை செய்திருந்தபோது, அம்மாளிகை தீப்பட்டு சாம்பராயிற்று" என்

றூர்கள். அச்சபையிலிருந்த யாவரு மிவ்வசனத்தைக் கேட்ட மாத்திரத்தில் ஸ்மரணையற்றுக் கீழே விழுந்து சற்று நேரம் சென்றவுடன் மூர்ச்சை தெளிந்து, ஒவ்வொருவராக எழுந்து ஏங்கி விம்மி, மனமடுங்கிச் சரீரந்துடித்து, வாய்குழறி நாவண்டு ஓவென்றழத் தொடங்கினார்கள். இவர்களோடு துரியோதனனும் சகுனியும் கர்னனும் உள்ளே மகிழ்வுற்றிருந்தாலும், உலகத்தில் மெய்படப் புரண்டழுவார்களோடு தாங்களும் எதிர்சென்று நின்று புரண்டழத் தொடங்கினார்கள். இந்தச்செய்தி திரிதராஷ்டிரனும் அந்தப்புரத்தி லிருப்பவர்களும் கேள்வியுற்று ஓவென்றலறத் தலைப்பட்டார்கள். அத்தினபுரத்து ஆஸ்தானத்திலெழுந்த அழுகையொலியானது கடலோலிபோ லிருந்தது.

இப்படி யாவரும் சிலநேர மழுது புலம்பிப் பின்பு ஒருவாறு மனந்தேற, துரோணர் - கிருபர் - இவர்கள் "ஆ! ஆ! இதென்ன பீமன் வாயுபகவானுடைய புத்திரனயிற்றே அவனிருக்கும்போது அவ்வாயுவுக்கு நண்பனகிய அக்கினிபகவான் தன் கிரணத்தைத் தாக்குவானே? ஐயோ! இவ்வுலகிலுள்ள சுத்தவீரர்களிற் சிறந்த பராக்கிரமனயும் அதிக யுக்தியை யுடையவனயு மிருந்த பற்குனன் மெய்மறந்தானே? வில்லில் தேவாஸ்திரங்களி லொன்றாகிய வருணஸ்திர மிருக்கிறதே அதனைத் தொடுத்துவிட்டால் அரைமாத்திரத்தில் அக்கினியை அணைத்துவிடுமே! அல்லது வில்லெடுக்க நேரமில்லாவிட்டாலும் ஒரு துரும்பெடுத்து வருணஸ்திர மந்திரத்தை யுச்சரித்து விடலாகாதா? என்ன வித்தை கற்றாலும் காலம் நெருங்கினல் ஒன்றுந்தோன்றாமற் கெடுவரென்று ஆன்றோர்க ளுரைத்திருப்பது ஐவரிடத்துத் திருஷ்டாந்தமாயிற்றே" என்று பலவாறு நினைந்துருகினார்கள். பீஷ்மர் பாவியாகிய துரியோதனன் செய்த சூதினல் பஞ்சகர்த்தாவைப்போல் விளங்கிய பாண்டவரைப் பறிகொடுத்தோம். இனி வருத்தப்படுவதினற் பயனில்லை" என்று தீர்மானித்துத் தேறினர். இவர்களைப்போல் விதுரராஜனும் தேம்பித்தேம்பி விசனப்பட்டுக் கனகனென்கிற சிற்பி சொல்லிய வாக்குத்தத்தத்தை நினைத்துத் தைரியங்கொண்டிருந்தான். திரிதராஷ்டிரன் முதலானவர்கள் ஆடு நனைகிறதற்குக் கோனழுவதுபோல் அழுதார்கள்.

பின்பு யாவரும் ஒன்றாகக்கூடி வாரணவதம் வந்து அரக்குமாளிகையைச் சோதித்துப் பார்க்கும்போது, ஐந்துவேடர்களி

னெலும்பும் அவ்வேடர்களின் தாயெலும்புந் தோன்றின. அவை களைப்பார்த்து யாவரும் கனவருத்த மடைந்தார்கள். விதுரன் அவ் வெலும்பைக் கண்ணுற்று, முன்கொண்ட தைரியத்தை யிழந்து, "இது ஐவருடைய எலும்பென்று தீர்மானித்து, இறந்தவன் போல் மூர்ச்சை யற்று விழுந்து மீண்டுந் தெளிந்தெழுந்து, "ஐயோ மக்களே! ஐயோ மக்களே!" என்று ஒவென் றலறி மதிமருண்டு, பெருமூச் செறிந்து, சரீரமுழுவதும் வெயர்த்து விழிகளில் நீர்ப் பசுமையற்று, பிராண னிலைபெறும லலைந்து, உதிரம் பெருக வெயர்த்து, நடுநடுங்கிப் பதைபதைத்து, நிலத்தில் வீழ்ந்து புரண்டு, "ஓ மதக்களிற்றினை யொத்த மைந்தர்களே! எதிர்த்து வந்த சத்துருக்களுக்கு யமனைப் போன்றவர்களே! மதித்து வந்தோர் களை மகா விஷ்ணுவைப் போற் காக்குந் தீரர்களே! மகமேரு கிரியைப்போற் பிரகாசிக்குங் கீர்த்திப் பிரதாபர்களே! சத்தி யமே நித்தியமாகவுடைய உங்கட்கும் இத்தீங்கு நேர்ந்ததல்லவா? இந்தச் சந்திரகுலத்தை ஆலமரத்தின்கீழ் விழுதுபோல் அந்தியத் தில் நீங்கள் தான் ஆதரிப்பீர்களென் றெண்ணி யிருந்தேனே. அந்த எண்ணமெல்லாந் தற்காலத்தில் ஆற்றிற் கலக்கவிட்ட ஆவின்பாலுக் கொப்பாய் விட்டதே; சர்வலோக ரக்ஷகனுகிய அரிவாசுதேவன் நீங்கள் எங்கிருந்த போதிலும் உங்களைப் பக்கத் துணையாயிருந்து பாதுகாப்பாரென் றெண்ணி யிருந்தேனே அவருக் கும் உங்கள்மேற் கிஞ்சித்துங் கிருபையில்லாமற் போய் விட்டதா? முன்னம் உங்கள் தந்தை வார்த்தையைத் தருமவார்த்தையென் றெண்ணி நீங்கள் வாரணாவதத்திற்குச் செல்லும் போது, உங்கள் பிரிவாற்றுமையாற் பரிதபிப்பவன் போல் வழிவிடவந்த வஞ்சகப் பாவியாகிய துரியோதனன் புரோசனனைத் தனியே யழைத்து இர கசியமாக பேசியபோதே எனக்குச் சந்தேகமுண்டாய், நானு முங்கட்கு இரகசியமாய்ப் 'புரோசனனை நம்பவேண்டாம்! சாக் கிரதையாயிருங்கள்' என்று எச்சரிக்கைசெய்து வந்தேனே! அதனை மறந்தீர்களோ? அப்பால் இவ்வாரணாவதத்தில் நடந்த வஞ்ச கத்தை யெல்லாங் கனகனென்னுஞ் சிற்பியாற் கேட்டறிந்தபோது, எனக்குண்டான மனவருத்தமாற அவன் சொல்லிய வார்த் தையானது, ஒருவன் தன்னுயிர் போன்ற பொருளை வைத் துக் காணுமல் துக்கித்து மீண்டுமப் பொருளைக் கண்டால் எவ்வித பூரிப்பை யடைவானே! ஒருவன் தன் தேகத்தை விட்டு நீங்கிப் போன உயிரானது மீளவுமத் தேகத்திற்றனே வந்து பிரவேசித்

தால் எவ்வளவு மகிழ்ச்சியை யடைவானே; ஒருவன் மானிடனாய்ப் பிறந்தும் மோக்ஷம் பெறவேண்டிய முயர்ச்சி யில்லாமலிருந்து இறந்தவுடன் அம்மோக்ஷம் தற்செயலாய் கிடைக்குமானல் அப்போது அவன் எத்தகைய பிரம்மானந்தத்தை யடைவானே? அத்தகைய பூரிப்பும் - மகிழ்ச்சியும் - பிர்ம்மானந்தமு முண்டாக்கத் தக்கதா யிருந்ததே; அஃதிப்போது அழலிற்பட்ட பஞ்சாய்விட்டது என்ன காரணமோ? ஐயா தருமநந்தனு! சத்திய மென்ப தெங்குள்ளதோ அவைகளெல்லாம் உன்னுடைய அகண்ட சத்தியத்தின் அம்சமென்று சொல்லும்படியாக உருக்கொண்டு வந்த உனக்கும் இவ்வித ஆபத்து நேர்ந்ததா? அப்பா பீமசேனு! பிரசண்ட மாருதத்திற் கொப்பான வேகத்தையும், ஆலகாலத்திற் கொப்பான கோபத்தையும், வடவைக்கனலுக் கொப்பான வீரத்தையும், பெரும்புறக்கடலுக் கொப்பான தயையையும், சர்வசங்கார உருத்திரமூர்த்திக் கொப்பான திடதைரிய பராக்கிரமத்தையும் எங்கிருத்திப் போயினையோ? தம்பி அர்ச்சுனு! வில்லாசிரியராகிய துரோணுசாரிக்கு முதலையால் நேரிட்ட ஆபத்தை நீக்கி அவர் பொன்போன்ற வாயினுற் 'கஜேந்திரவரதா' வென்று துதிக்கும் படியான மேன்மைபெற்ற தல்லாமல், அவர் பாஞ்சாலனிடத்திற் பேசிவந்த சபதத்தை நிறைவேற்ற யெத்தனையோ பேர்சென்று எதிர்த்தும் ஆகாமற் பின்பு நீ தனியே சென்று வென்று, அவனைத் தேர்க்காலிற் கட்டிக்கொண்டு வந்து ஆசாரிய ரெதிரில் விட்டு, அவர் சபதத்தையும் நிறைவேற்றினுயன்றே? அது காலையில் அப் பாஞ்சாலன் அவ் வாசாரியருக்கு மறுசபதங்கூறித், தன்னை வெற்றிகொண்ட உன் தோளுக்கிசைய ஒரு புத்திரியைப் பெற்றுத் தரக்கடவேனென்று ஓர் உறுதி செய்துகொண்டுபோய் புத்திரகாமேஷ்டியாகத்தால் திரிலோகமு மெச்சத்தக்க புத்திரியைப் பெற்று வைத்திருக்கின்றனே. அவனெண்ணம் மண்ணுயதே! மகனே நகுலா! குழந்தாய் சகாதேவா! முற்றத்துறந்த முனிவர்களும் உங்கள் முகாரவிந்தத்தை நோக்கும் போது இப்படிப்பட்ட புத்திரபாக்கியமே முத்திக்கு வித்தென்று இச்சை கொள்ளுவார்களே! அப்படிப்பட்ட உருவும் உணர்வும் - உண்மையும் - உபகாரமுமாகிய எல்லா நன்மைகளும் வாய்ந்த உங்களையும் அக்கினி தேவன் சிறிது மிரக்கமின்றித் தகித்து விட்டானல்லவா? ஆனதினுற்ருன் அவன் யாவராலும் (சேர்ந்தார் கொல்லி) என்று அழைக்கப்படுகிருன். ஆ! ஆ! மைந்தர்களே! நீங்கள் ஐவரும்

எனக்கெயிப்பில் வைப்பானவர்க ளென்று எண்ணி யிருந்தேனே! அவ் வெண்ணமும் இன்று உங்களைத் தீய்த்த அனலிற் றீய்ந்தது போலாயதே! ஐயோ! அரண்மனையில் வெவ்வேறாய்த் தனித்து நித்திரை செய்பு நீங்களனை வருந் தாயும் ஒரேவிடத்தில் வந்து எரிந்து என்பாய்ப்போ யிருப்பதைப் பார்த்தால், அனற்பட்ட வுடன் வெளியில் வரலாமென்று ஓடி வந்தீர்களோ? அப்படி ஓடிவந்தும் உங்கள் விதிவசத்தால் வாசற்படியி லகப்பட்டு மடிந்தீர்களோ? அந்தோ! தெய்வமே! தெய்வமே!" என்று பலவாறு தனக்குள் தானே அழுது புலம்பினான்.

துரியோதனனும் அவனைச் சேர்ந்த மற்ற மூன்று துரா லோசனைக்காரரும் "நாம் கருதி யிருந்த வேலை இன்று முடிந்தது. இனி நமக்குச் சல்லியமில்லை" என்று உள்ளங் களித்து வெளிக்குக் காட்டாமல் உண்மையில் வருந்துபவர் களைப் போல் பாசாங்கு செய்தார்கள். இப்பால் ஐவருக் கும் ஐவரையீன்ற மாதாவுக்கும் நீர்க்கடன் முதலியவற்றைச் செய்துவிட்டு, யாவரும் அத்தினபுரத்துக்கு வந்து சேர்ந்தார் கள். துரியோதனன் முன் கொண்டிருந்த ஏக்கத்தை நீக்கி, பராக்கிரமத்துடன் ஆக்கத்தைப் பெற்றோமென்று மனவூக்கத் தைக்கொண்டு அரசு செலுத்திவந்தான். ஓ ஜனமேஜய மகா ராஜனே! துரியோதனன் தனக்கு இனிமேல் நேரிடப் போகும் பேரிடிக் கொப்பாகிய பெருந்துன்பங்கள் பலவற்றை யுணராமல், கழுத்துமேல் வெட்டுவிழுவதை யறியாமல் தனக்குக் கொடுக் கிற தூபதீபத்தையும் தழையையுங் கண்டு மகிழும் பாவியாட் டைப்போல், மகிழ்வடைந்து இனிது வாழ்ந்திருந்தான். இனி அங்கே இடும்பாவனத்திலிருந்த பாண்டுமக்கள் கதையைச் சொல்லு கிறேன் கேளும்" என்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

வாரணாவதச்சருக்கம் முற்றிற்று.

---

# 7. வேத்திரகீயச்சருக்கம்

## கண்ணன் துதி.

சீதநாண்மலர்க் கோயின்மேவுசெந் திருவினாயகன்றேவநாயகன்
வேதநாயகன் பூதநாயகன் விரதநாயகன் விபுதநாயகன்
போதகாதிபன் முதலைவாயிடைப் பொறைதளர்ந்துமுன்
[பொதுவிலேலினைந்
தாதிமூலமே யென்னமுன்வரு மாதிநாயக னடிவணங்குவாம்.

"கேளும் ஜனமேஜய மஹாராஜனே! பீமன் தன் தமையன் தம்பிமார் அன்னை இவ்வைவரும் நித்திரைசெய்யத் தான் காவலிருந்தான். அப்போது, அவ்வனத்தில் இடிம்பனென்கிற அரக்கனும் அவன் தங்கை இடிம்பியும் வாழ்ந்திருந்தார்கள். இடிம்பன் இவர்கள் வந்திருப்பதைக் காற்றுவாடையால் உணர்ந்து, "இன்று நமது பசிக்கு இரை யகப்பட்டாற்போ லிருக்கின்றது" என்று திடுக்கென் றெழுந்து வெளிப்பட்டான். இடிம்பி அதிவேகமாக வெளிப்பட்ட தமையனை நோக்கி, "எங்குச்செல்லுகிறாய் அண்ணா" என்று வினவினாள். இடிம்பன் "ஓ அம்மா! நமக்கு நெடுநாளாக நரமாமிசம் அகப்படாம லிருந்தது. இன்றைய்த்தினம் நரஜீவன் நமது வனத்தில் வந்திருப்பதாக நான் மோப்பத்தினால் அறிந்து அவ்விடத்துக்குப் போகிறேன்" என்று கூறினான். தமையனை நோக்கி, "ஓ அண்ணா! நானும் நரமாமிசம் புசித்து நெடுநாளாயிற்று. எனக்கு விடைகொடுத்தால் நானே சென்று, வந்த நரரை என் பசியாறத் தின்று, தங்களுக்குங் கொண்டுவருகிறேன்" என்று புகன்றாள். இடிம்பன் அவள் கருத்துக் கிசைந்து, "நல்லது அப்படியே நீ போய் புசித்து எனக்குங் கொண்டுவா" என்று சொல்லி அவன் நின்றுவிட்டான். இடிம்பி சாதியில் அரக்கியாயிருந்தாலும் வடிவில் மஹாலட்சுமியையொத்து விளங்குவாள். அதனால் அவளுக்குக் கமலக்கன்னி யென்றும் பெயருண்டு. அவ்விடிம்பி விரைவாக நடந்து வந்து பீமனைப் பார்த்தாள். அவனது தேககாத்திரத்தையும், அழகையும் வலியுடைமையையு நோக்கி, இவர் நரனாயிருந்த போதிலும் திணிவுடைமை முதலியவற்றால் நமதினமா யிருக்கிறார். மேலும் அழகி லுயர்ந்தவர். இப்படிப்பட்டவரை நாம் கணவனாகக் கொள்ள வேண்டும்" என்று கருதிக், கொல்லவும் : அக்கிடிகவும் கடிக்கவும் பிடுங்கவும் மெல்லவும் விழுங்கவும் வந்த கருத்தை விட்டு, நாணம் மடம் அச்சம் பயிர்ப்பென்னு நான்கையும் பெற்று, அடங்கி

ஒடுங்கி அருகில் வந்து நின்று, "ஓ நரேந்திரா! நீர்யார்? உமது பெயரென்ன? உமது இருப்பிடம் எது? இவ்விடம் வந்த காரண மென்ன?" என்று வினவினாள்.

---

## இடும்பாசுரன் வதை

பீமன் இடும்பியை நோக்கி, "அடி பெண்ணே! நீயார்? உன் பெயரென்ன? இந்த நள்ளிருளி லிங்குவந்த காரணமென்ன?" என்று கேட்க, இடும்பி அடடா! இவர் மஹாவீரர், நம்மைப்பார்த்த நராளெல்லாம் விடவிடத்து, துடிதுடித்து, பதைபதைத்து, நடு நடுங்கி, உயிரொடுங்குவார்கள். நாம் அவர்களை வாழைப்பழம் போல் விழுங்கிவிடுவோம். அப்படியிருக்க இவர் நாம்கேட்ட கேள்விக்கு உத்தரவு கொடுக்காமல் நம்மை எதிர் உத்தரங் கேட்கிறார். நமக்குக் காரிய முடிவதே பெரிது. வீரியத்தைக் காட்டுவோமானல், நமது கருத்திற்கொண்ட கோரிக்கை நிறைவேருது. ஆதலால் நாமே விடைகொடுப்போம்" என்று நிதா னித்து அடக்கத்தோடு பீமனைநோக்கி "ஓ திடகாத்திரவீர சவுந் தர்ய நரேந்திரா! இவ்வனம் இராவணேஸ்வரன் வல்லமைக் கொப் பாகிய இடும்பாசுரனுடையது. நான் அவன் தங்கை. என் பெய ரும் இடும்பிதான். நீர் இங்கே வந்ததை மோப்பத்தா லுணர்ந்த என் தமையனாகிய இடும்பாசுரன், உம்மைப் புசிக்க எழுந்து அதி வேகமாக ஓடிவந்தான். அவனை நிற்கவைத்து நான் உம்மைத் தின்ன வந்தேன். வந்த விடத்தில் உமது வடிவத்தைப் பார்த்த வுடன் அதிக மையலாகி நின்றேன். இப்போது என்னைக் கூடி மனங்களிப்பெய்தச் செய்தால் என் தமையனாலும் இன்னும் யாவராலும் உமக்குக் கெடுதிவராமற் காப்பதுமன்றி, சொர்க் மத்திய பாதாளலோக விநோதங்களைப் பார்க்க விருப்பங் கொண் டால் நான் அவ்விடத்திற்கு அரை நொடியிற் கொண்டு போய் விடுவேன், அல்லது அவ்விடங்களிலுள்ள பொருள்கள் வேண்டு மென்ருலும் அவைகளைக் கொண்டு வந்து கொடுப்பேன். ஆதலால் என்மீது அன்புவைத்து என்னை அணைய வேண்டும்" என்று இனிய வசனங்களால் வேண்டினாள்.

பீமன் அவளைப் பார்த்துச் சிரித்து, "அடி பெண்ணே! உன் வல்லமையை நீயேதான் சொல்ல வேண்டும். மற்றொருவர் யார்

புகழப் போகிறார்கள்? அஃதிருக்கட்டும், உன் தமையன் இராவணன் வல்லமைக் கொப்பானவ னென்றும், என்னை விவாகஞ் செய்து கொள்ளென்றுங் கூறினாய். இது நன்றா யிருக்கின்றது. இராவணனே ஒரு மானிடனா லிறந்தான். உன் தமையன் அவனுக் கொப்பானவ னென்றால் அதிலென்ன பெருமை? யாவராலும் ஒருவன் இறவாமலிருப்ப தல்லவோ பெருமை. இராவணனுக் கொப்பானவனே எனில், யாராவதொருவர் கொன்றுக் காலைவாரி யிழுத்துப் போடுவார்கள். அவனைக் குறித்துச் சிறப்பாகச் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் 'நீ என்னைக் கூடவேண்டும்' என்று வேண்டிக்கொள்ளாமல் எதிர் நின்று புகன்றாயே. நான் மானிடன் நீ அரக்கி; உனக்கும் எனக்கும் கணப்பொருத்தம் பொருந்தாது. ஆதலால் இக்கணம் இந்த விடத்தை விட்டுப் போய்விடு. அல்லாவிட்டால் உன் சமர்த்தைக் காட்டு. உன்னால் முடியாவிட்டால் உன் தமையனை வேண்டுமானால் அழைத்துவா" என்று கடுகடுத்துக் கூறினான். இடிம்பி பீமன் மீது காதல் கொண்டதால் அவன் கூறிய மறுமொழியைக் கேட்டு, கோபம் கொள்ளாதவளாய் மனந் தளர்ந்து, "இந்த நரேந்திரன் நமது கருத்துக் கெவ்வண்ணமிசையப் போகிறார்" என்று நினைத்து நாலுதிசையும் நோக்கும்போது ஒரு திசையில் தருமன் முதல் ஐவர் படுத்து நித்திரை செய்வதை யறிந்து, "ஓ! ஓ! இவரொருவரென் றிருந்தோம். அங்கே ஐந்துபேர் படுத்திருக்கிறார்கள்; இந்த மகாபுருஷர் பலவானதலால், இவரைக் காவல்வைத்து நித்திரை செய்கிறார்கள். அவர்களைக் கொண்டாவது நமது எண்ணத்தை முடித்துக் கொள்ளவேண்டும்" என்று கருதியிருக்கும்போது இடிம்பன் வெகுநேரமாகத் தன் தங்கை வராதிருப்பதைக் கண்டு, "அடடா!! நமது தங்கை நரமாமிசம் புசிக்கப் போனவள் ஏன் இன்னும் வரவில்லை" என்று அதிவேகமாக ஓடிவந்தான். அப்போது இடிம்பி நாணமுற்று ஒதுங்கியிருக்கிறதையும், பீமன் மதங் கொண்ட யானையைப் போல் இறுமாப்புட னிருப்பதையுங் கண்டு, இந்த மானிடன் நமது தங்கையை மயக்கிக் கைவசப்படுத்த எண்ணி யிருக்கிறான்" என்று நினைத்துச் சினங்கொண்டு பீமனிடத்து வந்து, "அடா நரா! உன் நிலையையும் வல்லமையையும் அறியாமல் என் தங்கையைக் கைவசப்படுத்திக்கொள்ளவா பார்க்கிறாய்? நல்லது நீ எங்களுக்குப் பலியாவதுபோய், கலியாணமா கேட்கிறாய்? உனக்கு விதி கிட்டினதால் இக் கருத்துத் தோன்றிற்று. இதோ உன்னை யமபுரத்

த்துக்கு அனுப்பி உன் தசைகளைப் புசிக்கிறோம் பார்" என்று தன் பலங்கொண்ட மட்டும் ஓங்கி யடிக்க வந்தான்.

பீமன் புன்னகைகொண்டு, "அடா! நாம் சும்மாவிருக்க நம் மேல் வீண்வழக்கிட்டுப் போருக் கெழுந்தான். இவனை விடக் கூடாது" என்று எழுந்து தன் பலங்கொண்டமட்டும் இரண்டு கரங்களாலுங் கன்னத்திற் குத்தினன். அக்குத்தினு லிடும்பனுக்கு வாயிலுள்ள பற்களெல்லாம் பலபலவென்று விழுந்து, தொண்டை நெரிந்து, மண்டை கலங்கிற்று. இடும்பாசுரன் சற்று நிதானித்து, "அப்பா! நாம் இத்தகைய அடி பட்டதில்லை. நாம் இக்காட்டிலிருந்து அநேக நரஜன்மங்களைப் புசித்தோம். நம்மைக் கண்ட நரரெல்லாம் கடகடத்து விலவிலத்து உயிர் சோர்வார்கள். இந்நரன் நமது உக்கிரத்தைக் கண்டும், அஞ்சா தைரியத்துடன் எதிர் நின்றது மன்றி, நம்மையும் பல்லுதிர அடித்தான். இனி இவனுக்குத் திரி மூர்த்திகள் துணை வந்தபோதிலும் இவனைக் கொல்லாமல் விடலா காது" என்று மனதில் நினைத்து வடவானலத்தை நேத்திரத்திற் காட்டிப் பர்வதம் கால்கொண்டு நடந்து வருவதுபோல் பீமனுக்கு எதிர் வந்து நின்று, தன் கையால் ஓர் அறை அறைந்தான். பீமன் அவ்வடியைத் தட்டி, அவனைப் பிடித்து ஆகாயத்தில் எறிந்தான். இப்படி ஒருவரையொருவர் வாரியெறிகிறதும் மோதுகிறதுமாக இருக்கும்போது, நித்திரை செய்திருந்த ஐவரும் விழித்துக்கொண்டு பார்த்தார்கள். நகரத்திற் படுத்திருந்த ஞாபகமே அதிகமாகக் கொண்டிருக்கிறவ ராதலால், நாலு திசையையும் பார்த்து திடுக் கிட்டு மனநடுங்கி, "ஆ! ஆ! கொடிய வனத்தில் வரவேண்டிய காரணமென்ன? வந்த விடத்து பீமனுடன் யமனைப்போற் காத்திர மான யாரோ ஒரு வீரன் யுத்தஞ் செய்கிறான். இதென்ன ஆச் சரியம்?" என்று திகைத்துப் பலவாறு நினைத்துக்கொண் டிருக்கை யில், இங்கே பீமனும் இடும்பனும் ஒருவரை ஒருவர் வெற்றிபெற வேண்டுமென்கிற ஆசையினால் குத்தியும், தட்டியும், உதைத்தும், மிதித்தும், தூக்கியும், தாக்கியும், அடித்தும், கடித்தும், ஒரு முகூர்த்தம் வரையிற் போராடி; முடிவில் பீமன் அதிக உக்கிரங் கொண்டு, "இந்த ராக்ஷதப் பையலோடு இன்னுமா போராடுவது?" என்று நினைத்துக் கோபத்தீ ஜொலிக்க எழும்பி, இடும்பனைப் பிடித் துத் தூக்கிப் பூமியில்மோதி, காலைப்பற்றி இரு பிளவாகக் கிழித் தெறிந்து, மஹாவுக்கிரத்தோடு "இன்னும் அரக்கர்கள் இருக்கிறார் களா" என்று கர்ச்சனை யிட்டான்.

புகழப் போகிறார்கள்? அஃதிருக்கட்டும், உன் தமையன் இராவணன் வல்லமைக் கொப்பானவ னென்றும், என்னை விவாகஞ் செய்து கொள்ளென்றுங் கூறினாய். இது நன்றா யிருக்கின்றது. இராவணனே ஒரு மானிடனா லிறந்தான். உன் தமையன் அவனுக் கொப்பானவ னென்றால் அதிலென்ன பெருமை? யாவராலும் ஒருவன் இறவாமலிருப்ப தல்லவோ பெருமை. இராவணனுக் கொப்பானவனே எனில், யாராவதொருவர் கொன்றுக் காலைவாரி யிழுத்துப் போடுவார்கள். அவனைக் குறித்துச் சிறப்பாகச் சொல்ல வேண்டுவதில்லை. ஆனால் 'நீ என்னைக் கூடவேண்டும்' என்று யோசியாமல் எதிர் நின்று புகன்றாயே. நான் மானிடன் நீ அரக்கி. உனக்கும் எனக்கும் கணப்பொருத்தம் பொருந்தாது. ஆதலால் இக்கணம் இந்த விடத்தை விட்டுப் போய்விடு. அல்லா விட்டால் உன் சமர்த்தைக் காட்டு. உன்னால் முடியாவிட்டால் உன் தமையனை வேண்டுமானால் அழைத்துவா" என்று கடுகடுத்துக் கூறினான். இடிம்பி பீமன் மீது காதல் கொண்டதால் அவன் கூறிய மறுமொழியைக் கேட்டு, கோபம் கொள்ளாதவளாய் மனந் தளர்ந்து, "இந்த நரேந்திரன் நமது கருத்துக் கெவ்வண்ண மிசையப் போகிறார்" என்று நினைத்து நாலுதிசையும் நோக்கும்போது ஒரு திசையில் தருமன் முதல் ஐவர் படுத்து நித்திரை செய்வதை யறிந்து, "ஓ! ஓ! இவரொருவரென் றிருந்தோம். அங்கே ஐந்துபேர் படுத்திருக்கிறார்கள்; இந்த மகாபுருஷர் பலவானாதலால், இவரைக் காவல்வைத்து நித்திரை செய்கிறார்கள். அவர்களைக் கொண்டாவது நமது எண்ணத்தை முடித்துக் கொள்ளவேண்டும்" என்று கருதியிருக்கும்போது இடிம்பன் வெகுநேரமாகத் தன் தங்கை வராதிருப்பதைக் கண்டு, "அடடா!! நமது தங்கை நரமாமிசம் புசிக்கப் போனவள் ஏன் இன்னும் வரவில்லை" என்று அதிவேகமாக ஓடிவந்தான். அப்போது இடிம்பி நாணமுற்று ஒதுங்கியிருக்கிறதையும், பீமன் மதங் கொண்ட யானையைப் போல் இறுமாப்புட னிருப்பதையுங் கண்டு, இந்த மானிடன் நமது தங்கையை மயக்கிக் கைவசப்படுத்த எண்ணி யிருக்கிறான்" என்று நினைத்துச் சினங்கொண்டு பீமனிடத்து வந்து, "அடா நரா! உன் நிலையையும் வல்லமையையும் அறியாமல் என் தங்கையைக் கைவசப்படுத்திக்கொள்ளவா பார்க்கிறாய்? நல்லது நீ எங்களுக்குப் பலியாவதுபோய், கலியாணமா கேட்கிறாய்? உனக்கு விதி கிழிந்ததால் இக் கருத்துத் தோன்றிற்று. இதோ உன்னை யமபுரத்

துக்கு அனுப்பி உன் தசைகளைப் புசிக்கிறோம் பார்" என்று தன் பலங்கொண்ட மட்டும் ஓங்கி யடிக்க வந்தான்.

பீமன் புன்னகைகொண்டு, "அடா! நாம் சும்மாவிருக்க நம் மேல் வீண்வழக்கிட்டுப் போருக் கெழுந்தான். இவனை விடக் கூடாது" என்று எழுந்து தன் பலங்கொண்டமட்டும் இரண்டு கரங்களாலுங் கன்னத்திற் குத்தினான். அக்குத்தின விடும்பனுக்கு வாயிலுள்ள பற்களெல்லாம் பலபலவென்று விழுந்து, தொண்டை நெரிந்து, மண்டை கலங்கிற்று. இடும்பாசுரன் சற்று நிதானித்து, "அப்பா! நாம் இத்தகைய அடி பட்டதில்லை. நாம் இக்காட்டிலிருந்து அநேக நரஜன்மங்களைப் புசித்தோம். நம்மைக் கண்ட நரரெல்லாம் கடகடத்து விலவிலத்து உயிர் சோர்வார்கள். இந்நரன் நமது உக்கிரத்தைக் கண்டும், அஞ்சா தைரியத்துடன் எதிர் நின்றது மன்றி, நம்மையும் பல்லுதிர அடித்தான். இனி இவனுக்குத் திரிமூர்த்திகள் துணை வந்தபோதிலும் இவனைக் கொல்லாமல் விடலாகாது" என்று மனதில் நினைத்து வடவானலத்தை நேத்திரத்திற் காட்டிப் பர்வதம் கால்கொண்டு நடந்து வருவதுபோல் பீமனுக்கு எதிர் வந்து நின்று, தன் கையால் ஓர் அறை அறைந்தான். பீமன் அவ்வடியைத் தட்டி, அவனைப் பிடித்து ஆகாயத்தில் எறிந்தான். இப்படி ஒருவரையொருவர் வாரியெறிகிறதும் மோதுகிறதுமாக இருக்கும்போது, நித்திரை செய்திருந்த ஐவரும் விழித்துக்கொண்டு பார்த்தார்கள். நகரத்திற் படுத்திருந்த ஞாபகமே அதிகமாகக் கொண்டிருக்கிறவ ராதலால், நாலு திசையையும் பார்த்து திடுக்கிட்டு மனநடுங்கி, "ஆ! ஆ! கொடிய வனத்தில் வரவேண்டிய காரணமென்ன? வந்த விடத்து பீமனுடன் யமனைப்போற் காத்திரமான யாரோ ஒரு வீரன் யுத்தஞ் செய்கிறான். இதென்ன ஆச்சரியம்?" என்று திகைத்துப் பலவாறு நினைத்துக்கொண் டிருக்கையில், இங்கே பீமனும் இடும்பனும் ஒருவரை ஒருவர் வெற்றிபெற வேண்டுமென்கிற ஆசையினால் குத்தியும், தட்டியும், உதைத்தும், மிதித்தும், தூக்கியும், தாக்கியும், அடித்தும், கடித்தும், ஒரு முகூர்த்தம் வரையிற் போராடி; முடிவில் பீமன் அதிக உக்கிரங் கொண்டு, "இந்த ராக்ஷதப் பையலோடு இன்னுமா போராடுவது?" என்று நினைத்துக் கோபத்தீ ஜொலிக்க எழும்பி, இடும்பனைப் பிடித்துத் தூக்கிப் பூமியில்மோதி, காலைப்பற்றி இரு பிளவாகக் கிழித்தெறிந்து, மஹாவுக்கிரத்தோடு "இன்னும் அரக்கர்கள் இருக்கிறார்களா" என்று கர்ச்சனை யிட்டான்.

## பீமன் இடும்பியை மணத்தல்

இடும்பி தமைய னிறந்ததை நோக்கிக் கிஞ்சித்து வருத்த மடைந்தவளா யிருந்தாலும், பீமன் வல்லமைக்கு அதிக மகிழ்ச்சி கொண்டு, முன்னிருந்த அன்பைவிட எண்மடங் கதிகமான ஆசைவைத்துத் தன்னெண்ணம் எவ்வாறு நிறைவேறப்போகிற தென்னு மேக்கத்தைக் கொண்டவளாய் குந்திதேவியின் பாதத் திற் போய் விழுந்து வணங்கினாள். குந்திதேவி வணங்கிய அரக் கியைப் பார்த்து, "அம்மா! நீ யார்? என்னை வணங்கவேண்டிய காரண மென்ன?" என்று வினவ, இடும்பி பீமன்மேற் கொண்டி ருக்கிற காதலைத் தெரிவித்து "ஓ மாமி! இவ்வனத்தில் நான் நெடு நாளாக இருக்கிறேன். என் கருத்துக்கிசைந்த கணவன் வரவில்லை. தற்போது என் கருத்துக்கினிய கணவர் உன் புத்திரரேயல்லாமல் வேறொருவ ரில்லை. என்னை அந்த மஹாபுருஷர் ஏற்றுக்கொள்ளும் படி நீர் கிருபைபுரியவேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால் உங் கள் முன்னிலையில் என் பிராணனை விட்டுவிடுகிறேன்" என்றாள். குந்திதேவி மனங்கலங்கித் தருமராஜனைநோக்கி, "அப்பா தரும நந்தனா! இதோ நிற்கின்றமாது நமது பீமன்மீது அடங்கா காதல் கொண்டு தன்னை ஏற்றுக்கொண்டால் நலமென்றும் இல்லா விட்டால் தன் பிராணனை விட்டுவிடுகிறேனென்றும் காலில் விழுந்து முறையிடுகிறாள். வலிய வருகிற சீதேவியை ஏன் காலா லுதைத்துத் தள்ளவேண்டும்? அவளெண்ணப்படி இசைவிப்பது நன்மை" என்றாள். தருமராஜன் இடும்பியைப்பார்த்து, "ஓ பெண்பாவாய்! நீயோ அசுரச்சாதி. இவனோ நரன். உங்களிரு வருக்கும் பொருத்த மிராதே; இதற்கென்ன செய்வது" என்று கேட்க, இடும்பி "ஓ புண்ணிய மூர்த்தி; அசுரச் சாதிக்கும் மானி டச் சாதிக்கும் தேகபேதம் ஒன்றுதவிர, சுக்கில சுரோணித பேத மில்லை. முன்னம் விடபன்ம னென்கிற அசுரன் புத்திரியாகிய சன் மிஷ்டையை யயாதிமஹாராஜன் காந்தர்வமணம் புரிந்து சிங்கார வனத்திற் கூடினான். அவள் வயிற்றிற் பிறந்த பூரூரவென்பவனுடைய கால்வழிதானே சந்திரவமிசம். ஓ தருமாத்மாவே! நானே என் வல் லமையைத் தெரிவிக்கக் கூடாது. ஒருவன் தன் ஆற்றலை யறியாதாரி டத்துக் கூறவேண்டுமென்று விதி யிருக்கிறபடியால், இரண்டொரு சொல்லில் என் திறமையைத் தெரிவிக்கிறேன். இந்த மூன்று லோகத்தையும் அரைநொடியிற் சுற்றி வருவேன். அவனுற்ற பொருள் களைக்கேட்டால் அதனையுங் கொணர்ந்து கொடுப்பேன். இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலமாகிய மூன்றையுஞ் சொல்லுவேன்.

ஆதலால் என்னை அங்கீகாரஞ்செய்யும்படியாய் அந்த மஹாபுருஷருக்குத் தெரிவியுங்கள்" என்று செப்பினுள். தருமர் இடும்பியை நோக்கி "ஓ பெண்மணி! இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலங் கண்டு முன்னதாய்ச் சொல்லுவேனென் றுரைத்தாயே, எங்கட்குமுன் னடந்ததும் உதயத்தில் நடக்கப்போவதையுஞ் சொல்" என்ருர். இடும்பி "ஐயனே! உமக்குத் திரிதராஷ்டிரன் இளவரசுப்பட்டங் கொடுத்ததற்காகத், துரியோதனன் பொருமை கொண்டு, தந்தையிடத்து முறையிட்டு உம்மை வாரணுவதத்துக் கனுப்பச்செய்து, நீங்கள் அவ்விடத்தில் வந்த பின்பு மிக்க உருக்கமுள்ளவனைப் போற், கனகனென்கிற சிற்பியையும் புரோசனன் என்கிற மந்திரியையுங் கொண்டு பஞ்சு-எண்ணெய்-அரக்கு-மெழுக்கு - அழிஞ்சில்மரம் - இவற்ருல் ஒரு மாளிகை இயற்றி, அதற்கு அக்கினிமூலையிற் சரவத்திவைத்து உங்களைச் சாம்பராக்க ஒரு நாள் நியமித்திருந்தான். கனகனென்கிற சிற்பியை உங்கள் சிறியதந்தை விதுரன் கண்டு, வாரணுவதத்தில் என்ன வேலைசெய்கிருய் யென்று கேட்டறிந்து மிகவருத்தமடைந்து, அத்தீங்கினின்றுந் தப்பி வெளிப்படுவதற்காக வைத்த சுரங்கத்தை உங்களுக்குச் சொல்லச் சொல்லிவிடுத்தார். அந்தக் கனகன் அரக்குமாளிகையின் சூழ்ச்சியை இதோ யிருக்கிற மஹாபுருஷருக் குணர்த்த, இந்தக் கனவான் துரியோதனன் நியமித்த முகூர்த்தத்திற் சரவத்திக்கு நெருப்பு வைத்து, உங்களை யெடுத்துக்கொண்டு சுரங்கத்தின் வழியாக வந்து, இக்காட்டில் படுக்கவைத்து உங்களுக்கு நித்திரை பங்கம் வராமற் காவலிருந்தார். இவ்வனத்தில் நெடுநாளாக எதிரில்லாமல் வாழ்ந்த நான் வந்து இந்தச் சுந்தரன்மேல் மையலானேன். என் கருத்தை இடும்ப னறிந்து இவரை யெதிர்க்க, இந்த வச்சிரதேகர் அவனை வெற்றிகொண்டார். இவையெல்லாம் காலகதி. இதற்காக நீங்கள் வருத்தப் படாதீர்கள். இந்த மணவாளருக்குச் சங்கதி தெரிந்திருந்தும் உங்களுடன் சொல்லா திருந்ததற்குக் காரண மென்னவெனில், உயிருதவி செய்த கனகன் உங்களுடன் சொல்ல வேண்டாமென்று கேட்டுக் கொண்டான். அவனுக்குத் தான் கொடுத்த வாக்கின்படி சொல்லா திருந்தார். இனி உதயத்தில் திவ்யக்கியான சொரூபியாகிய வேதவியாசரைக் கண்டு தரிசிப்பீர்கள்" என்ருள்.

இவைகளை யெல்லாந் தருமராஜன் கேட்டு ஆச்சரியப்பட்டு, வேதவியாசரைக் காண்பீர்களென்று இடும்பி சொன்னதைச்

சோதிக்க வேண்டுமென்று நினைத்தார். அப்போது இதுவரையிலும் நரமாமிசத்தைத் தின்று கொழுப்பேறியிருந்த இடிம்பாசுரன் மாமிசத்தை, விலங்கினம் பறவை முதலியவை புசிக்கத் திருவிளக்கிட்டதுபோற் சூரியன் உதயமாயினான். இடிம்பி தருமராஜனை நோக்கி "ஓ மூத்தவரே! ஸ்திரீகளென்றால் எல்லாரும் ஸ்திரீகளல்ல; கற்புடைமைபெற்று விளங்குகிறவள் எவளோ அவளைத்தான் பெண்ணெனப்படும். என்னை அரக்கியென்று இலேசாய் நினைக்க வேண்டியதில்லை. என் மனவுறுதியும், நன்னிலையும், அநுபோகத்தில் விளங்கும்" என்று கூறினாள். தருமராஜன் பீமனையழைத்து, "ஓ தம்பி பீமா! இதோயிருக்கிற கன்னிகை குலத்தில் மாத்திரம் அரக்கியல்லது, மற்றக் குணாதிசயத்திற் கமலையை நிகர்த்தவள். சேற்றிற் செங்கழுநீர் மலரும். நிலத்திற் பொன் முதலியனவுமுண்டாகின்றன. நாம் அவைகளை நிந்தித்து நீக்காமல் அங்கீகாரஞ் செய்வதுபோல், என்வாக்கைத் தள்ளாமல் இந்தக் கன்னிகையை ஆதரித்துக் கொள்" என்று கட்டளையிட்டார். மற்ற மூன்று தம்பிமார்களும் தருமராஜன் வாக்கை அநுசரித்துச் சொன்னார்கள். பீமன் தமையன் வாக்கியத்தை வேதவாக்கியமாகக் கொண்டு, தம்பிமாருந் தாயுங் களிக்க அவளை அங்கீகாரஞ் செய்தான்.

---

## பாண்டவர் வேதவியாசரால் மந்திரோபதேசம் பெறல்

---

உடனே ஐவருங் குந்தியும் எழுந்து நித்தியக் கடனை முடிக்க ஜலத்தைத் தேடிக்கொண்டு புறப்பட்டார்கள். அங்கு ஒரு திவ்விய நதி தோன்றிற்று. அந்நதியைக் கண்டு யாவரும் அதிலிறங்கினார்கள். அந்நதி வியாசரால் நியமிக்கப்பட்டதாகையால், அந்நதியில் யார்வந்து கால்வைத்த போதிலும் அவர்களுக்கு வேதவியாசர் தரிசனம் கிடைக்கும். அந்நதியிற் பாண்டவர்கள் கால் வைத்த மாத்திரத்தில் அவர்களுக்கு இடிம்பி சொற்படி வேதவியாசர் தோன்றினார். உடனே ஐவரும் வணங்கி, ஓரிடத்திற் கொன்றைத்தழை முதலியவற்றால் ஆசனஞ் செய்து அமைத்து எழுந்தருளச்செய்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து நின்றார்கள். வேதவியார் ஐவருக்கும் பல ஆசிகூறி, குந்திதேவியை ஆதரணை செய்து, தருமராஜனை நோக்கி "அப்பா தருமநந்தனா!

இதோ நிற்கிறவள் இடிம்பனுடன் பிறந்த இடிம்பி. இவள் மிகுந்த கற்புடையவள். மேலும் ஒருநாள் இந்நதியில் விடாய்ப் பட்டுச் சலமருந்தி ஸ்நானஞ் செய்தாள். இந்நதி என்னு லுண் டாக்கப்பட்ட தாகையால், நான் இதில் யார்வந்து ஸ்நானஞ் செய்த போதிலும் அவர்களுக்கு அதிக வல்லமையையும் இஷ்டகாமியத் தையும் கொடுக்கிறேனென்று வாக்குத்தத்தஞ் செய்திருந்தேன். இவள் ஸ்நானஞ்செய்யவே யான் தரிசனமானேன். இவள் நமஸ் கரித்து நின்றாள். இவளுக்கு யான் அதிக வல்லமையைக் கொடுத் ததுவுமன்றி, இஷ்டகாமியத்தையும் நீ யடையக் கடவதென்று வரங்கொடுத் திருக்கிறேன். இவள் இடிம்பனைவிட அதிக வல் லமையை யுடையவள். இவள் காலகதியால் பீமன்மேல் மோகித் தாள். நீங்கள் இவளுக்கு விரோதந் தேடாமல் காந்தருவ மணம் புரிந்து, இதோயிருக்கிற சாலிகோத்திர வனத்திற் சிலநா ளிருந்து, ஏகசக்கரவனத்தி லிருக்கும் வேத்திரகீயத்திற் போயிருங்கள்" என்று கட்டளையிட்டு, "இதோ நானொரு மந்திரோபதேசஞ் செய் கிறேன். அதனை உச்சரிப்பீர்களானால் உங்களுக்கு வேதியருருவம் வரும். எந்தவேளையில் அவ்வுருவம் நீங்கவேண்டுமோ அந்த வேளையில் அவ்வுருவம் நீங்கும்" என்று ஒரு மந்திரத்தை உபதே சித்து, அந்தரத்தானமாகி மறைந்தார். அதனைப் பெற்றுக்கொண்ட ஐவரும் குந்திதேவியும் சாலிகோத்திரமுனிவனத்திற் சென்று, அங்கோரிடத்திற் பர்னசாலை யியற்றி அதிலிருந்தார்கள்.

---

## கடோர்க்கஜன் உற்பவம்

---

இவ்வாறாக பீமன் கமலக்கன்னியுடன் கூடிக் காட்டிற்குச் சென்று, தேன் - கனி - கிழங்கு முதலியவற்றைக் கொண்டுவந்து, தமையனுக்கும் தம்பிமார்களுக்கும் அன்னைக்குங் கொடுத்து, இர வில் மிகுந்த ஜாக்கிரதையோடு காவலிருந்து காத்துவருங் காலத் திற் குந்திதேவி பீமனை அழைத்து, "அப்பா மகனே! இரவும் பக லும் எங்களூழியத்தி லிருக்கிறாயே, உன்மேல் இச்சைகொண்டு வந்த கமலக்கன்னியின் கருத்து மகிழ்வெய்துவ தெக்காலம்? நீ இன்று முதல் இரவில்மாத்திரம் எங்களுக்குக் காவலிரு மற்றவேளையில் நீ யவளுடன் சுகித்திரு" என்று சொன்னாள். தாய் சொற்படி அன்று முதல் பீமன் கமலக்கன்னியோடு கூடிக் குலாவிக்கொண்டு, அன்னை, தம்பியர் தமையன் இவர்களையும் பாதுகாத்து வந்தான். இப்படிச்

சிலநாட் சென்றபின்பு பீமன் வீரியவிர்த்தியாற் கமலக்கன்னி கருப்பந் தரித்து, கால அளவையில் ஒரு புத்திரனைப் பெற்ருள். அப்புத்திரன் பிறந்தவுடன் ஆகாயவாணி "கடோர்க்கஜனென்று பெயரிடுமின்" என்ன, அவர்கள் அவ்வாறே பெயரிட்டு அப்புத்திரனை வளர்த்து வந்தார்கள். அப்புத்திரன் பிறந்தவுடன் தாயையும் ஐந்து பிதாக்களையும் குந்திதேவியையும் வணங்கி "ஓ என்னருமைப் பெரியோர்களே! எனக்கும் என்னன்னைக்கும் விடைகொடுத்தருளுங்கள். என் அம்மான் அரசு பாழடைந்திருக்கின்றது. நான் அங்குச்சென்று அரசுசெலுத்தி வருகிறேன். தாங்கள் எப்போது நினைக்கிறீர்களோ அப்போது உடனே வந்தடைகிறேன்" என்று இயம்பினன். ஐவரும் அப்புத்திரன் கருத்துக் கிசைந்து விடை கொடுத்தார்கள். புத்திரனும் தாயும் அவர்களைப் பிரிய மனமில்லாமல் காலக்கதியால் அம்மானிருந்த இடத்துக்கு வந்து, அந்த ஆதீனத்தைத் தங்கள்வச மாக்கிக் கொண்டு சுகமாக வாழ்ந்திருந்தார்கள். பிறந்த சிசுப் பேசுமாவென்ருற் சொல்லுகிறேன் கேளும், ஓ ஜனமே ஜய மஹாராஜனே! இராக்ஷசகுலம் உற்பத்தியான காலத்திற் பிறந்தவுடனே சிசு பேசும்படி திசைமுகன் வரங்கொடுத் திருக்கிருர். அதனல் தான் நாளைய வரையில் இராக்ஷசப் பிண்டங்கள் பிறந்தபோதே பேசி வருகிறது" என்று பின்னுஞ் சொல்லுகிருர்.

---

## பாண்டவர் வேத்திரகீயமடைதல்

---

கேளும் மஹாராஜனே! பாண்டவர்கள் சாலிஹோத்திர முனிவர் வனத்திற் பர்னசாலையொன் றியற்றி, அவ்வனத்தி லிருக்கும் சாலிஹோத்திர முனிவரைக் கண்டு வணங்கித் துதித்தார்கள். சாலிஹோத்திர முனிவர் ஐவரையும் குந்திதேவியையும் நோக்கிப் பல ஆசிகள் கூறினர். ஐவரும் அவரிடத்தி லிருந்து, நன்னெறிக் கேதுவாகிய பல மந்திரங்களையும் வேறுதர்மங்களையுங் கேட்டுக்கொண்டு, அவ்விடத்திற் சிலநா ளிருந்து, அப்பால் அவரிடத்தில் விடைபெற்று வேதவியாசர் கூறிய மந்திரத்தை யுச்சரித்தனர். உடனே பாண்டவரும் குந்திதேவியும் பிராமண அதிதி வேடத்தைப் பெற்று வேத்திரகீயம் போய்ச் சேர்ந்தார்கள். அவ் வேத்திரகீயத்தில் மூந்நூற்றுமங்கல மென்னுங் கிராம அக்கராரத்தி லிருக்கிற வேதியர்கள் அதிதிகளைக் கண்டால் ஒப்பற்ற தெய்வத்தைக் கண்டதுபோல் மிகுந்த அன்புடனெதிர்வந்து மரியாதை

யுடன் உபசரித்தல் வழக்கமாதலால், இவர்களைக் கண்டமாத்திரத்தில் மிகுந்த காதலோடு அழைத்துப்போய் அவரவர்கள் கருத்தின்படி விருந்திட்டார்கள். அப்பிராமணர்களில் முதிர்ந்த வயதுடையவராயும், வேதாகமங்களில் தேர்ந்தவராயும், ஒரேபுத்திரனை யுடையவராயு மிருந்த தர்மமுனி என்கிற ஒரு வைதீகப்பிராமணர், இந்த ஐவரையும் குந்திதேவியையு மழைத்துப்போய்த் தம் வீட்டில் வைத்துக் கொண்டு அவர்களுக்குத் தேன் - கனி - பலகாரம் - அறுசுவை யுண்டி முதலியவற்றை யுதவி, பிதாவைப்போற் பாதுகாத்து வந்தார். இந்த ஐவரும் அந்த வேதியரைப் பிதாவைப்போலெண்ணி, மிகுந்த பத்தியோடு நடந்து வந்தார்கள். இப்படியிருக்குங் காலத்தில் அந்நகரத்து வேதியர்களெல்லாம் ஏகசக்கரவனத்தி லிருக்கும் பகாசுரனுக்கு ஐம்பது ஏர்கட்டிய வண்டியில் நிறைய அன்னமும், அதற்குத் தகுந்த கறி காய்களும், நெய் - தயிர் - பலகார வகைகளு மிட்டு, அதனுடன் ஒரு மனிதனையு மனுப்புவது வழக்கம். பகாசுரன் அவ்வண்டியிலுள்ள அன்னத்தையும் நரனையும் புசித்து விடுவான்.

இப்படி வீடுகளின் விகிதப்படி பகாசுரனுக்கு விருந்திட்டு வருகிறமுறை, இந்த ஐவரையும் பரிவுடன் காத்துவரும் வேதியருக்கு வந்தது. அந்த வேதியருக்கு ஒரே புத்திரன்தா னிருந்தான். அவ்வேதியன் மனைவி, "இன்று நமது புத்திரனைப் பகாசுரனுக் கிரையாக அனுப்பிவைக்கப் போகிறோமே, ஐயோ! தெய்வமே! வேறு ஆதரவில்லையே, என்ன செய்வேன்? அனுப்பாமலிருந்தால் மஹா பாதகனாகிய பகாசுரன் நகரத்திற் பிரவேசித்து, அக்கிராரத்தி லுள்ளவரை யெல்லாம் கொன்று விடுவானே" என்று உள்ளறையில் தலைவிரிகோலமாக உட்கார்ந்து அழுது கொண்டிருந்தாள். குந்திதேவி அந்தப் பார்ப்பனியிடத்து மிகுந்த அன்பு வைத்திருந்தவளாதலால் அவளை நெடுநேரமாகக் காணாமையால் உள்ளே சென்றாள். உடனே பார்ப்பனியைக்கண்டு திடுக்கிட்டு அருகிற்சென்று அந்த அம்மனைப் பார்த்து, "ஓ அம்மணி! நாங்களிவ்விடத்திற்கு வந்தநாள் முதல் இன்றுவரையிலு மித்தகையான வருத்தப்படுவ்தா யிருந்தால் என் மனங் கல்லா? தங்கள் கருத்திற் குடிகொண் டிருக்கும் துயரத்தைத் தெரிவித்தால் எங்களாலியன்றவரையில் நீக்க முயலுகிறோம்" என்று பலவாறு மிகுந்த ஆறுமையோடு வினவ, பார்ப்பனி அழுவதை நிறுத்திக் குந்திதேவியை நோக்கி, "ஓ அம்மணி! நான் துயரப்படுகிற காரணத்தைச்

சொல்லுகிறேன் கேள். இந்நகரம் ஏகசக்கிர வனத்தைச் சேர்ந்தது. இதனைச்சீர்திருத்திப் பெரிய அக்கராரமாக்கி இதில் வேதியர்கள் குடி வந்திருந்தார்கள். இப்படியிருக்கிற காலத்தில் இந்த ஏகசக்கிரவனத்திற் பகாசுரனென்று பெயர்வகித்த ஒரு அசுரன் வந்து சேர்ந்து, இந்த அக்காரரத்தைக் கண்டு பிடித்து, தினம் தினம் பிரவேசித்து, ஆடு மாடு முதலியவற்றைப் பிடுங்கித் தின்பதும் போதாமல் வேதியரையும் புசிக்க ஆரம்பித்தான்.

அது கண்டு வேதியர்களெல்லாரும் மெய் நடுங்கிக் கலங்கி, அந்தப் பகாசுரன் அடிமேல் விழுந்து முறையிட்டு ஒருவாக்குத் தத்தங் கேட்டார்கள். அஃதென்னெனில் "ஓ அசுரேந்திரா! தினந்தோறும் வந்து எங்களைப் புசித்துப் போவதில் உனக்கு லாபமென்ன? நீ எங்களை வருத்தப்படுத்தாமலிருந்தால் உன்னையே குலதெய்வமாகப் பாவித்து, இந்த அக்கராரத்திலிருக்கிற (340) தலைக்கட்டும் தினம்தினம் உன் பசிக்கு அன்னமும் ஒரு நரபலியுங் கொடுக்கிறோம். இதற்கொத்துக் கொள்ள வேண்டும்" என்று பலவாறு வேண்ட, அந்தப் பகாசுரன் அதற்கிசைந்தான். அன்று முதல் அந்தப் பகாசுரனுக்கு முன்னஞ் சொல்லிய வண்ணம் அன்னமும் நரபலியும் அனுப்பிவருவது வழக்கம். இன்று அனுப்ப வேண்டியது எங்கள் கடமையாகையால், என் கணவனோ தளர்ந்த வயதை யுடையவர் புத்திரனோ அருமையான தவஞ் செய்து பெற்ற ஒருவன். அப்புத்திரனைப் பகாசுரனுக்குப் பலியாக்கிவிடுகிறதென்றால் என் மனந் துணியவில்லை. பெற்றவயிறு பற்றி எரிகின்றது. நான் சும்மாயிருந்தாலும் என்னுடல் பதைக்கின்றது. இதை நினைத்தால் நெஞ்சுலர்ந்து நா வறண்டுவிடுகிறது. உயிருடன் பறிகொடுக்கச் சகலமுந் துறந்த சந்நியாசியுஞ் சகிப்பார்களோ? அதற்காகத்தான் நான் துயரப்படுகிறேன்" என்றலறினாள். இதைக்கேட்ட குந்திதேவி இருசெவியிலுங் கரத்தை வைத்து மூடி, "ஹரிஹரி! நாராயணா! பக்தரக்ஷகா! பரமதயாளா! ஓ சுவாமி இதுவரையில் இந்தப் பார்ப்பனி சொன்னதைப் போன்ற துயரங் கேட்டதில்லையே. இன்றையத்தினம் இதைக் கேட்கும்படி நேரிட்டதே. இனி நானென்ன செய்யப்போகிறேன்? இவள் படுந்துயரமோ என்னால் சொல்ல முடியவில்லை. இதற்கென்ன செய்யலாம்" என்று கடவுளை நினைத்து வருந்தி ஒருவாறுதத் தேறித் துணிவுகொண்டு, அந்தப் பார்ப்பனியருகி லுட்கார்ந்து

அவள் கண்ணீரைத் துடைத்து, "தாயே! வருத்தப்படாதே! எனக்கு ஐந்து புத்திரர்க ளிருக்கிறார்கள். அவர்களில் ஒருவனை அனுப்புகிறேன். நீர் சஞ்சலப்படாமல் அந்தப் பகாசுரனுக்கு அனுப்பவேண்டிய வழக்கப் பிரகாரம் அன்னம் - கறிகாய் முதலியவற்றைச் சேகரியுங்கள்" என்றாள்.

அந்தப் பார்ப்பனி இவ்வசனத்தைக் கேட்ட மாத்திரத்தில் முன்கொண்ட வருத்தத்தைவிட எண்மடங் கதிகமான வருத்தமுடையவளாகி, குந்திதேவியை நோக்கி, "ஓ தருமதேவதையே! நீரிப்போது வழங்கிய சொல் என்னை வருத்துகின்றதே! உமது புத்திரனை நான் எவ்வாறு அனுப்பத் துணிவேன்? ஏனென்றால்; உலகத்தில் எவ்வளவு பொருளைச் சம்பாதித்த போதிலும், பொருள்மேற் பொருள்தேடக் கருத்துண்டாகும். அதுபோல் எத்தனை புத்திரர்களைப் பெற்றாலும், இன்னும் புத்திரர்களைப் பெறவேண்டு மென்று விருப்பங் கொள்வதுமல்லாமல், ஒரு புத்திரனுக்கு யாதொரு கெடுதியாவது உயிர்ச்சேதமாவது நேரிட்டால், அக்காலத்து நமக்குப் பல பிள்ளைகளிருக்கின்றனவே அதில் ஒரு பிள்ளை போனாற் போகட்டுமென்று சும்மாயிருப்பார்களா? ஒரு புத்திரனைப் பெற்றவர்களுக்குப் புத்திர அபேக்ஷை குறைவு. பல பிள்ளைகளைப் பெற்றவர்களுக்குப் புத்திர அபேக்ஷை அதிகம். அதிலும் அன்னியராகிய எனக்காக நீர் உமது புத்திரனை உயிருடன் பலி கொடுக்கத் துணிவு கொண்டாலும் உமது வயிறு குழம்பும். மன நடுக்கமு முண்டாம். ஓ புண்ணியசீலி! பொன்னல்ல பொருளல்ல பூமியல்ல வஸ்திரமல்ல இன்னுமுண்டான மற்றவஸ்துக்களல்ல. பத்து மாதஞ் சுமந்தும் வருந்தியும் நொந்தும் பெற்றெடுத்த புத்திரனை நீர் யனுப்புகிறேனென்றால், யார்தான் சம்மதிப்பார்கள்?" என்று மறுத்தாள். குந்திதேவி மனந் தளர்ந்து, "ஆ! ஆ! இந்தப் பார்ப்பனியம்மன் கருத்து என்ன பரிசுத்தமாயிருக்கின்றது. கட்டாயம் இந்த அம்மன்மனங் களிக்கச் செய்யவேண்டும்" என்று தீர்மானித்து, "ஓ தருமமுதல்வி! நீரேன் சந்தேகப் படுகிறீர்? என் புத்திரர் ஐவரிற் கறுத்த தேகத்தோடுங் கூடிய சிறுவனை அனுப்புகிறேன். அவனால் அந்தப் பகாசுரன் அதமாவான். அதற்கு யாதொரு சந்தேகமு மில்லை. அப்படி ஒருவேளை அந்தப் பகாசுரன் கையிலகப்பட்டு இறந்து விடுவானானால், காலகதியென்று, தீர்மானித்துக் கொள்ளுகிறேன். நீர் தடுத்தும் நான் உம்மை கேட்டுக் கொள்ளுகிறதற்குக் காரண மென்னவென்

ஞல், வருத்தப்படுகிறவரைக் கண்டும், அவர்கள் துன்பத்தைக் கேட்டும், சும்மா விருக்கலாகாது. ஆதலால் என் கருத்தின்படி நடத்துங்கள்" என்று தொழுதாள்.

பார்ப்பனி குந்திதேவியின் மனவுறுதியை முகக் குறிப்பிஞலறிந்து, "இந்த அம்மன் சொல்லும் தைரியத்தையும் உறுதியையும் நோக்கிஞல், நமக்கு ஏதோ கிஞ்சித்து நலம்வருகிறதாகத்தான் தோன்றுகிறது" என்று தீர்மானித்து, குந்திதேவியின் எண்ணத்துக் கிசைந்து "ஓ அன்னையே! நல்லது - இனி ஆகவேண்டிய காரியங் கட்கு யத்தனப்படுத்துகிறேன். உமதிஷ்டப்படியே உமது பிள்ளையை அனுப்பும்" என்று கூறிச் சமையற் செய்வதற்குத் தன் சுற்றத்தாரை அழைத்தனுப்பிஞள். இதற்குள் ஸ்நானத்துக்குச் சென்ற அவள் கணவனும் வந்தான். பார்ப்பனி தன் கணவனுக்கு நமஸ்காரஞ்செய்து, தான் வருத்தப்பட்டது முதற் குந்திதேவி புத்திரனை அனுப்புகிறேனென்று உடன்பட்ட வரையில் சொன்ஞள். வேதியஞகிய தர்ம முனிவர் ஒருவாறாக மனமிசைந்து, நல்லது "நீ சமையற் செய்" என்று கட்டளை யிட்டார். பார்ப்பனி வந்த சுற்றத்தாரை வைத்துக்கொண்டு, காய்வகைக் கறிகளும் - கனிவகைக் கறிகளும் - இலைவகைக் கறிகளும் - இதழ்வகைக் கறிகளும் - மூலவகைக் கறிகளும் - கிளைவகைக் கறிகளும் - மரவகைக் கறிகளும் - மதுவகைக் கறிகளும் - தயிர்வகைக் கறிகளும் - தாளவகைக் கறிகளும் - பால்வகைக் கறிகளும் - பலவகைக் கறிகளும் — சமைத்து மலைபோல் அன்னமும் வடித்துக் கொட்டி, அதற்குத் தகுந்த பருப்பு - நெய் - பணியாரம் - தயிர் முதலானவைகளைச் சேகரித்துச் சித்தமாபிருந்தாள்.

## பகாசுரன் வதை

இப்பால் குந்திதேவி பார்ப்பனியிடத்து விடை பெற்றுத் தன் மக்கள்பாற் சென்று, தருமராஜனை நோக்கி, "ஓ மைந்தனே! நம்மை ஆதரித்து வருகிற வேதியர் வீட்டிற்குட் சென்றேன். அவ்வேதியர் மனைவி வருத்தத்தோடழுதுகொண்டிருந்தாள். நான் அவளை, நீ யேன் வருத்தப்படுகிருய் என்று கேட்டேன். அந்தப் பார்ப்பனி என்னைப் பார்த்து, 'ஓ இரக்கமுள்ள மாதாவே! இந்த மூன்றாறு மங்கலத்தில் ஓர் அசுரன் பிரவேசித்து வேதியரை

யெல்லாங் கொன்று தின்று வந்ததால், அவனிடம் இந்நகரத்தார் நாள்தோறும் ஒரு நரபலியும் விருந்து மிடுகிறோமென்று ஒப்புக் கொண்டு அதன்படி நடத்துகிறார்கள். இன்றையத் தினம் எங்கள் முறையாதலால் அந்த அசுரனுக்கு நாங்கள் விருந்திடப் போகிறோம். அவனுக்கு நரபலியாக என் பிள்ளையை அனுப்பவேண்டும். அதற்காகத் துயரப்படுகிறேன்" என்றாள். அம் மொழியைக் கேட்டவுடன் மனந்தாளாமல், நமது பீமனை அனுப்புகிறேனென்று வாக்குக்கொடுத்து வந்தேன். என் வாக்குக்குப் பழுதுவராமல் பீமனை அனுப்புவிக்க வேண்டும்" என்று மெத்தவும் நைந்து புகன்றாள். அதைக்கேட்ட தருமராஜன் தாயை வணங்கி, "அன்னையே! துயரமுற்றோரைக் கண்டால், அத் துயரம் நீங்கத் தன்னாற் கூடியமட்டும் உபகாரஞ் செய்யவேண்டு மென்று நீங்கள் வாக்குத்தத்தங் கொடுத்துவந்தது தகுதிதான். அதற்கு பீமனை அனுப்பிவை யென்று கட்டளையிடுவது என் மன மொத்துக் கொள்ளவில்லை. ஏனென்றால் வாரணாவத நகரத்தில் நூதனமாகப் புதுக்கிய அக்குமாளிகையிலேயே நாமெல்லாம் இறந்து போக நேரிட்டது. அந்த ஆபத்தைத் தப்புவித்துக் காட்டிற் கொண்டுவந்து விட்டான். வந்தவிடத்தில் யமனைப்போல் ஒரு அசுரன் வந்து நம்மைப் புசிக்கவந்தான். அப்போது இந்த பீமன் அவனைக்கொன்று வெற்றிபெற்று நம்மைக் காப்பாற்றினான். உயிருதவி செய்த உயிர் போன்றவனை அனுப்பிவிட்டு நாமென்ன செய்வது? என் மனம் ஒப்பவில்லை" என்று வருந்தினார்.

அதற்குக் குந்திதேவி சிரித்து, "அப்பா தருமநந்தனா! நீயேன் வருத்தப்படுகிறாய்? பீமன் பலத்தை நீ அறியமாட்டாய். பிள்ளையின் திறம் பெற்றவளுக்குத் தெரியும். எப்படி என்றால், நீ ஒன்றரை வருஷத்திய குழந்தை. பீமன் ஐந்து மாதத்துப் பிள்ளை. அக் காலத்தில் உங்கள் தந்தையோடு நாங்களும் ஒரு பெரிய மலைமேலேறி வேடிக்கைப் பார்த்தோம். அங்கே ஒரு சிங்கம் அதிக உக்கிரங்கொண்டு கர்ஜனையிட்டு வந்தது. அது கண்டு உன் தந்தையும் யாங்களும் பயந்தோடினோம். அத் தருணத்தில் எனக்கு அதிக நடுக்கங்கண்டு, கையிலிருந்த பீமனைப் போட்டு விட்டேன். விழுந்தவிடம் பாறைக்கல்லா யிருந்தும், பீமன் பாரத்தைப் பொறுக்காமற் பாறை பிளந்து பொடியாய் நொருங்கியது. இவன் விழுந்த சப்தத்தினால் தூரத்திவந்த சிங்கம் பயந்து பொறிகலங்கி யோடிப்போயிற்று. நானும் உன் சிறிய தாயாரும்

கையைநெறித்துப் பிள்ளை யிறந்தானென்றெண்ணி ஓடிவந்து பார்த்தோம். பீமன் தொட்டிலில் விளையாடுவதைப்போற் கையையுங் காலையு மசைத்துக்கொண் டிருந்தான். உடனே வாரி அணைத்தெடுத்து முத்தமிட்டோம். ஆதலால் உன் தம்பி அதிக பலவான். இடும்பாசுரனுக்கு நடந்த கதியைப் பார்த்தும் இன்னமேன் யோசிக்கிருய்? அப்பனே! நீ சஞ்சலப்படாமல் பீமனை அனுப்பு. அந்தப் பகாசுரனை இவனே கொன்று, இவ்வூரிலுள்ளோ ரெல்லாரும் நெடுநாட் சஞ்சலம் இன்றோடு நீங்கியதென்று கொண்டாடும்படியாக, வருவான்" என்றனள். தருமராஜன் மனந்தேறிப் பீமனைப் பார்த்தார். பீமன் எப்போதெப்போதென்று முன் ஜாக்கிரதையா எழுந்து, தமையன் வாக்கிலிருந்து வரும் உத்தரவுக்கு எதிர்பார்த்திருந்தவனுதலால் விரைவில் வந்து தமையனை வணங்கி நின்றுன். தருமராஜன் பீமனை நோக்கி, "என்னருமைத் தம்பியாகிய பீமா! நீ சென்று அந்தப் பகாசுரனைக் கொன்று வெற்றிகொண்டு வா" என்று வாழ்த்திவிடை கொடுத்தார். அம்மாத்திரத்தில் பீமனுனவன், அன்னை தமையன் தம்பிமார்களிடம் விடை பெற்று, வேதியரிடத்து வந்து வணங்கி, "ஓ சுவாமி! பகாசுரனுக்கு விருந்திடுவது இன்றுதானே? இன்னும் தாமதமென்ன? விரைவில் எனக்குச் சோறுபோட்டு என்னை அனுப்புவியுங்கள்" என்று கூறினுன். வேதியன் பீமனுடைய மன உறுதியைக் கண்டு இந்தக் கரிய பிராமணன் அந்தப் பகாசுரனுக்கு யமனுவான் என்று எண்ணி பீமனை ஆசீர்வதித்து, ஸ்நானஞ் செய்வித்து, சிவப்புப் பூ அக்ஷதை சந்தனம் பூமாலை முதலியவைகளோடு நல்ல வஸ்திராபரணங்களால் அலங்கிரதஞ் செய்து, திருப்தியாய்ப் போஜனமிட்டு, புனுகு கஸ்தூரி கற்பூரம் சவ்வாது குங்குமம் முதலியவைகளைப் பூசி, வாசனைத் தாம்பூலங் கொடுத்து, 50 ஏர் எருமைக்கடாக்களைப் பூட்டும் வண்டியை இழுத்து வந்து, அவ்வண்டியிற் கயிலைமலைபோல் அன்னத்தைக் குவித்தும், அதைச் சூழ்ந்திருக்கிற குன்றுகளைப் போல் சமைத்த பதார்த்தங்களை வைத்து நெய்க்குடம் தயிர்க்குடம் முதலியவற்றை, ஏர்க்காலிற் கட்டி, எருமைக்கடாக்களையும் வண்டியிற் பூட்டி பீமனை அதிலேற்றிவைத்துச் சுற்றத்தாரோடும் சிறுபறை முழக்கோடும் நகர்ப்புறம் வரையிற் கொண்டுவந்து விட்டு, "தெய்வக் கடாக்ஷத்தால் ஒரு திங்கு மில்லாது க்ஷேமகரமாய் வரக்கடவாய்" என்று வாழ்த்தி அனுப்பிவிட்டுத் திரும்பி விட்டார்கள்.

பீமன் 50 ஏர் எருமைக் கடாக்களையும் அதட்டி யோட்டிக் கொண்டு அதிவேகமாக மலையடிவாரத்தருகில் வந்து, அங்கு வருகிற கான்யாற்றின் காலைக்கண்டு சலம் நன்றாயிருப்பதைப் பார்த்து, "அடடா! இந்நீர் பளிங்குபோ லிருக்கின்றது. இவ்வண்டியிற் சாதமும் மற்றவைகளும் தேவாமுதம்போ லிருக்கின்றன. நமக்கோ பசி மேலிடுகிறது. வெண்ணெய்யை வைத்துக்கொண்டு நெய்க்கழ வேண்டிய காரணமென்ன? நாம் உதவியற்ற இராக்ஷதப் பையலுக்கா சோறு கொண்டுபோய்ப் போடுகிறது? நாம் இதனை இங்கேயே புசித்து ஏப்பம் விட்டு விட்டு, அந்தப் பகாசுரன் எங்கிருக்கிறானோ பார்ப்போம்" என்று அவ் வண்டிமுனையி லேறி நின்று பார்த்தான். ஒரு யோசனை தூரத்திற் கப்பால் பகாசுரன் தோன்றினான். அவனைப் பார்த்து "இவன் கெட்டான். நமக் கெவ்வளவு இந்த இராட்சதப் பையல்" என்று அவமதித்தவனாய் வண்டியில் வந்து, 50 ஏர் எருமைக்கடாக்களையும் அவிழ்த்து நீங்கள் எங்காகிலும் போய் பிழைத்துப் போங்கள்" என்று துரத்தி விட்டு, அவ் வண்டியை ஆற்றங்கரை யோரமாக இழுத்து வைத்துக் கொண்டு, பின்பக்கம் வந்து உட்கார்ந்து, இரண்டு கைகளினாலும் உள்ள அன்னத்தை யெல்லாம் திரட்டி விழுங்கி, அப்பாற் கறி முதலியவைகளை ஒன்றாகத் திரட்டி மூன்றுண்டை யாக்கி, இரண்டுண்டையைத் தின்றுவிட்டு மூன்றாம் உண்டையைக் கையிலேந்தினான்.

நமக்கு உணவு வருமென்று வழிபார்த்திருந்த பகாசுரன் "இன்னும் அன்னம் ஏன் வரவில்லை" என்று சந்தேகித்து, வண்டி வரும் வழியை நோக்கி வருகிறபோது வண்டியைக் கண்டு வண்டியி லொன்று மில்லாதிருப்பதை யுணர்ந்து, "அடடா! நமக்குச் சாதங் கொண்டுவந்த வண்டிதா னிது. இதில் உண்டியில்லா திருக்க வேண்டிய காரணமென்ன?" வென்று நாலு திசையையும் நோக்கிப் பார்க்கும்போது, ஒரு திசையில் கால்வாயருகிலிருந்து மொத்தை யடிக்கிற பீமனைப் பார்த்து, "அடடா! நாம் நெடுநாளாக இவ் வனத்திலிருந்து வேதியரால் அனுப்பப்படும் உண்டியைப் புசித்து வந்தோம். நமது பெயரைக் கேட்டால் யமனும் அஞ்சுவான். அப்படியிருக்க, இந்தப் பிராமணப் பையல் நமக்குக் கொண்டுவந்த உண்டியைப் புசிக்கிறான் பார்த்தாயா? ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்? இந்தப் பிராமணப் பையலுக்கு இன்றோடு விதி கிழிந்தது. ஐயையோ! நாமிவனைப் பார்க்கப் பார்க்க உண்கிறானே;" என்று

மஹா உக்கிரங்கொண்டு, அதிவேகமாக அதட்டிக்கொண் டோடி வந்து, பீமன் புஜத்தின் மேல் ஒரு குத்துக் குத்தினன்.

பீமன் அக் குத்தைப் பட்டுக்கொண்டு தன் கையிலிருந்த கறி பதார்த்தத்தைச் சிந்தாமற் புசித்துவிட்டு, அவன் குத்தக்குத்தத் தன் முதுகையுந் தோளையு மாறிமாறிக் காட்டித் தாகமருந்தி, அவனுக்கு மேலுமேலுங் கோபமுண்டாகும்படி சாவதானமாய்க் கைகாற் சுத்திசெய்து கொண்டு, மிகுந்த இறுமாப்புடன் ஏப்பமிட்டு கூறுத்து அறும்பிட்டுவரு மீசையை முறுக்கி, மலைநிமிர்ந்து நிற்பதுபோல் எதிரேவந்து நின்றான். பகாசுரன் இறுமாந்து நிற்கும் பீமனைப் பார்த்து, "இவன் பிரமணப் பையலல்ல. பிராமணப் பையலா யிருப்பானானால் அடிக்கு அஞ்சுவான். நாம் அடித்தும் கிஞ்சித்தேனும் லக்ஷியமில்லாமல் சம்ஹாரகால உருத்திரன்போல் நிற்கிறான். இவனை உயிரோடு விடக்கூடாது. இவனை இந்த விடத்திலேயே கொன்று, கசகசவென்று மென்று தின்றுவிட வேண்டும்" என்று தீர்மானித்துப் பீமனைப் பார்த்து " அடா பிராமணப் பையலே! புலிக்குரிய உணவைப் பூனைப் புசிக்குமா? புசித்தாலும் அதற்குச் செரிக்குமா? அதுபோல் எனக்கு வந்த உணவைப் புசித்தாயே, உன்னை அரைமாத்திரையில் அடித்துக் கொன்று, நீ தின்ற உணவோடு உன் மாமிசத்தையும் புசிக்கிறேன் பார்" என்று, அதிக சினங்கொண்டு, புஜந் தட்டிக் கர்ஜித்தான். அதற்கு பீமன் ஏப்பமிட்டுச் சிரித்து " அடா பகாசுரா! என் வல்லமை உனக்குத் தெரியாது. ஆனால், நான் சொல்லுகிறேன் கேள். "இடும்பனென்று ஒரு அசுரனுண்டு. அவன் வல்லமையை நீயு மறிந்திருப்பாய். அவனை நான் ஒரு முகூர்த்தத்தில் வெற்றிகொண்டேன். நீ எனக்கு எவ்வளவு? 'இவன் நரன். நாம் அசுரன்' என்று என்னை அலக்ஷியமாக எண்ணாதே. உனக்கு வந்த உணவை யெல்லாம் நானொருவன்தான் புசித்தேன். இதனாலே நான் பலவானென்று உனக்குத் தோன்றவில்லையா? இப்பவும் ஒரு தர்மநீதி சொல்லுகிறேன். அஃதியாதெனில்-இன்றுமுதற் பிராமண ருண்டிக் கெதிர் பார்க்காமலும், இவ்வனத்தி லிருக்காமலும், எங்கேயாவது ஓடிப் பிழைத்துப்போ, இல்லாவிட்டால் உன் வல்லமையைக் காட்டி யமலோகம் போ" என்றான்.

பகாசுரன் கோபச் சிரிப்புச் சிரித்துத் திக்குத்திசைகள் நடுங்கக் கர்ஜித்து " அடா பார்ப்பாரப்பையலே! என்ன சொன்னாய்?

இவ் வனத்தைவிட்டு ஓடிப் பிழைக்கவா சொன்னாய்? பேஷ் நன்றாயிருக்கின்றது" என்று இரண்டு புஜத்தையுந் தட்டி உட்கார்ந்தெழும்பி, மஹா உக்கிரத்தோடு பீமனைக் குத்தினான். பீமன் அக் குத்தைக் கையினால் தட்டி, அவன் கன்னத்தில் ஓர் அறை அறைந்தான். அந்த அறை பட்ட மாத்திரத்திற் பகாசுரன் பொறுக்க மாட்டாமல் அதிக சினங்கொண்டு ஓர் மரத்தைப் பிடுங்கி வந்து பீமனை அடித்தான். பீமன் விரைவில் தானும் ஒரு மரத்தைப் பிடுங்கித் தன்மேல் வந்த அடியைத் தட்டிப் பகாசுரனை அடித்தான். பகாசுரன் அந்த அடியைத் தட்டி பீமனைப் புடைத்தான். இவ்வாறு ஒருவரை ஒருவர் வெற்றிபெறவேண்டுமென்கிற விருப்பத்தால் அடித்து ஒடிந்த மரங்கள் அளவில்லை. பின்னும் இருவரும் பல மலைகளைப் பிடுங்கி ஒருவர்மீது ஒருவரெறிந்தார்கள். இம் மலைகள் ஒன்றோடொன்று பட்டுப் பொடிப்பொடியாகப் பூமியிலுதிர்ந்தன. தப்பிவந்து மேல்விழுமானால் அம் மலைகள் பொடியாகின்றதே யன்றி அதனால் இருவர்க்கும் ஒரு வருத்தமு நேரிடுகிறதில்லை. இவ்வாறு சிலநேரம் மரயுத்தமும் மலையுத்தமுஞ் செய்து, பின் மல்யுத்தமுஞ் செய்ய ஆரம்பித்து ஒருவரை ஒருவர் பூமியில் தள்ளுகிறதும், அந்தரத்தி லெறிகிறதும், வாரி அடிக்கிறதும், இந்தப் பிரகாரம் சிலநேரம் போர்செய்து, பின்னும் ஒருவர்க் கொருவ ரிளைக்காமல் தொந்த யுத்தஞ் செய்யத் தலைப்பட்டார்கள். தலையோடு தலையும், நுதலோடு நுதலும், மூக்கோடு மூக்கும், பல்லோடு பல்லும், தோளோடு தோளும், மார்போடு மார்பும், தாளோடு தாளுந் தாங்கி, இடசாரி வலசாரி வலசாரி இடசாரியாகவும் வந்து, தாங்கள் கற்ற வித்தைகளை யெல்லாங் காட்டிப் போராடினார்கள்.

இவ்விருவரும் போராடுவதினால் அவ்வனமெல்லாம் தூளிப் படலமாயிற்று. இப்படி ஒரு ஜாமபரியந்தம் போராடி, முடிவில் பீமன் அதிக வேகங்கொண்டு ஒரு உதை உதைத்தான். அவ்வுதை அவ்வசுரன் விலாவிற்பட்டு விலா வெலும்பு முறிந்தது. உடனே அவன் மற்றொரு உதை உதைத்தான். அவ்வுதை தோளிற்பட்டு தோள் முறிந்தது. பகாசுரன் பீமன் பலத்துக்குச் சரியானவனாகையால், இவ்வுதைகளைப் பெற்றுக்கொண்டும் சும்மாயிருந்தவனல்ல. தன் வல்லமை கொண்டமட்டும் குத்தியும், அடித்தும், உதைத்தும், இடித்தும், மிதித்தும், முட்டியும், தட்டியும், தூக்கியும், தாக்கியும், இவ்வாறு சிலநேரம் போராடினான்.

பகாசுரனுக்கு முடிவுகாலம் சமீபித்தபடியால் வரவரப் பலங் குறைந்து வருவதுமன்றிப் பசி வேதனையாலும் மெய் தளர்ந்து வந்தது. அதனாற் பகாசுரன் திகைத்து மனங்கலங்கி நெஞ்சுலர்ந்து "ஆ! ஆ! இதென்ன விபரீதம்? நெடுநாளாக இந்த வனத்திலிருந்து இவ்வகைப்பட்ட மனிதர் அநேக பெயரை நமது கையினாற் குத்தி ரத்தங் குடித்துத் தின்றிருக்கிறோம். இன்றையத்தினம் இந்தப் பிராமணப் பையலிடத்துச் சிக்கிக்கொண்டு, 'பூனைவா யகப்பட்ட எலியைப்போல்' துன்பப்பட நேரிட்டது. இனியென்ன செய்வது? ஓடிப்போவோ மென்றாலும் காலோய்ந்து போகிறது! நின்று யுத்தஞ் செய்வோமென்றாற் பசியுந்தாகமும் வருத்துகின்றது. இனி நமது விதிப்படி முடியட்டும்" என்று கருதி, ஒரு பெரிய சிங்கத்தைப்போல் ஒரு பாய்ச்சற் பாய்ந்து, மிகுந்த ஆத்திரத்தோடு பீமனைக் குத்தினான். அந்தக் குத்து கோடைகாலத்து இடி இடித்தா லெப்படியோ அப்படி யிருந்தது. பீமனுக்கு வெற்றி காலம் நேரிட்டிருக்கிறதனாலும், நாகலோகத்தாரால் அதிக பலம் பெற்றிருப்பதனாலும், கிஞ்சித்து வருத்தமடைந்தவனாகி, உடனே அதிகச் சினங்கொண்டெழும்பித் தேவருமஞ்சக் கர்ஜித்துப் பகாசுரன்மேல்விழுந்து, அவனைப் பிடித்து உடலை யொடித்து, தலையைத் திருகித் தூரத்தி லெறிந்து, உடலை அங்கிருக்கும் வண்டியின் மீது ஏற்றி, வண்டியை மயான பூமிக்கு இழுத்து வந்து, அவ்வண்டியையும் சில உயர்ந்த மரங்களையும் உடைத்து கவந்தத்தையதிற் கிடத்தி நெருப்பிட்டு, நீறாகிற பரியந்தம் அவ்விடத்திலிருந்து, பின்பு ஒரு குளத்தில் வந்து ஸ்நானஞ்செய்து, நியம நிஷ்டைகளை முடித்துக் கொண்டு நகரத்தை நோக்கி வருகின்றான்.

இங்கே வேதியரிருக்கிற நகரத்துக்கு (50) ஏர் எருமைக் கடாக்களும் முன்னமே வந்தன. அவைகளை வேதியர் கண்டு, "ஓ! ஓ! மோசம்வந்தது. நாம் அனுப்பிவித்த பிராமணன் பகாசுரனிடத்துச் செல்லவேயில்லை. சென்றால் எருமைக்கடாக்கள் திரும்பிவரமாட்டா. அவன் எங்கேயோ தூங்குகிறான். அல்லது அந்தப் பகாசுரனைப் பார்த்துப் பயந்து மாட்டை அவிழ்த்து விட்டு வண்டியைக் காட்டில் நிறுத்தி விட்டு ஓடிப்போய் இருப்பான்" என்று தீர்மானித்து, "இனி நம்மால் இவ்வூருக்குக் கெடுதிநேரிட்டது. இன்னும் அரைக்கணத்திற் பகாசுரன் வருவான். அவன் யார் யாரைக் கொல்லுவானோ தெரியாது" என்று பயந்து கையை

நெறித்து வருத்தமடைந்து, சுற்றத்தாருடன் கலந்து, இவ்வசனங் களைக் கூறி, "ஐயையோ! கூலிப்படை குத்துமா? தாலிப்படை தாங்குமா? என்பதுபோ லாயிற்றே, நாம் சுகப்படத்தானே நரபலி கொடுக்கிறது. அதற்கு அன்னிய மனிதனை அனுப்பிவைத்தால் அவனுக்கென்ன அக்கரை? ஆர்தான் உயிர்கொடுக்கத் துணிவார் கள்? இனி நாமென்ன செய்வோம். அந்தோ! பகாசுரன் வந்து நம்மை அதமாக்கப்போகிருன், இன்றோடே வேத்திரகீயம் பாழாகப் போகிறது" என்று பலவாறுகக் கூறி மனங்கலங்கிக் கடலொ லிபோ லொலித்தனர். பிராமண ரெல்லாருங் கூடியழுத ஒலியை அவ்வேதியன் வீட்டிலிருந்த குந்திதேவி தருமராஜன் முதலான வர்கள் கேள்விப்பட்டு வெளியேவந்து, "என்ன என்ன" வென்று வினவினுர்கள். அந்நகரத்து வேதியர்கள் முகவாட்ட முடையவர் களாய், "ஓ அதிதிகளே! பகாசுரனுக்குப் பலியிடுவதற்காக உங்களிலொருவனை அனுப்பிவைத்தோமே, அவன் அப்பகாசுரனைப் பார்த்து அஞ்சியோ, அல்லது அவனிடத்திற்குப் போவ தென்ன வென்று நினைத்தோ? வண்டியிற் பூட்டிய எருமைக்கடாக் களை அவிழ்த்து தட்டிவிட்டு ஓடிப்போனதாகத் தோன்றுகிறது. இதுவரையில் நாமனுப்பும் வஸ்துக்களில் ஒன்றுந் திரும்பி வந்த தில்லை. இன்றைக்கு எருமைகள் வந்துவிட்டன. அதைக் கண்டு இவ்வளவு கலவரப்படுகிறோம்" என்றுர்கள். தருமராஜன் முத லானவர்கள் அவ்வேதியரை நமஸ்கரித்து, "ஓ ஐயன்மீர்! அவசரப் படாதீர்கள். நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். பலிக்காகச் சென்ற மனிதன் லேசானவ னல்லன்? பகாசுரனுக்கு அவன் யமனென்று நம்புங்கள். நீங்கள் வருத்தப்படா திருங்கள். அந்த மனிதன் பகாசுரனைக்கொன்று எருமைகளை அவிழ்த்து விட்டிருப் பான், அதனுல் எருமைகள் வீட்டுக்கு வந்தன. எல்லாம் இன்னும் சற்றுநேரத்துக்குள் தெரியும், வாருங்கள்" என்று யாவரையும் அழைத்துக் கொண்டு பீமன் வரும்வழியை எதிர்பார்த்திருந்தார்.

பீமன் பகாசுரனை வெற்றிபெற்ற மனக்களிப்பினுல், மிகுந்த இறுமாப்புடன் மதங்கொண்ட யானையைப்போல் எதிரில் வந் தான். அவனைப் பிராமணர்க ளெல்லாரும் பார்த்து ஐயுற்று நிற்கிறபோது, பீமன் குந்திதேவியையுந் தமையனையும் வணங்கி, பின்பு எதிர்வந்த வேதியரைத் தொழுது, தம்பிமார்களையும் ஆலிங்கனஞ் செய்துகொண்டான். இதற்குள் இந்த ஐவரை

யும் பாதுகாத்து வருகிற வேதியன், பீமனை நோக்கி, "அப்பா பிராமணோத்தமா! நீ பகாசுரனுக்குப் பலியாகச் சென்றவனு யிற்றே! எது திரும்பிவந்தது" என்று கேட்க, பீமன் வணங்கி "ஓ சுவாமி! உங்களுடைய ஆசீர்வாத வல்லமையினுல் அந்தப் பகாசுரனை யமபுரத்துக்கு அனுப்பி, அவன் கவந்தத்தை அன்னங் கொண்டுபோன வண்டியினுல் நீருக்கிவிட்டு ஸ்நானஞ் செய்து வந்தேன்" என்றுன். இதனைக் கேட்ட வேதியர்கள் அனைவரும் முன்னம் எவ்வளவு வருத்தப்பட்டார்களோ? அதற்குப் பதின்மடங் கதிகமான மகிழ்வைக்கொண்டு பூரித்து, அங்கிருந்தபடி நகரத்தை அலங்கரிக்கத் திட்டஞ் செய்து, பூரண கும்ப முதலானவைகளை யும் வரவழைத்து, மாங்கல்ய ஸ்திரீகளெல்லாரும் மங்களம் பாட, வேதவேதியர்கள் மந்திராக்ஷதைக ளிறைக்க, நகரத்தைத் திருவலம் வந்து, அந்த ஐவரையும் அவரவர்கள் வீட்டுக்கு அழைத்துப்போய் மரியாதைகளைச் செய்து, இருப்பிடத்திற் கொண்டுவந்துவிட்டு, பீமனையும் தருமன் முதலானவர்களையும் அவர்களை ஆதரித்து வருகிற வேதியரையும் அவர் மனைவியையும் நோக்கி "ஓ புண் ணியவான்களே! இந்த ஒரு மஹாபுருஷனுல் இந் நகரத்திலிருக் கும் நாங்களெல்லாரும் உயிர்பெற்றது மன்றி, பெருவாழ்வுமடைந் தோம். அவனையும் அவனைச் சேர்ந்த மற்றையரையும் பாது காத்துவரும் நீங்கள் சந்திர சூரிய ருள்ளளவும் பெருங் கீர்த்தியும் பெரும் பயனும் படைத்தீர்கள்" என்று பலவாறு புகழ்ந்து, அன்று முதல் அதிதிகளாகிய ஐவருக்கும் அவர்கள் தாய்க்கும் யாதொரு குறைவில்லாமல் விருந்து போஜன முதலிய வைபவங்களைச் செய்து, தெய்வத்தைப்போல் பாவித்துப் பயபக்தியுடன் பணிந்து வந்தார்கள். இந்த ஐவரும் மிகுந்த வணக்கத்துடன் அவர்கள் களிப்பெய்துமாறு சகல உபசாரங்களுடன் வேண்டிய உபகாரங்க ளனைத்தையுஞ் செய்துகொண்டு, சுகமாக யிருந்தார்கள்.

வேத்திரகீயச்சருக்கம் முற்றிற்று.

---

## 8. சுயம்வரச் சருக்கம்

காயமும் புலனு மந்தக் கரணமு மாகி யெல்லாத்
தேயமும் பரந்து நின்று மீளவுஞ் சித்துஞ் சுத்த
மாயமு மாகி நீங்கி வருபெரு ஞான னந்த
மாயவெம் பெருமா னென்னை யாண்டரு ளாழியானே.

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இவர்கள் சரித மிவ்வாறாக, அத்தினபுரத்தில் துரியோதனன் முதலானவர்கள் ஐவர்களுமிறந்தாரென்கிறகருத்தை உட்கொண்டு, மனவூக்கத்தோடு சிலாக்கியமான போகபாக்கியத்தை அநுபவித்து வந்தார்கள். அதற்கு மேல் நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன் கேளும். துரோணாசாரியைக் கொல்ல ஒரு புத்திரனையும் குருவின் வாக்கியப்படி தன்னைக் கட்டிக்கொண்டு போன பற்குணன் தோளுக்கியைய ஒரு புத்திரியையும் பெற்ற பாஞ்சாலன் ஐவர் அரக்கு மாளிகையிலிறந்துவிட்டா ரென்கிற செய்தியைப் பலரால் கேள்விப்பட்டு, அதிக துன்பமடைந்து கொலுக்கூடத்தில் வந்து, அங்கு நிறைந்திருந்த மந்திரிகள் - பிரதானிகள் - பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர்-முதலானவர்களை நோக்கி, "ஓ சபையோரே! ஆதியில் துரோணாசாரி என் சபைக்கு வந்தபோது அவரை அலக்ஷியப்படுத்தினதற்காகச் சினங்கொண்டு, என் மாணாக்கரால் உன்னைக் கட்டி வரும்படி செய்து நானிருக்குஞ் சபையிற் பங்கப்படுத்துகிறேனென்று சபதம் பண்ணியிருந்தாரே, அவ்வாறு குருகுல மக்களிற் பற்குணனால் என்னைக் கட்டிப் போய்ச் சபையிற் பங்கப்படுத்தினார். அன்று சபையாரறிய நானொரு சபதங் கூறினேன். அஃதென்னெனில் என்னைப் பங்கப்படுத்தின துரோணரைக் கொல்ல ஒரு புத்திரனையும், என்னை வெற்றிபெற்ற பற்குணன் தோளுக்கியைய ஒரு புத்திரியையும் பெறுகிறேனென்று உறுதியாகச் சொல்லி, அந்தப்படி எனக்குக் கைகூடுமாறு அநேகம் பெரியோர்களை அடுத்து, முடிவில் உபையாசன் யாசன் என்னும் பெயர் வகித்த இரண்டு பெரியோர்களாற் புத்திரகாமேஷ்டி யாகஞ்செய்து, அந்த யாகத்தீயில் மக்களைப் பெற்று மகிழ்வடைந்திருந்தேன். இப்போது என் புத்திரிக்கு நியமித்த கணவனாகிய பற்குணன் தன் தமையன் தம்பிமார் அன்னை இவர்களோடு அரக்குமாளிகையில் வெந்து நீறாய் விட்டதாக உலகப்பிரசித்தமா யாவரும் சொல்லுகிறார்கள். எப்போதும் நீங்காமல் என்னுள்ளத்திற் குடிகொண்டிருந்த மகிழ்வுக்கு அழிவுதோன்றிற்று. இனி நான் என்னசெய்யப் போகி

றேன்? புத்திரியோ மங்கைப்பருவ மடைந்திருக்கிறாள். அவளைக் கன்னிகா மடத்தில் வைத்து எவ்வாறு பார்ப்பேன்? அல்லது மற்ற யாருக்காவது மணம்புரியலா மென்றால் என் வாக்குக் கழிவுவருகிறதுமன்றி, ஒருவனுக்கு நியமித்த பெண்ணை மற்றொருவனுக்கு மணம்புரிவித்தா னென்கிற அபவாதமும் நேரிடும். இதற்கென்ன செய்வது" என்று மிகுந்த ஆறுமைப் படுகின்ற அரசனை வணங்கி மந்திரிகள் "ஓ மண்டலேஸ்வரா! உமதுவாக்குக் கழிவுவராது. ஏனென்றால் குருகுலமக்களிற் பாண்டு புத்திரர்கள் ஐவரும் தெய்வானுகூலத்தினாற் பிறந்தவரென்று பெரியோர்களாற் கேள்விப்பட்டிருக்கிறோம். தங்கள் புத்திரியும் மந்திரானுகூலத்தினாற் பிறந்திருக்கிறாள். ஐவர்கள் அரக்குமாளிகையி லிறந்திரார்கள். அப்படி அவர்க ளிறப்பார்களானால், தெய்வ மகத்துவம் என்ன இருக்கின்றது? அப்பால் வேதநிர்ணய மெதற்காம்? பாண்டவர்களே மெத்த மாக்ஷிமை யுடையவர்கள். அவர்களுள் பீமன் வாயுபகவானுடைய புத்திரன். அவனை மாருதசகாயனாகிய அக்கினி பகவான் தொடவேமாட்டான். அவனைப் பற்றி மற்ற நால்வரும் பிழைத்திருப்பார்கள். பிழைத்திருந்தாற் செய்தி தெரியவருமே யென்றால் ஏதோ ஒரு காலகதியால் உருவமறைந்து, பேழையிற் பாம்படங்கி இருப்பதுபோல் இருப்பார்களே யன்றி இறக்கவில்லை" என்று உறுதியோ டுரைத்தார்கள்.

பாஞ்சாலன் மந்திரிகள் சொல்லும் வார்த்தையைக் கேட்டுக், கோபங்கொண்டு "ஓ மந்திரிகளே! நீங்கள் என்னைப் பயித்தியம் பிடித்தவ னென்று தீர்மானித்திருக்கின்றீர்கள். நானென்ன இலேசாய் விசாரித்திருப்பேனோ? துரியோதனன், குந்திதேவி முதலான அறுவரின் அஸ்திகளைப் பொறுக்கிவைத்து, நீர்க்கடன் முதலியவற்றையுஞ் செய்தானாம். இன்னும் குட்டிச் சுவற்றில் முட்டிக்கொள்ள வெள்ளெழுத்தா? எங்கேயாவது சாவுசமாச்சாரம் பொய்யாகுமா"என்று துயரப்பட்டான். மந்திரிகள் துயரப்படுகிற அரசனை நோக்கி, "ஓ மண்டலேஸ்வரா! தாங்கள் வருத்தப் படவேண்டியதில்லை. நாம் சோதிட சாஸ்திரிகளை அழைத்துக் கேட்டால் உள்ளதை உள்ளபடி விளம்புவார்கள். தாங்கள் சஞ்சலப்படாதிருங்கள்" என்று விசனத்தை மாற்றி, மந்திரிகள், "ஜோதிடசாஸ்திரத்தில் வல்லமையுடையவர் இக்கணம் ராஜசமுகத்துக்கு வரக்கடவர்" என்று தேசமுழுவதும் பறையறைவித்தார்கள். இப்பறையோசையைக் கேட்டு அநேக சோதிட சாஸ்திரிகள் இராஜசபைக்கு வந்தார்

கள். வந்தவர்களுக்கெல்லாம் தகுந்த மரியாதைகளைச் செய்து பொற்பீடத்தி லிருக்கச்சொல்லி, பாஞ்சாலனும் மந்திரிமார் களும் சொல்லுகிறார்கள்—

## பாஞ்சாலன் அசரீரியால் பாண்டவரிருக்கை யறிதல்

"ஓ சோதிட சாஸ்திரிகளே! குருகுல மக்களிற் பாண்டுபுத்திரர் கள் உயிரோடிருக்கின்றார்களா? அல்லது அரக்குமாளிகையில் வெந்து நீறாயினார்களா? இதனை நன்றாக ஆராய்ந்து எங்கட்குச் சொல்லுங்கள்" என்ன, அவர்கள் சோதிட நூல்களைச் சோதித்துப் பார்த்து அரசனை நோக்கி, "ஓமண்டலேஸ்வரா! ஐவரும் எஞ்ச வில்லை. அவர்க ளிறந்துவிட்டதாய் லோகப் பிரசித்தமாக வழங்கின போதிலும், சோதிட சாஸ்திரத்தை ஆராய்ந்து பார்க்கு மளவில் அவர்களிறந்ததாகக் காணப்படவில்லை. ஐவரும் பஞ்ச கர்த்தர்களைப்போல் மேம்பாடான இடத்தில் இருக்கிறார்கள். இதற்கொரு சந்தேகமு மில்லை" யென்றார்கள். அதைக்கேட்ட பாஞ்சாலன் ஆச்சரியப்பட்டு, "நல்லது எல்லாம் அறிந்துகொள்ளு வோம். நமது குருவாகிய உலூகமாமுனிவரை அழைத்துவாருங் கள்" என்று மந்திரிகளுக்குக் கட்டளையிட, மந்திரிகள் ஒரு முத்துச் சிவிகையை யெடுப்பித்துக்கொண்டுபோய் உலூகமகாமுனிவரை அணுகி, "ஓ சுவாமி! தங்களை அரசன் அழைத்துவரச்சொல்லி எங்களுக்குக் கட்டளையிட்டார்" என்று விண்ணப்பஞ் செய்ய, உலூகமாமுனி உடனே எழுந்து, முத்துச் சிவிகையிலேறி இராஜன் சமுகத்துக்கு வந்தார். அரசன் குருவருவதை யறிந்து எதிர்கொண்டுபோய் அழைத்துவந்து, பொற்பீடத்தி லிருத்திச் சோடச உபசாரமுஞ் செய்து, சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து எழுந் தெதிர்நின்றான். உலூகமாமுனி வணங்கிய அரசனுக்கு ஆசிகள் புகன்று, அருட்பார்வையுடன் நோக்கி அவன் முகவாட்டமுற் றிருப்பதை அறிந்து, "அடடா!! அரசன் ஏதோ ஒரு துயரத் தை மனதில்வைத் திருக்கிறானென்று தீர்மானித்து "ஓ ராஜ ராஜேஸ்வரா சூரிய உதயத்தில் மலர்ந்திருக்கும் கமல மலர்போ லிருக்கிற உன் முகம் சந்திரனைக் கண்ட தாமரையைப்போலிருக்க வேண்டிய காரணமென்ன" என்று வினவ, அரசன் "ஐயனே!

உலகத்தில் அரசருக்குத்தாய் - தந்தை - தமையன் - தம்பி - மைத்துனன் - மாமன் - அன்பன் - மந்திரி - இவர் முதலானவர்களெல்லாம் ஒவ்வொரு காரியங்களிற் குருவாகின்றார்கள். ஆதலால் அவர்களிடத்தில் அரசன் எந்தெந்த காலத்தில் எவ்வாறு வசனிக்கவேண்டுமோ அந்தந்தக்காலத்தில் அவ்வாறு வசனிக்கவேண்டிய முறைமை. தற்காலத்தில் தாங்கள் அவர்களனைவரும் ஒருருக்கொண் டெழுந்தருளியது போல் தாங்கள் இங்கு எழுந்தருளியதால் இனி அடியேற் கென்ன குறை" என்று சொல்லி, இரண்டு கண்களிலும் நீர் சோரக் கரங்களைக் கூப்பிச் சிரசின்மேல் வைத்துக்கொண்டு, "ஓ திரிகாலக் கியான சம்பன்னரே! எளியேன் வமிசத்துக்குக் குருவாய் விளங்கி, எங்கள் முன்னோர்களுக்கு யாதொரு குறைவந்த போதிலும் அதனைத் தங்களுடையதாகப் பாவித்து, அக் குறையைத் தீர்த்துக் காத்து இரக்ஷிக்கும் ஆண்டவர் நீரே யன்றோ? இன்று என்னை விழுங்கப் பிடித்த துன்பமென்னு முதலையைத் தங்கள் கிருபையாகிய சக்கரத்தை யேவி அறுத்து என்னை யாள வேண்டும். இதுதான் அடியேன் செய்துகொள்ளும் விண்ணப்பம்" என்று பலவாறு துதித்துப் பின்னுஞ் சொல்லுகின்றான்—

"ஓ சுவாமி! ஆதியில் துரோணரைக் கொல்ல ஒரு புத்திரனையும், என்னை வெற்றிகொண்ட பற்குணன் தோளுக்கிணங்க ஒரு புத்திரியையும், தங்கள் கிருபா கடாக்ஷத்தினாலும், உபையாசன் - யாச னென்னும் பெரியோர்களாலும், புத்திர காமேஷ்டி யாகத் தீயிற் பெற்றுக்கொண்டே னன்றோ? அப் புத்திரிக்கு மங்கைப் பருவம் வந்தது. அவளுக்கு நியமித்திருந்த பற்குணன் அரக்கு மாளிகையில் தமையன் அன்னை தம்பிமாரோடு மிறந்துவிட்டதாக உலகம் சொல்லிக் கொள்ளுகிறது. இதற்குத் தங்கள் திருவடியே கதி" என்று குப்புற விழுந்து கும்பிட்டான். உலூகமாமுனி அரசனை ஆதரித்தெடுத்து, இனிய வசனங்களால் துன்பத்தைத்துடைத்துச் சிங்காதனத்திலிருத்தி, தாமும் அவனருகிலுட்கார்ந்து, "அப்பா இராஜசிகாமணியே! நீ யேன் கிலேசப்படுகிறாய்? வருத்தப் படாதே. நான் புகல்வதைக் கேள். உலகத்தில் யாராவது புத்திரனில்லாமல் வருத்தமுற்றுப் பெரியோரைப் போய் யடுத்தால், அவர்கள் முன்பின் யோசித்துத் தங்கள் ஞான திருஷ்டியால் திரிகாலத்தையு முணர்ந்து, யாதொரு தடையும் வராதிருப்பதா யிருந்தால்தான் யாகஞ் செய்ய யத்தனிப்பார்கள்.

யாதாமொரு தடை வருவதாயிருந்தால் யாகஞ் செய்யப் பாத்தியப்பட்டார்கள். உனக்குப் புத்திர காமேஷ்டி யாகஞ் செய்தவர்கள் மஹாமூர்த்திகள். அவர்கள் திரிகாலப் பிரமாணங் கண்டுதான் யாகஞ் செய்திருப்பார்கள். உன் புத்திரி பற்குணனுக்கு மாலையிடாமற் போவதாயிருந்தால், யாகத்தீயில் அக்கினிபகவான் அப்புத்திரியை ஏந்தி வருவானா? எந்த விதத்திலாவது உன் புத்திரி பற்குணனை மாலை புனைவாள். அந்த உபையாசன் - யாசன் என்னும் பெயர் வகித்த பெரியோர்கள் திறங்களை என்னாற் சொல்லக் கூடாமையா யிருந்தபோதிலும், ஒருவித திருஷ்டாந்தத்தாலேயே அவர்கள் வல்லமையாளரென்று தோன்றுகின்றது. அஃதெப்படியெனில் - புத்திரகாமேஷ்டி யாகத்தில் வந்த பிண்டத்தைக் கொடுக்கும்போது உன் மனைவி தீண்டாதவளாயினாள். அக் காலத்தில் தங்கள் சக்தியினால் அக் குண்டத்திற்றானே அப் பிண்டத்தை இட்டு, வேறொரு மந்திரத்தை யுச்சரித்துப் புத்திரனையும் புத்திரியையும் வரும்படி செய்தார்கள். இந்த உலகத்தில் அநேகர் அநேகயாகஞ் செய்தார்கள். இவ்வாறு செய்தவர்களு முண்டோ? அவ்வளவு வல்லமையாளர் செய்த வேலைக் கொரு தீங்கு நேரிடுமா? நேரிடாது. பஞ்சவர்கள் அரக்குமாளிகையி லிறந்துவிட்டதாகக் கேள்விப்பட் டிருக்கின்றோமே யென்றால், அரக்குமாளிகை எரிந்தது உண்மைதான். அதில் ஐவர்க ளிறந்தாரென்பது பொய். ஏனென்றால் - பற்குண னென்ன சாமானியனா? அநேககாலந் தவஞ்செய்தாலும் பெறக்கூடாத தநுசாஸ்திர வித்தைக ளனைத்தையும் 'அங்கை நெல்லிக்கனிபோல் பெற்று விளங்குகிறவன், வில்விநோதன். மாளிகை அனற்பட்டபோது அவனே அம் மாளிகையி லிருப்பானானால், வில்லெடுத்து வருணாஸ்திரத்தைத் தொடுக்க நேரமில்லாமற் போனாலும் வருணேஸ்வரமென்கிற தெய்வீக மந்திரத்தை யறிந்த அவன் அம் மந்திரத்தை யுச்சரித்தால் உடனே அனலவிந்து போம். ஒரு வேளை அனலைக்கண்டு அஞ்சி மெய் மறந்தானென்று சொல்வோமானால், சமயத்தில் யுக்தி தோன்றுதல் அவனுக்குச் சுவாதீனமாதலால் அவன் அகப்பட்டு யிருக்கமாட்டான். நீ கவலைப்பட வேண்டாம்" என்று கழறினார்.

அவையனைத்தையுங் கேட்ட அரசன் கிஞ்சித்து ஐயந் தீர்ந்து குருவை நோக்கி, தங்கள் வாக்கின் உறுதியால் நம்பவேண்டியதா யிருக்கின்றதேயன்றி என் மனவுறுதியால் நம்பக்கூட

வில்லை. ஆனாலும் அடியேன் ஒரு விண்ணப்பம் செய்கிறேன். அவ் விண்ணப்பத்தை அங்கீகாரஞ் செய்து அருள்புரிவீர்களானால் அப்போது என் சந்தேகம் நீங்குமென்றான். உலூகமாமுனி அஃதென்னை என, "ஓ சுவாமி தங்களுக்கு அசரீரி வசியமாதலால், பூசை முகத்தில் அவ் வசரீரியை வினவி எனக்குச் சொல்லவேண்டும்" என்று தொழுதான். உலூகமாமுனி அக் கருத்துக் கிசைந்து, அரசனிடத்து விடைபெற்றுத் தன் ஆசிரமத்திற்குச் சென்று, ஸ்நானஞ்செய்து அசரீரியை நோக்கித் தியானித்தார். உடனே அசரீரி தோன்றினள். அந்த அம்மனை முனிவர் வணங்கு முறையுடனே வணங்கி, "ஓ அம்மணி! பாண்டுபுத்திரர் அரக்கு மாளிகையில் எரிந்து நீறாய் விட்டார்களா? அல்லது உயிர்ச்சேத மின்றி இருக்கிறார்களா?" என்று வினவ அசரீரி "உலூகமஹாமுனியே! நீரேன் வருத்தப்படுகிறீர்? பாண்டு புத்திரர்கள் உயிரோ டிருக்கிறார்கள். இதை உறுதியாக நம்பும்" என்று சொல்லி மறைந்துவிட்டாள். உலூகமாமுனி பூசையைப் பூர்த்திசெய்து அரசனிடத்து வந்து, "ஓ எனது அன்பனே! பூசைமுகத்திற் பாண்டுபுத்திரர் பிராணனோ டிருக்கிறார்களென்று அசரீரியுரைத்து மறைந்தனள். இதைக் குறித்து யோசிக்கவும் நமதெண்ண முடியவும் வேண்டி யிருக்கிறபடியால், வேதவியாசர் வரவேண்டும். அவர் வந்தால் எல்லாம் நிறைவேறும். அவரை விரைவில் வரும்படி உனது மனதில் தியானஞ்செய்" என்றார். அரசன் குரு வாக்கியத்தைச் சிரமேற்கொண்டு, வேதவியாசரை மனதில்நினைத்துப் பலவாறு துதித்தான். திவ்வக்கியான ஸ்வரூபியாயும், பாண்டவர்கள் மீது அதிக சிரத்தையுள்ளவருமாகிய வேதவியாசர், பாஞ்சாலன் நினைத்தக்ஷணம் கொலுமுகவாசலைக் குறுகினார். அரசன் திடுக்கென் றெழுந்து எதிர்வந்து மகிழ்வடைந்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, அழைத்துப்போய் திவ்வியாசனத்தி லிருத்திச் சோடச உபசாரமுஞ் செய்து சொல்லுகிறான்.

"ஓ சுவாமி! கொடியவெய்யிலி லகப்பட்டுத் துடிக்கும் புழுவுக் குத்தற்செயலாய் நிழலுண்டானதுபோலத் துன்பமாகிய வெய்யிலி லகப்பட்டு வருந்தித் தளரும் எளியேனுக்குத் தாங்கள் வந்து முன்னின்றீர்கள். இனி எனக்கொரு குறையு மில்லை. இன்று நான் புனிதனானேன். என் மனக்குறையும் நிறைவேறிற்று" என்று பலவாறு புகழ்ந்து, "ஓ வேதநாதனே! பாண்டுமக்கள் அரக்குமாளிகையி

விறந்துவிட்டதாக லோகவதந்தி யுண்டாயிருப்பதை யான்கேட்டுக் கனருவத்தமுற்று என் குருவைக்கொண்டு பரிசோதித்தேன். அவர் அசரீரியாற் பாண்டவர்கள் உயிர்ச்சேதமின்றி யிருக்கிறார்களென்று தெரிந்துவந்து எனக்குரைத்தார். ஆனால் அவர்கள் இன்னவிடத்தில் இன்னவுருவோடு விளங்குகிறார்களென்று தெரியவில்லை. என்புத்திரியோ மங்கைப்பருவ மடைந்தாள். அவளை ஐவரிற், பச்சை நிறத்தையுடையவனும் திறத்தில் உருத்திரனைப்போல் விளங்குகிறவனும், பங்குனிமாதத்திற் பிறந்தமையாற் பற்குனனென்றும், வெற்றியால் விஜயனென்றும், நிறத்தால் அர்ச்சுனனென்றும் பெயர் பெற்றுவிளங்குகிறவனுமாகிய கனவானுக்கு மணஞ்செய்யவேண்டுமென்று கருதியிருக்கிறேன். அக்கருத்து நிறைவேறவும், அந்த அர்ச்சுனனைக் கண்ணுற் கண்டு மகிழவும் ஒரு தந்திரஞ் சொல்ல வேண்டும் சுவாமி" யென்றான். வியாசர் அரசனுக்குப் பல ஆசிகள் வழங்கி, "ஓ பாஞ்சாலா! அருமையான தவத்தைச்செய்து சாம்பமூர்த்திக் கொப்பாகிய உபையாசன் - யாசனென்னும் பெரியோர்களுடைய வேதமந்திர அநுக்கிரகத்தினுற் பெற்ற உன் மகள் அர்ச்சுனனுக்கு மனைவியாகாமற்போவாளோ? நீ வருத்தப்படாதே. நானொரு உபாயஞ் சொல்லுகிறேன். அவ்வாறு நீ செய்தாற் பாண்டவர்கள் எந்த விடத்தில் எந்த உருவத்தோ டிருந்தாலும் அந்த உருவத்தோடும் வந்து, உன்குமாரத்தியை மணம் புரிந்துபோவார்கள்" என்று சொல்லி அவ்வுபாயத்தையுஞ் சொல்லுவதானார்.

---

## வியாஸரனுக்கிரகத்தினற் பாஞ்சாலன் சில கோட்பாடுகளோடு சுயவரஞ்சாட்டல்

---

"ஓ அரசனே! வில்வித்தையில் வல்லவராயிருக்கிற அரசர்களெல்லாம் கண்டவுடன் அஞ்சித் தெண்டனிட்டு மெய்நடுங்கப் பர்வதாகாரமாக இருக்கிற ஒரு வில்லும், தேவாஸ்திர முதலியவை நிறைந்த ஒரு அம்புப் புட்டிலும் வைத்து, வெளியில் (70) அடி உயரமுள்ள இரண்டு கம்பங்களை (70) அடி விட்டம் பூட்டி, அதற்கு மேல் இரட்டித்து (70) அடிக் கம்பம் நாட்டி அதன்மேல் இடைவிடாமல் சுழலும் சக்கரத்தை வைத்து, அந்தச் சக்கரத்தின் மத்தியில் மச்சகுறியைப் பூட்டி, அதிற்போட்ட விடத்துக்கு மும்

மூன்று துளையுண்டாக்கி, பூமியிற் பெரிய ஒரு வெள்ளைக்கடா ரம் வைத்து, அதில் மஞ்சள் நீரை நிறைத்து, அவ்விடத்தின் துளைகள் அந்நீரில் தோன்றவும் உபாயமில்லாமற் பார்ப்பவர்கள் சாயல் அத்துளையை மறைக்கவும் - நேர்படவைத்து, இந்தவில்லை வளைத்து நாணேறிட்டு மஞ்சள் நீரிற்றோன்றும் துளைக்குறியின் வழியாக மூன்றுகணைகளைத் தொடுத்து, மேற்சுழலும் சக்கரத்தின் முனைவழியிற் கணைகளைப் போக்கி, மச்சக்குறியை முன்னதாய் வீழ்த்தி, உடனே அம்மச்சம் அச்சக்கரத்துக்குச் சரியாக வருகிற தற்குள் சக்கரத்தைவீழ்த்தி, மச்சமும் சக்கரமும், பூமியில் விழு முன் மற்றொரு கணையைப் போக்கிச் சக்கரத்தையும் மச்சத் தையும் கரத்திலேந்துகிறவர் எவரோ; அவர் திரௌபதையை மாலையிடுவதற் குரியவரென்று விளம்பரஞ் செய்வாயானால், இச் செய்கை அந்த அர்ச்சுனன் ஒருவனுக்கே யன்றி மற்ற வருக்கு அசாத்தியமாக இருக்கும். உலகத்தில் வல்லமை யான அரசர்கள் அநேகம் பெய ரிருப்பார்களே அவர்களுக்கு இந்தவில் வளையாதிருக்குமாவென்று நீ நினைப்பாய். அதற்கு யாம் ஒரு நிர்ணயம் செய்கிறோம். அஃதியாதெனில், அர்ச்சுனனுக்கு மாத்திரம் வில்வளையவும், மற்றவர்களுக்கு அந்தவில் வளையாதிருக் கவும், அதில் தருமதேவதையை ஆவாகனஞ் செய்துவைக்கிறோம். நீ உன் புத்திரியின் வடிவத்தைப் படத்தில் எழுதி, அப்படத்தில் இந்த உருவங்களை விளங்கக்காட்டி, ஸ்தம்பப் பிரதிஷ்டைசெய்து, அதற்குப் பதினொராநாள் வில்லை வளைக்கிறதென்றும், அதற் கேழாநாள் மணம்புரிதலென்றும், நாளைக்குறித்து மணவோலை யனுப்பிவிடு. ஐவரெங்கிருந்த போதிலும் வருவார்கள். அவருள் அந்த அர்ச்சுனன் உன் புத்திரியை மணம்புரிவான்" என்று வாழ்த்தி அரசன் மனதைத் தேற்றினார்.

அதனால் அரசன் அதிக மகிழ்ச்சியடைந்து, தன்னருகி லிருந்த மந்திரிகளை நோக்கி, "புரோகிதரையும் சித்திரக்காரரையும் அழைப் பியுங்கள்" என்று உத்தரவு பண்ணினான். மந்திரிகள் தக்ஷணம் அவ்விருவகையாளரையு மழைப்பித்து அரசன் முன் விடுத்தார் கள். அரசன் சித்திரக்காரரை நோக்கி, "ஓ ஓவியரே! நீங்கள் என் புத்திரியைப்போற் படமெழுதி வாருங்கள்" என்று கட்டளை யிட்டு, அவர்கட்கு நடத்தவேண்டிய மரியாதைகளனைத்து நடத்தி அனுப்பிவிட்டுப் புரோகிதரை நோக்கி, "ஓ சுவாமிகளே! நான் என் புத்திரிக்கு மணம்புரிய யத்தனித்திருக்கிறேன். அதற்குத் தம்

பப் பிரதிஷ்டை செய்வதற்கும், அந்தநாளுக்குப் பதினொராவது நாளில் வில்லை வளைப்பதற்கும், அதற்கு ஏழாம் நாளில் மணம்புரிவதற்கும், சந்திரபலம் தாராபலம் நிறைந்திருக்கிறதாக ஒரு திவ்ய லக்கினம்பார்த்துச் சொல்லுங்கள்" என்று கேட்டான். அப் புரோகிதர்கள் அரசனுத்தரவின்படி பரிசோதித்து நன்னுளை நியமிக்க, அரசன் அத்தினத்தில் நகரத்துள்ள விசாலமான ஓரிடத்தில் அரசர்களுக்கும் வேதியர்களுக்கும் தகுந்த சிங்காதனத்தோடு கல்யாணமண்டப மியற்றி, (11-ம்) கால்நட்டு, லக்ஷயக்குறியை வைத்து, வியாசரால் தருமதேவதையை வில்லில் ஆவாகனஞ் செய்வித்து, அவ்வில்லையும் அம்புப் புட்டிலையும் வைத்துச் சுயம் வரஞ்சாற்றினுன். சித்திரக்காரர் அரசன் கட்டளையைச் சிரமேற்கொண்டு, ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து, உலகத்தில் யோனிவாய்ப்பட்டு உதிக்கின்ற மாதர்களை எழுதுவதற்கே நமக்குக் கன வருத்தமா யிருக்கின்றது. அப்படியிருக்கப் புத்திரகாமேஷ்டியாகத்தி லுற்பத்தியாகி, சொர்க்கமத்திய பாதாளலோகங்களி லிருக்கும் அழகிலுயர்ந்த மாதர்களெல்லாரும் மயங்கித் தொழும்படியான சுந்தர உருவத்தினைக் கொண்ட திரௌபதையை எவ்வாறு எழுதப்போகிறோம்? எழுத முடியவில்லை என்று கூறினுல் நான் அடைந்த கீர்த்திக்கு அழிவு வருவது மன்றி, அரசனுல் நம் தலைக்கும் தீங்கு வரும். இனி நாமென்ன செய்வது? இவ் விஷயத்தில் தெய்வச்செய லெப்படியோ அறியோம். ஆயினும் வீணுய்க் கவலைப்படுவது சரியல்ல. அந்தப்புரத்தில் நமது குடித்தெய்வமான குலதேவதையையும் இஷ்டதேவதையையும் தியானித்து எழுதுவோம். அதன் பின்பு தெய்வம்விட்ட கதி யாகட்டும்" என்று தெய்வத்தின்மேற் பாரம்வைத்து, அந்தப் புரத்திற் சென்று, தோழியர்களுக்கு அரசனிட்ட கட்டளையைத் தெரிவித்தார்கள்.

தோழியர்கள் அதை அம்மனுக்கு அறிவித்து, ஒரு கூடத்திற் புகைபோல் திரையிட்டு, அம்மனை அழைத்துவந்து அதில் நிறுத்தினுர்கள். சித்திரக்காரர் அந்த அம்மனது திருவுருவத்தைத் திரைமத்தியிற் கண்டு ஒருவாறுகத் தெளிந்து, பாதாதிகேசம் வரையில் எழுதி, எந்தெந்த விடங்களில் எந்தெந்த வர்ணம் வைக்க வேண்டுமோ அவ்வவ் வர்ணங்களை வைத்துக் கூடியமட்டும் குறைவில்லா தெழுதினுர்கள். ஆனுல் அந்த அம்மனுருவம் சித்திரக்காரருக்கு மேல்வரிக்குறியாக இருந்ததே யன்றிச் சாத்தியமாக வில்லை. அம்மன் அந்தப்புரத்துக்குட் சென்றுள். சித்திரக்காரர் தாம் எழு

திய படத்தை எடுத்து வந்து அரசனிடத்து வைத்து, மிகுந்த நடுக்கத்தோடு நமஸ்காரஞ் செய்தார்கள். அரசன் அப்படத்தை நோக்கிக் கிஞ்சித்து வியப்படைந்து, தகுந்த பரிசுகொடுத்துச் சித்திரக்காரரை அனுப்பி விட்டான். சித்திரக்காரர் பரிசுபெற்ற தற்காக மகிழ்வுறுமல், அரசனால் ஒரு கெடுதியும் வாராமற் காப்பாற் றின தங்கள் தங்கள் குலதேவதைகளையும் இஷ்ட தேவதைகளை யும் நினைத்து வாழ்த்தி அதிகமகிழ்வை அடைந்து, அவரவர்க ளிருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள். அரசன் மந்திரிகளை நோக்கி, "ஓ மந்திரிகளே! இப் படத்தின் பின்புறத்தில் சுயம்வரக் குறியை விளங்க எழுதி, மணவோலையையும் தூதுவர்கள் கையிற் கொடுத்து இவ்வுலகத்துள்ள மன்னர்கட்கெல்லாந் தெரிவியுங்கள்" என்று கட்டளை யிட்டான். மந்திரிகள் அரசன் கட்டளைப்படி சுயம்வரக் குறி முதலியவற்றை எழுதித் தூதுவர்கையிற் கொடுத்து, தேசாதி பதிகளாகிய மன்னர் மன்னர்களுக்கு அனுப்புவித்தார்கள். தூது வர்கள் படத்தையும் மணவோலையையும் எடுத்துக் கொண்டு கடுங்காற்றினும் அதிவேகமாகச் சென்றார்கள். இங்கே வேத வியாசர் அரசனுக்குப் பல ஆசிகள் வழங்கி, மணத்துக்கு வருகிறோ மென்று விடைபெற்றுச் சென்றார். தூதுவர்கள் அங்கம் அரு ணம் அவந்தி ஆந்திரம் இலாடம் யவனம் ஒட்டியம் கருசம் கலிங்கம் கன்னடம் கன்றுடம் காசம் காஸ்மீரம் காந்தாரம் காம் போசம் திராவிடம் குருகுடகம் குருகு குந்தளம் குலிந்தம் கூர்ச் சரம் கேகயம் கேரளம் கொங்கணம் கொல்லம் கோசலம் சகம் சவ்வீரம் சாலவம் சிங்களம் சிந்து சீனம் சூரசேனம் சோழம் சோனகம் திராவிடம் துளுவம் தெங்கணம் நிடதம் நேபாளம் பாஞ் சாலம் பப்பரம் பல்லவம் பாண்டியம் புலிந்தம் போடம் மகதம் மச்சம் மராடம் மலையாளம் மாளவம் யுகந்தரம் வங்கம் வங்காளம் விதற்பம் என்னும் 56-தேசத்திற் பாஞ்சாலந்தவிர 55-தேசத்துக் குஞ் சென்று, அவ்வவ் வரசர்களுக்குப் படத்தையும் மணவோலை யையுங் காண்பித்து, இன்னும் குருகுல மன்னருக்கும் வேதியருக் கும் தெரிவித்து வந்துவிட்டார்கள்.

இப்படத்தைப் பார்வையிட்ட அரசர்கள் யாவரும் அதிக மகிழ்வெய்தி, அப்படத்தின் பின்புறத்தில் எழுதியிருக்குஞ் சுயம் வரக் குறியை நோக்கிக் கனவருத்தப்பட்டு" இந்தக் கன்னிகையை நாமெப்படி விரும்புவது? அப்பா! இவள் நமக்கு இசைந்த பொரு ளல்ல"; என்று கைவிட்டு, " இந்தச் சுயம்வரக் குறிப்படி செய்யத்

தகுந்தவர் நெடிய கடல்சூழ்ந்த உலகத்திலொருவரு மில்லை. ஆனால் கல்வி யொருவர்பங் கல்ல. எங்கேயாவது இத்தகைய வல்லமையாள ரிருப்பார்கள். அப்படிப்பட்ட கனவான்களைக் கண்ணாரவாகிலுங் கண்டுவருவோம்" என்று கருதிச் சில அரசர்கள் வந்தார்கள். சில அரசர் இந்தச் சுயம்வரத்தையும் கன்னியையும் பார்ப்பதற் கென்றே வந்தார்கள். துரியோதனன் முதலாகிய நூற்றுவரோடு கர்னனும் சகுனியும், "நாமென்ன வில்லாளிக ளல்லவா? நாமே அந்த சுயம்வரத்தை நிறைவேற்றி மஹா ரூபவதியாகிய கன்னியை மணம்புரிவோம்" என்று கருதிப் புறப்பட்டார்கள். இந்தச் செய் தியை யுணர்ந்த துரோணர் கிருபர் அவர்கள் அதிக மகிழ்வை யடைந்து, இந்த சுயம்வரத்தை நிறைவேற்றுவோர் ஒருவரு மில்லை. அர்ச்சுன னொருவன்றான் நிறைவேற்றுவான். இதுமுன் னிலையில் அந்த அர்ச்சுனனைக் காணலாமென்கிற கருத்தைக் கொண்டு, அவ்விருவரும் குருகுல மக்களோடுகூடி வந்தார்கள். மற்ற அரசர்களும் வேதியர்களும் பாற்கடற்புரண்டு பாஞ்சால தேசத்தின்மேல் வந்தாற்போல், தந்தம் பிரம்ம க்ஷத்ரிய குல மக்களும் நகர்ப்புரத்து வந்து சேர்ந்தார்கள். வில்லை வளைக்க நிய மித்தநாள் பதினொன்றில் ஒன்பதுநாட் சென்றது. அதுவரையில் மலைச்சாரான வேத்திரகீயத்தி லிருக்கும் ஐவருக்கும் இந்தச் செய்தி தெரியாது.

---

## ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி பஞ்சவர்க்குச் சுயம்வரச்செய்தி யறிவித்தல்

---

இப்படியிருக்கப் பத்தாநாள் பல்லாயிரங்கோடி அண்டங்களை யும் தம் வயிற்றினிடமாக வைத்து வடபத்திரத்திற் சயனித்திருக் குஞ் சிறிய குழந்தையாயும், இப்பாரதத்தை நடாத்திப் பூமி தேவிக்குச் சுமைநீக்குங் கருத்தையுடையவராயும், தேவகி தேவி யிடமாகப் பிறந்து ஆயர்பாடியில் நந்தன் வீட்டில் வளர்ந்து வெண்ணெய் தயிர் பால் இவற்றைத் திருடி ஆச்சியரார் கட்டுண் ட்டிபட்டவராயும், ஐவருக்கு அன்புள்ள அம்மான் புத்திர னாயும் கபடநாடகச் சூஸ்திரதாரியாயும் விளங்கும் ஸ்ரீகிருஷ்ண பகவான் இதையுணர்ந்து, பாஞ்சாலன் அருமையான யாகஞ்

செய்து பெற்ற பெண்ணை அர்ச்சுனனுக்கே நியமித்திருப்பதால் இப்போ தனுப்பிய மணவோலையும் படமும் ஐவருக்கேன் சேர வில்லை? வனச்சார்பான இடமாதலால் தெரியாமல் தவறிப் போயிற்று. இந்தச்சேதியை நாமே சென்று தெரிவிக்கவேண்டும்" என்று தக்ஷணம் தமது உருவத்தை மறைத்துக்கொண்டு அதிக வார்த்திபமாகிய பிராமண ரூபத்தைக்கொண்டு, தண்டு கமண்டலம் குடையுடனே தத்தடியிட்டு நடந்து வேத்திரகீயத்தில் வந்து ஐவ ரிருக்கும் மாளிகைக்குச் சென்றார்.

இவரது வரவைக்கண்ட ஐவரும் குந்திதேவியும் எதிர்வந்து அழைத்துப்போய் ஒருபீடத் திருக்கச்சொல்லி நமஸ்காரஞ்செய்து "ஓ சுவாமி தாங்க ளிருக்குமிடம் யாது? இந்த வேத்திரகீயத்துக்கு வந்த காரணமென்ன?" என்று வினவக் கிழவேதியர் கிருபை கூர்ந்து ஐவரையும் பார்த்து "ஓ புண்ணியவான்களே! யான் அதிதி; கங்கை முதலிய நதியில் ஸ்நானஞ் செய்து திவ்ய க்ஷேத்திரங்களை தரிசித் துப் பூப்பிரதக்ஷணம் புரிபவன். இஃதல்லாமலும் மன்னவர் வாழும் பட்டணங்களிலுஞ் சென்று, தரும சத்திரங்களிற் போசன முண்டு, அங்கு நடக்கும் அதிசயங்களையும் பார்த்து வருகிற துண்டு. தற் காலத்தில் மேற்றிசையிற் சென்று, அங்கிருக்கும் கோகர்ன முத லிய திவ்விய ஸ்தலங்களைத் தரிசிக்கவும் திவ்விய நதிகளில் ஸ்நா னஞ் செய்யவுங் கருதி வந்தேன். வந்தவிடத்தில் வழி தப்பிப் பெருங் காட்டிற் சென்றுவிட்டேன். அக்காட்டைக் கடந்து வருகிற போது இந்த நகரத்தைக் கண்டேன். இங்குச் சற்றிளைப்பாறிப் போவோமென்று இவண் வந்தேன்" என்றார்.

அந்த அதிதிபேச்சை ஐவரு நம்பி அவர்க்கு அதிக உபசாரஞ் செய்து, "ஓ சுவாமி! தாங்கள் மன்னர்கள் வாழு மிடங்களிற் சென்று அங்கு நடக்கும் அதிசயத்தைப் பார்த்துவருபவ ரென்று புகன்றமையால், அரசர்களுடைய நாட்டில் ஏதாவது அதிசய நடந்தாற் சொல்லவேண்டும்" என்ன, வேதியர் "ஓ விப் பிரர்களே! தற்காலத்தில் யாதொரு அதிசயமு மில்லை. ஆனால் 56 தேசத்திலும் வளப்பங்களிற் சிறந்த பாஞ்சாலதேசத்து அரசனா கிய துருபதன் அக்கினி வைசியரிடத்தில் வில்வித்தை கற்கிற நாளில், பாரத்துவாசர் புத்திரராகிய துரோணாசாரியும் அந்த அக் கினி வைசியரிடத்தில் வில்வித்தைக் கற்றுக்கொண்டிருந்தாராம். அவரிடத்தில் இந்தத் துருபதன் அருமையா யிருக்கிற சில வித்தை

களைக் கற்றுக்கொண்டு, தனக்குப் பட்டாபிஷேகமான காலத்துப் பாதிராச்சியங் கொடுக்கிறேனென்று வாக்குத்தத்தஞ்செய்துபோனானும். பின்பு துரோணாசாரி அவனிடத்திற் சென்ற காலத்து, அவ்வரசன் கூறிய வாக்குத்தத்தத்தை நிறைவேற்ற மனமில்லாமல் அவரைப் புல்லர்களைப் போல் எண்ணி மரியாதை செய்யாமலிருந்ததின்பேரில், துரோணர் சினங் கொள்ளாமல் ஆதியில் நடந்த வாக்குத்தத்தத்தைச் சொல்ல, அதை அரசன் மதிக்காமலிருக்க, துரோணர் "எனக்கு உன் இராச்சியம் வேண்டுவதில்லை. எனக்கு ஒரு பசுவாகிலுங் கொடு" என்று கேட்க, அரசன் அதுவுங் கொடாமல் ஏளனஞ் செய்தானும். பிறகு துரோணர் சினங்கொண்டு, "அடா பாஞ்சாலா! என் மாணாக்கரால் உன்னைக் கட்டிவரச் செய்து பங்கப்படுத்துகிறேன்" என்று சபதங் கூறி, அத்தினபுரத்துக் கதிபதியாகிய திரிதராஷ்டிரன் சகோதரன் பாண்டுராஜன் புத்திரர்களில் ஒருவனாகிய அர்ச்சுனனால் கட்டிவரச் செய்து, தன் சபையிற் பாஞ்சாலனைப் பங்கப்படுத்தினராம். அதன்மேற் பாஞ்சாலன் கோபித்து, தன்னைச் சபையில் பங்கப்படுத்தின துரோணரைக் கொல்ல ஒரு புத்திரனையும், தன்னை வெற்றிபெற்ற அர்ச்சுனன் தோளுக்கிசைய ஒரு புத்திரியையும் பெறுகிறேனென்று சபதங் கூறி, உபையாசன் யாசனென்னும் பெரியோர்களை யடுத்துப் புத்திர காமேஷ்டி யாகஞ்செய்து, ஒரு புத்திரனையும் புத்திரியையும் பெற்றானும்.

"அப் புத்திரி மங்கைப்பருவ மடையுங் காலத்தில், 'கூண்டோடு போயிற்று குளிருங் காய்ச்சலும்' என்கிற பழமொழிபோற் பாண்டுபுத்திரரைவரும் அவர்களை யீன்றவர்களும் அரக்கு மாளிகையோடும் வெந்து நீறாயினார்களாம். இந்தச் செய்தி பாஞ்சால னறிந்து சகிக்கக்கூடாத வருத்தமுற்று, அதன்மேல் இனியென்ன செய்கிறதென்று யோசித்துச் சிலவிதிகளை வைத்துச் சுயம் வரஞ் சாற்றி யிருக்கிறான். அந்த விதிகளைக் காதினாற் கேட்கும்போதே மிகுந்த பயத்தைக் கொடுக்கின்றது. அதைக் கண்ணாற் காணத்தகுந்த அரசர்கள் யார்? ஒருவருமில்லை அந்த விதிகள் என்னவெனில் வில்லில் வல்லவராயிருக்கிற அரசர்களெல்லாரும் கண்டவுடன் அஞ்சி மெய் நடுங்கப் பர்வதாகாரமாக இருக்கிற ஒரு வில்லும், தேவதாஸ்திர முதலியவை நிறைந்த ஒரு அம்புப் புட்டிலும் வைத்து. வெளியில் 70 அடி தோன்றத் தக்கதாக இரண்டு ஸ்தம்பம் 70 அடி பரப்பில் நட்டு, 70 அடி விட்டம் மேற்

பூட்டி, அதற்குமேல் இடைவிடாமற் சுழலும் சக்கரத்தைவைத்து, அதன்மேற் மச்சக்குறியை வைத்து, அந்த மூன்று விட்டத்துக்கும் மும்மூன்று துளைகளையுண்டாக்கி, பூமியிற் பெரிய வெள்ளிக் கடாரம் வைத்து, அதில் மஞ்சள் நீரை நிறைத்து, அத் துளைகள் அந் நீரில் தோன்றவும் உபாயமில்லாமற் பார்ப்பவர்கள் சாயல் அத் துளையை மறைக்கவும் நேர்படவைத்து, முன்சொன்ன அந்த வில்லை வளைத்து நாணேறிட்டு மஞ்சள் நீரிற் றோன்றும் துளைக் குறியின் வழியாக மூன்று கணைகளைத் தொடுத்து மேற்சுழலும் சக்கரத்தின் முனைவழியிற் கணைகளைப் போக்கி மச்சக்குறியை முன்னம் வீழ்த்தி, உடனே அம் மச்சம் சக்கரத்துக்குச் சரியாக வருகிறதற்குள் சக்கரத்தை விழுத்தி, சக்கரமும் மச்சமும் வெளிப்பட்டுப் பூமியில் விழுமுன் மற்றொரு கணையை போக்கி அவ் விரண்டையுங் கரத்திலேந்த வேண்டுமாம். இதுதான் சுயம்வரக் கோட்பாடுகள். இச் சுயவரம் நாளை உதயத்தில் நடக்கப்போகிறது. நாளைப் பதினொராநாள் உதயத்தில் வில்லை வளைக்கிறது. இதை நிறைவேற்றுபவன் எந்தப் புண்ணியவானோ? அக் கன்னிகையின் போகம் யாருக்கு லபிக்கின்றதோ? எனக்கொன்றும் தோன்ற வில்லை. என் புத்தியால் எவரையு மறியேன். ஆ! ஆ! அக் கன்னிகையினழகை என்னென்று சொல்லுவேன். ஆகிலும் என்னாற் கூடியமட்டும் அவள் வனப்பின் வளத்தைச் சிறிது மாத் திரஞ் சொல்லுகிறேன் கேண்மின்" என்று சொல்லுவ தாயினார்.

மேகமானது ஓலமிட்டு அந்தரத்துச் செல்லவும் கமுகமர மானது வனத்தி லடங்கவும், கருமணலானது நதிகளில் வீழவும், இருளானது குகைக்கு ளொளிக்கவும், பாசியானது கடலுளிருக்க வும், இரவியினொளி மழுங்கவும், ஆகாயத்தின்கண் கறுத்தெழுந்த ஊழிமாலைப்பொழு தஞ்சவும் விளங்கும் அளகத்தினையும்; பார்ப்ப வர் கண்களைத் தன் வயப்படுத்தி, பொன்னிறமாகிய சிந்தூரத் திலத மிட்டுச் சிறந்த ஒரு பிறைமேகத்தின் மத்தியிற் றோன்றியதுபோற் பிரகாசிக்குந் திலதத்தையணிந்த நெற்றியையும்; இரதியு மதனும் தங்கள் கரத்திலிருக்கும் கருப்பு வில் லிரண்டையும் தங்கள் குடையாகிய சந்திரனிடத்து வைத்தாற்போல் திகழும் புருவத்தையும்; கலங்கலிற் கடலையும் திரிதலிற் சேலையும் ஊடுருவப் பாய்தலில் வேலையும் மருட்சியில் மானையும் வெட்டுந் தொழிலில் வாளையும் இழிவுறச் செய்து, செவ்வரி கருவரி பரந்து, காதளவு நீண்டகன்று,

குழையைக் கிழித்து, சந்திரனைக் கண்டு மகிழும் நீலோற்பலம் போன்ற விழியையும்; குமிழம் பூவினையும் எள் மலரையும் குறைத்து, கண்களாகிய கடலிரண்டுங் கலவாதிருக்க நடுவே கரை யிட்டதென்ன விளங்கி நாகரத்தினத்தை யணிந்த நாசியையும்; வீழியின் கனியையும் கோவையின் கனியையும் முருக்கின் மல ரையும் முள்ளிலவின் மலரையும் வெண்ணிறமென இகழ்ந்து, ஆழியிற் பிறந்த அமுதத்தை முகந்த பவளக்கிண்ணத்தை யொத்த இதழையும்; வெண் முத்தையும் முல்லையரும்பையும் மயிலிற கடியையும் வெற்றிபெற்று, மின்னலைப்போ லொளிரும் தந்த பந்தி யையும்; வள்ளையின் இலையை அழகிலையென வுரைத்து, நவமணி யழுத்திய குழையைப் பொருது, பார்ப்பவருள்ள மூசலாடுதற் கிசைந்த ஊஞ்சலொத்த செவியையும்; இரவியைக் காணாத காலத்தும் வாடாதிருக்கிற கமலமும், தேய்வும் வளர்வும் மாசு மின்றி இருக்கு மதியுமிருந்தால், அவைகளும் நாணத்தகுந்த சிறப் பினை வகித்த முகத்தையும்; தேவர்கள் பணியு மாண்பினை யுடைய திருமால் கரத்திலிருக்கும் சங்கும் நாணப் பல இரேகைகளை யுடைய அழகிய கழுத்தையும்; கமல மலரையும் காந்தள் மலரை யும் உவமானமாகக் கூறினு மமையாத அகங்கையையும்; பவளத் துண்டும் கிள்ளையின் நாசியும் உவமானமாகக் கூறினு மொவ்வாத விரல்களையும்; கிள்ளையின் வாயினையொத்துச் சிவந்து பிர காசிக்கின்ற அவ் விரல்களினது நகங்களையும்; மலையென்றாற், புளகமில்லை; இளநீரென்றால், அது சந்தனம் புழுகு கஸ்தூரி கற்பூர சவ்வாது குங்குமங்களை யணியாது; கமலமொக்கென்றால், அழகிய தேமலை அது ஏற்காது; சக்கரவாகப் புள்ளென்றால், அது பறக்குந் தொழிலை யுடையது; மேலும் ஆபரணங்களைத் தரிக்காது; கோங்கரும்பென்றால், அது முகங் கறுத்திராது; மாரன் மகுடமென்றால், தண்ணென்றும் வெச்சென்று மிராது; ஆதலால் தானே தனக்குச் சரியாகி, திரண்டு பரந்து கிமிர்ந்து வளர்ந்து செறிந்து ததும்பி சுணங்கு படர்ந்து, கனத்துக் கண் கறுத்து, பொன் மலைக்கொத்து, இங்கிதத்தைக் கொண்டு புளகித்துப் பூரித்துப் பாரித்த முலையையும்; உலகினை அளந்த நெடிய மால் ஆலிலைமேற் சயனித்தல்போலும், ஒரு கரிய நாகம் மலையிலிருந்து அடிவாரத்திருக்குங் குகையிலடங்கச் செல் வதுபோலும் விளங்கி, ஆலிலை போன்ற வயிற்றினிடத்திருக்கு மயி ரொழுங்கினையும்; சிலர் கொடியைப்போல் அசைந்து, நூலைவிடச்

சிறுத்து, பூரித்த பயோதரத்தின் கனத்தைப் பொறுக்காது தேய்ந்தது, இச் சிற்றிடை யென்று உலகின்மாதருக் குரைப்பர். பிரமன் இந்த மாதுக்கு எல்லா அவயவங்களையு மிகவுஞ் சீர் பெறச் செய்தமையால், திருஷ்டி பரிகாரத்துக்காக இடையைச் செய்யாமல் விட்டானே? அல்லது மறந்தானே? இருக்கின்றதோ? இல்லையோ? இனிமேல் இடை யெய்துமோ? என்று ஐயப்படத்தக்கதான மருங்குலையும்; நீர்ச்சுழியை யொத்த உந்தியையும்; மாரன் பொக்கிஷமென்றும், மாரன் தேரென்றும், அரசருக்கெல்லாம் ஒன்பதாமிடத்திலிருந்து நல்லின்பத்தைக் கொடுக்கின்ற இராகுவென்கிற பாம்பென்றும் ஐயுறத் தகுந்த அல்குலையும்; வாழையையும், யானைத் துதிக்கையையும் வென்ற தொடையையும்; சிறந்த அழகினையுடைய இரண்டு வரால் மீன்கள் கண்களாகிய சேல்களின்மேற் பகைகொண்டு பாயும் பொருட்டுப் பாய்ச்சல் கொள்ளச் சுழலுவதை யொத்த கணைக்கால்களையும்; மதன சாஸ்திரத்தை எழுதுவதற்குச் சேர்த்த புத்தகத்தை யொத்த பதத்தையும்; சண்பகத்தையும் மின்னையும் பொன்னையும் பழிக்கும் தேககாந்தியையும்; கடலை வெறுக்கும் கிருபையையும்; கரும்பை மருட்டுஞ் சொல்லையும்; குயிலை வெருட்டும் தொனியையும்; மயிலை நாணுறச் செய்யும்; அன்னங்கள் வெட்கித் தலைவணங்க நடக்கும் நடையையுமுடையாள். கல்வியாற் கலைமகளையும், அவயவ லக்ஷணத்தால் இலக்குமியையும், பொறையாற் பூமிதேவியையும், கற்பால் அருந்ததியையும், தருமத்தாற் பார்வதியையும் ஒத்தவள். அழகுக்கழகுற அக்கினியி லுதித்த அந்த மாது அருச்சுனனுக்கே உரியவளென்று கருதியிருந்த பாஞ்சாலன், அந்த அருச்சுனன் அன்னை தமையன் தம்பியரொடு அரக்குமாளிகையி லிறந்துவிட்டானென்கிறதாகக் கேள்வியுற்றுப் பெரியோர்களை அநுசரித்து, அவர்களால் ஐவர் உயிரோ டிருக்கின்றாரென்று தெரிந்து, அவர்களை வருவிக்க அப்பெரியோர்கள் கூறிய சூழ்ச்சியின்படி சுயவரம் வைத்து, தேசதேசாதிபர்களுக்கு மணவோலையும் பாஞ்சாலிபோல் எழுதிய படத்தையும் அனுப்புவித்திருக்கிறான். இதுதான் நான் கண்ட அதிசயம். நான் மேற்றிசைக்குச் சென்று, அங்கிருக்கும் திவ்விய நதிகளில் ஸ்நானஞ் செய்து, ஸ்தலங்களைத் தரிசிக்க விருப்புற்றிருக்கிறேன். அவ்விருப்பம் நிறைவேற யான் செல்லுகிறேன்" என்று சொல்லி, ஐவர் செய்த வந்தனையை யேற்றுப் பல ஆசிகள், கூறி, நக

ரத்தைக் கடந்து, அவ்வுருவை நீக்கித் தமது சுயஸ்வரூபத்தைத் தரித்து, ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமதிருப்பிடஞ் சேர்ந்தார்.

---

## பாண்டவர் வேதவியாசரைத் தரிசித்துப் பாஞ்சாலதேசத்திற்குச் செல்லுதல்

---

இங்கே தருமராஜனனவர் பீமன் அருச்சுனன் முதலானவர்களை நோக்கி, "ஓ தம்பிமார்களே! ஆதியிற் பாஞ்சாலன் நம்மிலொருவனுகிய அருச்சுனனுக்கு ஒரு பெண்ணையும், நமதாசிரியராகிய துரோணரைக் கொல்ல ஒரு புத்திரனையும், பெறுகிறேனென்று சபதங்கூறி, அவ்வாறே புத்திரகாமேஷ்டி யாகஞ் செய்து மக்களைப் பெற்றுக்கொண்டான். அது உண்மை. இதனை உலகமெலாமறியும். இப்போது அந்தப் பாஞ்சாலன் நாமெல்லாம் அரக்குமாளிகையி லிறந்துவிட்டதாகக் கேள்வியுற்றுப் பெரியோர்களை அடுத்து, நாமுயிரோ டிருக்கிறதாக அறிந்து, நம்மைக் காணும்பொருட்டு ஒரு சுயவரம் வைத்திருக்கிறனென்று தீர்த்தவாசி வேதியராற் கேள்விப்பட்டோம். ஆகையால், நாளை உதயத்தில் வில்லைவளைக்கப் போவதால், நாம் இங்கிருந் தென்ன பயன்? நாமெல்லாம் நாளையுதயத்துக்குள் அவ்விடத்துக்குச் செல்லவேண்டும். இப்போதே போவோம் வாருங்கள்" என்றழைத்தார். தம்பிமார்களும் அன்னையு மிசைந்து, உடனே பிரயாணப்பட்டார்கள். இவர்கள் பிரயாணமாவதை அந்நகரத்திலிருந்த வேதியர்க ளறிந்து, அவர்களும் பூரி கொடுக்கும் பொருண்மேல் விருப்புற்றுப் புறப்பட்டார்கள். ஐவரும் நகரத்தைவிட்டு வெளிப்பட்டுக் காட்டைக் கடந்து வருவதைக்கண்ட சூரியன் இனி நாமிருப்பது தகுதியல்ல வென்று கருதி நீங்குவதுபோல், சந்திரனுக்குரிய இராக் காலத்தை ஐவர்பால் விடுத்துத் தான்மேற்றிசைக் கடலி லாழ்ந்தான். வேதியர்கள் மாலைப்பொழுதைக் கண்ட மாத்திரத்தில் அதிவேகமாகச் சென்றார்கள். அதைப் பாண்டவர்கள் கண்டு, 'நல்லது நீங்கள் முன்னதாகச் செல்லுங்கள்' என்று உத்தரவு கொடுத்து, அன்னையை அழைத்துக்கொண்டு மெதுவாகச் செல்லும்போது, என் குருவாகிய வேதவியாசர் அவ்விடத்துக்கு வந்து, தருமராஜனைத் தனியே யழைத்து, "ஓ தருமய

நந்தனே! நீ இராக்காலத்திற் கஞ்சாமல் தம்பிமாரோடு அதிவேகமாக் நடந்து, சூரிய உதயத்துக்குள் பாஞ்சால நகரம் சேருவீர்களானல், அருச்சுனன் வில்லை வளைத்து சுயவரத்தை நிறைவேற்றிப் பாஞ் சாலியின் மாலைக் குரியவனுவான். அந்தப் பாஞ்சாலி வினைவசத் தால் உங்களைவருக்கு முரியவளாவாள். அதற்கு நீ தடை சொல் லாதே. இதன் உட்கருத்தை நான் பாஞ்சாலன் சபையில் வந்து விளங்க உரைக்கிறேன். இதை ஒருவருக்கும் வெளியிடாதே" என்று சொல்லி இராத்திரிக்கே போய் சேருங்கள் என்று கட்டளை யிட்டு மறைந்துபோய் விட்டார். இவ்வாறு வேதவியாசர் மறைந் ததும் தருமராஜன் தம்பிமாரோடு கலந்து சந்தியாநுஷ்டானஞ் செய்யவேண்டி நதியைநாடிச் சென்றார். சிலதூரம் சென்றவுடன் கங்காநதி தோன்றிற்று. அங்கே ஐவரும் அந்திக் கடனை முடித்துக் கொண்டார்கள். இருளு மூடிக்கொண்டது. அருச்சுனன் தமை யன் தம்பிமார்களை நாற்சவுக்கமாகப் பிரித்து, மத்தியில் அன்னை யை வரச்சொல்லி, அங்குக் கிடந்த கோராங்குச்சிகளில் சில வற் றை யெடுத்துத் தலைப்பில் நறுக்கி, கல்லோடு கல்தாக்கி நெருப் புண்டாக்கி, அந்நெருப்பி லக்குச்சிகளைப் பற்றவைத்துத் தீவட்டி யாகக் கையிலேந்தித் தான் முன்னே நடந்து வழிகாட்டி, அந் நாட்டு வழியைவிட்டுக் காட்டு வழியைத்தொட்டு கங்கையோர மாகவே செல்வோமென்று கருதி நடந்தான். ஐவரும் பின்றொடர் ந்து வந்தார்கள். இவ்வாறு கங்கைக் கரையோரமாக நெடுந்தூரம் நடந்து போகும்போது, அங்கே ஒரு அதிசயம் நடந்தது. அதைச் சொல்லுகிறேன் கேளும்" என்று வைசம்பாயனர் சொல்லு வதாயினர்.

---

## பாண்டவரைக் கந்தர்வராஜனுகிய சித்திராங்கதன் சிநேகித்தல்

---

"ஓ ஜனமேஜய மஹாராஜனே! அந்தரவாசிகளாகிய தேவர்-முனிவர் - கிம்புருடர் - கருடர் - காந்தருவர் - வித்தியாதரர் என் னும் தேவவகுப்பிற் காந்தருவகுலத்தி லுதித்தவனும் அந்தர லோகவாசியாயுமிருந்து, சொர்க்கமத்திய பாதாளமென்கிற மூன்று லகங்களிலும் வெற்றியால் தன்பெயரை நாட்டி விற்பிடித்தவர்

களை யெல்லாம் தன்னுண்மையினால் ஒரு திரணமாக எண்ணி; அஷ்டதிக்குந்துதிக்க வெற்றிபெறுந் திறத்தி லுயர்ந்து, மாரனென்ன விளங்கி வீற்றிருக்கும் சித்திராங்கதனென்னும் ஓர் அரசனுளன். அவ்வரசன் தன் தேவிமாரோடு கேளிக்கையா யிருக்கவும் ஜலக்கிரீடை செய்யவும் காதலித்து, கங்காநதியருகில் வந்து ஒரு சிங்கார வனம் வைத்து, கங்கைக் கரையையும் வளைத்து வேலியிட்டு, தினம தினம் அவ்வனத்தில் வந்திறங்கி ஜலக்கிரீடை விளையாடிக் கொண்டிருந்து தன்னூருக்குப்போய் விடுவான். இந்தச் சித்திராங்கதன் வில்வித்தையில் தேர்ந்தவனாதலால், உலகிலுள்ள அரசர்களும் தேவர்களும் அவ்வனத்தின் திசையைக் கண்ணுற் பார்க்க அஞ்சுவார்கள். அத்தகைய வனத்தின் வழியாகப் பாண்டுமக்களைவருஞ் சென்றார்கள். குறுக்கே வேலியொன்று தோன்றிற்று. முன்னே போய்க்கொண் டிருந்த அர்ச்சுனன் அவ்வேலியைப் பார்த்து, "அடடா !! இவ்வேலியைக் கடந்துபோனால் தருமத்துக்கு விரோதம். வேலியைத்தாண்டாமல் மற்றொரு வழியாகச் செல்லுவோமென்றால் இவ்வேலிக்கு ஆதியுமந்தமும் தோன்றவில்லை. மேலும் தண்ணீர்ப்பந்தல்-சத்திரம்-ஆலயம் - திருக்குளம் - நதி இவையெல்லாம் ஒருவர் ஆதீனமல்ல. இது நதிதீரம் இந்த நதியைச்சேர்த்து வேலியிட்டிருப்பது ' இது நீதிக்கு விரோதம். யாரோ மமதையினால் வேலிபோட் டிருக்கிறார்கள். நாம் இதனைக் கடந்து போவதிற் குற்றமில்லை" என்று தனக்குள் தீர்மானித்து, அர்ச்சுனன் அவ்வேலியைத் தாண்டி நடந்தான். மற்ற ஐவரும் அர்ச்சுனனைப் போலவே கடந்து போனார்கள்.

அந்த வேளையிற் சித்திராங்கதன் தன் தேவிமாரோடு ஜலக்கிரீடை செய்துகொண்டிருந்தான். அவன் தேவிமார்கள் இந்த அறுவரையுங்கண்டு திடுக்கிட் டெழுந்தோடித் தங்கள் தங்கள் வஸ்திரங்களை யுடுத்துக்கொண்டார்கள். சித்திராங்கதன் ஆள்வரவைக் கண்டு மிகுந்த சினங்கொண்டு கரையேறி, ஆடை ஆபரணங்களை யணிந்து, அம்புப் புட்டிலை முதுகிற்றாங்கி வீராவேசங் கொண்டு தேரிலேறி, வில்லெடுத்துக் குணத்தொனிசெய்து டங்காரவோசையெழுப்பி, "பயமில்லாமல் இவ்வனத்தில் நடக்கிறவன் ஆரடா? ஆரடா?" என்றதட்டி, அதிவேகமாக இரதத்தைச் செலுத்தி முன்னே சென்றுகொண்டிருந்த அர்ச்சுனனை வளைத்து, "ஓ பஞ்சைப் பிராமணா! நீயும் உன் பின் வருகிறவர்களும் யார்? எங்குச் செல்லுகிறீர்கள்? இவ்வனத்தி லேன் வந்தீர்கள்? என் பெயர் உங்க

ளுக்குத் தெரியாதா? சித்திராங்கதனென்றால் திரிபுவனங்களி லுள்ள அரசர்களும் நடுங்கித் தலைகுனிந்து தண்டமிடுவார்களே. பார்ப்பாராகிய நீங்கள் இவ்வனத்துக்கு ஏன் வந்தீர்கள். நில் லுங்கள் நில்லுங்கள். உங்களுக்காகப் பிரமன் திருமால் உருத் திரனென்னு மூவர் துணைவந்தபோதிலும் உங்களை என்பாணத்துக் கிரையாக்காமல் விடுகிறதில்லை" என்று ஆடம்பரஞ் செய்தான். தருமன் முதலானவர்கள் அவன் வார்த்தையைக்கேட்டு, முன்னே செல்லுகின்றவன் அர்ச்சுனனாதலால் அவனையன்றி நாம் விடை கொடுப்பது தகுதியல்ல, அப்படியல்லவென்று பேசினால் அர்ச் சுனன் கோபிப்பானென்று வாய்பேசாமல் அர்ச்சுனனை நாடி நடந் தார்கள். சித்திராங்கதன் அதிகச் சினங்கொண்டு, "என்னடா பார்ப்பாரப்பையலே! நான்கேட்ட மொழிக்கு விடைகொடுக்காமலும் என்னைக் கண்டு அஞ்சாமலும் நடக்கிறாய்" என்றெதிர்த்து வந்து மறித்தான்.

அர்ச்சுனன் அதிகச் சினங்கொண்டு, "அடா சித்திராங்கதா! உன் வனத்தில் வந்தோமென்று சொல்கிறாய். நாங்கள் உன் வனத்துக்கு வரவேண்டுமென்கிற கருத்தைக்கொண்டு வரவில்லை. நாங்கள் பாஞ்சால நகரத்துக்குச் செல்லக்கருதிக் கங்கைக்கரை யோரமாக வருகிறோம். நீ ஆணவங்கொண்டு, நம்மைக் கேட்ப வர் இல்லையென்று இறுமாப்படைந்து, கங்கைக்கரை எல்லோருக் கும் பொதுவென்றுணராமல், தருமசாஸ்திரத்துக்கு விரோதமாக வேலியிட்டாய். உன்னிடத்திற் கனமான குற்றமிருக்க, கங்கைக்கரை மீதே செல்லுகின்ற எங்களை ஏன் மறித்து வாயில் வந்தபடி உளறு கிறாய்? கங்கைக் கரையை வளைத்து வேலியிட்டதற்கு உன்னைத் தண்டிக்கவேண்டியது. நீ அறியாது செய்தமையால் நான் உன்னை மன்னித்தேன். இனி நீ இவ்விடத்தில் நிற்கவேண்டாம். உன்னிருப்பிடத்துக்குப் போ. இல்லாவிட்டால் உன் வில்திறத் தைக் காட்டு. இங்கு நின்றுகொண்டு வாயில் வந்தபடி பிதற் றாதே. போ! போ!" என்றான் சித்திராங்கதன் காலாக்கினி ருத்திரனைப் போலக் கோபித்து, திக்குத்திசைகளெல்லாம் நடுங்க அட்டகாசஞ் செய்து, "அடா பிராமணப்பயலே! நீயா என்னைத் தண்டிப்பவன்? சபாஷ்! நன்றாயிருக்கின்றது. 'இதோ உன்னையும் உன் பின்னே வருபவரையும் யமலோகத்துக்கு அனுப்புகிறேன் பார்" என்று கையிலுள்ளவில்லில் அநேகபாணங்களைத் தொடுத்து; இந்திரன் கட்டளைப்படி ஆயர்பாடியில்வந்து பொழிந்த சோனை

மாரிபோல் யேவினன். இதனைக் கண்ட தருமராஜன் முதலான - வர்கள் ஆயுதமில்லாதவர்க ளாகையால், "ஐயோ! இதென்ன விபரீதம்? 'கிணறு வெட்டப்போய் பூதம்புறப்பட்டது' என் கிற பழமொழிபோல், நாம் திரௌபதை மணத்துக்கு வெளிப்பட்டு யுத்தத்துக் காளானோம். நமக்கோ ஆயுதமில்லை. நாமெல்லாரும் ஒருமித்து இவன்மே லெதிர்ப்போமென்றால், முன்னமிருக்கிறவன் அர்ச்சுனன், அவன் "நானிருக்க நீங்களேன் வந்தீர்கள்" என்று கோபிப்பான். வருகிற கணைகளோ அளவில்லை. இதற்கென்ன செய் வது" என்று ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கி நின்றார்கள்.

அர்ச்சுனன் சித்திராங்கதன் விடுத்த கணைகளை யெல்லாம் தன் கையிலிருக்கும் கொள்ளிக்கட்டையால் தட்டிவிட்டுச் சித்தி ராங்கதனை நோக்கி, "அடா சித்திராங்கதா! நீயே வீரன், நீயே தீரன். உன்னைப்போன்ற வீரன் உலகத்திலில்லை. எதிரிகள் தம் கையில் ஆயுதமில்லாமலிருக்க அவர்களை யெதிர்க்கலாமா? அல் லது உனக்குப் போர் செய்ய எண்ணமிருந்தால் அவர்களைப்போல் நிராயுதபாணியாக வல்லவோ வரவேண்டும்? உன்னுடைய வீரம் இதுதானோ? இருந்தாலும் உன் திறத்தைக் காட்டு" என்று சொல்லி மலைபோ லெதிர்நின்றான். சித்திராங்கதன் உக்கிரங்கொண்டு, ஓரிலை வேல்முகக்கணை - ஈரிலைவேல்முகக்கணை - மூவிலைவேல்முகக்கணை என்னுமிவைகளோடு மகா தேஜசோடுங் கூடியதாகிய பிறைமுகக் கணை-கமலமுகக்கணை முதலியவற்றையும், ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம், லக்ஷம், பத்து லக்ஷம், கோடி, பத்து கோடி, சங்கம் மஹாசங்கமாகத் தொடுத்துவிட்டான். அக்கணைக ளொன்றோ டொன்று உராய்ந்து, வடவாமுகாக்கினிபோல் அனலைக் கக்கி இடி-முழக்கத்தோடும் வந்தன. அவைகளை அர்ச்சுனன் கண்டு புன்சிரிப்புகொண்டு, "இனி நாம் சும்மாவிருந்தால் இக் கணைகளில் ஒன்று படுமாயிற் கனவருத்த முண்டாம்" என்று தக்ஷணம் தன் கையிலிருந்த கொள்ளிக் கற்றையை யெடுத்து நிறுத்தி, அக் கினியாஸ்திரத்துக்குரிய மந்திரத்தை யுச்சரித்து மானதபூசை செய்து, "ஓ கொள்ளிக் காட்டமே! நீ இச்சித்திராங்கதன் விடு கின்ற எல்லாக் கணைகளையும் கெளஎீகரஞ் செய்து விட்டு, தேரை அழுத்தி, வில்லை முறித்து, சித்திராங்கதனையும் பிடித்து எரிக்கக் கடவை" என்று கட்டளையிட்டான். அது கோராங்குச்சியா யிருந்தா லும் அதில் ஆவாகனஞ் செய்திருப்பது அக்கினியாஸ்திர மந்திர மாதலால், அக்கினிபகவான் அக் கொள்ளிக்குச்சியின் முனையி

னின்று, சித்திராங்கதன் விட்ட கணைகளையும் அவன் தேரையும் நீறாக்கி, கொடியைஅறுத்து, வில்லையொடித்து, அம்புபெய் புட்டிலைப் பூமியிற்றள்ளி, அவனையும் பற்றி எரிக்கத்தலைப்பட்டது.

சித்திராங்கதன் கடுகடுத்துக் கருகருத்துச் சகிக்கமாட்டாமற் பூமியில் விழுந்து, கடகடவென்று புரண்டுருண்டு, அரண்டு வெருண்டு பேச்சுமூச்சு விட்டு மூர்ச்சையாயினன். உடனே அர்ச்சுனன் அவன் சிகையைப்பற்றி இழுத்து வந்து, தன் தமையனாகிய தருமராஜன் பாதத்திற் போட்டான். தருமராஜன் தம்பியை வியந்தார். சித்திராங்கதன் அடங்கி யொடுங்கிக் கிடப்பதைப் பார்த்திருக்கும் போது, சித்திராங்கதனுடைய தேவிமார் ஓடிவந்து, குந்திதேவி காலில் விழுந்து, தங்கள் தங்கள் முன் தானையையேந்தி மாங்கலியப்பிச்சை கேட்டார்கள். குந்திதேவி தருமன் முகத்தை நோக்கினாள். தருமன் அக்குறிப்புணர்ந்து தம்பியைப் பார்த்து "தம்பி அர்ச்சுனா! இந்தச் சித்திராங்கதன் தெரியாத் தனமாக நம்மை எதிர்த்து ஏதோ சில வாய்வம்பு பேசினான். அதற்குப் பிராயச்சித்தமாயிற்று. இனி இவனை சுகப்படச்செய்" என்று சொல்ல அர்ச்சுனன் தமையன் சொல்லை மறுக்காதவனாதலால் உடனே அந்த அக்கினியாஸ்திரந் தணியும்படி மந்திரத்தை யுச்சரித்து, அனலாற் கருகிய சித்திராங்கதனைக் குளிரவைத்தான். சித்திராங்கதன் அனல்வேகந் தீர்ந்து, நித்திரை செய்தெழுந்தவன்போ லெழுந்திருந்து, ஐவரையும் குந்திதேவியையும் நோக்கி, "ஆ! ஆ! இவர்கள் ஐவரும் பஞ்சகர்த்தாக்களைப்போலிருக்கிறார்கள். இந்த அம்மன் பராசக்தியைப்போ லிருக்கிறார்கள். இவர்கள் பார்ப்பதற்குப் பிராமணரா யிருந்தாலும் செய்கையில் க்ஷத்திரியராக இருக்கிறார்கள். இவ்வுலகத்திற் சந்திரவமிசதிலகனாகிய அர்ச்சுனன் ஒருவனைத் தவிர, மற்ற அரசர்கள் நமது பெயரை நினைக்கவும் பயப்படுவார்கள். ஆதலால் இவ்வைவரும் பாண்டவர்களாகத் தான் இருக்கவேண்டும். அதோ யிருக்கிற அம்மன் குந்திதேவி என்று கருதிப் படிகறிம்படைத்த யுதிஷ்டிரமகாராஜனாகிய வேதியன் பாதத்தில் வணங்கி, "ஓ சுவாமி! நீங்கள் பிராமணரல்ல. அத்தினபுரத்துக் கதிபதியாகிய பாண்டுராஜன் புத்திரரென்று நம்புகிறேன். இல்லாவிட்டால் என்னை வெல்லமாட்டீர்கள். அர்ச்சுனன் ஒருவன் தான் என்னை வெற்றி கொள்ளத் தக்கவன். இவ்வாறு ஆதியில் வில்லரங் கேற்றும்

போதே எனக்கு ஒருவாக்குண்டு. ஆதலால் ஒளியாமல் உங்கள் வரலாற்றைச் சொல்ல வேண்டும்" என்று வினயத்துடன் கேட்டான்.

தருமராஜன் தாங்கள் இளவரசுப் பட்டம் பெற்றுக் காசிக்கு வந்ததுமுதற் பாஞ்சால நகரத்தை நாடி வந்தது பரியந்தம் சொன்னார். சித்திராங்கதன் மகிழ்ந்து, "ஓ சுவாமி என்னை வெற்றி பெற்ற அக்கினியாஸ்திர மந்திரத்தை யுபதேசிக்கும்படி உமக்கிளையவனாகிய அர்ச்சுனனுக்குக் கட்டளையிடும்" என்று பிரார்த்தித்தான். தருமராஜன் அர்ச்சுனனை நோக்கினார்: அர்ச்சுனன் சித்திராங்கதனை யருகி லழைத்து அம் மந்திரத்தை யுபதேசிக்கச் சித்திராங்கதன் அம் மந்திரத்தைப் பெற்றுத் தருமராஜனை வணங்கி, "ஓ சுவாமி! அடியேன் குருதக்ஷணையாகக் காந்தர்வப் புரவியில் - 500 - கொடுக்கிறேன். அவைகளை அங்கீகாரஞ் செய்து கொள்ளவேண்டும்" என்று வேண்ட தருமராஜன் "ஓ சித்திராங்கதா! நீ கொடுக்கிறே னென்கிற குதிரை உன்னிடத்தில் தானே யிருக்கட்டும். நாங்கள் எப்போது எங்கள் ஊரை அடைகிறோமே அப்போது அதைக் கொடு" என்றார். சித்திராங்கதன் மறுபடியும் வணங்கி "ஓ சுவாமி! தாங்கள் பாஞ்சால நகரத்துக்குச் செல்லவேண்டி யிருப்பதினால் இன்னும் வெகு தூரம் போக வேண்டும். நீங்களோ உதயமாகிறதற்குட் செல்ல வேண்டு மென்கிறீர்கள். கால்நடையாய் இவ்வழியாகச் சென்றால் மூன்று நாட் செல்லும். என்னிடத்தில் தெய்வ விமானமும் வேண்டிய வாகனங்களுமிருக்கின்றன. அவைகளில் தங்கள் தங்கட் கிஷ்டமான ஊர்திகளி லேறிச் செல்லுங்கள்" என்று வேண்டினான். தருமராஜன் "எங்கட்கு யாதொன்றும் வேண்டியதில்லை" யென்று மறுத்தார். சித்திராங்கதன் மற்றுமொருதரம் வணங்கி "ஓ சுவாமி! தேவரீருக்கு வாகனமேறச் சம்மதமில்லா விட்டால், அடியேன் கூடவந்து தங்களைநேரான வழியில் அழைத்துப் போய்ப் பாஞ்சால நகரத்தருகில் விட்டுவருகிறேன், வாருங்கள்" என்று அழைக்க, தருமராஜன் முதலானவர்கள் அதற் கிசைந்து நடக்க, சித்திராங்கதன் நேரானவழியி லழைத்துப் போகிறபோது தருமராஜனையும் மற்றவர்களையும் பார்த்துச் சொல்லுகின்றான்—

"ஓ கனவான்களே! உலகத்திற் பெறுதற்கருமை அறிவுடைமை - அன்புடைமை - அருளுடைமை - அடக்க முடைமை - ஊக்க

முடைமை - பொருளுடைமை - ஒழுக்க முடைமை ஆகிய இவைக ளாம். இவைகளை யெல்லாங் குறைவறப் பெற்று, பொறுமை - ஆசை - கடுஞ்சொல் - சினம் - புறங்கூறல் முதலியவற்றை நீக்கி நின்றாலும், யாதேனும் ஓர் காரியங் கைகூட வேண்டுமானால் ஓர் ஆசாரியர் வேண்டும். குருவில்லாவிடில் ஒரு காலத்தில் மேற்கூறிய பண்புகளெல்லா மிருந்தும் பயன்படாமற் போய் விடும். குருவிருந்தால் எக்காலத்து மழிவில்லாமல் நாளுக்கு நாள் பிரபலப்பட்டு வாழலாம். இதற்குத் திருஷ்டாந்தம் புறம் பிற் சாட்டவேண்டுவதில்லை. உங்கள் வமிசத்தில்தானே இருக் கின்றது. அதாவது : உங்கள் முன்னோர்களி லொருவனாகிய சவ்வருணன் பெறுதற் கருமையாகிய அவ்வறிவுடைமை முதலிய வற்றைப் பெற்றுப் பொறுமை முதலிய துர்க்குணங்களை நீக்கி, தருமதேவதை நாலுபாதத்தினால் நடக்கவும் எல்லா அரசர்களும் தன்னை வணங்கவும் - செங்கோல் நடத்திய பராக்கிரமசாலி. அவன் ஒரு நாள் காட்டிற் சென்று வேட்டையாடித் தாகவிடாய் தணிய ஒரு தடாகத்துக்கு வந்தபோது, அங்குச் சூரியன் புத்திரி யாகிய தபதி தன் தாதிமார்களோடு ஜலக்கிரீடை செய்ய வந்தாள். அவளை அரசன் நோக்கி அதிக மையல்கொண்டான். அத்தபதியும் அரசன் அழகைக்கண்டு மையலானாள். ஆனால் அக் கன்னிகை சூரியன் புதல்வி யாதலால் தந்தையின் அநுமதியிற் கூடவேண்டு மென்று கருதி, சவ்வருணனை நோக்கி, "ஓ அரசனே! உன்னை மணம்புரிய எனக்குக் கருத்திருந்தாலும், என் தந்தை உத்தரவின் மேல் மணம்புரியவேண்டும். ஆதலால், என் தந்தையின் உத் தரவு கிடைக்கு முயற்சியை அதிக விரைவிலே தேடவேண்டும்" என்று கூறி மறைந்தாள். சவ்வருணன் அதிக பராக்கிரம சாலியா யிருந்தும் ஒரு நொடிக்குள் லக்ஷத்திருபத்தையாயிரம் யோசனை தூரம் செல்லும் வேகத்தையுடைய இரதத்தை நடாத்துகின்ற சூரிய னோடு பேச வல்லமையற்றவனாகிக் கனவருத்த மடைந்து, நாளுக்கு நாள் காமநோயால் வருந்தி, வடிவு மனவூக்கம் குணமுதலிய வற்றை இழந்தான். அக் காலத்தில் வசிஷ்டர் வந்து அரசன் தேகக்குறியைக் கண்டு, அவன் மனதிற் குடிகொண்டிருக்கும் குறையை ஞானதிருஷ்டியா லுணர்ந்து, உடனே சூரியனிடத் துச் சென்று பேசி, தபதியைக் கொண்டு வந்து சவ்வருணனுக்கு மணம்புரிவித்தார். அந்தத் தபதிவயிற்றி லுதித்தவன் தான் குரு மஹாராஜன். அவனால் உங்கள் குலத்துக்குக் குருகுலமென்று

பெயராயிற்று. ஆகையால் ஆசாரியரொருவ ரிருக்க வேண்டும்” என்றுரைத்தான். இவ்வாறு சவ்வாருண மஹாராஜன் சரித்திரத்தைச் சாங்கோபாங்கமாகக் கேட்ட தருமராஜன் முதலானவர்கள் அக் கருத்துக் கிசைந்தவராகி மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்கள். இவர்களில் அர்ச்சுனன் சித்திராங்கதனை நோக்கி “ஐயா காந்தருவசிகாமணியே! எங்கள் மூதாதையர்க்கு உபகாரியாகிய வசிஷ்டர் கதை நன்றாயிருக்கின்றது. இன்னும் அவர் விஷயமாகிய கதைகளைக் கேட்க நான் விருப்பங் கொண் டிருக்கிறேன். நீர் அக் கதைகளை வரன்முறையாக விளம்புவீரானால் நடந்து போகும் சிரமம் தோன்றாம லிருக்கும்” என்று கேட்கச் சித்திராங்கதன் அதற் கிசைந்து, அவ் வசிஷ்ட முனிவர் சரித்திரத்தை வரன்முறையாகச் சொல்லுகிறான்.

---

## பாண்டவர் காந்தருவராஜனால் வசிஷ்டர் சரிதத்தைக்கேட்டு வழிநடத்தல்

---

“கேளுங்கள் புண்ணியவான்களே! முன்னம் காதி மைந்தனாகிய கௌசிக மகாராஜன் மண்டலேஸ்வரனாக அரசு செய்துவருங் காலத்தில், ஒரு நாள் தன் புத்திரர் மித்திரர்கள் - மற்றுமுள்ள மந்திரிமார்கள்-தண்டத் தலைவர்கள்-அணித்தலைவர்கள் முதலானவர்களோடு காட்டிற்குச்சென்று வேட்டையாடினான். அப்போது, கௌசிக ராஜன் கண்முன் ஒரு கலைமான் தோன்றிற்று. அரசன் அதனை எய்யக் கருதி, மந்திரிமக ரிருபுறமும் சூழ்ந்துவர அம் மானைப் பின்தொடர்ந்தான். அந்த மான் சூரியன் இரதத்திற் பூட்டிய குதிரையை விட அதிக வேகமாக எழும்பி, தன்னையும் சூரியனையுந் தூளிகளால் மறைக்கப் புறங்கால்களாற் பூமியை உதைத்தோடிற்று. அரசனும் மற்றவர்களும் அதை விடாமல் தங்கள் தங்கள் வாகனங்களை முடுக்கிச் சென்றும், அம் மானை எய்வதற்குச் சக்தியற்றவர்களாய் மெய்சோர்ந்து காணாமல் அதிக வருத்தமுற்றுத் திரும்பினார்கள். அப்போது சூரியனும் உச்சியில் வந்தான். அந்தச் சூரிய அழற்சியால் அரசன் முதலானவர்களும் விடாய்ப்பட்டுக் கனவருத்தமுற்று, தண்ணீரையும் நிழலையும் எப்போது காண்போமென்கிற ஏக்கமுற்று வந்துகொண்டிருந்தார்கள்.

அப்படி வருகிற மார்க்கத்திற் குளிர்ந்த நிழலைக்கொடுத்து மாரன் படை வீடுபோல் விளங்கும் நெருங்கிய மரங்களையுடைய ஒரு பூஞ்சோலையைக் கண்டு, இவ் வனம் தோன்றியது நாம் பூர்வஞ் செய்த பூஜாபலந்தானென்று தீர்மானித்து அச் சோலையில் வந்து அங்கிருக்கும் தடாகத்திலிறங்கிக் களைதீர ஸ்நானஞ்செய்து, நீரருந்தித் தாகவிடாய் தணிந்து, அங்கிருந்து மரத்தின் நிழலிற் சற்று இளைப்பாறி இருந்தார்கள்.

அரசன் அவ்விடத்திற் சில முனிவர்கள் வரக்கண்டு திடுக்கிட்டு, இவ் வனம் முனிவர் வாசஞ்செய்யத் தக்கதாகையால் முனிவர்கள் வருகிறார்களென்று நினைத்து, அவர்களை எதிர்கொண்டு போய் நமஸ்காரஞ்செய்து, "ஓ தவசிரேஷ்டர்களே! இவ் வனம் எந்த மஹாத்மாவுக் குரியது?" என்றான். அம் முனிவர்கள் பல ஆசிகள் கூறி, "ஓ அரசனே! இவ்வனம் பிரம்ம ரிஷியாகிய வசிஷ்டருக் குரியது" என்று தெரிவித்தார்கள். அரசன் அக்கணம் வசிஷ்டரைத் தரிசிக்கவேண்டுமென்று அவருடைய ஆசிரமத்தைக் கண்டுஉட்சென்று, சூரியகுல குருவைச்சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, "ஓ சுவாமி! முனிவருடைய வனங்களுக்கு அரசர் வரக் கூடாது. நான் காட்டிற் புகுந்து வேட்டையாடி ஒரு மானைக் கண்டு அதனை எய்யப் பின்றொடர, அம்மான் மறைந்துபோக, யானும் என்னைச் சூழ்ந்துவந்த சேனையும் அதிகக் களைப்படைந்து நிழலையும் ஜலத்தையும் தேடி வருகிறபோது இவ்வனந் தோன்றிற்று. இதில் நாங்கள் அனைவரும் வந்து களைதீர ஸ்நானஞ் செய்து, தண்ணீர் குடித்து விடாய் தணிந்து மரநிழலி லிருந்தோம். அப்போது இங்குச் சில முனிவரைக்கண்டு, அவர்களால் இவ்வனந் தங்களுடையதென்று தெரிந்துகொண்டு தங்களைக் காண வந்தேன். ஆதலால் தாங்கள் கோபிக்காமல் என்னை ஆதரிக்க வேண்டும்" என்று வேண்டினான். இப்படி வணங்கிய அரசனுக்கு வசிஷ்டர் பல ஆசிகள் வழங்கி முகமலர்ந்து, அவன் மனங் களிப்பெய்தும்படியாகச் சில இனிய வசனங்களை யெடுத்துச் சொல்லுகிறார்—

"ஓ கௌசிகமகாராஜனே! நீ இவ்வனத்துக்கு வந்ததினால் எனக்கொரு குறைவு மில்லை. என் வனத்தைத்தேடி வந்த உனக்கு என்றற் கூடியமட்டும் விருந்திட எண்ணங்கொண்டேன். அந்த எண்ணத்தைநீ நிறைவேற்ற வேண்டியது. எனக்கு அதுதானொரு குறை. அக்குறை நீங்கும்படி விருந்துக்கு ஒப்புக்கொண்டால் எனக்

கொரு குறையுமில்லை" என்று ஆசான் சொல்ல, அரசன் சற்று லோசித்து, "ஓ சுவாமி! தாங்கள் விருந்திடுவதாகச் சொல்கிறீர் கள். உங்கள் வாக்குக் கழிவுவராமல் நானிசைந்து விருந்துண்டு போவேனுனல், என்னுடன் வந்த புத்திரர் - மித்திரர் - மந்திரிகள் முதலானவர்க்கு வருத்தம் நேரிடுவது மன்றி நீதிக்கு விரோத மாகவு மிருக்கின்றது. ஆதலால் இதற்கென்னசெய்வது" என்றான். அதற்கு வசிஷ்டர் புன்சிரிப்பு கொண்டு "ஓ அரசனே! உனக்கும் உன்பின்வந்த யாவர்க்கும் என்னு லியைந்த கந்தமூல பலாதிகள் கொடுக்கத்தான் விருப்புற் றிருக்கிறேன். என்னு லுதவப்பட்டது இராஜபோஜனமாக இராது. இருந்தாலும், அதனை அங்கீகாரஞ் செய்வது உனது கடமை. நீயும் உன் பின் வந்தவரும் ஸ்நான முதலிய நித்தியவிதியை முடித்துக் கொள்ளுங்கள்" என்றார். கௌசிகராஜன் அதற் கிசைந்து, முன்னிருந்த விடத்துக்கு வந்து, தன் மந்திரிமுதலானவர்களை யழைத்து, தான் வசிஷ்டரிடத்துச் சென்றதையும் விருந்துக் கிசைந்து வந்ததையும் புகன்று, "எல் லோரும் ஸ்நானஞ்செய் திருங்கள்" என்று கட்டளை யிட்டான். அரச னேவலின்படி யாவரும் ஸ்நானஞ்செய்து, வசிஷ்டர் உத்தர வுக் கெதிர்பார்த் திருந்தார்கள். வசிஷ்டர் தன்னருகி லிருக்குங் காமதேனுவை நோக்கி, "நமது வனத்தில் வந்திருக்கிற யாவரு மன மகிழ விருந்திட்டு உபசரித்து வா" என்று கட்டளையிட்டார். காமதேனு அவர் வாக்கியத்தைச் சிரமேற் கொண்டு, அநேகமாதர் கூட்டங்களாகி யார் யார் எந்தெந்த இடங்களி லிருந்தார்களோ அவ்வவ் விடங்களில் இலை போட்டு, அவ்வவ் விலைகளிற் கைத் தல் - புளித்தல் - கார்த்தல் - கூர்த்தல் - துவர்த்தல் - தித்தித் தல் என்னும் அறுசுவையோடுங் கூடிய கறிவகைகளுடன் அன் னத்தையும் வட்டித்து, நெய் - தயிர் - வடை - பாயாச முதலிய வற்றையும் குறைவில்லாமற் படைத்து, அவரவர்களுக்கு வேண் டிய வஸ்துக்களையுங் கொடுத்தது. இன்றையப் போஜனத் தைப் போல் என்றும் புசித்ததில்லை யென்று யாவரும் மதித்துத் துதித்துப் புசித்துப், பசித்துவந்த களைதணிந்து, கைகால்களை சுத்திசெய்து கொண்டார்கள். உடனே சந்தனம் - புனுகு - கஸ் தூரி - கற்பூரம் - சவ்வாது முதலியவைகளோடு, குங்குமக் குழம் பும் - பூமாலையும் - தாம்பூலமும் குறைவின்றி வைத்து, யானை - குதிரை - வேட்டைநாய் - புறு - வல்லூர்ப்பக்ஷி, முதலியவை களுக்கும் தகுந்த உணவை யளித்து, காமதேனு யதாப்பிரகாரந் தன்னுருவந் தாங்கிப் போயிற்று.

கௌசிகராஜன் காமதேனுசெய்த அற்புதத்தைக் கண்டு வியப்படைந்து, "நாம் அநேகம் பசுமந்தைகளை வைத்திருக்கிறோம். முனிவர்களிடத்துஞ் சில பசு மந்தைகளைக் கண்டிருக்கிறோம். அவைகளெல்லாம் முலை வழியாகத் தாராளமாய்ப் பாலைச் சொரிகின்றனவே யன்றி, இப் பசு செய்த அற்புதம்போற் செய்யத் தகுந்தவைக ளல்ல. இக் காமதேனு நமக்கிருந்தால் நமக்கென்ன குறை? இதை எவ்விதத்திலாவது நமக்குரியதாகக் கொள்ள வேண்டும்" என்றெண்ணிச் சில மனிதரோடு வசிஷ்டரிடத்துச் சென்று, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, "ஓ ஆண்டவனே! தற்காலத்தில் நாங்க ளடைந்த களை நீங்க எங்கள் கருத்தறிந்து போஜனம் படைத்த பசு உங்களிடத்தில் இருந்து பயனென்ன? உலகாதிபனுதலால் என்னிடத்தி லிருந்தால் என்னைக் காண அளவற்ற பிரஜைகள் வருவார்கள். மஹா முனிவர்களும் ஏழைகளும் வந்தடைவார்கள். அவர்கள் மனங்களிக்க இப் பசுவால் உண்டி முதலியவற்றை யுதவுவேன். அதனுல் தங்களுக்கும், அப் பசுவுக்கும், எனக்கும், புண்ணியமும் பெருமையுங் கிடைக்கும். ஆதலால் எளியேன் மீது கிருபை கூர்ந்து, நான் செய்யும் பிரதியுபகாரம் சொல்பமா யிருந்தாலும் அதனைச் சமமாக எண்ணி அப் பசுவைக் கொடுக்கவேண்டும். இக்கணம் நான் இந்த ஒரு பசுவுக்கு லக்ஷம் பசு கொடுக்கிறேன்" என்முன். அதற்கு வசிஷ்டர் புன்சிரிப்புகொண்டு, "ஓ சூரியகுல திலகனே! ஆரியருக்கும் முனிவருக்குந்தான் இப் பசு இருத்தல் தகும். ஏனென்முல் உன்போன்ற வீரர் அல்லது மற்றையர்கள் யாராவது தங்க ளிருப்பிடத்தை விட்டுக் காட்டுக்குட் சென்று விடாய்ப்பட்டு வழிதப்பி, வனத்துக்கு வந்துவிட்டால், யான் அவர்கள் விடாய் தணிய உண்டி முதலியவற்றை யுதவவேண்டும். இந்த விருந்தோம்புதலையே வேதம் சிறப்பாகக் கூறுகின்றது. நாட்டி லிருக்கிறவர்கள் வீட்டிலுள்ள பதார்த்தத்தைக் கொண்டு யதார்த்தமான மனதோடு விருந்திடுவார்கள். முழுதுந் துறந்து காட்டிலிருக்கிற நான் என்ன செய்வது? இப் பசு ஒன் றிருந்தமையால் உனக்கும் உன் பின் வந்தவர்களுக்கும் களைதீர உண்டி யுதவினேன். மேலும் இப் பசு உலகிலுள்ள பசுப்போ லல்ல. இது திருப்பாற் கடல் கடைகிறபோது அவ்விடத்திற் பிறந்தது. ஸ்ரீமந் நாராயண மூர்த்தியின் கட்டளைப்படி தேவராஜனிடத் திருப்பது. அதனை உனக்

குக் கொடுக்க எனக்குப் பாத்தியமில்லை. நீ இப் பசுவின்மேற் கொண்ட காதலை வெறுத்து உனது நகரம் போய்ச் சேர்" என்றார்.

அரசன் வசிஷ்டரை வணங்கி, "ஓ சுவாமி! பசு தங்களுடைய தென்று எண்ணி யிருந்தேன். தேவராஜன் பசுவென்றால் அப் பசுவைப் பிடித்துப் போகிறேன். தேவேந்திரன் வந்தெதிர்த்தா லவனை யென் வல்லமையாற் பங்கப்படுத்தி, இப் பசுவை எனக் குரியதாகக் கொள்ளுகிறேன்" என்று விரைவில் திரும்பித் தன் சேனைகளை யேவி, காமதேனு எங்கிருந்தாலும் பிடித்துக் கட்டிக் கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டான். அக் கட்டளை யின்படி சேனைகள் யாவும் தும்பு - தாம்பு - கைக்கோல் முதலிய வற்றைக் கொண்டு வனத்தை வளைந்தோடிப் பசுவைக் கண்டு, அதன் அருகிற் சென்று பிடிக்க யத்தனித்தார்கள். அதுகண்ட காமதேனு அவர்களை நிதானித்துப் பார்த்து, "ஓ! ஓ! நம்மைக் கண்டவர்களெல்லாம் வந்தனை செய்வார்க ளென்றால், இவர்க ளென்ன நம்மைக் கட்ட யத்தனிக்கிறார்கள்? இதென்ன காரணம்? நம்மை இவர்கள் கட்ட யத்தனிப்பதால், உடனே இவர்களை எல்லாம் நாம் யமன்பாசத்திற் கட்டுபடச் செய்விக்கவேண்டியதே முறைமை. ஆனால் மஹா ரிஷியாகிய வசிஷ்டர் நம்மை இந்த அரசனுக்குக் கொடுத்தாரோ? அல்லது பலவந்தமாக நம்மைப் பற்றவந் தானோ? இதனை முன்ன மறிந்து அதன்மேல் நமதெண்ணப்படி நடக்கலாம்" என்று கருதி உடனே விரைந்து வசிஷ்டரிடத்து வந்து வணங்கி, "ஓ சுவாமி! என்னைக் கௌசிக ராஜன் பிடிக்கத் தன் சேனைகளை யேவி இருக்கிறான். தங்கள் உத்திரவினாற் பிடிக்க வந்தானோ?" என்று வினவ வசிஷ்டர் "ஓ காமதேனுவே! நான் உன்னைப் பிடித்துக்கொண்டு போக உத்தரவு கொடுக்க வில்லை. தானே பலவந்தமாகப் பிடிக்க யத்தனித்தான். ஆத லால் ஆண்மையாற் பிடிக்கவந்த அரசனிடத்து உன் வீரத்தைக் காட்டுதல் தகுதி தான். நீ போய் அவர்களை வென்றுவா" என்று மொழிந்தார்.

இந்த உத்தரவைப் பெற்ற காமதேனு அவரை வணங்கி விடைபெற்று காற்றினுங் கடுகிச் சென்று, திருப்பாற்கடல் கடைந்த காலத்தில் தேவரை வருத்திய விஷத்தைப்போற் கௌசிகராஜன் சேனையின்மேற் பாய்ந்தது. உடனே அவ்வரச னுடைய சுத்தவீரர்கள் தும்பு தாம்பு கைக்கோல் முதலிய வற்றைக் கழுத்திலும் உடம்பிலும் கொம்பிலும் போட்டு வளைத்

தார்கள். அத்தும்பு முதலியவற்றைக் கண்டறியாத காமதேனு கிஞ்சித்து வருத்த மடைந்து, காலாக்கினி ருத்திரனைப்போலச் சீறி, இரண்டு கண்களிலும் அக்கினிப் பொறி பறக்க, ஒரு பாய்ச்சலாகப் பாய்ந்து, தன்னைக் கட்டவந்த அளவற்ற வீரரையும் நாசப் படுத்தி, திக்குகள் அதிரவுங் கண்டவர்கள் மூர்ச்சை யடையவும் அரசன் சேனையிற் புகுந்து, கூர்மையாகிய கொம்பு களினாலும்-நான்கு கால்களினாலும்-நீண்டு வெண்சாமரை போன்று நுனியில் மயிர்க்குச்சையுடைய வாலினாலும் - குத்தியும், உதைத் தும் - அடித்தும், கொல்லத் தலைப்பட்டது. அதை அரசன் கண்டு "ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்? பார்த்தாற் பசுவாயிருக்கின்றது. செய்கையை நோக்கினால் யமனாயிருக்கின்றது. இனி நாம் சும்மாயிருந்தால் நமது சேனைகள் நாசமடையுமேயன்றிப் பய னில்லை" என்று நினைத்து, தன் புத்திரர் மித்திரர் மந்திரிமார்கள் யாவரையும் ஏவித் தானும் எதிர்த்துப் பாணங்களைத் தொடுத் தான். காமதேனு அது கண்டு அதிக வேகங்கொண்டு, யானைக் கூட்டங்களிலும் குதிரைக் கூட்டங்களிலும் சென்று பாய்ந்து, தன் கொம்பினாற் குத்தியும் - காலினால் உதைத்தும் - வாலினா லடித்தும் யானைகளையும் குதிரைகளையும் பூமியில் வீழ்த்தித் தேரையுடைத்து, வில்லைப் பிடித்தவர்களையும் வாளைப் பிடித் தவர்களையும் சுழற்காற்றிற் சுழலுகின்ற மயிலிறகு போற் சென்றவிடந் தெரியாதிருக்கச் சிதைத்து, அவ்வனத்தைப் பிண மலைமயமாய்க் குவித்தது. யாவரும் தலைவிரிகோலமாக ஓடத் தலைப்பட்டார்கள். அப்படி ஓடுகிறவர்கள் பேரில் அங்குக்கிடந்த சிறு கற்களைப் பின்னங்காலால் எத்தியது. அக்கற்கள் வந்து பட்ட மாத்திரத்தில் முடிபோனவர் சிலர், தலைபோனவர் சிலர், தோள் போனவர் சிலர், துடைபோனவர் சிலர், இடையொடிந்தவர் சிலர், கொடியொடிந்தவர் சிலர், குடையிழந்தவர் சிலர், குர லொடிந்தவர் சிலர், வில்லற்றவர் சிலர், சொல்லற்றவர் சிலர், கைபோனவர் சிலர், மூக்குபோனவர் சிலர், நாக்குபோனவர் சிலர், காதுபோனவர் சிலர், போதுபோனவர் சிலராக இவ்வாறு பின்னப்பட்டு, ஒருவர் போனவழி ஒருவர் போகாம லோடினார்கள். அப்படி ஓடுகிறவர்களைக் காமதேனு கண்டு, இளைத்தவரைத் துரத்துதல் தகுதியல்ல வென்று கோபந்தணிந்து, வசிஷ்டரிடத்து வந்து தன்னாற் சேனைகள் அதமானதைச் செப்பி விடை பெற்றுச் சொர்க்கலோகம் போய்ச் சேர்ந்தது.

அந்தக் காமதேனு வசிஷ்டரிடத்துச் சென்றதையும் அவருத் தரவுபெற்றுப் போனதையும் கௌசிகராஜன் புத்திரர்கள் கண்டு, வசிஷ்டர் காமதேனுவைவிட்டு நமதுசேனையை நாசப்படுத்தினர். ஆதலால் அவரை நாம் வதைக்கவேண்டும்" என்றெண்ணி வசிஷ்டரிடத்துச் சென்று, வில்லை வளைத்து நாணேற்றிட்டு டங்கார ஓசை எழுப்பி, ஓரிலைவேல் - ஈரிலைவேல் - மூவிலைவேல் இவைகளைத் தொடுத்துவிட்டார்கள். இக்கணைகள் ஒன்றோடொன்று உராய்ந்து நெருப்பைக் கக்கிக்கொண்டு ஆலம்போற் சீறி வந்தன. வசிஷ்டர் அக்கணைகளும் அக்கணைகளைத் தொடுத்தவர்களும் சாம்பவமூர்த்தியின்மேல் எதிர்த்துக் கணைதொடுத்த மதன்போலாகும்படி உறுத்து நோக்கினர். அந்த நோக்கத்தால் அப்புத்திரர்கள் ஊக்கமழிந்து சாம்பரானார்கள். கௌசிகராஜன் தனது புத்திரர் சாம்பரானதைக் கண்டு, சிறிதும் அஞ்சாமற் சினங்கொண்டு, அதிவேகமாக வந்து, தன் வில்லைவளைத்து, நாணேற்றிட்டுக் குணத்தொனி செய்து, முன் பின் யோசிக்காமல் தேவாஸ்திரங்களைப் பிரயோகித்துச் சிங்கம் போல் கர்ஜித்து நின்றான். அந்த அஸ்திரங்கள் மஹாமகிமையோடும் அனல்களைக் கக்கிக்கொண்டு வந்தன. அவைகளை வசிஷ்டர் கண்டு, 'அந்தோ! இவனென்ன சுத்த மூடனாயிருக்கிறான்? நாம் வில்லாளியாக இருந்தால் வில்லெடுத்துப் போர்செய்யவேண்டும். நாம் வில்லும் மற்ற ஆயுதமு மில்லாமல் தபசியா இருக்கிறோம். இவனோ நம்மேல் அஸ்திரங்களைத் தொடுக்கிறான். நாம் இன்னும் சற்றுநேரம் சும்மாயிருந்தால் அம்புகள் கொத்துக்கொத்தாய் வந்து நம்மேல் விழும். அதனாற் கிஞ்சித்து வருத்தம் நேரிடும். இந்த வேளை நாம் சும்மா இருக்கலாகாது" என்று உடனே ஒரு தண்டாயுதத்தை எடுத்துமுன்னே நிறுத்தி, "அரசன் விடுங்கணைகளையெல்லாம் கௌளீகரஞ்செய்" என்று கட்டளையிட்டார். அத்தண்டமானது அரசன் விடும் அஸ்திரங்களையும் மற்ற ஆயுதங்களையும் கௌளீகரஞ் செய்தது.

அரசன் கண்டு திடுக்கிட்டுத் திப்பிரமை கொண்டவனாய்ச் சற்றுநேர மயர்ந்திருந்து, பின்பு சிறிதுதெளிந்து, "அடடா!! நமது வீரம் - அரசு - வல்லமை முதலானவைகளெல்லாம் இந்த வசிஷ்ட மஹாமுனிவருக்குமுன் அணுவாயினவல்லவா? ஆ! ஆ! தவப்பொருளே பொருள். மற்றவையெல்லாம் அவப்பொருள். தவப் பலமிருந்தால் இவ்வரசைப்போல் அநேக பிரமனாதி மூவர்களும் மதிக்கச் சிறப்புற் றிருக்கலாம். மேலும் நமது புத்திரர்களை

மாண்டார்கள். சேனைகளு மிறந்தன. இனி நகரத்திற்சென்று அரசு செய்வதிற் பயனென்ன? தவத்தைப்புரிந்து தவப்பொருளடைவதே பெருமை என்று நினைத்து மந்திரிகளை யழைத்து, தனது முத்திரை மோதிரத்தைக் கொடுத்து, "நீங்கள் நகரத்திற்குச்சென்று அரசாட்சி செய்யுங்கள்" என்று கட்டளையிட்டு, தான் இமய மலைச் சாரலுக்குச் சென்று, சிலகாலம் ஒரே நிலையாய் ஒரு பாதத்தையூன்றி ஜலத்தினின்றும், சிலகாலம் ஒரே நிலையாய் மற்றொரு பாதத்தை யூன்றிப் பஞ்சாக்கினி மத்தியினின்றும், தவ சிரேஷ்டர்களெல்லாரும் வியப்படைய அருமையான தவத்தைச் செய்தான். உடனே யவனுக்குப் பிரமன் பிரசன்னமாகி, கௌசிகன் செய்யும் வந்தனையை யேற்று, "ஓ கௌசிகராஜனே! நீ பிரமரிஷி யாகவேண்டுமென்று கருதி நெடுநாள் அருமையான தவஞ் செய்கிறாய். நீ மக்கள் யாக்கையிற் புக்கினவனாதலால், தவத்தாற் பிரமரிஷியை யொப்பாய்" என்று கூறி, மறைந்தான். கௌசிகன் அங்ஙனே மகிழ்ந்து இறுமாப்படைந்து, தவநிலைவிட்டெழுந்து, மான்தோல் காவிகாம்பர தண்டு கமண்டல தாரியாகிய வசிஷ்ட மஹா முனிவரிடத்து வந்து, வந்தனை வழிபாடின்றி அவருக்கெதிரில் மான்தோலாசனமிட்டு இறுமாப்புடன் வீற்றிருந்தான். வசிஷ்டர் கௌசிகனுடைய உட்குறிப்பை யறிந்து, "அடா இவன் தவத்திலுயர்ந்தோமென்று இறுமாப்படைந் திருக்கிறான்" என்றுணர்ந்து கௌசிகனை நோக்கி "ஓ கௌசிகராஜனே! உன்னரசு சிறந்து வருகின்றதா? குடிகள் உன்வயப்பட்டு நடக்கிறார்களா? உன் புத்திரரும் நீயும் சுகந்தானா?" என்று கேட்டார். கௌசிகன் வெகுளி மேற்கொண்டு, 'நமது புத்திரரை எரித்துவிட்டுப் புத்திரர் சுகமாவென்று வினவின இந்த வசிஷ்டன் புத்திரசோபத்திலாழ இவனுடைய புத்திரரைக் கொல்லுகிறேன்' என்று மனதில் தீர்மானித்து வசிஷ்டரை நோக்கி, "ஆங்காணும் வசிஷ்டரே! என் புத்திரரை நீரெரித்துவிட்டதுமன்றி உன்புத்திரர் சுகந்தானாவென்று வினவினீரே இது அகந்தையல்லவா? இந்த அகந்தையை அடக்குகிறேன் பார்" என்று சொல்லி அவ்விடத்தினின்று நீங்கிச் சென்றான்.

கேளுங்கள் புண்ணியவான்களே! இப்பாற் கௌசிகனானவன் வசிஷ்டர் புத்திரரு ளொருவராகிய சத்தியென்பவர் தவஞ்செய்திருந்த வனத்தில் வசிஷ்டருடைய நூறு புத்திரரையுங் கொல்லக் கருதி, இதற்கு என்ன தந்திரம் செய்கிறதென்று யோசித்துக்

கொண்டிருந்தான். இப்படியிருக்கையில் மிகுந்த சிறப்பினை யடைந்த சூரியவமிச அரசர்களில் மித்திரசகனென்னும் பெயரை வகித்த ஒரு மன்னன் அயோத்திமா நகரத்திலிருந்து அரசு செலுத்தினன். அவன் ஒருநாள் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். அங்கு இரண்டு ராக்ஷதர் வந்தெதிர்த்தார்கள். அரசன் அவ்வரக்கர்களில் மூத்தவனை ஒருபாணத்தினுற் கொன்று விட்டான். அவன் தம்பி தமையனிறந்ததைப் பார்த்து, நமது தமையனைக்கொன்ற இந்த அரசனைக்கொல்ல நம்மால் முடியாது. சூது செய்து இவ்வரசனைக் கெடுக்க வேண்டுமென்று கருதி உடனே தன் னுருவத்தை மாற்றி மானிடரூபந் தரித்து, அரசன் பாதத்தில்வந்து விழுந்து முறையிட்டான். அரசன் அவனை நோக்கி, "நீயார்? இங்குவந்து முறையிடுகிற காரணமென்ன" என்று வினவ, அரக்கன் "சுவாமி! அடியேன் இந்த வனத்தில் வாசஞ்செய்பவன் சமையல்வேலை எனக்கு நன்றாகத் தெரியும். ஜீவனமில்லாமல் அலைந்து திரிகிறேன். ஆதலால் எளியேனை ஆதரிக்கவேண்டும்" என்று பிரார்த்திக்க அரசன் இவன் உண்மையான மானிடன்தானென்று நம்பி. "என் மடைப்பள்ளி வேலைக்காரருக்குத் தலைமையான அலுவலை உனக்குக் கொடுத்தேன். நீ யந்த வேலையைப் பார்" என்று கூறி, தன் மந்திரியினிடம் அனுப்பினன். மந்திரி மடைப்பள்ளிக்கு அனுப்பி வேலையைப் பார்க்கும்படி கட்டளையிட்டு மந்திரி வழக்கம்போல் தன் வேலையைக் கவனித்துவந்தான். அந்நாளில் ஒருநாள் தன்குல குருவாகிய வசிஷ்டர் அங்கு வந்தார். குருவைக் கண்ட அரசன் எழுந்து எதிர்கொண்டுபோ யழைத்துவந்து பொற்பீடமளித் திருக்கச்சொல்லி, சோடசோபசாரஞ்செய்து வணங்கி எதிர்நின்று, "ஓ சுவாமி! தேவரீர் இவண் வந்தது என்ன காரணம்? அடியேனை நாடிவந்த கருத்தை வெளியிடவேண்டும்" என்று கேட்க, அரசனுக்குப் பல ஆசிகள் கூறி வசிஷ்டர் சொல்லுகிறார். "ஓ மண்டலேஸ்வரா! நெடுநாளாக என் கருத்தில் ஒரு விருப்ப மிருக்கின்றது. அவ்விருப்பத்தை நிறைவேற்ற இவண் வந்தேன். அஃதென்னெனில் மாமிச வகைகளைப் புசிக்க வேண்டுமென்பது. இதனை நீ நிறைவேற்ற வேண்டும்" என்றார்.

அரசன் அக்கருத்துக் கிசைந்து, உடனே எழுந்து அந்தப்புரத்துக்குச் சென்றான். மனைவியாகிய மதயந்தி எதிர்வந்து வணங்கினள். அந்த அம்மன் நற்குண நற்செய்கையோடு அதிக சுந்தரத்தையு முடையவளாதலால், தான் அவளோடு பலகாற்

பரிவுற் றணைந்துள்ளோனாயினும், அவளைக் கண்டவுடன் விதிவசத்தால் தான் நினைத்துவந்த கருத்தை மறந்து, காமத்தின் வயப்பட்டுச் சரசஞ்செய் திருந்து விட்டான். சூரியனும் அஸ்தமித்தான். அந்த அரசன் சூரியகுலதிலகனாக இருந்தபோதிலும், தேவர்களுக்கு நன்மைகளை விளைத்து அஞ்ஞான விருள்கெட விளங்கினவன். அவ்வாறிருந்தும் காலகதியால் மதிமயங்கி மனைவியோடு விளையாடுகிறபோது, இன்னும் அரைநாழிகையில் வசிஷ்டரால் அரக்கனாகப் போகிறபடியால், அவ்வரக்கர்கள் திரண்டுவந்து அரசனைக் காணவந்ததுபோல் இருள் வந்து மூடிற்று. அவ்விருள் நள்ளிருளானகாலத்து அரசன் தான் நாடிவந்த கருத்தை நினைத்துத் திடுக்கிட் டெழுந்து அதிவேகமாக மடைப்பள்ளிக்கு வந்தான். வேலைக்காரரெல்லாம் நித்திரைபோய் விட்டார்கள். அரசனைக் கெடுக்க நினைத்து மடைப்பள்ளி வேலைக்காரனாக இருந்த அரக்கன் மாத்திரம் விழித்திருந்தான். அவனை அரசன் கண்டு, "ஓ சமையற்காரா! என் குருவானவர் மாமிசத்தோடு உண்டி புசிக்க வந்திருக்கிறார். அவர் கொலுக்கூடத்தி லிருக்கிறார். இந்த வேளை எவ்விதத்திலாவது மாமிசத்தோடு உண்டி சமைத்து அளிப்பாயானால், உன் மனமகிழ உனக்குத்தகுந்த பரிசுகொடுப்பேன்" என்று சொன்னான். அரக்கன் தன்னெண்ணம் நிறைவேறுங் காலமிதுதான்" என்று கருதி அதிக மகிழ்வை யடைந்து, அரசனை வணங்கி, "ஓ சுவாமி! தங்கள் சித்தப்படி மாமிசத்தோடு அமுது படைக்கிறேன்" என்று சொல்லி, மடைப்பள்ளியிற் சென்று, வேலைக்காரரை எழுப்பிச் சமையற்செய்யச் சொல்லிவிட்டு, அரண்மனையை விட்டு வெளியே வந்து, நித்திரை செய்திருந்த ஒரு குழந்தையை வதைத்து, அதன் மாமிசத்தைப் பாகத்தால் உணவுக்குரிய பாகம்போற் பக்குவப்படுத்தி அரசனுக்குத் தெரிவித்தான்.

அரசன் உண்டிமுதலியவற்றை யெடுப்பித்துக் கொண்டு கொலுமுகக் கூடத்தி லிருக்கும் வசிஷ்டரிடத்துக்கு அதிவேகமாக வந்து நமஸ்காரஞ் செய்து, "ஓ சுவாமி! எளியேனால் இதுபரியந்தம் பசியோ டிருந்தீர். இனி கிருபைகூர்ந்து போஜனஞ் செய்யுங்கள்" என்று வேண்ட, வசிஷ்டர் எழுந்து போஜனச்சாலையில் வந்து உட்கார்ந்தார். சமையற்காரர் இலைபோட்டு, சமைத்த மாமிசத்தையும் அன்னத்தையும் வட்டித்தார்கள். வசிஷ்டர் யதார்த்தமான மாமிசமென்று ஆவல்கொண்டு, முதலில் மாமிசத்திற் கிஞ்சித்தெடுத்து வாயிற்போட்டுக் கொண்டார். அது நரமாமிச

மாதலால் உருசிவேறுவிதமாக இருந்தது. அதனை யோசித்து நரமாமிசமென்றுணர்ந்து, அதிகச் சினங்கொண்டு அரசனை நோக்கி: "அடா பாபி! நீ நல்ல மிருகமாமிசத்தோடு அன்னம் படைப்பாயென்று நாடிவந்த எனக்கு நரமாமிசமிட்ட படியால், நீ நரமாமிசத்தைப் புசிக்கின்ற அரக்கனுகக் கடவது" என்று சபித்தார். அரசன் திடுக்கிட்டு நடுங்கி நமஸ்காரஞ் செய்து, மீண்டும் எழுந்து நின்று, "ஓ சுவாமி! இக்குற்றம் என்னுல் வந்ததல்ல. வேலைக்காரரால் நேரிட்டதாக இருக்கின்றது. இதனை யோசியாமல் எனக்குச் சாபமிடலாமா? என்று கேட்க வசிஷ்டர் ஞானதிருஷ்டியால் நோக்கி? இச்செய்கை அரசனைக் கெடுக்க மடைப்பள்ளியிலிருந்த அரக்கனுல் நேரிட்டதென்று தெரிந்து கனவருத்தமடைந்து அரசனைப் பார்த்து "ஓ மண்டலேஸ்வரா! இக்குற்றம் உன்னுல் நேரிட்டதல்ல. நான் முன்பின் யோசியாமற் கோபத்தினுற் சாபமிட்டேன். இந்தச் சாபம் அனுபவியாமல் தீராது. பன்னிரண்டுவருஷ மிருக்கும். அதன் பின்பு உன் சுயகுணத்தையடைவாய்" என்றுரைத்தார்.

அதைக் கேட்ட அரசன் சினங்கொண்டு, எள்ளுந்தண்ணீருங் கரத்திலேந்தி "ஓ சுவாமி! நீங்கள் தவத்திலுயர்ந்தோமென்றும், சாபத்தில் மிகுந்தோமென்றும், அவசரப்பட்டு என்னைச் சபித்தீர்கள். இதோ நான் உங்களைச் சபிக்கிறேன், ஏற்றுக்கொள்ளும்" என்முன். இந்தச் செய்தி மதயந்தி யுணர்ந்து விரைந்து வந்து, கணவன் காலில் விழுந்து நமஸ்காரஞ் செய்து, அரசன் கரத்தைப் பற்றிக்கொண்டு "ஓ பிராணநாதா! இதென்ன விபரீதம்? இதுவரையில் நமது குலத்திற் குருவைச்சபித்தவர்களுண்டா? அல்லது மற்ற எந்தக் குலத்திலாவது ஆசானைச் சபித்தவரைக் கேள்விப்பட்டதுண்டா? எங்கும் நடக்காதகாரியத்தைச் செய்யத் துணிவுகொள்வது தகுதியா? இப்படிச் சபிக்காதீர்" என்று மறுத்தாள். அரசனும் மனைவிவாக்குக் கெதிர்வாக்குக் கொடாமல், கரத்திலிருந்த எள்ளையும் தண்ணீரையும் தன் வலப்பாதத்தில் விட்டுக்கொண்டான். அந்த நீர் காலில் பட்டமாத்திரத்தில் அப்பாதங்கள் கரியநிறமாயின. அன்றுமுதல் அவனுக்குக் கல்மாஷபாதனென்கிற பெயர் விளங்கியது. வசிஷ்டர் தமதிருப்பிடத்துக்குச் சென்முர். சூரியனும் உதயமாயினுன். அரசன் உதயத்தில் எழுந்து நித்தியகடனை முடித்து, மகரகுண்டல ஆரகேயூர கடககங்கண முதலிய ஆபரணங்களைத் தரித்து, கொலுமுக வாச

வில் வந்து, மந்திரி முதலானவர்களை நோக்கி, நாம் காட்டிற்குச் சென்று வேட்டையாடவேண்டும். பிரயாணமாகுங்கள்" என்று வில் லம்பு முதலியவற்றை எடுத்துக்கொண்டு புறப்பட்டான். மந்திரி முதலானவர்களும் வந்து சேர்ந்தார்கள். அரசன் அவர்களோடு காட்டிற்குச்சென்று, சற்றுநேரம் வேட்டையாடி, தன்னோடு வந்த சேனைகளையும் மந்திரிகளையும் விட்டு நீங்கித் தனியாக ஒரு வனத்தில் வந்தான். அப்போது வசிஷ்டருடைய சாபம் வந்து அரசனை யடைந்தது. அரசன் அரக்க அமிசங்கொண்டு, குணம் வேறுபட்டு மனம் போனபடி சென்று, நெடுந்தூரங் கடந்து ஒரு பெரிய ஆரண்ணியத்தில் வந்துவிட்டான். மந்திரி முதலானவர்கள் அரசனை இரண்டு மூன்றுநாள் பரியந்தம் தேடியுங் காணுமற் கன வருத்த முற்று நகரத்திற் சேர்ந்தார்கள்.

அங்கே அரசன் கண்ட மிருகங்களையும் பக்ஷிகளையும் நரரையும் புசித்துக்கொண்டு சகல உயிர்களும் யமனைக்கண்டு நடுங்குவதுபோல் நடுங்கச் சஞ்சரித்து வருகிறகாலத்தில், தவசிரேஷ்டபாக்கியவானுகிய ஒரு முனிவருடைய புத்திரன் மற்றொரு முனிவருடைய புத்திரியை மணம்புரிந்து, மனைவியோடு தான் தன்னிருப்பிடம் செல்லக் கருதினவனாய், இக்கல்மாஷபாதன் வசித்திருந்த காட்டின் வழியாக வந்தான். கல்மாஷபாதன் அவனைப் பார்த்து "ஓ பிராமணு! ஓ பிராமணு!" என்று அழைத்தான். பிராமண முனிவன் அவனைப் பார்த்து "யாரோ ஓர் அரசன் நம்மை அழைக்கிறுன். நாம் அருகில் சென்று பார்ப்போம்" என்று அருகில் வந்தான். அவனை அரசன் கட்டி இறுக்கிப் பிடித்துக் கொலை செய்ய யத்தனித்தான். அவ்வேதியன் மெய் நடுக்கமடைந்து, "ஐயா, உன்னைக் கண்டால, அரசனைப் போல் தோன்றுகிறது! நீயோ என்னைப் பிடித்துப் புசிக்க யத்தனிக்கின்றுய். இஃதெனக்கு மிகுந்த ஆச்சரியமாக இருக்கின்றது. மேலும் இத்தொழில் அரக்கர்க் குரியதே யன்றி அரசர்க் குரியதல்ல. இதென்ன விபரீதம்? என்னை விட்டுவிடு மையா;" என்று பல நீதிகளை எடுத்தோதியும், அரசன் அவனை விடாமற் பற்றி இறுக்குவதைக் கண்டு, வேதியன் "ஹரிஹரி! கோவிந்தா! மாதவா! பரந்தாமா! பக்தசகாயா! பரமதயாளா! ஆபத்பாந்தவா! அனுதரக்ஷகா! அகண்டிதா லங்கிருத கிருபாசமுத்திரா! நேத்திர கபட நாடக சூத்திராவதாரியாகிய ஸ்ரீமந்நாராயணு!" என்று பலவாறு துதித்தான். அவன் துதிப்பதையும் துயரப்படுவதையும் வேதியன் மனைவி கண்டு

ஓ வென்று ஓலமிட்டு அரசனிடத்து வந்து, தன் முன் தானையைக் கையிலேந்தி எதிர் நின்று, இரண்டு கண்களிலும் அருவிபோல் நீர் சொரிய நோக்கி "ஓ ராஜாதிராஜனே! தருமநீதி தவறாத் சத்தியசந்தனே! ஓ மஹா மண்டலேஸ்வரா! ஓ சூரியகுலோத் துங்கா! ஓ மஹாபதிவிரதையாகிய மதயந்தியினுடைய முலைக்கு வட்டின் சுவடுதோய்ந்த புயாசலா! தமியேன் இவ்வேதியனை மணந்து இரண்டு மூன்று நாள்தா னாயிற்று. நீ இவ்வேதியனைக் கொன்று விடுவாயானால் என்னுயிர் தரியாது. ஓ ஆண்டவனே! நீர் அரசர். அரசரானவர்கள் உலகிலுள்ளவர்க்குக் கடவுள். ஆதலால் மன மகிழ்ந்து மாங்கிலிய பிச்சை கொடுக்கவேண்டும்" என்று பல நீதிகளை யெடுத்தோதிப் பரிதாபமுற்றுப் பின்னுஞ் சொல்லுகிறாள்:

"ஓ அரசனே! நீர் மிருகமாமிசம் புசிப்பவர். ஒரு வேளை கால கதியால் நரமாமிசம் புசிக்கத் தலைப்பட்டாலும், இந்தப் பிரா மணனை மாத்திரம் விட்டுவிட வேண்டும். ஏனென்றால், இன்று இந்த நரனை நீர் புசித்தால் நாளைக்குப் பசியெடுக்காதிருக்கப் போகி றதா? எப்படியும் பசியெடுக்கும். நாளைக்கும் நரன் அகப்படுவானா? அகப்படான். ஆகவே நாளைய பசிக்கு மிருகங்களைத் தான் புசிப்பாய். ஆகையால் இன்றைக்கு நமக்கு நரன் அகப்பட வில்லை யென்றெண்ணி, இந்த நரனை மன்னித்து, மற்ற மிருகங்களைப் புசியும் இந்த நரனால் நான் இன்பமடைய வேண்டும். இவன் இறந்தால் நானெடுத்த யாக்கை காட்டி லெரித்த நிலவைப்போலும், என் னழகு கானலில் பொழிந்த மழையைப் போலும் ஆகும்" என்று கண்கலங்கினாள். பார்ப்பனி இவ்வளவு சொல்லியும் அரசன் இரக்கமில்லாமல் அவ்வேதியனைக் கொன்று, இரத்தமாமிசங்களைப் புசித்து, எலும்புகளை யெல்லாம் உமிழ்ந்து விட்டுப் போயினான். அவ்வேதியன் மனைவி பலவாறு துக்கித்து, அவ்வெலும்புகளை எடுத்து மடியிற் கட்டிக் கொண்டு அக் காட்டிலிருக்கும் கட்டை முட்டைகளைப் பொறுக்கி ஒன்றாக அடுக்கி, கல்லோடு கல் தாக்கி நெருப்புண்டாக்கி, அந் நெருப்பைக் கட்டை முட்டைகளிற் பற்ற வைத்து, பின் ஸ்நானஞ் செய்து அத்தீயை வலம்வந்து "ஓ ஆகயவாணி முதலாகிய தேவதைகளே! என் மனமெரிய என் புருஷனைக் கொன்ற பாவியாகிய கல்மாஷபாதன் தன் மனைவி யோடு புணருவானானால், அவன் தலைவெடித்துச் சாகக்கடவன்" என்று சபித்து அக்கினியில் விழுந் திறந்தாள். இந்தச் செய்தியை ஆகாயவாணி மஹா பதிவிரதையாகிய மதயந்திக்குத் தெரிவித் தாள். மதயந்தி மனவருத்த முற்றிருந்தாள்.

இங்கே கல்மாஷபாதன் காடு மலை முதலியவற்றிற் சஞ்சரித்துக் கண்டதைப் புசித்து யமனைப்போல் திரிகின்றபோது, வசிஷ்டர் புத்திரர் நூற்றுவரில் யாவருக்கும் மூத்தவராகிய சத்தி என்னும் பெயரைவகித்த முனிவரிருக்கும் வனத்தில் வந்து அவர் தவஞ் செய்யுமிடத்திற் கருகிற்சென்ருன். அப்போது கம்பத்தில் நின்று தவஞ் செய்திருந்த சத்தியானவர் கீழே இறங்கி ஸ்நானஞ் செய்ய வருகிறபோது ஒருவரையொருவர் சந்தித்தார்கள். கல்மாஷபாதன் பித்தம் பிடித்தவர் போல் ஒருவேளை நல்லகுணம் மற்றொருவேளை அரக்கர்குணங் கொள்பவனாதலாற், சத்தி என்பவரைக்கண்டு, "அடா! பிராமணப்பையலே! நான் வருகிறேனென்று விலகாமல் என்னெதிராக வருகிருயே ? இது நியாயமா? நானென்ன உலகாதிப னல்லவா" என்று கேட்டான். சத்தி "ஓ அரசனே! நாங்கள் தவசிகள்; எங்கள் வனத்துக்கு அரசன் வரக்கூடாது. வந்தாலும் அவர்கள் தான் ஒதுங்கிப் போகவேண்டும். மேலும் நான் உன் குலகுருவினுடைய புத்திரன்" என்ருர். அரசன் அவர் சொல்லியவற்றில் ஒன்றையும் யோசித்துப் பாராமற் கோபங்கொண்டு கையிலிருக்கும் கதையினுல் மோத, சத்தி சீறி "ஓ அரசனே! நீ அரைக்கரைப்போ லிரக்கமின்றி என்னைக் கதையா லடித்தமையால், நீ அரக்கனுகக் கடவை" என்று சபித்தார். அப்போது கல்மாஷபாதனுக்குக் கிஞ்சித்துத் தன்னறிவு வந்து திடுக்கிட்டு, சத்தியை வணங்கி அநேக விதமாகத் துதித்து,"ஓ சுவாமி! என்புத்தி மயங்கியிருந்தமையால் அந்தவேளையில் தங்களை மதிக்காமல் இகழ்ந்து அடித்தேன். அக்குற்றத்தைப் பொறுத்துச் சாபவிமோசனங் கொடுமையா" என்று பிரார்த்தித்தான். அச் சமயத்தில் தமது பிள்ளைகளைக் கொன்ற வசிஷ்டரிடத்திற் பழிக்குப் பழி வாங்கக் காத்திருக்கும் விஸ்வாமித்திரர் அதனைக் கண்டு, "ஆ! ஆ! இந்தக் கல்மாஷபாதனுல் வசிஷ்டர் பெற்ற நூறுபுத்திரரையும் கொல்லவேண்டும்" என்று கருதி, சத்தி என்பவருக்குத் தெரியாமற் சைகைசெய்து, கல்மாஷபாதனைத் தன் அருகி லழைத்து, "ஓ அரசனே! நீ ஏன் அந்தச் சத்தியை வணங்கிக் கெஞ்சுகிருய்? அவன் சாபமிடுவானே. அன்றிச் சாபவிமோசனஞ் செய்யான். சத்தியையும் அவனுடன் பிறந்த தொண்ணூற்ருென்பது பெயரையும் கொன்று தின்பாயானுல் அதன் பின்பு இந்த நூற்றுவர்க்கும் தந்தையாகிய வசிஷ்டராற் சாபம் நீங்கும்" என்று பலவிதமாகப் போதித்து, அக்காட்டில்

திரிகிற சிங்கராவேசத்தை அரசன்மேலேவினர். அவ்வாவேசம் அரசனை யடையவே அவன்குணம் பின்னும் வேறுபட்டு, அதிக வெறிகொண்டு, சத்தியைக் குத்திக் கொன்றுதின்று, அச்சத்தியோடு பிறந்த (99) சிறுவர்களு மிருந்த இடத்தை விஸ்வாமித்திரனு லுணர்ந்து, யாவரையும் விடாமற் பற்றிக்கொன்று தின்றுவிட்டான். இந்தச் செய்தியை வசிஷ்ட ரறிந்து, "ஐயையோ !! தெய்வமே ! ஒரு புத்திரனல்ல நூறு புத்திரர்களு மிறந்தார்களே, இனி நாம் என்ன செய்கிறது" என்று ஏக்கங்கொண்டு, பூமியில் விழுந்து புறண்டு அழுது, புத்திரசோகத்தாற் பேச்சற்று மூர்ச்சையடைந்தார். இதனை அவ்வனத்து முனிவர்க ளுணர்ந்து ஓடிவந்து, வசிஷ்டரை வாரி யெடுத்து உபசாரஞ்செய்து தேற்றினர்கள்.

வசிஷ்டர் அவ்வுபசாரத்தாற் கிஞ்சித்துச் சாந்தமடைந்து எழுந்து, புத்திரர்சோக மேற்கொண்டு இனி அரை மாத்திரைப் போதாவது உயிரோடு வாழேனென்று உயிர்விடத் துணிந்து கடலில் விழுந்தார். அதைக் கடற்றலைவனுகிய வருணன் கண்டு நடுங்கி, நீராற் பிராணச்சேதம் வராமல் அவரை ஏந்திக் கரையில் விடுத்து உபசரித்தான். பின்னும் வசிஷ்டர் தமது புத்திரசோகம் ஆறுதவராய் எவ்விதத்திலேனு மாள்வதே சரியென்று துணிந்து, பெரிய ஒரு மலையின்மேலேறி அங்கிருந்து பூமியில் விழுந்தார். பூமிதேவி அஞ்சி தன் கைகளால் வசிஷ்டரை யேந்தி ஒரு துன்பமும் நேரிடாமற் காப்பாற்றப் பின்னும் வடவைத் தீயிற் போய் விழுந்தார். அத்தீ நல்ல ஜலம்போற் குளிர்ந்திருக்க மேலும் விஷத்தை அருந்தினர். அவ்விஷமும் அமுதம்போலாயிற்று. அப்பால் வசிஷ்டர் கனவருத்தமுற்று, "நாம் எத்தனையோ விதத்தாலுயிர்விடக் கருதியும் உயிர் நீங்கவில்லை. ஆதலால் இனி எவ்வாறு இந்தப் புத்திரசோகத்தைச் சகிக்கப்போகிறோம்" என்று வருந்தி இருக்கிறபோது சத்தியின் மனைவியாகிய துச்சந்தை என்பவள் கருப்பந்தாங்கி யிருக்கிறளென்றும் அக்கருப்பம் பன்னிரண்டு வருஷமாகவிருக்கிறதென்றும் கேள்வியுற்று, புத்திரர்களின் கால்வழி இருக்கிறதல்லவா வென்று அப்புத்திரசோகத்தை ஒருவாறு மறந்திருந்த காலத்தில் இந்தக் கல்மாஷபாதனுகிய அரக்கன் அந்தச் சத்தி மனைவியின் வயிற்றிலிருக்கும் கருவை விஸ்வாமித்திரராலுணர்ந்து, அவளையுங் கொல்லத் தேடிவந்து கண்டு கொலைசெய்யத் தொடாந்தான். அவன் வரவைச் சத்தியின் மனைவிகண்டு பயந்து, அம்மானுகிய வசிஷ்டரிடத்து ஓலமிட்டுச் சென்றாள். வசிஷ்டர்

அஃதுணர்ந்து, அஞ்சாமல் வருகிற அரக்கனைக்கண்டு, உடனே தமது கமண்டலத்திலிருந்த ஜலத்தைவாரி அவ்வரக்கன் முகத்தி லிறைத்தார். அந்நீர்பட்டமாத்திரத்தில் விஸ்வாமித்திரனு லேவப் பட்ட சிங்கராவேசமும், சத்தியாலிடப்பட்ட சாபமும், முன் வசிஷ்டரால் நேரிட்ட சாபமும் நீங்கின.

அப்பால் அரக்கனயிருந்த அரசன் தன் சுய ரூபங்கொண்டு வசிஷ்டருடைய திருவடியிற் பணிந்து, அநேக விதமாகத் துதித்து "ஓ சுவாமி! எளியேன் பலவாற்ருலுங் கொடிய சாபத்தை ஏற்றதினல், தங்களுடைய புத்திரர்களையெல்லாம் புசித்தேன். சினங்கொள்ளாமல் என்னைக் காக்கவேண்டும்" என்று பலமுறை வணங்கினன். வசிஷ்டர் அஞ்சிநின்ற அரசனை ஆதரித்துப் பல ஆசிகள் கூறி, புலவர்களால் துதிக்கப்பட்ட அரசனை அயோத்தி மாநகரத்துக் கழைத்து வந்து, மன்னர் மண்டலீகர்க ளறிய நல்ல சுபமுகூர்த்தத்தில் மகுடாபிஷேகஞ் செய்துவைத்து தம திருப்பிடத்துக்கு வந்தார். அதுமுதல் அரசன் கொலுவிலிருந்து சகல விசாரணையுஞ் செய்துவந்தான். ஒருநாள் தன், மனைவிமேல் அதிகக் காதல்கொண்டு அந்தப்புரத்துக்குச் சென்ருன். மனைவியா கிய மதயந்தி எதிர்வந்து வணங்கி, "ஓ அரசனே! தேவரீர் இப் போது என்மேல் காதல்கொண்டு வந்தீர். ஆனல் நீர் முன்னம் அரக் கனயிருந்தபோது ஒரு பிராமணனைக்கொன்று தின்றதினல், அவ் வேதியன் மனைவி வயிறெரிந்து, 'நீ உன் பத்தினியோடு புணர்ந் தால் உடனே உன் தலை வெடிக்கக்கடவது' என்று சாபமிட் டிறந் தாள். ஆதலால் நீர் என்னைப் புணர்ந்தால் மரணமடைவீர்" என்று மறுத்தாள். அரசன் திடுக்கிட்டு அஞ்சி, "ஆ! ஆ! உலகத்திற் பிறப்பது இவ் வொருயின்ப மடையத்தானே: இவ்வின்பத்தை யடையாவிடில் நாமோ எடுத்ததேகம் எதற்கு? நாம் பிராமண கன்னிகையின் சாபத்துக் குள்ளானேம். நமது குலம் விளங்கு வதற்கும் ஏதுவில்லை. இனி இதற்கென்ன செய்கிறது" என் றேங்கி வசிஷ்டரிடத்துச் சென்று வணங்கித் தன் குறையைச் சொல்லி அழுது, பின்னுந்தன் பிழைகளை எடுத்துச்சொல்லு கிருன்—

"சுவாமி! நான் கொடிய சாபத்தை ஏற்று அரியகாட்டிற் சஞ்சரித்திருந்தபோது, ஒரு பிராமணனைக்கொன்று தின்றுவிட் டேனும். அதனைக் கண்ட அவ்வேதியன் பத்தினி, 'நீ மனைவியோடு புணர்ந்தா லிறக்கக்கடவதென்று எனக்குச் சாபமிட்டிறந்து விட்

டனளாம், எனக்கோ புத்திரனில்லை. புத்திரனில்லா விட்டாலும் இருக்கும்பரியந்தம் உலக இன்பமாகிய ஸ்திரீபோகத்தை அனுபவிக்கலாமென்றால், அதற்குஞ் சாபம் நேரிட்டிருக்கின்றது. ஆதலால் எளியேன் மீது கிருபைகூர்ந்து, சகல பாவங்களையும் தீர்த்து, ஸ்திரீபோகத்தை அனுபவிக்கவும், என் கால்வழி மாறாமலிருக்க என்மனைவி ஒரு புத்திரனைப் பெறவும் நான் தங்களை நாடிவந்தேன்" என்று கூற, வசிஷ்டர் அக்கருத்துக் கிசைந்து அரசனோடு அயோத்திமா நகரத்திற்குச் செல்ல, அரசன் அநுமதியில் மதயந்தி வசிஷ்டரிடத்து வந்து வணங்க, வசிஷ்டர் மதயந்தியைக் கூடி ஒரு புத்திரனைப் பாலித்து அரசனை நோக்கி "ஓ மண்டலேஸ்வரா! மஹா பதிவிரதையாகிய பார்ப்பனியிட்ட சாபம் நீங்க நாமொரு தந்திரம் சொல்லுகிறோம். அஃதென்னெனில் மஹாபதகங்களை நீக்குகின்ற தீர்த்தயாத்திரை செய்து தேவஸ்தலங்களைத் தரிசித்தால், அச்சாபம் நீங்குமென்று வழிகாட்டித் தமதிருப்பிடம் சேர்ந்தார். அரசன் மந்திரிமார்களை யழைத்துத் தன் செங்கோலை அவர்கள் கையிற் கொடுத்துச் சொல்லுகிறான்: "ஓ மந்திரிகளே! நான் தீர்த்தயாத்திரை செய்யச் செல்லுகிறேன். சென்றவிடத்தில் எனதெண்ணம் நிறைவேறிற்றானால் நான் திரும்பி வருவேன்; இல்லாவிட்டால் நான் வரமாட்டேன். நீங்கள் என் புத்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து, அவனை என்னைப் போற்பாவித்து அரசுசெலுத்தி வாருங்கள்" என்றுரைத்து, அரசன் தீர்த்தயாத்திரை சென்று அநேக நதிகளில் ஸ்நானஞ் செய்து, திவ்ய ஸ்தலங்களில் வாசம்பண்ணி மேற்றிசைவழியாகச் சென்றான். அவ்வாறு செல்லும்போது வழியிற் கௌதமமுனிவரைக் கண்டு வணங்கி, அவராற் சிவராத்திரியின் மகிமையை யுணர்ந்து, கோகர்ணஞ் சென்று சாம்பவமூர்த்தியை அர்ச்சித்து, அவரது கிருபையினாற் சாபம் நீங்கி நகரம் வந்து முன்போ லரசுசெலுத்தி வந்தான்.

இங்கே வசிஷ்டர் தம் புதல்வர்களில் மூத்தகுமாரனாகிய சத்தி முனிவருடைய மனைவி எக்காலம் புத்திரனைப் பெறுவாளோ வென்று பார்த்திருந்தார். இப்படி இருக்கிற காலத்திற் சத்தியின் மனைவியாகிய அதிச்சந்தை தேவாதிதேவர்களும் மகிழ்வெய்த யானைக்கன்றுபோற் பராசரைப் பெற்றாள். வசிஷ்டரும் அருந்ததியும் இன்னும் அவ்வனங்களோடு மற்ற வனங்களில் தவஞ்செய்திருந்த முனிவர்களும் - முனிவர் பத்தினிமார்களும் - பேரானந்தத்தை மேற்கொண்டு வந்து, புத்திரனைக்கண்டு அகமகிழ்ந்தார்கள்.

அப்பிள்ளை பிறந்தது முதல் ஐந்துவயது வரையில் செய்ய வேண்டிய சடங்குகளை எல்லாங் கிரமப்படி இயற்றி, ஐந்தாம் வயதில் உபநயனமும் வேதாப்பியாசமும் செய்வித்தார்கள். அப் பராசரும் நான்குவேதம் ஆறு சாஸ்திரம் அறுபத்துநான்கு கலைக்கியான முதலியவற்றை யுணர்ந்து, நன்னிலைக்க ணின்று தவ நிலைசேர்ந்து, அநேககாலம் தவஞ்செய்து, தவத்தாலடையும் பயனு கிய ஞானத்தைப் பெற்று வசிஷ்டரிடத் திருக்கிற காலத்தில், தனது பிதாக்களை அரக்கன் கொன்று தின்றான் என்கிற செய்தியைப் பல் பேர்களாலுங் கேள்வியுற்று அதிகக் கோபங்கொண்டு, மூதாதையிடத்து வந்து வணங்கி, "ஓ சுவாமி! என் தந்தையரை அரக்கன் கொன்று தின்றாதலால் அவ்வரக்கன் மாத்திரமல்ல, அவ்வரக்கர் குலத்தையும் இவ்வுலகத்தையும் தகிக்க நான் தவஞ் செய்யவேண்டும், ஆதலால் விரைவில் எனக்கு விடைகொடும்" என்று வேண்டினன். வசிஷ்டர் பேரப்பிள்ளை வந்த உக்கிரத்தைக் கண்டு "அடடா!! இவன் பிதாவைக்கொன்ற பழிக்கு உலகங்களை யெல்லாம் தகிக்க எண்ணங்கொண்டு தவஞ் செய்வதற்காக நம்மை உத்தரவு கேட்கிறான். இதற்கு நாம் தண்மை கூறவேண்டும்" என்று கருதி பேரப்பிள்ளையை வாரி மார்போ டணைத்து, மடியில் வைத்தவண்ணம் உச்சிமோர்ந்து உள்ளம் பூரித்துச் சொல்லு கிறார்:

"அப்பா பௌத்திரா! பூர்வம் இவ்வாறு நடந்திருக்கின்ற ஓர் சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேள். முன்னம் கிருதவீரிய னென்று பெயர்வகித்துத் தருமதேவதை நாலுபாதத்தில் நடக்க வும் மன்னர் மன்னர்களெல்லாரும் வந்து வணங்கவும் செங்கோல் நடாத்திய அரசன் வேதமோதுதலாகிய பிரமயாகத்தையும், ஓமம் வளர்த்தலாகிய தெய்வயாகத்தையும், பலிகொடுத்தலாகிய பூத யாகத்தையும், தருப்பணமுடித்தலாகிய பிதிர்யாகத்தையும், இரப் போர்க் குணவு முதலியவற்றை ஈதலாகிய மானுடயாகத்தையும், வேதாகமங்களால் அருமையாகச் சொல்லப்பட்டிருக்கிற அக்கினிஷ் டோமம் - அதிதி அக்கினிஷ்டோமம் - உத்தியம் - சோக்ஷீ - வாஜபேயம் - அதிராத்தம் - அந்தரியாமம் - அக்கினியரதேயம் - அக்கினி கோத்திரம் - தரிசபூரணமாசம் - சாதுர்மாசியம் - நிரூட பசுபந்தம் - ஆக்கிரயணம் - சௌத்திராமணி - அஷ்டகை பரா வணம் சிரார்த்தம் - சிராவணி - அக்கிராயணி - சைத்திரி - ஆசுவ யுசி - என்னும் இருபத்தொரு யாகத்தையுஞ் செய்யக்கருதி, ஒரு

திவ்யநதிக்கரையிற் பெரிய ஒருயாகசாலை சமைத்து, பிருகுமுனி யைக் குருவாகக்கொண்டு, அவரால் மேற்கூறிய யாகங்களை நிறை வேற்றி, அநேக தான தருமங்களைச் செய்து, அம் முனிவருக்கும் அவர்புத்திர பௌத்திரர்களுக்கும் அதிக திரவியங்கொடுத்து, நெடுங் காலம் அரசுசெய்து பரமபத மடைந்தான். பின்பு அவன் புத்திரர் கள் மகுடாபிஷேகராகி அரசுசெலுத்தினார்கள். ஆனால் அவர் கள் தேவபத்தியில்லாதவர்களாய்ச் சுற்றம் நட்பு இவைகளைப் பாராட்டாமல், தாங்கள் புசித்தலையும் சுகித்தலையுமே பெருமை யாகக்கொண்டு பொருளாசை வைத்து, ஒருகாசை ஒரு கோடி பொன்னைப்போற் கருதுங் கருத்தையுடையவர்களாய், அவர்கள் தங்கள் காலத்தில் வந்த வரும்படியைக் கணக்கிட்டு, "நமது தந்தை காலத்தும் இவ்வளவு தொகை வந்திருக்க வேண்டுமே; பொக்கிஷத் திற் பிதிர்சொத்து? ஒன்றுமில்லையே: இவ்விதவருமானம் போன வழி யென்ன" என்று நினைத்துத் தந்தையின் மந்திரிகளை அழைத் துத் தக்கபடி விசாரணை செய்தார்கள். அம் மந்திரிகள் கை குவித்து, "ஓ இராஜபுத்திரர்களே! உங்கள் தந்தை யாகஞ்செய்யக் கருதிப் பிருகு முனியைக் குருவாகக் கொண்டு, திரவியங்களை அநேகம் பெயர்களுக்கு அபாரமாகத் தானங்கொடுத்தார். அவர் களிற் பிருகு முனிவருக்கும் அவர் புத்திரர்களுக்கும் அளவற்ற திரவியத்தைக் குவித்தார். அதற்கு நாங்கள் என்செய்வோம்?" என்று மறுமொழி கொடுக்க, இராஜகுமாரர்கள் அவசரப்பட்டு, பிருகு முனிவருடைய புத்திரர்களை யெல்லாம் அழைத்துவரக் கட்டளையிட்டுக் கோபத்தோடிருந்தார்கள்.

அக்கட்டளைப்படி மந்திரிமார்கள் தூதுவர்களை யனுப்ப, தூது வர் பிருகுமுனி புத்திரர்களிடத்துச் சென்று இச்செய்தியைத் தெரிவிக்க, அவர்கள் உடனே பிரயாணப்பட்டு வந்து இராஜ புத்திரர்களைக் கண்டார்கள். அப்புத்திரர்கள் குருபுத்திரர்களை நோக்கி, "ஓ மஹாத்துமாக்களே! நீங்கள் மும்மலச் சேட்டையை அடக்கி வேதநெறி நின்று நல்வழியிற் செல்பவர்கள். உங்களுக்குப் பொருளெதற்கு? எங்கள் தாதை அளவற்ற திரவியத்தை உங்க ளுக்குக் கொடுத்திருக்கிறார். அத்திரவியம் நல்வழியில் வந்த தல்ல, நீங்கள் அதனை வைத்திருப்பதாற் பாபம் நேரிடுமேயன்றிப் புண்ணியநேரிடாது. ஆதலால் அத்திரவியத்தை யெல்லாம் கொண்டுவந்து வைத்து விடுங்கள்" என்று கூறப், பிருகு முனி புத்திரர்கள் அரசன் புத்திரர்களை நோக்கி, "ஓ இராஜபுத்திர

களே! பாபப்பொருள் புண்ணியப் பொருள் என்னும் இவற்றுள் எதுவாயிருந்தபோதிலும் பிராமணருக்குத் தத்தமானபொருளை நீங்கள் கேட்பது தகுதியல்ல, நாங்களும் கொடோம்'' என்று மறுத்தார்கள். அரசன் புத்திரர்கள் அதிகக் கோபங்கொண்டு, "என் தந்தையை ஏமாற்றி யாகத்துக்கென்றும் யாகபாகத்துக் கென்றும் எங்கள் திரவியத்தையெல்லாம் கிரகித்துக்கொண்டு, நாங்கள் கேட்டால் கொடுக்கிறதில்லையென்றும் அஞ்சாமற் பேசு கிறீர்களா? அப்படியா?'' என்றெழுந்து தங்கள் கையிலிருந்த வாளால் அவர்கள் தலைகளை வெட்டிவிட்டு ஆசிர்மத்துக்குட்சென்று பொருள்களையெல்லாம் எடுத்துக்கொண்டு, பின்னும் அந்தப்பிருகு முனி புத்திரர்களை யெல்லாம் தேடித்தேடிக் கொலைசெய்யத் தலைப்பட்டார்கள். இப்படிக் கொலைசெய்து வருகிறபோது பிருகு முனிவர் புத்திரருள் ஒருவருடைய மனைவி கருப்பவதியாயிருந் தாள். அவள் இந்த ராஜபுத்திரர்கள் தன் கணவன் முதலான வர்களை யெல்லாம் வெட்டி எறிகிறதைக்கண்டு, நாம் கருப்பவதியா யிருப்பதைக் கண்டால் நம்மையுங் கொலைசெய்வார்களென்றஞ்சி நடுங்கி, மகமேருச் சாரலிற்போய் ஒளித்திருந்தாள். இராஜபுத்தி ரர் பிருகுமுனி வமிசத்தை நாசப்படுத்தி, நகரத்திற்சென்று மனக் களிப்புடன் அரசுசெலுத்தி வந்திருந்தார்கள்.

இங்கே பிருகுமுனி பௌத்திரன் மனைவி நம்மைத்தேடிவந்து எங்கே கொலை செய்கிறார்களோவென்று பயந்து, வயிற்றிலிருந்த கருவைத் தன் வல்லமையாற் சிலகாலம் தொடையில் வைத் திருந்து, நூறு வருஷம் சென்றபின்பு பெற்றாள். அப்புத்திரன் பிறந்ததை அங்கிருக்கும் தவசிரேஷ்ட சிகாமணிகள் வந்து பார்த்து மகிழ்வடைந்து, அப்புத்திரனைப் பெற்ற அம்மனைப் பல வாறு புகழ்ந்து, அந்தப் புத்திரனுக்குப் பகனென்று நாமகரண மிட்டு, பிறந்ததுமுதல் அஞ்சுவயதளவும் செய்யும் பிராமணச் சடங்குகளை நிறைவேற்றி உபநயன முடித்து வேதமோதுவித்து, தவத்துக்கு யோக்கியதையாகிய மந்திர முதலியவற்றையும் உப தேசித்தார்கள். அப்புத்திரன் வேதாகமங்களிலும் மனுக்கியான முதலியவற்றிலும் வல்லவனாகி, சிவத்தைப் பேணும்படியான சிறந்த தவத்துக்கு யோக்கியனானான். அக்காலத்தில் தன் மூதாதை முதலியவர்கள் கிருதவீரியன் புத்திரர்களால் இறந்ததைத் தன்தாய் சொல்லக்கேட்டு அப்புத்திரர்களை நீறாக்கிவைப்பதுமன்றி, அந்த அநியாயத்தைக் கேட்காமலிருந்த இந்த உலகத்தையும் வேறாக்கி

சொர்க்கத்தையும் எரிக்கிறேனென்று மஹா உக்கிரத்தோடு தவ நிலை சேர்ந்து, தவசிரேஷ்டரெல்லாம் வியப்படைய அருமையான தவஞ்செய்தான். அந்தத் தவத்தி லெழுந்த அக்கினியானது கிருத வீரியன் வமிசத்தாரைப் பற்றி எரிக்கத் தலைப்பட்டது. அந்தக் கிருதவீரியன் வமிசஸ்திரீகள் ஏக்கங்கொண்டு நடுங்கி ஒடுங்கிப் பகனை யீன்ற அன்னை இடத்து வந்து முறையிட்டு, பாதத்தில் விழுந்து தங்களுக்குண்டான குறையைச் சொல்லி, எங்களைக் காக்கவேண்டுமென்று பலவாறு துதித்தார்கள். அந்த அம்மன் ஒருவர் முறையிட்டு அழுகிறதைக் காதிலும் கேட்டறியாதவளாகையால் மிகுந்த தயாளகுணத்தை யுடையவளாய்த் தன் கணவன் முதலானவர்க ளிறந்துபோன துயரத்தையு நினைக்காமல், உடனே மனமிளகி அவர்களை ஆதரித்து, "ஓ ராஜஸ்திரீகளே! அஞ்சாதீர்கள். இந்தத் தபாக்கினி தேவர்களால் நீங்கும். நீங்கள் உங்களிருப்பிடத்துக்குச் செல்லுங்கள்" என்று கட்டளையிட்டனுப்பினாள்.

இங்கே பகன் செய்த அருமையான தவத்திலுண்டான அக்கினியானது, சொர்க்கமத்திய பாதாளமென்னும் மூன்றுஸ்தலங்களையும் பற்றியெரிக்கத் தலைப்பட்டது. இதனைத் தேவர்கோமானாகிய இந்திரன் அறிந்து, சில தேவர்களோடு பகனது பிதிர்க்களிடத்துச்சென்று, அப்பிதிர்க்களை அநேகவிதமாகத் துதித்து, "ஓ ஐயன்மீர்! உங்கள் வமிசத்தி லுற்பத்தியான பகன் உங்களைக் கொலைசெய்த கிருதவீரியன் வமிசத்தை நாசப்படுத்தத் தவஞ் செய்கிறான். அந்தத் தவத்தி லெழுந்த அக்கினி அவர்களை நாசப்படுத்துவதுமன்றி, சொர்க்காதி புவனங்களையும் பொரியாக்குகிறது. நீங்கள் விரைவிற் சென்று அவன் தவஞ்செய்வதை நிறுத்தி வாருங்கள்" என்று பலவாறுவேண்ட, பிதிர்க்கள் உடனே தெய்வ விமானத்திலேறிப் பகன் தவஞ்செய்திருந்த விடத்துக்குச் சரியாக அந்தரத்தில் வந்து நின்று, பகனை யழைத்து, "அப்பா பௌத்திரசிகாமணியே! உன்னால் நாங்கள் அளவற்ற கீர்த்தியை வகித்தோம். இப்போது நீ எங்கள் வசனத்தைக்கேட்டு அதன்படி நட" என்று பணித்தார்கள். பகன் பிதிர்க்களின் வரவைக்கண்டு எழுந்து, பலவித உபசாரத்தோடு நமஸ்காரஞ்செய்து, "ஓ ஐயன்மீர்! ஆ! ஆ! என்ன மேலான தவம் யான்செய்தது. ஏககாலத்தில் உங்களையெல்லாம் என்கண்ணாரத் தரிசிக்கும் பாக்கியத்தையும் பெற்றேன். தற்செயலாய் எளியேன்மேல் கிருபை கூர்ந்து தாங்க ளனைவரும்கூடி இவண்

வந்த காரணமென்ன? நீங்கள் இப்போது சொல்லும் வசனமென்ன?" என்று வினவினன். பிதிர்க்கள் பேரனுக்கு ஆசிகள் கூறி, "அப்பா பௌத்திரா! நாங்கள் கிருதவீரியன் புத்திரர்களால் அதமானோமென்கிற செய்தியை யுணர்ந்து, அவர்களை நீறுக்கக்கருதித் தவஞ் செய்கிறாய். அத்தவத்தை இனி விட்டுவிடு. ஏனென்றால், உறக்கத்திற்பிறந்து மும்மலப் பேயிடத்து அகப்பட்டு விம்மலாகிய வருத்தத்தை அடைந்திருந்த எங்களைப் புண்ணியலோகஞ் சேர்த்த கனவான்களை நீறுக்குவது தகுதியல்ல. இக்காயவேதனை நீங்கி எக்காலம் புண்ணியலோக மடையப்போகிறோ மென்று வருத்தப் பட்டிருந்த எங்களையெல்லாம், ஏககாலத்திற் சொர்க்கத்துக்கனுப்பிவித்த தருமவான்களைக் கொல்லுவது நியாயமோ? எங்கள் வினைப் யனும் அவ்வாறிருக்க, மற்றவர்களை விரோதித்து நீ மனம் நோவதிற் பயனென்ன? இனியேனும் அக்குரூரத்தை விட்டு விடு" என்று விளம்பினார்கள். பகன் பிதிர்வாக்கியத்தைத் தடுக்கக் கூடாமையால் தவஞ்செய்தலை நிறுத்தி, "ஓ ஐயன்மீர்! என் தவத்தா லெழுந்த அக்கினிக்கு வழிகாட்டுவீர்களானால், இம்மட்டில் தவத்தை நிறுத்துகிறேன்" என்றான். அதற்குப் பிதிரர் "அப்பா பௌத்திரா! உன் தவத்தி லெழுந்த அக்கினியைக் கடற்புறத்தில் வைப்பாயாகில், அது கடலிற் சுரக்கும் நீரைப் பானஞ் செய்து கொண்டிருக்கும்" என்று சொல்லிவிட்டு அப்பகனுக்குப் பல ஆசிகள் வழங்கிப் புண்ணியலோகம் போய்ச் சேர்ந்தார் கள். பகன் பிதிர்க்களிட்ட கட்டளைப்படி தபாக்கினியைக் கடற்புறத்திற் கனுப்பிவிட்டுத் தாயிடஞ் சென்று வாழ்ந்திருந்தான். அந்தத் தபாக்கினி கடற்புறத்துச் சென்று கடலிற் சுரக்கும் நீரை யுண்டு, வடவைக்கன லென்னும் பெயரால் விளங்குகின்றது.

அப்பா! பௌத்திரா அந்தப் பகமுனிக் கொப்பானவன் நீ, ஆகையால் அம்முனியைப்போல மூன்றுலகத்தையும் தகிக்கக் கருதாமல், உன் தந்தைகளைக் கொன்றவர் அரக்கர் வம்சமாதலால் அவ்வரக்கர் குலத்தை மாத்திரம் நாசப்படுத்து" என்று அருளுடன் விடைகொடுத் தனுப்பினார். பராசர் மூதாதைபின் கட்டளைப்படி அருமையான தவஞ்செய்தார். அத்தவத்தால் அக்கினி யுண்டாகி உலகிற் பரவி, அரக்கர்குலங்களைப் பற்றி எரிக்கத் தலைப்பட்டது. அரக்கர் இந்தத் பாக்கினியைக் கண்டவுடன் திடுக்கிட்டு அஞ்சி நடுங்கி ஓடுங்கிச் சத்தியலோகஞ் சென்று, பிரமதேவனைக் கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, "ஓ சுவாமி!

நாங்கள் வசிஷ்டருடைய புத்திரரைக் கொன்ரேம் என்று கருதி, அவருடைய பௌத்திரராகிய பராசர் எங்களை நாசமாக்கத் தவஞ் செய்கிருர். ஆதலால் தேவரீர் அத்தவத்தை நிறுத்தி எங்களை ஆதரிக்கவேண்டும்" என்று வேண்ட, பிரமன் உடனே தமது அன்னவாகனத்தி லெழுந்தருளித் தவஞ்செய்திருந்த பராசர் கண் முன்ரேன்றி, "ஓ பராசரே! உமது மனவுறுதியையும் தவத்தினரு மையையும் கண்டு வியப்படைந்தோம். இனித் தவஞ்செய்தலை விட்டு நீங்கவேண்டும்" என்று புகல, பராசர் பக்திவிசுவாசத்தோடு நமஸ்காரஞ் செய்து, "ஓ சிருஷ்டிகர்த்தாவே! தமியேன் தந்தை களைக் கொன்ற பாவியாகிய அரக்கனது வமிசத்தை நாசப்படுத்தி ஞல், தங்களுக்கு வருத்தமென்ன, சொல்லுங்கள்" என்று கேட் டார். அதற்குப் பிரமன் "ஓ பராசரே! உமது தந்தைகளைக் கொன் றவன் அரக்கனல்ல, சூரியவமிசத்தரசன். முன்வினைப் பகுதியால் அரக்கனுனன். உமது தந்தைகளுக்குத் துன்பநேரிட்டது சுய மாகிய அரக்கரால் அல்ல. ஆதலால், நீர் தவஞ்செய்தலை விட்டுவிடும்" என்ருன். அதற்குப் பராசர் சதுர்முகனே! தாங்கள் கொடுத்த விடையை நோக்கினுல், அரக்கர்பேரிற் குற்ற மில்லை என்று தெரிகின்றது. ஆயினும் இப்போது நான்செய்த தவத்தி லுண்டான அக்கினிக்குப் போக்கிட மெங்கே?" என்று வினவப், பிரமன் மகிழ்ந்து, "ஓ பராசரே! உமது தவத்தி லெழுந்த தபாக்கினியை மேற்றிசையிலிருக்கும் பாலைவனத்தில் வை" என்று உத்தரவு செய்து, மங்கள வார்த்தைகூறித் தமதிருப்பிடஞ் சேர்ந் தார். பராசர் பிரமன் திருவாய்மலர்ந்தபடி தபாக்கினியை மேற் றிசையிலிருக்கிற பாலைவனத்தில் வைத்து, மூதாதையாகிய வசிஷ்ட ரிடத்துச் சென்று வணங்கி, தாம் தவஞ்செய்ததும் - அங்கு பிரமன் வந்ததும், அப்பிரமன் வேண்டுகோளினுல் அத்தவத் தணலை மேற்றிசையில் வைத்ததும் சொல்லிச் சுகமாயிருந்தார்.

---

## பாண்டவர் தௌமியமுனிவரை அடுத்தல்

---

"ஓ பாண்டு புத்திரர்களே! இந்த வசிஷ்டமஹாமுனியின் பெரு மையை இரண்டாயிரம் நாவைப்படைத்த ஆதிசேஷனுலும் சொல் லக்கூடாதென்ருல், என் ஒரு நாவினுற் சொல்ல வசமோ" என்று சித்திராங்கதன் கூறினுன். அப்போது அர்ச்சுனன் முதலான ஐவ

ரும் மிகுந்த ஆனந்தத்தை அடைந்தார்கள். அவர்களில் தரும ராஜன் சித்திராங்கதனை நோக்கி, "ஓ காந்தர்வசிகாமணியே! குருவில்லாவிடில் அரசு பெருமையடையாதென்று முன்ன மொழிந்தீர். எங்களுக்குத் தகுதியான அந்தணன் யார்? உமதுவாக்கினாற் சொல்லும்" என்று வேண்டச் சித்திராங்கதன் "ஓ தருமநந்தனா! இவ்வழியே சென்றால் இவ்வழிக் கருகில் உற்கய மென்று ஒரு நதியிருக்கின்றது. அந்நதிக்கரையில் தௌமியரென்னும் ஒரு மஹாத்துமா இருக்கிறார். அவர் சிறந்த உத்தமர், காமம் - குரோதம் - லோபம் - மோகம் - மதம் - மாற்சரியம் ஆகிய அறுவகைக் குற்றங்களையுங் கடந்தவர் வேதாகமசாத்திரங்களின் கரைகண்டவர்; ஷட்குண மூர்த்தியாகிய சிவனுக் கன்பர்; அவரைக்கண்டு வணங்கிக் குருவாகக் கொள்ளுங்கள். மேலும் நீங்கள் நகரஞ்சேர்ந்து மகுடாபிஷேகங் கொண்டவுடனே, உங்களுக்கு நான் வாக்குத்தத்தஞ் செய்தபடி ஐந்நூறு தெய்வப் புரவியையும் அனுப்புவிக்கிறேன்" என்று கூறி விடைபெற்றுச் சித்திராங்கதன் தன்னுலகஞ் சேர்ந்தான். தருமன் முதலான ஐவரும் குந்திதேவியும் சித்திராங்கதன் காட்டிய வழியே போகிறபோது, உற்கயமென்கிற நதி தோன்றிற்று. அந்நதியின் நாற்றிசையிலும் போய்த் தேடித் தௌமியர் ஆசிரமத்தைக் கண்டு பிடித்து, அவரைத் தொழுது பலவாறு துதித்து, தங்கள் ஊர்பெயராகிய வரலாற்றை எடுத்தோதி, "ஓ சுவாமி! அடியேங்களுக்குத் தாங்கள் குருவாயிருக்கப் பிரார்த்திக்கின்றோம். இக் கருத்துக்கு இசையவேண்டும்" என்று வேண்ட, அவர் ஐவர் கருத்திற்கிசைந்து, உடனே பிரயாணப்பட்டு நடந்தார். ஐவரும் குருவாகிய அவரை அழைத்துக்கொண்டு, சூரியன் உதயமாவதற்கிரண்டு நாழிகையிருக்கும்போது பால சூரியர்களைப்போல் முக மலர்ந்து பாஞ்சாலதேசம் போய்ச் சேர்ந்தார்கள்.

சுயவரச்சருக்கம் முற்றிற்று

---

# 9. திரௌபதிமாலையிட்ட சருக்கம்

## கண்ணன் துதி

வேதமும் வேதம் விளம்புமெய்ப் பொருளு
மப்பொருள் விதங்களும் பஞ்ச
பூதமும் புலனும் புலன்களின் பயனு
மப்பயன் பொலிவுற நுகரு
ஞாதமு முலகம் படைத்தளித் தழித்து
ஞானமா யகிலமு நிறைவுற்
ருதியு நடுவு முடிவுமாய் நின்ற
வாதியா னடியிணைபணிவாம்.

கேளும் ஜனமேஜய மஹாராஜனே! பிருதிவி - அப்பு-தேயு-வாயு-ஆகாய மென்னும் பஞ்சபூதங்களைப்போல் விளங்குகின்ற ஐவரும், அப்பஞ்சபூதங்களைப்பெற்ற பராசத்திபோன்ற குந்திதேவியும், சதாசிவன்போல் விளங்கும் தௌமியரும் பாஞ்சால நாட்டுக்கு வந்தவுடன் அந்நாட்டிலுள்ளாருக்குப் பாண்டுபுத்திரர்களாகிய ஐவரும் வந்தார்களென்று பறைசாற்றுவிப்பதுபோலச் சேவல்கள் ஒலிசெய்யச் சூரிய னுதயமானுன். சூரியனுதயமாகவே, பாண்டு புத்திரரைக் காணப்போகின்ருமா வென்கிற மயக்கத்தைக்கொண் டிருந்த பாஞ்சாலன், இனிமேல் ஐவரைக் கண்டமாத்திரத்தில் அவனுக்குண்டாகிய மயக்கம் எவ்வாறு நீங்குமோ அவ்வாறு இருள் நீங்கிற்று. அவன்முகம் எப்படி மலருமோ அப்படித் தாமரை மலர்கள் மலர்ந்தன. அவன்கண்ணி லெவ்வித ஆனந்தநீரரும்புமோ அவ்விதமாகத் தேன் துளித்தது. அந்நகரம் எவ்வாறு மகிழ்ந் தொலிக்குமோ அதைப் போன்று பக்ஷிகளும் விலங்குகளும் மகிழ்வடைந் தொலித்தன. அர்ச்சுனன் அழகைக் கண்ட கற்புடைய மாதர் தங்கள் தங்கள் கணவனைத் தழீஇக் களிகூர்வதுபோல, சேவலும்பேடும் சேர்ந்து மகிழ்ந்தன. இனித் திரௌபதை மாலையிட்டவுடன் அரசர் சீறிப் போருக்கெழுந்த காலத்து அர்ச்சுனனொருவனே எதிர்த்து வெற்றிபெற்று முழங்கும் சங்கத்தொனி போலச் சங்கினம் சப்தித்தன. ஐவரும் காடு மலை முதலியவற்றில் இரவு முழுதும் பாதசாரியாக நடந்துவந்த வருத்தத்தை நீக்கும்பொருட்டு வனதேவதை உபசாரஞ் செய்வதுபோல், சோலைகளெல்லாந் தளிர்களாகிய கையாலழைத்துக் கனிகளைக் கொடுத்துத் தென்றற்காற்றை வீசி யுபசரித்தன.

## பாண்டவர் பாஞ்சாலதேச மடைதல்

நெய்த நிலத்துக் குரிய விளரிப்பாட்டை மருதநிலத்துத் தடாகத்திலிருக்கும் தாமரைமலரிலுள்ள வண்டினம்பாட, அப்பாடலைக் கேட்ட நெய்தநிலமாதர் அந்தத் தடாகத்தை எட்டி நோக்க, இம் மாதர்களின் முகச்சந்திரனைக்கண்டு தாமரைமலர் முகிழ்ப்ப, அம் மாதர் கோபித்துத் தங்கள் பாடலைத் திருடிவந்த வண்டினத்தைச் சிறைச்சாலையிற் போட்டதுபோல் அவைகள் குவிந்த தாமரை மலர்க்கு ளகப்பட்டுப் பாடாமலொடுங்க, மாதர்கள் வண்டினம் பாடக்காணோமென்று தாமரைமலரிடம் காதை வைத்துக் கேட்க, அவர்கள் காதணியாகிய சூரியனைக் கண்டு முன்போல் தாமரைமலரெல்லாமலர, அவற்றிலகப்பட்ட வண்டினங்களின்பேரில் அம்மாதர் கிருபைவைத்துச் சிறைநீக்கிவிட்டதுபோ லவைகள் வெளிப்பட்டு ரீங்காரவோசை காட்ட, இந்த வேடிக்கையையும் 'நமது நாட்டிற் பிறந்த திரௌபதை நெடுநாள் கன்னிகமாடத்தி லிருக்கிறாளாதலால் அவளுக்கு முன்னமே நியமித்திருந்த அர்ச்சுனன் வந்து விரைவில் மணம்புரியவேண்டும்' என்று வனதேவதை வயலிலிருக்கும் பங்கயமாகிய ஓமகுண்டத்தில் மாங்கனிரசமாகிய நெய்யைச் சொரிந்து, புன்னைப்பூவென்னும் பொரியைச்சிந்தி, கிள்ளைகள் நல்ல வேதமந்திரங்களைச் சொல்ல, யாசகர்கள் கையேந்தி நிற்பதுபோற் காந்தள்மலர் எதிரிற் றோன்ற, அவர்களுக்குச் சொர்னமாரி பொழிவதுபோற் கொன்றைகள் மலரைச்சொரிய, இப்படி யாகஞ்செய்வதுபோற் றோன்றும் இந்த வேடிக்கையையும்: யாவருங்கண்டு வியப்படைந்தார்கள்.

ஒரு தடாகத்தில் ஒரு தாமரைமலர் மலர்திருப்பதைக் கண்டு அநேக வண்டுகள் அதனது தேனை அருந்தத் தாவி நெருங்கிய போது ஒருவண்டு பறந்தோடி வந்து அவ்வண்டுகளை யெல்லாம் சிறகாலடித்துத் துரத்தி அம்மலரின் தேனை அருந்தி மகிழ்ந்தது. அதை ஐவருங்கண்டு, 'சுயவரத்திற்கு வந்த அரசர்களெல்லாரும் ஏங்க, நாமே அத்திரௌபதையை மணம்புரிவோ மென்பதற்கு இது நன்னிமித்தம்' என்று எண்ணி நடந்தார்கள். அங்கொரு குளத்திற் பெரிய ஒரு மாங்கனி விழ, அம் மாங்கனியை அந்தக் குளத்திலிருந்த மச்சங்களெல்லாம் இச்சை கொண்டு சூழ, அதைக் கண்ட ஒரு வாளைமீன் பாய்ந்து அம்மச்சங்களை அடித்துத் துரத்தி விட்டு அம்மாங்கனியைக் கௌவிக்கொண்டு போயிற்று. அதனை ஐவர்கண்டு மகிழ்வடைந்து, 'நமது கருத்துக் கிசைந்த கன்னியைப்

பெறுதற்கு இதுவுமோர் நன்னிமித்தம்' என்றெண்ணி நடந்தார்கள். 'பரிமளமிகுந்த நறுமலரணிந்து அளியினமுரன்று உறைதரும் சுகந்த அளகபாரத்தையுடைய பாஞ்சாலியின் மணத்திற்கு உலகிலுள்ள அரசர்களும் வேதியர்களும் வந்தனர்; நீங்களும் விரைவில் வாருங்கள்' என்று தங்களை அழைப்பது போற் குயிலினங்கூவ: 'நமது நாட்டுக்குத் தலைமை பூண்ட பாஞ்சாலன் குமாரியாகிய திரௌபதை அவள் கருத்தின்படி அர்ச்சுனனையே மணம்புரிவாள். வந்த அரசர்கள் நாணமுற்று ஒருவர் போனவழி ஒருவர் போகாமல் தனித்தனிப் பிரிந்தோடுவர். இது உண்மை' என்று வள்ளைப்பாட்டிற் சேர்த்துக் கிள்ளைகள்பாட, மகரயாழ்போல் வண்டினமொலிக்க, மிருதங்கத்தைப் போல் மேகமுழங்க, மையலால் மகிழ்ந்து மயில்வந் தாட, பூங்கொத்துக்கள்தோறும் பொறியளிகள் சப்திக்க, ஜலங்களிற் பக்ஷிகளொலிக்க, ஆண்மிருகமும் பெண்மிருகமும் ஆலித்துக் காதலிக்க, கற்பகவிருக்ஷத்தில் வல்லிக்கொடி படர்ந்திருப்பது போல் மரங்கள்தோறும் பலவித புஷ்பக்கொடி படர்ந்திருக்க, இவைகளை யெல்லாங் கண்டு நயந்து, சிங்கத்துக் கொப்பாகிய பராக்கிரமத்தையுடைய ஐவருஞ் சிந்தை வியந்து, பூஞ்சோலையைக் கடந்து, பலிச்சக்கிரவர்த்திக்கு முன் திருமால் கொண்ட வடிவைப்போல அந்தரமட்டு மளாவிக் கோடிசூரியப் பிரகாசம் போன்று ரத்தினசிகர கோபுரங்களோடு கூடி அண்டப் புறச்சுவர் போல விளங்குகின்ற மதில்களையுடைய பாஞ்சால நகரத்தைக் கண்டார்கள்.

அந்த நகரில் மங்கலத்துக்குரிய மிருதங்கமுதலாகிய பலவாத்தியங்கள் முழக்கமும், இரதகஜதுரகபதாதி சேனைகளும், மன்னர் - மண்டலீகர் பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர் - அர்த்தரதர் - மஹாரதர் முதலாகிய இராஜகூட்டங்களும், பிராமணர் - க்ஷத்திரியர் - வைசியர் சூத்திரர் முதலான ஈட்டங்களும், மற்ற மரபினரும், முனிவர்களு நெருங்கியிருந்த வைபவங்களைக் கண்டு அதனுட் சென்றார்கள். அந்நகரம் எப்படியிருந்த தென்றால் யுகாந்தகாலத்தில் உயிர்களனைத்தையும் தமது கருப்பத்தில் வைத்துத் திருப்பாற்கடலில் ஆதிசேஷசயனத்திற் பள்ளிகொண்டு யோகநித்திரை செய்யும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை ஒத்திருந்தது. அப்படிப்பட்ட பாஞ்சால நகரத்திற் பாண்டவர் ஐவரும் வீதியிற் செல்லும்போது, "காதளவுபாய்ந்த விழியினையும் - முல்லை மலரையொத்த முறுவலையும்-கோவைக்கனி போன்ற இதழையும்-சந்திரனுக்கிணை

யான முகத்தையும் - ஆரமுதலிய ஆபரணங்களை யணிந்த பயோதரத்தையுமுடைய பாஞ்சாலிக்கு இன்றைத் தினந்தான் மாலையிடுகிறது. விரைவில் வாருங்கள்: வாருங்கள்: என்று அழைப்பதுபோல் தெருக்கள்தோறும் கட்டியிருந்த கொடிகளின் ஆடைகள் ஆடின. இவ்விநோதங்களோடு விதிகள்தோறும் போட்டிருந்த விதானங்களையும், அவற்றின் சோபனங்களையும் பூரணகும்பம் அமைத்திருந்த நிதானங்களையும் நோக்கி மகிழ்ந்து, கடைவீதிகளைக் கண்டு வியப்படைந்து, அங்கங்கிருக்கும பிரஜைகளையும் கண்ணுற்று நடந்தார்கள். இவ்வைவரும் எந்த வீதியிற் சென்று நோக்கினும், அங்கங்குப் பிரஜைகள் நிறைந்திருந்தார்கள். இவர்கள் இருக்க இடந்தேடி அந்நகர் முழுவதுஞ் சுற்றிப்பார்த்தார்கள். அப்போது பராக்கவனென்கிற ஒரு குயவன் இந்த ஐவரையு நோக்கி, "ஓ ஐயன்மீர்! நமஸ்காரம், என் வீட்டிலொரு சின்ன அறை இருக்கின்றது, அது உங்களுக்குப் போதுமானதா யிருந்தால் இருங்கள்" என்றிசைத்தான். உடனே தருமராஜன் அவ்விட்டைப் பார்த்துப் போதுமென்று சொல்ல, குயவன் அதிலிருந்த சாமான்களை வெளியி லெடுத்துக் கொண்டு அவ்வீட்டைச் சுத்தி செய்து கொடுத்தான். ஐவரும் குந்திதேவியை அவ்வீட்டிலிருக்கச் சொல்லிப் பணிந்து விடைபெற்றுத் தௌமியரோடு இராஜ சபைக்கு வந்து, பிராமணருக்கு நியமித்திருந்த சிங்காரமண்டபங்களில் வேதியரோடு தாங்களும் கலந்திருந்தார்கள்.

இப்பால் திரௌபதையின் செயல்களைச் சொல்லுகிறேன்: கேளும் மஹாராஜனே! இப் பாஞ்சால தேசத்தரசனாகிய துருபத மஹாராஜன் துரோணாசாரியைச் சபையிற் பங்கப்படுத்தினதையும் துரோணாசாரி அர்ச்சுனனால் துருபதனைப் பிடித்துவந்து தமது சபையில் அவமானஞ் செய்ததையும் அதன்மேல் துருபதன் துரோணரைக் கொல்ல ஓர் ஆண் மகவையும் தன்னை வெற்றிகொண்ட அர்ச்சுனன் கருத்து மகிழ ஒரு பெண் மகவையும் பெறுகிறேனென்று சபதம் செய்ததையும் - அச்சபதப்படி பெரியோர்களை அடுத்து மக்களைப்பெற்றதையும், தாதியரால் திரௌபதை கேள்விப்பட்டு உள்ளம் பூரித்தாள். அர்ச்சுனனுடைய வல்லமை அழகு குண முதலியவற்றையுங் கேட்டறிந்து, மகிழ்ச்சியாகிய அமிர்தத்தைப் பானஞ்செய்து நாளொருமேனி பொழுதொருவண்ணமாக வளர்ந்து வந்தாள். அக்காலத்தில் ஐவர் அரக்குமாளிகையி லிறந்துவிட்டார்களென்கிற செய்தி லோகப்பிரசித்தமாகச் சொல்லிக்கொள்வதை உயி

ர்ப் பாங்கிகளாலறிந்து, துக்கசாகரத்தில் மூழ்கி வருத்தப்பட்டாள். தன் தந்தையாகிய துருபதன், ஜோசியர் உலூகமாமுனி வேதவியாசர் இவர்களால் ஐவரு முயிரோடிருக்கிறாரென்று தெளிந்ததை அவ்வம்ம னுணர்ந்து, ஆதியில் நியமித்த புருஷன் நமக்குச் சித்திப்பான். இதற்கொரு சந்தேகமில்லை என்கிற தீர்மானத்தை உள்ளத்திற் கொண்டிருந்தாலும் நமக்கு நியமித்த புருஷனைக் கண்ணுற் காண்ப தெக்காலமென்கிற ஏக்கத்தைக்கொண்டு அல்லும் பகலும் அதுவே நினைவாக உணவுமுதலியவற்றிற் சிரத்தை இல்லாதவளாயிருந்தாள். ஊழியஞ்செய்திருந்த தாதியர்களாலும் அன்னையர்களாலும் அடிக்கடி அர்ச்சுனனுடைய் பராக்கிரமத்தையும் அழகையும் கேட்டு, மனச் சஞ்சலம் நீங்கித் தெய்வத்தைத் தியானஞ் செய்து கொண்டிருந்தாள்.

அப்போது தன் தந்தை சுயவரஞ்சாட்டிச் சிலநிபந்தனைகளை வைத்து ஐம்பத்தைந்து தேசத்தரசர்களுக்கும் மணவோலை அனுப்பியதாகக் கேள்வியுற்று, அர்ச்சுனன் வருவானென்கிற களிப்பையும் இந்த மணவோலை ஐவருக்குச் சேருமோ சேராதோ என்கிற சந்தேகத்தையும் உடையளாகி, நல்லது அந்த வோலையைப் பார்வையிட்ட அவ்வைவர்கள் ஒருவேளை நம்மை லக்ஷயப்படுத்தாமல் எங்கே வராதிருப்பார்களோ அல்லது லக்ஷயப்படுத்தியும் 'நாம் வருந்துவதுபோற் காட்டில் ஒரு ஸ்திரீயைக் கொண்டுபோய் வருத்துவது தகுதியல்ல' என்று நினைத்து வராதிருப்பார்களோ; அப்படி வராமற்போனால் இந்தக் கல்யாணமண்டபம் என்னபாடு படும் "என்கிற வருத்தத்தையும் உட்கொண்டு தாமரை யிலையிற் சலம்போல் தத்தளித்திருந்த வேளையில்; துருபதராஜன் தாதிகளை அழைத்து, "என் புத்திரியை ஸ்நானஞ் செய்வித்து அலங்கரித்து அழைத்து வாருங்கள்" என்று கட்டளையிட்டான். சேடியர் உடனே திரௌபதையினிடத்துக்கு ஓடிவந்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, "ஓ பொறுமைசாலி! உமது தந்தையாகிய மஹாராஜன் உங்களுக்கு ஸ்நானஞ்செய்வித்து அலங்கரித்து அழைத்துவரக் கட்டளையிட்டார். தாங்கள் திருமஞ்சனச்சாலைக் கெழுந்தருளவேண்டும்" என்று செப்பினார்கள். அம்மன் தாதிகளைக் கண்ணுற்று, "ஓ தாதியரே! என்கருத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள் : நான் பாண்டு புத்திரனுக்கு மாலையிடுவேனேயன்றி மற்ற அரசர்களுக்கு மாலையிடேன். ஐவர் வராதிருந்தால் நான் மற்ற அரசர்களை விரும்பாமல், எனக்குத் தாயாகிய அக்

கினிதேவியிடத்துப் புகுவேன். இதுவே சத்தியம். இதைவிட்டு நீங்களாவது அல்லது என்தந்தையாவது வேறொரு நினைப்பைக் கொண்டால் அது எனக்குச் சம்மதமாக இராது. ஆகையால், நீங்கள் செய்யவேண்டிய வேலை யெதுவோ அந்த வேலையிற் ஜாக்கிரதையாக இருந்தால் வருகிறேன் என்றாள்.

## திரௌபதை சுயவரமண்டப மடைதல்

அதற்குத் தாதியர் வணங்கி, "ஓ எங்கள் குலதெய்வமே! ஏதோ சில காரியம் இருக்கிறதாகவும், அதன்மேல் தங்கள் கருத்துக்கு அழிவுவரப்போகின்றதென்றும் எண்ணங்கொண்டு, எங்களுக்குப் புத்திசொல்லுகிறீர். நீங்கள் அப்படிச் சொல்லவேண்டாம். உங்கள் கருத்துக் கிசைந்த கணவனுக்கு மாலையிடுகிறதென்கிற தீர்மானத்தை யுட்கொண்டிருக்கிறீர். இராஜன் கருத்தஃதல்ல. யாவருக்கும் அசாத்தியமாயிருக்கிற வில் அம்புடன் லக்ஷயக்குறி வைத்து, இந்த வில்லைவளைத்து அம்பைத்தொடுத்து லக்ஷயத்தை விழச்செய்பவன் எவனோ, அவனுக்கு என் மகள் மாலையிடுவேள்" என்று தெரிவித்திருக்கிறார். ஆனால் அந்த வில்முதலியவை அர்ச்சுனனுக்குச் சாத்தியமாயும், மற்றையர்க்கு அசாத்தியமாயுமிருக்கின்றன. ஆகையால் ஐவர் எவ்வுருவங்கொண்டிருந்தாலும் அவ்வுருவத்தோடு சபைக்கு வருவார்கள். அவர்களில் அர்ச்சுனன் வில்லைவளைத்து அம்புதொடுத்து லக்ஷயத்தை விழச்செய்து, உனது கைமாலைக்குரியவனாவான். தாயே! சஞ்சலப்படாமல் எழுந்து வாரும்" என்று கூற அம்மன்ம கிழ்வடைந்து எழுந்து, மஞ்சனச்சாலைக்கு வர யத்தனித்தாள். வருகிறபோது இடத்தோளும் இடக்கண்ணும் துடித்தன. இக்குறி நற்குறியென்றுணர்ந்து, மகாசந்தோஷத்துடன் திரௌபதை மஞ்சனச்சாலைக்கு வந்தாள். உடனே தாதியர் இரத்தினங்களால் இழைக்கப்பட்ட ஓராசனத்தில் திரௌபதையை எழச்செய்து, அங்கு வந்திருந்த இராஜ மரபைச்சேர்ந்த மாங்கல்ய ஸ்திரீகளுக்கெல்லாம் வெவ்வேறு கனிவர்க்கங்களையும் வெள்ளடைப்பாகுகளையும் தங்கள் கைமிதப்பத் தந்தார்கள். அவர்கள் யாவரும் புடைசூழ்ந்து மங்கள வாழ்த்துகூறி உபசரித்து நலங்கிட்டானபின்பு திருமஞ்சனமாட்ட யத்தனித்தவர்களாய் புழுகுசட்டம் கோட்டம் ஆரியக்கோட்டம்

நாகப்பூ, முத்தக்காசு, சயிலேகம், விலாமிச்சம், இருவேரி, மாஞ்சில், மலையிருவேரி, பச்சிலை, கச்சோலம், அதிமதுரம், தக்கோலம், வாழைப்பூ, நன்னாரிப்பூ, கண்டில், வெண்ணெய், மகிழம்பூ, தாவரிசி, ஏலம், சாதிக்காய், வெண்குங்கிலியம், இலவங்கம், நாகணம், மஞ்சட்டி, சண்பகமொக்கு, அரத்தை, சாம்பிராணி, தகரம், கருங்குங்கிலியம், வெட்டிவேர் என்கிற முப்பத்திரண்டு பொருள்களோடு கஸ்தூரி, குங்குமம், கர்ப்பூரம், அகில், சந்தனம் என்கிற ஐவகை வாசனைத் திரவியங்களையும், நாவல், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், ஆல், அரசு, அத்தி, இத்தி, கோரைக்கிழங்கு, மாந்தளிர் என்கிற பத்துவகைத் துவர்ப்புச் சரக்குகளையுஞ் சேர்த்து, வெள்ளிலோத்திரப்பட்டையையும் அரைத்த சந்தனவண்டலையுங் கலந்து, மிக்க பக்குவத்தோடு காய்ச்சப்பட்டிருந்த பரிமளமிகுந்த தயிலத்தைக் கூந்தலிற் றிமிர்ந்து, பின்னல்களை மெல்லெனச் சிக்கறுத்து, யானையின் பிடரியிற் கொணர்ந்து வந்த பலகங்காஜலத்தினாலும் வேதவேதியர்களால் மந்திராவாகனஞ் செய்யப்பட்டு வாசனையூட்டியிருந்த பூரணகலசகங்கா ஜலத்தினாலும் திருமஞ்சனமாட்டி, பனியைப்போன்ற மெல்லிய ஒற்றுடையினால் ஈரம்புலர்த்தி, இழையாயிரம் பொன்பெற்ற இந்திரவர்ணப்பட்டாடை யணிந்து, அலங்காரமண்டபத்தி லழைத்துவந்து பொற்பீடத்திலிருத்தி, அளகத்தி லீரமில்லாதிருக்கச் சாம்பிராணிப் புகையோடு அகிற்புகையும் புகட்டி, இருதோளிலும் துவசமெழுதி, கூர்வேல்விழிக்கு மையிட்டு இருபுருவங்களையுந் திருத்தி, தனத்துக்கு மேலும் கழுத்துக்குங் கீழுமான விடத்தில் ஐந்துகணைகளுடன் மதன்வில் லெழுதி, தனத்திற்குச் சந்தனம், புழுகு, கஸ்தூரி, கர்ப்பூரம், சவ்வாது நெய்யிட்டுச் சீப்பினால்வாரி, மேகத்தின் மத்தியில் மீன்தோன்றியது போற் பாவட்டையெடுத்து, உயர்ந்த ரத்தினங்களை யழுத்திய ஜடைப்பில்லையும் பிறைப்பில்லையும் வைத்துப் பின்னிய ஜடைக்குக் குச்சு குப்பி யணிந்து, கிளியைப்போலவும் அன்னத்தைப் போலவும் புறாவைப் போலவும் தாழம்பூவைப் போலவும் பசும்பொன்னாற்செய்து ரத்தினங்களை அழுத்திய பலபூஷணங்களைப் பின்குழலில் முடித்து சந்திரப்பிரபை சூரியப்பிரபை முன் கொண்டைப்பூ சிரபூஷணம் அராய் முதலியன தலைக்கணிந்து, சுட்டி முகவீரபட்டம் மூக்குப்பொட்டு மூக்குத்தொங்கட்டம் நத்து முதலாகிய பணியை நெற்றியிலும் நாசியிலு மாட்டிக் குண்டலம், கத்திரிப்பூ, கன்னப்பூ, ஒன்னப்பூ, கொப்பு, முருகு, நாரை முட்டையையொத்த

நீரோட்ட நிறைந்த ஆணிமுத்துக் கோவையாலாகிய மயிர்மாட்டி முதலிய அணிகளைச் செவியி லணிந்து, உட்கழுத்தின் மணி உயர்ந்த முத்துமாலை, மோகனமாலை, பஞ்சரத்தினமாலை, நவரத்தினமாலை, பிறைவடம், கடலைமணித் தாழ்வடம், மின்னூல், கண்டசரம், உத்தரசஞ்சம் இவைகளைக் கச்சணிந்த குயாசலத்தை மறைக்க மார்பிலணிந்து வாகுவலயம், கடகம், கேயூரம், கங்கணம், அங்குலிக முதலிய பூஷணங்களைத் தோளிலும், முன் கையிலும் அகங்கையிலும் விரல்களிலுந் திருத்தி, இடைக்கு (16) மணிக்கோவையையுடைய மேகலாபரணங் கட்டி, முகப்பில் மாணிக்கம் பதித்த ஒட்டியாணத்தைப் பூட்டி, பாதகடகம், தண்டை, நூபுரம் பாதசரமுதலிய காலணிகணிறைத்து, கால் விரல்களுக்கு மீன்போலும், மயில்போலும், உருவஞ்செய்திருந்த பீலியென்னு மோதிரங்களை இட்டு, கூந்தற் சடைக்கு மல்லிகை முல்லை சண்பகம் சம்பங்கி முதலிய பரிமளமிகுந்த நறுமலர் மாலைகளை யணிந்து, பாதத்துக்குச் செம்பஞ்சூட்டி, இவ்வாறு சகல அலங்காரங்களுஞ் செய்தான பின்பு தெய்வத்தை வாழ்த்தித் திருநீறிட்டு, திருஷ்டிகழிய நீராஞ்சனமுதலிய ஆரத்தியெடுத்து, அரசன் உத்தரவுக் கெதிர்பார்த்துக்கொண்டு அம்மனை அலங்கார மண்டபத்தில் வைத்திருந்தார்கள்.

அரசன் வேதியர்கள் நியமித்திருந்த முகூர்த்தவேளையிற் சில தாதிகளை அனுப்பித் திரௌபதி அம்மனை அழைத்துவரக் கட்டளையிட்டான். அத் தாதியர்கள் வந்து தாதிமாருக்கும் அவ்வம்மனுக்கும் தெரிவித்தார்கள். உடனே அத்தாதிமார்கள் புடைசூழத் திரௌபதியம்மனெழுந்து, முரசு, பேரிகை, டமாரம், நாகசுரம், காகளம், எக்காளம், துத்தாரி, சின்னம், பேரி, யாழ், செங்கோட்டியாழ், மகரயாழ் முதலிய வாத்திய முழங்க, விருத்த வேதியர் பூரணகலச மெடுத்துச்செல்ல, மங்களஸ்திரீகள் மங்களம்பாட, கிளி, நாகணவாய்ப் பட்சி, கழுங்கு, பலவிதப்பிரதிமை, வெள்ளிலை, அடைக்காய், மான், புழுகு, பூனை, சவ்வாது பூனை, சவுரிமிருகம், அன்னம், மயில், குயில், சிறுமணிக்குன்று, ஆடற்கருவிகள் முதலியவகைள் வெள்ளியினுலும் தங்கத்தினுலும் பலவித இரத்தினங்களினுலும் செய்திருந்தவை தாதியரெடுத்துப் புடைசூழ்ந்துவர, முத்துக்குடை சுற்றிலுநெருங்க, ஆலவட்டமசைய, வெண்சாமரைவீச, அமரர்களோடு பல அரசர் மன்னர்களும் பின்செல்ல, அவ்வவர்கள் கண்களாகிய

வண்டுகள் ஸ்திரிகள் முகமாகிய கமலத்தை மொய்க்க, அனிச்ச மலரும் அன்னத்தின் தூவியும், பரப்பிய வழியில் நடந்துவந்து கொண்டிருந்தாள். அப்போது 'பாஞ்சாலிக்குரிய கணவன் சபையில் வந்திருக்கிறுன் நீங்களேன் இலவுகாத்த கிளிபோல் காத்திருக்கின்றீர்கள்? உங்கள் நகரத்துக்குச் செல்லுங்கள்' என்று பூமிதேவி வாய்விட்டுச் சொல்லுவது போலக் காலிலணிந்த நூபுரங்கள் கலீர் கலீரென்று சப்தித்தன. பாண்டுபுத்திரரை இந்தச் சுயவரச் சபையிற் காணலாமென்று கருதிச் சந்திரன் வந்தாற்போல் தன் திருமுகமண்டலம் பிரகாசிக்கவும், காமனரசும் காவலர்பரிசும் சிறப்புற்றோங்கவும், அரசர்களாகிய மச்சங்கள் தன்கண்வலையி லகப்பட வீசிச், சுயவரமண்டபத்தில் மகிழ்வோடுவந்து தோன்றி இரத்தினங்களிழைழைத்தியற்றிய பொற்பீடத்தில் இனிது வீற்றிருந்தாள்.

அப்போது மேகத்தினுல் மறைக்கப் பட்ட சூரியனைப்போல் ஒளிமழுங்கிய பாண்டு புத்திரரைவரும் வேதியரோடு வேதியராக அச்சுயவர மண்டபத்தில் வந்திருந்ததை பிராரத்துவ சம்பந்தத்தால் தனக்குத்தானே அறிந்த திரௌபதை இருதயகமலமானது சூரியனைக் கண்ட தாமரையைப்போல் மலர்ந்தது, அதன் பிரதிபிம்பமாகிய கண்ணும் முகமும் பிரகாசித்தன. அதையறிந்த திரௌபதை சபையை ஒருதர முற்றும் உய்த்து நோக்கினுள். அதுகாலையிற் பாஞ்சாலன் தன் குமாரனுகிய த்ருஷ்டத்தூய்மனை அழைத்து, "அப்பா மகனே! நமது திரௌபதிக்காக அநேக அரசர்கள் வந்து காத்திருக்கின்றுர்கள். நீ சென்று அவர்கட்கெல்லாம் இச்சுயவரக் கோட்பாட்டினை விளங்க உரைத்துவா" என்று விடுத்தான். த்ருஷ்டத்தூய்மன் அக்கட்டளையின்படி சகலவேதியர்களும் புடைசூழக் கொலுவீற்றிருக்கும் அத்திரௌபதையம்மன் அருகில நின்று, சகல அரசர்களுக்குங் கேட்கும்படியாக "ஓ சகலகலைகளிலும் வல்ல அசர்களே! இதோ யிருக்கிற வில்லைவளைத்து, இந்த அம்புப்புட்டிலைத் தாங்கிக் கிடாரசலத்திற்றோன்றும் மூன்று துளைக்குறியைப் பார்த்து, அந்தரத்திற் சுழலும் சக்கரத்தின் முனைவழியிற் கணைகளைப்போக்கி, முன்னம் மச்சத்தினை யறுத்து, பின்பு சக்கரத்தைக்கொய்து, இரண்டையும் பூமியில் விழாமற் கணைகளால் எற்றி அவைகளைக் கைக்கொண்டுவருபவர்யாரோ அவர்களுக்கு என் தங்கையாகிய இக்கன்னிகை மாலையிடுவேள்" என்று சொன்னுன்.

இச்சொல்லைக்கேட்ட அரசர்கள் இடியைக்கேட்ட நாகம் எவ்வாறு நடுங்குமோ அவ்வாறு நடுக்கங்கொண்டு பெருமூச்செறிந்தார்கள். அவருள் அதிக காதல்கொண்டு வந்த அரசர்களிற் சிலர் சித்திரப்பாவைபோற் சற்று மசைவில்லாமற் பிரமைகொண்டிருந்தார்கள். பலர் "அடடா!! பாஞ்சாலியின் கரும்புருவமாகிய வில்லையும் கண்ணாகிய அம்பையுங் கொண்டு மாறாமல் நம்மோடெதிர்த்துப் போரிட்டுவருகிற மாரப்பயலும் மச்சக்கொடியும் லச்சைகெட்டுவிழ யுத்தஞ்செய்து வெற்றியடையலாமென்றெண்ணிவந்த நம்மைப் பார்த்து, இந்தத் த்ருஷ்டத்தூய்மன் வேறொரு வில்லையும் அம்புப் புட்டிலையும் காண்பித்து மாறுபட்ட மச்சத்தைக்காட்டி விழச்செய்யுங்களென்றானே, அவன் சொற்படி வல்லவளைத்து நாணேறிட்டுக் கணையைத் தொடுத்தாலும் அந்த மச்சக்குறியை எய்வதற்கு நம்மால் முடியாதே; இதற்கென்ன செய்வது" என்று ஏங்கி நாணினார்கள். சிலர் வில்லைப்பார்த்து நடுங்கினார்கள். பலர் பல்லைக்காட்டி யொடுங்கினார்கள். சிலர் இவ்வில்லை வளைப்பதற்கு நம்மால் முடியாதென்றார்கள். பலர் சக்கரம் சுழலும் நேர்மையைக்கண்டு, நமதெண்ணம் நிறைவேறுவதில்லை யென்று தீர்மானித்தார்கள். சிலர் கிராஸைகொண்டு, இந்த வில்லைவளைத்து மச்சத்தை விழச்செய்யும் அரசன் எவனோ அவனைக் காண்போமென்று கருதியிருந்தார்கள். இவ்வாறு வந்த அரசர்களெல்லாரும் தேனில் விழுந்த ஈயைப்போல் மயங்கி ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்த தருணத்தில், திரௌபதை அம்மனுக்குத் தாதிகள் சுயவர மண்டபத்தில் வந்திருந்த அரசர்களின் பெயரையெடுத்து கூறத்தொடங்கினார்கள்.

---

## திரௌபதைக்கு அரசர்களை அறிவித்தல்

---

"ஓ வண்டினம் தொடர்ந்தது போன்றும், கருமை கொண்டிழைத்தது போன்றும், மேகங்கள் கண்படுத்திருப்பன போன்றும் பசிய சைவலத்தைப் போன்றுமிருந்து, கண்டவர்கள் வியப்பெய்த நீண்டு, பரிமளித்து, நெய்த்து, இருண்டு, தாழ்ந்து, பூங்கொத்துகளைப் பொருந்தி விளங்குகின்ற கூந்தலினையுடைய கோதாய்! இதோ நவரத்தினங்களை அழுத்திய சிங்காதனத்தில் வீற்றிருக்

கும் இவ்வரசர் சந்திரவமிச சிகாமணி; திரிதராஷ்டிரனுக்குச் சிரேஷ்ட புத்திரர்; எல்லா அரசர்களும் பணிய விளங்கும் மஹா மண்டலேஸ்வர மகுடாதிபர்; சத்துருக்களுடைய கீர்த்தியையும் பிராணனையும் தமது கதாயுத மென்னுஞ் சர்ப்பத்துக்கு இரையாக்கி வீரலட்சுமிக்குச் சிங்காசனமாக விளங்கும் புஜங்களையுடையவர்; தமது தேசத்துள்ள குடிபடைகளின் கூட்டமாகிய உத்தியான வனத்தைக் காக்கும் வித்தியாக்ஞான விதரணர்; ஒன்று பத்தாகப் பொருளை வளர்விக்குந் தனரேகை பாக்கியமுடையவர்; இவரது அழகையும் லக்ஷணங்களையும் உன் கண்களே யுனக்கு அறிவிக்கின்றன. இவர்தான் துரியோதனனென்கிற பெயரினால் விளங்கிக்கொண்டிருக்கின்ற துரைராஜரம்மா.

"ஓ நவக்கிரக சக்கரரேகை, சீமந்தரேகை, வடித்தெடுத்த முத்தலைச் சூலரேகை முதலியவைகள் வாய்ந்து, மூவிரலகலமாய் அர்த்தசந்திர வடிவங்கொண்டு பிரகாசிக்கின்ற நுதலினையுடைய நங்காய்! இந்தத் துரியோதன மகாராஜனுடைய பக்கத்திலே பலிச்சக்கிரவர்த்திக் கருகிலிருக்கும் அசுரர்களைப் போல வீற்றிருக்கின்ற தொண்ணூற்றொன்பது பேரும் தம்பிமார்கள். உருவத்தினாலுங் குணங்களினாலும் அந்தத் துரியோதன மஹாராஜருக்கே சமமானவர்கள்; மஹாவீரர்; அண்ணனுடைய சொற்படி நடப்பவர்களம்மா.

"ஓ வள்ளைத்தண்டினைப் போல நீட்சியுற்று, மலரிதழினையொத்து, நற்சுழிகளை யுடையனவாய், கண்டவர்கள் உள்ளங் களித்து விளையாடப் பெறுகின்ற பொன்னூசலென்று சொல்லும் படியாக விளங்குஞ் செவிகளையுடைய செல்வி! இவர்களுள் அம் மஹாராஜனுக்கு அருகில் வீற்றிருந்து வணங்கிக் கொண்டிருக்கிறவர் துரியோதனராஜனுக்கு இளவரசாகிய தம்பி துர்ச்சாதனனென்ற பேர்பெற்றவர்.

ஓ இரதிதேவியும் மன்மதனும் தமது வில்லை சந்திரனாகிய குடையின் கண்ணே வைத்தது போன்று விளங்கும் இரு புருவங்களையுடைய பொன்னே! இதோ துரியோதனனுக்குப் பக்கத்திலிருந்து பார்க்கின்றவர், காந்தார தேசத்து மன்னவனாகிய சௌபலமஹாராஜாவின் குமாரர்; சகுனியென்று பெயருடை

இச்சொல்லைக்கேட்ட அரசர்கள் இடியைக்கேட்ட நாகம் எவ்வாறு நடுங்குமோ அவ்வாறு நடுக்கங்கொண்டு பெருமூச்செறிந்தார்கள். அவருள் அதிக காதல்கொண்டு வந்த அரசர்களிற் சிலர் சித்திரப்பாவைபோற் சற்று மசைவில்லாமற் பிரமைகொண்டிருந்தார்கள். பலர் "அடடா!! பாஞ்சாலியின் கரும்புருவமாகிய வில்லையும் கண்ணுகிய அம்பையுங் கொண்டு மாறுமல் நம்மோடெதிர்த்துப் போரிட்டுவருகிற மாரப்பயலும் மச்சக்கொடியும் லச்சைகெட்டுவிழ யுத்தஞ்செய்து வெற்றியடையலாமென்றெண்ணிவந்த நம்மைப் பார்த்து, இந்தத் த்ருஷ்டத்தூய்மன் வேறொரு வில்லையும் அம்புப் புட்டிலையும் காண்பித்து மாறுபட்ட மச்சத்தைக்காட்டி விழச்செய்யுங்களென்றுனே, அவன் சொற்படி வல்லைவளைத்து நாணேறிட்டுக் கணையைத் தொடுத்தாலும் அந்த மச்சக்குறியை எய்வதற்கு நம்மால் முடியாதே; இதற்கென்ன செய்வது" என்று ஏங்கி நாணினார்கள். சிலர் வில்லைப்பார்த்து நடுங்கினார்கள். பலர் பல்லைக்காட்டி யொடுங்கினார்கள். சிலர் இவ்வில்லை வளைப்பதற்கு நம்மால் முடியாதென்றார்கள். பலர் சக்கரம் சுழலும் நேர்மையைக்கண்டு, நமதெண்ணம் நிறைவேறுவதில்லை யென்று தீர்மானித்தார்கள். சிலர் நிராசைகொண்டு, இந்த வில்லைவளைத்து மச்சத்தை விழச்செய்யும் அரசன் எவனோ அவனைக் காண்போமென்று கருதியிருந்தார்கள். இவ்வாறு வந்த அரசர்களெல்லாரும் தேனில் விழுந்த ஈயைப்போல் மயங்கி ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்த தருணத்தில், திரௌபதை அம்மனுக்குத் தாதிகள் சுயவர மண்டபத்தில் வந்திருந்த அரசர்களின் பெயரையெடுத்து கூறத்தொடங்கினார்கள்.

---

## திரௌபதைக்கு அரசர்களை அறிவித்தல்

---

"ஓ வண்டினம் தொடர்ந்தது போன்றும், கருமை கொண்டிழைத்தது போன்றும், மேகங்கள் கண்படுத்திருப்பன போன்றும் பசிய சைவலத்தைப் போன்றுமிருந்து, கண்டவர்கள் வியப்பெய்த நீண்டு, பரிமளித்து, நெய்த்து, இருண்டு, தாழ்ந்து, பூங்கொத்துகளைப் பொருந்தி விளங்குகின்ற கூந்தலினையுடைய கோதாய்! இதோ நவரத்தினங்களை அழுத்திய சிங்காதனத்தில் வீற்றிருக்

கும் இவ்வரசர் சந்திரவமிச சிகாமணி; திரிதராஷ்டிரனுக்குச் சிரேஷ்ட புத்திரர்; எல்லா அரசர்களும் பணிய விளங்கும் மஹா மண்டலேஸ்வர மகுடாதிபர்; சத்துருக்களுடைய கீர்த்தியையும் பிராணனையும் தமது கதாயுத மென்னுஞ் சர்ப்பத்துக்கு இரையாக்கி வீரலட்சுமிக்குச் சிங்காசனமாக விளங்கும் புஜங்களையுடையவர்; தமது தேசத்துள்ள குடிபடைகளின் கூட்டமாகிய உத்தியான வனத்தைக் காக்கும் வித்தியாக்ஞான விதரணர்; ஒன்று பத்தாகப் பொருளை வளர்விக்குந் தனரேகை பாக்கியமுடையவர்; இவரது அழகையும் லக்ஷணங்களையும் உன் கண்களே யுனக்கு அறிவிக்கின்றன. இவர்தான் துரியோதனனென்கிற பெயரினால் விளங்கிக்கொண்டிருக்கின்ற துரைராஜரம்மா.

"ஓ நவக்கிரக சக்கரரேகை, சீமந்தரேகை, வடித்தெடுத்த முத்தலைச் சூலரேகை முதலியவைகள் வாய்ந்து, மூவிரலகலமாய் அர்த்தசந்திர வடிவங்கொண்டு பிரகாசிக்கின்ற நுதலினையுடைய நங்காய்! இந்தத் துரியோதனமகாராஜனுடைய பக்கத்திலே பலிச்சக்கிரவர்த்திக் கருகிலிருக்கும் அசுரர்களைப் போல வீற்றிருக்கின்ற தொண்ணூற்றொன்பது பேரும் தம்பிமார்கள். உருவத்தினாலுங் குணங்களினாலும் அந்தத் துரியோதன மஹாராஜருக்கே சமமானவர்கள்; மஹாவீரர்; அண்ணனுடைய சொற்படி நடப்பவர்களம்மா.

"ஓ வள்ளைத்தண்டினைப் போல நீட்சியுற்று, மலரிதழினையொத்து, நற்சுழிகளை யுடையனவாய், கண்டவர்கள் உள்ளங் களித்து விளையாடப் பெறுகின்ற பொன்னூசலென்று சொல்லும்படியாக விளங்குஞ் செவிகளையுடைய செல்வி! இவர்களுள் அம்மஹாராஜனுக்கு அருகில் வீற்றிருந்து வணங்கிக் கொண்டிருக்கிறவர் துரியோதனராஜனுக்கு இளவரசாகிய தம்பி துர்ச்சாதனனென்ற பேர்பெற்றவர்.

ஓ - இரதிதேவியும் மன்மதனும் தமது வில்லை சந்திரனாகிய குடையின் கண்ணே வைத்ததுபோன்று விளங்கும் இரு புருவங்களையுடைய பொன்னே! இதோ துரியோதனனுக்குப் பக்கத்திலிருந்து பார்க்கின்றவர், காந்தார தேசத்து மன்னவனாகிய சௌபலமஹாராஜாவின் குமாரர்; சகுனியென்று பெயருடை

யவர்; துரியோதனனுக்கு நல்லம்மான்; சூதாடுவதில் இவர் கிணையாய் எவர்களையுஞ் சொல்லப்படாதம்மா.

ஓ தெளிந்த நீலமணி போலச் சிறப்புறக்கறுத்து, வெண்மை யொளிகொண்டு, கடையிற் செவ்வரிபரந்து, நெருங்கிய கருமை வாய்ந்த மெல்லியரோமங்கள் பொருந்தி விளங்குகின்ற நீண்டவிழி களையுடைய நல்லாய்! இவர் பக்கத்தில் துரியோதனனுக்கு எதிரிற் சீரிய சிங்கம்போற் கம்பீரத்தோடு நிமிர்ந்து நோக்குகின்றாரே அவர் கர்னனென்று பேர்பெற்றவர். காளபிருட்டமென்கிற வில்லைக் கைக்கொண்டு சரமாரிபொழியுங் காளமேகம் போன்றவர்; கொடிய வறுமையால் வருந்துவோர்க்குக் கற்பகத்தரு வனையவர்; சௌரி யத்திலுஞ் சரசத்திலும் இணையில்லாதவர்; பரசுராமனிடத்தில் அஸ்திரவித்தை கற்றவர்; சத்தியசந்தனர்; மஹாதேஜசுடைய வர்; தேகத்தோடு பிறந்த கவசகுண்டலங்களுடையவர்; இவர் சூதகுமாரரென்று சொல்லப்படுகிறார். ஆகிலும் பெரியோர்கள் சூரியவரப்பிரசாதரென்று ரகசியமாய்ச் சொல்லிக் கொள்ளுகிறார் களம்மா.

ஓ வசந்தகாலத்திற்குரிய மன்மதனனவன் தன்னழகு நோக் குதற்கு நான் முகனால் உண்டாக்கப்பட்ட கண்ணாடிகளோ, அல் லது கண்களாகிய வாள்களைத் தீட்டுதற் பொருட்டுத் தங்கிய சாணைக் கற்களின் படிவமோ, என்று சொல்லத் தக்கதாய் விளங் குங் கபோலங்களையுடைய காந்தா! இவருக்கருகிற் கறுத்த தேகமும் நரைத்த சிரசுமாக யாகவேதிகையில் அக்கினிபோலே விளங்காநின்ற மகாபுருஷர் துரோணாசாரியரென்று மூவுலகு மேறிய நாமதேயமுடையவர். ஜாதியைப் பற்றிய பிராமணத் தன்மையினாலும், தொழிலைப் பற்றிய க்ஷத்திரியத் தன்மையினா லும், நரசிங்கம்போல விசித்திரமான தேகத்தை யுடையவர்; சாங் கோபாங்கமாக வேதங்களுலாவும் பூம்பொழில் போன்றவர்; அஸ் திரவித்தியாமகிமையே இவ்வுருவங்கொண் டவதரித்த தென் றுரைக்கத்தக்கவர்; தபோபலக்கடலாகியவர்; பரத்துவாசகோத்திர சிகாமணி; கௌரவருக்கும் பாண்டவருக்கும் தனுர்வேத ஆசாரி யரம்மா.

ஓ துளைகள் சிறுத்து, இருபக்கங்களுஞ் சற் றுயர்ந்து, எள்ளின் மலரையொத்து, இரண்டு மூன்று தரம் அதிசயமு மெல்லெனத் தும்முதலன்றிக் கல்லெனப் பலகாலும் தும்முதலில்

லாத நாசியினையுடைய நாரீ! இதோ இவர் பக்கத்தில் அலங்கார மாக விளங்கிக் கொண்டிருக்கிறவர் இவருடைய குமாரர்; அஸ்வத் தாமரென்னும் பெயருடையவர்; சாக்ஷாத் பரமசிவனுடைய அம்சத்தினாற் பிறந்தவர்; மகாபல பராக்கிரமசாலி; சகல சாஸ் திரங்களுங் கற்றவர்; அஸ்திரசாமர்த்தியத்திற் பிதாவுக்குக் குறை யாதவரம்மா.

ஓ மயிலிறகினடிகளையும், வெளுத்த தாளங்களையும் ஒத்து, முத்துக்களைப் பவளக் கிண்ணத்தினுள்ளே கோத்தல் செய்து சேர்க்கப்பட்ட கோவையைப் போன்ற தந்தபந்திகளையுடைய தையால்! அதோ கறுத்த பட்டுடுத்து, வெளுத்த திருமேனி யுடனே இருண்ட கானகத்தா விடையிற் சூழப்பட்ட கைலாச பர்வதம் போல் விளங்கிக் கொண்டிருக்கிற மகானுபாவர், யாதவகுல மாகிய கடலுக்குப் பூரணசந்திரன் போன்றவர்; பலராமனென்கிற திருநாமமுடையவர்; வசுதேவரென்னும் மகாராஜனுக்கும் உரோ கணி தேவியாருக்கும் உற்பவித்தவர்; வடிவுகொண்ட பராக்கிரம ரென்று சொல்லத் தகுந்தவர்; யமுனை என்னும் மகாநதியைக் கலப்பையினால் தன்னருகி விழுத்த வன்மையாளர்; பிரலம்பாசுர னென்னும் பஞ்சுக்குச் சுழற்காற்றுடன் கூடிய நெருப்பானவர்; மகாவிஷ்ணுவினுடைய சங்கிர்ஷணம்சத்தால் அவதரித்தவர்; ஆதிசேஷாம்சனென்றும் சில மஹாத்துமாக்க ளுரைக்கின்றார்கள்; ஜராசந்தனென்னு மஹாவீரனை யுத்தத்தில் உயிரோடு பிடித்துத் தயையினாலே மறுபடியும் விட்டுவிட்டவர். வருணதேவனால் அனுப்பப்பட்ட வாருணீதேவியானவள் இவருக்கு வேண்டிய போது மதுவைப்பெருக்கிக் கொண்டிருக்கிறாள். இவருடைய சரித்திரமும் மகிமையும் பரிசுத்தமும் மிகச் சிறப்புடையன வம்மா.

ஓ மத்தியில் நேகை யாழாது, மதராக் கருகாது, இடை விட்டிராது, மேலுங் கீழுமொத்து, சிவந்த அல்லி மலரை யும் பவளத்துண்டையும்வெற்றி கொண்டு சிறப்பினை யடைந்த வாயினை யுடைய வஞ்சீ! இவரோடுகூட ஓராசனத்தில் வீற் றிருக்கும் நீலமணியி னுண்ணிறத்தைக் கொள்ளைகொண்ட திரு மேனியும், காலையில் மலர்ந்த செந்தாமரையைக் காய்ந்து விளங் கிய கரதலமும், சிறந்தச் செவ்வரிகள் மலிந்த சுந்தர நேத்திரமு டைய அப்புருஷசிகாமணியானவர், இவருக்குத் தம்பி; ஸ்ரீகிருஷ்ண னென்று திருநாமஞ் சூடியவர்; தேவகீதேவியின் வயிறுதிய சிய

பிக்குக் கருவாகிய முத்தோடொத்தவர் ; ஸ்ரீ நாராயண னுடைய அம்சமானவர் ; அசுரப்பெண்கள் மாங்கலியக் கொடியின் வேரைக்களையும் சுவாலாமாலைகளைப்புனைந்த சக் கிராயுத மேந்தியவர் ; யோகிகள் தியானிக்கும் பரமபுருஷர். பூதனை முதலிய அனேக அசுரரைச் சிறுமைப்பருவ விளையாட்டினுற் கொன்றவர். கோவர்த்தனமென்னும் குன்றேந்தி இந்திரன் பொழிந்த கன்மாரிதடுத்துக் கோவலரைக் காத்தவர் ; கோவலர் நித்திரை பண்ணும்போது காட்டுத்தீ மூடியகாலத்துத் துன்ப மில்லாமல் அத்தீயை விழுங்கினவர் ; கஞ்சனைக் காய்ந்த தோள்வலி யுடையவர் ; தேவகன்னியர்களினும் அதிசயமுடைய கோபாலக் கன்னிகைகள் காதலிக்குஞ் சிங்காரவடிவினர் ; பரிசுத்தக்கள்ளர் ; சௌரியம் தைரியம் சாதுரியம் காம்பீரமுதலிய நற்குணமணிக்குக் கடலாயிருப்பவர். நச்சினுர்க்குச் சிந்தாமணி இவரது பெரு மையை ஆதிசேடனுலும் பேசத்திறமில்லை. இவருடைய நல்லத் தையின் மைந்தராவார் பாண்டவர்கள். அவருள் அர்ச்சுனன் இவர் சாயலைப்போ லிருப்பவர். இவர் அவரிடத்தில் அதிக பக்ஷ முள்ளவரம்மா.

ஓ சிறந்த பவளத்துண்டுபோற் றிரண்டு, இருபக்கமுங் குவிந்து, அழகிய ரேகையொன்று பொருந்திப் பிரகாசிக்கின்ற கீழ தரத்தோடு, அதற்குமேற் சற்றுயர்ந்து வனப்பு வாய்ந்திருக்கின்ற மேலதரத்தையுடைய மெல்லீ ! இக்கண்ண னருகி லிருக்கும் வீரர் இக்கண்ண னுக்குத் தம்பி ; சாத்தியகியென்னும் நாமமுடையவர் ; வில்வித்தையில் அர்ச்சுனராஜனுக்குச் சீஷர் ; பாராக்கிரமத்தில் அவ்வர்ச்சுனனுக்குச் சமானமானவர் ; இவரைச் சூழ்ந்திருக்கிற பேரெல்லாம் அந்த யாதவகுலத்துதித்த புண்ணிய புருஷர்க ளம்மா.

"ஓ இருபகுப்பாதல், பள்ளமிசைதல் நீண்டுவளைதல் முதலி யனவின்றி, இருவிரலளவில் வட்டமாய், தசையையுடைத்தாய், எழில்கொண்டு இன்பந்தருவனவாகிய மோவாயினையுடைய முத்தே! இவருக்கு நேரிலே பேராசனத்தில் விளக்கும் வீரர் : இக்கண்ண னுக்குரிய ஒரு அத்தையின் குமாரர்; சேதி தேசத்தைக் காக்குந் திரல்மேவுந் தோளுடையவர் ; சிசுபாலனென்று பேர்பெற்றவர் ; முன்னே குண்டினநகரில் தனக்கு மாலைசூடும்படி நிச்சயப்படுத்தி யிருந்த உருக்குமணிதேவியை வலிமையினுல் இந்தக்கண்ணன்

கொண்டுபோய் விவாகஞ்செய்து கொண்டதினாலே இக்கண்ணனிடத்தில் இவர் பகைகொண்டிருக்கிறாரம்மா.

ஓ தாமரைப்பூவில் வாசஞ்செய்கின்ற பிரமன் சோடசகலைகளாலு நிறைந்த சந்திரனிடத்து நிரம்பிய உயர்வாகிய சாரத்தைத் தன்கையால் மொண்டு படைத்தானென்று சொல்லும்படியாக விளங்கு முகாரவிந்தத்தினையுடைய வனிதா! அவர் பக்கத்தில் ஆதனம் நிறைந்து விளங்கிக்கொண்டிருக்கிறவர், அவ்வுருக்குமணியினுடன் பிறந்தவர்; விதர்ப்பதேசத்தை யாள்பவர் உருக்குமியென்கிற பேருடையவர்; மஹாவீரர்; இவரும் உருக்குமணியைக் கொண்டு போகும் போது அபஜயம் பட்டபடியாற் கிருஷ்ணனிடத்திற் சிசுபாலன் போல் துவேஷம்வைத்தவ ரம்மா.

ஓ குறுகல் நீளல் பருத்தல் முதலியன வில்லாமல் கமுகமரத்தினை நாணச்செய்து, நான்கு அங்குலத்தோடு மூன்று நல்லரேகைகள் பொருந்தி அழகு நிறைந்திருக்கின்ற கண்டத்தினையுடைய கண்ணே! அதோ மணிமஞ்சத்தின்பேரில் உட்காந்து மதத்த யானைபோல் இறுமாந்து பார்த்துக்கொண்டிருக்கிற மஹாராஜன், மலைக்கோட்டை சூழ்ந்துயர்ந்த மகததேசத்தின் மன்னவர்; ஜராசந்தனென்று பேருடையவர்; சொன்னசொற் றவறாதவர்; இரண்டு தாய் வயிற்றிற் பிறந்தவர்; பிரதாபக்களஞ்சியமா யிருக்கிறவர்; இவருடன் பதினெட்டுத்தரம் போர்செய்து தோல்வியடைந்த பயத்தினாலே கிருஷ்ணன் மதுராபுரியைவிட்டு, நடுக்கடலில் தமதாக்கையினாலே விசுவகர்மா நியமித்த துவாரகையென்னு நகரத்தை யடைந்தாரம்மா.

ஓ கவிகை கூர்மம் வலம்புரிச்சங்கம் நவக்கிரகச் சக்கரம் துலாக்கோல் வச்சிராயுதம் நேமி முதலியவைகளைப்போன்ற சிறந்த ரேகைகள் பொருந்தி, முயல்வயிற்றினு மிருதுவாகி, செவ்வாம்பன்மலரைப்போற் பிரகாசிக்கின்ற அகங்கையினையுடைய அன்னே! அதோ இருக்கிறவர் மத்திரதேசத்து மன்னவர்; சல்லியராஜனென்று பெயருடையவர்; சத்தியவாதி; சௌரியங் குடியிருக்கத் திரண்டுருண்டு நீண்டு விளங்கிய பாகுவுடையவர்; நகுலசகாதேவர்கட்கு நல்லம்மானம்மா.

ஓ புடைபரந்து, மேலெழுந்து, நீலமணிசேர்த்ததற் கொப்பான சிலீமுகம் வாய்ந்து, இடைதோன்றாமல் நெருங்கி, பெருமை பொருந்திய மார்பினிட முழுவதுநிறைந்து, தடையில்லாமற் பருத்

துப் பூரித்து, தம்முளிரண்டு மொத்து, இடையினைவருத்தி நிமிர்ந் திருக்கின்ற குசங்களையுடைய கொடியே! அவர் பக்கத்திலிருப்பவர் பகதத்தனென்று பெயரையுடைய மகாவீரர்; சமுத்திர நடுவிலிருக் கும் மாகிஷ்மதீ நகருக்கு அரசர்; நரகாசுரனுடைய குமாரர்; சுப் பிரதீபகரென்னும் யானையை வாகனமாகவுடையவரம்மா.

ஓ பயோதரமென்னும் பங்கயமுகைகளைத் தேடிவரும் வண்டு வரிசையையும், மேகலாபரணத்திற் பதித்த நீலமணியினது சுட ரையும், இடையொடியாதிருக்க மன்மதனாற் சேர்க்கப்பட்ட சலா கையையும் ஒத்த வயிற்றுமயி ரொழுங்கினையுடைய மணியே! இங்கிருப்பவர் வாசனை பொருந்திய மலரையும் சிறுபெண்கள் இழைத்த சிற்றில்களையும் பொன்னையும் மணியையும் அகிற்றுண் டங்களையும் வாரிக்கொண்டு, அலைகளைமடக்குகின்ற தெள்ளிய நீரையுடைய காவிரிசூழ்ந்த சோணாட்டையாளு மரசரம்மா.

ஓ சிருட்டிகாலத்து நான்முகக் கடவுளானவர் தன் கையி னால் இடையைப் பிடித்த வளவிலே அவன் கைவிரல்களானவை அழுத்திய வரையென்று சொல்லும்படியாய் விளங்கி, மங்கைப் பருவமாகிய பெண் ஊன்றி ஏறுதற்கமைத்த சோபானங்கள் போன்ற வயிற்றுமடிப்புகளையுடைய வாழ்வே! இவரோ தமிழ மூதம் பெருகவைத்த பாண்டிநாட்டரசர். இவரது தேசத்தில் தாம்பிரபரணி யென்கிற நதியானது பாய்ந்து கடலில் விழுந்து உயர்ந்த முத்துக்கள் அகப்படுகிறபடியினாலே, முத்தணி மேனியரா யிருக்கின்றாரம்மா.

ஓ ஒரளவாகிய சரங்களையுயை இரத்தின ஹாரங்களைப் பூண்ட இரண்டு தனங்களையுஞ் சுமத்தலால் வளைந்து நாடோறுந் தேய்ந்ததோ! அழகென்னுங்கடலு ளாழ்ந்ததோ, மன்மதனுடைய கண்ணேறுபட்டுக் கழிந்ததோ, அல்லது அங்கமில்லாதவனாகிய அம்மன்மதனேயோ வென்று யாவருஞ் சந்தேகப் படும்படியான இடையினையுடைய இறைவீ! இதோ பசியபொன்னாற் செய்த ஆசனத்தின் மத்தியிலே சூரியன் போல் விளங்குகின்ற அரசன், பாட்டுக்களையுடைய வண்டுகள் பேட்டினோடும் பெரிய அரும்புகளை விரித்துத் தேனைக் கொள்ளை கொள்ளும் தாமரைத் தடாகங்களை யுடைய கொற்கையம்பதிக் கரசனாகிய சேரமானம்மா.

ஓ மன்மதனுடைய பச்சைக் கிளிகள் பூட்டிய ரதத்திற்குப் பிரமனால் வகுக்கப்பட்ட சக்கரத்தையும் பொற்றட்டையுமொத்து,

காளையரது அவாவினைதளவாய் வளர்ந்து பரந்திருக்கின்ற அளவின் பரம்பினையுடைய அல்குலைத்தாங்கும் அமுதே! இங்கேயிருத் தலைப்பெற்ற அரசனுனவர் உம்முடைய கண்ணைப் போன்ற அழ கிய குவளைமலர்கள் பூத்திருக்கின்ற வளப்பம்பொருந்திய மருத நிலத்தையுடைய காகிதேசத் ததிபதி யம்மா.

ஓ பெண் யானையினது செழிய துதிக்கரத்தைத் தூரத்தி, பஞ்சினு மெல்லிய குணத்தையுடையனவாகி, நவமணிகளாலாகிய மேகலையைப் போர்த்து, கன்னியரம்பையின் குலங்கள் யாவையும் வருத்த மில்லாமல் வென்ற துடைகளையுடைய தோகாய்! அதோ யிருக்கின்ற குரிசில், தெளிவு பொருந்திய நீரையுடைய கங்கை நாட்டினைக் கடவுளரு மெச்சக் கனிந்தாளுவோ ரம்மா.

ஓ அழகிய கருப்பு வில்லை வளைக்கின்ற வசந்தகாலத்திற் குரிய மன்மதனது பூவம்புகளால் நிறைந்த பொன்மயமாகிய அம்புக் கூடானது, கண்டவுடன் நாணிப் புறங்கொடுக்குங் கணைக்கால்களை யுடைய அம்மணி! இதோ வீற்றிருக்கின்ற கோமான் மெல்லிய தாமரைமலரையுடைய தடாகத்தினுள்ளே நீரைக் கலக்கி, மேகங் களினுடைய வயிற்றை நோக்கி வாளைமீன்கள் தாவுகின்ற அகன்ற வயல்களையுடைய குருத்தேசத்தினர்க்குச் சிங்கவேற்றை யொத் தவ ரம்மா.

ஓ பருத்திடலுஞ் சுருங்குதலு மில்லாமல் மிருதுவாகி, அனிச்சமலரின்மேல் வைப்பினுங் குழைந்து, கொடிரேகை மச்ச ரேகை முதலிய பலரேகைள் பொருந்தி, அழகிய செந்தாமரை மலரை வென்று, சிவந்திருக்கின்ற பாதங்களையுடைய திரௌபதா! அதோ ஆணிப்பொற் கடகணிந்து நவமணிகள் இழைத்த திவ்விய மஞ்சங்களிலே சிங்கங்கள் போற் சிறப்புடையவரா யிருப்பவர்கள், அங்க வங்க கலிங்க காஸ்மீரமுதலிய பலதேசத்தரசர்களம்மா."

---

## அர்ச்சுனன் வில்லை வளைத்தல்

---

"ஓ பாஞ்சால நாட்டரசன் பாவாய்! இதுகாற் சொல்லி வந்த பலதேயத் திராஜர்களெல்லாரும் மங்கையர்க்கு அரசாகிய உமது பொருட்டே வந்திருக்கின்றனர். ஆயினும் இக்குறியை யடித்து உம்மைக் கைப்பிடிக்கும் மகானுபாவர்களுக்கே மாலையிடக் கடவீர்" என்று தாதிகள் சொல்லி, திரௌபதியினுடைய இதய

கலக்கத்தினைப் போக்கி உல்லாசப்படுத்திக்கொண் டிருந்தார்கள். இப்படியிருக்க த்ருஷ்டத்தாய்ம னெழுந்து அரசர்களைப் பார்த்து, "ஓ ராஜாதிராஜர்களே! ஓ வீராதிவீரர்களே! ஓ தீராதிதீரர்களே! ஓ சூராதிசூரர்களே! சும்மாயிருப்பதேன்? வீண்காலம் போக்க வேண்டாம். தத்தம் சாமர்த்திய மகிமையாகிய தங்கத்தை இந்த வில்லாகிய உரைகல்மீ துரைத்துக் காட்டுங்கள். எமக்கு வேண்டிய பதினாயிரமாற்றுத் தங்கத்துக்கு எங்கள் கற்பகவல்லி விலையாக்கப் பட் டிருக்கிறாள்" என்றுரைத்தான். அப்போது அங்கிருந்த மன்னவரெல்லாரும் யான்முன்னே யான்முன்னே யென்று சிங்காதனங்களை விட்டெழுந்து, அவரவர் பட்டபாட்டையுஞ் சிறிது சொல்லுகிறேன் கேளும் : சீதளசந்திர குலோத்துங்க தீரனாகிய ஜனமேஜய மகாராஜனே! சிலர் ஓடிவந்து தனுசைப் பார்த்துத் தளர்ந்தனர். சிலரருகிற்சென்று வில்லைப் பரிசித்து ஊக்கமிழந்தனர்; சிலரசைத்து மனமுடைந்தனர். சில ரெடுத்து நாண் பூட்டுவதை யொழித்துத் தைரியமிழந்தனர். இப்படியெல்லாம் பலவரசர்கள் அக்குறியடிக்குந் திறன் குறைந்திருப்பதையும், அப்பெண்ணின துருவம் தங்கள் தங்கள் மனதைக் கவருந்திறன் உயர்ந்திருப்பதையும் நினைத்துப் பதைபதைத்து முன்போல ஆசனங்களிற் சென்றிருந்தார்கள். இப்பால் சல்லியமகாராஜன் வல்லியம் போலெழுந்துபோய் வில்லையசைத்து எடுத்துப் பாதிவரைக்கும் நாண் பூட்டி, அப்பால் தனக்கு நிர்வாகமில்லாத புல்லிய தன்மையினாற் றயங்கி அயர்ந்து ஆசனத்திலுட்கார்ந்துவிட்டான். அதைக்கண்ட ஜராசந்தமகாராஜனனவன் நகைத்தெழுந்திருந்து, வில்லையெடுத்து நிறுத்தித் தன் முழுபலத்தினாலும் வளைத்து நாணிமாட்டி, ஒரு சாண் குறைவாகக்காட்டி, அப்பாற் சக்தியில்லாமல் சல்லியன் முகத்தாமரை மலரும்படியாகத் தனது முகத்தாமரையைக் குவித்துக்கொண்டு வந்துவிட்டான்.

பின்பு துரியோதன மகாராஜன் உற்சாகத்துடனெழுந்திருந்து வீரகர்ஜனையுடனே வில்லை இலேசாக யெடுத்துவளைத்து, நாணிமாட்டிப் பூட்டுவதற்கு நான்குவிரற்கடை குறைவாயிழுத்து, அதன் பிகுவினாலே அவ்வில்லுடன் கூட ஆகாயத்திலெழும்பித் தரையில் விழுந்து, உடம்பெல்லாங் காயமடைந்து தலையிறக்கமா யுட்கார்ந்துகொண்டான். அதற்குப் பின்பு அந்தத் துரியோதனனுக்கு உயிர்த்தோழனாகிய கர்ணன் எழுந்துபோய் ஒருகையினாலே வில்லையெடுத்து, நாணை ஒரு கையினாலெடுத்து விற்குதையில் மாட்டி,

மறுகுதைக்கு ஒருமயிரிழை குறைவாக இழுத்து அப்பாற் கூடா மையினாலே அப்படியே நிற்க; அதுகண்டு சபையிலிருந்தோ ரெல்லாரும் கர்னன் வளைத்தான், வளைத்தானென்று ஒருவரோ டொருவர் பேசுதலினாலுண்டான கோஷத்தைக்கேட்ட பாஞ்சால ராஜன்மகள் வேர்த்து, அவன் முகத்தைப் பார்த்து, "இவன் றானோ அர்ச்சுனன்? ஆகிலும் இவனும் மகாதேஜசுடனே விளங் குகின்றான்" என்று நினைத்துக்கொண்டே யிருக்க, அக்கர்னனும் அந்தத் தனுசின் வலிமையினால் தவறி விழுந்தவனாய்த் தலையி லிருந்த கிரீடத்தையிழந்து தன்னாதனத்தை அடைந்து நின் றான், இவனைக் கண்ட மற்றை அரசர்களெல்லாரும், "ஓ! ஓ! இந்தக் கர்னன் முதலிய வீரரே இப்பாடுபடுவார்களானால், நமக் கிந்த முயற்சி தகாது. நாணேறிடுவதற்குப் போனால் அது நமக்கே நாணேறிடச்செய்து நமதுதலையை வணங்கும்படி செய்யும்" என்று சோர்ந்து, இருந்தவிடத்தினின்றும் எழாமற் சும்மாயிருந்தார்கள். இப்படி ஒரு நாழிகைவரைக்கும் சபையானது அலையற்றகடல் போலிருந்து பின்பு, அந்தவில்லை வளைப்பதற் கெழுந்திருக்க நினைத்த பலதேவனைக் கண்ணன் கையமர்த்தி நிறுத்தி, அர்ச்சுன னுக்குக் கண்சைகைகாட்ட, அதையறிந்த அவரும் மற்ற யாதவப் பிரபுக்களும் குந்திபோஜரும் தாமிருந்த யிடத்தைவிட் டெழாம லிருந்தார்கள். சிலர் "இப்பெண்ணுக்கொரு கும்பிடு இப்பெண் ணோடுதித்த இப்பெரு வில்லுக்கொரு கும்பிடு" என்று சொல்லிப் போனார்கள்.

இவர்களிவ்வாறாகப்பிராமணர் கூட்டத்திற் பிரமசாரிவேஷந் தரித்து நீறுபூத்த நெருப்புப்போ லிருந்த அர்ச்சுன னெழுந்து, உற் காசத்துடனே த்ருஷ்டத்யும்னன் முதலானோரை நோக்கி, "ஓ மகாராஜர்களே! இரண்டாவது வருணத்தி லுதித்தவர்தான் இக்கன் னிகையை மணஞ்செய்யவேண்டுமா? அல்லது நீங்க ளேற்படுத்திய கோட்பாடுகளை நிறைவேற்றியவர் யாவராயிருப்பினும் மணஞ் செய்யலாமா? இதை நமக்கறிவியுங்கள்" என்று கம்பீரமாகக் கேட் டான். அவ்வாறு கேட்டமாத்திரத்தில் அச்சபையிலிருந்த பலரும் கலகலவென்று சிரித்தார்கள். சிலர் இந்தப் புருஷன் மிகவும் கம் பீரமும் ஒளியுமுடைய வஜ்ரதேகத்தையும் சுத்தமான காயமும் வாக்குமுடையவனாயிருக்கிறான். இவன் கேட்பதைப் பார்த்தால் வில்லை வளைத்து நாணேறிட்டுக்குறியை அடித்துத் திரௌபதையின் கையைப் பிடித்துக்கொள்ளுவான்போற் றோற்றுகின்றது" என்று

பேசிக்கொண்டார்கள். சிலர் "இவனுக்கு ஏதோ ஒரு தேவதையின் அனுக்கிரகம் நேரிட்டிருக்கும். ஆதலால் இவ்வளவு தைரியமாகப் பேசுகிறான்; எந்தப்புற்றில் எந்தப் பாம்பிருக்குமோ யார்கண்டது" என்று சம்பாஷித்துக்கொண்டார்கள். சிலர் "பின்புத்திக்காரராகிய பாப்பாரக்குலத்தினனாகையாலும், இதுவரையில் பிரமசரியத்திலிருந்தவனாகையாலும் ஒருவேளை பெண் பைத்தியம் பிடித்திருக்கலாம்" என்று சொன்னார்கள். சிலர் "இவன் சிறுபிள்ளையாகையால் இந்த ராஜகன்னிகையினிடத்தில் ஆசை வைத்துப் பேய்போற் பிதற்றுகிறான்" என்றார்கள்.

இவ்வாறு பற்பலவிதமாய் யூகித்து யாவரும் உரையாடிக்கொண்டிருக்கையில், பாஞ்சாலராஜன் குமாரன், அந்தணன் கேட்ட வினவையும் அதற்கு அரசர்கள் யூகித்துரைக்குங் கனவையும் யோசித்துணர்ந்து, "இந்த பிராமணனிடத்தில் அப்படிப்பட்ட சக்தி இருந்தாலு மிருக்கலாம். இதற்குத் திருஷ்டாந்தம் முற்காலத்தில் பரசுராமரும், இக்காலத்தில் இதோ இருக்கிற துரோணாசாரியர்-கிருபாசாரியர் - அசுவத்தாமா இவர்களும், அசாத்தியமான காரியங்களை யெல்லாம் முடிக்கவில்லையா? ஆகையால் சந்தேகமில்லை. இல்லாவிட்டால் இந்தச் சபையில் இவ்வளவு தைரியமாக பேசமாட்டான். நல்லது இந்த ராஜர்களில் இன்னானுக்குச் சக்தியிருக்கிறது இன்னானுக்குச் சக்தியில்லையென்று யோசித்தா வில்லைவளைக்கச் சொன்னோம்? ஆகையால் நம்ஜாதிக்கு மேலான ஜாதியிலுதித்தவனாகிய இவனும் போய் ஒருகை பார்க்கவேண்டியது தான்" என்று தந்தையுடன் கலந்து ஆலோசித்து, அந்த அர்ச்சுனனாகிய பாப்பாரப்பிள்ளையைப் பார்த்துக் கைகூப்பி சொல்லலுற்றான்—

"ஐயா! இந்தக் கோட்பாட்டிற்கு க்ஷத்திரியரென்றும் பிராமணரென்றும் நியமமில்லை. உமக்குச் சாமர்த்தியமிருந்தாற் சுகமாய் நீர்போய் ஒருகை பார்க்கலாம்" என்று அச்சபையிலுள்ள சகல அர்சர்களும் முனிவர்களு மறிய உரைத்தான். அந்த வார்த்தையைக் கேட்டு வந்த வேதிய குமாரன் முகமலர்ச்சியுடனே புன்சிரிப்புக் காட்டி, மதயானைக் குட்டிபோல் நடந்து போய் முன்னொரு காலத்திற் பரமசிவனேந்திய மேருகிரி யென்னும் வில்லைப்போன்ற அவ்வில்லை மஹாஉற்சாகத்தோடும் ஒரு கையாற் றூக்கிப் பிடித்தான். அந்தத் திரௌபதை பார்த்து, "வில்லைக் கையிலேந்தியபடி இப்போது வந்த மகாபுருஷன் இந்திர

தனுசுடன் கூடின காளமேகம் போற் காணப்படுகிறான், ஆதலால் எனது மனதின் தாபத்தைப் போக்கும்படியான சந்தோஷ மழையைப் பொழிவான் போலும்" என்று சிந்தித்தாள். அப்படியே அந்த அர்ச்சுனப் பிராமணனும் அந்த வில்லை வளைத்து, நாண்பூட்டி ஓசைகாட்டி, அம்பையெடுத்துச் சந்தானம் பண்ணிக் காதளவுமிழுத்து, இயந்திர ஸ்தம்பத்தின் அடிவாரத்தில் ஒரு கடார நிறைய வைத்திருக்கும் மஞ்சள் நீரில் அக்குறி நிழலைப் பார்த்துக் கொண்டே ஆகாயத்தில் அம்பைத்தொடுத்து, அந்த மச்சயந்திரத்தை அறுத்து விட்டான். அந்த யந்திரம் மகா இரைச்சலோடு எல்லா வரசர்களுடைய மனமுஞ் சுழலும்படி சுழன்று கொண்டு, அவரவர்கள் கீர்த்தியினைத்துங் கலங்கிக் கீழேவிழுந் தன்மைபோல விழுந்தது. உடனே அம் மாதுசிரோமணியாகிய ராஜகன்னிகையின் சிங்கார விரகப்பெருக்கினால் குளிர்ச்சி பொருந்திய கண்களின் வீழ்ச்சியாகிய கருநெய்தற் பூமாலையும், அக்கன்னிகையின் கைத்தாமரையிற் பற்றியிருந்த சுய்வரமாலையும், தேவர்கள் வருஷித்த கற்பகப்பூமாலையும் இப்புருஷசிகாமணி புயத்தின் பேரில் விழுந்தன. அப்போது அந்த யந்திரம் சுழன்று சப்தித்ததைப் பார்த்த பார்ப்பனக் கும்புகளெழுந்து ஆர்ப்பாட்டம் பண்ணினார்கள். இவ்வாறாக அக்கன்னிகை அவ்வீரசூடாமணிக்கு மாலை சூடிய உடனே இராஜசேவகருடைய ஜயஜய வென்னுங் கோஷமும், இராஜ பந்துக்களுடைய எக்களிப்பும், வேதியருடைய ஆசிர்வாதமுழக்கமும், ஜனங்கள் ஆச்சரியப்படுகின்ற தொனியும், மங்களவாத்தியங்களின் ஆரவாரமும், அந்த அர்ச்சுனனுடைய கண்டத்தில் விளங்காநின்ற மாலையின் மதுவைப் பானஞ்செய்து சுழன்று கொண்டிருந்த வண்டுகளின் றீங்காரமும் ஒன்றாய்க் கூடி, திக்குகள்தோறு முள்ள சகலபிராணிகளும் செவிடுபடச் செய்தன.

அது காலையில் அந்தச் சபையிலிருந்த நற்குணமுடைய வேந்தர்களில் சிலர், "இவனாரோ மகத்வபுருஷன் வீராதி வீரன், சூராதி சூரன். இவனுக்கு இப்பெண் மாலைசூடியது நியாயந்தான்" என்று சந்தோஷித்தே யிருந்தார்கள்; சிலர் பொறாமை கொண்டிருந்தார்கள். திரௌபதை 'இந்தப் புருஷன் அர்ச்சுனனாகவே இருக்கவேண்டும். இல்லா விட்டால் நம்முடன் கூடப்பிறந்த வில்லை வளைக்கத் தகுந்த திறமை மற்றையர்க் கிராது. மேலும் தேவவாக்குப் பொய்யாக மாட்டாது, அன்றியும் நாம் அர்ச்சுன

னுடைய ரூபத்தைக் கேட்டிருந்தபடி, இந்தப் புருஷனுடைய உருவமும் அளவும் அழகும் சரியாக இருக்கின்றன. ஆதலால் இவனே அவன், அவனே இவன், என்பதற்கு யாதொரு சந்தேகமு மில்லை' என்று மனதில் நிச்சயித்துக் கொண்டு சந்தோஷத் துடனே யிருக்க அர்ச்சுனன் த்ருஷ்டத்தூய்மனை நோக்கி, "ஓ மஹாராஜகுமாரனே! உம்முடைய நியமத்தின்படி அந்த யந்திரக்குறியை இதோ, கையிலேந்தி விட்டேன். ஆகையால் இனி உம்முடைய தங்கையின் கையைப்பிடிக்கபோகிறேன்" என்று கூறித் திரௌபதையினுடைய கையைப்பிடித்தான். அந்தத் தோகையும் புன்னகை கொண்டு ஆனந்தக்கண்ணீர் ததும்பத் தேகம் புளகமுறக் கடைக்கண்ணினால் தன் கணவனை நோக்கிக் கொண்டிருந்தாள். அப்போது அந்த பொற்கொடியைக் கையிற் பிடித்துக் கொண்ட அர்ச்சுனன் தன் அண்ணன் தம்பியர்களும் வேதவேதியர்களும் சூழ, மங்களகோஷத்துடனே தன்னிடத்துக்குப் போகப் புறப்பட்டான். அதைத் துரியோதனன் பார்த்து மிகவும் பொறாமை கொண்டு, மற்ற அரசர்களை நோக்கி சொல்லுவதானான்—

## துரியோதனன் கலகம் விளைவித்தல்

"ஓ இராஜகுலத் துதித்த இறைவர்களே! உங்களுக்கு ஆண்மை யில்லையோ? நமது குலத்துதித்த பெண்ணைப் பார்ப்பான் கொண்டு போகப் பார்க்கலாமோ? இவ்வுலகத்துள்ள பொருள்களிற் சிறந்த இரத்தினம் போன்றவற்றை அரசர்க ளடையவேண்டியது. அப்படி யிருக்க இந்தத் துருபதமகாராஜன் வீணே ஒரு நிபந்தனையை ஏற்படுத்தி, மகாராஜர்களை யெல்லா மவமதித்து, பிட்சைக்காரப் பார்ப்பனனுக்குத் தனது பெண்ணைக் கொடுத்தானே, இது நியாயமோ? அந்தப் பார்ப்பாரப்பையலும் என்னவோ மந்திர பலத்தினால் அந்த வில்லைவளைத்துக் குறியடித்தான். அதனாலே அவன் பராக்கிரமசாலி யாவானோ? முன்பு வசிஷ்டர் தம்முடைய பிரம்மதண்டத்தினால் விசுவாமித்திரனுடைய அஸ்திரங்களை யெல்லாம் தகித்துவிட்டார். ஆனாலவர் வீர முள்ளவரோ? அந்த விஸ்வாமித்திரனே மற்றொருபோது அநேக ஜந்துக்களைச் சிருஷ்டித்து நட்சத்திரங்களைத் தெற்குவடக்காக மாற்றி விட்டு வேறு தேவேந்திரனையுஞ் சிருஷ்டிக்கிறேனென்று யத்தினப்பட்

டான். அதனால் அவன் பிரமதேவனுவானோ? ஆதலால் அவரவர் தத்தம் புஜபல பராக்கிரமத்தினாலே காட்டுஞ் வீர மன்றோ வீரம். ஆதலால், இப்போது இவனை நாமெல்லாருங் கூடி எதிர்க்கலாம். இவனுக்கு ஆண்மையுண்டானால் சண்டையில் நம்மை வென்று இப் பெண்ணைக் கொண்டுபோகட்டும். வேண்டுமானால் இந்தத் துருபதனும் சைனியத்துடனே நம்மை எதிர்த்தாலும் எதிர்க்கட்டும். நாமெல்லோரும் ஒன்றுகூடுவோம் வாருங்கள், இல்லாவிட்டால் நமக்கு அபகீர்த்தி நேரிடும்" என்று மிகவும் ஆக்குரோஷத்துடனே கூறி அரசர்களை அழைத்துக் கொண்டு ஆயுதங்களையுஞ் சேனைகளையும் சித்தப்படுத்திக்கொண்டு, அந்த மணவாளனை எதிர்த்து யுத்தத்துக்குப் போனான்.

அப்போது அர்ச்சுனனும் அந்தக் கன்னிகையைத் தமையனிடத்தில் விட்டுத் தனது தனுசை எடுத்துக்கொண்டு, "ஓ மகாராஜர்களே! ஏன் கும்பலாக வந்தீர்கள்? இந்த லோகத்தின்கண் அனுபவித்த போகத்தில் விரக்திபிறந்ததோ? அதனால் சுவர்க்க லோக போகத்தில் மோகங்கொண்டு வந்தீர்களோ? வாருங்கள்! யாவருக்குங் கிடைத்தற்கரிய நற்கதியை அளிக்கிறேன்" என்று புன்னகையுடனே தானும் யுத்தத்துக்கு ஆயத்தப்படுவதைக்கண்ட ராஜாக்களெல்லாம் வியந்து, "அடா பார்ப்பனப்பையலே! ஏன் வீணாய்க்கர்வித்துப் பேசுகிறாய்? கெட்டுப்போகாதே; இதோ பார் ஒரு நிமிஷத்தில் உன்னையும் உனக்குப் பெண்கொடுக்க விசைந்த அரசனையும் உயிரோடு பிடித்துக் காவலிற்போட்டுவிட்டு இந்தக் கன்னிகையை எங்களி லொருவனுக்கு விவாகஞ் செய்விக்கின்றோம். இதில் உன்னுடைய மந்திரபலமொன்று முதவாது. தப்பிப் பிழைக்க மனமிருந்தால் பெண்ணைவிட் டோடிப்போ, தைரியமிருந்தால் நில்லு" என்று வீரவாதஞ் செய்யக்கேட்டுப் பூசுரரெல்லாம் எழுந்து, "ஓ க்ஷத்திரியப் பையல்களே! முன்னொருபோது அரசர் குலத்துக்கெல்லாம் பரசுராமரால் நேரிட்ட வாபத்தைப்போல் உங்களுக் கிப்போது நேரிட்டிருக்கிறது" என்று குடுமிகளைத் தட்டி முடிந்து வேஷ்டிகளை இழுத்துக்கட்டி, பூணூல்களைக் காதிற் சுற்றி, சிலர் தற்பாசனத்தையும் சிலர் வியாக்கிர ஆசனத்தையும் சிலர் கிருஷ்ணாசனத்தையும் சிலர் புத்தகங்களையும் சிலர் பஞ்சாங்கங்களையும் சிலர் பலாசத்தண்டங்களையும் சிலர் சுமித்துக்கட்டுகளையும் சிலர், தர்ப்பைக்கட்டுகளையும் சிலர் கிழவர் தடிகளையும் எடுத்துக்கொண்டு, ஜாதியபிமானத்தால் யாவரும் நான்முன்னே

நான் முன்னே என்று வாயினால் வந்தமட்டும் வைது, ஆக்கிரமித்துக் கொண்டு சண்டைக்குப் புறப்பட்டார்கள். அந்த இந்திர குமாரனான அர்ச்சுனன், "சுவாமிகாள்! உங்களுக்கு இவ்வளவு வருத்தம் வேண்டாம். இந்தப் பஞ்சைகளை வெல்ல உங்க ளாசீர்வாதபலம் பெற்றிருக்கிற நான் ஒருவன் போதாதோ? ஆதலால் சிறுமைப் படாதீர்கள். அடியேனிடத்திற் தயை செய்து சும்மாவிருங்கள்" என்று அவ்வேதியரை அடக்கித் தானொருவனே வில்லைவளைத்து நாண்பூட்டி நாணோசைகொண்டு, பாணங்களைச் சந்தானம்பண்ணிச் சத்துருக்கள்மீது சரமாரிபொழிந்தான். அதனாலே மிகவுங் கோபங் கொண்ட கர்னனானவன் தானும் வில்லைவளைத்துப் பாணங் களை வருஷித்தான். அவைகளையெல்லாம் அர்ச்சுனன் தடுத்து, தீக்ஷண்ணியமான ஓர் அம்பைவிடுத்துக் கர்னனுடைய மார்பி லுருவும்படி செய்தான். அதனாலே கர்னன் அறிவழிந்து மூர்ச்சை யடைந்து கீழே விழுந்தான். அதுகண்ட சல்லியன் மிகவும் பராக் கிரமத்துடனே தனுசை எடுத்து யுத்தத்திற்கு ஆரம்பிக்கும்போது பீமசேனன் நாமிப்போது சும்மாயிருக்கக் கூடாதென்று சுயவரப் பந்தலின் ஸ்தம்பத்தைப் பிடுங்கிக்கொண் டெழும்பிவந்து, அந்தச் சல்லியன் போடுகிற அம்புகளை யெல்லாம் நொறுக்கித் தள்ளி, சல்லியன் மார்பில் தன்னுடைய கையினாலே ஒரு குத்துக் குத்தினான். அந்தக் குத்தினாலே மத்திரராஜனும் பதபதைத்துப் பிரமித்து மூர்ச்சித்துக் கீழேவிழுந்தான்.

இதற்குள்ளே சூரிய குமாரன் மூர்ச்சைதெளிந் தெழுந்து, அகங்காரத்துடனே அர்ச்சுனனை நோக்கிப் புலிபோற் பாய்ந்துவந்து நான்கு சரங்களைத் தொடுத்துவிட்டான். அந்தச் சரங்களும் கோபமுள்ள கிருஷ்ண சர்ப்பங்கள்போலே சீறிக்கொண்டு வரக் கண்ட, பற்குனன் சீக்கிரத்தில் நான்கு மறுசரங்களாலே அவைகளைத் துண்டித்து, மறுபடியும் காளகூட விஷத்துக்குச் சமமாகிய ஒரு பாணத்தைத் தொடுத்து அவன்பேரிற் பிரயோகித்தான். அந்தப் பாணமானது மார்பின்மேல்விழுந்த மாத்திரத்திலே கர்னன் கைகால்கள் விலவிலத்து நடுக்கமுற்று ஒன்றுந்தோன்றாமல் விழுந்துவிட்டான். இதற்குள்ளே சல்லிய மகாராஜனும் எழுந்து, தன்னைக்குத்திய பீமன் மேல் சிங்கம்போல் பாய்ந்து அவன் மார்பிற் குத்த வாரம்பித்தான். அப்போது பீமன் தன் வல்லமையினாலே அவனுடைய இரண்டு கால்களையும் பற்றிக் கறகறவென்று சுற்றி நிலத்தின்பேரிலே வீசினான். அதனாலே சல்லியன் உடம்பு

முற்றிந்து, வேதனை பொறுக்கமாட்டாமல் கர்னனுடன் தலைவிரி கோலமாய் ஓடிப்போனான். இச்சம்பவங்களைக் கண்ட மற்றவர்க ளெல்லாந் திப்பிரமைகொண்டு, "மிகவும் சமர்த்தரான இவர் களே நிற்கமாட்டாமல் ஓடினார்களே, ஆ! ஆ! என்னகாலம்? ஆ! ஆ! ஆச்சரியம்? இந்தப்பாப்பனருடைய பாராக்கிரமத்தைப் பார்த்தீர்களா?" என்று சொல்லிக்கொண்டு தாங்களும் ஓட வழி பார்த்தார்கள். துரியோதனன் மாத்திரம் கோபத்தினாலும் மானத் தினாலும் பொருமையினாலும் வெட்கத்தினாலும் மனதில் கலக்க முற்று, இப்போது நாமிந்தப் பூசுரரைவெல்லாமற் போவதைக் காட்டிலும் பிராணனை விடுவது மேலானது" என்று பிடிவாதத் துடனே ஓடிப்போகிற வேந்தர்களையெல்லா மடக்கி, திரும்பிப் போரிடுவதற்குத் தகுந்த ஆலோசனைகள் செய்துகொண்டு சித்தமா யிருந்தான். அப்போது ஸ்ரீகிருஷ்ணசுவாமியானவர் ஒரு பிரா மணன்போல் வேஷங்கொண்டு, துரியோதனனிடத்துக்கு வந்து ஆசிர்வதித்து இதனைச் சொல்லுவதானார்.

"ஓ ராஜாதிராஜனே! நீர் ஏன் வீண்பிரயாசப் படுகிறீர்? நாங் களு மிவ்வளவுகாலம் வீண் வருத்தப்பட்டோம். கடைசியில் விசா ரித்தபோது அவர்கள் பிராமணரல்லர் க்ஷத்திரியர்தான். அந்த வில் லை வளைத்தவன் அர்ச்சுனனும். சல்லியனைக் குத்தியவன் பீமசேன னும். இது உம்மோடிருக்கட்டும், வெளிவிடாதேயும்" என்று சொல் லிக் கும்பலில் மறைந்து விட்டார். அது கேட்டுத் துரியோதனன் ஆச்சரியமடைந்து, மற்ற அரசர்களுக்கு மிதைத் தெரிவித்து, யுத்தப்பிரயத்தினத்தை நிறுத்தி, "பாண்டவர்களை நாம் அரக்கு மாளிகையிற் கொளுத்தி அவர் எலும்பையும் சாம்பலையும் கங்கை யிற் கரைத்துப் போட்டு விட்டோமே: மறுபடியும் பாண்டவர்கள் வந்தவித மென்ன? இதுமகா அதிசயமா யிருக்கிறதே! எனக்கும் அவர்களுடைய ரூபத்தைப் பார்த்தபோது அவ்வாறே தோற்றியது காரியத்தை நோக்குமிடத்திற் சந்தேகப்பட வேண்டியதில்லை" என்று சொல்ல, மற்றவரும் சரிதானிது வென்று பேசிக்கொள்ள, இன்னும் இதை நன்ருயறிய வேண்டுமென்று எல்லாருமா யோசித் துத் தங்கள் நகரம்போய்ச் சேர்ந்தார்கள். பின்பு அர்ச்சுனன் தனது அண்ணன் தம்பிமார்களுடனே சேர்ந்து, வீட்டுக்குத் திரும்பி வருகிறபோது தன்னைப் பின்றொடர்ந்து வந்த பிராமணனைப் பார்த்து, "சுவாமிகளே! எங்களுடைய தாயார் இங்கோரிடத்தி லிருக்கிருள். அவளை நாங்கள் அழைத்துக்

கொண்டு வருகிறோம், நீங்கள் உங்களுடைய இடங்களுக்குப் போங்கள்" என்று அனுப்பிவிட்டுத் தங்களுடைய புரோகிதராகிய தௌம்யமுனிவருடனே சிறிது நேரம் தனித்துப்பேசி, அவரையும் போகவிடுத்துப் பார்க்கவனென்கிற குயவன் வீட்டுக்குட் சென்றார்கள். அப்போது பாஞ்சாலராஜன் அர்ச்சுனனுக்காகப் பெண்பெற்ற சரித்திரம் தமதுதாயாகிய குந்திதேவியாருக்குத் தெரியுமென்கிற நிச்சயத்தினாலே, உள்ளே போகிறதற்கு முன்னமே "அம்மா நாங்களொரு கனி கொண்டுவந்தோம்" என்று விளம்பினார்கள்.

அதுகேட்ட குந்திதேவி வெளியில் வந்து பாராமலே "அந்தக்கனியைத் தேவாமிர்தம்போல் ஐவரும் புசியுங்கள்" என்றுரைத்து உடனே வெளியில் வந்து பார்த்து, அர்ச்சுனன் பக்கத்தில் இரதிதேவியைப்போல் ஒரு கன்னிகை நிற்பதைக் கண்டு, "ஓ! ஓ! நமதுமக்கள் சொல்லியது இந்தக் கன்னிகைதான். நாம் கனியென்று யோசித்துப் பதறி ஐவரும் புசியுங்களென்று சொல்லி விட்டோம். இவர்களோ தாய்சொற் றவறாத சத்தியசீலர்களாய் இருக்கின்றவர்கள்" என்று சிந்தாக்கிராந்தையாய் நிற்க, அது கண்ட ஐவரும் "அம்மா! நீயேன் கவலைப்படுகிறாய்? எம்மில் அர்ச்சுனனொருவனால் இக்கன்னி கிடைத்தாளாயினும், தாய் எவ்வாறு ஆக்ஞாபிப்பாளோ அவ்வாறே நடந்துகொள்ளுவோமென்று நாடிச் சொன்னோம்" என்றார்கள். அம்மொழியை கேட்ட தாய் "ஒருத்தியை ஐவரும் விவாகஞ் செய்துகொள்வது தகாதே" என்று சிந்தித்தாள். யுதிஷ்டிரர் தாயினது முகக்குறியைப் பார்த்து, "அம்மா! நீ சிந்திக்க வேண்டாம். விதியின் பயன்தான் உன் வாக்கினால் இப்படிச் சொல்லி வைத்தது. இதற்குக் காரண மேதோ இருக்கிறது. இஃதன்றியும் இந்தக் கன்னிகையினிடத்தில் எங்களைவர்க்கும் மனஞ் சென்றது. கூடாத விஷயத்தில் அப்படிமனஞ் செல்லாது. ஆதலால் இப்போது அதைக்குறித்து நாம் பலவாறாக விவரிப்போமானால், அர்ச்சுனனுக்கு மனக்கவலை யுண்டாகும்" என்று பின்னும் பலதருமங்களைச் சொல்லித் தம் தாயின் பாதத்தில் வணங்கினார். அந்தத் துருபதமகாராஜன் மகளும் மாமியின் பாதங்களில் தண்டனிட்டு நின்றாள். உடனே குந்திதேவி தம் மக்களையும் மருமகளையும் நெடுங்கால நின்று நன்றாய்வாழ்க்கடவீரென்று வாழ்த்திச் சுயம்வரமண்டபத்தில் நடந்த சரித்திரங்களைக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

அந்தச் சமயத்திலே ஸ்ரீகிருஷ்ணசுவாமியானவர் பலராமன் முதலாகிய தம் மினத்தினரை நோக்கி, "கோட்டீர்களோ! இந்தச் சபையில் வில்லை வளைத்த பிராமணன் அர்ச்சுனனும், சல்லியனோடு போர்செய்தவன் பீமசேனனும் இவர்களோடு பிரியாமலிருந்த மற்ற மூன்றுபேரும் யுதிஷ்டிரன், நகுலன், சகாதேவனும். நம்முடைய அத்தை குந்திதேவியும் இவர்களும் மேலண்டைத் தெருவில் ஒரு குயவன் வீட்டி லிருக்கிறார்களாம். நாம் வருகிறபோது எனக்கு ஒருபெரிய பிராமணன் வந்து சொன்னான். ஆகையால், அவர்கள் அரக்கு மாளிகையினின்றும் எப்படியோ தப்பித்துக் கொண்டதாய்க் காண்கிறது. அவர்களை நானும் அண்ணாவும் விசாரித்து வருகிறோம்" என்று சொல்லிப் புறப்பட்டு அந்தக் குலாலன் கிருகத்துக்கு வந்து, மொட்டைப் பார்ப்பனத்தியைப்போலிருந்த தங்க ளத்தையைக் கண்டு பரிவுடனே தண்டனிட்டு, மைத்துனர்களையுந் தக்கபடி யுபசரித்து வார்த்தையாடினார்கள். பின்பு கண்ணனும் பலராமனும், "அம்மா அத்தாய்! உங்களுக்கும் என்ன கஷ்டகாலம் வந்தது? ஆ! ஆ! எப்படி தப்பினீர்கள்? தெய்வாதீனம்! உங்களைத் தொடர்ந்த சனிதொலைந்தது. இனி மேன்மேலும் உங்களுக்கு க்ஷேமந்தான்" என்று காணாது கண்டது போற் கண்ணீர்ததும்பக் குழைந்து பேசினார்கள். அப்படியே குந்திதேவியும் பாண்டவாளும், "ஓ சற்குணவான்களே! மறுபடியும் உங்களைப் பார்க்கப் பாக்கிய மிருந்தது. நீங்கள் யாவரும் க்ஷேமமா யிருக்கிறீர்களா?" என்று கண்ணீர்மல்க ஆவலுடனே பரிந்து பேசினார்கள். இப்படி யொருவரை யொருவர் க்ஷேம விசாரணை பண்ணிக்கொண்டு சற்றே சும்மாயிருந்தபின், கண்ணன் பாண்டவர்களைப் பார்த்து, "நீங்கள் அந்த அரக்குமாளிகையினின்றும் எவ்வாறு தப்பினீர்கள்? அதைச் சொல்லுங்கள்" என்றுகேட்க அந்தச் சரித்திரத்தையெல்லாம் ஆதிமுதல் நன்றாய் விவரித்துச்சொன்னார்கள்.

பின்பு கண்ணனுக்குச் சந்தோஷம் பிறந்து, "உங்களுக்கு இந்தப் பெண் நேரிட்டது; உங்களுடைய சத்துருக்களுடைய நாசத்திற்கும், இனி உங்களுக்கு இராச்சியலக்ஷ்மி விலாசத்திற்கும் இடமாக இருக்கிறது. இனி அஞ்சவேண்டாம். கலியாணம் நடக்கும் வரையில் உங்கள் சுயரூபத்தைக் காட்டாம லிருங்கள்" என்று சொல்லித் தாங்கள் போவதற்கு விடை பெற்றுக்கொண்டு யாதவ திலக ரிருவரும் தங்கள்

பரிவாரங்களுடனே பட்டணம்போய்ச் சேர்ந்தார்கள். இப்படி யிருக்க அந்தப் பாஞ்சலதேசத் தரசனுகிய துருபதமஹாராஜன் மெத்தவும் நைந்து, "நாம் நினைத்த நினைவு வீணுயிற்றே பெரியோர்கள் வாக்கும் பொய்த்துப்போகுமோ? ஒருகாலும் போகாதே" என்று மனதிற் சற்றே சஞ்சலித்துத் தன் புத்திரனைக் கூவி, "ஓ குழந்தாய்! நம்முடைய பெண்ணைக் கைக்கொண்டவன் அர்ச்சுனனென்று ஒரு வதந்தி யுண்டாயிருக்கின்றது. அப்படியே யிருக்கலாம். தெய்வத்தின் சங்கல்பம் வீணுகிறதில்லை. வேத முதலியவைகளை யுணர்ந்த பெரியோர்கள் பேச்சுப் பொய்க்கிறதில்லை. ஆகையால், நீ அவர்க ளிறங்கியிருக்கிற இடத்துக்கு வேறுவேஷத்தோடுபோய் அறிந்து வா" என்று சொல்ல பிதாவின் வசனத்தைத் த்ருஷ்டத்தாய்மன் சிரசில் தரித்துக்கொண்டு, ஒரு பரதேசிபோலே வேடம்பூண்டு, அந்தக் குலாலன் வீட்டுக்குப்போய் அங்கே இந்த ஐந்து பேர்களுடைய அளவு ரூபம் லக்ஷணம் தொனி முதலானவைகளை நன்ருய் நிதானித்து, அவர்களுடைய வார்த்தையையும் நடக்கையையும் ஈன்ருளிருக்குஞ் செய்கையையும் பார்த்துத் தன் பித்ாவினிடத்தில் வந்து, "அண்ணு! அவர்கள் அடையாளங்களை யெல்லாம் நன்ருய் நிதானித்துப் பார்த்தாற் பாண்டவாள்போற் காண்கிறது. அவர்களுக்குத் தாயாரொருத்தி யிருக்கிருள். அவள் குந்திதேவிபோலே தோன்றுகிருள். சந்தேகமில்லை. இங்கே வில்லை வளைத்த காளையும், அரசர் சண்டைக்கு வந்தாற் பந்தர்க்காலைப் பிடிங்கிக்கொண்டு பாய்ந்த கெண்டுப்பார்ப்பானும், விப்பிரர் வீதியிற்சென்று பிக்ஷையெடுத்துவந்து தாயினிடத்திற் கொடுத்தார்கள். அதை அவள் இரண்டு பங்காக்கி, ஒருபங்கை அந்தப் பருத்த பார்ப்பானுக்குக் கொடுத்து, மற்ருென்றை நான்கு பங்காக்கி மற்ற நால்வருக்குங் கொடுத்து, துணியி லொட்டிய சோற்றைச் சிதருமலெடுத்து இரண்டுருண்டையாக்கி, அவைகளை நமது குலக்கொடியாகிய மருமகளுக்கிட்டுத் தானும் புசித்தாள். ஆனுல் நம்முடைய பெண் மகா சுகத்தை யனுபவித்தவள். ஆயினும் ஏதோ வறுமையாளராகிய அவர்களுடனே மனங்கோணுமல் இசைந்திருக்கிருள்" என்று சொல்லக் கேட்ட துருபதமஹாராஜன் மிகவும் சந்தோஷமடைந்து, அவர்கள் பாண்டவர்களேயானுல் நம்முடைய மகள் மஹாபாக்கியமுடையவள்தான். தரித்திரமிருந்தா லிருக்கட்டும். அது லக்ஷியஞ்செய்யத் தக்கதன்று. நமது மகளும் அக்குறிப்பறிந்தே சந்

தோஷத்துடனே இல்லாமையைப் பொறுப்பதாய்க் காண்கின்றது. ஆகையால் இச்சங்கதியை நன்ருய் விசாரிக்கவேண்டும்" என்றெண்ணி ஒ ருபாயஞ் செய்வதானன்.

அஃதென்னவென்ருல்: வேதியர்க்குள் மிகவுஞ் சமர்த்தரான ஒருவரை அழைத்து, "நீர் போய் அவர்கள் பாண்டவர்களா? வேறு மதம் பூண்டவர்களா? அதை விசாரித்து வரவேண்டும்" என்ருன். அந்தப் பிராமணோத்தமனும் பாண்டவரிடத்துக்குச் சென்று அவர்களால் நமஸ்கரிக்கப்பட்டு, தானுந் தக்கபடி மரியாதை பண்ணி, பாண்டவர்களை நோக்கி மகானுபாவரா யிருக்கின்றநீங்கள் யார்? உங்களுடைய சௌரியமும் புத்தியும் சாமர்த்தியமும்நிகரில்லாதவைகளா யிருக்கின்றன. ஆகையால் உங்களை யோசித்தாற் பிரமணரல்லவென்றும், க்ஷத்திரியர்கள்தா னென்றும் தோன்றுகிறது. அதிலும் உங்கள் ரூபத்தைப் பார்த்தாற் பாண்டவாளுடைய ரூபம் போ லிருக்கிறது. மஹாராஜாவும் இப்படியே யாசங்கித்து உங்களுடைய குலத்தை அறியவேண்டுமென்று நினைத்திருக்கிருர். எனக்கு மதை யறிவதிற் குதூஹல மிருக்கின்றது. ஆதலால் என்னுடைய மனதுக்குத் திருப்தி செய்யவேண்டும்" என்று கேட்டார். அதற்குத் தருமபுத்திரன் "சுவாமி! கொண்டு குலம் பேசப்போமோ? கொடுத்துக் குறைகேட்கலாமா? மஹாராஜாவுக்கு எங்கள் குலகோத்திரங்களை விசாரிக்கவேண்டிய காரியமில்லையே. அவர் மகா புத்திமானச்சுதே. அப்படியேன் நினைக்கிருர்? மகாபுத்திசாலியும் யோகிகளுமாகிய நீங்கள் எங்களை இப்படிக் கேட்கலாமா?" என்று சிலேடையாக உத்தாரஞ்சொல்லக்கேட்ட அந்தப் பூசுரரும், சரிதானென்று இராஜனிடத்திற்கு வந்து இந்தச் சங்கதியனைத்தையும் தெரியப்படுத்தினர். அவ்வார்த்தையை மஹாராஜாகேட்டு, "இந்த மொழியினலே அவர்கள் பாண்டவர்களென்றே சித்தமாய்த் தோன்றுகின்றது. ஆகிலும் இன்னும் நன்ருய்ப் பரிசோதிப்போம்" என்று தன்னுடைய மந்திரிகளை அழைத்து, "ஓ அமைச்சர்களே! இந்த க்ஷணம் நீங்கள் நமது காவலிலுள்ள தேர், குதிரை, யானை, பல்லக்கு முதலான வாகனங்களையும், வில், வேல், கத்தி, தடி, வாள், கதை இவை முதலாகிய ஆயுதங்களையும், பலவித ஆபரணங்களையும், நல்ல வஸ்திரங்களையும், அறுசுவை போஜன பதார்த்தங்களையும் எடுப்பித்துக் கொண்டு; நமது குமாரனுடனே போய் இவைகளையெல்லாம் நான் வரிசையனுப்பியதாகச் சொல்லுங்கள். அவர்க ளவைகளை யங்கி

கரித்து அணிந்துகொண்டபின், வாகனங்களின் மீதிலேறித் தாயாருடனே நம்முடைய மாளிகைக்கு ஒருதரம் வந்து என்னைப் புனிதனுக்கவேண்டுமென்று நான் சொன்னதாய்த் தெரிவித்து அழைத்து வாருங்கள்" என்று அனுப்பி வைத்தான்.

அப்படியே அந்த ராஜகுமாரனும் மந்திரிகளும் அவ்வரிசைகளையெல்லாம் சகலமங்கள வாத்தியங்களுடனே கொண்டுபோய், மிகுந்த மரியாதையுடனே பாண்டவர்களைப் பார்த்து, "ஓ ஐயன்மீர்! எங்கள் தகப்பனுர் தங்களுக்கு வரிசை அனுப்பி வைத்தார். இவைகளைத் தயைசெய்து அங்கீகரித்துத் தங்களுக்குத் தகுந்த ஆபரணங்களுந் தரித்து, வாகனங்களிலேறிக்கொண்டு தங்கள் தாயுடனே எங்கள் கிருகத்துக்கு வரும்படி பிரார்த்திக்கிருர். நீங்கள் அப்படியே தயை செய்யவேண்டும்" என்று கைகூப்பிச் சொல்ல, தருமநந்தனன் நல்லது பாக்கியமாச்சுதென்று அரசர்க்குரிய ஆடையாபரணங்களையும் ஆயுதங்களையும் தரித்து, தாயாரையும் ராஜகன்னிகையையும் அலங்கரித்துச் சிவிகையில் ஏற்றித் தாங்கள் தேர்களின் மீது ஏறிக்கொண்டு சகல பரிவாரங்களுஞ்சூழச் சென்று அரண்மனையிற் பிரவேசித்தார்கள். அப்போது துருபதமகாராஜன் அவர்களை எதிர்கொண்டு மகா உபசாரத்துடனே தனது கொலுச்சபைக்கு அழைத்துப் போய் ஆதனங்களிலிருக்கவேண்டுமென்று சொல்ல, அவர்களும் அவனிட்ட ஆதனங்களிலே உட்கார்ந்தார்கள். இராஜபத்தினியாகிய கோகிலாதேவியும் பந்துவர்க்கத்தாரும் எதிர்வந்து, தன் மகளையும் குந்தியையும் அந்தப்புரத்துக் கழைத்துக்கொண்டுபோய் மரியாதையுடன் உபசரித்தார்கள். மகாராஜாவானவன் இவர்களுடைய செய்கைளினுலே பாண்டவர்களென்றே மனதில் நிச்சயித்து அவர்களைப் பார்த்து, "நான் நெடுநாட் செய்த தவத்தினுலே இப்படிப்பட்ட உத்தமர்களுடைய சம்பந்த மெனக்குக் கிடைத்தது. நான் தன்னியனுனேன் எனக்கு இதற்கு மிஞ்சிய பாக்கிய மற்றென்றுமில்லை. ஆனுல் இந்தப் பெண்ணை இந்த அர்ச்சுனனுக்குக் கொடுக்கவேண்டுமென்று அக்கினியின் அனுக்கிரகத்தாற் பெற்றேன். உங்களுக்கு அரக்குமாளிகையின் மூலமாய் விபத்து வந்ததென்று கேள்வியுற்றுச் சஞ்சலப்பட்டுக்கொண் டிருந்து, பிறகு அசரீரி வாக்கினுலே நீங்கள் பிழைத் திருக்கிறீர்களென்று தெரிந்து, வேத வியாசராற் கடினமான இந்த கோட்பாட்டை ஏற்படுத்திச் சுயவரத்துக்குச் சகலராஜாக்களையும் வருவித்தேன். ஒருவராலும் ஆகாமற்

போன அந்த யந்திரபேதத்தை உங்களில் இவர் நிர்வாகஞ் செய்த தினலே ஆச்சரியத்தை அடைந்து, உடனே தெய்வத்தின் வாக்கு சத்தியமென்று நம்பி, நீங்களே பாண்டவர்களாக இருக்கவேண்டு மென்று எண்ணிக்கொண்டேன். ஆகிலும் ஸ்திரமாய்த் தெரியா மையாலே சித்தங்கலங்கி இருக்கின்றேன். நீங்கள் தயைசெய்து இந்தச் சந்தேகத்தை நீக்கினல் தெய்வத்தின் மெய்ம்மையையும் பொய்ம்மையையும் நிச்சயம் பண்ணிக்கொள்ளுவேன்" என்று பணிவாய்க் கேட்டான்.

இவ்வாறு சொல்லக் கேட்ட பாஞ்சாலனுடைய் வார்த்தை யின் நயத்திற்குஞ் சாதுரியத்திற்கும் பாண்டவர்கள் மெச்சிச் சந்தோஷித்தனர். யுதிட்டிரர் புன்சிரிப்புடனே "மகாராஜனே! புத்திமானும் சத்திய சந்தனுயு மிருக்கின்ற உம்முடைய எண்ணம் வீணுகுமோ? தெய்வத்தின் அருள் பழுதாகுமோ? உமக் கேன் மனதிற் கவலை? இனி அக்கவலையை விட்டுவிடும்" என்ருர். அது கேட்ட பாஞ்சாலன், அரிய பேறு பெற்றது போல் ஆனந்த சாகரத்தில் முழ்கினன். அவன் விழிகளில் ஆனந்த பாஷ்பம் பெருகி, உடலில் மயிர்ச்சிலிர்ப் புண்டாயிற்று. பாஞ்சாலன் பாண்ட வரைக் கட்டிக்கொண்டு, ஒரு நாழிகை பரியந்தம் ஒன்றும் பேசா மற் பிரம்மானந்தமயமாய் ஸ்தம்பித்து நின்று, பிறகு "ஓ என் பிராணனேடொத்த இராஜகுமாரர்களே! உங்களுடைய நிஜமான வடிவைக் காண விழைக்கின்றேன். தாங்கள் கோபிக்காமல் என் மீது தயைசெய்யுங்கள்" என்று கைகூப்பிப் பிரார்த்தித்தான். அவர்களும் வியாசமுனியை மனதிற் சிந்தித்து மந்திரத்தை யுச்ச ரித்த மாத்திரத்திலே, யதார்த்த ரூபங்களுடன் விளங்கினர்கள். யதார்த்தமான ரூபத்துடன் விளங்கின பாண்டவரை அந்தப் பாஞ் சாலனும் அவனுடைய புத்திரன் முதலானவர்களும், மகாசந்தோ ஷத்தோடு நேத்திரோற்சவ மடைந்தார்கள். அப்பாற் பாஞ்சாலன் தருமபுத்திரனைநோக்கி, "இனித்தாமதம் வேண்டாம், உம்முடைய தம்பிக்குக் கலியாணத்தைக் குறித்துச் செலவுகொடுக்க வேண்டும்" என்று கேட்க, யுதிஷ்டிரர் "மகாராஜனே! உம்முடைய பெண் ணுக்கு எங்க ளைவரையும் மணவாளனுக இருக்கும்படி கடவுள் எங்கள் மாதவின் மூலமாக அறிவித்திருக்கிருர். நாங்கள் அதைத் தவறக்கூடாது" என்று சொல்ல, துருபதன் "ஆ! என்ன ஆச்சரியம்? சகலதருமங்களு மறிந்தவரே இப்படிச் சொல்லு கின்ருர். உலகத்தில் இல்லாத காரியத்தை நாமெப்படி நடத்த

லாம் ?" என்று கூறி மறுபடியும் வியாகுலத்துடனே ஏங்கி யிருந்தான்.

சகல மஹாரிஷிகளுக்கும் சிரோபூஷணமாக விளங்கும் வியாச பகவான் கருக்கொண்ட மேகம்போன்ற திருமேனியும் செந்நிற முள்ள சடாமுடியும் பொன்னிறமான தேஜசும் வெண்ணிறமுள்ள விபூதிதூளிதமும் புள்ளிநிறமுள்ள மான்தோலாடையுமாய், சூரிய கிரண மேற்றிசையிற் பரவியிருக்கக் கீழ்த்திசையி லிருக்கும் உதய கிரிபானுவைப்போல் தபோமகிமையாற் பிரகாசித்து, தண்டு கமண்டல மிதியடியுடனே அந்தப் பாஞ்சாலனுடைய சபையி லெழுந்தருளினார். அவர் எழுந்தருளியதைப் பார்த்த பாஞ்சால ராஜனும் பாண்டவர்களும் எழுந்து அவர் பாதங்களில் விழுந்து, அவரால் ஆசிர்வதிக்கப்பட்டு, அவரை அழைத்துப் போய் ஆசனத்தி லுட்காரவைத்து அவரனுமதியினாலே தாங்களும் உட்கார்ந்தார்கள். பின்பு வியாசபகவான் ஒரு நாழிகை வரையில் க்ஷேம விசாரணை செய்து, பிறகு, "ஓ பாஞ்சாலராஜனே! நீர் சந்தேகப்படவேண் டாம்! திரௌபதிக்கு ஐந்து கணவரைத்தான் நியமித்திருக்கின்றது. குந்திதேவியின் வாக்கிலும் அப்படியே வந்திருக்கின்றது. இந்தப் பாஞ்சாலிக்கும் இவ்வைந்து பேரிடத்தில் மனதுண்டு. இவர்களுக் கும் அதிற் சம்மதமுண்டு. ஆனால் அது இந்தச் சனனத்தைப் பற்றிய தல்ல; முற் சனனத்தைப் பற்றியதாகையால் அது சங்கதி உமக்குக் கேட்க மனதிருந்தால் விளம்புவேன்" என்று அரசனைத் தனியே அழைத்துப்போய் அச்சங்கதியைச் செல்லத் தொடங் கினார்.

## வியாசர் திரௌபதையின் பூர்வஜனன முரைத்தல்

"ஓ அரசனே! முன்ஜனனத்தில் இத்திரௌபதை நளமகாராஜ னுடைய மகளாகப் பிறந்து, நளாயினியெனப் பெயருடையவளாகச் சிறந்து, மிகவும் சௌந்தரியத்துடனே பருவமடைந்திருந்தாள். அவளை அநேக ராஜாக்கள் வந்து விவாகஞ் செய்து கொள்ளக்கேட்ட தற்கு, "அந்தப்பெண் தனக்குப் புருஷன் வேண்டுமென்கிறபோது நான் அவளைக் கலியாணம் பண்ணிக்கொடுப்பேனேயல்லது, அதற்கு முன்னே கொடுக்கமாட்டேன்" என்று சொல்லிவிட்டான். இப் படியிருக்க அந்தப்பெண் ஒருநாள் எனக்குக் கலியாணம் வேணு மென்று பிதாவுடனே சொல்ல, பிதாவும் அதற்கு யத்தனமா

யிருக்கையில் ஒருதினம் மௌத்கல்ய்ரென்கிற மஹாமுனி இராஜ னிடத்துக்கு வந்து, "ஓ மன்னவனே! நானொரு காரியமாய் வந் தேன். அதை நீ நிறைவேற்ற வேணும்" என்றார். அந்த ராஜ னும் அவருடைய தபோமகிமைக்கு அஞ்சி மறுத்துச் சொல்லமாட் டாமல் அப்படியே ஆகட்டுமென்று ஒப்பினன். அந்தரிஷி "உன் மகளை எனக்குக் கன்னிகாதானஞ் செய்யவேண்டும்" என்று கேட்க அரசன் அவருடைய முதிர்ந்த வயதையும் கோரரூபத் தையுங் கண்டு, தன் மகளுடைய மங்கைப் பருவத்தையும் நல்ல சௌந்தரியத்தையும் நிதானித்து, "சுவாமி! அப்படியே செய்கி றேன். ஆனால் அந்தப்புரத்துக்குப்போய் என்மகளின் சம்மதத் தைக் கேட்டு, அதற்கு அடையாளமாக அவள் முத்திரை மோதி ரத்தை வாங்கி வந்தால் உடனே நான் தத்தம் பண்ணுகிறேன்" என்று சொன்னன்.

அதுகேட்ட அந்த முனிவரும் ஆகட்டுமென்று அந்தப்புரத் துக்குப் போகும்போது மன்மதனை நினைத்தார். அம்மாத்திரத் தில் அவன் அவருக்கெதிரில் வந்து நின்றான். உடனே முனிவர் அவனுடைய வயதையும் அழகையும் வாங்கிக்கொண்டு தன் வய தையும் ரூபத்தையும் அவனுக்குக் கொடுத்து, "அப்பா! சற்று நேரத்திலே உன் சொத்தைச் சேர்த்து விடுகிறேன்" என்று அவ னுக்கு விடை கொடுத் தனுப்பிவிட்டு, தாம் அந்தப்புரம்போய் அங்கிருந்த ராஜகன்னிகையைப் பார்த்தார். அவள் இவருடைய ரூபத்தைக் கண்டமாத்திரத்திலே மோகித்து, இவரை முற்றும் நோக்கி உற்றுப்பார்த்து, "நீர் யார்? எங்கே வந்தீர்?" என்று வினவினள். அவரும் அவளிடத்திலிருந்த ஆசையை வெளிப் படுத்த, "ஓ பொற்கொடியே! உன்னை விவாகஞ்செய்ய வேண்டுமென்று வந்தேன். உன் பிதா நீ சம்மதித்தால் அப்படியே செய்கிறேன் என்றான். ஆகையால் உனக்கு என்னிடத்தில் ஆசை யிருந்தால், உன்மனங் குவிந்ததற்கு அடையாளமாக நீ தரித்திருக் கிற முத்திரை மோதிரத்தை என் கையிற் கொடு. அதை உன் தகப்பனுக்குக் காட்டி உன்னை விவாகஞ் செய்துகொள்ளுகிறேன்". என்றுசொன்னர். அந்தப்பெண்ணரசியும் புன்சிரிப்புடனே மௌன மாய்த் தன் மோதிரத்தைக் கழற்றித் தபோதனர் கையிற் கொடுத் தாள். அவர் அதை வாங்கிக்கொண்டு, மிகவும் சந்தோஷத் துடனே வரும்போது மன்மதனை யழைத்து அவன் ரூபத்தை அவனுக்குக் கொடுத்துவிட்டு, தம்முடைய ரூபத்தோடே அரச

னிடத்திற்சென்று, அவன் கையில் அம்மோதிரத்தைக் கொடுத்தார். அரசனும் அதைப்பார்த்துத் தன் மகளை அழைப்பித்து, "மகளே! இதோ நீ இஷ்டமாய் நினைத்தபுருஷன். இவருக்கே உன்னைக் கன்னிகாதானம் பண்ணுகிறேன்" என்று சொல்ல, அந்தச் சுந்தரி இந்தப் புருஷனைப் பார்த்து, "நான் இச்சித்த புருஷன் இவரல்ல" என்று சொல்ல, மகாராஜனும் இவர்தான் உன் சம்மதத்திற்கு அடையாளமாக உன் மோதிரத்தைக்கொண்டு வந்து என் கையிற் கொடுத்தவர். இனிப் பேசிய பேச்சு தவறக் கூடாது" என்றான்.

அந்தப்பெண் திடுக்கிட்டு, நமக்கு அமைப்பு இதுதானென்று நினைத்துக்கொண்டு, "ஐயா! ஆனால் அப்படியே செய்யும்" என்று சொன்னாள். அப்பால் அந்த அரசனைவன் அந்த மௌத்கல்யருக்கே நளாயினி என்னுந் தன் மகளைக் கன்னிகாதானஞ் செய்து சிறப்புடனே விவாகத்தை நடத்தினான். விவாகம் நடந்த பின்பு அந்த முனிவர் இந்தப் பெண்பிள்ளையைப் பார்த்து, "பெண்ணே! நீ என்னுடன் கூடியிருக்க மனமுடையவளா? அல்லது உன் தகப்பனாரிடத்தில் விளையாடிக்கொண் டிருக்க மனமுடையவளா?" என்று கேட்க அந்தப்பெண் கற்புடையவளாகையால் "சுவாமி இனித் தகப்பனா லெனக்கென்ன பயன்? இப்பருவம் புருஷனோ டிருக்கத்தக்க தாதலால், தேவரீருடன்கூட வருவதற்கே மனமுடையவள்" என்று சொன்னாள். "அப்படியானால் நான் கடினமாகிய ஆரணியத்திலிருந்து தவஞ்செய்யப்போகிறேன். அங்கே நல்ல உணவு கிடைக்காது, காய்கிழங்குகளைத்தான் தின்ன வேண்டும். மெத்தென்னுஞ் சயனமில்லை, கல்லிலும் முள்ளிலும் காட்டிலும் படுக்கவேண்டும், திவ்வியமான வாத்தியகோஷமில்லை, பயங்கரமான மிருகங்களின் கர்ஜிப்பைக் கேட்கவேண்டும், உயர்ந்த வஸ்திரமில்லை, மரவுரி யுடுக்கவேண்டும். மாடமாளிகைகளில்லை தழைகளாற் கட்டப்பட்ட குடிசைகளி லிருக்கவேண்டும், உனக்குக் காலங்களில் அன்னபானாதிகள் கிடைக்கமாட்டா, மத்தியானத்திற்குமேற் கொஞ்சம் புல்லரிசிக்கஞ்சி கிடைக்கும், இராத்திரியிற் போஜனங் கிடைக்காது, அன்றியும் விடியற்கால மெழுந்தது முதல் நமக்கு ஸ்நானம் - தேவபூஜை - அக்கினிஹோத்திரம் முதலான வைதீகங்களுக்கும் ஆகாரமுதலான லௌகீகங்களுக்கும் வேண்டிய உபசாரங்களாலே நீ மிகவு மெய்வருந்தவேண்டிவரும், நித்திரையற்றிருக்கவேண்டும், மேலும் நான் கிழவன், தவத்தில்

நிற்பவன், ஒருவேளை சாப்பிடுகிறவன், உனக்குக் காமசுகம் பெரும்பாலும் நேரிடாது. இதுவுமல்லாமல் நினைத்தபோது எங்கே போகவேண்டுமோ அங்கே போய்விடுவேன். அனேக தினங்கள் ஆகாரமேயில்லாமல் தவத்தில் நின்றுவிடுவேன். அப்போ தெல்லாம் நீ ஒருவளே தனித்து ஆகார நித்திரைகளில்லாம லிருக்க வேண்டும். இத்தகைய துக்கத்திற்கே காரணமாகியது வன வாசம். ஓ பெண்ணே! அந்தப்புரவாசலிற் சகலசுகத்தோடும் சந்திரமண்டலம்போலே விளங்காநின்ற மாளிகைமீதில், யானைத் தந்தங்களினாற் செய்து நவமணியிழைத்த மஞ்சங்களிலே இலவம் பஞ்சிட்டுப் பட்டினால் தைத்த சுகுமாரனாகிய பஞ்சணையில் தூங்கி திவ்ய ஆசனங்களிலிருந்து, அநேகவித உபசாரங்களுடனே தகுந்த வேலைக்காரிகள் கொண்டுவந்து கொடுக்கும் தேவாமிர்தத்திற்கு நிகராகிய அறுசுவை யுண்டிகளை விளையாட்டாற் புசித்து ஏழிசை கூடிய வேணு வீணைமுதலாகிய வாத்தியங்களின் மதுரமான ஒலியைக்கேட்டு, அம்மானை கழங்கு பந்து முதலியவைகளை விளை யாடி, உன்னிச்சையின்படி எல்லா விநோதங்களையுஞ் செய்து கொண்டிருக்கிற நீ, என்னுடன் வருவதற் கிசையமாட்டுவையோ?" என்று அம்மகாமுனி சொல்ல, அந்த ஸ்திரீ "ஓ சுவாமி! என்ன கஷ்ட நேரிட்டாலும், புருஷன் எப்படிப்பட்டவனானாலும் பதிவிர தைக்கு அப்புருஷனுடன் கூடயிருந்து கணவனுக்குப் பணிவிடை செய்வதே கடமையாகும். இதனாலேதான் அவளுக்கு இம்மை யில் நற்கதியும் நல்லின்பமும் உண்டாம். பிறந்த குலத்திற்கும் புகுந்த குலத்திற்கும் புகழுண்டாகும். அப்பெண்மையே பெண்மை. சௌக்கிய முதலிய மற்றவை சுகமல்ல. பிறந்த வீட்டி எத்தனை செல்வமிருந்தாலும் அதனாற் பெண்ணுக்குக் கிஞ்சித்தும் பெருமை யில்லை. புகுந்த யிடத்திற் குடிப்பது கூழாயினும் அது அருமை யான பெருமைதான். அன்றியும் வருத்தத்துடனாவது கணவ னோடுகூட இருப்பதே சுவர்க்கப் பதவி. அதை விடுத்துத் தன் னிச்சைபோல் நடந்து சுவர்க்கம் புகுந்தாலும் நரகவாதனையாம். ஆகையால், முன்னம் இராமன்பின்னே ஜனகன்மகள் போனாள். நளனுடனே தமயந்தி சென்றாள். சுகன்னியென்பவளும் பார்க்க வச்சியவனரோடு ஆரணியவாசஞ் செய்தாள். அரிச்சந்திரனைச் சந்திரமதி அனுசரித்தாள். இப்படி அநேகம் பதிவிரதைகள் பதிபக்தி யென்னும் கல்பத்தை அனுஷ்டித்து, என்றும் நாசமுறாத கீர்த்தியை அடைந்தனர். இஃதெல்லாம் அறிந்தயான்

எப்பாடுபட்டாவது தேவரீரை அனுசரித்திருப்பேனே யல்லது பிதாவின் வீட்டுப் புசிப்பாகிய எச்சிலுக்கு இச்சிக்கமாட்டேன்" என்று சொல்ல, முனிவர் "ஆனுலிவ் வாடையாபரணங்களைக் களைந்து என்போல மரவுரி யுடுத்துக்கொள்" என்று கூற, அவளும் அப்படியே செய்தாள். அதுகண்ட அந்த மௌத்கல்ய ரிஷியானவர் நளாயினியை அழைத்துக்கொண்டு, கங்காநதிதீரமாகிய ஒரு புண்ணியக்ஷேத்திரத்திற் போய்த் தமதிச்சையின்படி தவஞ் செய்ய ஆரம்பித்தார்.

அவளும் அவருக்கு வேண்டிய உபசாரஞ் செய்துகொண்டு வருகையில், அந்த ரிஷி அவளுடைய கற்பை இன்னும் நன்ருகச் சோதிக்கவேண்டுமென்று கருதி ஒரு நாளாவது காமபோகத்தைக் கொடாமற்போனதுமன்றித் தம்முடைய கிழத்தன்மையால் விகாரமுற்ற தேகத்திற் பெருவியாதியையும் வருவித்துக்கொண்டார். அவர் தேகமானது அந்தக் கொடிய வியாதியினுல் அழுகிக் குளுகுளுத்து, புண்கள் வெடித்துச் சீழ்வடிந்தும், ஒரு புறத்தில் புழுக்கள் மொய்த்துத் துர்க்கந்தம் வீசியும் மகாகோரமான ஸ்திதியை அடைந்தது. அப்பொழுதும் அவள் அருவருக்காமல், அவர் உடம்பைத் தேய்த்துக் குளிப்பாட்டுகிறதும் புழுக்களையெல்லாம் எடுத்து அப்பாற் போட்டு அந்தச் சீழ் முதலியவற்றைத் தன் வஸ்திரத்தினுல் துடைக்கிறதும், அவர் போஜனம் பண்ணின பாத்திரத்திலிருக்கும் சேஷங்களுடனே தா னுண்கிறதும், அவருடைய பாதமுதலிய அங்கங்களை வருத்தந்தீரப் பிடிக்கிறதுமாகப் பணிவிடைசெய்து வந்தாள். ஒருநாள் அவர் திண்கலத்திலே தமது பெருவிரலற்றுவிழச் செய்தார். அவள் நாற்றமாய்க் கிடந்த அவ் விரலை எடுத்துப்போட்டு, அக் கலத்திலேயே மிகுந்த அன்னபனுதிகளை அன்போடு புசித்தாள். அம்முனிவர் இவைகளை யெல்லாம் பார்த்து மனதில் மிகுந்த ஆனந்தத்தை அடைந்திருந்தாலும், இன்னமும் பார்ப்போம் என்று வெளிக்கு அவளைத் திட்டுகிறதும் கோபித்துக் கொள்ளுகிறதும் உதைக்கிறதும் அடிக்கிறதுமாகவே இருந்தார். அப்படியிருந்தும் அந்த மாது மணங்கோணுமல் நடந்தாள்.

இப்படி நடந்துவருநாளில் ஒருநாள் அந்த வைதிகரானவர் தம்மனைவியை நோக்கி, "அடி பெண்ணே! நான் உன்னைக் கலியாணம் பண்ணுவதற்கு முன்னே ஒரு வியாதியு மில்லாமற் சுகமாயிருந்தேன். துர்பாக்கியவதியான உன்னைக்கலியாணஞ் செய்தபின்பு

இக்கொடிய வியாதியினால் வருந்துகிறதுமன்றி, நினைத்தபோது தீர்த்தங்களுக்கும் க்ஷேத்திரங்களுக்கும் போகக்கூடாமல் இங்கேயே கிடக்கவேண்டிய தாயிற்று. என்னசெய்வேன்? இது என் தலைவிதி. அடி பாபிஷ்டி! உன்னைத் தெரியாமலன்றோ விவாகஞ் செய்தேன்" என்று கண்ணீருதிர்த்துக்கொண்டு விசனப்பட்டார். அதைக்கேட்ட அக்கற்புடைய மாதுசிரோமணியானவள் "ஓ சுவாமி! நீர் ஏன் விசனப்படுகிறீர், நான் மகா பாபிஷ்டிதான். இந்த வியாதிக்கு மாத்திரம் நானொன்றுஞ் செய்யமாட்டாமற் போனாலும், மற்றெல்லாவாகிய பணிவிடைகளுக்கு ஒன்றுங் குறைவில்லை. ஆகையால் தயைசெய்து தேவரீருக்கு எவ்விடத்துக்குப்போக மனமிருக்கிறதோ அதை அடியாளுக்குத் தெரிவித்தால், அவ்விடத்திற் றங்களைக் கொண்டுபோய் விடுகிறேன். தேவரீருக்குதவாத என் தேகமும் பிராணனும் இவ்வுலகத் திருந்தென்ன லாபம்? சுவாமி! தங்கள் கருத்துக்கியைய நான் நடந்துகொள்ள வேண்டிய பணிகட்குக் கட்டளை யிடவேண்டும்" என்று வணங்கிக் கும்பிட்டுக் கேட்டாள். அதற் கந்த முனிவர் "அடிபெண்ணே! என்னைத் தீர்த்தங்கள்தோறும் கொண்டுபோய் ஸ்நானம்பண்ணி வைக்கவேண்டும்" என் றுரைத்தார். அப்படியே அந்த ஸ்திரீயானவள் அவரை ஒரு கூடையி லெடுத்துத் தலையில்வைத்துக்கொண்டு தீர்த்தயாத்திரை போகும்போது, ஒரு பட்டணத்திற் போய் அம்முனிவரை இறக்கினாள்.

அவ்விடத்தி லிறங்கிய முனிவர் "ஓ பெண்ணே! நான் ஒரு வஸ்துவினிடத்திலே ஆசைப்பட்டேன். அது எனக்கு இலேசிற் கிடைக்கமாட்டாதே, என்னசெய்வேன்" என்று விசனப்பட்டார். அதைக்கேட்ட அவள் "சுவாமி! அது என்ன வஸ்து? அவ்வஸ்து எவ்வகைப்பட்டதாயினும் எனக்குச் சொன்னால் என்னாற் கூடியவரையில் பிரயாசைப்பட்டுக் கொண்டுவந்து கொடுக்கிறேன்" என்று சொல்ல அந்தத் தபசி "அதை யுனக்குச்சொல்லு வேனானால் உன்மனதிற்கு மிகவும் வருத்தமுண்டாகும். கடைசியில் நிறைவேறமாட்டாது. நான் அதை உன்னிடம் சொல்லி என் வாக்கை வீணாக்கமாட்டேன்" என்றார். அந்த ராஜபுத்திரி "சுவாமி! உம்முடைய மனதுக்கு இஷ்டமாயிருப்பது என் மனதுக்கு விரோதமா யிருக்க மாட்டாது. ஆதலால் அதைத் தயை செய்து சொல்லுவீரானால், அஃது எப்படிப்பட்டதாயினும் அதை முடிக்கிறேன்" என்றாள். அதற்கவர் "பெண்ணே! இந்தப்

பட்டணத்திற் கிழக்கு வீதியில் ஒரு வேசி இருக்கிறாள். அவள் அரம்பையோ? ஊர்வசியோ? இரதியோ? என்று சந்தேகப்படத் தக்கவளா யிருக்கிறாள். அவளைப் பார்த்தது முதல் யான் அவள் மீது மிகுந்த மையல் கொண்டேன். மையல் தலைக்கேறிற்று. எனக்கு அன்னபானங்கள் கூட வெறுப்பாயிருக்கிறது. விசாரிக்கு மளவில் அவள் ஒரு இராத்திரிக்கு நூறுபொன் வாங்குகிறவளாம். எனக்குப் பொன்னுமில்லை. அப்பொன் னிருந்தாலும் அவளைப் போகிக்கும்படியான தேகமுமில்லை. இப்படிப்பட்ட காரியம் எவ் விதமாக முடியும்'' என்று மௌத்கல்யர் சொன்னார்.

அந்தப் பதிவிரதை தீர்க்காலோசனை செய்து, நல்லதென்று மனதில் ஒருதீர்மானத்தை யடைந்து, அந்த வேசியின் வீட்டுவாசலை விடியற் காலையிலே போய் நன்றாய்மெழுகி, விசித்திரமாகக் கோல மிட்டு, அவர்க ளெழுந்திருப்பதற்கு முன்னமே வந்து விடுவள். இப்படியாகச் சிலநாள் செய்துவரும் போது, அவ்வீட்டு வேலைக் காரிகள் தங்களுடைய வேலையை யாரோ செய்து போகிறார்கள் என்று ஆச்சரியப்பட்டுத் தாசிக்கு அறிவித்தார்கள். அவளும் பார்த்து மிகவும் வியப்படைந்து, “ஆ! ஆ! நமது வீட்டிற்கு வந்து யாரிப்படிசெய்வது? அவர்களை எவ்விதத்திலேனுங் காணவேண்டும்'' என்றிருக்கும்போது ஒருநாள் அந்த வேலைக்காரிகள் பதுங்கியிருந்து, விடிவதற்கு முன்னே மெழுகிக்கோலமிட்டுக்கொண் டிருந்த இந்தப் பெண்பிள்ளையைக் கண்டு, உடனே தங்கள் யசமானிக்குத் தெரி விக்க, அவள் ஓடிவந்து இந்த முனிமனைவியைப் பார்த்து, “அம்மா! மஹாலட்சுமியைப்போ லிருக்கின்ற நீர் யார்? என் வீட்டுக்கு நீர் பணிசெய்வதேன்? இது உமக்குத் தகுமா? தேவஸ்திரீகளும் பணி விடை செய்யத் தகுந்த மஹாதேஜசுடனே விளங்குகிற நீர், என்ன பயனைக்குறித்து எனக்கு ஏவல்செய்யப் புகுந்தீர்? என்ன வெண் ணங்கொண்டு அடியாளுடைய வீட்டைப் புனிதமாக்க வந்தீர்? அதனைத் தயை செய்து சொல்லம்மா'' என்று வணங்கிக் கேட்க, அதற்கு அந்த வைதிகன் மனைவி மகிழ்ந்து, “இப்படி நீ என்னிடத் திற் காரணமின்றி அன்புவைத்தபடியே என்னிஷ்டத்தையும் நிறைவேற்றுவாயானால் யான் சொல்லுவேன்'' என்றாள். அது கேட்ட அந்த விலைமாது, “அம்மா! என்னாற் செய்யத்தகும் ஊழியத்திற்குத் தடையொன்றுமில்லை. ஆதலால் ஐயமில்லாமற் கூறலாம்'' என்ன, முனிமனையாள், “அம்மா! என் கணவர் மகானுபாவர், சகலகலைகளு மறிந்தவர். தபோமகிமை வாய்ந்தவர்.

அவருக்குச் சிலகாலமாய் நான் புரிந்த தீவினையாலே குஷ்டவியாதி சம்பவித்தது. அவர் தீர்த்தயாத்திரையாய் இவ்வூருக்கு வந்த விடத்தில் உன்னைக் கண்டு, மன்மதன் போருக்கு வாணுளைக் கொடுத்துவிட்டு மயங்கி இருக்கின்றார். அவரது மயக்கத்தை உன் முகவிலாசத்தினுல் தீர்த்துக் காப்பாற்றித் தரவேண்டும்" என்று மிகவும் வேண்டிக்கொண்டாள். அவ் விலைமாது அவை யனைத்தையுங் கேட்டு, இதென்னமோ காரணந் தெரியவில்லை, என்று யோசித்துச் "சரி நல்லது உமது பாக்கியம் எனக்கு மாகட்டும் அழைத்துக் கொண்டு வரும்" என்றாள்.

அது கேட்ட நாளாயினி சந்தோஷத்துடன் விரைவிற் போய் இச்செய்தியைத் தன் புருஷனுக்குத் தெரிவித்து, அவரைக் கூடையிலே வைத்துக்கொண்டு வந்து தாசிவீட்டுக்குத் தலைக்கடையில் விட்டாள். அவர் "பெண்ணே நீ தெருவிலிரு; நான் கூப்பிடும் போது ஓடிவா" என்று சொல்லித் தெருக்கதவை மூடிக்கொண்டு, மன்மதனை நினைத்து, ஒருக்ஷணநேரத்திலே அவனழகைப் பூண்டு உள்ளே சென்றார். அந்தத் தாசியும் மன்மதன்போல் விளங்கு மிவரைப்பார்த்த மாத்திரத்திற் பிரமித்து மோகித்து, தன்மனதில் ஒன்றுந்தோன்றாமற் சிறிது நேரம் ஸ்தம்பித்து நின்று யோசித்து, அப்பால் சந்தோஷித்து ஓடிவந்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு சகலவித உபசாரங்களுஞ் செய்து, தேவேந்திரனுடைய சபை யைப்போல் அலங்கரிக்கப் பட்டிருந்த தன்படுக்கை யறைக்குள் அழைத்துக்கொண்டுபோய்க் காமனுடைய பூஞ்சோலையை யொத் திருந்த ஹம்சதூலிகா மஞ்சத்தின்மீது இருத்தி, நானுவித காமோ பசாரஞ்செய்து, அவருடைய சரீரத்தை இறுகக்கட்டி முத்த மிட்டு, "என்சாமி! உம்மை உம்முடைய மனையாள் ஏன் குஷ்ட வியாதி பிடித்தவரென்று உரைத்தாள்? அவள் பரிஹாசமாகச் சொன்ணுளோ? தாங்கள் என்னை யொருபொருளா யிச்சித்து இங்குவர நானென்ன தவஞ் செய்தேனே? இப்படிப்பட்ட பாக்கியத்தை யா னெளிதிற் பெறச்செய்த அந்தப் பாக்கியவதி யாரோ? வலுவில் வந்து எனக்குக் கற்கண்டையும் சர்க்கரைப்பாகையு மூட்டினுளே! தன்னுயிரையும் பாக்கியத்தையும் கொடுத்தவளுக்கு நானென்ன பிரதியுபகாரஞ் செய்யமாட்டுவேன்? என் கண்ணாளரே, உம்மைக் குற்றமுடையவராகச் சொல்ல அவளுடைய நாவெப்படி துணிந் ததோ?" என்று கொஞ்சிக் குலவி ஆலிங்கனஞ் செய்து காமக்களை தாங்கினுள். இக்கபடமன்மதன், "ஓ தாசிகுலமணியே! யானொரு

காரணத்தினால் அவள் கண்ணுக்கு வியாதியுடையவன் போல் தோற்றுகிறேன். ஆதலால் அவள் அவ்வாறு உரைத்தாள். இந்த இரகசியத்தை நீ வெளியிடாதே. அப்படி நீ வெளியிடுவாயானால் உன் சிரசு வெடிக்கும்" என்று உரைத்தார். அதற்கவள் "சுவாமி! அப்படியே யாகட்டும்; உம்முடைய கருத்துக்கு நான் மாறுபட்டு நடக்க மாட்டேன்" என்று சொல்லிச் சிலநேரம்வரையில் அவருடன் மதன சாம்பிராச்சியவைபவ ஐசுவரியத்தை அனுபவித்தாள். பின்பு அவர் அவளை வேண்டி விடை பெற்றுத் தலைக்கடையில் வந்து, மன்மதனுக்கு அவன் ரூபத்தைக் கொடுத்துத் தமது கொடிய வியாதியை மீண்டு மடைந்து, கதவைத்திறந்து பெண்ணே யென்று மெலிந்த குரலுடனே கூப்பிட்டார். அம்மாத்திரத்திலே இந்தப் பதிவிரதையானவள் சுவாமீ யென்று ஓடிவந்து, அவரைக் கூடையில் உட்கார வைத்துத் தூக்கிக்கொண்டு வருகிறாள்.

இப்படி வழிநடந்து கொண்டிருக்கும் போது, கிருஷ்ணபக்ஷத் திராக்காலமாகையாலும், ஆகாயத்தில் மேகங்கள் சூழ்ந்து கொண்டு இடி முழக்கத்துடனே தூறலைச் சொரிந்திருந்த படியினாலும், வழிதெரியாமல் அலைந்து, இராஜாவின் ஆக்கினையினாலே கழுவிலேற்றப்பட்டிருந்த மாண்டவிய ரென்னு மகா முனிவரிருந்த விடஞ்சேர்ந்து, அவர் பாதங் கூடையிற் படச்சென்றாள். அப்படிப் பட்டமாத்திரத்தில் அவருக்கு நோய் அதிகமாகித் திடுக்கிட்டு, கண்ணை விழித்துப் பார்த்து; தம்மை யிடித்துக் கொண்டு சென்றவள் இப்பெண்பிள்ளை யென் றறிந்து "பொழுது விடிந்தவுடனே உனது மாங்கில்யம் அறக்கடவது" என்று சபித்தார். இச்சாபத்தைக் கேட்ட ரிஷபத்தினியானவள் "இவர் யாரோ ஒரு பெரியவர்; இவர் சாபத்திற்கு என்ன செய்யலாம்" என்று நினைத்து "பொழுது விடியாமற் போகக்கடவது" என்று சொன்னாள். இப்படி இப்பதிவிரதையானவள் கூறியபடி எட்டுநாள் வரையில் பொழுதுவிடியாம லிருந்தது. அதனாலே உலகமெல்லாம் தொந்திரவடைந்துநிற்கத் தேவர்கள் இச்செய லுண்டானதற்குக் காரண மின்னதென் றறிந்துகொண்டு மாண்டவிய மகாமுனியிடத்துக்குப் போய், "சுவாமி! இதென்ன காரணமோ உலகம் அலைகிறதே: பொழுதுவிடியும்படி கிருபைசெய்தல் வேண்டும்" என்று பிரார்த்திக்க முனிவர் "என்னாலொரு விரோதமு மில்லை. ஒரு பதிவிரதையினுடைய மகிமையால் இப்படி நேரிட்டது. ஆகையால் அவளைக் கேளுங்கள்" என்று சொன்னார்.

அது கேட்ட தேவர்கள் இப்பதிவிரதையைக் கண்டு, " தாயே உலகம் வருந்துகிறது. அவ் வருத்தந்தீர அனுக்கிரகம் செய்தல் வேண்டும். இப்போது உம்மை யல்லது வேறுகதி யில்லை, ஆதலால் உயிர்களின் மீது இரக்கம்வைத்துக் காப்பாற்றும் " என்று பிரார்த்திக்க, அந்தப் பதிவிரதை, " ஓ தேவர்களே ! நீங்கள் சொல்வது சரிதான். என் மாங்கில்யத்தை இழக்க நானே முயல்வது நியாயமா சொல்லுங்கள் " என்று கேட்க, அதற்குத் தேவர்கள் " ஓ அம்மணி! இவ்வுலகத்துள் உத்தமராயினோர் தாம் எவ்வித வருத்த மடைந்தாவது பலருக்கும் நன்மைசெய்வதே நன்று. இது உமக்குத் தெரியாததன்று " என்று சொல்ல, அவள் " மெய்தான், ஆயினும் எதை இழந்தாலு மிழக்கலாம். புருஷனை இழப்பது ஸ்திரீகட்கு நலமல்லவே " யென்றாள். அப்பால் அத்தேவர்கள் அவள் கணவனாகிய மௌத்கல்யரைப் பிரார்த்திக்க, அவர் " அவளாலேயே அது தீரவேண்டும் " என்று சொல்லிவிட்டார். உடனே அவளைவேண்டி மாண்டவிய ரிடத்துக்கு அழைத்துக் கொண்டு போய், " சுவாமி ! இவ்விலக்குமி மாங்கில்ய மிழக்காதிருக்கும்படி அனுக்கிரக செய்யும் " என்று வேண்டினார்கள். அவரும் அப்படியே பிரதி சாபமளித்தார். பின்பு இவளும் பொழுதுவிடியும்படி சொன்னாள். உடனே பொழுது விடிந்தது. உலகமெல்லாம் பூஜை - நைவேத்தியம், ஸ்நானம், சந்தி, செபம் - தபமுதலிய யாகங்களுடனே மங்களகரமா யிருந்தன.

இப்படிப்பட்ட இவளுடைய பதிவிரதத் தன்மையை இந்த மௌத்கல்யரானவர் பார்த்துச் சந்தோஷித்து, " பெண்ணே ! இவ்வளவுகாலம் நீ வருந்தியும் கற்பில் வழுவாதிருந்தமையால் நான் சந்தோஷப்படுகிறேன். நான் இப்போது காணப்படுகிறபடி குரூபியனல்ல, குஷ்டரோகி யல்ல; மூப்பனுமல்ல; உன்னை நான் எப்படிப்பட்ட கிரீடைசெய்து சந்தோஷிப்பிக்க வேண்டுமோ? அப்படிப்பட்ட வரத்தைக் கேள் " என்று சொன்னார். அதற்கு அவள் " சுவாமி ! தாங்கள் அடியாளிடத்தில் அனுக்கிரம் வைத்துக் கட்டளை யிடுகிறபடியினாலே விண்ணப்பஞ் செய்கிறேன். அதாவது, தேவரீரே ஐந்துருபமா யிருந்துகொண்டு என்னைப் போகிக்கவேண்டும். மறுஜனனத்திலும் நீரே என்னை விவாகஞ்செய்து அநுபவிக்க வேண்டும். இதுதான் எனக்கு வேண்டிய வரம் " என்று கேட்டாள். அதற் கந்த முனிவர் உன்மனதின் படியே பின்னால் நடக்குமென்று சொல்லி, இத்தனைகால வருத்த

மும் ஒரு நாளையச் சுகத்துக்கு ஈடாகாதென்று சொல்லும்படி சிலகாலம் அவளைப் போஷித்திருந்து அவர் சொர்க்கலோக மடைந்தார். இந்தப் பதிவிரதையும் அநுமரணஞ் செய்து பதியுடன் போய்ச் சேர்ந்தாள்.

பின்பு அவள் இந்திரசேனை யென்னும் பெயருடையவளாகி, தன் புருஷனாகிய அம் முனிவருடனே மேருவின் சிகரங்களிலும், நந்தன வனங்களிலும், சூரியலோகத்திலும், சந்திரலோகத்திலும், இன்னும் அனேக போகஸ்தானங்களிலும், காமரூபியாகிய தன் கணவனுக்கு எந்த வேளையி லெந்தவடிவெடுத்துக் கொண்டு கூடவேண்டுமோ அந்த வேளையில் அந்தப்படியே கூடி, நெடுங்காலம் வெகுபோகங்களையெல்லா மனுபவித்துக்கொண் டிருந்தாள். பின்பு அந்தப்புருஷன், "பெண்ணே! இனி யெனக்குப் போகத்தில் வெறுப்புண்டாயிற்று. ஆதலால் மேலாகிய பரப்பிரம்ம யோகத்திற் பிரவேசிக்க மனதுண்டாயிருக்கிறது. யான் கானகஞ் சேருகிறேன்" என்று சொன்னார். அப்போது அந்தப்பெண் "ஓ என்னுயிர் போன்ற நாயகனே! உம்மைவிட்டு ஒரு நிமிஷமும் பிரிந்து உய்வேனோ? பூவையர்க்குப் புருஷனல்லாது வெறுகதி யுண்டோ? ஆதலால், நான் உம்மை விடமாட்டேன்" என்று மோகத்தாற் றடுத்தாள். முனிவர் கோபங்கொண்டு, "அடி, நீ என்னை தவத்திற்குச் செல்லவொட்டாமற் றடுக்கிறாய். ஆனபடியினாலே நீ மானிட யோனியிற் பிறந்து ஐந்துபேரை விவாகஞ் செய்யக்கடவாய்" என்று சொல்லிவிட்டுத் தவத்திற்குச் சென்றார். இந்தப் பெண்பிள்ளையும் அன்னபானாதிக ளிழந்து, வெயில் காற்று மழை முதலிய துன்பங்களை யெல்லாம் சகித்துக்கொண்டு பரம சிவனைக் குறித்துத் தவஞ்செய்யத் தொடங்கினாள்.

இப்படிச் சிலகால மிவள் தவஞ்செய்துகொண் டிருக்கும்போது அந்த உருத்திரமூர்த்தி பாலசந்திரனும் கங்கையும் புனைந்த செஞ்சடைமுடியும் திருநீற்றால் அலங்கரிக்கப்பட்ட திருமேனியும் அக்கினிபோ லொளிரும் நெற்றிக் கண்ணும் மான், மழு, சூலம், அபயவரதம் இவைகள் தரித்த நான்கு திருக்கைகளும், மரகதப் பாவைப்போல் விளங்கும் ஈசுவரியுடனே வெள்ளிமலைபோன்ற விருஷபவாகனத்தின் மீதேறி, சிவகணங்களெல்லாரும் சத்திரசாமராதிகள் போட, சிவயோகிக ளெல்லாரும் உருத்திரங் கோஷித்துத் துதிக்க, மகா வைபவத்துடனே தவஞ்செய்யும் இப்பெண்

னுக்கு முன்வந்து நின்றார். உடனே இவள் காணாத காக்ஷியைக் கண்டவள்போற் பேரானந்தக்கடலில் மூழ்கி எழுந்து, அநேக பிரதக்ஷணங்களோடு சாஷ்டாங்கமாக நமஸ்காரங்கள் செய்து நின்று, "ஓ சுவாமி! ஓ சங்கரனே! ஓ சகலலோக நாயகனே! ஓ எல்லாம் படைத்தளித் தழிக்குங் காரணப்பொருளே! ஓ வேதங்கள் துதிக்கும் அறியவித்தகனே! ஓ எட்டுத்திருமேனியாய் விளங்குகிறவனே! ஓ மகாதேவனே! ஓ ஞானனந்தமயவடிவினனே! ஓ மலைமகள் பங்கனே! ஓ பத்தர் பெருமானே! ஓ கருணைக்கடலே! ஓ எனது முற்பவத்துத் தவப்பயனே! உமது திருவடித் தாமரைகளுக்குச் சரணம். இவ்வுலகத்தில் யாதொரு கதியுமற்ற அடியாள் பெற்றபேறு யார்பெறுவார்கள்? ஆ! ஆ! என்னபாக்கியஞ் செய்தேன்? இன்றல்லவோ என்னின்மிக்கா ரில்லாத தன்னியை யாயினேன். என் பஞ்சேந்திரியங்கட்கும் பயன்கள் பலித்தன. ஓ பரஞ்சோதியே! ஓ சிருட்டி திதி சங்கார திரௌபவானுக்கிரகமூர்த்தியே!" என்று இருகரங்களையுஞ் சிரமேற் கூப்பித் துதித்துப் பிரார்த்தித்தாள். பரமசிவன் மந்தஹாசத்தினாலே அமுதந்தங்கிய பவளக்கிண்ணம்போன்ற தமது திருவாய் மலர்ந்து, "பெண்ணே! நின் தவத்தினாலே மிகவுங் களித்தேன். உனக் கென்னவேண்டும் கேள்" என்று அருளிச்செய்தார்.

உடனே இந்திரசேனை மகிழ்ந்து, "சுவாமி! தேவரீரைத் தரிசித்ததினாலே சகல பாக்கியங்களும் பெற்றேன். இதைவிட வேறு என்ன வேண்டும்? தேவரீரைக் காணும்பொருட்டன்றோ யோகிகளெல்லாரும் மெய்வருந்திப் பலகாலம் தவஞ்செய்கின்றனர். ஆதலா லிப்படிப்பட்ட அரியகாக்ஷி எளிதினி லெனக்குக் கிடைத்ததே போதும். ஆயினும் சுவாமிகள் தயைசெய்து வேறு வரமளிக்கத் திருவுள்ளமுடையவரா யிருந்தால், எனக்குப் புருஷ பாக்கியமொன்றே தரவேண்டும்" என்னும் பொருள்பட, ஐந்து தரம் 'பதிந்தேகி' என்று பிரதி யுத்தரஞ்சொன்னாள். சுவாமியும் அதைக்கேட்டு, "குழந்தாய்! அப்படியே உனக்கு மானிட தேகத்தில் உத்தமமான பிறப்பு கிடைக்கும். அப்பிறப்பிலே தேவராஜனது மகிமையையுடைய ஐந்து மகா புருஷர் உனக்குக் கணவராவார். அவர்களைச் சேர்ந்து நீ தேவர்களுக்கு மிகவும் அநுகூலமாகிய காரியம் செய்வாய்" என்று வரமளிக்க, தவப்பெண்ணாகிய இந்திரசேனை அச்சிவனைப் பார்த்து, "சுவாமி! நான் ஒரு கனை

வனையன்றோ வரித்தது. அப்படியிருக்க அடியாளொருத்திக்குக் கணவர் ஐந்து பேர் எப்படி உண்டாவார்கள்" என்று கேட்க, சிவபிரான் "பெண்ணே! நீ ஐந்துதரம் என்னைப் பதிந்தேகி என்று கேட்டபடியினாலே, அப்படியே உண்டாகும்படி அனுக்கிரகஞ் செய்தேன்" என்று சொன்னார்.

அதற்கு இந்திரசேனை "எனது கடவுளே! முன்னம் சாஸ்திரங்களிலே பெரியோர்கள், பெண்பிள்ளைகள் ஒரு புருஷனையே விவாகஞ்செய்ய வேண்டியதென்றும், ஆண்பிள்ளைகள் அனேக பெண்களை விவாகஞ் செய்யலாமென்றும், அந்தப்பெண்கள் புருஷர்களுக்குக் கீழ்ப்படிந்து உபசாரஞ்செய்து வரவேண்டுமென்றும் தரும நிச்சயஞ் செய்திருக்கிறார்கள். அன்றியும் ஒரு ஸ்திரீயானவள் ஜன்மாந்தர வினையினால் நேரிடும ஆபத்துக்களில் நியோகமென்னும் ஓர் விதியினாலல்லது, இரண்டாவது புருஷனைச் சேர்ந்தால் உபாயப் பிராயச்சித்தமும், மூன்றாவது புருஷனைச் சேர்ந்தால் மகாபிராயச்சித்தமும் விதித்துச் சேர்த்துகொள்ளலாமென்றும், நான்காவது புருஷனைச் சேர்ந்தால் அவள் பதிவிரதையாதலால் அவளுக்குப் பிராயச்சிதம்செய்து சேர்த்துக்கொள்ளக் கூடாதென்றும், ஐந்தாவது புருஷனைச் சேர்ந்தால் அவள் பந்தகீ என்று சொல்லப்படுவதால் அவளுக்குப் பிரயாச்சித்தமேயில்லை என்றும், அவள் வேசிக்குச் சமானமானவளென்றும், காலத்தைப்பற்றியும் - தக்கபடி பிராயச்சித்தங்களை விதித்திருக்கிறார்களே! அதுபோல் உலகத்திலும் பலபுருஷரை மகளிர் தழுவுதலைக் காட்டிலும் இழிந்தசெய்கை வேறுகூறப் படவில்லையே, இப்படியிருக்கத் தேவரீருடைய் கிருபையென்னும் ஊன்றுகோலைப் பெற்ற நான், அந்தக் கொடிய துஷ்டச்செய்கை யென்னுங் குழியில் வீழலாமோ? ஆதலால் அப்படிப்பட்ட சங்கடம் நேரிடாமலிருக்கவேண்டும்" என்று பிரார்த்திக்க, சுவாமியானவர் "பெண்ணே! நம்முடைய வாக்கில் வந்ததற்கு இரண்டாவ தில்லை. ஆனால் நீ அஞ்சவேண்டாம். நீ ஐவரை விவாகஞ் செய்துகொள்வதை உலகத்தில் யாரும் நிந்திக்கமாட்டார்கள்" என்று அருளிச் செய்தார். மறுபடியும் அவள் "சுவாமி! அப்படியானால் அந்த ஐந்து புருஷர்களுக்கும் என்னுடைய சங்கம காலந்தோறும் கௌமார வயதே இருக்கும்படி அனுக்கிரகிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தாள்.

அதுகேட்ட பரமேஸ்வரன் "ஓ குணவதி! நல்லது அப்படியே நீ ஜன்மாந்தரத்தில் விசேஷமான ரூபமும், குணமும், மேன்மையும் போகமும் அடைந்து மகானுபாவையாவாய். அதோ அந்தக் கங்காநதியிற்போய் மூழ்கி எழுந்து, எந்தப் புருஷனைக் காண்கிறாயோ அவனை என்னிடத்திற் கழைத்துக்கொண்டு வா" என்று கட்டளையிட்டார். அவள் அக்கட்டளையைச் சிரமேற் கொண்டு, சுவாமியைப் பிரதக்ஷணம் வந்து தெண்டனிட்டு, அருகிருந்த கங்கையில் மூழ்கினாள். அப்போது சுவாமி மறைந்து விட்டார். இம்மைப் போகத்தை விரும்பிய பூங்குழலாள் நதியின் மூழ்கி எழுந்து சுவாமியைப் பார்த்தாள். அப்பொழுது அவரைக் காணுமையாலே திகைத்துக் கோவென்று கதறி அழுதுகொண்டிருந்தாள். அவளழுத கண்ணீர்த்துளி கங்கையில் விழுந்து, விசித்திரமாகிய பொற்றாமரை மலராகிப் பூத்திருந்தது. அந்தக் காலத்தில் தேவர்கள் நைமிசாரணியத்தில் ஒரு யாகம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். அந்த யாகத்துக்கு யமன் சாமித்திரமென்னும் ஆர்த்து விச்சியத்தைச் செய்துகொண் டிருந்தான். அதனாலே பூமியில் மனிதர்கள் பெருகி விர்த்தியாய் ஒருவரை யொருவர் மதிக்காம லிருந்தார்கள். அதுகண்ட இந்திரன், வருணன், குபேரன் முதலாகிய தேவர்கள் பிரமதேவ னிடத்திற்குப் போய், "சுவாமி! இஃதென்ன தேவர்களுக்கெல்லாம் அபாயகாலம் நேரிட்டதே" என்று முறையிட்டுக் கொண்டனர். அந்தப்பிரம னிவர்களைப் பார்த்து "என்ன பயம் உங்களுக்கு" என்று கேட்க, "இறக்குந் தன்மையையுடைய மனிதரெல்லாம் பிறவியற்ற தேவர்களுக்குச் சமானராகித் தேவர்களைப் பொருட் படுத்தாம லிருக்கிறார்கள். இதுதான் எங்களுக் குண்டாகிய பயம்" என்று தேவர்கள் சொல்ல, "தேவர்களே! இதற்குப் பயப்படவேண்டாம். யமன் சாமித்திரத்தி லிருக்கிறபடியினாலே மனிதர்களுக்கு ஆயுள் வளர்ந்திருக்கிறது. அது முடிந்தவுடனே அவர்க ளெல்லாரும் நாசமடைவார்கள். அன்றியும் அந்த யமனுடைய தேகமே உங்களுடைய சத்தியோடு கூடி இவர்களுக்கெல்லாம் நாசகாரணமாகப் போகிறது" என்று பிரமதேவன் சொன்னார்.

அதுகேட்ட இந்திரன் முதலிய தேவர்கள் மறுபடியுந் திரும்பி மற்றைத்தேவர்கள் யாகஞ்செய்திருந்த விடத்துக்கு வந்து ஓரிடத்திலுட்காந்திருக்கும்போது அவ்விந்திரன் முதலாயினோர் அந்தக் கரையிலிருந்த விசித்திரமான தாமரைமலரைக் கண்டார்கள்.

அதைக்கண்டு ஆச்சரியமடைந்த அத்தேவருள் இந்திரனை வன் கங்கைக் கரையில் வந்து அங்கே அழுதுகொண் டிருந்த இந்திரசேனையையும் அவளுடைய கண்ணீர்த்துளி கங்கைநீரில் விழுந்து பொற்றாமரையானதையும் நோக்கி மிகவும் வியப்படைந்து, "ஓ மின்னலுக் கொப்பாகிய பாவாய்! நீயார்? இங்கு ஏன் வந்தாய்? ஏதுக்குக் கண்ணீர் சொரிகிறாய்? இவை யெல்லாந் தெரியச்சொல்வாய்" என்று கேட்க, "நான் யாரோ எந்தக்காரியத்திற்கு இவ்விடம் வந்தேனோ, அவைகளைப் பிறகு நீரே விவரமாயறிந்து கொள்வீர், என்னுடனே வாரும்" என்று அப் பெண்பிள்ளை சொல்ல, இந்திரனும் அவ்வாறே அவளோடு சென்று அங்கொரு மலையின்மீது ஞாயிறுபோன்று விளங்கிக்கொண்டிருந்த ஒரு மகாபுருஷனைக் கண்டான். அந்த மஹாபுருஷன் அந்த அம்மனுக்கொப்பாகிய ஒரு ஸ்திரீயுடனே அந்தமலையின்மீதிற் சிம்மாசனத்தி லுட்கார்ந்து பாச்சிகை யாடிக்கொண் டிருக்க, தேவேந்திரனானவன் மூன்றுலோகங்களுக்கும் இராஜனாகிய தன் னைக்கண்டு அவன் மரியாதை செய்யவில்லையென்று கோபங் கொண்டு, "ஆரடா நீ? நான் திரிலோக நாதனாயிருக்க, என்னைக் கண்டவுடன் மரியாதை செய்யாமல் இறுமாப்புடனிருக்கிறாய்" என்று கேட்க, அந்த மகாபுருஷன் புன்னகையுடன் தனது கடைக்கண்ணால் இந்திரனை நோக்கினார். அவர் நோக்கம் பட்ட மாத்திரத்திலே இவன் ஸ்தம்பித்து நின்றான். பிறகு சற்று நேரம் ஆடிக்கொண்டிருந்து பாச்சிகை யாட்டம் முடிந்தவுடனே அழுதுகொண்டிருந்த பெண்ணைநோக்கி "அவனை இங்கு அழைத்து வா" என்று சொல்ல, அவளும் அவனைத் தொட்டமாத்திரத்திலே அவன் அங்கங்கள் தளர்ந்து கீழே விழுந்து பணிந்தான்.

அப்படிப் பணிந்த இவனை மனிதனைப்போன் றிருந்த பரமசிவ னவர் "ஓ இந்திரனே! இனிமே லிப்படிச் செருக்கடைந்து பேசாதே! அடா மூடா! இதோ இந்தக் குன்றைப் புரட்டு. அதில் உன் பெருமையைக் காட்டுகிறேன்" என்றார். அவ்வானவர்கோன் அந்தப்புருஷனைச் சாக்ஷாத் ஈஸ்வரனென்னும், அந்தவம்மனை பார்வதிதேவி யென்றும் அறிந்து தன் செருக்கழிந்து, அவர் சொற் படி அக்குன்றைப் புரட்டினான். பரமன் "அடா இந்திரா! இந்தப் பிலத்தைப் பார்" என்றார். அவனும் அந்தப் பிலத்தில் மகாதேஜஸுடைய நான்கு இந்திரரைக் கண்டு, "ஓ! ஓ! நமக்குக்கூட இப் படிப்பட்ட கதிவந்து நேரிட்டதே!" என்று விசனப்பட்டான். பின்பு

சுவாமியானவர் "அப்பா தேவர்கோனே! நீ மதத்தினாலே என்னை அவமதித்தாய் ஆகையால், இவர்களுடனே நீயும் இந்தக் குகையில் இரு" என்று கட்டளையிட்டார். அதற் கிந்திரன் பயந்து, காற்றினாற் குலுக்கப்பட்ட அரசஞ்சருகுகள்போற் குலுங்கி, விடவிடத்த அங்கத்துடனே கைகளைக் கூப்பிக்கொண்டு, "ஓ சுவாமி! அடியேனுக்கு இத் தண்டனையே போதும் இனிவேறு தண்டனை வேண்டாம்" என்று வேண்டிக்கொள்ள அதற்கு உருத்திரதேவன் "அது கூடாது, உன்னைப்போலே இவராலும் சில காரியங்கள் நடத்த வேண்டி யிருக்கிறபடியினாலே இவர்கள் இந்தக் குகையிற் புகுந்திருக்கின்றனர். ஆதலால் நீயு மிவரோடு கூடச் சேர்ந்திரு" என்று சொல்லி, "இதோ இந்தப்பெண் உங்கள் ஐவருக்கும் பாரியையாவாள். நீங்களெல்லாரு நர ஜன்மமெடுத்துத் தேவராலுஞ் சாதிக்கக்கூடாத சில காரியங்களை முடித்து, அநேகரை ஸம்ஹாரஞ் செய்து சிறந்த கீர்த்திபெற்று, வானவராலுங் கொண்டாடப்பட்டு மறுபடியுஞ் சொர்க்கலோகஞ் சேருவீர்கள். இப்படி நடக்கவேண்டியது அவசியமா யிருக்கிறபடியால், நாம் இவ்வாறு உரைத்தோம்" என்று சொன்னார்.

அப்போது முன்னே சிறைபட்டிருந்த நால்வரும் ஈசனை நோக்கி, "எதனாலே எங்களுக்கு இச்சிறை நீங்குமோ அந்த ஜனனத்தை நாங்க ளடைகிறோம். ஆனால் தருமராஜனும் வாயுவும் இந்திரனும் அச்சுவினி தேவர்களும் மானிடப் பிறவியை அடையும்போது, நாங்களும் அவர்களிற் சேருகிறோம்" என்றார்கள். இந்திரனும் "தேவகாரியத்திற்காக என்னுடைய அம்சத்தினாலே ஒரு புருஷனை இந்த ஐவரி லொருவனாகத் தருகிறேன்" என்றான். மகாதேவன் அவர்க ளிஷ்டப்படியே செலவுகொடுத்து, அவர்களுக்கு நாயகியாயிருக்கச் சம்பத்தென்னும் லட்சுமியைப் பூமியிற் பிறக்கும்படி செய்தார். அவள் இவர்களோடு கூடவே வாக்குக்கு மனதுக்கு மெட்டாத மகிமையையுடைய நாராயணமூர்த்தியினிடத்திற் செப்ப, இச்செய்தியை அவரும், அப்படியே அங்கீகரித்து, தம்மிடத்தி லிருந்த நரனென்பவரை இவர்களி லொருவராகும்படி கட்டளை யிட்டார். அவர்களெல்லாரும் அப்படியே பூமியிற் பிறந்தார்கள். அந்த விஷ்ணுவானவர் தமது திருமேனியினுள்ள வெளுத்தகேச மொன்றை எடுத்துப் பூமியிற் போக்கினார். அவைதான் யாதவ குலத் துதித்த வசுதேவருடைய பாரியைகளாகிய உரோகிணி கருப்பத்திலொன்றும், தேவகி கருப்பத்தி

லொன்றுமாகப் பிரவேசித்து, பலராமனும் கிருஷ்ணனும் அவதரித்தன. இப்படி அந்த இந்திரரெல்லாரும் யமன் முதலான தேவர்களுடைய ஸ்வரூபத்திற் கலந்து பாண்டவர்களாகப் பிறந்தார்கள். அந்த இந்திரனுடைய அம்சமாகிய புருஷன் தான் அர்ச்சுனன். அவனிடத்திலேதான் நரனுடைய அம்சங் கலந்தது. அந்த லட்சுமிதான் முந்திய இந்திர சேனையிற் கலந்து, அவர்களுக்குப் பாரியையாகத் திரௌபதை யாயினள்.

அப்படி இலட்சுமியின் அம்சம் மில்லாவிட்டால், யாகத்தின் முடிவில் அக்கினியினின்றும் புறப்படுவாளா? சூரிய சந்திரரைப்போன்ற பிரகாசமிருக்குமா? இப்படிப்பட்ட பாக்கியங் கைகூடுமா? சற்குண மிருக்குமா? சண்பகப்பூவாசனை இவளங்கத்தினின்றும் ஒரு காததூரம் வீசுமா? ஓ துருபதமகா ராஜனே? உன்னிடத்திலிருக்கும் பிரீதியினாலே உனக்கு ஞானநேத்திரத்தைத் தருகிறேன். முன் தேகத்தோடு கூடிய இந்தப் பாண்டவர்களையும் திரௌபதியையும் பார்" என்று சொல்லித் தம்முடைய தபோமகிமையாலே அந்த ராஜாவுக்கு ஞானநேத்திரங் கொடுத்தார். அந்தப் பாஞ்சாலராஜன் வியாச ரருளினாலே இவ்வைந்து பெயரும் தேவதேகங்களோடு தேவர்க்குரிய காந்தியடைந்து, பிரகாசமுள்ள பொற்கிரீடங்கள் தாங்கி, பொற்றாமரை மாலை தரித்து, உயர்ந்தும் பருத்து மிருக்கிற தேகமுள்ளவர்களாய்த் தேவலோகப் பட்டுடுத்து இந்திரரூபமாய் விளங்குவதைக் கண்டான். அந்தப் பெண்ணும் அப்படியே இலக்குமியைப்போ லிருக்கக்கண்டான்; இப்படிப் பார்த்தமாத்திரத்திலே, அதிக வியப்புஞ் சந்தோஷமும் ஆனந்தமு மடைந்து, அருகிலிருந்த மகானுபாவரான வியாச மகாமுனியின்து திருவடித்தாமரைகளிலே கிரீடகாந்தி சேர்ந்து குலவக் கீழேவிழுந் தெழுந்து கைகூப்பி நின்று, "சுவாமி! தேவரீரிடத்தில் இது ஒரு அதிசயமன்று. தேவரீருடைய மகிமைக் கடலிற் சகல விசித்திரமும் விளங்கிக் கொண்டிருக்கின்றது" என்று வாழ்த்தித் துதித்தான். அந் மகாரிஷியும் அனுக்கிரகத்துடனே பின்னும் அந்த ராஜனைப்பார்த்து, "ஓ இராஜனே! இது போன்ற சில சரித்திரங்களையும் சொல்லுகிறேன் கொஞ்சம் கேளும்:—

---

## வியாசர் சில சரிதங்களால் பாஞ்சாலனைத் தேற்றுதல்

முற்காலத்தில் நிதந்து என்று ஓர் இராஜரிஷி யிருந்தார். அவருக்கு மகாபலசாலிகளாகிய ஐந்து குமாரர்கள் பிறந்தார்கள். அவர்களுடைய பெயர் சால்வேயன், சூரசேனன், சுருதசேனன், திந்துசாரன், அதிசாரன், என்பவை. இவர்கள் தருமநிலையுடையவர்கள். ஆதலால் ஒருவருடன் ஒருவர் நட்புக்கொண்டு அதிக்கிரமிக்காம லிருந்தார்கள். இப்படியிருக்க உசீநகரதேசத்துச் சக்கிரவர்த்தியாகிய சிபியென்னு மகாராஜன் தன்மகளாகிய பௌமாசுவி என்பவளுக்குச் சுயவரம் ஏற்படுத்தினன். அதற்கு எல்லாதேசத் தரசர்களோடு இந்த நிதந்துராஜன் மக்களும் வந்தார்கள். அந்தச் சுயவரமண்டபத்திலே சிபிராஜ குமாரியானவள் இவ்வைந்து குமாரர்களையும் இச்சித்தாள். அப்படியே அந்த ஐவரும் விவாகஞ் செய்துகொண்டார்கள். அவளுக்கு ஐவராலும் ஐந்து மைந்தர்கள் பிறந்து விளங்கினர்கள். அதனலே உலகத்தில் சால்வேயா ளென்றும் சூரசேனளென்றும் சுருதசேனளென்றும் திந்துசாராளென்றும் அதிசாராளென்றும் ஐந்து க்ஷத்திரிய குடும்பங்கள் தோன்றி, அப் பெயரையுடைய தேசங்களை ஆண்டுவந்தார்கள். இப்படி ஒருபெண் ஐவர்க்கும் மனைவியாகி மகாதருமநிலையி லிருந்து கீர்த்திபெற்றுள். ஆகையால் உன் மகளும் பாண்டவர்களை விவாகஞ்செய்து பதிவிரதா மகத்துவத்துடனே விளங்கட்டும். உன் மனதிற் சந்தேகம் வேண்டாம்" என்று சொல்லி மறுபடியுஞ் சொல்லுகிறுர்—

கௌதமகுலத்திற் பிறந்தஜடிலரென்னும் ஒருவருடைய மகள் மகா தருமநிலையுடையவள். அவள் மஹானுபாவர்களாகிய ஏழு ரிஷிகளை விவாகஞ்செய்து கொண்டாள். இன்னும் தக்ஷருடைய மகள் மாரிஷையென்பவள் பிரதேசர் என்கிற பெயரையுடைய சகோதரர்களாகிய பத்து ரிஷிகளை விவாகஞ் செய்துகொண்டாள். மற்றும் ஓர் காரணங்கேள்: முன்னே தபோவனத்தில் ஒரு ரிஷியினுடைய மகள் ரூபவதியாய் மங்கைப் பருவத்தை யடைந்திருந்தாள். தனக்குத் தகுந்த புருஷன் வேண்டுமென்று ஐந்துமுகத்தையுடைய சதாசிவமூர்த்தியைக் குறித்துத் தவஞ்செய்யும் போது, அவர் பிரத்தியட்சமாகி "உனக்கு என்னவேண்டும்" என்றுகேட்க, அவள் "மிகவும் யோக்கியனுகிய புருஷனைத் தரல்வேண்டும்" என்று இரந்தாள். அதற் கவர் "உன்மனத்துக்குத் தக்கவராகிய ஐந்து புருஷர்க ளுண்டாவார்கள்" என்று சொன்னர். அவள் "சுவாமி சுந்தரனே! நான் ஒரு நாயகனை யாசிக்க, தாங்கள் ஐவரைத் தந்த

விதமென்ன ?" என்று கேட்டாள். "நீ எமது ஐந்து முகத்தையுங் காதலித்தமையால் அப்படியே ஐந்து புருஷரைக் கொடுத்தேன்" என்று பகவான் சொன்னார். ஒ துருபதமகாராஜனே! அந்தப் பெண் உன்மகளைப்போல் தவஞ்செய்த பாக்கியவதி. இவளும் சொர்க்கலோக ஐஸ்வரிய லட்சுமிதான். மேலும் துரோணரைக் கொல்ல ஒரு புதல்வனும் பாண்டவரைச் சேர ஒரு புதல்வியும் வேண்டுமென்று, நீ தவஞ்செய்தபடியால் இப்படித் திரெளபதை பிறந்தாள். இவைகளை நன்கு யோசித்துப்பார். தெய்வ சங்கற்பத்தால் இவளை ஐந்து புருஷர்கள் அனுபவிக்க வேண்டியதாயிருக்கிறது. ஆதலாற் புத்தியை விசாலப்படுத்திப் பார்" என்று புகன்றனர்.

இப்படிச் சொல்லிய வியாசபகவானைத் துருபதமகாராஜன் கும்பிட்டு, "சுவாமி! தேவரீர் வார்த்தையைக் கேட்பதற்கு முன்னமே பாண்டவர்களைவர்க்கும் என்பெண்ணை விவாகஞ்செய்விக்க நான் சித்தமாயிருந்தேன். தேவரீர் வாக்கினாலே சகல பந்துக்களும் யானும் அவளுடைய பூர்வஜனன முணர்ந்து சமுசயம் நீங்கினோம். தெய்வ சங்கல்பத்தைக் கடக்க யாவரால் முடியும்? அவரவர் கருமத்திற்கு மாறுபாடுண்டோ? இதற்காக எத்தனையோ காரணங்கள் தேவர்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. தருமமானாலும், அதருமமானாலும், தெய்வத்தின் மூலமாய் வந்ததை நாம் அனுபவித்தே தீரவேண்டும். ஆதலால் குந்திபுத்திரரைவரும் என் மகளைப் பாணிக்கிரகணஞ் செய்யட்டும்" என்று சொல்லிவிட்டு, அந்த வியாசமுனிவருடன் கூடித் தனது சபாமண்டபத்திற்கு வந்தான்.

பின்பு அந்தச் சபையிலிருந்த குந்திதேவி, பாண்டவர்கள், த்ருஷ்டத்தூய்மன் முதலானவர்களெல்லாரும் தாங்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டிருந்த பேச்சை நிறுத்திவிட்டு, யாவரும் பயபக்தியுடனே கைகட்டி நின்றார்கள். அம்முனிவர் எல்லாரையும் உட்காரும்படி நியமித்துத் தருமபுத்திரனை நோக்கி, "குழந்தாய்! நீங்களைவரும் இந்த இராஜகுமாரியைக் கலியாணஞ் செய்யவேண்டியதாய்த் தேவநிபந்தனை யேற்பட்டிருக்கிறது. உங்கள் மாதாவாகிய குந்திதேவியின் வாக்கும் அவ்வாறே ஆயிற்று. ஆகையால் இனித் தாமதம் வேண்டியதில்லை. இப்போது சந்திரன் உரோகிணி நட்சத்திரத்தோடே கூடுகிறான். இந்தத் திவ்யமான நாளிலே உங்கள் புரோகிதரை முன்னிட்டுக்கொண்டு, க்ஷத்திரிய

தர்மத்தை யனுசரித்து, சாஸ்திரவிதியின்படி நீங்க ளைவரும் திரௌபதையை விவாகம் செய்து கொள்ளுங்கள்" என்று நிய மித்தருளினர். அந்தத் தபோநிதி சொல்லிய வார்த்தையைக் கேட்ட சபையிலிருந்த அனைவரும் "தாங்கள் சொன்னதே உண் மை, நாங்களும் இக்காட்சியைக் காணவேண்டும், இதை நினைக்கும் போதே எங்கட்கு அடங்கா மகிழ்ச்சி யுண்டாகின்றது" என்று ஆரவாரித்தார்கள். அந்தக் குந்திமக்களுள் தருமராஜன் வியாச மஹாமுனிவரை வணங்கிக் கைகூப்பி, "அப்படியே! சுவாமி பாக்கி யம் ஆகுக" என்று தொழுது, "எங்களுக்குத் தர்மா தர்மங்களை நியமித்தருளுங் குலகுருவானவர் தேவரீ ரன்றோ? எங்க ளைவர்க் கும் மனதில் தோற்றியபடியே எங்கள் மாதாவின் அருள் வாக்கும் கிடைத்தது. ஆயினும் எங்கள் மனதிற் கொஞ்சம் கவலை யிருந்தது. அந்தக் கவலையாகிய இருள் தேவரீருடைய திருவாய் மொழி யென்னும் பெரிய தீபத்தினலே துரத்தப்பட்டது. பெரி யோர்களுடைய சம்மத மெதுவோ அதுவே பெரிய தர்மம். அவர் கட்குச் சம்மத மில்லாதது யாதாயினும் தர்மமன்று. இதுவன்றோ சாஸ்திரங்களின் திரண்டகருத்து? ஆதலால் பரசுராமன் தன் பிதா வாகிய பிருகுமகா முனியின் சொற்கேட்டுத் தாயைக் கொன்றன். இராகவனும் விசுவாமித்திரன் சொல்லுறுதியினல் தாடகையைக் கொன்றன். இனிச் சந்தேகமில்லை. சுவாமிக ளிட்டருளிய கட்டளை யின்படி நிறைவேற்ற இதோ காத்திருக்கிறேன்" என்றுசொன்னர். அதுகேட்ட வியாசமகாமுனிவர் பாஞ்சாலராஜனைப் பார்த்து, "அரசனே! கலியாணத்திற்கு வேண்டியதெல்லாஞ் சீக்கிரம் ஜாக் கிரதையாய்ச் சேகரியும்" என்று செப்ப, அவனும் "சுவாமி! அடியேனல் எள்ளளவும் தடையில்லை. முன்னமே விவாகத்திற் காக எல்லாஞ் சித்தப்படுத்தி யிருக்கிறேன். இன்னு மேதாவது சேகரிக்கவேண்டியதும் ஒரு நிமிஷத்திலே தருவிக்கிறேன்" என்று சொல்லித் தன் குமாரனை அழைத்து, "நம்முடைய பெண்ணுக்கு மங்கலஸ்நான முதலியவைகளையும் வேதிகாலங்கிருத முதலிய வைகளையும் சீக்கிரத்தில் நடத்தவேண்டும்" என்று கட்டளையிட்டு வியாசரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு சபையைவிட் டெழுந் திருந்தான். பராசரர் புத்திரரும் பாண்டவர்களுக்கு விடை கொடுத்து எழுந்தருளினர். உடனே சபையிலிருந்தவர்களும் எழுந்தார்கள்.

திரௌபதை மாலையிட்ட சருக்கம் முற்றிற்று

## 10. திருமணச் சருக்கம்

சேயபங்கயச் சிறுவிர லங்கையிற் றிரட்டிய நறுவெண்ணெய்
ஆயர்மங்கைய ரிடவிட் வமுதுசெய் தாடிய திருக்கூத்து
நேயமுங்குற் முறுவலும் புரிந்துபார்த் தருளிய நெடுங்கண்ணு
மாயவன்றிரு வடிவமு மழகுமென் மனத்தைவிட் டகலாவே.

### திரௌபதையின் திருமணம்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இவ்வாறு வேத வியாசர் விளக்கிக் கூறியவாறு விரைவில் நடத்த வேண்டுமென்று பாஞ்சாலராஜன் தனது குமாரனுக்கும் அமைச்சர்கட்கும் அறிவித்தமாத்திரத்தில், அவர்கள் தமது பட்டணத்திலும் இதரதேசத்திலுமுள்ள சகல பந்துக்களுக்கும் சிநேகிதர்களுக்கும் பிராமண உத்தமர்களுக்கும் நானாஜாதிப் பெரிய மனிதர்களுக்கும் திருமண வோலை விடுத்தார்கள். அவரவர்கள் விநோதமாகிய வஸ்திராபரணங்களைத் தரித்துக்கொண்டு, சந்தோஷத்துடனே பாஞ்சால நகரம் வந்து சேர்ந்தார்கள். அப்போது அனேகங் குதிரைகள் யானைகள் தேர்கள் சிவிகைகள் முதலான வாகனங்களாலும், அந்தந்தத் தேசங்களிலிருந்து வரும் வரிசைகளாலும், எண்ணிறந்த ஜனங்களாலும், பட்டணத்திற்குப் புறத்திலிருந்த சகல விடங்களும் நிறைந்து, பேரோசைகளினாலே சமுத்திரம்போலவும், சகல போகபாக்கியங்களினாலே தேவலோகம குபேரலோகம் போலவும் விளங்கிற்று அப்பாஞ்சால நகரம். மேலும் நானாவிதமாக அலங்கரிக்கப்பட்டு சகல மங்கலவாத்தியங்களும் முழங்க விளங்கும் அப்பட்டணமானது, தனது நாயகனாகிய துருபதமகாராஜனுக்கு மகளாயிருக்கப்பட்டவள் தனக்கும் மகளாகையாலே, அவளுடைய விவாகத்துக்குத் தானே அலங்கரித்துக்கொண்டு கலியாணத்திற்கு வருகிறவர்களைச் சந்தோஷத்துடனே எதிர்கண்டு உபசரிப்பதுபோ லிருந்தது. சகல ஜனங்களும், பாண்டவர்களுக்கும் திரௌபதைக்கும் நடக்கும் திருக்கல்யாணத்தைத் தங்கள் வீட்டுக் கல்யாணமாகவே நினைத்து, உற்சாகத்துடன் மனக்களிப்படைந்து; இலக்கினத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். இப்படிப் பட்டணமெல்லாம் அலங்கரித்தவுடனே, மறுபடியும் அரண்மனையையும் கலியாண மண்டபத்தையும் விசித்திரமான வஸ்திரங்களாலும், கண்ணாடிகளாலும் பூமாலைகளாலும், அகிற் புகையினாலும், பொற்றோரணங்களாலும், புதுக்கினார்கள். அவைகளெல்லாம் நாம் இந்தப் புண்

ணிய புருஷர்களுடைய திருமணத்தைக் காணப் பெற்றோமே என்று சந்தோஷ மடைந்திருப்பதைப்போற் பிரகாசித்தன. அம்மண்டபத்தி னடுவிலே விவாக வேதிகை செய்து பொற் றகட்டினு லலங்கரித்து, சுருக்கு - சுருவம் - சங்கு பாத்திரம் - தர்ப்பைகள் - பொறிகள் - அக்ஷதைகள் - முதலான சுபவஸ்துக்களாலே நிறைத்து, புரோகிதர்கள் சிறந்தவேதியர் கூட்டத்தோடு நிறைந்திருந்தார்கள். பாண்டவரும் தமது புரோகிதரை அழைப்பித்துச் சமாவர்த்தனஞ் செய்துகொண்டு அனேக வஸ்திரங்கள் - பசுக்கள் - சொர்னங்கள் முதலியவைகளை வேதியருக்குவழங்கி, மங்கலஸ்நானஞ் செய்து, நவரத்தினங்க ளிழைத்த குண்டலமுதலிய ஆபரணங்களையும் விலையுயர்ந்த பட்டுவஸ்திரங்களையும் அணிந்து, பரிமளமிகுந்த கந்தமாதிகளைப் பூசிக்கொண்டு, புஷ்பசரங்களும் புனைந்து மணவாளக் கோலத்துடனே விளங்கினுர்கள். அப்போது திரௌபதைக்குக் கோகிலாதேவி முதலானவர்கள் வேதியரைக்கொண்டு மங்கல ஸ்நானமும் சாந்தியுஞ் செய்வித்து அவ்வேதியர்கட்குப் போஜனங்களாலும் தக்ஷிணைகளாலும் திருப்தியுண்டாக்கி, அவர்களுடைய ஆசீர்வாதத்தினுற் சிறந்து விளங்கும்படியான அப்பெண்மணிக்குக் கேசமுதற் பாதம்வரைக்கும் ரத்னுபரணங்களினுலே அலங்கரித்தனர்.

அந்தக் கலியாணப் பெண்ணுனவள்; ஒரு பொற்கொடியானது ரத்தனமயமான பூங்கொத்துக்களினுல் வளங்கெழுமியது போல விளங்கினுள்; அன்றியும் பௌர்ணமியின் இராத்திரியானது தீபங்களினுல் ஒளிர்வதுபோலு மிருந்தனள். கனக சித்திரஞ்செய்து மினுமினுக்கிட்ட வெண்பட்டு வஸ்திரத்தை இவளுக்குடுத்தியது, எவ்வாறிருந்ததெனில், பொற்சிறகினையுடைய அன்னங்கள் சூழ்ந்து விளங்கிய கங்காநதியானது ஆசாரவீனர்களாற் றனக்கு நேரிட்ட அசுசியை நீக்கிக்கொள்ளும் பொருட்டு மகாபரிசுத்தையாகிய இவள் தேகத்தைக் கட்டிக்கொண்டதுபோல் இருந்தது. பரிமளமிகுந்த மெல்லிய புஷ்பங்கள் பலவும் இவள் இயற்கைவாசனையோடுங் கூடியசரீர மென்மைக்குத் தோற்றனவென்று புலவர்கள் மதிக்கும்படியாக, அம்மலர்களை நாரினு லிறுகக்கட்டி அவள் முடியிலுங் கழுத்திலுஞ்சூட்டிச் சிறைசெய்தார்கள்.

இப்படிக் கெல்லாம் சிங்காரிக்கப்பட்ட பாஞ்சால கன்னிகையைப் புரோகித் பத்தினிமுதலாகிய பிராமணப் பெண்களுடனே கோகிலாதேவி முதலிய க்ஷத்திரிய சுமங்கலிகள், கந்தபுஷ்ப தாம்

பூல முதலிய மங்கல வஸ்துக்களுள்ள பொற்பாத்திரங்களை ஏந்திக் கொண்டு, அழகிய கலியாணப் பாடல்களைப்பாடி, சகல தேவஸ்திரீ களும் லட்சுமிதேவியைச் சூழ்வதுபோற் சூழ்ந்து, வாத்தியங்களும் சங்கீதங்களும் முழங்க அன்னமும் நாணும்படி நடந்து அந்தப்புரத் தினின்றும் கலியாணமண்டபத்திற்கு அழைத்து வந்தனர். இப்படி திரௌபதையை அனேகஞ்சுமங்கலிகள் சூழ்ந்து வருந்தோற்றமெவ் வாறிருந்ததெனில், ஆகாயத்தின்க ணிறைந்த மின்னல்களானவை இவளுடைய தேககாந்திக்குத் தாங்கள் தாழ்ந்தமையாலே விசேஷ சமயத்திலே இவளிடத்திற் சேவகம் பண்ணியேனும் அனுக்கிரகம் பெறவேண்டு மென்று பூமியி லிறங்கி வந்து, சஞ்சலத் தன்மையை விட்டு இவளைச் சூழ்ந்ததுபோ லிருந்தது. அன்றியும், அளவற்ற ஸ்திரீஜனங்கள் மலிந்த அந்தக் காலியண மண்டபமானது அப் ஸரஸுக்கள் விளங்கிய இந்திரன் சபைக்கு நிகராயிருந்தது.

இவ்வாறு கலியாணப்பெண்ணை விவாகச்சபைக்கு அழைத்துக் கொண்டுவந்து நிறுத்திய வுடனே தௌமியர் முதலிய அனேகமகா முனிவர்களும் ஸ்ரீகிருஷ்ணன் முதலிய அளவற்ற பந்துமித்திரர் களும், புடைசூழ வீற்றிருந்த பாண்டவர்களை, துருபதமகா ராஜன் தன் சுற்றத்தாருடனும் பிராமணர்களுடனும் சகலவித நாதகீத பரதநாட்டிய ஸ்திரீகளுடனும் அவர்களிருக்கும் இடத் திற்குப் போய்த் தகுந்த மரியாதைகளைச் செய்து, பின்புறத்திற் சுவஸ்திவாசனங்களும் முன்புறத்திற் பலவாத்தியங்களும் கோஷிக்க வெகு சிறப்பாய் அழைத்துக்கொண்டு வந்து சபையி லமர்த்தினன். இப்படி இஷ்டஜனங்களும் பந்து ஜனங்களும் நிறைந்து, நட்சத்திரங்களும் மற்றக் கிரகங்களும் பொருந்திய நிர்மல மாகிய ஆகாசம்போலே விளங்கும் அச்சபையில் இவர்களெல் லாருஞ் சேர்ந்த மாத்திரத்திலே; பேரி, காகளம், சங்கு, மிரு தங்கம் முதலிய வாத்தியங்கள் ஏககாலத்தில் எங்குங் கணகண வென்று முழங்கின. இந்த வாத்திய கோஷமானது திரிபுவன முங் கேட்கின்ற மேகத்தொனிபோ லிருந்தது. இவ்விதமான வாத்தியங்களும், சங்கீதங்களும், ஜயசப்பதங்களும், முழங்கிக் கொண்டிருந்த அந்தச் சபாமண்டபத்திலே, வேதிகையைச் சுற்றிச் சகலகலைவல்லவரான பிராமணர்களும், அவர்களைச் சுற்றி இரண்டு வகையான சூரியகுலசந்திரகுல அரசர்களும், அவர்களைச் சுற்றி அவ்வவ்வரசர்களின் பந்துவர்க்கங்களான பலபார்த்திபர்களும், அவர்களைச் சுற்றி மந்திரிகள் சேனைத்தலைவர் முதலான பிரமுகர்

களும், அவரவர்கட்குத் தக்கபடி யமைத்திருந்த ஆசனங்களில் உட்காந்தபின்பு, பாண்டவர்களுடைய புரோகிதராகிய தௌமியமுனிவர் "ஓ துருபதமகாராஜனே! லக்னம் வந்துவிட்டது. விவாகத்துக்குச் செலவு கொடுக்கவேண்டும்" என்று கேட்க அவ்வரசன் "இனி அடியேனாற் செய்யவேண்டிய காரியங்கட் கெதிர்பார்த்திருக்கின்றே னாதலால், தேவரீர் சங்கற்பாதி சற்கிரியா நியதிகளோடு விரிவாகக் காரியத்தைத் தடையின்றி நிறைவேற்றுங்கள்". என்று உத்தரவு செய்தார்.

அதுகேட்ட முனிவர் தருமபுத்திரனை அழைத்துப் பக்கத்தில் வைத்துக்கொண்டு, சபைக்குப் பூசையும் சங்கற்பமும் செய்வித்து, அங்குரார்ப்பணமும் பிரதிசரங்களும் நடத்தி, திரௌபதையின் பாணிக்கிரகணஞ் செய்வித்து, பெரியோர்களால் ஆசீர்வாதஞ் சொல்லிவைத்து, பின்பு அவ்வேதிகையில் அக்கினியின் உபசமாதானஞ் செய்து, விதிப்படி ஹோமம் வளர்த்து, தருமபுத்திரர் கையினால் அந்த ராஜகுமாரிக்கு மங்கலசூத்திரந் தரிப்பித்து, வேதியருடைய ஆசீர்வாதமும் வேதவாத்தியமு முழக்குவித்தார். பின்பு புரோகிதருடைய ஆக்கினையினாலே தருமபுத்திரர், அந்தக் கன்னிகையினுடைய கையைப் பிடித்துக்கொண்டு, அக்கினிவேதிகையை வலமாக வந்து, மந்திரத்துடனே அம்மி மிதித்து, அருந்ததி தரிசித்தார்; பின் சூரியன் மேருபருவதத்தை வலம் வருவதுபோல் அஷ்டமங்கலத்துடன் வலம் வந்து உட்காந்துகொண்டு, அப்பெண்ணுக்குச் சுமங்கலியத் தன்மை வளரும்பொருட்டுப் புரோகிதருடைய அனுமதியின்படி மந்திரங்களை உச்சரித்துக்கொண்டு, பொரிகளைக் கைகளால் வாரியிறைத்து அக்கினியில் ஹோமஞ்செய்தார். அப் பெண்ணரசியினது கைகளினின்றும் அக்கினியிற் பொரிகள் சொரியும்போது செழித்த தாமரைகளிலிருந்து முத்துக்கள் வீழ்வதுபோ லிருந்தது. இப்படிக்கு ராஜஹோமமும் சப்தபதியும் ஆனவுடனே புரோகிதர் இந்தப் பிள்ளையையும் பெண்ணையும் கோலமணையில் உட்காரவைத்து, மகாசபைக்குச் சந்தன புஷ்ப முதலியவைகளாற் பூசைசெய்து, மங்கல அக்ஷதைகளைப் பெரியோர்கள்கையிற் கொடுத்து, வேதவாக்கியங்களாலே ஆசீர்வாதஞ் செய்வித்தார். சுமங்கலிகளும் மங்கல கீதங்கள் பாடிக்கொண்டு ஆலத்தி முதலானவைகளைச் சுழற்றினார்கள்.

இப்படி விவாகமகோற்சவம் நடந்தவுடனே துருபதமகாராஜன் பிராமணர்களுக்கு வஸ்திரங்களையும், ஆபரணங்களையும், பசுக்களையும், பூமிகளையும், வீடுகளையும் இன்னும் அனேக திரவியங்களையும் தக்ஷிணையாகக் கொடுத்து, பந்துக்களையும், ஆப்தர்களையும் தகுந்த மரியாதையுடனே விசுவாசித்தான். அவன் மனைவியானவள் ராஜஸ்திரீகளுக்கும் பிராமணஸ்திரீகளுக்கும் ஆபரணங்களையும் வஸ்திராதிகளையுங் கொடுத்துப் பூசித்து, சம்பந்திகளையும் உபசரித்தாள். இஃதானவுடனே அரசனானவன், அறுசுவை பதார்த்தங்களோடு பலவகைப் பலகாரவர்க்கங்களும், வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி முதலிய பழவர்க்கங்களுடனும் ஏழைகட்குத் திருப்தியாகும்படி போஜனம் செய்வித்தான். பின்பு சகல சம்பந்திகள், பந்துக்கள், சினேகிதர்கள் முதலான பரிவாரங்களுடனே தான் விசித்திரமாகிய கதைகளைச் சொல்லிச் சிரித்துக்கொண்டே இராஜ போஜனஞ்செய்தான்; அப்பால் எல்லோருக்கும் சுகந்த சந்தன தாம்பூலங்கள் கொடுப்பித்து, சபையில் நிறைந்த அனேகம் பெரியோர்களுடனே சம்பாஷித்துக்கொண் டிருந்தான். சூரியன் அஸ்தமித்தவுடனே புரோகிதர் வந்து பிரவேச ஹோமமும் செய்வித்தார். இப்படியே அடுத்த நாட்களிலே முறையே பீமசேனன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் என்கிற நால்வருக்கும் திரௌபதையை விவாகஞ்செய்வித்து, தினந்தோறும் அனுஷ்டிக்கவேண்டிய ஔபாசனாதிகளையும் சேஷ ஹோமங்களையும் நடத்திவைத்தார்கள். இப்படிச் சிறப்பாக நடந்த விவாகமகோற்சவத்துக்கு வந்த ஆண்பெண்ணென்னும் இருவகைப்பாலராகிய சகல ஜனங்களும், அங் கமைக்கப்பட்டிருந்த அன்னத்தினால் அமிர்தத்தையும்,தானத்தினாற் கற்பகத்தருக்களையும், நிர்த்தகீத வாத்தியாதிகளாற் போகங்களையும், அழகிய ரூபலாவண்ணியத்தாற் கந்தருவர், அப்ஸரஸுக்கள் முதலானவர்களையும், வித்துவத்தினால் தேவகுரு முதலானவர்களையும், ஆசிர்மசிரேஷ்டத்தினால் நாரதர் முதலிய ரிஷிகளையும், வித்தியாசமின்றி ஒத்திருப்பதைக் கண்டு, சொர்க்கலோகத்தில் இவைகளின் மிக்க மகிமை யாண்டுளதென்று கூறி வியந்து ஆரவாரித்தார்கள்.

## இயாகசேனமஹாராஜன் வரிசை கொடுத்தல்

அந்த இயாகசேனமகாராஜன் தன் மருகர்களுக்கு வரிசை கொடுக்க யத்தனித்தவனாய், மிகவும் உயர்ந்த நான்கு குதிரைகள் கட்டிச் சிம்மல லாடமமைத்துப் பொன்மாலைகள் தொங்கவிட்டுச் சித்திரங்கள் ஏற்படுத்தி அழகாய்ச் செய்து மேருபருவதத்திற் கொப்பாயிராநின்ற நூறு தேர்களையும், பத்திரம் - மந்திரம்-மிருகம் என்று சொல்லப்பட்ட ஜாதியிற் பிறந்தவைகளாய் ஏழிடங்களில் மதப்பெருக்கோடு கூடியனவாய்த் தந்தங்களில் நவரத்தினங்க ளிழைத்த கிம்புரிகளோடு சொர்னகவசம் வீக்கிய கும்பமத்தகங் களை வகித்து அனேக சொர்ன ஆபரணங்களாலும் முத்துமாலை களாலும், பட்டுக்களாலும், அம்பாரிகளாலும் அலங்கரிக்கப்பட்டு இருபுறங்களிலும் மணிகள் ஒலிக்க அசைந்து நடந்துவரும் பருவதங்கள் போன்ற நூறு யானைகளையும், காம்போசம், ஆரட்டம், பாக்கிலிகம், வனயுசம், சிந்து முதலாகிய தேசங்களிற் பிறந்த வைகளாய்த் தேவமணி, கண்டாபரணம் முதலாகிய நற்சுழிக ளோடு காற்றுங் கற்க முயலும்படியான அதிக வேகத்தைவாய்ந்து பொன்னாலும் முத்துக்களாலும் நவரத்தினங்களாலும் பவளங் களினாலும் செய்த சேணங்களைப் போர்த்து விளங்கும் ஆயிரங் குதிரைகளையும், நல்லரூபமும் பருவமுமுடையவர்கள் தரிக்கச் சிறந்த அளவற்ற வஸ்திரங்களையும், சிரோரத்தினதிகளாற் செய்த அனேக பூஷணங்களையும், பலதொழில்களைக் கற்றுச் சாதுரியமும் ஜாக்கிரதையுமுடைய யோக்கியர்களாகிய அனேக வேலைக்காரர் களையும், அவ்வாறே பழகிய அளவற்ற அடிமைப்பெண்களையும், முத் துத் தோரணங்கட்டிப் பொற்சரிகைச் சின்னங்களுள்ள பட்டுமேற் கட்டியோடு பவளங்களாலுந் தந்தங்களாலும் பொன் வெள்ளிகளா லுஞ் செய்த அநேகங் கட்டில்களையும், உயர்ந்த மணிக ளிழைத்து மிகவும் மிருதுவாகிய பரிசுத்தமுள்ள தோற்களாற் பண்ணப்பட்ட பெரிய ஆசனங்களையும், பொன்வெள்ளியினால் வார்ப்பித்த படிகங் களையும், தந்தம் இரத்தினம் இவைகளாலாகிய பலவித பாத்திரங் களையும், ஆச்சரியப்படத்தக்க நிர்மாணமுடைய பெட்டி பேழை களையும், பொன்மாலைகளையும், பொற்சங்கிலிகளையும், கொம்புக்குப் பூண்களிட்டு அலங்கரிக்கப்பட்ட அளவற்ற பெரும் பசுக்களையும், பொற்கட்டுகளோடு பென்னுறைகளுமுடைய போர்முகக் கத்தி களையும், பொற்கேடயங்களையும், கதை - வில்- தூணீரம் முதலா

கிய கருவிகளையும், இந்திர தனுவைப் போற் பிரகாசிக்கும் நானாவித ஆபரணங்களையும், பொற்சரிகைகளாற் கரைகட்டிய மேன்மையை யும் பளபளப்பையுமுள்ள சகலவித வஸ்திரங்களையும், இன்னும் அனேக வஸ்துக்களையும் பாண்டவர்களில் ஒவ்வொருவருக்கும் தனித்தனி அளித்து, ரொக்கப் பொக்கிஷப் பணங்களையும் வெவ் வேறு கொடுத்தான்.

அன்றியும் கலியாணத்துக்கு வந்த சகலமானவர்களுக்கும், அவரவர்களுக்குத் தகுந்தபடி வஸ்திராபரணாதிகளைக் கொடுத்து அனுப்பிவித்தான். அவ்வரசன் மகளாகிய திரௌபதையான வள் விவாகமான பின்பு, தன் மாமியாருக்குத் தீர்க்க தெண்ட னிட்டாள். அந்தக் குந்தியானவள் மிகுந்த சந்தோஷத்துடனே மருமகளைப்பார்த்து, கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் பெருக "ஓ என்னருமை மருமகளே! ஓ நிகரில்லாப் பேரழகையுடைய பெண் பாவாய்! ஓ குருவம்சத்தைப் பரிபாலிக்க வந்த கொடிவிளக்கே! தேவேந்திரனிடத்தில் இந்திராணி போலவும், அக்கினி பகாவனிடத் தில் சுவாஹாதேவி போலவும், சந்திரனிடத்தில் உரோகிணிபோல வும், நளமகாராஜனிடத்தில் தமயந்தி போலவும், குபேரனிடத்தில் பத்திராதேவி போலவும், வசிஷ்டமஹாமுனி யிடத்தில் அருந்ததி போலவும், ஸ்ரீமந்நாராயணனிடத்தில் இலட்சுமியைப்போலவும், நீ உன் கணவர்க ளிடத்திற் சிறந்த கற்புடனே அன்புமுடையவளா யிருந்து, நற்குணங்களையும் வீரத்தன்மையையுமுடைய புத்தி ரரைப் பெறக்கடவாய்; மகாபாக்கியங்களையும் போகங்களையும் அடையக்கடவாய். பத்தினியென்னுஞ் சொல்லுக்குத் தகுந்த படி அனேக யாகசம்பந்த மனுபவிக்கக் கடவாய். அதிதிகட்கும் பெரியோர்கட்கும் யோகிக்ட்கும் ஆசாரியர்கட்கும் சிறுவர்கட் கும் பர்த்தாக்கட்கும் அந்தந்தச் சமயங்களுக் கேற்றபடி உபசா ரஞ்செய்து, புண்ணிய காரியங்களிலேயே காலத்தைக் கழிக்கக்கட வாய். குருஜாங்கலம் முதலாகிய தேசங்களிலேயும், அந்தந்தப் பட்டணங்களிலேயும், தருமநிலை தவறாத அரசர்களுக்குப் பட்டாபி ஷேகம் பண்ணிவைக்கக் கடவாய். உன் புருஷர்களாலே ஜயிக்கப் பட்ட சகல சம்பத்து நிறைந்த பூமிகளை, அசுவமேத மென்னும் பெரிய யாகத்திலே ஞானத்தினால் உயர்ந்தோராகிய பெரியோர் களுக்குத் தானங்கொடுத்துக் களிக்கக்கடவாய். தீர்க்க சுமங்கலியா யும் தீர்க்காயுளாயும் உன் கணவர்களுடனே கூடிச் சுகமாக வாழக் கடவாய்" என்று ஆசிர்வாதஞ் செய்தாள்.

இவ்வாறே தன்னைப் பணிந்த மக்களுக்கும் அவள் மங்கல வார்த்தை கூறினாள். அப்பொழுது கண்ணன் பாண்டவர்களுக்கு வேண்டிய வரிசைகள் அனுப்புவித்தார். அந்த வரிசைகளை யெல்லாம் தருமபுத்திரர் கண்டு மகிழ்ந்தார். இஃதன்றியும் அள வற்ற இராஜவர்க்கத்தார் சொரிந்த அசிர்வாதஞ்செய்த தனங்களை யெல்லாம் மொத்தமாக்கி, அந்த நகரத்திற்றானே சொர்க்கலோக போகத்திலும் மேற்பட்ட போகங்களை அனுபவித்துக்கொண்டு, தாயாகிய குந்திதேவியின் திருவுளப்பாங்கின்படி நடந்து வந்தார். பாஞ்சாலியோடு மற்ற சகோதரர் நால்வரிடமும் அன்பு பாராட்டிக் கொண்டு, ஒரு வருஷகாலம் வரையில் மாமனார்வீட்டிலேயே சகல சம்பிரமத்துடன் யாவருங் கொண்டாடச் சந்தோஷித் திருந்தார். இவ்வாறு அவர் அங்கிருந்த காலத்தில் அந்தச் சோமக புத்திரனா கிய துருபதராஜனும் அவனுடைய பத்தினியும் தேவர்களாலும், அசுரர்களாலும் கிஞ்சித்தேனும் பயமில்லாதவர்களா யிருந்தனர். பாண்டவர்களைத் தினந்தோறும் புதியவர் போலவே சகல வைபவ சாம்பிராச்சியங்களினாலே பூசித்துக் கொண்டு வந்தனர். அரச னுடைய புத்திரர் முதலானபேரும் ஒரு நிமிஷகாலமும் பாண்ட வர்களைவிட்டுப் பிரியாமற் பெருமையோடு போற்றி வந்தார்கள். சகல நீதிகட்குந் தாயகமான நாயகரை அடைந்த திரௌபதையை அந்தப்புரத்து ஸ்திரீகளெல்லாரும் மிகவுங் கொண்டாடிப் பெருமை பாராட்டி வந்தார்கள். அப்பாஞ்சால ராஜ புத்திரியும் தனக்குக் கிடைத்த புருஷபாக்கியத்தினாலே அதிக காந்தியுடையவளா யிருந் தாள். அக்குந்தி குமாரர்களும் பாரியை யுடனே கூடி ஒரு வல்லிக் கொடியுடன் சேர்ந்த ஐந்து கற்பகத்தருக்கள் போல விளங்கி னார்கள்.

பின்பு சகலவரசர்களும் சாரணர்களாலே திரௌபதையைப் பாண்டவர்கள் விவாகஞ் செய்து கொண்டார்களென்றும், வில்லை வளைத்துக் கோட்பாட்டை நிறைவேற்றியவன் அர்ச்சுனனென் றும், சல்லியனோடு யுத்தஞ் செய்தவன் பீமசேனனென்றும் சும்மா யிருந்த இராஜாக்களைக் கூட்டிக்கொண்டு யுத்தத்திற்கு வந்த துரி யோதனன் கர்னன் சல்லியன் முதலானவர்களை எதிர்த்து முறிய அடித்து ஓட்டியது இவ்வைவரே யென்றும் நன்றாகத் தெரிந்து கொண்டு, சிலர் சந்தோஷத்தையும், சிலர் துக்கத்தையும், சிலர் ஆச்சரியத்தையும், சிலர் நிந்தையையும், சிலர் விந்தையையும்

அடைந்தார்கள். இன்னுஞ் சிலர் இதென்ன கருமம்? தருமமே பெரிது. இந்தப் பாண்டவர்கள் நல்லொழுக்கமும் நற்குணமும் உடையவர்களாதலாலே யன்றோ அரக்கு மாளிகையினின்றும் தப்பினார்கள். துரியோதனனுடைய எண்ணம் வீணாயிற்று. குந்தி மிகவும் பாக்கியமுடையவளாதலால் பிள்ளைகளுடனே அக்கினிக்கு இரையாகாமல் தப்பி, இவ்வளவு காலம் பிழைத்துச் சிறந்த மருமகளையும் வகித்து விளங்குகின்றாள். பீஷ்மாசாரி அந்தக் குலத்துக்குப் பெரியவராயிருந்தும், சகல தருமங்களையும் அறிந்திருந்தும், இப்படிப்பட்ட கொடியசெய்கைகளைச் செய்த பேரன்மார்களை விசுவாசித் திருக்கின்றாரே, இவருடைய அறிவையும் வயதையும் என்ன சொல்வது? இவரை யல்லாமல் ஓர் குருடன் எல்லாக் காரியங்கட்கு நாயகமாய்க் கண்களைச் சிமிட்டிக்கொண்டு கோட்டான்போ லிருக்கின்றானே: அவனாவது தன் சகோதரனுடைய மைந்தர்களுக்குத் தீங்கிழைத்த துரியோதனாதியரைக் கண்டிக்கலாகாதா? அவனும் அனுகூலசத்ருவாயிருக்கிறானே: இவர்களெல்லாரும் ஏங்கி யழும்படியாக வெளிப்பட்டு, யாவராலுஞ் செயற்கரிய செய்கையைச் செய்து எதிர்த்து வந்த இராஜர்களை யெல்லாம் இமைப்பொழுதில் வாட்டி, அந்தரலோக ஸ்திரீகளும் அடிபணியத் தக்க ரூபலாவண்யமும் கற்புடைமையும் பொருந்திய பெண்ணரசியை விவாகமுஞ் செய்துகொண்டார்கள். இனி, கௌரவர்கள் ஆண்மையுள்ளவர்களா யிருந்தால் அவர்களெல்லாரும் இப்பொழுது நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகவேண்டாமோ? மறுபடி பாண்டவர்கள் முகத்திலும் நம்முடைய முகத்திலும் எப்படி விழிப்பார்கள் அப்பாதகர்" என்று பேசிக்கொண்டார்கள்.

---

## துரியோதனன்முதலாயினோர் ஆலோசனை

---

திரிதராஷ்டிரன் பிள்ளைகளும் இந்தச் செய்தியைக் களங்கமறத் தெரிந்துகொண்ட மாத்திரத்திலே துக்காக்கினியில் வீழ்ந்து தவித்து, பதைபதைத்துத் துடிதுடித்துப் பெருமூச்சு விட்டுப் பதறி ஒன்றுந் தோன்றாமல் நின்று, பின்பு கர்ணன் சகுனி முதலானவர்களுடனே ஆலோசிக்க வாரம்பித்தார்கள். அந்தக்கூட்டத்தில் துரியோதனன் "என் எனது மித்திரர்களே! கேளுங்கள்: பாலியமுதற் பாண்டவர்கள் நம்மை அலக்ஷியஞ்செய்து வந்தபடி

யினாலேயும், இராச்சியப்பட்டத்தை ஆள முயன்ற படியினாலேயும்; நாம் அவர்களை வேரோடு கொல்லவேண்டுமென்று வெகுசமயங்களில் யத்தனப்பட்டோம். அந்தப் பிரயாசை உபயோக மில்லாமற் போயிற்று. பின்பு அவர்களை வாரணாவதத்திற்கு அனுப்பி, அரக்குமாளிகையில் அக்கினிக்கு இரையாகும்படி செய்தோம். அதினின்றும் அவர்கள் எப்படியோ தப்பி வந்துவிட்டார்கள். நாமோ பாண்டவர்கள் அடியோடு மடிந்தார்களென்று சித்தமாக நினைத்து, அந்த அரக்குமாளிகைத்தீயில் அகப்பட்ட ஆறுதேகங்களுடைய எலும்புகளை அவர்களுடைய எலும்பென்றும் அந்தச் சாம்பலை அவர்களுடைய சாம்பலென்றும் எடுத்துவந்து கங்கையிற் போட்டுவிட்டுப் பாண்டவர்கள் இறந்துபோனார்களென்று அனைவருக்கும் தெரிவித்ததுமன்றி; சிராத்தங்களையுஞ் செய்து சத்துருபயமில்லாமல் இராச்சியத்தை ஆண்டுவந்தோம். இப்போது பார்த்தால் ஆச்சரியமாக இருக்கிறது. அவர்கள் எப்படித் தப்பித்துக் கொண்டார்கள்? புரோசனன் எவ்விதம் புத்திகெட்டான்? எவ்விதம் இவர்களைவிட்டான்? எப்படி எரிந்து பட்டான்? ஒருவேளை சொர்க்கத்திலிருந்து வந்து விட்டார்களோ! அப்படி நடக்குமா? அல்லது இவர்கள் பாண்டவர்கள்தானோ? அல்லவோ? ஆனால் இவர்கள் அவர்களே என்பதற்கு எள்ளளவேனுஞ் சந்தேகமில்லையே: பாண்டவர்கள் பிழைத்ததுமன்றி, இவ்வளவு ராஜாக்களையும் அவமானம் பண்ணிப் பெண்களுக்கெல்லாம் சிரோமணி போன்ற பாஞ்சாலன் மகளைக் கலியாணஞ் செய்துகொண்டது நமது கண்ணிலுண்டாகிய புண்ணிற் கோலிட்டதுபோலாயிற்றே. நாம் பிழைத்த பிழைப்புப் போயிற்றே. நம்முடை வீரத்தன்மை என்னத்திற்கு? இனி அவர்கள் மாமனுடைய பலத்தினாலே மிகுந்த சேனைகளோடு வந்து நம்மைச் செயித்து, நம்முடைய கண்களுக் கெதிரே சிறப்பாக அரசாட்சி செய்வார்களே: சும்மாயிருந்தாலும் அபகீர்த்தி; ஒருவரோடு சொன்னாலும் அபகீர்த்தி. ஐயையோ! இனி அவர்களுக்கு நம்மிடத்தில் மிகுந்த பகையுண்டாயிற்றே. என்னசெய்யலாம்? வினைப்பயனை வெல்லப்படாது. தெய்வபலமே பலமன்றி, மனிதபலம் ஒன்றுக்கும் முதவாது. ஆதலால் நாம் எவ்விதத்தில் க்ஷேமம் பெறலாமோ அதை நீங்களே யோசித்துச்சொல்ல வேண்டும்” என்றான்.

அதுகேட்ட சகுனியானவன், " ஓ மகாராஜனே ! உலகத்திலே ஒருவனுக்குப் பல சத்துருக்க ளிருப்பார்கள். அவர்களிற் சிலரை இளைக்கச் செய்யவேண்டும், சிலரை உபத்திரவப் படுத்தவேண்டும், சிலரைக் கொல்லவேண்டும், சிலரை வெல்லவேண்டும், அப்படிக்கு நீதிசாஸ்திரமிருக்கிறது. அந்தப் பாண்டவரோ நமக்குக் கொல்ல வேண்டிய சத்துருக்கள். அன்றியும் அப்பாண்டவர்கள் எல்லா ராஜாக்களுக்கும் அவமானத்தை யுண்டாக்கி யிருக்கிறார்கள். ஆதலால் இப்போது மற்றை ராஜாக்களையுங் கூட்டிக்கொண்டு, நாமும் அவர்களும் ஒருவிதமான நிபந்தனைக்குள்ளாய்ப் பாண்டவருடன் போர்புரிய வேண்டியது அவசிய மென்று எனக்குத் தோன்றுகிறது. இப்படி எல்லோரும் ஒருமித்து ஒரு ஏற்பாடு செய்து கொள்ளாமற் போனால், அப்பாற் பச்சாத்தாபப் படவேண்டியதாக வரும். இந்தக் காலமும் இந்தத் தேசமுந்தான் பாண்டவர்களை நாம் வேருடன் களைவதற்கு யோக்கியமானவைகள். ஏனென்றால் அவர்கள் துர்ப்பலமடைந்து தனித்திருக்கிறார்கள். நீங்கள் இப்போது வெல்லாமற்போனால் உலகத்தில் எல்லாராலேயும் பரிஹாசம் பண்ணப்படுவீர்கள். பாண்டவர்கள் எந்தப் பிடிப்பினாலே போகத்தை அடைந்து, இனி இராச்சியத்தைச் சாதிக்க நினைத்திருக்கிறார்களோ தெரியவில்லை. அந்தப் பாஞ்சாலராஜன், அற்பமாகிய சேனாபலமுடையவனாதலாலே, அவனை நான் லக்ஷியமாக நினைக்கவில்லை. விருஷ்ணி வமிசத்தா ரிரண்டுபே ரிருக்கிறார்கள். இராமனென்றும் கிருஷ்ணனென்றும் சொல்லுகின்ற அவர்களுடைய உதவி இவர்களுக்கு விசேஷந்தான். அவர்கள் இச்செய்தியைக்கேட்டு பாண்டவர்களுக்கு உபபலம் பண்ணுகிறதற்கு முன்னதாய்ச் சகல சேனைகளோடும் நாம் போய்ச் சூழ்ந்துகொள்ள வேண்டும். இப்படிக்கல்லாமல் யாதவகுலத்தோரும் மற்றுஞ் சில அரசர்களும் துருபதனோடு ஒன்றாகிப் பாண்டவர்களுக்குச் சகாயம் பண்ணினால், அப்போது கொஞ்சமேனுஞ் நாம் ஜயிக்கக்கூடாதவராவோம். முன்னமே பாம்பின் வாயிற் புகுந்து தப்பியதுபோல் அரக்குமாளிகையினின்றுந் தப்பியதே நமக்குக் குறைவு. இப்போதும் நாம் யுத்தத்திற்குப் போய் வென்று வராவிட்டால், இப்பூமியில் இருக்கவேண்டிய காரணமில்லை. அன்றியும் அந்த யாதவர்களும் இவர்களுடன் கூடிப் பட்டணம் வந்து சேர்ந்தால் நமது கதி சண்டைசெய்யும். இரண்டு கடாக்களின் நடுவில் நரிநின்று நசுங்கியதுபோ லாவதுமன்றி மேலாகிய கொடிய துன்பத்தையும்

தரும். ஆதலால் பல தேவனுடைய மகாவீரியமுள்ள சேனைகள் நம்முடைய சேனைகளாகிய குருவிகள் மீதில் டேகைபோல் விழாம லிருப்பதற்கு முன்னமே நாம் எதிர்த்து, அந்தப் பாஞ்சால நக ரத்தை அழிக்க ஆரம்பிப்போம். இதுவே இக்காலத்திற் செய்ய வேண்டிய உபாயம் என்று எனக்குத் தோன்றுகிறது" என்று சொல்லி முடித்தான்.

இவ்வாறு யுக்தியில்லாமற் கூறிய சகுனியினுடைய பேச் சைக்கேட்ட சோமதத்தனுடைய குமாரனாகிய பூரிச்சிரவனென வன் சமயோசிதமாகச் சொல்லத் தொடங்கினான்—"கேட்டீர் களோ சபையோர்களே! புத்தியுள்ள புருஷனானவன், தனது ராஜன், மந்திரி, மித்திரன், பொக்கிஷம், தேசம், அரண், சேனை என் கிற ஏழுபிரகிருதிகளையும், பிறனுடைய ஏழுபிரகிருதிகளையும் நன்றாக அறியவேண்டும். காலதேசங்களைக் கண்டறியவேண்டும். அன்றியும் சந்தி, யுத்தம், சேனையுடன் செல்கை, சும்மாவிருத் தல், விரோதஞ் செய்தல், பற்றுதல் என்னும் ஆறுகுணங்களை யும் நன்றாக அறிந்து, எதைச் செய்யலாமோ அதைச் செய்ய வேண்டும். அல்லாமலும் விருத்தி, சமானமாயிருத்தல், குறைவு பட் டிருத்தல் என்னும் மூன்று சித்திகள் இருக்குமிடத்தையும், மித்திரபலத்தையும், பராக்கிரமத்தையும், நன்றாகச்சோதித் தறிந்தபின்பு தன்னிற்றானே சற்று நிதானித்து, சித்தசமுன்னதி, அநுத்தமேலாபம், காமம், வைடம்மியம், அசனப்பிரியம், கோபம், அனுட்டணம் என்று சொல்லப்படுகின்ற, அகங்காரம் உலோபம் விரகம், பகை, போஜனப்பிரியம், காய்தல், சோம்மல் என்னும் இந்த எழுவகை விசனங்களுள், எவ்வித விசனத்திற் பகைவர் அழுந்தி இருக்கின்றார்களோ அதையுங் கண்டு எதிர்க்கவேண்டும். அப்படிக்கில்லாமற் சாகசமாய் எதிர்த்தால், தொந்தரவு கிடைக்கு மென்பதிற் சந்தேகமில்லை. ஏனென்றால், இப்பொழுது பாண்ட வர்கள் மித்திரகுலத்தோடும், பராக்கிரமபலத்தோடும், சேனா பலத்தோடுங் கூடியிருக்கிறார்கள். அவர்களுடைய நற்செய்கைக ளாலே மந்திரி முதலான பேர்களும் இராச்சியத்துக்கு உரியோர் களும், அவர்களிடத்தில் அன்புசெய்து வருகிறார்கள். அவர் களுக்குள் அர்ச்சுனன் மிகவும் சிறந்தவன். அவன்சொல் அயோக் கியமாயும், சம்பந்த மற்றதாயும், பொய்யாயும், எப்போதும் இருக்கமாட்டாது. மேலும் கேட்போர் செவிக்கு இனிப்பாகவே

இருக்கும். அவன் தனது அழகினுலும், சாதுரியத்தினுலும், செய்கையினுலும் எல்லோருடைய கண்களுக்கும் மனதுக்கும் இனிப்பாக விருக்கிருன். ஜனங்களெல்லாரும் அவர்களைத் தங்கள் பிள்ளைகளைப்போல் நினைத்திருப்பதுமன்றித் தெய்வமும் அவர்களைக் காப்பதிற் கண்விழித்துக்கொண் டிருக்கிறது. அந்த அர்ச்சுனனும் பீமன் முதலாயினேரும் ரூபத்தினுல் உயர்ந்திருப்பதற்குச் சரியாகப் பராக்கிரமத்தினுலுஞ் சிறந்திருக்கின்ருர்கள். இப்படிச் சகல லக்ஷணங்களு முடையவர்களாகிய அவர்களை ஜயிக்க நாம் யத்தனப்படுவது தகாததாயிருக்கிறது. மேலும் இப்படிப்பட்ட சௌரியமுடையவர்கள் நமக்குள்ளே யாரிருக்கிருர்கள்? அவர்களிடத்திற் பிரமசக்தியும் மந்திரசக்தியும் சந்திரசக்தியும் உற்சாகசக்தியும் நிறைந்திருக்கின்றன. இவையெல்லாம் அர்ச்சுனனிடத்தில் விசேஷமாகக் காண்கிறது. தருமபுத்திரரோ மூலமந்திர பலங்களைக் காலமறிந்து விடத்தகுந்த சாதுரியமுள்ளவர். அல்லாமலும் சாமதான பேதமென்னு மிம் மூன்று உபாயங்களினுலே பகைவரை வெல்லுஞ் சாமர்த்தியமுள்ளவர். அவரிடத்திலிருக்கிற சாமர்த்தியம் மிகவும் அதிசயிக்கத்தக்கது. எப்படி யென்ருல் அயலாருடைய பொருள்களைக் கொண்டே தம்முடைய மித்திரரையும் சேனைகளையும் மூலஸ்தானத்தையும் உறுதிப்படுத்துக்கொண்டு, சத்துருக்களைச் ஜயிக்கவல்லவர். இதுவுமல்லாம லப்பாண்டவர்களை நாம் ஜயிக்கமுடியா தென்பதற்கு வேறுகாரணமொன் றிருக்கின்றது. அதாவது யாதவகுலத்து அண்ணன் தம்பிக ளிருவரும் இவர்களுடைய காரியத்திற்கு வீரியராயிருக்கிருர்கள். இப்படி எல்லாவழியிலும் உயர்ந்திருப்பதைப் பற்றி, நாம் அவர்களுடனே ஒரு ஏற்பாடு செய்துகொண்டு வந்த வழியைப் பார்த்துப் போவதுதான் எனக்கு நல்லதென்று தோன்றுகிறது. நான் சொல்லுகிறவார்த்தை உங்களுக்கு இஷ்டமாயிருந்தால் இன்னுஞ் சொல்லுகிறேன் கேளுங்கள் :

அந்தத் துருபதன் பட்டணத்தைச் சூழ்ந்துகொண்டு இடிப்போம் அடிப்போம் கொல்லுவோம் வெல்லுவோம் என்று நினைக்கிறீர்களே, அதுவும் கூடாததா யிருக்கின்றது. ஏனென்ருல் அந்த அரசனுனவன் முன்னமேயே நம்மால் ஜயிக்கக்கூடாதவனு யிருந்தான். இப்போதோ பாண்டவர்களுடனே கூடிப் பெருமையடைந்திருக்கிருன். அவனுடைய பிள்ளைகளாகிய த்ருஷ்டத்தூய்மன்

சிகண்டி முதலானவர்கள் மிகவும் சூரர்கள். அஸ்திரவித்தையிற் சக்தியாநுசாரம் பயிற்சியுள்ளவர்கள்; நல்ல புத்தியும் யுக்தியும் உடையவர்கள். இந்த இராஜ்யத்துக்குள்ள இராஜநீதிகளை நன்றாக அறிந்து தங்கள் பிரபுத்துவத்தில் மாறாத அபிமானமுள்ள மந்திரி முதலாகிய அங்கங்களை யுடையவர்கள். அந்தந்தக் காலங்களில் அரசன் செய்வதான சன்மானங்களாலும், அவனது அரசாட்சியின் சீர்மையினாலும், அவன் தேசத்திலும் பட்டணத்திலுமுள்ள ஜனங்களெல்லாரும் மிகுந்த களிப்புடனே ராஜகாரியங்களில் ஐக்கியப்பட்டிருக்கிறார்கள். பலத்த மதில்களாலும், அகழிகளாலும், கோட்டை வாசல்களாலும், புறச்சுவர்களினாலும், அதைச் சுற்றிலும் போட்டிருக்கிற மேடுகளினாலும், பிளக்கக்கூடாத கதவுகளினாலும், ஏமாறாத காவலாளிகளாலும், அந்த நகரமானது சதாகாலமும் காக்கப்பட்டுவருகின்றது. அதில் அயலார் திகைத்துப்போகும்படியான அநேக இயந்திரங்களும், ஆயுதச்சாலைகளும், விஸ்தாரமாகிய வைத்தியசாலைகளும் நிறைந்திருக்கின்றன. நெடுங்காலத்திற்கு உதவத்தக்க தானிய முதலிய உணவுகளும், மற்றும் வேண்டிய உமி, கெந்தகம், நீர், நெருப்பு, வெடியுப்பு முதலிய வஸ்துக்களும்; கோட்டைச் சுவர்க்கூட்டில் நிறைந்திருக்கின்றன. இன்னும் பெரிய பீரங்கிகளும் அனேக மிருக்கின்றன. அக்கோட்டையானது நைஷ்டிகன், தாரவன், விப்பிரன், மானுஷன் என்கிற பிரகார சிற்பிகளாலே மிகவுங் கொண்டாடப்பட்ட நிர்மானமுள்ளது; வெகு சேனைகள் நிறைந்துள்ள வயிற்றினையுடையது; இத்துணைச் சிறப்புப் பொருந்திய அந்த நகரம் எள்ளளவேனும் பேதிக்கக்கூடாத நிலையுள்ளதா யிருக்கிறது. ஆதலால் யுத்தத்தின் பிரயத்தினத்தை விட்டு நட்புச் செய்தல் வேண்டும். மேலும் நாம் யுத்தத்திற்காகச் சித்தமாய் வந்தவுடனே இச்செய்தி துவாரகைக்கு அனுப்பப்படும். உடனே யமதூதருக் கொப்பாகிய சேனைகளைக் கூட்டிக்கொண்டு கண்ணனோடிவருவார், ஆதலால் இது எள்ளளவேனும் எதிர்க்குங் காலமாகத் தோன்றவில்லை; நாம் நட்புச் செய்வதே நமக்கும் மற்றை யரசர்கட்கும் நன்மைக்குக் காரணமாயிருக்கின்றது. இது தான் எனக்குத் தோன்றிய கருத்து. அவசியம் இப்படியே நீங்கள் செய்யக் கோருகிறேன். அப்பா லுங்கள் இஷ்டம்" என்று பூரிச்சிரவன் கூறி முடித்தான்.

இப்படிச் சொல்லிய சோமதத்தனுடைய புத்திரன் புத்தியைக் கேட்ட கர்னன் "ஐயா பூரிச்சிரவனே! நீர் சொல்லிய வார்த்தை நீதியுடனே முரணுமலும், பிரயோசன முள்ளதாகவும், கேட்போருக்கு இதமாகவு மிருக்கின்றது. அதற்கு நான் குற்றம் கூறவில்லை. எனக்குத் தோன்றுகிறபடியே நானும் ஒரு வார்த்தை சொல்லுகிறேன் தயைசெய்து கேட்கவேண்டும். எந்தக் காரியத்திலும் எல்லோரும் மனதொருமித்துச் செய்தால் அது கூடிவரும். இல்லாவிட்டாற் கேடுவரும். ஆனபடியினுலே நாமெல்லோரும் வெவ்வேறு கருத்துக்கொண் டிருப்பது நியாயமல்ல. இந்தக்காலம் அவர்களை எதிர்ப்பதற்கு நல்ல தருணமா யிருக்கிறது. சும்மாயிருப்பதனுற் பயனென்றுமில்லை. நீங்களெல்லோரும் பாகுபல மிகுந்தவர்கள்; ஆயுதபலமுள்ளவர்கள்; புத்தி பலமுள்ளவர்கள்; உற்சாகமுள்ளவர்கள்; ஆதலால் நட்புச் செய்வது நன்றுயிராது. நாம் திடீரென்றுபோய்ச் சூழ்ந்துகொள்ளவேண்டும். யாதவர்களுக்கு இச்செய்தி தெரிந்து அவர்க ளிவ்விடம் வந்து சேருவதற்கு முன்பே, இவர்களை நாசஞ் செய்துவிடவேண்டும். இப்போது நாமெல்லோருங் கூடி செய்யும் முயற்சி இன்னதென்று ஒருவர்க்குந் தெரியாமல், இரகசியமா யிருக்கவேண்டும். காமசுகத்தி லழுந்தியவனும், சிறியவனு யிருப்பவனும், மூப்பினனு யிருப்பவனும், யுத்தஞ்செய்ய மனமில்லாத பயங்காளியும் நம்முடைய படையிற் சேரவேண்டாம். நமது சேனையிற் சேர்ந்து, பகைவரின் யானைகளை யழித்தவனுக்குப் பதினுயிரம்பொன்னும், குதிரைகளைக் கொன்றவனுக்கு ஐயாயிரம்பொன்னும், காலாட்களைக் களைந்தவனுக்கு ஆயிரம்பொன்னும் கொடுக்கிறோமென்று பறைசாற்றித் தெரிவிக்கவேண்டும். ஒருவனும் நமது கட்டளையில்லாமற் போகக்கூடாது. இப்படிக்கெல்லாம் நம்முடைய சேனைகளைச் சித்தப்படுத்திக்கொண்டு, ஏககாலத்திலே நாற்புறமும் மதிலை யிடிக்கும்படி செய்ய வேண்டும். மேடுகளைப் பள்ளங்களாகவும் பள்ளங்களை மேடாகவு மாக்கவேண்டும். மரங்கள் முதலியவைகளை வெட்டி அகழியிற்போட்டு அதைத் தூர்க்க வேண்டும். அந்தப் பட்டணத்தி லிருப்போரெல்லாம் கலங்கித் திகைத்து நிற்கும்படி உட்புகுந்து, கொஞ்சமும் யோசியாமல் வெட்டிச் சுட்டுக் கோட்டைபுகுந்து கொள்ளையிட வேண்டும். இப்படிச் செய்தால் நம்முடைய பெயருக்குத் தகுந்த கீர்த்தி கிடைக்கும். அதற்கு இதுவே சமயம்; அவர்களெல்லாரும் இப்போது சுகத்தினுலே மயங்கி அஜாக்கிரதையா

யிருக்கிறார்கள். ஆகையால், என் வார்த்தையை மனதில் பதித்துக் கொண்டு சீக்கிரம் புறப்படுங்கள், போவோம். நமக்கு ஜயமுண்டாகும். அனுகூலமாகக் காற்று வீசுகின்றது. மனம் தெளிவாயிருக்கிறது. வாகனங்களும் ஆயுதங்களு மகாகளேயோடு சிரித்துக் கொண் டிருக்கின்றன " என்று சொன்னான்.

---

## கௌரவர்க்கும் பாஞ்சாலர்க்கும் உயுத்தம்

---

இந்த வார்த்தையைக் கேட்டமாத்திரத்திலே திரிதராஷ்டிரன் புத்திரனுடைய நண்பர்களெல்லாம் பூமி அதிரும்படி உற்சாகத்தோடு புறப்பட்டார்கள். அவர்கள் ஐம்புலன்களிலும் சற்றேனும் ஆசை யில்லாதவர்களாய், தைரியத்தையே முன்னிட்டுக் கொண்டு உயுத்தத்திற்குச் சித்தமானார்கள். அப்போது பெரிய கோஷத்தோடு துரியோதனன் சேனையாகிய சமுத்திரம் புறப்பட்டது. அது கர்னனென்னுங் கிழக்குக் காற்றினாற் பொங்கிக் கரைபுரண்டு, ஜயிந்தவனென்னும் பெரிய அலையோடுகூடி, துர்ச்சாதனனென்னும் திமிங்கிலமீனுள்ளதாய், துரியோதன னென்னும் பயங்கரமாகிய முதலையையுடையதாய், அந்த நகரியை மிகவேகத்தோடு அப்பிரதட்சணமாகச் சூழ்ந்து கவ்விக்கொண்டது. பின்பு ஆயுதங்களாகிய அக்கினிச் சுவாலைகளினாலே விளங்கிக்கொண்டிருந்த அந்தப் படையானது தமது பட்டணத்தைச் சுற்றிக்கொண்டு அதம்பண்ணுகிற தென்பதை பாஞ்சால ராஜன்பிள்ளையாகிய த்ருஷ்டத்தூய்மன் - சிகண்டி - சுமித்திரன் - பிரியதரிசனன் - சித்திரகேது - சுகேது - துவசேனன் என்பவர்கள் அறிந்த மாத்திரத்திலே வெகு கோபாவேச மடைந்து, மேகம்போற் கர்ஜித்துக் கொண்டு, தேர்களின்மீது ஆரோகணித்து, மகாவீரியமுள்ள படைகளோடும், ஆயுதங்களோடும், ஆரவாரத்தினாலேயே சத்துருக்களெல்லாரும் நடுங்கும்படி நகரியினின்றும் புறப்பட்டார்கள். துருபதமகாராஜனும் வெள்ளைக் குதிரைகள் கட்டி வெள்ளைக்கொடி போட்டிருந்த தேரின்மேலேறி, வெண்சாமரம் வெள்ளைக்குடை முதலியவைகளால் விளங்கினவனாய்ச் சிங்கம்போல் வீரவாதஞ் செய்து கொண்டு பிள்ளைகளுக்கு நடுவில் நின்றான். அது நட்சத்திரங்களினது நடுவிற் சந்திரனிருந்ததுபோ லிருந்தது. இவ்விதமாகப் பாஞ்சாலனது சேனை வரக்கண்ட கௌரவசேனையானது

வெள்ளம்போற் புரண்டு இச்சேனையின்மேல் வந்துவிழுந்தது. அப்போது அவ்விரண்டுசைனியங்கட்கும் கொடிய உயுத்தம் நேரிட்டது. அது திரண்ட இரண்டாற்று வெள்ளமும் ஒன்றோடொன்று மோதிக்கொண்டதுபோற் காணப்பட்டது. அல்லாமலும் மூலைக்கு மூலை சிதறிய யானை, குதிரை, தேர் முதலியவைகளினாலே அந்தச் சைனியம் நாற்புறங்களிலும் நட்சத்திரங்கள் சிதறியிருக்கிற வானம் போல் விளங்கிற்று.

இவ்வாறு பேரியாதிகளின் முழக்கத்துடனே பெரியசண்டை நேரிட்டதைக் கேட்ட பாண்டவர்கள் கவசகுண்டலாதிகளை அணிந்து கொண்டு, முகங்களிற் கோபாக்கினி ஜொலிக்க ஆயுதங்களோடு புறப்பட்டு வந்தார்கள். அப்போது பலவித ஆயுதங்களைக் கையில் தரித்துக்கொண்டு ரதங்களிலேறி வந்துகொண்டிருந்த பாண்டவர்களைப் பார்த்த மாத்திரத்திலே, சகல அரசர்களுக்கும் மனதிலும் தேகத்திலும் நடுக்கமுண்டாயிற்று. பாஞ்சாலசைனியமோ வென்றாற் பூரணசந்திரனைக் கண்ட கடல்போல் மகிழ்ந்து, வெகு சௌரியமாய்த் துரியோதனன் சைனியத்தைச் சின்ன பின்னங்களாகத் துரத்தி யடித்தது. இப்படி யொருமுகூர்த்த காலம்வரையில் இரண்டு படைகளுக்கும் சங்குலயுத்தம் நடந்தது. அதன் பின்பு படைத்தலைவர்கள் ஒருவரோடொருவர் போர் செய்தார்கள். அந்தச் சண்டையிற் ஜயிந்தவனும், கர்னனும், அர்ச்சுனன் பார்த்துக்கொண்டே யிருக்கையில் சுமித்திரனென்கிறவனையும், பிரியதரிசன னென்கிறவனையும், நிமிஷத்தி லடித்துத் தள்ளினார்கள். இதைப் பார்த்து அர்ச்சுனன் பொறுக்காமல் ஜயிந்தவனுடைய குமாரனையும், கர்னனுடைய குமாரனையும் எதிர்த்து வளைத்துக்கொண்டு, அவர்கள் தகப்பன் மாருடைய முன்னிலையிலேயே கொன்று இரதத்தி னின்றுங்கீழே வீழ்த்தினான். இந்த மகா சூரராகிய இரண்டு ராஜகுமாரரையும் அர்ச்சுனன் கொன்றதைப் பார்த்த அவர்களின் தந்தையராகிய ஜயிந்தவனும் - கர்னனும் - கோபாக்கினியாலே முகமெல்லாம் படபடத்துத் துடித்துச் சிங்கங்கள்போ லெழும்பி ஆரவாரஞ் செய்துகொண்டு கிஞ்சித்தும் பயப்படாமல் இந்திரகுமாரனுடைய தேரைநோக்கி ஓடிவந்தார்கள். இவர்கள் ஒருவருக்கொருவர் ஒத்தாசையாக இருந்து கொண்டு அர்ச்சுனனோடு சண்டைசெய்யத் தொடங்கினார்கள். அந்த யுத்தமானது விருத்திராசுரன் - சம்பராசுரன்-இவ்விருவரோடும் தேவேந்திரன் செய்த உயுத்தத்திற்கு ஒப்பாக நினைக்கப்பட்டது.

இவ்வாறவ் விருவரும் ஏமாறுமல் எதிர்த்து அர்ச்சுனனுடைய தேரிற் கட்டியிருந்த குதிரைகளில் மூன்றைக் கொன்று விட்டார்கள். இப்படி அர்ச்சுனனுடைய குதிரைகள் கீழேவிழவே, கௌரவரெல்லாம் சந்தோஷங்கொண்டு கிலகிலவென்று சிரித்தார்கள். அப்போது சமீபத்திலிருந்த பீமசேனனனவன் அர்ச்சுனனுக்கு நேரிட்ட குறைவையும் கௌரவர்களுடைய குதூகலத்தையும் பார்த்துச் சகிக்காமல், ஒருநிமிஷத்தில் வேறு குதிரைகளைக் கொண்டுவந்து அந்த ரதத்திற் கட்டினுன். இப்படி அர்ச்சுனனுடைய குதிரைகள் மாண்டனவென்று தாங்க ளொருவரோடொருவர் சொல்லிக் கொள்ளுஞ் சொல் முடிவதற்கு முன்னமே, முன்போலோடிவந்த அர்ச்சுனனைப்பார்த்த துரியோதனன் - சகுனி - பூரிச்சிரவன் இந்த மூவரும் மேற்சொன்ன ஜயிந்தவனோடும் கர்னனோடும் கலந்து அந்த ரதத்தை வளைத்துக்கொண்டார்கள். இந்த ஐந்து மகாவீரருடனே அந்தத் தேவேந்திர புத்திரனனவன், ஓர் யோகீஸ்வரன் ஐம்பொறிகளுடனே எதிர்த்துப் போர்செய்வது போல் தைரியமாய் எதிர்த்துப் போர்செய்தான். அந்த யுத்தத்தில் ஐந்து மகாவீரர் ஏககாலத்தில் தன் தம்பியைச் சுற்றிக்கொண் டிருப்பதைப் பார்த்த பீமசேனனனவன் கொஞ்சமும் பயப்படாமல் ஐந்து மதயானைகளைக் கண்ட சிங்கம்போல் உற்சாகத்தையடைந்து, தானுந் தனது தேரைச் செலுத்திக்கொண்டு அவர்கள் நடுவிற் பிரவேசித்தான். அப்போது அவ்வைந்து சூரரும் தனித்தனியே ஒவ்வொருபாணம் போட்டு, ஐந்து பாணங்களினுலே பீமசேனனுடைய குதிரைகள் நான்கையும் சாரதியையும் யமலோகம் சேரும்படி செய்தார்கள். அப்போது வாயுவின் மகன் உடனே குதிரைகளுஞ் சாரதியுமில்லாத தேரினின்றுங் கீழே குதித்து, கையிற் கத்தியை எடுத்துக்கொண்டு சர்ப்பங்களைக் கண்ட கருடன்போலப் பாய்ந்து குதிரைகளின் கழுத்துக்களின்மீதும், தேர்களின் உருளைகளின்மீதும், நுகத்தடிகளின்மீதும், இருசுகளின்மீதும், ஏறிச் சத்துருக்களைக் கண்டங்கண்டமாக வெட்டினுன்.

இப்படி வெட்டிக்கொண் டிருந்த பீமனுடைய கவசத்தையும் ஆயுதத்தையும் கர்னன் துண்டித்துத் தள்ளினுன். அதைச் சற்றும் பொருட்படுத்தாமல் வீராவேசத்துடனே மான் கூட்டத்திற் புலி புகுந்ததுபோற் கௌரவசேனையிற் புகுந்து நாசஞ்செய்துகொண்

டிருந்த பீமனைப் பார்த்த அர்ச்சுனன், "ஓ! ஓ! இவர் கவசமுமில்லாமல் தேருமில்லாமல் சேனைகளினடுவில் அகப்பட்டுக் கொண்டாரென்று பதைத்து த்ருஷ்டத்தூய்மன்-சிகண்டி இரட்டைப் பிள்ளைகள் இவர்கள் நால்வரையும் கூட அழைத்துக்கொண்டு அதிசீக்கிரத்தில் ஓடிவந்தான். பின்பு பத்து மகாரதர்களுக்குங் கடினமான யுத்தம் நடக்க வாரம்பித்தது. அந்தச் சண்டையில் அவர்கள் விடுத்த பல அம்புகளினாலே அவ்விரதங்களின் கொடிகள் குதிரைகள் முதலானவைகிய யாவு மறைந்துவிட்டன. தூளிகளெல்லாங் கிளம்பி அந்த இரண்டு சேனைகளையும் இருள்போற் சூழ்ந்து கொண்டன. இந்தப்படி நெடுநேரம் சரியான யுத்தம் நடந்து கொண் டிருக்கும்போது, கர்னன் அர்ச்சுனனை மிகவும் பராக்கிரமித்து எதிர்த்து, தன்னுடைய வில்லைவளைத்து, நாணேறிட்டுப் பாணத்தைத்தொடுத்துக் காதளவுமிழுத்து, மேகம் மழைபொழிவதுபோற் பொழிந்து அர்ச்சுனனுடைய தேர் ஸ்தம்பித்துப் போகும்படி செய்தான். இப்படிச் செய்ததினாலே அர்ச்சுனனுனவன், தனது தேர்க்குதிரைகள் நின்றவிடத்தி னின்றும் ஓரடி கூட எடுத்து வைக்கமாட்டாமல் தத்தளிக்கக் கண்டு, மிகவும் கோபங்கொண்டு கண்கள் சிவந்து சுழலிடப் பிரளயகாலத்து யமன்போல் அதிக உக்கிரரூபங்கொண்டு, இக்கர்னனைக் கொல்லவேண்டுமென்று வச்சிராயுதத்திற்குங் காலதண்டத்திற்கு மொப்பாகிய மூன்று அம்புகளைச் சந்தானஞ்செய்து அவன் மீதிற் பிரயோகித்தான். அந்த மூன்றம்புகளும் தைத்தமாத்திரத்திலே அச்சூரிய புத்திரன் நெருப்பில் விழுந்த புழுப்போலத்துடித்து மூர்ச்சித்து, தனது தேரிலிருந்த கொடிக்கம்பத்தைக் கையாலேபிடித்துக் கொண்டு ஒன்றுந் தோன்றாதவனாய் விழுந்தான்.

இப்படி விழவே அவனுடைய சாரதியானவன் தனது எஜமானனைக் காக்கவேண்டுமென்று விரைவில் தேரைப் பின்னுக்குச் செலுத்தினான். அதுகண்ட பாஞ்சாலவர்க்கத்தோரெல்லாம் சிரித்து அட்டகாசஞ் செய்தார்கள். அப்போது துரியோதனனை நாணமும் பயமும் பிடித்துக்கொண்டதினாலே அவன் பிரமை பிடித்தவன்போல் வெருள வெருள விழித்துக்கொண்டு, பகற்காலத்து விளக்குப்போன்ற முகத்துடனே நின்றான். அதுகண்ட சேனைகளெல்லாம் அந்த பீமார்ச்சுனர்களுடைய சௌரியத்தின்முன் நிற்கமாட்டாமையினாலேயும், தங்கள் ராஜனும் ஓய்ந்துபோனபடியினா

லேயும், கதியொன்றுமில்லாமல் திக்குகள்தோறும் ஓட வாரம்பித்தார்கள். இப்படிப் பெருங்காற்றி லகப்பட்ட சருகுகள்போற் சிதறி ஓடுகிற கௌரவசேனைகளைப் பார்த்த சகுனி அவர்களைத் தொடர்ந்து சென்று எல்லாரையும் சமாதானப்படுத்தி மறுபடியும் கும்பலாகக் கூட்டினன். அப்பால் துரியோதனன் தன் தம்பிமார்கள் முதலானவர்களுடனே மறுபடியும் சேனையைக் கூட்டிக்கொண்டு யுத்தத்துக்கு ஆரம்பஞ்செய்தான். இப்படிச் சன்னகப்பட்டு வந்த துரியோதனனை பீமன் கண்டு, அரக்குமாளியின் சம்பவத்தை நினைத்து காலாக்கினி ருத்திரன்போல் துரத்திவந்தான். வரும்போது அந்த உயுத்தபூமிக்குச் சமீபத்திலே அனேகங் கிளைகளோடு கூடிய பெரிய மரமொன்றைக் கண்டு அதை வேரோடு பிடுங்கிக்கொண்டு, வஜ்ராயுதத்தைக் கையிலேந்திக்கொண்டு அசுரரைக் கொல்ல இந்திரன் வருவதுபோற் பகைவர்பேரிற் பாய்ந்தான். இப்படியாகப் பாய்ந்து ஒரு பெருங்காற்று வானத்திலிருக்கும் மேகங்களைச் சிதற வடிப்பதுபோல் துரியோதனன் சேனையைச் சிதற அடிக்கவே, முன்னமே அர்ச்சுனனுடைய பாணங்களினலே துளைக்கப்பட்ட தேகங்களையுடைய சகலராஜாக்களும் நின்று எதிர்க்கமாட்டாமல், தங்கள் தங்கள் கூடாரங்களிற்போய்ச் சேர்ந்தார்கள். பாஞ்சாலரும் சந்தோஷத்தோடே பட்டணம்போய்ச் சேர்ந்தார்கள்.

இப்படித் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நேரிட்டதுபோல் நேரிட்ட யுத்தத்திலே பாண்டவர்கள் வெற்றிபெறவே, யாவரும் திரௌபதையையும் பாஞ்சாலனையும் நல்லபாக்கியமுள்ளவர்களென்று சொன்னர்கள். எதிர்த்த அரசர்களிலும் அனேகர் பாண்டவர்களிடத்தில் வைரம்விட்டு, மகாயோக்கியர்களென்று கொண்டாடினர்கள். ஆனல் சகுனி - ஜயிந்தவன் - கர்னன் - துரியோதனன்- துர்ச்சாதனன் முதலாகிய சிலருக்குமாத்திரம் மிகவும் துக்கமாயிருந்தது. ஆகிலும் அவர்களும் மனதிலேயே வெந்துகொண் டிருந்தார்களேயல்லது, வாயினலே ஒன்றுஞ் சொல்லவில்லை. பின்பு சகலராஜாக்களும் தங்கள் தங்கள் பட்டணம்போய்ச் சேர்ந்தார்கள். திரிதராஷ்டிரன் புத்திரரும் அத்தினபுரியை அடைந்தார்கள். பாண்டவர்களும் ஜயலட்சுமியை விவாகஞ்செய்தவர்போல் ஜயபேரிகள் சிறப்போடு முழங்க வந்திகளெல்லாம் கட்டியங்கூறிப் புகழ, த்ருஷ்டத்தூய்மன் முதலான பந்துக்களெல்லாரும் புடைசூழ்ந்துவர, சேனதிபதிகளும் மந்திரிகளும் ஜய ஜய வென்று சொல்லி மரி

யாதை கொண்டாட, படைவீரரெல்லாரும் குதிரைகளையும் யானைகளையும் விளையாட்டினால் தாராகதி முதலிய நடைகளுடனே திருப்பிக்கொண்டு ஆயுதங்களைப் பள பள வென்று சுழற்றிக்கொண்டு சூழ்ந்து நடக்க, இவ்விதமான வைபவத்துடனே திவ்விய ரதங்களின் மீதி லேறிக்கொண்டு, க்ஷத்திரசாமராதிகளுடனே நீர்தெளித்துத் தோரணங்கட்டிக் கொடிகளேற்றி மலர்கள் தூவிப் பொறிகளிறைத்து அலங்கரிக்கப்பட்ட வீதிகளையுடைய பாஞ்சாலநகரத்திலே பிரவேசித்து, பட்டணத்திலிருக்கும் பெண்பிள்ளைகளெல்லாரும் தங்கள் கடைக்கண் பார்வையாகிய கருநெய்தல் மாலைகளை எறியச் சிறுவர் முதற் கிழவர்வரையிற் கும்பல் கும்பலாகக்கூடி வேடிக்கை பார்க்க அரண்மனையிற்சென்று, இராஜோபசாரங்களுடனே திரௌபதையின் கண்களாகிய குவளைமலர்களுக்குப் பூரணசந்திரன்போல் விளங்கிக்கொண்டு நவரத்தினமயமாய்ச் சொலிக்கின்ற சபையிற் சென்று மணியாசனங்களில் வீற்றிருந்தார்கள்.

இந்தக் காரியங்களெல்லாம் நடப்பதற்கு முன்னமே துவாரகாபுரிக்குத் தூதரைப் பாண்டவ ரனுப்பியிருந்தார்கள். அத்தூதர் கிருஷ்ணன் பலராமன் இவர்களிடத்திற்குப்போய்ப் பாண்டவர்கள் க்ஷேமமாக இருக்கிறதாகவும், எதிரிகள் எதிர்க்கப்போகிறதாகவும் சொல்லவே; அவர்கள் அந்த நிமிஷத்திற் சதுரங்க சேனைகளையும் கூட்டிக்கொண்டு பாஞ்சாலநகரத்துக்கு வந்துவிட்டார்கள். இங்கு வரும்போது உயுத்தம் ஓய்ந்திருந்ததைக்கண்டு, சந்தோஷத்துடனே பாண்டவர்களைத் தழுவிக்கொண்டு குந்தியை உபசரித்து, திரௌபதைக்கு உயர்ந்த ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் கொடுத்துக் கொண்டாடினார்கள். துருபதமகாராஜனும் துவாரகாபுரியின் மன்னவர்களைத் தேவோபசாரங்களாலே பூசித்தான். இப்படி பூசிக்கப்பட்டுப் பாண்டவர்களுடன்கூட யாதவர்களும் சந்தோஷமாய் வாசம் பண்ணிக்கொண் டிருந்தார்கள். அங்கே துரியோதனன் அசுவத்தாமாவுடனேயும் கர்னனுடனேயும் பாண்டவர்க்குப் பெருமை வந்ததினால் தனக்குண்டாகிய துக்கத்தைப் பேசிக்கொண்டு, துர்ச்சாதனனை நோக்கி, “சீ! சீ! என்ன நம்முடைய பராக்கிரமம்? நம்முடைய ஆண்மையைச் சுடவேண்டும். நாம் செய்த பிரயத்தினத்திற் பாண்டவர் மறுபடியும் தப்பினார்களே. புரோசனன் மிகவு மூடனானகையால் வீணாகத் தன்னுயிரை மாத்திரம் விட்டான். இந்த அர்ச்சுனன் பார்ப்பார வேடத்தோடு இராமலிருப்பானே

யானால் அந்தப் பாஞ்சாலன் மகளை அடையவொட்டாமற் செய்ய லாம். நம்முடையவர்க ளித்தனைபேரில் ஒருவனும் இது தெரிந்து கொள்ளமாட்டாமற் போனானே! இந்தப் பாண்டவர்கள் பிட்சைக் காரப் பார்ப்பனராக விருந்த காலத்திலே, எளிதில் இவர்களை நாசஞ் செய்து போடலாம். ஆனால், நமக்குத் தெரியாமற் போயிற்று. மனிதனுடைய முயற்சி ஒன்றுக்கும் உதவாது. தெய்வபலமே பலமன்றி வேறுபலமில்லை" என்று சொல்லித் தலையைத் தொங்க விட்டுக்கொண்டு, பாண்டவர்களுக்கு வந்த சிறப்பை நினைத்து நினைத்துப் பெருமூச்செறிந்துகொண்டு, த்ருஷ்டத்யும்னன் - சிகண்டி முதலானவர்களுடைய சௌரியமாதி தைரியங்களை நினைத்துத் திகிலடைந்து ஒன்றுந் தோன்றாமல், நூதனமாக மாங்கல்ய மிழந்தவள்போல் ஒருவருக்கும் தெரியாமல் வீட்டுக்குள்ளே வந்து சேர்ந்தான். விதுரனானவன் பாண்டவர்கள் திரௌபதையை விவாகஞ்செய்து வெகு சம்பத்தையும் ஜயத்தையும் அடைந்து பெருமை பெற்றதையும், துரியோதனாதிகள் அபஜயத்தை அடைந்து உறங்கியிருப்பதையும் அறிந்து, மனதிலே மிகுந்த சந்தோஷமடைந்து, திரிதராஷ்டிரனிடத்திற்கு வந்து, 'ஐயா! குருவமிசத்துப் பிள்ளைகள் தெய்வச்செயலால் திரௌபதையை அடைந்து வெற்றிபெற்றார்கள்" என்று சொன்னான்.

இதுகேட்ட அந்தகனும் "நல்ல பாக்கியம் நல்ல பாக்கியம்" என்று கொண்டாடி, மிகுந்த களிப்புடனே அந்தத் திரௌபதை நமது துரியோதனனுக்கு பாரியையாயினளென்று நினைத்து, "விதுரா! நம்முடைய பொக்கிஷத்திலிருக்கிற உயர்ந்த ஆபரணங்களைத் திரௌபதைக்குக் கொடுத்து அலங்காரஞ் செய்வித்து, அவளுடனே துரியோதனனை என்னிடத்திற்குச் சீக்கிரம் அழைத்துக் கொண்டுவா" என்றான். அது கேட்ட விதுரன் கொஞ்சஞ் சிரித்துக் கொண்டு, "துரியோதனனுக்கு அல்ல, பாண்டவர்களுக்குப் பாஞ்சால கன்னிகை பாரியை ஆயினள்" என்று சொன்னான். அது கேட்டு மனதிலே பொறாமையிருந்தாலும் வெளிக்கு விதுரனைப் பார்த்து, "விதுரா! மிகவும் சந்தோஷமாயிற்று. எனக்கு என் பிள்ளைகளெப்படியோ அப்படியே பாண்டு புத்திரரும்; ஆதலால் நல்ல காரியம் தான். நம்முடைய குலத்தார் இவ்வளவு கீர்த்தியைப் பெற்றது நமக்குப்பெருமை அன்றோ? தெய்வானுகூலத்தால் பாண்டவர்கள் நெருப்பில் நின்றுந் தப்பிப்

பிழைத்து, சகல ராஜாக்களுக்கு முன்னே யந்திரத்தை அடித்து, இராஜகன்னிகையை அடைந்து பாஞ்சாலனுடைய பலம் பெற்று விளங்குகிறார்கள். மிகுந்த பராக்கிரமங்களை யுடைய துருபதமகாராஜனை அடைந்ததால் க்ஷேமத்தை அடைவதற்குத் தடையில்லை." என்று கூறிக்கொண்டிருந்த திரிதராஷ்டிரனை விதுரன் பார்த்து, "மகாராஜனே! உமக்கு இப்படிப்பட்ட புத்தி பல்லாண்டு பல்லாண்டாய் ஸ்திரமா யிருக்கவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்" என்று சொல்லிவிட்டுத் தனது மாளிகைக்குச் சென்று மகாகளிப்புட னிருந்தான்.

திருக்கலியாணச்சருக்கம் முற்றிற்று

## 11. திருமுடிபுனைந்த சருக்கம்

கண்ணன் துதி

அராவணை துறந்து போந்தன் றசோதைகண் களிப்ப நீடு
தராதலம் விளங்க வெண்ணெய்த் தாழிசூழ் தரங்கின் முடிக்
குராமணங் கமழுங் கூந்தற் கோவியா குரவை கொண்ட
புராதனன் றனையே யேத்தும் புனிதர்தாள் போற்றி செய்வாம்.

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இந்த வார்த்தைகளை அருகிலிருந்து கேட்டுக்கொண் டிருந்த துரியோதனனும் கர்னனும், அக்குருட்டுராஜாவினிடத்திற்கு வந்து நமஸ்காரஞ் செய்து தங்களை அறிவித்து நின்றார்கள். பின்பு அவனுத்தரவினால் ஆசனத்தி லுட்கார்ந்துகொண்டு, தகப்பனுரைப் பார்த்து துரியோதனன் சொல்லுகிறான்: "ஐயா! விதுரனிருக்கும்போது இந்த வார்த்தை சொல்ல அஞ்சினேன். இப்போது ஏகாந்தமாக இருக்கிறபடியாற் சொல்லுகிறேன்: தாங்கள் என்ன காரியஞ்செய்கிறீர்? சத்துருக்களுடைய மேன்மையைத் தனது மேன்மையாக எண்ணிப் பேசுகிறீரே; விதுரனுக் கெதிரே பாண்டவர்களைத் துதிக்கிறீரே: இது என்ன அநியாயம்? நீர் செய்யவேண்டிய காரியத்துக்கு விரோதமான காரியஞ்செய்வது நியாயமா? அவர்களுக்குச் சகல விதத்திலும் பலங்குறையச் செய்தாலன்றோ நாம் பிழைக்கலாம். ஆகையால் நாம் தற்காலத்தில் ஓர் உபாயஞ் செய்யவேண்டும். அப்படி ஏதாகிலும் ஒருகாரியஞ் செய்யாமற்போனால், அவர்கள்

நம்மை நம்முடைய வர்க்கத்துடனே விழுங்கிப் போடுவார்கள்" என்று சொன்னான்.

இந்தச் சொல்லைக் கேட்ட திரிதராஷ்டிரன், "ஓ குழந்தைகளே! உங்களுக் கிருக்கிற அபிப்பிராயம் போலேதான் எனக்கும் இருக்கிறது. இரவும் பகலும் இந்தச் சிந்தைதான் என்மனதிற் குடிகொண் டிருக்கிறது. ஆகிலும் விதுரனுக்கு முன்பாக என் கருத்தை வெளிப்படுத்துவது நியாயமாக இருக்கவில்லை. ஆதலால் அவனுடைய கருத்துக்குத்தக்கபடி அவனுக்கு எதிரே பேசிக்கொண் டிருந்தேன். அப்படிப் பேசிக்கொண்டு அவர்களுடைய குணங்களை யெல்லா மெடுத்துச் சொல்லிக்கொண் டிருக்கின்ற படியினாலே தான், என்னை உங்களிடத்திற் பட்சபாதமில்லாமற் சமமாகவிருக்கிறவனாக நினைக்கிறான். வேறுவிதமாக அவன் என்னைத் தெரிந்து கொண்டால், வீணாகத் தூஷணை செய்வான். ஆகையால் இப்படிச் செய்கிறேன். இப்போது நடக்கவேண்டியதற்கு நீ உபாயமென்ன சிந்தித் திருக்கிறாய்? இக்கர்ன னென்ன சிந்தித்திருக்கிறான்? நீங்கள் அவைகளைச் சொல்லுங்கள் என்று சொல்லவே, துரியோதனன் சொல்லத் தொடங்கினான்.

---

## திரிதராஷ்டிரனோடு துரியோதனனுங் கர்னனும் யோசித்தல்

---

"ஐயா! கேளும்: இரகசியமான தந்திரங்களிலே சமர்த்தராகியும் நமக்கு இதமான காரியஞ் செய்யத் தகுந்தவர்களுமாகிய பிராமணர்களுக்கு வேண்டிய திரவியங்களைக் கொடுத்துச் சந்தோஷிக்கச் செய்து, அவர்களைக்கொண்டு குந்தியின் மக்களையும் மாத்திரையின் மக்களையும் வேறுபடுத்துவோம்; அல்லது துருபதராஜனையும் அவனுடைய பிள்ளைகளையும் பொருளைக்கொண்டு பேதிக்கச் செய்து ஒருவரோடு ஒருவர் சேரவொட்டாமலும், பாண்டவர்களுக்கு மவர்களுக்கும் ஒருவர்க்கொருவர் வேற்றுமை வரும்படியாகவும் செய்வோம்; அல்லது அந்த ராஜாவினுடைய மந்திரிகளை வேறுபடுத்தி நம்முடைய பக்ஷத்திற் சேர்த்துக்கொள்ளுவோம்; அல்லது அம்மந்திரிகளுக்கு யுதிஷ்டிரனிடத்திற் பக்ஷமில்லாம லிருக்கும்படி செய்விப்போம்; இல்லாவிட்டால் மெள்ள அந்த மந்திரிகளைக் கொண்

டாவது இன்னும் யாரைக்கொண்டாவது பாண்டவர்களுக்கு இந்த அஸ்தினாபுரியில் வாசஞ் செய்வதில் அசௌக்கியமென்றும் அங்கேயே வாசஞ்செய்வதில் சௌக்கியமும் நன்மையு மிருப்பதாகத் தெரிவித்து, அவர்களுக்கு இங்கேவர மனதில்லாமல் இருக்கும்படி செய்வோம்; அல்லது அதிக சாதுரியமுடைய புத்திமான்களைக்கொண்டு, பாண்டவர்களில் ஒருவருக்கொருவர் ஆகவொட்டாமற் செய்வோம்; அல்லது திரௌபதைக்குப் புருஷர்கள் ஐந்து பேராகையால், அவளைச் சிலரிடத்தில் இஷ்டமுடையவளாகவும் சிலரிடத்தில் வெறுப்புள்ளவளாகவும் இருக்கும்படி செய்வோம்; அந்த ஐவரையாவது அவளிடத்திற் பேதப்பட்டு நிற்கும்படி செய்வோம்; இவைகளிலொன்று மாகாமற்போனாலும் பீமசேனனையாவது இரகசியமாகக் கொலைசெய்ய வேண்டியது. அவனல்லவோ அவர்களுக்குள் மகாபலசாலி. அவனுடைய பலத்தாலேயல்லவா பாண்டவர்கள் நம்மை மதிக்காம லிருக்கிறார்கள். ஆபத்துகளில் அவனாலே அவர்கள் சகலவிதத்திலும் தப்பித்துக் கொள்ளுகிறார்கள்; அல்லது அர்ச்சுனன் சம்பாதித்தபெண்ணை மற்றவரும் விவாகஞ்செய்து கொண்டதினாலே, அவனுக்கும் அவர்களுக்குமாவது விரோதம் வரச்செய்வோம். முன்னம் யாவற்றினும் துணிவுள்ள பீமனையே கொன்றுவிட்டால், மற்றவர்கள் இறகொடிந்த பக்ஷிபோற் பலமற்று இராஜ்யசிந்தையே இல்லாமற் போவார்கள். பீமசேனன் பக்கபலமிருந்தால்தான் அர்ச்சுனனை ஜயிக்கமுடியாது. இல்லாவிட்டால் அர்ச்சுனனை எளிதிற் ஜயித்துவிடலாம். இப்படி ஒருவரோடொருவரைப் பேதித்தால் ஐயிக்கியமில்லாமற் கலங்கி, ஒருவரையொருவர் நாசஞ்செய்ய நினைப்பார்கள். அப்போது நாம் அந்தப் பக்ஷத்திற் சேர்ந்து சண்டப்பிரசண்டமாய் அடித்து யாவரையும் வசப்படுத்திக் கொள்ளலாம். ஸ்திரீ நிமித்தமாகக் கலகமுண்டாக்கினாற் பாண்டவர்கள் நமக்கு அதிசீக்கிரதில் ஸ்வாதீனப்படுவார்கள். பீமசேனனைக் கொன்றுவிட்டால் அவர்கள் பலமற்றுத் தேசமிழந்துபோய் நம்மைப் பலசாலிகளாக நினைத்து நம் பாதங்களில் விழுவார்கள்; அப்போது அவர்களுக்குச் சில ஏவற்றொழில் நியமித்து, நாம் சுகமாக இராச்சியத்தை ஆளலாம்; அல்லது சில தைரியசாலிகளைக் கொண்டு பாண்டவர்கள் இறுமாந்திருப்பதைத் துருபதனுடைய புத்திரருக்குத் தெரிவித்துக் கோபத்தை மூட்டி விரோதம்வரச் செய்வோம்; அல்லது நல்ல அழகுள்ள ஸ்திரீகளைக் கொண்டு பாண்டவர்களைத் தனித்தனியே மோகிக்கச்செய்து

திரௌபதைக்கு விரோதம்வர நடத்தினால், அதனாலே பாஞ்சாலர் கட்கும் அவர்கட்கும் பிரிவினை யுண்டாகும்; அல்லாமற்போனால் பாண்டவர்களை இந்தப் பட்டணத்துக்கு வரும்படி சொல்லி யனுப்பி, நடுவழியில் அவர்கள் அயர்ந்திருக்குங் காலத்திற் சுறு சுறுப்புள்ள தலையாரிகளாலே கொலைசெய்விப்போம். இப்படி அனேகவித உபாயங்களிலே எது உமக்கு யுக்தமாகத் தோன்று கிறதோ; அதைச் சீக்கிரத்திற் செய்யவேண்டும். துருபதமகாராஜ னிடத்திலே அவர்கள் ஊர்ச்சிதப்படுவதற்கு முன்னமே ஏதாகி லும் தந்திரம் செய்தால் நம்முடைய இஷ்டம் கூடிவருமே யல்லது, அப்பாற் கூடிவரமாட்டாது. இதுதான் எனக்குப் பாண்டவர்க ளுடைய நாசகாரியத்தைக் குறித்துத் தோன்றுகிற ஆலோசனை. இது நல்லதோ கெட்டதோ நீங்களே யோசியுங்கள். அண்ணு கர்ணு! நீ இதைக்குறித்து என்ன நினைக்கிறாய் சொல்" என்று கூறி முடித்தான்.

பின்பு துரியோதனனை நோக்கிக் கர்னன் சொல்லுகிறான்:— "ஓ என்னருமைத்தம்பீ! உன்னுடைய கருத்து எனக்கு நன்றாகத் தோன்றவில்லை. ஏனென்றால் பாண்டவர்கள் உபாயத்தினாலே வெல்லப்படமாட்டார்கள். முன்னமே நீ அனேகவிததந்திரங்களாலே அவர்களை வெல்ல முயற்சிசெய்திருக்கிறாய். அதில் ஏதாவது கூடி வந்ததா? குழந்தைகளாய் இறகு முளைக்காமல் இங்கே யிருக்கையி லேயே தந்திரங்களினாலே வெல்லமுடியாத அவர்களை, இப்போது இறகுமுளைத்து வேறுதேசத்தி லிருந்துகொண்டு சுகத்தோடு பெரிய ஒத்தாசைகளினாலும் சாமர்த்தியங்களினாலும் உயர்ந்திருக்கும் போது, நமது தந்திரங்களுக்கு உட்படுவார்களா? இது வீணாகிய எண்ணமல்லவா? ஸ்திரீமுதலாகிய ஏழு விசனங்களினுடைய குற்ற மறிந்த அவர், அவைகளுக்கு உட்படமாட்டார்களே. அவர்கள் தங் கள் தகப்பன் பாட்டன் முறையில் வந்த அரசாட்சியைப் பெற்றுக் கொள்ளத்தக்க முயற்சியோடு கூடியிருப்பார்களே யல்லது வேறில்லை. அவர்கள் மிகவும் குணமும் புத்தியும் உடையவர்க ளாகையால், அவர்களில் ஒருவரோ டொருவரைப் பேதிப்பதும் அசாத்தியந்தான். அவர்களெல்லாரும் ஒரு ஸ்திரீயினிடத்திலே ஐக் கயப்பட்டுச் சிநேகித்திருக்கிறார்கள். ஆதலால் அவளுக்கும் அவர்க ளுக்கும் விரோதம்வரச் செய்வதும் அசாத்தியமான காரியம். பிக்ஷைக்காரராகக் காணப்பட்டபோதே அவர்களைக் காதலித்த அந்

தத் திரௌபதை, சம்பத்தடைந்து விளங்குந் தசையில் எப்படிப் பேதிக்கப்படுவாளா? அன்றியும் உலகத்தில் ஸ்திரீகளுக்கு வெகு புருஷரைப் போகிக்க வேண்டுமென்கிற கருத்து இயல்பா யிருக்கின்றது. அப்படி இருக்க நியாயவழியால் அச்செயல் அவளுக்குக் கிடைத்திருக்குங்கால் அவளை எப்படிப் பேதிப்பது? அந்தப் பாஞ்சாலனும் நியாயஸ்தன்; சத்தியசந்தன் குணசாலி வெகுநாளாகப் பாண்டவர்களுடைய உறவை விரும்பி யிருந்தவன்; அவனுடைய குமாரர்களும் அப்படிப் பட்டவர்கள். சூரர்கள்; தங்களை யொத்த சூரரைச் சேர்த்துக்கொள்ள மிக விருப்பமுடையவர்கள். ஆதலால் நாம் என்ன கெடுத்தாலும், என்ன உபாயஞ் செய்தாலும், பாண்டவர்களை ஒருகாலும் விடமாட்டார்கள். அவர்களுடைய மந்திரி முதலானவர்களும் தங்கள் யஜமானனிடத்திலே அதிக பக்ஷமுடையவர்க ளாதலால், அவர்களையும் பேதிக்கமுடியாது. இன்னும் அந்த ராஜ்யத்திலும் மற்ற விடங்களிலும் இருக்கிற சகலமான பேர்களும், பாண்டவர்க ளிடத்தில் அன்புவைத்திருக்கிறார்கள். ஆதலால் சகலவிதங்களில் யோசித்தாலும் அவர்களுக்குக் கெடுதியாகிய வேறுபாட்டை உண்டாக்குவது அசாத்தியந்தான். அன்றியும், அவர்கள் எப்போதும் ஏமாந்திராமற் ஜாக்கிரதையாகவே இருப்பார்கள். ஆதலால் மோசஞ் செய்து கொல்லவாவது, பேதித்துக் கீழ்ப்படுத்தவாவது, பிரமாவுக்கும் சாத்தியமன்று. நீ சொன்ன உபாயங்களில் ஒன்றும் எனக்குத் தகுதியாகத் தோன்றவில்லை. ஆனால் அவர்களை வெல்வதற்கு யுத்தந் தவிர வேறோருபாயம் இல்லை, என்கருத்து இது தான். முடிவில் இது தான் கூடிவரும். ஆனால் அதை இப்போதே தான் செய்ய வேண்டும்; ஏனென்றால், அந்தப் பாண்டவர்கள் இன்னும் பலத்த வேருடையவர்களாக ஆகவில்லை. திரண்ட சேனைகளும் பணங்களுமில்லாதவர்களா யிருக்கிறார்கள்.

அன்றியும் நம்முடைய பக்ஷம் இப்போது சேனையும் பணமும் அதிகப்பட் டிருக்கின்றது. பாஞ்சாலனுடைய பக்ஷம் மிகவும் குறைந்திருக்கின்றது. இந்த நிலை மாறுபடுவதற்கு முன்னமே சண்டைக்கு யத்தனப்படுவது நல்லது. இப்பொழுது நமக்கு மித்திரர்கள் அதிகமாக இருக்கின்றார்கள். வாகனங்களும் உற்சாகமுடையவைகளா யிருக்கின்றன. அவர்களுக்கோ அப்படி யிருக்கவில்லை. நாம் சாவகாசப்பட்டால் அவர்களும் இதையறிந்து மித்திரசம்பத்தைத்

தேடிக்கொள்ளுவார்கள். அன்றியும் துருபத மகாராஜனிடத்தில் நாம் பகைக்கு ஏதுவாகிய காரியஞ் செய்திருக்கிறோம். ஆதலாலே அவன் நம்மைவெல்ல வேண்டுமென்று வேண்டிய உபபலங்களைச் சம்பாதித்துக்கொள்ளுவான். அப்படி அவன் சகல சம்பத்துக்களுடனே கூடி விருத்தியடைவதற்கு முன்னமே, நாம் நம் பராக்கிரமத்தைச் செலுத்தக் கடவோம். மேலும் தேவகியின் மகனாகிய கிருஷ்ணன் அவர்களுக்குப் பலமாக எதுவரையில் வராமலிருக்கிறானோ? அதற்குள்ளாகவே பராக்கிரமத்தை நிறைவேற்றவேண்டும். சாவகாசமானாற் கிஞ்சித்தும் கூடிவரமாட்டாது. அந்தக் கண்ணனுக்குப் பாண்டவர் நிமித்தமாகப் பணங்கள் அல்லது போகம், அல்லது இராச்சியம், அல்லது பிராணன், இவை முதலாக எதைவிடவேண்டுமானாலும் விடச் சம்மதியுண்டாயிருக்கிறது. உலகத்தில் பராக்கிரமத்துக்கு ஈடானது ஒன்றுமில்லை. முன் பரதசக்கிரவர்த்தியானவர் தன் பராக்கிரமத்தினாலேதான் பூமியைச் செயித்தார். தேவேந்திரனும் பராக்கிரமத்தினாலேதான் மூன்று உலகங்களையும் செயித்தான். ஆதலால் க்ஷத்திரியனுக்குப் பராக்கிரமமே புகழத்தக்கது. பராக்கிரமத்தினாலே கீர்த்தியும் பிரதிஷ்டையு முண்டா யிருக்கின்றன. அல்லாமலும் பாண்டவர்கள் சாம தான பேதங்களென்னும் உபாயங்களினாலும் சாத்தியப்படமாட்டார்கள்; தண்டமென்னும் ஓர் உபாயத்திற்குத்தான் சாத்தியப்படலாம். ஆதலால் நீ பாராக்கிரமத்தினாலே அவர்களை வென்று இந்தப் பூமி முழுவதையும் ஆண்டுவரலாம். இதுதான் எனக்கு இக்காலத்திற்கேற்ற உபாயமாகத் தோன்றுகிறதே யல்லது, வேறு தோன்றவில்லை" என்று சொன்னான்.

## பீஷ்மராதியோர் திரிதராஷ்டிரனாதியோர்க்கு அறிவுறுத்தல்

இவையனைத்துங் கேட்டிருந்த திரிதராஷ்டிர மஹாராஜன் சிறிதுநேரம் ஆலோசித்தவனாய் அங்கதேசாதிபனைத் தழுவி, "ஓ அப்பா கர்ண! நீ மஹாபராக்கிரமங்களுடன் அஸ்திரவித்தியா சாமர்த்தியமும், தைரியமும், புத்தியு முடையவனாகையால் இப்படிச் சொன்னாய். இது தகும் தகும்; நன்றாயிருக்கின்றது. ஆனால் இந்தக் கருத்தைப் பீஷ்மர் - துரோணர் - விதுரன் - இவர்களுக்குத் தெரிவித்து நிறைவேற்றினால் நல்லது" என்று சொல்லி அந்த மூன்று பேரையும் சபைக்கு அழைப்பித்து, தான் கேட்டவைகளை

யெல்லாம் அவர்களுக்குத் தெரிவித்தான். அதுகேட்டு, முதலில் பீஷ்மாசாரியர் சொல்லத் தொடங்கினார்: "சற்புத்திரர்களே! பாண்டவர்களுடனே யுத்தஞ்செய்வது யுக்தமாகத் தோன்றவில்லை. எனக்குத் திரிதராஷ்டிரன் எப்படியோ அப்படியே பாண்டு மஹாராஜனும்; காந்தாரியினுடைய மக்கள் போலவே குந்தியினுடைய மக்களும் இதிற் சந்தேகமில்லை. அந்தப் பாண்டுபுத்திரர்கள் என்னை எப்படி இரட்சிக்க வேண்டியவர்களோ அப்படியே திரிதராஷ்டிரனையு மிரட்சிக்க வேண்டியவர்கள். பாண்டவர்கள் விஷயத்தில் எனக்கும் திரிதராஷ்டிர ராஜாவுக்கும் எப்படியோ அப்படியே துரியோதனனுக்கும், மற்றுமுண்டான குருவமிசத்தவர்களுக்கும், அன்னியர்களுக்கும் இருக்கவேண்டியது. ஆனதால் அவர்களோடு போர்செய்ய வேண்டியதென்கிற நினைப்பு எப்படிக் கூடும்? ஓ குழந்தாய் துரியோதன! நீ அவர்களுடன் சந்தியை விரும்பிப் பாதிராஜ்யங் கொடுக்கவேண்டும். இந்த இராஜ்யம் அவர்களுக்கு மூன்றும் பாட்டன் முதல் தகப்பனார் வரையில் முறையே வந்தது. நீ இந்த இராஜ்யத்தை நம்முடைய பிதுரார்ச்சிதமாக வந்ததென்று அபிமானித்து விரும்புகிறதுபோல், அவர்கட்கும் அப்படிப்பட்ட அபிமானத்தினால் விருப்பமிருக்கின்றது. அவர்களுக்கு இந்த இராஜ்யம் கிடைக்காமற் போகும் போது, உனக்குத் தான் ஏது? அவர்கள் இந்த இராஜ்யத்தை முன்னமே நியாயமாக அடைந்தார்கள். நீ அதருமத்தினால் மேற்போர்வையாகப் போர்த்திருக்கிறாய். இப்படி யிருக்கிறபடியினாலே, அவர்களுக்கு நல்ல வார்த்தைசொல்லி அவர்களை அழைத்துவந்து பாதிராஜ்யம் கொடுக்கவேண்டும். இப்படிச் செய்தால் தான் நம்மெல்லோருக்கும் இதமாய் இருக்கும். மாறுபடச் செய்தால் சந்தேகமில்லாமற் கேடுநேரிடும். உன்னையும் அபகீர்த்தியானது கெட்டியாய்க் கட்டிக்கொள்ளும். இனியேனும் உன் கீர்த்தியை நிறுத்திக்கொள்ளப்பார். கீர்த்தியென்பதே மனிதனுக்குச் சம்பத்து; கீர்த்தி அழிந்த மனிதன் உயிரோடு பிழைத்திருப்பது ஓர் பிழைப்பன்று. கீர்த்தி யுள்ளவனுக்குப் பூதவுடம் பிறக்கினும் புகழுடம்பு என்றும் நிலைத்திருக்கும். ஆதலால் தருமமாயும் கீர்த்தியாயுமிருக்கிற காரியத்தில் நீ பிரவேசிக்கவேண்டும். அது உனக்கும், எங்களுக்கும், இந்தக் குலத்துக்கும், நன்மையாயிருக்கும். ஏதோ தெய்வச் செயலாலே அந்த வீரர்களும் அந்தக் குந்தியும் பிழைத்திருக்கிறார்கள். கொடிய பாவியாகிய புரோசனன் உன்னிஷ்டத்தை நிறை

வேற்றச்சென்று கஷ்டப்பட்டு அழிந்துபோய் விட்டான். அந்த நற்குலப்பிறப்பும் நன்னடக்கையு முள்ள குந்தி, தன்மக்களுடன் வெந்து போனதாக என்று கேள்வியுற்றேனே; அது முதல் இவ்வுலகத்தில் ஒரு பிராணியையும் பார்க்கச் சகிக்காம லிருந்தேன். ஓ துரியோதனா! உலகவதந்தியை நீ யோசித்துப்பார். அந்த விஷயத்தில் உன்னை எப்படித் தூஷிக்கிறார்களோ அப்படிப் புரோசனனைத் தூஷிக்கவில்லை. உன்னாலேயே இக்கொடிய செய்கை நடத்தப்பட்டதாக யாவருஞ் சொல்லிக் கொள்ளுகிறார்கள். இப்படிப்பட்ட மஹாபாதகத்திற்கு நீ ஆளாவது எனக்கு மிகவும் விசனமா யிருக்கிறது. தெய்வாதீனமாய் அவர்கள் தப்பிப்பிழைத்ததினாலே உனக்கு அந்தப் பாவமும் அபவாதமும் நீங்குகிறதற்குக் காரணமாயிற்று. இனி அவர்களோடு நீ சந்தி செய்துகொள்வது உன்கீர்த்திக்கும் நம்மைக்கும் காரணமாகும். அந்த மஹாவீரர் பிழைத்திருக்கையில், அவர்களுடைய பிதுரார்ச்சிதமாய் வந்த பாகத்தை இந்திரன்கூட எடுத்துக்கொள்ளச் சமர்த்தனாக மாட்டான். அவர்கள் ஐவரும் தருமமுடையவர்கள்; மேலும் அவர்கள் இந்த இராஜ்யத்திற் பாத்தியமுள்ளவர்கள். இப்படிப்பட்டவர்களை நீ அநியாயமாய்த் துரத்திவிட்டாய்; ஆதலால் தருமமாகிய காரியஞ் செய்ய மனமும் - என்னிஷ்டப்படி நடக்க அன்பும் - பட்சபாதமில்லாதிருக்கக் கருத்தும் உனக்கிருந்தால் அவர்களுக்குப் பாதிராஜ்யம் கொடுத்து விட்டு நீ பாதிராஜ்யத்தை வைத்துக் கொண்டு க்ஷேமமாயிரு" என்று சொன்னார்.

உடனே துரோணசாரியர் திரிதராஷ்டிரனைப் பார்த்து, "ஓ மஹாராஜனே! ஒருவனால் ஒருவன் ஆலோசனைக்கு அழைக்கப்பட்டால், அவன் இதமாகிய புருஷதருமத்திற்கு விரோதப்படாமலும் நன்மைக்குங் கீர்த்திக்கும் அனுகூலமாகியும் பேசவேண்டுமென்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறோம். ஆதலால் உம்முடைய மனதிற்கு எப்படி இருந்தாலும் நமக்குத் தோன்றியதைச் சொல்லுகிறோம். பீஷ்மாசாரியாருடைய கருத்து எதுவோ அதுவே என்கருத்தாகும். பாண்டவர்களுக்குப் பங்குகொடுத்துச் சமாதானஞ் செய்வது இராஜ தர்மத்தை யனுசரித்தவர்களுடைய முறையில் வந்த நெறியாகும். ஆதலாற் சீக்கிரத்தில் யோக்கியனாகவும் நன்றாய்ப் பேசத்தக்கவனாகவும் உள்ள ஒருவனை நீ பாண்டவர்களுக்காக வெகுமானங்களுடன் துருபதமஹாராஜனிடத்திற்கு அனுப்புவிக்க வேண்டியது. அந்த நியாயவாதிபோய் ஒரு

வருக்கொருவர் நடந்த சரித்திரங்களை யெல்லாம் நன்றாய் விவரித்துச் சொல்லி, துருபதனுடைய சம்பந்தத்தினாலே பாண்டவர்களுக்கு மிகுந்தக்ஷேமம் கிடைத்ததையும் புகழ்ந்து, பாண்டவர்களிடத்திலேயும் துருபதனிடத்திலேயும், துரியோதனாதியர் பிரீதியுடையவர்களாக விருக்கிறதாய்ச் சொல்லவேண்டும். துருபதனும் அவன் மகனும் நமக்குச் சம்பந்தியானது மெச்சத்தகுந்ததென்றும் பிரியமுள்ளதென்றும் விசேஷமாக எடுத்துப் பேசவேண்டும். குந்திமைந்தர்களையும் மாத்திரை மக்களையும் நல்ல வார்த்தைகளினாலே நயப்படுத்தவேண்டும்; அன்றியும் நீர் உத்தரவு செய்ததாகத் திரௌபதைக்கு அனேக ஆபரணங்களைக் கொடுப்பிக்கவேண்டும். பாண்டவர்களுக்கு அனேக வஸ்திராபரணங்கள் முதலிய வெகுமதிகள் அனுப்பவேண்டும். சம்பந்திகளுக்கும் தகுந்தபடி தனித்தனியே மரியாதை செய்யவேண்டும் குந்தியும் பாண்டவர்களும் முன் அனுபவித்துக் கொண்டிருந்த வஸ்துக்களை யெல்லாம் அவர்களுக்கே கொடுத்துவிட வேண்டும். இப்படி நாம் குற்றமற்ற செய்கைகளினாலே அவர்களை யெல்லாம் சந்தோஷப்படுத்தி அவர்களிஷ்டப்படி இப் பட்டணத்திற்கு அவர்களை அழைத்துக்கொண்டு வரவேண்டும். அப்படியே அவர்கள்வரச் சம்மதித்தபின், நம்முடைய துர்ச்சாதனன் விகர்னன் முதலானவர்கள் சேனைகளோடு எதிர்சென்று அழைத்து வரவேண்டும். அவ்விடம் விட்டு இவ்விடம் அவர்கள் வந்தால் நீர் சினேகத்துடனே சிந்தைகளித்துப் பேசி வஞ்சமில்லாமல் இங்கே இருக்கச்சொல்வீரானால் அவர்களும் உம்மைத் தகப்பனை விட மேலாக மதித்து வாழ்ந்து மகிழ்ந்திருப்பார்கள். நீரும் உம்முடைய பிள்ளைகளைப்போல் அவர்களைப் பாவித்துப் பேதமற்றுச் சந்தோஷித்திருக்கக் கடவீர். ஓ மஹாராஜனே! நீர் இவ்விதமாகச் செய்வது உமக்கு இம்மையிலும் மறுமையிலும் நன்மைக்குக் காரணமாகும். ஆதலால் பீஷ்மர் சொற்படி செய்வதுதான் கற்பும் சத்தியமுமுடைய மனைவாழ்க்கைக்குரிய கருமம்” என்றார்.

இவ்வாறு பீஷ்மாசாரியாரும் துரோணசாரியாரும் சொல்லியவனைத்துங் கேட்டிருந்த கர்னன் விரைந்தெழுந்து “ஓ ராஜாதிராஜனே! பொருளுக்கும் மானத்திற்கும் நம்முடன் ஒத்தவர்களாயிருக்கிற இவ்விருவருமே உமக்கு நன்மை வரும்படி யோசனைசொல்லாமற் போவதைக் காட்டிலும் வேறு ஆச்சரிய முலகத்திலுண்டோ? தனது உருவை மறைத்துக்கொண்டு கெட்டினைப்புடனே க்ஷேமத்

தைப் பேசுகிறதென்பது பெரியோர்களுடைய நடையாயிருக்க மாட்டாது. காரியங்களில் வருத்தம் நேரிடுங்காலத்து நன்மைக் காவது தீமைக்காவது மித்திரராலே ஒன்றுங் கூடிவருகிறதில்லை, மற்றென்னவெனில் எல்லோருக்கும் முந்திய வினையினாலே சுக மாவது துக்கமாவது நேரிடுகிறது. இது சத்தியமென்று நினைத்து நீர் நம்பும். விவேகமுடையவனானாலும் மூடனானாலும் சிறுபிள்ளை யானாலும் கிழவனானாலும் சகாயமுள்ளவனானாலும் சகாயமில்லா தவனானாலும் எவனும் எந்த விஷயத்திலேயும் தான் பெறவேண் டியதை அவசியம் பெறுகிறான். இதற்குத் திருஷ்டாந்தமாக வேதத்திலொரு கதையிருக்கின்றது கேளும் :

முற்காலத்தில் மகததேசத்தரசர்களில் விநிந்தன் என்கிறவன் இருந்தான். அவனுக்கு ஞானேந்திரியங்களும் கருமேந்திரியங்களும் குறைவுபட்டு இரைப்புடன் பெருமூச்சு வாங்குகிற நோயுமிருந் தது. அப்போது அவன் ராஜகாரியங்களைக் குறித்து மந்திரி களையே நம்பி நடத்திக்கொண்டு வந்தான். அவனுடைய மந்திரி களும் கட்டுப்பாடாக விருந்தார்கள். அவர்களில் மஹாகர்னன் என்கிற ஒருமந்திரி ஆளுகை செய்கிறவனாக விருந்தான். அவன் நால்வகைச்சேனை முதலியவைகளைத் தன்வசமாக்கி மற்ற மந்திரி களை யடக்கி அந்தராஜாவையும் பொருட்படுத்தாமல் தன்னிஷ் டப்படி நடந்து இராஜாவினுடைய சகலபோகத்தையும் ஸ்திரீகளை யும் கவர்ந்துகொண்டான். இப்படி அவன் போகமனைத்தையும் எடுத் துக்கொண்டு மேன்மேலும் லாபம் வரவர விசேஷலாபத்தை யடைந்து அவ்வரசன் இராஜ்யத்தையும் ஆளுகைசெய்யத் தலைப் பட்டான். ஆனால் அதுமாத்திரம் அவனுக்குக் கைகூடாமற் போயிற்று. இங்கே மந்திரிகளுடைய நற்குணந் துற்குணங்களையும் அவரவர்களுடைய விதிகளையும் யோசித்துப்பாரும். அவன் அவ் வளவு சம்பத்தைக் கவர்ந்து விபவங்களை அனுபவித்துக்கொண் டிருக் கையிலும் "இந்த இராஜ்யம் நமக்குச் சொந்தமில்லாமற் போயதே" என்னும் ஒரு ஏக்கம் அவனுக்கு மேலிட்டிருந்தது. அதனால் மிக வும் வல்லமை குறைந்தது. அப்பால் பூர்வராஜனுக்கே பிர திஷ்டையாக ஆளுகை சென்று வந்தது. ஆதலால் யாவும் வினைப் படி நடக்குமேயல்லது வேறில்லை. ஓ மகாராஜனே! உமக்கு இராஜ்யம் நிலைபெற்றிருக்க விதியிருந்தால் அப்படி நடக்கிறது. அப்படிக் கில்லாவிடில் நீர் என்ன ஜாக்கிரதையோடு இருந்தாலும் அது நிற்கப்போவ தில்லை. ஆம்போது ஆகும்! போம்போது

போகும்! இதனை நீர் நிச்சயமாக மனதில் நம்பிக்கொண்டு மந்திரிகள் சொல்லுகிறவார்த்தை உண்மையானதா அல்லது கபடமுள்ளதா என்பதை ஆராய்ந்து யுக்தப்படிக்கு நடக்கவேண்டும்" என்றான்.

இவ்விதமாகச் சொல்லிய கர்னனுடைய சொல்லைக் கேட்ட துரோணாசாரியர், "கர்ண, நன்றாயிருக்கிறது. நீ எதற்காக இப்படிப் பேசுகிறாயோ அது நன்றாகத் தெரிகிறது. நீயோ பாண்டவர்கள் விஷயத்தில் மிகவும் துஷ்டனாயிருக்கிறாய். ஆகையால் உன் குற்றத்தை அயலார்மேல் ஏற்றிக் காட்டுகிறாய்! நான் இந்தக் குருவம்சம் தழைக்கப் பிறந்த இந்த இராஜனுக்கு நன்மையே கூறுகிறேன். நீ இதைத் தீமையாக நினைத்தால் உனக்கு நன்மை எதுவோ அதனைச் சொல்லு; நான் வேண்டாமென்று தடுக்கவில்லை. ஆனால் ஒன்றுமாத்திரம் சொல்லுகிறேன் கேள்; நான் சொன்னபடி செய்யாமல் வேறுவிதமாகச் செய்தால், இக்குருவம்சத்தார் அதிசு விரைவில் அழிந்து போவார்கள். இதற்குச் சந்தேகமில்லை. அப்பால் என்தேகமுமில்லை உன் தேகமுமில்லை மற்ற எவர்கள் தேகமுமில்லை" என்று சொன்னார். அப்போது இவையனைத்தையுங் கேட்டிருந்த விதுரன் "ஓ இராஜனே! இப்போது யதார்த்தத்தைக் கேட்க நினைத்திருக்கின்றீராகையால், இஷ்ட பந்துக்கள் உமது நன்மைக்கு ஏதுவாகிய வார்த்தைகளையே சொல்லவேண்டும். ஆகையினாலேதான் நம்முடைய குலத்துக்குள் சிரேஷ்டரா யிருக்கிற பீஷ்மாசாரியார் உமக்கு இதத்தையே சொன்னார். அப்பேச்சை நீர் அங்கீகரிக்கவேண்டும். அவ்வாறே ஆசாரியராகிய துரோணரும் விசேஷமாகிய நன்மையைச் சொன்னார். இவைகளை யெல்லாம் ராதையின் மகனாகிய கர்னன் இதமல்லவென்று நினைக்கிறான். அவ்விருவர் சொல்லிய வார்த்தைகளையும், கர்னன் கூறிய கட்டுரையையும், நன்றாயோசித்துப்பாரும்: எவ்வளவு யோசித்துப் பார்த்தாலும், இவ்விருவரைக் காட்டிலும் உமக்கு இதஞ்சொல்லத் தக்கவர்களைக்காணேன். இவர்களோ வயதிலும், அறிவிலும், கல்வியிலும் முதிர்ந்தவர்கள்; அன்றியும் உம்மிடத்திலும் அந்தப் பாண்டுகுமாரர்களிடத்திலும் பட்சபாதமின்றி இருப்பவர்கள். அல்லாமலும் தருமமாய் நடப்பதிலும், சத்தியந் தவறாம லிருப்பதிலும், பரசுராமர் - இரகுராமன்-கயன் இவர்களைப் பார்க்கிலுங் குறைந்தவர்களல்லர். நீர் விரும்பிக் கேட்காமலிருக்கும்போது ஒரு வார்த்தையுஞ்

சொல்லவில்லை. இதுவரையில் அவர்கள் உமக்கு ஏதாகிலும் அப காரஞ் செய்ததாகவுந் தோன்றவில்லை. இப்படிப்பட்டவர்களுடைய ஆலோசனை உமக்கு நன்மை செய்யாமற் போகுமா? அவர்கள் யுத்தியே பழுதுபடும்போது, இந்தக் கர்ணனுடைய புத்தியும் சௌரியமுமா உதவப்போகின்றன, ஓ பரதவமிச திலகனே! மனிதர்க்குள் அறிவினாற் சிறந்தோராகிய இவர்கள், உம்முடைய விஷயத்திற் கொஞ்சமும் பாரபக்ஷமாகப் பேசமாட்டார்கள். அவர்கள் எப்போதும் உண்மையாக நடப்பார்களென்று எனக்கு நிச்சயமிருக்கின்றது. நீரும் நெடுநாளாய் இவர்களுடைய சக வாசத்தினாலே வெகு தருமங்களை அறிந்திருக்கிறீர். இவ்விரு வரும் பொருளுக்காகவும் புகழுக்காகவும் பேசுகிறவர்களல்லர், இருதிறத்தவருக்கும் அபிவிருத்தி யுண்டாகும்படியாய்ச் சம பக்ஷமாய்ப் பேசுகிறவர்களென்று உறுதியாய் நம்பும். இதுதான் உமது மிகுந்த நன்மைக்குக் காரணமாகும். துரியோதனன் முதலியவர்கள் இந்த இராஜ்யத்தைத் தமக்குச் சொந்தமென்று எப் படி நம்பியிருக்கிறார்களோ அப்படியே பாண்டு குமாரர்களும் இவ் விராஜ்யத்திற்கு உரியவர்களாக யிருக்கிறார்கள். ஆதலால் அந்தப் பாண்டவர்கள் விஷயத்தில் யார் நன்மையைச் சிந்திக்கவில்லையோ அவர்கள் புத்தியீனர்; அப்படிப்பட்ட மந்திரிகள் உமக்கு இதஞ் செய்கிறவர்களல்லர்; அல்லது உம்முடைய மனதிற் சொந்தப் பிள்ளைகளைக் குறித்து விசேஷ அபிமானமிருப்பதை யறிந்து அதற்குத் தக்கபடி முடிக்கும்படியான காரியத்தை வெளி யிடுவார்களேயானால் அப்போது அவர்கள் உமக்கு இதஞ்செய்யும் மந்திரிகளல்லர்; ஆகையாலேதான் நல்ல சுபாவமுடையவர்களும் மிகுந்த பராக்கிரம முடையவர்களுமாகிய இவ்விருவரும் உம் முடைய உட்கருத்தை வெளிக்குக் கொண்டுவராமலே பேசிவந்தார் கள். இதை நீர் நன்றாய்ச் சிந்திக்கவேண்டும். ஆகிலும் பாண்ட வர்களை வெல்ல முடியாதென்பதை மாத்திரம் வெளியிட்டுச் சொன் னார்கள். அது சரியே; நீர் வேறாக நினைக்க வேண்டாம். நீரே நன்றா யோசித்துப்பாரும்; இரண்டு கைளாலும் அம்புகளை விடுவதற்குத் திறமையுள்ள அர்ச்சுனனைப்போர்க்களத்தில் இந்திரன் தான் ஜயிக்க மாட்டுவானோ? பதினாயிரம் யானைபலமுள்ள பீமசேனனைத் தேவர்க ளெல்லாரும் ஒன்றாகக் கூடினாலும் ஜயிக்கக்கூடுமா? சகலவித யுத் தத்திலும் மிகுந்த வல்லமையுடைய இரட்டைப்பிள்ளைகளை எவன் ஜயிக்க மன்துகொண்டு எதிர்க்கமாட்டுவான்? ஒருகாலும் மாட்டா

தைரியத்தையும் பொறுமையையும் தயையையும் சத்தியத்தையும் பராக்கிரமத்தையு முடையவனுகிய யுதிஷ்டிரனை வெல்லத்தகுந்த புருஷன் யாராவது உம்முடையமனதில் தோன்றுகிறுனு? அன்றியும் எவர்களுடைய பட்சத்தில் யாதவகுலதிலகராகிய பலராமனும் கிருஷ்ணனும் கங்கணங் கட்டிக்கொண் டிருக்கிருர்களோ அவர்களுக்கு எதுதான் கைகூடிவரமாட்டாது? அல்லாமலும் சாத்யகியும் துருபதனும் அவன் புத்திரராகிய த்ருஷ்டத்தூய்மன் முதலானவர்களும் பாண்டவர்க்கு உபபலமாக இருக்கும்போது அவர்களுடனே போர்செய்யவேண்டு மென்கிற நினைப்பு எந்தப் புத்திமானுக்கு உண்டாகும்? இப்படிக்கெல்லா மிருக்கிறபடியினுலே நீர் எந்த உபாயத்தினுலும் பாண்டவர்களை வெல்லமுடியாது. ஆதலால் இதனை நன்ரு யோசிப்பதோடு இந்த இராஜ்யத்தில் அவர்களுக் குண்டாயிருக்கிற சுதந்திரத்தையும் தீர்க்காலோசனைசெய்து தருமத்திற்கு அழிவில்லாமல் அவர்களுக்குத் தந்து தகுந்த நன்மையைச் செய்யக் கடவீர். ஓ மகாராஜனே! புரோசனன் முதலியவர்களால் நேரிட்டிருக்கும் அபகீர்த்தியாகிய அழுக்கிருக்கின்றதே அதைப் பாண்டவர்களுக்கு நன்மைசெய்வதாகிய நீராலே கழுவிவிடும். இப்படிச் செய்வதே நற்பிழைப்பு! நல்லசுபம்! க்ஷத்ரியத்தன்மைக்கு மேம்பாடு. அன்றியும் இதிலிருக்கிற குணங்களையும் உமதுபிள்ளையோடுசேர்ந்த மற்றையர்சொல்லுங் கட்டுரைகளிலிருக்கின்ற குற்றங்களையும் மனதில் நிதானித்துப்பாரும். துருபத மகாராஜனுக்கும் நமக்கும் நெடுளாகப் பகையுண்டாயிருக்கின்றதல்லவா? இப்போது பாண்டவர்களுக்கு நன்மைசெய்வதினுலே அந்தத் துருபதனை நாம் மித்திரனுகக் கொள்ளுகிருேம். இப்படிச் செய்வதினுலே நம்முடைய இராஜ்யமானது பலத்தை அடைகிறது. அன்றியும் கிருஷ்ணன் எந்தப்பட்சத்தி லிருக்கிருனே, அந்தப் பட்சத்திற்கே ஜயமென்று நம்பவேண்டும். இப்படிப் பட்ட பலமடைந்த நம்மை வெல்லப்பட்டவர் யார்? உபாயங்கள் நான்கினுள் ஒன்றுக்கொன்று தாழ்ந்தது. ஆகையினுற் சமாதானத்தினுலே சாதிக்கவேண்டிய காரியத்தை உயுத்தத்தினுலே சாதிக்கப் புறப்படுகிறவன் யோக்கியனல்லன். இப்பொழுது நம்முடைய இராஜ்யம் இருக்கிற ஸ்திதியைப் பாரும்; பட்டணத்துக் குடிகளும் தேசத்துக் குடிகளும் பாண்டவர்கள் பிழைத்திருக்கிற செய்தியைக்கேட்டு அவர்களைப் பார்க்கவேண்டுமென்று மிகவும் விருப்பமுள்ளவர்களாக இருக்கிருர்கள். புலர் பிரயாணப்

பட்டுப் பாஞ்சாலதேசம் போய்விட்டார்கள். நமது சபையிலிருப்பவர்கட்கும் ஆசையுண்டு. ஆனால் அந்த விருப்பத்தை அவர்கள் வெளியிடாம லிருக்கிறார்கள். இப்படி எல்லோராலும் விரும்பிக் கொண்டாடத்தக்க புகழ்பெற்றவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றாமற் போவது இராஜ்யத்துக்குப் பலக்குறைவாகும். மேலும் நமது இராஜ்யக் குடிகளுக்குமே யன்றி இதர ராஜ்யக் குடிகளுக்கும் பாண்டவர்கட்கு நன்மைசெய்ய வேண்டு மென்பதில் விருப்பமும் துரியோதனனும் கர்னனும் சகுனியும் தரும நிலை தெரியாதவர்களாதலால் அவர்கட்குத் தீமைவிளைவிக்க வேண்டுமென்பதில் விருப்பமு முடையவர்கள் ஆதலால் துரியோதனாதியருடைய வார்த்தையின்படி நீர் நடக்கவேண்டாம். நீர் தற்காலத்தில் யுக்தமானவற்றைக் கேட்டீரென்று இக் காரியத்தை உமக்குச் சொன்னேன். துரியோதனன் சொற்படி நீர் நடப்பீரானால் நமக்கும் அனேக ஜனங்களுக்கும் கேடும் விரோதமும் கேட்காமல் வருமென்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. இதை உமக்குத் தெரியச்சொன்னேன். அப்பால் உம்முடைய இஷ்டம்" என்று சொல்லி முடித்தான்.

## பாண்டவர்களை அஸ்தினபுரத்திற்கு வரவழைத்தல்

இவையனைத்துங்கேட்ட திரிதராஷ்டிர மகாராஜன் விதுரனை நோக்கி "தம்பி! பீஷ்மாசாரியரும் துரோணாசாரியரும் சகலமு மறிந்தவர்கள், நமக்கு வேண்டியவர்கள்! அவர்கள் சொல்லிய சொல்லோ மிகவும் நல்லது. நீயும் அப்படியே தருமத்தையும் சத்தியத்தையும் பேசினாய்! எனக்குஞ் சந்தோஷமாயிற்று அந்தக் குந்தி குமாரர்களாகிய வீரர்கள் பாண்டுராஜனுக்கு எப்படிப் பிள்ளைகளோ அப்படியே எனக்கும் பிள்ளைகள்; இதிற் சந்தேகமில்லை. இந்த இராஜ்யம் என் பிள்ளைகளுக்கு எப்படிச் சொந்தமோ அப்படியே பாண்டவர்களுக்குஞ் சொந்தமாகவே இருக்கின்றது. ஆகையினால், ஓ விதுரனே! நீ போய் அவர்கட்கு மரியாதை செய்து அவர்களைக் குந்தியுடனேயும் தேவலோகத்துப் பெண் போன்ற என் மருமகள் திரௌபதையுடனேயும் இவ்விடத்திற்கு அழைத்துக்கொண்டு வா. ஏதோ தெய்வாதீனத்தினால் அந்தப் பாண்டவர்களும் குந்தியும் பிழைத்திருக்கிறார்கள்; துருபதக் கன்

ண்கையையும் விவாகஞ்செய்து கொண்டார்கள்; இதனால் நமக்கெல்லாம் பெருமை கிடைக்கச் செய்தார்கள்; பாவியான புரோசனன் மாண்டான். நமக்குண்டாகிய பெருந்துக்கமு நீங்கிற்று" என்று சந்தோஷமாகச் சொன்ன மாத்திரத்திலே விதுரன் பாண்டவர்களிடத்திற்குப்போக உடன்பட்டு அனேக வஸ்திராபரணங்களையும் திரவியங்களையும் எடுத்துக்கொண்டு தான் சகல சாஸ்திரங்களையும் கற்றுத் தருமங்களை யறிந்தவனாகையாலே முதலிற்றான் போகவேண்டிய மரியாதையின்படி பாஞ்சாலனிடத்திற்குச் சென்றான். அந்தத் துருபத்ராஜனும் தான் செய்யவேண்டிய மரியாதையின்படி உபசாரத்துடன் விதுரனைத் தன்னிடத்திற்கு வரவழைத்துக்கொண்டான். பின்பு ஒருவரையொருவர் தழுவி க்ஷேமம் விசாரித்துக்கொண்டனர். விதுரன் அவ்விடத்திற் பாண்டவர்களையும் கிருஷ்ணனையுங் கண்டு மிகுந்த ஆனந்தமடைந்தான். பின் ஒருவரையொருவர் கட்டித்தழுவிக் குலாவினார்கள்; சுபக்ஷேமங்களை அடிக்கடிக் கேட்டார்கள். பாஞ்சாலன் பொதுவாக யோகக்ஷேமங்களைச் சொல்லிப் பாண்டவர்களுக்கு நேரிட்ட ஆபத்தையும் அதினின்று நீங்கி உயிருடன் பிழைத்திருப்பதையும் கூறி, ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்தான். விதுரன் திரிதராஷ்டிரனுடைய சொற்படி பாண்டவர்களுக்கும் குந்திக்கும் திரௌபதைக்கும் துருபதனுக்கும் அவன் புத்திரர் முதலானவர்களுக்கும் அனேக வஸ்திராபரணங்களுடன் திரவியங்களைக் கொடுத்து மிகுந்த இன்பத்துடனே தான்வந்த காரியத்தைச் சொல்லத்தொடங்கினான்:

"ஓ துருபதமகாராஜனே! நானிப்போது சொல்லுகிற வார்த்தையை நீர் உம்முடைய மந்திரிகளோடும் புத்திரர்களோடும் தயைசெய்து கேட்கவேண்டுகிறேன். எங்க ளண்ணனாகிய திரிதராஷ்டிர மகாராஜனும், அவர் புத்திரர்களும், மந்திரிகளும், பந்துக்களும், உம்முடைய க்ஷேமாதிசயங்களைக் கேட்க மிக விருப்பமுள்ளவர்களாக இருக்கிறார்கள். உம்முடைய சம்பந்தங் கிடைத்ததினாலே மகாராஜாவானவர் ஆனந்த சாகரத்தில் அழுந்தியிருக்கிறார். உங்களுடைய நன்மையைக் குறித்தும், சம்பந்தம் நடந்த பெருமையைக் குறித்தும், அடிக்கடி விசாரிக்கிறார். அப்படியே மகானுபாவராகிய சந்தனுகுமாரரும் உம்முடைய க்ஷேமங்களைக் கேட்கிறார். பிரியமுள்ள துரோணாசாரியரும் உம்மை ஆனந்தமுறை ஆலிங்கனஞ் செய்ததாகச் சொல்லச் சொன்னார்.

உங்களோடு சம்பந்தஞ் செய்துகொண்டதினால் எமது சுற்றத்தாராகிய சகலரும் தங்களைப் புண்ணிய சாலிகளாக நினைத்து, பெறுதபேறு பெற்றவர்களைப் போல் மகிழ்ச்சி யடைகிறார்கள். இவைகளை யெல்லாம் நீங்கள் நன்றாக ஆலோசித்து, பாண்டவர்களையும் அவர்கட்குரிய பத்தினியையும் அனுப்பி வைக்கவேண்டும். அஸ்தினபுரியிலிருக்கும் சகல ஜனங்களும், பாண்டவர்களையும் குந்தியையும் காணப் பட்சமுள்ளவர்களா யிருக்கிறார்கள். அன்றியும் கன்னிகா ரத்னமாகிய திரௌபதையை இராஜகுல மங்கையரெல்லாரும் எப்போது கண்டு களிப்போமென் றெதிர்பார்த்திருக்கிறார்கள். அந்தத் தேயமுழுவதும் இந்தப் பாண்டவர்கள் சுகமாகவிருக்கும் செய்தியைக்கேட்டு, சந்தோஷத்துடனே இவர்களது வரவுக்கு வழிபார்க்கிறார்கள். ஆகையால் தாமதியாமல் துரிதமாக அனுப்பிவைக்க வேண்டுகிறேன். இதை முக்கியமாய்த் தெரிந்து கொண்டு, என் னண்ணனாகிய திரிதராஷ்டிர மகாராஜனிடத்திற்கு இச்செய்தி தெரிவிக்கும்படி முன்னதாகத் தூதரை அனுப்பிவிட்டு, பிறகு இவர்களை அழைத்துக் கொண்டு போக வேண்டும்'' என்று சொன்னான். அது கேட்ட பாஞ்சாலராஜன் சந்தோஷத்தோடு சொல்லுகிறான் :—

"ஐயா விதுரரே! தாங்கள் சொல்லிய வனைத்தையுங் கேட்க மிகுந்த சந்தோஷமாயிற்று. முற்பிறப்பிற் செய்த நல்வினையால் எனக்குக் குருவமிசத்துச் சம்பந்தங் கிடைத்தது. இதைக் குறித்துப் புகழ்வதற்கு என்னால் வல்லமையில்லை. என்னுடைய குறைகளெல்லாம் நீங்கிப்போயின. பாண்டவர்கள் தங்கள் மாளிகை சேர்ந்து வாழ்வது எனக்கு அதிக ஆனந்தந்தான். ஆனால் அவர்களை உங்கள் ஐயா அவர்களோடு ஊருக்குப் போங்களென்று ஆக்ஞைசெய்ய, நான் யோக்கிய னல்லாதவனா யிருக்கிறேன். இப்படிக்கு நான் சொல்வதினால் நேரிடுங் குற்றங்களைச் சாதுசங்கப் பழக்க மறிந்த நீர் அறியீரோ? பாண்டவகுல திலகராகிய தருமபுத்திரர் எப்படி நினைக்கிறாரோ அப்படியே என் கருத்துமிருக்கும். அதற்கு வேறாகாது. அவருக்கும் அவர் தம்பிமாருக்கும் உயிர்த்தோழராகிய இராமகிருஷ்ணனுக்கும் எந்த வேளையிற் போகவேண்டுமென்று நினைப்புண்டாகுமோ அந்த வேளையில் என் மகளைக் கூட்டியனுப்பச் சித்தமா யிருக்கிறேன். ஒருபட்சம் யோசிக்குமிடத்துத் திரௌபதையை என்னிடத்தில் வைத்திருப்பதற்கும் அவர்களோடு அனுப்பிவைப்பதற்கும் எனக்கு

அதிகாரமில்லை. எப்போது தாராதத்தம் பண்ணிவிட்டேனே அப்போதே சொத்து அவர்களுடையது. அவர்களிஷ்டப்படி நடத்திக்கொள்ளலாம். இவ்விஷயத்தைக்குறித்து நீர் என்னைக் கேட்கவேண்டிய தொன்றுமில்லை'' என்று சொல்ல இச்சொல்லைக் கேட்ட யுதிஷ்டிரர், மாமனுரைப்பார்த்து "ஐயா மகாராஜாவே நீர் எவ்வாறு கட்டளை யிடுகிறீரோ அவ்வாறு நடக்கக் காத்திருக்கின்றோம்'' என்று சொன்னார். கண்ணனும் "பாண்டவர்கள் அஸ்தினபுரத்திற்குப்போவது எனக்கு இஷ்டமாயிருக்கிறது. ஆனால் மகாராஜாவின் கருத்து எப்படியோ தெரியவில்லை'' என்று சொல்லத், துருபதன் நந்தநந்தனனாகிய வாசுதேவன் காலத்திற்கேற்ற கோலமா யோசித்து நிச்சயஞ்செய் தருளியது எதுவோ அதுவே என்கருத்தாகும். எனக்குப் பாண்டவர்களிடத்தில் எப்படிப் பக்ஷமிருக்கிறதோ அப்படியே ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அவர்களிடத்திற் பட்சமிருக்கிற தென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோற்றெரியவருகின்றது. அன்றியும் ஸ்ரீகிருஷ்ணன் இந்தப் பாண்டவர்களுடைய நன்மையைக்குறித்து எப்படி எப்போதும் எச்சரிக்கையாய் ஆலோசித்துக்கொண் டிருக்கிறாரோ அப்படி மிகவும் புத்திசாலியாகிய தருமபுத்திரரும் சிந்திக்காம லிருக்கமாட்டார். ஆகையால் அவருடைய கருத்தின்படியே எல்லோரும் நடக்கவேண்டும்'' என்று துருபதன் சொன்னான். இதைக்கேட்ட யாவரும் அஸ்தினபுரத்திற்குப்போக மனமுள்ளவர்களா யிருந்தார்கள். அப்போது விதுரனானவன் பாண்டவர் வருகையைத் திரிதராட்டிரனுக் கறிவிக்கும்படித் தூதனுப்பிவிட்டு உடனே குந்திதேவியினிடத்திற்குச்சென்று அவளுடைய பாதங்களிலே சாஷ்டாங்கமாகத் தெண்டனிட் டெழுந்து இருகண்களிலுஞ் சிறிது நீரரும்பக் கைகளைக் கூப்பிக்கொண்டு எதிரில் நின்றான்.

அந்தக் குந்தியும் மைத்துனனைக் கண்டமாத்திரத்திலே தான் பட்ட துக்கங்களை நினைத்துக்கொஞ்சநேரம் விசனப்பட்டு, பின்பு அவனை நோக்கி, "ஓ மைத்துனரே, அரக்குமாளிகையி லகப்பட்டுக்கொண்ட பாண்டுராஜனுடைய குழந்தைகள் உமது அநுக்கிரகத்தினாலே மறுபடியும் பிழைத்துவந்தார்கள். ஆமையானது தானெங்கே யிருந்தாலும் தன் சினைகளை நினைத்துக்கொண் டிருந்தால் அதனாலே அவைகளெல்லாம் உருவாய் வளர்கின்றன வென்று சொல்லுகிறார்களோ அப்படி நீர் எங்கேயிருந்தாலும் உம்முடைய நினைப்பினாலே இவர்கள் வளர்கிறார்கள். காக்கை

யானது குயில் முட்டைகளைத் தன்முட்டையென்று பெற்று வளர்த்துக் காப்பாற்றுவதுபோல் உம்முடைய பிள்ளைகளைக் காகம் போன்ற நான் காப்பாற்றினேனே யல்லது வேறில்லை. முன்பு நாங்க ளனைவரும் கரையில்லாத துக்கசாகரத்தில் மூழ்கினோம். பின்பு பெரியவர்களுடைய ஆசிர்வாதத்தினால் கரையேறினோம். இனி நடக்கவேண்டியது எதுவோ அதனை நீர் சிந்திக்கவேண்டும்" என்று சொன்னாள். இவையனைத்துங் கேட்ட விதுரன் பின்னும் வியாகூலசித்தனா யிருந்து அப்பால் சிறிது தேறி யாவரும் அஸ்தினா புரிக்குப் போகவேண்டியதற்காக ஆலோசித்த ஆலோசனையைத் தெரிவித்தான். குந்தியும் அதற்கு அங்கீகரித்தாள். பின்பு பாஞ்சாலராஜனுடைய அனுமதியினாலே யாவரும் பிரயாணத்திற் குச் சித்தமானார்கள். அப்போது பாஞ்சாலன் பொன்னாலாகிய கழுத்துச்சங்கிலிகள் காற்சங்கிலிகள் தந்தக்கட்டுகள் முதலியவை களோடு முத்துத்தோரணங்கட்டி அலங்கரித்த அம்பாரிகளைக் கொண்டு மிகவும் வல்லவராகிய பாகராலே நடத்தப்படுகிற யானைக ளாயிரமும் இலேசாய் ஓடத்தக்கவைகளாயும் உறுதியாயு மிரா நின்ற விசித்திரமாகிய தேர்களாயிரமும் பொற்சீனிகள்போட்டு அழ காகச் சிங்காரித்திருந்த உயர்ந்தஜாதிக் குதிரைகள் ஐம்பதினாயிர மும் பணிவிடைசெய்யும் பெண்களையாயிரமும் ஆண்மையிற்சிற ந்த ஆண்பிள்ளைகள் ஆறாயிரமும் விற்பிடித்துப் போர்செய்யவல்ல வர்களாகிய சேவகர்க ளாயிரமும் மற்றும் பொன் வெள்ளி இரத் தினங்கள் படிகக் கற்கள் யானைத்தந்தங்கள் இப்படிப்பட்டவை களாற் செய்யப்பட்ட பலவிதமாகிய மஞ்சங்கள் ஆசனங்கள் பாத் திரங்கள் முதலாகிய வஸ்துக்க ளனேகமும் அனேகமாயிரம் பசு மாடுகளும் அனேகமாயிரம் வஸ்திராபரணங்களும் இன்னும் இப் படி ஆயிரமாயிரமாக அனேகவிதமான இராஜசம்பத்துக்குரிய வஸ்துக்களையெல்லாம் பாண்டவர்களுக்குத் தனித்தனியே பரிசு கொடுத்தான். அப்பாண்டவர்கள் முன்னமே பெற்றிருந்த ஸ்திரீ தனவஸ்துக்களோடு இவைகளையும் பெற்றுக்கொண்டு சகலவித வாத்தியங்களுடேன பாஞ்சாலநகரம்விட்டுப் புறப்பட்டு வழிகளில் நல்லவிடங்க ளெங்கெங்கே யிருக்கின்றனவோ அங்கங்கே இறங்கி வேடிக்கையாக எல்லோரும் ஸ்நானபூஜை போஜனாதிகளைச்செய்து வேண்டியபடி விளையாடிக்கொண்டு சகல பரிசனங்களும் புடை சூழ்ந்துவர அதிக சந்தோஷமாகச் சென்றார்கள்.

இப்படி யிருக்க முன்னமே விதுரர் அனுப்புவித்த தூதர்களாற் கண்ணில்லா மன்னவன் பாண்டவர்கள் அஸ்தினுபுரத்திற்குப் புறப்பட்டுவருகிற செய்திகேட்டு பாண்டவர்களை எதிர்கொண்டு அழைத்து வரும்படியாகத் தன் குமாரர்களாகிய விகர்னன் சித்திரசேனன் என்பவர்களையும், துரோணுசாரி-கிருபசாரி முதலானவர்களையும், மற்று மனேகம் பிராமணுள் முதலானவர்களையும், தாசிகளையும், சதுரங்கசேனைகளையும், வாத்தியங்களையும் அனுப்பி, தன் பட்டணத்தை அலங்கரிக்க இராஜபறை சாற்றித் தெரிவிக்கும்படித் தூதர்களுக்குக் கட்டளையிட்டான். உடனே அத்தூதர்கள் வள்ளுவரைக்கொண்டு முரசறைவித்த மாத்திரத்தில் பட்டணத்து ஜனங்களெல்லாரும் பாண்டுகுமாரர்கள் வருகிற செய்தியைக் கேட்டு, சொர்க்கபோகங் கிடைக்கப்பெறுவோர் அடையும் பேரானந்தக் களிப்பை, அன்றே யடைந்தவர்களாய் வீடுகள்தோறும் பந்தர்ப் போட்டு வாழைசோலைகளும் கொடிகளும் கட்டி, பொன்மாலைகளாலும் பூமாலைகளாலும் பலவிதவிசித்திரங்கள் செய்து, பலவிதப்பிரதிமெய்கள் நிறுத்தி, எங்கும் அதிற் றூமங்கள்கமழச்செய்து, முத்துத் தோரணங் கட்டி, வீணை வேணு மிருதங்கம் முதலான வாத்தியங்களையும் வாசித்துக்கொண் டிருந்தார்கள். அப்படியே வீதிகளில் சந்தனம் குங்குமம் பன்னீர் முதலிய வாசனைகள் சேர்த்த நீர்களைத் தூளியடங்கத் தெளித்து, தளிர்களையும் புஷ்பங்களையு மிறைத்து, சுபசூசகமாகிய மங்களவஸ்துக்களையும் பரப்பி, அங்கங்கே பரிமளமிகுந்த சாம்பிராணிப்புகை சந்தனப்புகை முதலிய பலவகைப் புகைகளைக் கமழச்செய்து, மகர்தோரணங்கள் கட்டி, அடிக்கொரு சாலைகள் மேடைகள் ஏற்படுத்தி, அதிற் பலவித உணவுகளும் பானங்களும் பழங்களும் பூசிக்கொள்ளும் படியாகிய சுகந்தவஸ்துக்களும் தகுந்த பூமாலைகளும் ஏலக்காய் முதலிய விடையங்களோடு கூடிய தாம்பூலங்களும் நிறைத்து, சங்கீதத்திலும் நாட்டியத்திலும் திறமைபெற்று அழகிலும் சாதுரியத்திலும் மேன்மையுற்று அபிநயகுண விலாசமுள்ள ஸ்திரீகளை பலவித அலங்காரங்களோடும் வாத்தியங்களோடும் பரதநாட்டியத்திற்கு நிறுத்தி, அகசியஞ் செய்வதிலும் புகழ்வதிலும் அதிகக் கீர்த்திபெற்ற பேர்களை ஆங்காங்கு இருத்தித் திருத்தினுர்கள். அன்றியும் ஸ்திரீகளும் புருஷர்களும் நல்ல பணிகள் பூண்டு, பட்டாடைகளுடுத்து, சந்தன புஷ்பங்களைத் தரித்து, சகல கோலாகலத்துடனேயும் எதிர் பார்த்திருந்தார்கள். இராஜக்கிருகங்களிலும் சபைகளை யெல்லாம்

திறந்து வைத்து அலங்கரித்து, தீபமாலிகைகளை வைத்து மிகவும் பரிஷ்காரஞ் செய்தார்கள். யானை குதிரை முதலிய வாகனங்களைத் தகுந்தபடி சிங்காரித்து ஆசாரவாசலில் நிறுத்தி, மவுத்தர் முதலிய போர்ச்சேவகரெல்லாரும் ஆயுதபாணிகளாக நின்றிருந்தார்கள். இப்படிக்கு அலங்கரிக்கப்பட்ட அந்தப் பட்டணத்தைப் பார்த்தால் ஜனங்களுடைய விருப்பமே இவ்வடிவுகொண்டு வந்ததென்று சொல்லும் படியாகவும், இராஜ்ய லட்சுமியானவள் பாண்டவர்களைச் சேரவேண்டுமென்று அலங்கரித்துக்கொண் டிருப்பது போலவு மிருந்தது. அப்பட்டணத்து மாளிகைமீது கட்டியிருந்த கோடிச்சீலையானது ஆகாயத்திலசைந்துகொண் டிருப்பதைப் பார்த்தால் இராஜதானியென்னும் பெண்ணானவள் தன்னிடத்திற்குப் பாண்டவர் வருகிறசெய்தியைச் சந்தோஷத்தினால் தேவர்களுக்குத் தெரிவித்து அரசர்களைக் கைநீட்டி காட்டி அழைப்பது போலு மிருந்தது. பரிமளவாசனைப் புகைகள் மேலெழும்பிச் சூழ்ந்ததை நோக்கில், பாபம் போக்கிப் புண்ணியமுண்டாக்கித் தன்னைப் பாண்டவர்கள் ஆளப்போகிறதை நினைத்து பூமிதேவி, சந்தோஷத்தினாலே பூரித்தெழுவதுபோ லிருந்தது.

இவ்வாறு அஸ்தினபுரமானது சகல அலங்காரங்களோடு நிறைந்திருக்க, பாண்டவர்கள் வழியனைத்துங் கடந்து பட்டணத்தையுங் கடந்து பட்டணத்திற்கு அருகில் ஓர் உத்தியான வனத்தி லிறங்கி யிருக்கும்போது துரோணாசாரியர் முதலான பேர்களெல்லாரும் முன்னதாக வந்து கண்டார்கள். அவர்களைக் கண்ட மாத்திரத்திற் பாண்டவர்கள் எழுந்திருந்து வந்தனஞ்செய்ய வேண்டிய பேர்களுக்கு வந்தனஞ்செய்து ஆலிங்கனஞ் செய்யவேண்டிய பேர்களை ஆலிங்கனஞ்செய்து மகிழ்ந்திருந்தார்கள். பின் ஒருவரோடொருவர் க்ஷேமாதிசயங்களை விசாரித்து அவரவர்களுக்குத் தகுந்த ஆசனங்களி லுட்கார்ந்தார்கள். பட்டணத்திலிருந்து வந்த ராஜசேவகர்கள் பாண்டவர்களை வந்தனஞ்செய்து அவர்களாற் குசலத்தை வினவப் பட்டவர்களாய்க் கைகட்டி வாய்பொத்தி நின்றார்கள். பின்பு சித்திரசேனனும் விகர்னனும் ஆசாரியர்களுடைய அனுமதியினாலே பாண்டவர்களைப் பார்த்து "ஓ தமையன்மார்களே! ஏன் தாமதம் பண்ணுகிறீர்கள். நம்முடைய தகப்பன் முதலான யாவரும் உங்களைப் பார்க்கவேண்டுமென்று துரிதப்படுகிறார்கள். ஆகையால் அவர்களுடைய கண்களையும் மனதையும் ஆனந்த வெள்ளத்தில் விளையாடச் செய்வீர்களாக". என்று

வணங்கிச் சொல்ல, பாண்டவர்கள் அத் தம்பிமார்களைத் தழுவி "அப்பா பாலிற் பழம் நழுவி விழுந்தாற்போலாச்சுது" என்று சொல்லி துரோணாசாரி முதலிய ஆசாரியர்களுடைய முகத்தை நோக்கினார்கள். அப்போது ஆசாரியர்கள் குந்தி குமாரரைப் பார்த்து "ஓ குழந்தைகளே சுவாமியினுடைய கிருபையினாலே நீங்கள் பல தத்துகளினின்றுந் தப்பிப்பிழைத்து மேன்மையடைந்து வந்த செய்திகேட்டது முதல் நமது தேசமுழுவதும் உங்களைக் காணவேண்டுமென்கிற பரவசத்தினாலே அலைதிரண்டு கரைபுரண்டு வந்த கடல்போல் நிற்கிறது; மகாராஜாவோ எப்போது வருவீர்களென் றெதிர்பார்த்திருக்கிறார். ஆதலால் இவ்விராஜகுமாரரிருவரும் சொல்லுகிறபடி சீக்கிரம் புறப்படுங்கள்" என்று சொல்லவே "சுவாமிகளே பாக்கியமாயிற்று! இதோ புறப்படுகிறோம்" என்று கூறிப் பாண்டவர்கள் த்ங்களுடைய ஊழியக்காரர்களைப் பார்த்தார்கள். அந்தச் சைகையை யறிந்த அவர்கள் உடனே வாகனங்களைக் கொண்டு வந்தார்கள். சித்திரசேனன் முதலானவர்களும் தங்களோடு வந்த பரிவாரங்களையெல்லாம் பிரயாணசன்னாகப் படுத்தினார்கள்.

உடனே பாண்டவர்கள் திவ்ய ரதங்களின்மேலேறிக்கொண்டு ஆசாரியர்களும் சித்திரசேனன் முதலானவர்களும் சகல பரிவாரங்களோடு தம்மைப் புடைசூழ்ந்துவரப் பேரிகைகள் காகளங்கள் டக்கைகள் மிருதங்கங்கள் நாகசுரங்கள் குழல்கள் முதலாகிய சகல வாத்திய கோஷங்களுடனே பிரயாணமாகிப் பட்டணத்திற் பிரவேசித்து, வீதிகளிற் செல்லும்போது பட்டணத்து ஜனங்களெல்லாரும் மெத்தைகள்மேலும் மேடைகள்மேலும் பிராகாரங்கள் மேலும் கோபுரங்கள்மேலும் கும்பல் கும்பலாகக் கூடிக்கொண்டு பாண்டவர்களைப் பார்த்த சந்தோஷத்தினாற் பேரானந்தமடைந்தவர்களாகி அந்தப் பாண்டவர்களுக்குக் கேட்கும்படி அவர்களைப் பலவிதமாகப் புகழ்ந்து பேசிக்கொண்டார்கள். அவருட் சிலர் "இதோ வருகிறார், நம்மையெல்லாம் தன் பிள்ளைகளைப்போற் காப்பாற்றிய தருமபுத்திராகிய மகாபுருஷன்" என்றார்கள். சிலர் "அவரருகிற்றனித்தனி தேரூர்ந்து வருகிறவர்கள் அண்ணன் சொற்றவறாமற் குடிகளுக்கு மேன்மைக்கிடமாகிய காரியங்களையே செய்யமுயல்பவராகிய தம்பிமார்கள்" என்றார்கள். சிலர் "நமக்கினி குறையொன்றுமில்லை. சகல சம்பத்துக்களையும் அடைந்தோம்" என்றார்கள். சிலர் "ஓ ஜனங்களே என்னபேச்சுப் பேசுகிறீர்கள்?

பாண்டுமகாராஜனே நம்மைக்காக்க வேண்டுமென்று காட்டைவிட்டு மறுபடியும் நாட்டுக்கு வருகிறார்; சந்தேகமில்லை" என்று சொன்னார்கள். சிலர் "நம்முடைய பிள்ளைகள் வருகிறார்கள்! இம்மை மறுமைப் பயன்யாவும் நமக்குக் கிடைத்தன" என்றார்கள். சிலர் "நீங்களெல்லாம் என்ன பிதற்றுகிறீர்கள்! இந்திரலோகத்திலிருந்து ஐந்து கற்பகத்தருக்கள் வருகின்றன. இனியாம் ஒரு காரியமுஞ் செய்யமாட்டோம்! அப்போதைக்கப்போது வேண்டியவைகளை அந்தத் தருக்களிலே பெருக்கமாகப் பறித்துக்கொள்ளுவோம்" என்றார்கள். சிலர் "தருமதேவதை ஐந்துவடிவுகொண்டு வருகின்றது. அகையால் இவர்களை நோக்குவதுஞ் சிந்திப்பதும் துதிப்பதுந் தவிர வேறு கருமத்தை நாம் செய்யமாட்டோம்" என்றார்கள்; சிலர் "ஐயோ மூடர்களே உங்களுக்கு என்ன அஞ்ஞானம்! கண்ணனுடைய ஐந்தாயுதங்களும் நமக்கே க்ஷேமத்தைச் செய்யும் பொருட்டு இந்த நகருக்கு இவ்வுருவங்கொண்டு வருகின்றன" என்றார்கள். சிலர் "பாண்டவர்கள் இறந்தது மெய்தான்; ஏனென்றால் இறந்து சுவர்க்கலோகத்திற்குப் போய் நம்மிடத்தில் வைத்த தயையினாலே மறுபடியும் இவணிறங்கி வருகிறார்கள்" என்று சொன்னார்கள். சிலர் "அப்படியில்லாவிட்டால் இப்படிப்பட்ட கம்பீரத்தன்மையும் காந்தியும் இருக்மாட்டா! முன்னே நாம் இவர்களைப் பார்த்தபோது இந்த தேஜசு இல்லையே" என்றார்கள். சிலர் "ஆ! நாமெல்லாம் உச்சீவிக்கும்படியாக இவர்கள் மீட்டும் இப்பட்டணத்திற்கு வந்தது என்ன சிலாக்கியம்" என்றார்கள். சிலர் "என்ன பாக்கியம்! ஓஒ இந்தப் பெண்ணைப் பார்த்தீர்களா! இவள் இலட்சுமியோ! இரதிதேவியோ! பார்வதியோ! ஸரசுவதியோ! அல்லது காமன் சிருஷ்டித்த மாயையோ! இவள் பூலோகத்துப் பெண்ணல்ல, தேவலோகத்துப்பெண்ணுமல்ல; பூலோகத்துப் பெண்ணானால் இவ்வளவு அழகுங் காந்தியும் இவளுக்குயிருக்கமாட்டா. தேவலோகத்துப் பெண்ணானால் இமைகொட்டுதல் இருக்கமாட்டாது. நாகலோக கன்னிகையோ வென்றால் பாதங்களிவிந்த அழகிருக்கமாட்டாது" என்றார்கள். சிலர் "ஆ! ஆ! குந்தி யென்ன பாக்கியம் பெற்றாள்! இப்படிப்பட்ட மருமகள் தன்னை வணங்கப்பெறுளே! ஒன்றுக்கொன்று தகுதியில்லாமற் கூட்டுகிறதென்று தெய்வத்தைப் பழிப்பது அனியாயம். இந்தப் பாண்டவர்களுக்குத் தக்கப்படி இந்தப்பெண்ணை இதோ அமைத்திருக்கிறதே" என்றார்கள். சிலர் "அந்தத் துருபதன் மகா

பாக்கியஞ் செய்தான். ஆனதினலல்லவா அவனுக்கு இப்படிப்பட்ட மக்களும் கிடைத்து இவட்குத் தகுந்த மருகர்களையும் படைத்தான். இவன் செய்ததல்லவோ தவம்! நாமிவர்களைக் காண்பதற்கு என்ன பாக்கியஞ்செய்தோமோ" என்றார்கள்; சிலர் "யார்செய்த புண்ணியமோ் இந்தப் பாண்டவர்கள் கொடிய ஆபத்துக்களினின்றும் தப்பி மறுபடியும் நம்மைப்பார்க்க வந்தார்கள். இவர்களுக்குக் கொடுமை செய்ய நினைத்த பாவிகள் இப்போது என்ன பண்ணுவார்கள்" என்றார்கள். சிலர் "நாமெல்லோரும் புண்ணியஞ் செய்திருந்தால் இவர்கள் நிலைபெற்று இங்கேயே இருக்கக்கடவர்கள்" என்றார்கள்.

இவ்வாறு பற்பலவிதமாய்ப் பேசிக்கொண்டு கண்களை இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த குடிகளைப் பாண்டவர்கள், குளிர்ந்த தாமரையிதழ் தேன்களைவீசும் தன்மைபோற் குளிர்ந்த பார்வையுடனே நோக்கிப் பூரிக்கச்செய்தார்கள்; அங்கே பல விநோதங்களையெல்லாம் பார்த்து மகிழ்ந்தார்கள்; பின் இராஜகிருகத்திற்குச் சமீபத்திற்போ யிறங்கி விகர்னனுஞ் சித்திரசேனனும் முன்னடக்கக் கண்ணன் கைபிடித்துக்கொண்டு அரண்மனைக்குச் சென்று முறையே திரிதராஷ்டிரமகாராஜன் பீஷ்மாசாரியார் முதலாகிய பெரியோர்கள் பாதங்களில் வணங்கிக் கும்பிட்டார்கள்.

பின்பு அவர்கள் சிறியோர்கள் தங்களைவணங்க அவர்களுக்குப் பல ஆசிகளுரைத்து மாளிகையுட் சென்றார்கள். அங்கே பானுமதியான துரியோதனனுடைய மனைவியானவள் தன் ஓரகத்தியுடனே கூடிக்கொண்டு திரௌபதையைப்பார்த்துத் தன்மாளிகைக்குவந்தமஹாலக்ஷ்மி தேவிபோற் பாவனைசெய்து அவளுக்குச் சகல உப சாரங்களையும் பண்ணி அந்தப்புரத்திற்கு அழைத்துக் கொண்டு போனாள். அவ்விடத்திலே குந்திதேவியும் திரௌபதையும் காந்தாரியைக் கண்டு வணங்க அவள் இருவர்க்கும் ஆசீர்வாதங்களைச் சொல்லித் திரௌபதையை ஆலிங்கனஞ் செய்துகொண்டு மனதில் இவள் நம்முடைய மக்களைக் கொல்ல வந்த மிருத்துதேவதையே" என்று நினைத்துப் பொறாமையுற்ற மனதோடு பொறுத்தற்கரிய வஞ்சகமுந் தன்னைப்புடைசூழக் கூடியிருந்தாள். பின்பு அந்தக் காந்தாரியானவள் கொஞ்சம் ஆலோசித்துக் குந்தியும் அவள் மருமகளும் தன்னிடத்திலிருப்பதை விடப் புறத்திலிருப்பதே தன் மனதிற்குக் கிஞ்சித்துத் திருப்தியென்று நினைத்து அதற்காக விதுரனை நோக்கி இவர்களிடத்திற் பக்ஷமுள்ளவள் போலவும் இவர்கள் பொருட்டுப்

பரிவுடன் பேசுகின்றவள் போலவும் பாவனைகாட்டி "ஐயா! விதுரரே இன்றைக்குத் திதியும் நட்சத்திரமும் நன்ருயிருக்கிறபடியாற் குந்தியையும் அவள் மருமகளையும் பாண்டுமகாராஜனுடைய மனைக்கு அழைத்துக் கொண்டுபோய்க் கிரகப்பிரவேசஞ் செய்வியும் சாதாரணமானவர்கள் போல் அவர்கள் தங்கள் வீடுவிட்டுத் புறத்திலிருப்பது நன்ருயிருக்க வில்லை. ஆனுல் உமக்கும் இப்படிச்செய்ய சம்மதமிருந்தாற் செய்யலாம். எனக்கோ அப்படிச் செய்வது உத்தமமென்று தோன்றுகிறது. அன்றியும் அவர்களுக்கு வேண்டிய இராஜபூசிதமான சகலவஸ்துக்களையும் முன்னதாய் அவ்விடத்திற் கொண்டு போய்ச் சேர்ப்பிக்க வேண்டும்" என்றுசொல்ல, விதுரனும் அப்படியே செய்கிறே னென்று பாண்டுமஹாராஜனுடைய மாளிகையைச் சுத்திசெய்து அலங்கரித்துப் புரோகிதர்களையும் பிராமணர்களையும் அழைப்பித்துச் சுவஸ்திவாசனஞ் செய்வித்து வாத்திய கோஷமுதலான சகல விபவங்களையும் நடத்திப் பாண்டவர்களுடனே பாஞ்சாலியைக் கிரகப்பிரவேசஞ் செய்வித்தார். அப்போது பட்டணத்திலிருந்த சகலமான பந்துக்களும் பெரிய மனிதர்களும் பெரியவர்த்தகர்களும் இராஜசேவகர்களும் நாட்டிலிருந்த உழவர்கள் முதலிய சகல ஜனங்களும் கூட்டங்கூட்டமாகப் பாண்டவர்களை தனித்தனி அளவற்ற கையுறைகளோடும் வந்து கண்டு, காணுதுகண்ட காட்சிக்கொப்பாக மிகக்களிப்படைந்து சரீரமெல்லாம் புளகமுற்று இருவிழிகளிலும் ஆனந்தபாஷ்பம்பெருக யோக க்ஷேமங்களைக் குறித்து அடிக்கடி பேசிக்கொண்டிருந்தார்கள்.

இப்பால் பீஷ்மாசாரியர் துரோணுசாரியர் கிருபாசாரியர் முதலானவர்கள் முறையே தினந்தினம் ஒவ்வொருவராய்ப் பாண்டவர்களுக்கு விருந்துசெய்து வந்தார்கள். இப்படிக்கு எல்லோரும் கொண்டாடக் கிருஷ்ணனேடு கூடவிருந்து புசித்துக் கொண்டு வேடிக்கையா யிருக்குமளவில் விதுரன் திரிதராஷ்டிர மகாராஜாவினுடைய ஆக்ஞையினுலே பாண்டவர்களுக்கு வேண்டிய சகல காரியங்களையும் நடத்திவந்தான். இவ்வாறு சிலகாலங்கழிந்தவுடனே கண்ணில்லாமன்னவன் பீஷ்மாசாரியுடனே யோசித்து, பாண்டவர்களைத் தன்னிடத்திற்கு அழைத்து வரும்படி கட்டளையிட்டான். அவர் அதனை அவர்களுக்குத் தெரிவிக்க, உடனே அவர்களும் அக்கட்டளையின்படி பெரிய தகப்பனுரிடஞ் சென்று தொழுது, அவன் உத்தரவினுலே அவனருகிலிருக்கும் ஆசனத்தில் உட்கார்ந்தார்கள். மஹாராஜன் அவர்களை நோக்கி பீஷ்மர்

முன்னிலையில் "ஓ குழந்தாய் தருமபுத்திரா! நீயும் உன் தம்பிமார்களும் இப்போது நான் சொல்லுகிற வார்த்தையைக் கேட்க வேண்டும். அதாவது முன்பு உங்கள் பிதாவாகிய பாண்டு மகாராஜன் எனது கட்டளையை மீறாமல், இந்த இராஜ்யத்தைப் பரிபாலனஞ்செய்து விருத்தியாக்கினன். என் தம்பி மகாபலசாலியாயும் பராக்கிரமமு முடையவனாகையாலே, கண்டபேர்கள் வியக்கும்படி தன்தேசத்தைக் காப்பதிலும் பிறர் தேசத்தைக் கவர்தலிலும் சாதுரியமாகிய காரியங்களை யெல்லாஞ் செய்துவந்தான். ஆதலால் நீயும் எனது கட்டளையை மீறாமல் நடக்கவேண்டும். என்னுடைய பிள்ளைகளெல்லாரும் கொடிய சிந்தையுடையவர்கள்; பொறாமையும் அகங்காரமு முடையவர்கள். அவர்கள் என்சொற்படி கொஞ்சமும் நடப்பதில்லை; தாங்கள் மாத்திரம் மேன்மைப்பட வேண்டுமென்று, அறியாமையாலும் செருக்கினாலும் வஞ்சனையான பிரயத்தின முள்ளவர்களாயிருக்கிறார்கள். ஆகையால், நீங்கள் இவ்விடத்திலேயே இருப்பதினாலே, மறுபடியும் அவர்களுக்கும் உங்களுக்கும் கலகம் நேரிடும். அப்படி நேரிடுவதினாலே அனேக குற்றங்கள் விளைகின்றன. ஆதலாற் சரசமாகவே இப்போது நீ உன் தம்பிமார்களுடனும், தாயார், திரௌபதை முதலானவர்களுடனும் காண்டவப் பிரஸ்தத்திற்குச் சென்று இராஜ்ய பரிபாலனஞ் செய்துவருவாயானால் சுகமுண்டாகுமென்று எனக்குத் தோன்றுகிறது. இதுவே நமக்குப் பெரியோர்களாயும், உத்தமர்களாயும், இராநின்ற பீஷ்மாசாரியர் துரோணாசாரியர் முதலானவர்களுடைய கருத்து. நம்முடைய இராஜ்யத்திற் பாதி துரியோதனனுக்கும், பாதி உனக்குமாகப் பங்கிட்டுக் கொடுக்கிறேன். அதை நீ காண்டவப் பிரஸ்தத்திலிருந்து பரிபாலனஞ் செய்துகொண்டு வரவேண்டும். அருச்சுன னிருக்கும்போது நீங்கள் எவ்விடத்திலிருந்தாலும் யார்தான் உங்களை அசைக்கமாட்டுவார்கள்? இது உனக்கு யுக்தமென்று தோன்றுகிறதோ அல்லது அயுக்தமென்று தோன்றுகிறதோ எனக்கொன்றுந் தெரியவில்லை. நீ கண்ணனுடனே யோசித்து, அவருக்குஞ் சம்மதியாயிருந்தால் அந்தப்படி நீ அவசியம் நடக்கலாம்" என்றான்.

தருமபுத்திரன் கண்ணனுடன் கலந்துபேசினார். அவரும் அப்படியே செய்வது நன்றென்றுசொல்ல, தருமன் தகப்பனாரிடத்திற்கு வந்து, "உம்முடைய உத்தரவின் பிரகாரமே நடந்துகொள்ளச் சித்தமாயிருக்கிறேன்" என்று வணங்கினார்;

## திருமராஜனுக்குப் பாதிராஜ்ய பட்டாபிஷேகம்

திரிதராஷ்டிரன் விதுரனை யழைத்து, நம்முடைய தரும புத்திரனுக்குப் பாதிராஜ்ய பட்டாபிஷேகஞ்செய்து பார்க்கவேண்டு மென்கிற ஆசை யெனக்குண்டாயிருப்பதால், அதற்காக வேண்டிய வஸ்துக்களைச் சீக்கிரத்திற் சேகரிப்பாயாக! இந்த வேளையே சுப முகூர்த்தமாக இருக்கிறபடியால், இப்போதே பட்டாபிஷேகத் தைப் பண்ணுகிறேன். ஆதலாற் பிராமணர்களை அழைப்பித்து, ஸ்வஸ்திவாசன முதலிய காரியங்களை விரைவில் நடத்தவேண்டும். நமது குலத்திற்குரிய பெரியோர்களும் நமது நகரத்திற்குரிய நாகரிகர்களும் வணிகருட்சிறந்தோரும், சமீபத்திலிருக்கும் தேசத் தார்களும் சீக்கிரம் இங்கு வரவேண்டும். நம்முடைய குழந்தை தருமபுத்திரனுக்குப் புண்ணியாவாசன முதலியவைகளைச் செய்து கங்கணங் கட்டவேண்டும். வந்த வேதியர்கட் கெல்லாம் கோதான மும் பூதானமும் வஸ்திரதானமும் சொர்னதானமும் செய்ய வேண்டும். முன்னதாக ஆயிரத்தெட்டு மறையோர் சென்று, யானைகளின்மீது கங்காசலத்தைக் கொண்டுவர வேண்டும். வந்த பேருக்கெல்லாம் அறுசுவைகளுடனே வேண்டியமட்டும் அன்னம் பரிமாறவேண்டும். நம்முடைய பட்டணமெல்லாம் அலங்கரிக்க வேண்டும். சபாமண்டபத்தையும் விசித்திரமாகச் சிங்காரிக்க வேண்டும். நமது பொக்கிஷத்திலிருக்கிற உயர்ந்த வயிரங்களும் பச்சைகளுமிழைத்த தோள்வளைகளையும், முத்துக்களும் மாணிக் கங்களுமிழைத்துக் கோடிசூரியப் பிரகாசமாக விளங்காநின்ற கிரீடத்தையும், நவரத்தினங்களிழைத்து மின்னலை உமிழ்கின்ற கடகங்களையும், நிலவைவீசுகின்ற ஆணிமுத்துக்களா லாக்கப்பட்ட உயர்ந்த ஆரங்களையும், பச்சைமணிகளையும் முத்துக்களையும் கோத்து இந்திரவில்லின் எழிலைக்காட்டுகிற பலவிதபதக்கங்களை யும், இரத்தினங்க ளிழைத்த முகப்பினையுடைய பத்தரைமாற்றுத் தங்க அரைஞாணையும், நவமணிக ளிழைத்துத் தேஜோமயமாய் விளங்கா நின்ற உதர பந்தனத்தையும் எடுத்து தருமபுத்திரனுக் குக் கொடுத்து அலங்காரஞ் செய்துகொள்ளச் சொல்லுங்கள். இப் படிப்பட்ட உயர்ந்த ஆபரணங்களை அணிந்து கொண்டு, அபிஷேக தீர்த்தத்துளிகள் தேகங்களில் விளங்கப் பட்டத்து யானையின் மீதேறி, இருபுறத்திலும் மாணிக்கங்களைப்பதித்த பொற் பூண்களை யுடைய வெண்சாமரங்கள் வீச, முத்துக்கோவையின் கொத்துக்

களின்றிச் சுற்றிலும் அலங்கரிக்கப்பட்ட வெண்பட்டுக் குடை பிடிக்க, "ஜயாவிஜைபவா" என்று வேதியர்கள் ஆசிர்வதிக்க, மற்றையவர்கள் துதிக்க, பலவாத்தியங்கள் முழங்க, சட்டியங்கள் போட, தாதிகளாட, பாடகர்பாட, குதிரைகளும் யானைகளும் அலங்காரத்துடனே முன்னும் பின்னுஞ் சூழ்ந்துவர, இவ்வாறு புற்பலவித விபவங்களோடு தருமபுத்திரன் ஊர்வலம் வரக்கண்டு ஜனங்களெல்லாரும் தங்கள் இஷ்டம் நிறைவேறியதென்று மன மகிழ்ந்து கொண்டாடித் துதிக்கட்டும். என்னையு மதிக்கட்டும்" என்று திரிதராஷ்டிர மஹாராஜன் விதுரனை நோக்கிச் சொன்ன மாத்திரத்திலே விதுரன் மகிழ்ந்து, திரிதராட்டிரன் சொல்லிய தினும் பதின்மடங் கதிகமாகச் செய்தான். பீஷ்மர் துரோணர் முதலாகியவர்களெல்லோரும் ராஜாவை மிகவும் புகழ்ந்தார்கள். அப்போது யாதவகுலசிகாமணியாகிய கிருஷ்ணன், "ஓ மகாராஜனே! உம்முடைய மனதின் உதாரத்துவத்தை நான் என்னவென்று சொல்வேன்? நீர் பக்ஷபாதமின்றித் தம்பிமக்களுக்கு ராஜ்யமளித்தது, உம்முடைய குலப்பெருமையையும் கல்வியறிவையும் விளக்குகின்றது. நீர் இந்த முடிசூட்டுந் திருவிழாவைச் சிறப்பாக நடத்த முயல்வது, உமது பெருந்தன்மையை மிகவும் மேலாக விளக்குகின்றது. இது எல்லோருடைய மனதிற்கும் கண்களுக்கும் காதுகளுக்கும் திருப்திகரமான காரியம். நீர் இப்படிப்பட்ட மனதுடனே எக்காலமும் வாழ்ந்துகொண் டிருக்கவேண்டும்" என்று வாழ்த்தி, அந்தந்த வேலைகளை விரைவில் நடத்தித் தருமபுத்திருக்குத் தாமே அலங்கார முதலாகிய காரியங்களைச் செய்து, பட்டாபிஷேக மண்டபத்திற்கு அழைத்துக்கொண்டு வந்தார்.

அந்தச் சமயத்திலே வியாசமகாமுனிவர் அவ்விடத்திற்கு எழுந்தருள, அவரை யெல்லோரும் பூசித்துத் தாழ்ந்து நிற்க, அம்முனிவர், தருமபுத்திரருக்குப் பட்டாபிஷேகமாகிற செய்தி கேட்டுச் சந்தோஷித்துத் தாமே சிங்காசனத்தில் தருமபுத்திரரை நிறுத்தி மங்களாவாழ்த்துக் கூறி, பிராமணர்களுடனே தாமும் முதலிற் கிரீடத்தை யெடுத்து வேதமந்திர ஆசிர்வாதத்தினாலே அவர் சிரசிற் சூட்டி, பின்பு முறையே க்ஷத்திரியர்களாலேயும் வைசியர்களாலேயும் மந்திரிகள் முதலான பிரமுகர்களாலேயும் கன்னிகைகளினாலேயும் திருமுடிப்பட்டஞ் சூட்டுவித்து, ஔஷதங்களுஞ் சுகந்த வஸ்துக்களுஞ் சேர்த்துத் தவப்பெருமையுள்ள பெரியோர்களாலே வேதமந்திரங்கள் செபித்துச் சாந்திசெய்யும்

பட்டிருந்த புனிதமான பலதீர்த்தங்களினாலே அபிஷேகஞ்செய்வித்தார். அந்தக்காலத்திற் பஞ்சகருவிகளாலாகிய வாத்திய ஒலிகளும், பிராமணர்களுடைய ஆசீர்வாத ஒலிகளும், மந்திரிகள் முதலாயினோருடைய ஜயஜய ஒலிகளும், திக்குகளைச் செவிடுபட எழுந்தன. இவ்வாறு சிறப்பாகப் பட்டாபிஷேகம் நடக்குங் காலத்திலே, காண்டவப்பிரஸ்தத்தின் மகாராஜாவாகிய தருமபுத்திரர் அனேகம் பொன்மாரி பொழிந்து, தரித்திரர்களுடைய கண்மாரியான கலக்கத்தைப் போக்கினார். அப்போது இரண்டு கன்னிகைகள் தங்கள் இரண்டிரண்டு கைகளிலுள்ள வளைகள் கலகலவென்று ஒலிக்கும்படி ஆகாச கங்கையின் பிரவாகங்கள் இரண்டு புறங்களிலுந் திரண்டு வீழ்வதுபோல வெண்சாமரங்கள் வீசவும், மற்றொருத்தி முகவழகைக் கவர்வதற்கு வந்திருக்கும் பூரணசந்திரன் போன்ற வெள்ளைக் குடை பிடிக்கவும், நவமணி இழைத்துக் கிண்கிணிகள் கட்டி விளங்காநின்ற திவ்விய சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கும் தருமபுத்திரரை வியாசர் முதலிய மறையோரெல்லாரும் ஆனந்த பரவசத்தோடும் நோக்கி, "ஓ காண்டவப் பிரஸ்த மகாராஜனே ! இனி நீர் பூமண்டல முழுதையும் ஜயித்துச் சகல ராஜாக்களையும் பணியும்படிசெய்து, மிகுந்த தட்சணைகளுடன் கூடிய இராஜசூய முதலிய அனேக யாகங்களையு நடத்தி இஷ்டர்களுடனே பலகாலம் வாழ்ந்துகொண் டிருக்கக்கடவீர் ! " என்று ஆசிர்வதித்து முனைமுறியாது கறுப்புறாது நொறுங்குதலில்லாது நொய்யாகாது உமி நெல்லுடன் உறவாகாது நல்லநிறம்பெற்று விளங்குகின்ற மஞ்சள் திமிர்ந்த அரிசி அக்ஷதைகளையும், பொன்னினாலும் பூவினாலும் மணியினாலும் ஆகிய பலவித விநோத அக்ஷதைகளையும், தருமராஜன் முடிமேல் இறைத்தார்கள். அப்பால் அனேக ராஜாக்கள் வந்து துதித்து நின்றார்கள். இப்படிப் பட்டாபிஷேகம் நிறைவேறியபின்பு தருமபுத்திரர் வேதியர்களுக்கு வேண்டிய அன்னங்கள் அறுசுவை பதார்த்தங்களோடும் அளவற்ற பலகாரவகைகளோடும் பரிமாறி, அவர்கள் புசித்தபிறகு மற்றவர்களுக்கும் அவ்வாறே அன்னமளித்து, தாமும் இஷ்டர்களுடனே புசித்து, திவ்விய கந்த புஷ்ப தாம்பூலங்களினாலே எல்லோரையும் பூஜித்து பட்டத்து யானையின் மீதேறி, சகலவித வைபவத்தோடு அந்த அஸ்தினாபுரத்தை வலம்வந்து தம்மாளிகையில் இறங்கி, கிருஷ்ணன் முதலாகிய இஷ்டர்களுடனே சரசசல்லாபஞ் செய்துகொண்டிருந்தார். இந்த மகோற்சவத்தினால் இராஜராஜாக்கள்

வேதப் பிராமணர்கள் முதலிய எல்லோரும் சந்தோஷித்து மனமுவந்திருந்தார்கள். குருடன் மக்களும் அவரிஷ்டர்களுமாத்திரஞ் சிறிதுங் கண்ணெடுத்துப் பார்க்கச் சகியாமல் மனம் வெந்திருந்தார்கள்.

திருமுடிபுனைந்த சருக்கம் முற்றிற்று

## 12. இந்திரப்பிரஸ்தச் சருக்கம்

### கண்ணன் துதி

அரியகங்குலி னன்னைதன் வடிவுகொண் டலகையா கியநங்கை
பரிவுபொங்கவந் தெடுத்தணைத் துவந்துளம் பரிந்துடன் பாராட்ட
வுருகுமாமுலைப் பாலுட னவளுயி ருண்டமூ முருகார்மெய்
கரியகோவலன் செய்யதாண் மலர்களென் கருத்தைவிட் டகலாவே.

"ஓ ஜனமேஜய மகாராஜனே இவ்வாறுகப் பெருமை அடைந்திருக்கும் பாண்டவர்களைப் பார்த்துச் சகிக்கமாட்டாமலிருந்த தன் புத்திரருடைய கருத்தறிந்த திரிதராஷ்டிரனைவன் கிருஷ்ணன் முன்னிலையில் தருமபுத்திரரைப் பார்த்து "அப்பா தருமநந்தன நீ வணக்கம் ஒடுக்க முதலிய நற்குணங்களுடையவனுதலால் உனக்கு இராஜ்ய பட்டாபிஷேகங் கிடைத்தது. அப்படி இல்லாதவர்களுக்குக் கிடைப்ப தரிது. ஆதலால் நீ சகல பாக்கியங்களினுலேயுஞ் சிறப்பை அடைந்தாய். இப்பொழுதே காண்டவப் பிரஸ்தத்திற்குப் போவது நன்று. ஆனுல் தகாத விடத்திற்கு நானுன்னைப் போகச் சொன்னதாக நீ நினைக்க வேண்டாம். அந்தக் காண்டவப்பிரஸ்தமானது முன்னே கவுரவாளென்னும் நமது பெரியோருடைய ராஜதானியா யிருந்தது. நம் குலத்திற்குக் கூடஸ்தராகிய இளிபிள்ளென்னும் மகாராஜனுக்கு முனிவரெல்லோரும் கூடி அவ்விடத்திலேயே இராஜதானி ஏற்படுத்தினுர்கள். அப்பால் ஆயுஸ் புரூரவஸ் நகுஷன் யயாதி என்கிற மகாராஜாக்களெல்லோரும் அதிலிருந்து அதிகாரஞ் செலுத்தி வந்தார்கள். பிற்பாடு அத்திகனென்பவனுல் இந்த அஸ்தினுபட்டணம் ஏற்படுத்தப்பட்டது. அங்கு நீ சென்றுல் உன்னிடத்தில் அனேகம் பெரியோர்களாகிய பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்னும் நான்கு வருணத்தாரும் வந்து சேருவார்கள். மிருகங்கள்கூட விசுவாசத்துடன் ஒன்றுக்கொன்று வாசஞ் செய்யும். அந்த இராஜ்ய

மானது இதைக்காட்டிலும் தன தானிய முதலியவைகளாலே நிறைந்திருக்கின்றது ; நீர் வளமும் நிலவளமு முள்ளது ; தேகத்திற்கும் மனதிற்கும் மிகவும் நன்மையுண்டாக்கத் தக்கது. அவ்விடத்திலே ஒரு குறையுமில்லை. நீ அங்கே போய் ஏற்படுத்தப் போகிற பட்டணமானது மிகவிசேஷமாக இருக்கும். நீ உன் தம்பிமார்களுடனே செங்கோற் செலுத்தி எங்கோனுகவிரு, என்னப்பா" என்று சொல்லத் தருமபுத்திரர் தகப்பனுரைக் கும்பிட்டு "ஐயா அப்படியே தங்கள் ஆக்ஞையைச் சிரசில் வகிக்கின்றோம். உம்முடைய பாதத்தின் கீழிருந்து பணிவிடை செய்யப் பாக்கியம் பெற்றிலோம்" என்று சொல்லி அவரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு அனேக ரதங்கள் கஜங்கள் அசுவங்கள் பதாதிகள் என்கிற சதுரங்க சேனைகளுடன் மகா சந்தோஷத்தோடும் புறப்பட்டார்.

---

## கண்ணன் இந்திரனுற் காண்டவவனத்தைப் புதுப்பித்தது

---

அப்பொழுது அந்தப் பாண்டவர்களுடன் செல்லவேண்டுமென்று அஸ்தினுபுரத்திலிருந்தவர்களில் அனேகர் விருப்பங்கொண்டிருந்தும் துரியோதனனுடைய ஆக்ஞைக்கஞ்சி அங்ஙனே நின்றுவிட்டார்கள். பாண்டுகுமாரர்கள் பெருங்காடுமூடிய காண்டவப் பிரஸ்தத்திற்குச் சென்று மிகவிரைவிற் காடுகளை வெட்டிச் சீர்திருத்திப் பட்டண மாக்க ஆரம்பிக்கும்போது ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியானவர் இந்திரனைச் சிந்தித்தார். இந்திரன் சுவாமியை வணங்கி நின்று அவரிட்ட கட்டளைப்படி நிறைவேற்ற விசுவகர்மாவை அனுப்பி வைத்தான். அந்த விசுவகர்மாவும் ஸ்ரீவாசுதேவரது பாதங்களைத் தொழுது "அடியேனுக் கென்ன கட்டளை" என்று கேட்க, ஸ்ரீகிருஷ்ணதேவர் "ஓ சிற்பங்களி னுட்பங்களை யெல்லாம் நன்குணர்ந்த விசுவகர்மாவே, இந்திரனனவன் பாண்டவர்களுக்காக உம்மை வரவழைத்து இக்காண்டவப் பிரஸ்தத்தைச் செம்மை செய்யும்படி கட்டளை யிட்டபடியால் இன்றுமுதல் இக்காண்டவப் பிரஸ்தம் இந்திரப் பிரஸ்தமென்கிற நாமதேயத்தால் உலகத்தில் வழங்கவேண்டும். ஆதலால் இங்கு நீர் பாண்டவர்களுக்கு இராஜ

தானியை உண்டாக்க வேண்டும்" என்று ஆக்ஞாபிக்க அப்படியே விசுவகர்மாவும் நந்தினி என்கிறநதியினருகிற் சொர்க்கத்திற்கு நிகரா கிய இந்திரப்பிரஸ்தமென்கிற மகாநகரத்தை நிருமித்தான். அந்த நகரமானது, அண்டச் சுவர்க்குச் சமானமாக ஆகாசத்தை அளாவி நிற்கிற மதில்களையும் அதைச் சுற்றிலும் கடல்களுக்கு நிகராகிய அகழிகளையும் கைலாசபர்வதம் போன்ற சிறந்த மாளிகைகளையும் சூரிய சந்திராதி மண்டலங்களைத் தழுவும்படியான கோபுரங்களை யும் கருடன் தனது இரண்டு சிறகுகளை விரித்தாற்போ லிராகின்ற கதவுகளையும் அதிக ஜாக்கிரதையுள்ள காவற்காரரையும் பலவித ஆயுத யந்திரங்களமைத்த அரணங்களையும் உடையதாய், அகன்றும் நீண்டும் சமமாயும் கோணலின்றியு மிராநின்ற வீதிகளும் மண்ட பங்களும், சாலைகளும், சந்திகளும், தேவாலயங்களும், நந்தனவனங் களும், உத்தியானங்களும், ஆங்காங்கு அமிர்தத்திற் கொப்பாகிய தண்ணீர்மலிந்த தடாகங்களும், சகலவஸ்துக்களும் நிறைந்த பல விதக் கடைத்தெருக்களும், பலமும் சுறுசுறுப்பும் இலட்சணங்களு முடைய யானை குதிரை முதலிய வாகனங்களும் சித்திரச்சாலைகளும் வித்தியாசாலைகளும், ஆயுதச்சாலைகளும், ஆங்காங்கு கிரமப்படி, அமைந்து விளங்கியது; மன்மதனுக் கொப்பாகிய ஆடவரையும் இரதிதேவிக் கொப்பாகிய மங்கையரையும் அடைந்து மூன்று லோகங்களிலிருக்கிற எல்லாப்பட்டணங்களையும் பரிகாசஞ்செய்து நகைக்கிற தென்று சொல்லும்படியான பிரகாசமும் பொருந்தியிருந் தது.

அத்தகைய நகரத்தில் அரண்மனை யொன்று கட்டப்பட்டது. அந்த அரண்மனையானது அப்பட்டணத்தினருகிற் கேசரமலை களுக்கு மத்தியில் மேருபர்வதம்போற் சூரியனது தேரோடும்படி யான வழியை அடைந்து பிரகாசித்தது; ஆணிப்பொற் றகட்டி னால் மூடப்பட்டு நவமணிகளு மிலங்குகிற ஸ்தம்பங்களும் படிக் கட்டுகளும் ஏழுவிதக் கட்டுகளோடு மூன்றுவித மேல்மெத்தைக ளும் பூமியின்கீழ் வீடுகளுமுள்ளதாய், ஆங்காங்கு விசாலமாகிய சபாமண்டபங்களும் திசைமயக்கம் வரும்படியான சில வீடுகளும் விளையாடுகிறதற்கு யோக்கியமாகிய சில சாலைகளும் உடையதா யிருந்தது. கண்ணாடிபோ லிராநின்ற சுவர்களாலுந் தளவரிசை களாலும் விளங்கா நின்ற அறைகளில் முத்துக்கொத்துக்களும் பவளக்கொத்துக்களுந் தொங்கா நின்ற இரத்தினக் கொடுங்கைக ளுள்ளதாகிய பலவித ஆசனங்கள் போட்டு இது ஒரு தேவபூமி

யென்று சொல்லும் படியாகிய கொலு மண்டபத்தினேடும் விளங்கிக்கொண் டிருந்தது. அதனருகில் அவ்விசுவகன்மனுன வன், எக்காலமும் பூப்பதும் காய்ப்பதும் தளிர்ப்பதுமாகிய விசேஷ மாகிய வாசனையும் ருசியும் சீதளமும் பொருந்தி இராநின்ற பலா மரம் மாமரம் மாதுளைமரம் எலுமிச்சைமரம் நாரத்தைமரம் பேரீச்சமரம் தென்னைமரம் பனைமரம் சண்பகமரம் பாதிரிமரம் புன்னைமரம் குருக்கத்திமரம் களம்புமரம் மகிழமரம் அத்திமரம் அசோகுமரம் அரசமரம் ஆச்சாமரம் பச்சிலைமரம் பாலைமரம் கொன்றைமரம் சந்தனமரம் விளாமரம் வில்வமரம் முதலாகிய பற்பல விருக்ஷவகைகளையும் மல்லிகை முல்லை இருவாக்ஷி முதலிய பல பூஞ்செடிகளையும் தாமரை செங்கழுநீர் நெய்தல் முதலியவைக ளால் நிறைந்து அன்னம் சக்கிரவாகம் முதலிய பறவைக ளொலியா நின்ற தெளிந்த தண்ணீருள்ள வாவிகளையும் அதன் கரைகளில் விசாலமாயும் அழகாயு மிராநின்ற பளிங்கினுலாகிய மேடைகளை யும் மயில்கள் குயில்கள் கிளிகள் முதலாகிய பலவிதப் பட்சிகள் சப்தித்துக்கொண்டு வண்டுக ளிசைபாட விளங்கும் இடங்களையு முண்டாக்கினன்.

---

## பாண்டவர் குடிபுகுதல்

---

இப்பால் ஆதிசேஷனுலுஞ் சொல்லக்கூடாத மகிமைபொருந் திய அந்த நகரத்தைச் சுற்றிப் பார்த்த பாண்டவர்கள் மிகவும் ஆனந்தமடைந்து கண்ணனைக் கட்டிக்கொண்டு துதித்து வியாச மகாமுனி தௌமியமகாமுனி இவ்விருவ ரனுமதியின்படி நன் முகூர்த்தத்தில் வாஸ்து சாந்திசெய்து கோபூஜை பிராம்ணபூஜை முதலானவைகளை நடாத்தி அவ்வியாச தௌமியர்களை முன்னிட்டுக் கொண்டு வாசுதேவனேடு யானையின்மீதேறிப் பரிஜனங்களெல் லோரும் சகல வாத்தியங்களு முழக்கி ஜயகோஷமிட மிகச் சிறப் பாய் நகரத்தை வலம்வந்து முப்பத்திரண்டு நிலைகளுடனே விளங்கா நின்ற பிரதானகோபுர வாயில்வழியாய் உள்ளே நுழைந்து முறை மூன்றயே வீதிகளைச் சுற்றிக்கொண்டு அரண்மனைக்குட் பிரவேசித் துப் பிராமணர்களுக்குத் திரவிய தானங்களும் மற்றையர்க்கு அன்னதானங்களும் வழங்கி அந்த ராஜ்யத்தை அளகாபுரியினு மேலானதாக வெண்ணி ஆண்டுகொண் டிருந்தார்கள். இப்படி

இருக்கிறநாளிலே அந்தப் பட்டணத்திற்கு, வேதமுதலாகிய பதினான்கு வித்தைகளையும் நன்குறியுணர்ந்து நல்லொழுக்கமும் ஞானமுமுடையவர்களாகிய அனேக வேதியரும், நானாதேசங்களிலிருந்து வந்த பல பண்டங்களையுங் கொண்டு வாணிபஞ் செய்யுந் திறமையும் புத்தியும் தருமநடையு முள்ள அனேக வணிகரும், சகலசாஸ்திரங்களையுங் கற்று விசித்திர நிருமாணங்கள் பலவுஞ் செய்யத் தகுந்தவர்களாகிய அனேக சிற்பிகளும், இன்னும் நானாவிதமாகிய அளவற்ற ஜனங்களும் வந்து குடியேறினார்கள்.

இவ்வாறாகத் தினந்தோறும் நானாதேசங்களி னின்றும் வருகிற ஜனங்களாலேயும் பண்டங்களினாலேயும், யானை குதிரை ஒட்டகம் எருது பசுமாடு முதலிய மிருகங்களினாலேயும், அந்நகரமானது நிறைந்து, இடைவெளி யில்லாமற் கடல்போலச் சகல ரத்தினங்களு முள்ளதாய், அல்லும் பகலும் வேதவோசையினாலும் வியாபார விர்த்தியினாலும் விவகாரச் சிறப்பினாலும் இடைவிடாமற் கோஷித்துக்கொண் டிருந்தது. பாண்டவகுல திலகனான தருமராஜன் ஜனங்களுக்கெல்லாம் விசேஷ சௌக்கியத்திற்கு ஏதுவாய்ச் சகல கிராமங்களுக்கும் நீர்வளமுண்டாகும்படி ஏரிகளும் வாய்க்கால்களும் தடாகங்களும் ஏற்படுத்தி ஆங்காங்கு தண்டசபைகளும் விவகார சபைகளும் அமைத்து, அவ்வவற்றில் தகுந்த அதிகாரிகளையும் நியமித்து, தேவாலயங்களுக்கெல்லாம் வேண்டிய சிறப்புக்கள் ஏற்படுத்தித் தரும நூலின்படி செங்கோல் செலுத்தி வந்தமையாலே, இராஜ்யமானது நாளுக்குநாள் பயிர்களாலும் பசுக்களினாலும் விருத்தியடைந்தது. திங்கள் மும்மாரி பெய்தது. மறையோர்களும் தவசிகளும் அக்கினிகோத்திர முதலாகிய வைதிக, கருமங்களையும் தவங்களையும் வழுவாது அநுஷ்டித்துக்கொண்டு வந்தனர். குடிகளெல்லோரும் ஆரோக்கியமும் மக்கட்பேறும் தனதானியங்களும் அடைந்து களித்திருந்தார்கள். நித்திய சுப மங்களகரமாய்ச் செழித்திருக்குந் தனது ராஜ்யத்தைப் பார்த்துத் தருமபுத்திரர் மிகுந்த சந்தோஷமடைந்திருந்தார். பீமசேனன் முதலாகிய நால்வரும் மூத்தவராகிய தருமராஜன் கட்டளையின்படி சகல அதிகாரங்களையுங் கிரமப்படி நடாத்தி வந்தார்கள்.

இவ்வாறு பஞ்சபாண்டவர்கள் அந்த இந்திரப்பிரஸ்தத்தில் இருப்பதினாலே துரியோதனன் துச்சாதனன் சகுனி கர்னன் என்

கிற துட்ட சதுஷ்டர்களுடைய தொந்தரை யில்லாம லிருந்தது. அந்த இராஜ்ய்மானது தருமத்தினாலும் கல்வியினாலும் திறமையினாலும் குடிகளாலும் தசாங்கங்களாலும் செழிப்பினாலும் எவரும் வெல்லக்கூடாத மேன்மையோ டிருந்தது. நீதிவழுவாது சிலதினங்கள் கழித்தவுடனே தருமபுத்திரர் விசுவகன்மாவையும் வியாசமுனிவரையும் பூசித்து அனுப்பிவிட்டுத் தமது நகரத்திற்குச் செல்லவேண்டு மென்கிற நினைப்புள்ளவராகிய கண்ணனை மிகுந்த வினயத்துடனே பார்த்து "ஓ யாதவகுலசிகாமணியாகிய எங்களுயிர்த்தோழரே, உமதனுக்கிரகத்தினாலன்றோ இவ்விராஜ்யம் எங்கட்குக் கிடைத்தது; அன்றியும் அண்டக்கூடாத காடாய்க் கிடந்த இவ்விடம் குபேரனுடைய நகரைப் பார்க்கிலும் விசேஷமான கோலத்தோடும் விளங்குகின்றது. இன்னும் உம்முடைய பலத்தினாலேயே நாங்களிந்த இராஜ்யத்தி லுறுதிபெற் றிருக்கிறோம். எங்களுக்கு நீரல்லாது கதி வேறில்லை. எந்தெந்த வேளையில் என்னென்ன செய்யவேண்டுமோ அவைகளை நீரே உமது பேரறிவினாலே அறிந்து செய்யவேண்டுமென்று கோருகிறேன். உமது மகிமையையும் வல்லமையையும் என்னாற் சொல்லக்கூடுமோ? நீர் எனக்கு எவ்வாறு கட்டளை இடுகின்றீரோ அக்கட்டளைப்படி நடக்கக் காத்திருக்கிறேன்" என்றுசொன்னார். அதுகேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் "ஓ மஹாராஜனே, உமது தருமகுணத்தினாலே இராஜ்யம் கிடைத்ததேயன்றி வேறில்லை. உமக்குக் குலக்கிரமமாய் வரும் இராஜ்யத்தைத் தடைசெய்ய யார்வல்லவர்? துராத்மாக்களாகிய குருடன்மைந்தராகுந் திருடர்கள் இனி உங்களை என்னசெய்ய மாட்டுவார்கள்? நீர் விசாரப்படாமற் சுகமாய்க் குடிகளைக் காத்துக் கொண் டிரும். உங்களுக்கு ஒருகுறைவும் வராது. சுருக்கமாக உமக்குத் தருமத்தை உபதேசிக்கிறேன்கேளும்.

வேதியரை அன்போடு பூசிப்பதைவிட வேறு தருமமில்லை. மகா பெருமை பொருந்திய நாரதரென்கிற தேவமுனி உம்மிடத்திற்கு எழுந்தருளுவார். அவரைப் பயபக்தியுடனே பூதித்துப் போற்றும். இதைப் பார்க்கிலும் உமக்கு நான் சொல்லவேண்டிய தொன்றுமில்லை." என்று சொல்லிவிட்டுக் குந்தியினிடத்திற்குப் போய்த் தண்டனிட்டு, மிருதுவாகிய சொல்லாலே, "ஓ அத்தாய்! நான் ஊருக்குப் போகிறேன். விடை கொடுக்கவேண்டும்" என்று கேட்டார். அதற்குக் குந்தியானவள் "அப்பா என் கண்போன்ற கமலக்கண்ணா! அரக்குமாளிகையில் நாங்கள் பட்டபாடு நீ அறி

யாய். எங்களையன் குந்திபோஜனு மறியார். அப்படி யிருந்தும் அவ்விபத்தைக் கேட்ட மாத்திரத்தில், எங்களைக்குறித்து நீங்களும் மிகுந்த விசனத்தை அனுபவித்தீர்கள். இப்படி மிகுந்த வல்லமையும் அரசாட்சியு முடையவர்களுக்கே அடிக்கடி துக்கங்கள் நேரிடும்போது அநாதைகளாயிருக்கிற தரித்திரர்களுக்குக் கேட்க வேண்டிய தென்ன விருக்கின்றது? இப்பொழுது உன்னைக் கண்டபடியினாலே என்னுடைய துக்கமெல்லாம் நீங்கின. நீ எம்மைச் சிந்தித்துக்கொண் டிருந்தாற் போதும். உன்னுடைய கிருபா சிந்தனையாற் பாண்டவர்கள் யாதொரு குறைவுமின்றி அபிவிர்த்தியாவார்கள். ஆதலால் தயைசெய்து நீ சமயங்களிற் பாண்டவர்களை நினைக்கவேண்டும். இதுதான் எனக்கு உன்னாற் கிடைக்க வேண்டிய வரம்" என்று சொன்னாள். கண்ணன் உமதாணையைச் சிரத்திற்றாங்கினேன்" என்று சொல்லிக் கும்பிட்டு விடைபெற்று, தமது பரிவாரங்களோடு புறப்பட்டுத் துவாரகைக்குச் சென்றார். பாண்டவர்களும் கிருஷ்ணனையே நினைத்துக்கொண்டு, இந்திரப்பிரஸ்தத்தில் அரசாட்சி செலுத்தி வந்தார்கள்" என்று சொல்லி வருகிற வைசம்பாயனமுனியை ஜனமேஜய மகாராஜன் வினவுகிறான்: "சுவாமி! என் மூன்றாம்பாட்டர்களாகிய பாண்டவர்கள் இந்திரப்பிரஸ்தத்தில் இராஜ்யத்தை அடைந்தபின் என்ன செய்தார்கள்? தருமநிலை தவறாத பதிவிரதையாகிய திரௌபதை தன் கணவர் ஐவரையும் எப்படி அனுசரித்து வந்தாள்? அந்த ஐவரும் ஒருவருக்கொருவர் விரோதமில்லாமல் ஒரு ஸ்திரீயினிடத்திலே எப்படி யிருந்தார்கள்? இந்தச் சரிதத்தைப் பிரகாசிக்கச் சொல்ல வேண்டும். நான் இதைக் கேட்க மிக விருப்பமுற் றிருக்கிறேன். தயைசெய் தருளும்" என்று கேட்க, வைசம்பாயன மஹாமுனியானவர் மகா சந்தோஷத்தோடு அவ்வரசனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

---

## நாரதமுனிவர் பாண்டவர்கட்குச் சில கட்டுப்பாடுரைத்தல்

---

"ஓ ஜனமேஜ மகாராஜனே! இந்தப்படி திரிதராஷ்டிர மஹாராஜாவினுடைய அனுமதியினாலே பாதிராஜ்யத்தை அடைந்த உமது பெரியோர்களாகிய பாண்டவர்கள் சத்திய சங்

தர்களாயும் - கபட மற்றவர்களாயும் - தயை முதலிய நற்குணங்க ளோடு கூடியவர்களாயும் - நீதியோடு சகல ஜனங்களேயும் காப்பாற்றிக்கொண்டு இந்திரப்பிரஸ்தத்தில் சுகமா யிருந்தார்கள். இப்படியிருக்க, இவர்கள் ஒருநாள் சபையிலிருந்து பட்டணத்துக் குடிகளுடைய காரியங்களை விசாரணை செய்துவருங் காலத்தில், நான்கு வேதங்களையும் - முப்பத்திரண்டு உபநிடதங்களையும் - பதினெண் புராணங்களையும் - மற்ற இதிகாசங்களையும் நன்றாய்க் கற்றுணர்ந்தவரும், உயிரெழுத்து - மெய்யெழுத்து - தனே - மாத்திரை - பிரயத்தினம் இவை முதலிய இலக்கணவிதி தப்பாமற் சரியாய் இசைக்கவல்லவரும், வேதசுரங்களை இடமறிந்து மெலித்து வலித்து உச்சரிக்கவல்லவரும், பகுதி - விகுதி அறிந்து பிரகரணத்திற்குத் தகுந்தபடி சொற்களைப் பிரயோகிக்கத் தக்கவரும், மந்திரங்களை யந்திரதேவதா கல்பங்களுடன் அறிந்தவரும், வைதிகலௌகிக வாக்கியங்களை ஓசை குன்றாம விணைக்கத் தகுந்தவரும், காவிய நாடகங்கள் செய்யுந் திறமையுடையவரும், மொழிகளுக்கு இடமறிந்து பொருள்கூறத் தக்கவரும், சொற்களுக்கெல்லாம் செம்பொருள் ஆக்கப் பொருளாதிகளை நிச்சயிக்க வல்லவரும், நிஷாத முதலாகிய சப்தசுரங்களையும் - சப்த தாளங்களையும் அறிந்து மந்திரம் - மத்திமம் - தாரம் என்கிற மூவகையாலும் இராகங்கள் பொருந்தத் தாளவரிசை முதலிய சங்கீதங்களைப் பாடவல்லவரும், சகலவேதாகம புராணங்களுடைய பொருளை நிச்சயித்துச் சொல்லத் தகுந்தவரும், தருமசாஸ்திரமெல்லாம் அறிந்து தருமசூக்குமத்தை அதிற் சந்தேகம் வாராதபடி சொல்ல வல்லவரும், சுக்கிராசாரியர் முதலாகியவர்கள் செய்த நீதிநூலை யறிந்து பிரயோகிக்கத் தக்கவரும், சிற்பசாஸ்திரம் - வியாகரண சாஸ்திரம் - வைத்திய சாஸ்திர முதலாகிய பல சாஸ்திரங்களின் பொருளைச் சம்பூரணமாக அறிந்தவரும், சந்தோவிசிதியென்னும் நூலின்படி சந்தங்களிற் பாடல்க ளிசைக்க வல்லவரும், மூன்று ஸ்கந்தங்களாக வகுக்கப்பட்டிருக்கிற சோதிடநூலை நன்றாயறிந்து பூகோளம் - ஆகாய கோளம் - நக்ஷத்திரங்கள் - கிரகங்கள் - இவைகளின் ஓட்ட முதலியவைகள் கிரகணங்கள் - திதிவாராதி காலங்கள் இவைகளை அறிந்தவரும், இவைகளாற் ஜாதகபலன்களையும் - உற்பாதாதி யோகங்களையும், பலகால வர்த்தமானங்களையு மறிந்து நன்றாகச் சொல்லுந் திறமையுடையவரும், கல்ப சூத்திரங்களை யெல்லாம் முற்றுமறிந்து பிரயோகஞ்செய்யத் தகுந்தவரும், மீமாம்சை

யென்னுஞ் சாத்திரத்தின் அதிகரணங்களில் வல்லவரும், நியாய நூலின்படிப் பிரசங்கிக்கத் தகுந்தவரும், சமயோசிதமாய்ப் பேசுந் திறமை யுடையவரும், கணிதங்களில் அதிக சாமர்த்தியமுள்ள வரும், இங்கிதங்களாலேயே மனதை அறிய வல்லவரும், வேதாந்த மெல்லா மறிந்து சகல தத்துவ நிச்சயமுள்ளவரும், பரமாத்து மாவை வேருகவு மொன்ருகவும் பாவனை செய்பவரும், யோக நூல் - சாங்கியநூல் - இவைகளின்படி சமாதிகளெல்லாம் செய்யத் தகுந்தவரும், நிஷ்காமமாகிய தவத்தினுலே மகாதேஜசு பொருந்தி யிருப்பவரும், விதிவழுவாமல் அனுஷ்டானஞ் செய்ப வரும், தயை - பொறுமை - சத்தியம் - முதலான எண் குணங்களுக் கிடமானவரும், எப்பொழுதுங் கடவுளைத் தியானிப் பதும் - துதிப்பதும் தொழுவதுமே கருமமாகக்கொண் டிருப்ப வரும், இயல்பாகக் காமாதிவிகாரங்க ளற்றவரும், தேவதா நிச்சய முள்ளவரும், சகல முனிவராலும் - வித்துவான்க ளாலும் - பூசிக்கப்பட்டவரும், தருமங்களுக்கு எல்லை ஏற்படும் படி பல நூல்களைச் செய்தவரும், சம்சாரிகள்போல உலக நடை யறிந்தவரும், திரிகாலமுணர்ந்தவரும், மூன்றுலோகங்களை யுங் கண்டவரும், இன்னும் பலவிதமாகிய சொல்ல முடியாத பெருமை யுடையவருமாகிய நாரதபகவான் பூரணசந்திர மண்ட லம்போல் வெளுத்த நெடிய திருமேனி யுடையவராய், தேவேந் திரன் கொடுத்த மென்மையும் நாணயமும் - பளபளப்புமுடைய இரண்டு வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு, பதினாறுமாற்றுத் தங்கத்தினுற்செய்து ஒருவகைப்பட்ட காராவின் முகம்போன்ற உருவுடையவையாயும் - அக்கினிச்சுடர்போன்ற ஒளியுடைய வையாயும் இருக்கிற இரண்டு குண்டலங்களை யணிந்துகொண்டு, சிவந்த சடாவியுடையவரா யிருப்பதினுல் வெண்மையாகிய மேகங் களாற் சூழப்பட்டுப் பொன்னிறமுடைய கொடிப்புதரினுல் மூடப் பட்டது போன்ற முடியுடையவராய், பௌத்தமத சித்தாந்தப்படி இரண்டு சூரியபிம்பங்கள் இருபுறங்களிலுந் தோற்ற விளங்கா நின்ற ஒரு வெள்ளைமலைக்குச் சமானமாய், கணுக்கையில் விளங்கா நின்ற படிக ஜபமாலையுடனே காற்றின் விசையினுல் தானே விசித்திரமாக இசைபாடாநின்ற மகதீ என்கிற வீணையை யொரு கையி லேந்தி, மற்றொருகையால் வெள்ளிக்குடை பிடித்துக் கொண்டு, மேற் புறத்திற் சந்திரமண்டல முலாவுங்காற் கீழிரா நின்ற கைலாயமலைக்கு நிகராய்ப் பிரமதேஜசு இவ்வுருவங்

கொண்டதோ வென்று சந்தேகிக்கும்படி ஜாஜ்வல்யமான ரூப முடையவராய், ஆகாயத்தின் வழியே அனேக ரிஷிகளும் தேவர்க ளும் போற்ற, பூமியி லிருப்போரெல்லாம் இதென்ன வானத்தி னின்றும் ஓர் ஒளிக்கூட்ட மிறங்கி வருகின்றது என்றேற்ற, இது சூரியனே? சந்திரனே? அக்கினியோ? என்று யாவரும் பயமும் ஆச்சரியமுமாக நோக்கிநிற்க, சாம வேத கீத வொலியி னாலே கேட்போர் செவிக்கு அமுதத்தையும் மனத்திற்குப் பரிசுத் தத்தையு மளித்துக்கொண்டு, பாண்டவர்களுடைய அரண்மனைச் சபாமண்டபத்தினருகில் இறங்கினர்.

இம்மகாமுனிவர் இவ்வாறு எழுந்தருளக்கண்ட பாண்டுகுமாரர் கள் மிகப் பரபரப்புடனே ஆசனங்களினின்றும் எழுந்து எதிர் கொண்டுசென்று, சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு, இருகரங்களையுஞ் சிரமேற் கூப்பிநின்று, "ஓ சுவாமி! ஓ மகாநுபாவா! தேவர்கள் முதலிய யாவருங் கண்டமாத்திரத்தில் யாங்கள் செய்த தவப்பயனே யென்று சொல்லும்படியான முனிவர் நாயகனே! தேவரீர் இவ்வாச னத்தி லுட்காரவேண்டும்" என்று பிரார்த்தித்துக் கிருஷ்ணசன மேற்போர்த்த சிம்மாசனமொன் றமைக்க அதில் அம்முனிவர் உட் கார்ந்தருளி, சகலபுண்ணிய தீர்த்தங்களாலே நிறைக்கப்பட்ட தமது கமண்டலதீர்த்தத்தை எடுத்து வணங்கிநிரா நின்ற பாண்டவர் சிரங்களிற் புரோட்சித்து ஆசிர்வாதம் செய்தார். பாண்டவரும் பரி சுத்தமாகிய சொர்னபாத்திரத்திலே தருப்பை நுனிகளும் மலர்களும் சுகந்த வஸ்துக்களும் போட்ட தண்ணீரினால் முனிவர்க்கு அருக்கி யங் கொடுத்து, அழகிய பொற்றட்டிலே அம்முனிரவது பாத தாமரைகளை வைத்து, விதிப்படி அபிஷேகஞ்செய்தார்கள். பரி சுத்தஜலமாகிய அவரதுபாதோதகத்தைத் தருமர் தமது சிரத்தி லும் தம்பிகள் சிரத்திலும் புரோட்சித்துத் தம்பிமார்களுடனே அத்தீர்த்தத்தை உட்கொண்டு, திவ்வியமாகிய கோமதுபர்க்கத்தை அம்முனிவருக்கு நிவேதனம்பண்ணி, "சுவாமி! இந்த இராஜ்யமும் நாங்களும் தேவரீ ரடைக்கலம். அடியேங்களை அன்புகூர்ந்து ஆட் கொள்ள வேண்டும். இன்றைக்குத்தான் எங்கள் பிறவி பயன் பட்டது. அருமையாகிய தேவர் தரிசனங் கிடைக்கும்படி நாங்க ளென்ன தவஞ் செய்தோமோ தெரியவில்லை. எளியராகிய அடி யேங்களுக்குக் காட்சிகொடுத்த தேவரீருடைய பேரருளைத் துதிக்க யாம்வல்லமோ? ஆ! ஆ! என்ன பாக்கியம்! நாங்களின் றடைந்த இச்சிலாக்கிய போக்கியம்!" என்று மிக ஆனந்தத்தினாலே

கண்களில் நீர்பெருகத் தேகமெல்லாம் புளகமுற்று நின்றார். அக்கால் அந்த நாரதமகாமுனிவர் தருமபுத்திரரை நோக்கி, "நீர் செய்த பூஜையால் நமக்குச் சந்தோஷமாயிற்று. இனி நீர் உம்முடைய் தம்பிமார்களுடனே ஆசனங்களி லுட்காரவேண்டும்" என்று கட்டளையிடத் தருமபுத்திரரும் அப்படியே உட்கார்ந்து திரௌபதையை வரவழைத்தார். அந்தப் பாஞ்சாலியும் மிகுந்த பயபக்தியுடனே சபையில் வந்து, அந்தத் தேவமுனிவரது திருவடித்தாமரைகளைத் தொழுது வணக்கத்துடன் கைகூப்பி நின்றாள். அம்முனியரசு அவளுக்கும் பலவாக ஆசிகள் கூறி, "பெண்ணே! நீ அந்தப்புரத்திற்குப் போ" என்று நியமித்தருளினார். அவளும் அப்படியே போனவுடனே சபையிலிருந்த மற்றவர்களையும் போகச்செய்து, ஏகாந்தத்திலே பாண்டவர்களைப் பார்த்து நாரதமுனிவர் சொல்லுகின்றார்.—

"ஓ பாண்டுகுமாரர்களே! நீங்கள் தருமந் தவறாதவர்களாகையாலே, உங்களுக்கு நேரிட்ட இடர்களெல்லாம் நீங்கிப்போயின. ரூபத்திலும் குணத்திலும் ஒப்பில்லாதவளாகிய துருபதராஜன் மகளை விவாகஞ்செய்து கொண்டீர்கள். கண்ணனுடைய அநுக்கிரகத்தினாலே இந்தத் திவ்விய நகரத்தை அடைந்து செங்கோல் செலுத்தி வருகிறீர்கள். ஆனால் உங்களுக்கொன்று சொல்லுகிறேன்; உற்றுக்கேளுங்கள். உலகத்திலே எவர்களுக்குங் கட்டுப்பாட்டினாலேயே சகல மேன்மைகளு முண்டாகின்றன. அந்தக் கட்டுப்பாட்டைக் கெடுப்பதற்குக் காரணம் ஒரு பொருளைப் பலர் விரும்பி இருப்பதேயாம். அப்பொருள்களி லெல்லாம் பெண்ணென்பது பொன்னைப்பார்க்கிலும் விசேஷமானது. பெரும்பாலும் அப்பெண்ணே உலகத்தில் நன்மைக்குந் தீமைக்கும் காரணமாகிறாள். ஆதலாலே நீங்கள் ஐவரும் இந்தப் பாஞ்சாலியொருத்தியை அநுபவித்து வருகிறீர்கள். ஆனால் அந்தப்பெண்ணும் நல்ல சுபாவமுள்ளவள்தான். நீங்களும் அப்படிப் பட்டவர்கள்தான். ஆகிலும் இது மூலமாய் உங்களுக்குள் ஒரு விரோதமும் வராதிருக்கும்படி ஓர் ஏற்பாட்டைச் செய்ய வேண்டும். இப்படித்தான் முற்காலத்திற் சுந்தனென்றும் உபசுந்தனென்றும், இருவர் அண்ணன் தம்பிக ளிருந்தார்கள். அவ்விருவருக்கும் திலோத்தமை என்பவள் நிமித்தமாகப் பகையுண்டாயிற்று. பின் இருவரும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு மாண்டார்கள். ஆதலால் நீங்கள் இந்தச் சிநேகத்தைக் காப்பாற்றுவதற்கு ஒரு

நிபந்தனை செய்துகொள்ள வேண்டிய அவசியமுண்டு" என்று சொல்ல, அதைக்கேட்ட தருமபுத்திரர் "ஓ முனிநாதா! சுந்தோப சுந்தர்களென்பவர்கள் யார்? அவர்கள் யாருடைய பிள்ளைகள்? அந்தத் திலோத்தமை என்பவள் அவ்விருவருக்குள் பகை எவ்வாறு நேரிடச் செய்தாள்? இந்தச் சரித்திரத்தை விவரமாய்க் கேட்க அடியேங்கட்கு அபேட்சை யிருக்கிறபடியால், அதனைச் சுவாமி கள் தயைசெய்து திருவாய்மலர்ந்தருள வேண்டும்" என்ன நாரதர் சொல்லலுற்றார்.

---

## சுந்தோபசுந்தர் சரித்திரம்

---

"கேளுங்கள் பாண்டவர்களே! முற்காலத்தில் இரணியகசிபு என்று பெயருடைய மகா அசுர னிருந்தான். அவனுடைய குலத்தில் நிகும்பனென்று ஓர் அசுரன் பிறந்தான். அவனுடைய புத்திரர் தான் இப்போது நான் சொல்லப்போகிற சுந்தோபசுந்தர்கள். அவர்களுடைய வீரியமும் - தைரியமும் - ஒப்புவமையற்றன. சௌரியமென்பது அவர்களிடத்திலே குடிகொண்டிருந்தது. அவர்களுடைய இறுமாப்பு பார்க்கும்போதே யாவரும் பயமடையும்படி இருக்கும். அவர்களுடைய மனம் வாக்கு காயம் என்கிற மூன்று கரணங்களும் கொடுமை என்னுங் குணத்தோடு வளர்ந்தனவாம். அவ்விருவரும் ஒரே மனதாயிருந்து வேற்றுமையின்றி ஒருகாரியத்திற் புகுவார்கள்; இன்ப துன்பங்களிலும் பங்காளிகளாக விருப்பார்கள். ஒருவனுக்கு இஷ்டமானபடியே மற்றொருவனுஞ் செய்கிறதும் பேசுகிறதுமன்றி மாறுபடுகிறதில்லை. அவர்கள் உண்பதும் - உறங்குவதும் - இருப்பதும் - போவதும், கூடவேயன்றி ஒருபோதும் தனித்ததில்லை. அப்படி அவர்களிருப்பதினாலே யாவரும் ஓர் ஆன்மாவே இரண்டு தேகமெடுத்தது என்று சொல்லுவதுண்டு. அவ்விருவரும் இவ்வாறு ஒருமையாக வளர்ந்து, தேவர்களை யெல்லாம் ஜயித்து, மூவுலகங்களையுங் கைவசப்படுத்திக்கொள்ள வேண்டுமென்கிற கருத்துக்கொண்டு, விந்தியமென்கிற மலையில் தீக்ஷையோடு உக்கிரமாகிய தவஞ்செய்ய ஆரம்பித்தார்கள். அத்தவ வித்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். இடுப்பில் மரவுரியும் முடியிற் சடைமுடியும் தரித்துக் கொண்டு, பசிதாகங்களையும் வெம்மை தண்மைகளையும் சகித்து,

காமக்குரோத முதலியவைகளை அடக்கி, தேகங்களில் மண்புழுதி களும் பட்சிகளுடைய மலமூத்திரங்களும் படிந்து விகாரமுண்டா யிருக்க இரண்டு கைகளையும் தலைக்குமேல் தூக்கிக் கூப்பிக் கொண்டு, காற்பெருவிரலின் நுனியினாலே பூமியில் நின்று, சில காலம் வாயு பக்ஷணம் செய்துகொண்டும் வருணபக்ஷணம் செய்து கொண்டும் தங்கள் சதைகளை அக்கினியில் ஹோமம் பண்ணியும், இவ்வாறு நெடுங்காலம் வழுவில்லாத தவத்தைச்செய்து வந்தார்கள்.

அவர்களுடைய தவமென்னும் அனலினாலே அந்த விந்திய மலையானது புகைசூழ்ந்து, மேகங்களாற் போர்த்தப்பட்டது போல் தோன்றியது. இவர்கள் செய்யுந் தவத்தைக் கண்ட தேவர்கள் மிகவும் பயமடைந்து, அத்தவத்தை அழிப்பதற் காகக் கோடி சூரியப் பிரகாசங்களாகிய திவ்விய இரத்தினாபரணங் களையும் நிகரில்லாப் பேரழகையுமுடைய மங்கையர்களாலே அவர்கள் மனதைக் கலைக்கப்பார்த்தார்கள். இவைகளாலேயும் மற்றெவைகளாலேயும் அவர்கள் மனவுறுதி நீங்காமல் தவத்திற்கு வசப்பட் டிருந்தமைகண்ட தேவர்கள் அவ்வசுரவீரர்களுடைய தாய் - தந்தை - பெண்டிர் - மக்கள் - உடன் பிறந்தார் - முதலா கிய சுற்றத்தார் போல் வேடங்கொண்டு ஓர் இராட்சத னாலே துரத்தியடிக்கப்பட்டவர்போலாகி, தேகமெல்லாம் நடுக்க முற வேர்த்து, தலைமயிர் அவிழ்ந்து விரிந்தாட வஸ்திரங் கள் வீழ்ந்து புரளக் கோவென்று கதறிக்கொண்டு அவ்வசுரப் பிள்ளைகளி னருகில் வந்து கண்ணீர் பெருகப் புலம்பலானார்கள். அது கண்டும் அவர்கள் தவத்தினின்று மீளாமலிருந்தார்கள். அத னால் அந்த மாயாபந்துக்கள் உடனே பயந்து மறைந்து போயினர்.

இந்நிலையிற் கடினமாகிய தவஞ்செய்துகொண் டிருக்கும் அவ்வசுரப்பிள்ளைக ளிடத்திற்குப் பிரமதேவர் வந்து, "ஓ அசுரகுமாரர்களே! உங்களுக்கு வரங்கொடுக்க வந்தேன். வேண்டி யதைக் கேளுங்கள்" என்ன அவர்களும் எழுந்து பிரமதேவரைத் தண்டனிட்டுக் கைகூப்பி நின்று, "சுவாமி! எங்கள் தவத்தினாலே தேவரீர் சந்தோஷமடைந்து எழுந்தருளியபடியால், தேவரீருடைய கிருபையினாலே நாங்கள் சகல மாயைகளையும் அறிந்தவர்களாகவும், மகாபலசாலிகளாகவும், வேண்டியபடி காமரூபங்கொள்ளவும், எக் காலத்தும் மரணமில்லாதிருக்கவும் வரம் வேண்டும்" என்றார்கள்.

திசைமுகத்தேவர், "அசுரர்களே, உங்களுக்கு காலத்தும் மரண மில்லாமை தவிர மற்றவைகளெல்லாம் உண்டாகும். ஏனென்றால் நீங்கள் தேவர்களோடு சண்டைசெய்து மூன்று லோகங்களையுங் கைவசப்படுத்தவேண்டு மென்கிற கருத்தினாலே இந்தத் தவத்திற்குப் பிரவேசித்தீர்கள். ஆகையால் அப்படிப்பட்ட கெட்டகாரியத்திற்கு அனுகூலமாகிய வரத்தை நாம் கொடுப்பதில்லை" என்று சொல்ல, அவ்வசுரர் "சுவாமி! அப்படித் தேவரீருக்குத் திருவுளமில்லாவிட்டால் மற்றொருவிதமாக வரங்கேட்கிறோம். அதனைத் தரல்வேண்டும். அதாவது: இந்தத் திரிலோகங்களிலுமுள்ள எந்தச் சராசரங்களினாலும், மற்றெந்த வஸ்துக்களாலும், எங்களுக்கு ஒரு வித பயமும் உண்டாகாமலிருக்க வேண்டும். ஆனால் எங்களுக்கு ஏதாகிலும் ஒரு கேடுவருகிறதா யிருந்தால், எங்கள் இருவருக்குள்ளாகவே உண்டாக வேண்டும். இந்த வரத்தையாகிலும் அளித்து எங்களைக் காப்பாற்ற வேண்டும்" என்று பிரார்த்திக்கப் பிரமதேவர் "அப்படியே உங்களுக்கு வரங்கொடுத்தேன்" என்று சொல்லித் தம்முடைய லோகத்திற்குப் போனார். அந்தச் சுந்தோப சுந்தரும் இவ்விதமாகச் சிறந்த வரம் பெற்றுக்கொண்டு, மிகுந்த சந்தோஷத்துடனே அசுரரெல்லாருங் கொண்டாடத் தங்களிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

அப்பால் இவர்களுக்கு மிகுந்த பெருமையுண்டாகி, தங்களுடைய பலத்தினாலே கொஞ்சமேனும் அச்சமில்லாமல், இஷ்டமானபடி உண்கிறதும் - குடிக்கிறதும் - துர்ச்செய்கை செய்கிறதும் - படுக்கிறதும் - விளையாடுகிறதும் - பாடுகிறதும் - ஆடுகிறதும் - தேடுகிறதும் - கொடுக்கிறதும் - வாங்குகிறதுமாக, இருந்தனர். பின் சடைகளைப் பிரித்து ரத்தினக்கிரீடஞ் சூடிக் கேயூர முதலான சகல ஆபரணங்களையுந் தரித்து, திவ்விய வஸ்திரங்களையுடுத்து, பச்சைக் கர்ப்பூரம் - குங்குமப்பூ - கஸ்தூரி - முதலியவைகளை சேர்த்த சந்தனம்பூசி, மாறுதகிறமும் வாசனையும் பொருந்திய பூமாலைகளுந்தரித்து, அசுரரை யெல்லாம் கூப்பிட்டுத் தேவலோகத்தின்மேல் தண்டெடுக்க வேண்டுமென்று நிச்சயம் பண்ணி, குடை - கொடி - சாமரம் - முதலிய சின்னங்களுடனும், பேரிகை முதலிய வாத்தியகோஷத்துடனும், சமுத்திரம் போன்ற சேனைகளைக் கூட்டிக்கொண்டு புறப்பட்டார்கள். இவர்கள் சண்டைக்கு வருவதைப் பார்த்துத் தேவத் தலைவர்களெல்லாரும் பிரமலோகம் போய்ச் சேர்ந்தார்கள். அவ்வசுரரிருவரும் தேவர்

இயக்கர் - க்ருடர் - கந்தருவர் முதலிய அனேகரைச் ஜயித்துத் தேவலோகத்தைச் சுவாதீனம் பண்ணிக்கொண்டு, பாதாளலோகத்திற்குப் போய் அங்கிருந்த நாகங்களையும் ஜயித்து அந்த லோகத்தையும் சுவாதீனஞ் செய்துகொண்டு, சமுத்திரத் திலே வாசம் பண்ணிக்கொண்டிருந்த மிலேச்சர்களையும் ஜயித்துப் பின்பு பூமியைக் கைவசப்படுத்த வேண்டுமென்று யத்தினப் பட்டார்கள்.

பிற்பாடு தங்களுடைய சேனைத்தலைவர்களைப் பார்த்து, "கேளுங்கள் அசுரர்களே! இருடிகளெல்லாரும் செய்துவருகிற யக்கியங்களினாலும், மற்றப்பிராமணர்கள் கொடுத்து வருகிற அவிய க்வியங்களினாலும், தேவர்களுக்குப் பலமும்-தேஜசும்-சம்பத்தும்-விருத்தியாகின்றன. ஆதலால் இவர்களெல்லாரும் நமக்குச் சத் துருக்களானார்கள். ஆனதுபற்றி நாமெல்லாரும் ஒன்றாயிருந்து அஞ் சாமல் அந்த முனிவர்களையும் மறையோர்களையும் கண்டவிடத் திற் பிடித்து அடித்துக் கொல்லவேண்டும். அவர்கள் செய்கிற யாகங்களையும், மற்றும் வைதிக காரியங்களையும், நிறைவேற வொட் டாமல் தடுத்துப் போடவேண்டும். ஆதலால் இந்தக் காரியத்தில் நீங்கள் ஏமாறாமல் இருங்கள்" என்று கட்டளையிட்டுக் கிழக்குச் சமுத்திரக் கரைக்கு வந்து சேர்ந்து அங்கே தண்டுகளை இறக்கி விட்டுப் பிறகு எங்கே வேதியர்கள் வேள்வி செய்கின்றார் களோ அவ்விடங்களிலே சென்று அவர்களை யெல்லாம் பிடித்துக் கட்டி யடித்து, வேள்விக்குரிய கருவிகளையெல்லாம் வாரி நீரி லெறிந்து, ஆசிரமங்களில் பிரவேசித்துச் சில இருடிகளைப்பற்றித் தாடிகளையும் சடைகளையும் பிடித்து இழுத்துப் பற்களை உதிர்த்தும் சிலரைக் கைகால்களை யொடித்துக் கழுத்தை முறித்துத் தொந் தரவு செய்துகொண்டும் வந்தார்கள். இப்படி இவர்களால் தொந் தரவு செய்யப்பட்ட இருடிகள் முதலான பேர்கள் எல்லாவற்றையும் விட்டு ஓடிப்போய் மலைகளிலும் குகைகளிலும் ஒளித்துப் பிரா ணனைக் காப்பாற்ற முயன்றிருந்தார்கள். ஆசிரமங்களெல்லாம் உடைந்து பாழாய்ப்போயின. கரகங்களினாலேயும், ஒடிந்த சருவ முதலான பாத்திரங்களினாலேயும் முறிக்கப்பட்ட மரங்களினாலே யும், பெருஞ் செல்வத்திலிருந்தவர் அடியுண்டு மிகுந்த வறுமை யினால் இடியுண்டு சோர்வினை யடைந்து உறங்கியிருப்பதுபோ லிருந்தனர். இவ்வுலகமெல்லாம் வேதகோஷ்டமும் வைதிகக்

கிரியைகளும் பிரமரிஷிகள் இராஜரிஷிகள் முதலிய சத்துக்களு மில்லாம லிருந்தபடியால் எல்லா வளமுங் குன்றிப் பாழ்பட் டதுபோ லாயிற்று.

இப்படி உலகத்தையெல்லாம் ரசாபாசம் பண்ணிக்கொண்டு வருவதல்லாமல் ஓடிப்போன இருடிகளையுங் கண்டுபிடித்துக்கொல்ல வேண்டுமென்று அவ்வசுரரிருவரும் சில விடங்களில் மதயானைக ளாகியும், சில விடங்களிற் சிங்கங்களாயும், சில விடங்களிற் புலிக ளாயும், இப்படி அநேக ரூபங்களைத் தாங்கி ஒளித்திருக்கும் முனி வர் முதலாகிய பேர்களைப் பிடித்து யமலோகத்திற்கு அனுப்பி விட்டார்கள். இவ்வாறே ராஜாக்களையும் துரத்தி யடித்துக் கொன்று, அவர்கள் பூமியைச் சுவாதீனஞ் செய்து கொண்டார் கள். இப்படியாகவே கருடனைக் கண்ட பாம்புகள் போற் சகல ஜனங்களும் வீடு மாடு முதலியவைகளை விட்டுச் சிதறிப்போய் அநேக வருத்தங்களை அனுபவித்து வந்தார்கள். பூமியெங்கும் பயிரிடுதல் முதலான ஒரு தொழில்களும் இல்லாமற் பஞ்சமடைந் திருந்தது. இருடிகளினுஞ் சாபங்களெல்லாம் கல்லின்மேல் விட்ட அம்புகள்போல் இவர்கள்மேல் ஏறுமற்போயின. சமுத்திரம் வளைந்த பூலோகத்தை மயானம்போல் எலும்புகளும் - மண்டை ஓடுகளும் - கழுகுகளும் - கூளிகளும் - பேய்களும் - நாய்களும்-நரி களும் நிறைந்ததாகவும், சுபமாகிய ஓர் காரியமு மில்லாததாகவுஞ் செய்து; தாங்களிருவரும் மிகுந்த சந்தோஷத்துடனே குரு க்ஷேத்திரத்திற் சைனியங்ளோ டிறங்கி வாசஞ்செய்து கொண்டி ருந்தார்கள்.

இப்படியாகவே சகல தேவ இருடிகளும் பிரம இருடிகளும் மிகுந்த விசனமடைந்து, உலககர்த்தாவாகிய பிரமதேவனுடைய திருமாளிகைக்குச் சென்று, அவ்விடத்திலே தேவர்களும் புடை சூழ்ந்திருக்க சநகர் - சநந்தனர் - சநத்குமாரர் - முதலாகிய சித்த யோகிகள் ஒரு பக்கத்திலிருக்க நான்கு முகங்களில் நான்கு வேதங் களும் ஒலிக்கக் கோடிசூரியபிரகாசமாக எழுந்தருளியிருந்த பிரமதேவரைக் கண்டு சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, சுந்தோப சுந்தர்களால் நேரிட்ட தொந்தரவைச் சம்பூர்ணமாகச் சொன்னார் கள். அது கேட்டு அந்தச் சபையிலிருந்த - அக்கினி - வாயு - சந் திர, சூரியர் - இயமன் - இந்திரன் முதலாகிய பல தேவர்களும், வைகானசர் - வாலகில்லியர் - சேர்ம்பர் - மரீசியர் - அஜர் - விமூடர்

தேசோகருப்பர் என்கிற பல இருடிகளும், இந்தச் சங்கதியைக் குறித்துப் பிரமதேவருக்கு விண்ணப்பஞ்செய்தார்கள். பிரமதேவர் இந்தச் சரித்திரத்தைக் கேட்டு ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்து, அவர்களுடைய விநாசத்துக்காகச் செய்யவேண்டிய உபாயமொன்று மனதில் நிச்சயஞ் செய்துகொண்டு, விசுவகர்மாவை அழைத்து, "நீ நிகரற்ற ரூபலாவணிய சௌந்தரியங்களுடனே கூடிய ஒரு பெண்ணைச் சீக்கிரத்தில் உண்டாக்கவேண்டும்" என்று கட்டளை யிட்டார். அந்த விசுவகர்மா பிரமதேவரைக் கும்பிட்டு, அப்படியே ஒரு பெண்ணை மிகுந்த முயற்சியாலே சிருஷ்டித்தான். அந்தப் பெண்ணின் சிறப்பைச் சிறிது சொல்லுகிறேன் கேளும்:

ஓ ஜனமேஜய மகாராஜனே! அவ் விசுவகர்மாவானவன் உலகங்களி லுண்டான உத்தம வஸ்துக்களினுடைய சாராம்சங்களையெல்லா மெடுத்துத் தனது முழுவல்லமையும் அமையும்படி நெடுநாள் வருந்திச் சிறந்த முயற்சிகளால் அவளுடைய அங்கங்களைப் படைத்தான். விலையுயர்ந்த ரத்தினங்களையே தேகத்திலழுத்தினு னென்னும்படி மிகுந்த பளபளப்பினால் விளங்காநின்ற இந்த மாதுசிரோமணிக்குச் சிறந்தவஸ்துக்க ளெல்லாவற்றிலும் எள்ளளவெள்ளளவாக இழைக்க ஆராய்ந் தெடுத்துப் படைத்தது பற்றிப் பிரமதேவர் திலோத்தமை என்கிற காரணப்பெய ரிட்டருளினர். அவளுடைய அழகை எடுத்துச்சொல்ல ஆதிசேஷனுக்கும் திறமைகுறைவா யிருக்குமானால் நம்மாலாகுமோ? ஆனாலும் கொஞ்சம் சொல்லுகிறோம். கருத்தும் - நீண்டும் - மெல்லிதாயும் - செறிவாயு மிராநின்ற அவ்வணங்கினது கூந்தல் இந்திரநீல ரத்தினங்களுடைய நுட்பமாகிய நிறத்தின லாக்கப்பட்டவையோ வென்றும், முகமாகிய சந்திரனுக்குப் பயந்து பின்னிடைந்து நிற்கும் இருள்களோ வென்றும், கண்ணுக்குத் தோற்றுப்போன கவரிமான்கள் தங்களது சிறந்த பொருள்களாகிய கவரிகளை அக்கண்களுக்கு உலுப்பையாகக் கொடுக்க அவைகள் அவைகளை அலட்சியஞ்செய்து பின்புறத்தில் தள்ளிவிட்டனவோ வென்றும், அக்கூந்தல்களோடு மயிற்றோகைகள் போர்செய்து அர்த்தசந்திர பாணங்களால் அடிக்கப்பட்டு அந்த வடுக்களுடனே ஓடிப்போய் இவளுக்குப் பின் புறத்தில் மறைந்துகொண் டிருக்கின்றனவோ வென்றும், யமுனாநதியோ காளிந்தி நதியோ வென்றும், காமனுடைய வில்லினது சிறந்த நாரியோ வென்றும்,

குருவிந்தமணிக ளிழைத்த சுட்டியினது காந்தி பிளந்துகொண்டு ஓடினதினாலே வகிரென்னு மிரேகை யேற்பட்டுப் பிரிந்து நிற்கின்றனவோ வென்றும், மற்றும் பலவித இரத்தின ஆபரணங்களினாலும் மலர்களாலும் அலங்கரிக்கப்பட் டிருக்குங்கால், தனக்கோ ராபரணமாகிய சந்திர னிங்குவந் திருக்கின்றானென்று தேடிக்கொண்டு வந்த கிரகங்களினாலும் நட்சத்திரங்களினாலும் விளங்கும் ஆகாசமோ வென்றும், அல்லது அச்சந்திரனைக் கவரக்கவிந்த இராகுவோ வென்றும், சற்றுணர்ந்த கவீச்சுரரனைவரும் புகழ்ந்து குறிக்கும் படி யிருந்தது.

முகத்திற்குத் திரிஷ்டிதோஷம் வராமலிருப்பதற்காகக் கஸ்தூரித் திலகந்தீண்டி விளங்கா நின்ற நெற்றியானது, அளகத்தின்கீ ழிருத்தலாலே அமரபட்சத்து அஷ்டமியில் இருள் மேலெழும்ப உதயமாகும் அர்த்த சந்திரன்போல விளங்கிற்று. அவளது முகமண்டலகாந்தியைப் பெறுவதற்குச் சந்திரனானவன் மாதந்தோறும் சூரியனாகிய அக்கினிகுண்டத்தை வலம்வந்து அதிற் குதித்துத் தன் தேகத்தைவிட்டு மறுபடி ஓர் தேகத்தை யடைவதுமாகிய கடினமான தவஞ்செய்து வருகிறானென்றும், அல்லது அந்தச் சந்திரன் இராகுவுக்குப் பயந்து ஆகாசத்தை விட்டு இவள் முகரூபமாகி ஒளிந்துக்கொண் டிருக்கிறானென்றும், களங்கமுந் தேய்தலுமுடைய அச்சந்திரபிம்பத்தை மறுவற்று நித்தியமும் பூரணமாக விளங்கிக்கொண் டிருக்கும் இவள் வதனத்திற்குச் சமமாகச் சொல்வது நியாயமல்ல வென்றும், அச்சந்திரனாற் குவியப்படும் தாமரை மலரை இவள் முகத்திற் குவமையாக்குவது அறிவின்மையன்றோ வென்றும், அவள் முகத்தி னேர்மை தனக்கில்லையென்கிற துக்காக் கினியினால் இருதயம் கன்றிப்போனபடியா னன்றோ அத்திங்களின் மத்தியிற் களங்கமுண்டா யிருக்கிறதென்றும், சந்திரன் இவள் முகவுருக் கொண்டமையால் அதற்கேற்ப நட்சத்திரங்களும் முகவட்ட முதலாகிய அணிகளில் தொங்குகின்ற ஆணி முத்துகளினுருவையடைந்து அச்சந்திரனைச் சூழ்ந்து நிற்கின்றன வென்றும், சந்திரனென்னு மொழிக்குக் களிக்கச் செய்பவனென்று பொருளாதலால் அத்தன்மை இம்முகத்திற்கே உரித்தா யிருக்கின்றபடியால் இதுவே சந்திரனன்றி வானத்தில் தோன்றும் சந்திரன் சந்திரனல்ல வென்றும், இன்னும் பலவாறாகப் புலவர்கள் கூறும்படியிருந்தது.

அவ்வனிதையினுடைய புருவங்களோ மதனு மிரதியும் தங்களுக்கு மித்திரனாகிய சந்திரனிடத்தில் வைத்திருக்கும் விற்க ளாக நினைக்கப்பட்டன. அவளுடைய கண்கள் சந்திரன் மடியிற் படுத்துக்கொண் டிருக்கிற மானினது விழிகளோ, அவளது முக மாகிய தாமரைப்பூவில் மொய்த்துக்கொண்டிருக்கும் வண்டுகளோ, அம்முகத்தின் காந்தியாகிய பிரவாகத்திலிருக்கும் மீன்களோ, அங்கு விளையாடிக் கொண்டிருக்கிற மதன் இரதி இவர்களுடைய கூர்மை பொருந்திய வாட்களோ என்று சந்தேகிக்கும்படியாயும்; இவைகளுக்கு அஞ்சியே கலைமான்களெல்லாம் காடு புகுந்தனவென் றும், இவைகட்குத்தோற்றே தாமரைகளுங் கருநெய்தல்களும் வாவி புகுந்தனவென்றும், இவைகளின் பயத்தினாலேயே மீன்கள் நீரினின்று எடுக்கப்படும்போதே துடிக்கின்றனவென்றும் எண்ணும் படியாயும் விளங்கி; மதத்தினால் மிளிர்ந்து நோக்குங் காலத்துக் காமனுடைய பூசைக்காக வெண்டாமரை மாலைகளையும் - செந் தாமரை மாலைகளையும் - கருநெய்தல் மாலைகளையுந் தந்துகொண்டு, தன்னை யுடையவளுக்குத் தீங்குவருமென்று நினைத்துத் தான் காதுகளிற் பாய்ந்து போகாமல், மையிடப்பட்டபோது கூற்றை யும் விஷத்தையுங் கொடுமையில்லாதவைகளாக்கி, மிகுந்த வைராக்கியங்கொண்ட முனிவர் மனங்களையுஞ் சின்னபின்னமாக் குந் திறமையுள்ள கடைப்பார்வை யுடையவைகளாகிப் பிரகாசித் துக்கொண் டிருந்தன.

இவளது கபோலமானது மதனவேளினது இரத்தினக் கண் ணாடிகளோ டொத்து, சிரிக்கிறவேளையில் ஆடவருடையமனங்க ளழுந்தும்படியாகிய சிறு குழிகளுடையதாக விருந்தது. அவளது நாசியோ மதனனுடைய தூணீரமானபடியினாலே அதின் காற்றிற் பரிமளமுண்டா யிருக்கின்றதென்று எண்ணப்பட்டு குமிழமலரைக் காட்டிற்குத் துரத்தி, சண்பக மலரை மரத்திற் றூக்கி, முகமாகிய தாமரைமலரில் ஓர் அன்னப்பே டிட்ட முட்டையென்று குறிக்கும் படியாகிய ஆணிமுத்தை அணிந்து, யாவராலு மிது முத்தமிடத் தக்கதுதானென்று புகழத்தக்கதா யிருந்தது. மொழியாகிய தேன் சுரக்கும் பவளச் செப்பெனச் சொல்லத்தக்கதாக விருந்த அவ ளுடைய வாயி லிராநின்ற பல்வரிசைகள், சரசுவதிதேவி வாசஞ் செய்கிற இவளுடைய வாயாகிய சிம்மாசனத்திற்கு அலங்காரமாகக் கட்டிய முத்துச் சரங்களா யிருக்கலாமென்று நினைக்கப்பட்டு,

தாம்பூலத்தாற் செந்நிறமுடைத்தா யிருக்குமளவில் மாதுளங். கனியினது சிவந்த விதைகளின் அகங்காரத்தை யடக்கிச் சிறந்தன.

சிலர் இவளிதழை, இவளது மிடற்றோசையைக்கேட்டுக் குயில் கூவுதென்று மனதில் நினைத்து அதற் காகாரமாகச் சமீபத்திற் கொடுவந்துவைத்த செந்தளிரோ! கிளியென்று நினைத்துச் சிலர் வைத்த கொவ்வைக்கனியோ! அல்லது பதுமராகமணியைத் துளைத்து அமுதத்தை நிறைத்து அதற்கு மேன்மையுமுண்டாக்கி விசித்திரமாகச் செய்யப்பட்டதோ! மற்ற யாதோ! வறிகிலேம் என்றும்; சிலர் கடினமாயும் இரதமற்று மிருக்கிற பவளத்தையும், மிக விரைவில் நிறம் மாறுபடுகிற தளிரையும் இதற்கு உவமை யாக்குதல் சான்றோர் செய்கையன் றென்றும்; சிலர் கொவ்வைக் கனி இதன் காந்தியை நினைக்கும்போது தான் மிகத்தளர்ந்து சிந்து கின்றது என்றும்; சிலர் கவிகளால் உலகத்தில் மங்கையரைச் சிறப்பிக்கும்போது துவரிதழினாள் என்கிறார்களே, இத்தித்த விதழினாரை இப்படிச் சொல்வது தகாதென்று நினைத்திருந் தோம். அது இப்பொழுது தான் சரியென்று தோற்றிற்று. எப்படி யென்றால் இவ்வதர ருசியைச் சிந்திக்குங்கால் மற்றை மாதர்களின் அதர ருசி துவர்ப்புடையதென்றும்; சிலர் ஓ! ஓ! இதென்ன ஆச்சரியம்? இவ்வமுதக் கனியை நோக்குவோர்க்கு மனதிற் காம ரசஞ் சுரக்கின்றதே என்றும்; சிலர் முகச்சந்திரனது நிலாவே அப் படி யிருக்கலாம், ஆதலால் தான் காமரச சமுத்திரம் பொங்கு கின்றது என்றும்; சிலர் அது இவளது நாவில் வீற்றிருக்குங் கலை மகளுடைய மெய்யொளியோ; இல்லாவிட்டால் இவர் சொற் களுக்கு முதற்காரணமாகிய அமுதப்பெருக் கேதென்றும், இவ் வாறு யாவராலும் சந்தேகிக்கக்கூடுமான புன்னகையோடுங் கூடி, நிலவுபரவிய செவ்வல்லி மலரையும் அம்மலரோடு கூடிய தளிரை யும் திக்காரஞ்செய்து விளங்கிற்று.

வள்ளையிலையை நிளைப்பிக்குங் காதுகளானவை, ஆடவருடைய மனங்களோடுகூட நவமணிக ளிழைத்த வணிகளும் ஊசலாடுகிற தற்கான டோலிகைகள்போ லிருந்தன. அவள் இரத்தினப் பணிக ளணிந்த கழுத்தானது, பக்கத்துவீற்றிருக்கிற சீதேவியாருடைய கண்களின் காந்திபொருந்தி விசித்திரமாக விளங்குந் திருமாலுடைய பாஞ்சசன்னியத்தைப் பேசித்திருந்தது. அன்றியும், சங்குகளெல் லாம் இவள் மிடற்றோடு யுத்தஞ்செய்து, அதனால் தூரத்தி அடிக்

கப்பட்டு, பிராணனைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமென்று கடலிற் புகுந்திருக்கின்றனவென்று சொல்லும்படியாகவும் விளங்கியது; மாஹமேரு பருவதத்தில் முளைத்த தங்கக்கொடி மென்மையும் - சுகந்தமும் - பொருந்தி யிருந்தால் இவைகளுக்கு நிகராகுமென்றுசொல்லும்படி சிறந்து - நீண்டு - திரண்டு - விளங்குமவளுடைய கைகள், கணுக்கையி லணிந்திருந்த மணிக்கங்கணக் கதிர்களினாலே வடுகர் வழக்கத்தின்படி கஸ்தூரி - குங்குமம் - கர்ப்பூரங்களால் ரேகைக ளெழுதப்பட்டவைபோற் பிரகாசங் கொண் டிருந்தன. தோள்களோ கழைகளின் ரூபத்தைக் கவர்ந்து கொண் டிருந்தன. யாழி னழகு மிடற்றில்மாத்திர மல்ல முன் கைகளிலும் விளையாடிக்கொண் டிருந்தது. அவளுடைய அகங் கைகளுக்கு அடிமைத்தொழில் செய்வதற்குங் காந்தள் தகுந்த தன்றென்று மூடனுக்குஞ் சொல்ல வெளிதாயிருந்தது. அப் பெண்ணரசியினது நகங்களைக் கண்டாற் கிளிகளின் வாய்களை ஒருவனும்சிறப்பிக்க மாட்டானென்று சொல்வதற்கு ஒருவாற்றானுந் தடையின்றி யிருந்தது.

அவளது மார்பெல்லாம் படர்ந்து, உயர்ந்து, பருத்து, நிமிர்ந்து, இடைவெளி யில்லாதவைகளாய், வட்டம்போல் வடிவுள்ளதாய், கல்லினுங் கடினமாகி, மலரினும் மிருதுவாகி, அழுந்தி, கறுத்து, சிறுத்த கண்களையுடைய முலைகள், இம்மங்கையாகிய பொற்கொடியினது பூங்கொத்துக்களோ, காமன் இரதியோடுகூடி விளையாடுகிறதற்கு மணிக்கோட்டுடன் தங்கத்தினா லமைத்த பொற்குன்றங்களோ, பருவமென்னுந் தோழனை நோக்கவருங் காமனுக்கும் இரதிக்கும் பூசைக்காக வைத்திருக்கும் பூரணப் பொற்குடங்களோ, தேகத்தினொளியாகிய நதியின் வெள்ளத்தில் தவழுஞ் சக்கிரவாகப்புட்களோ, இவளது தேகத்திலே யுலாவுங் காமவேளினது வாகனமாகிய யானையின் பொற்சீலை போர்த்த கும்பத் தலங்களோ, காமுகருடைய இதயங்களைச் சுழற்றுகிறதற்காகக் காமனேற்படுத்திய சக்கரங்களோ, மதனவேளைக் காண்பதற்குப் பருவமாகிய மங்கை சம்பாதித்து வைத்துக்கொண் டிருக்கிற பெரிய எலுமிச்சம்பழங்களோ என்று காண்போரெல்லா மயங்கும்படியாய், முத்து மாலைகள் மேற்புறத்திற் புறளுங்காற் பிரமலோகத்திலிருந்து விழுந்த கங்கையின் வெள்ளத்தோடு கூடிய மேருவையொத்து, அம்மேரு இதன் பெருமையைக் கேட்கையில் உண்டாகிய விசனத்தினா லசைவற்று நின்றுவிட்டதென்றும், இரவிற் பிரிந்து

நிற்குஞ் சக்கரவாகப் புட்களும், கறடுகட்டியிருக்கிற மலைகளும், விரைவில் விரியுந் தன்மையையுடைய தாமரைமுகிழ்களும், இவைகட்குச் சரியல்லனவென்றும்; தாளம், செப்பு, சிமிழ், யானைக்கோடு முதலியவை யெல்லாம் ஒவ்வொரு சிறப்பே யுடையனவாகையாற் பலசிறப்போடுங்கூடிய இவைகட்கு எள்ளள வேனும் பொருந்தாவென்றும்; இம்முலைகளைத் தனக்குச் சரியாய் நினைத்துச் செருக்கடைந்தபடியாற் பந்து யாவராலு மடிக்கப் படுகிறதென்றும், இவ்வாறு செருக்கடைந்தது பற்றியே யானையின் கும்பத்தலங்களும் மாவட்டியாற் குத்தப்படுகின்றன வென்றும் சொல்லும்படி மேன்மை பொருந்தி யிருந்தன.

மிகவும் பாரத்தைச் சுமப்பதினாலே நுண்ணிதாகிய இடை ஒடிந்து போகாதிருக்கும் பொருட்டுக் கீழங்கத்துக்கும் மேலங்கத் துக்கும் போட்ட இந்திர நீலமணிச்சலாகையின் சாயையோ, அல்கு லாகிய மாளிகையிலிருந்து மன்மத மஹாராஜன் தனது வேடிக்கை மலையாகிய முலைமீது போவதற் கமைத்த நீலக்கல்வழியோ! மார்பிலணிந்திருக்கிற ரத்தினப் பதக்கத்தைச் சூரியனென்று மயங்கி விழுங்குகிறதற்காக இடையாகிய ஆகாயத்தினின்றும் வருகிற ராகுவோ, அல்லது அப்பதக்கத்தைத் தனது தந்தையா கிய சூரியனென்று நினைத்துவந்த யமுனை நதியோ, அல்லது இவளது ஸ்தனங்களைத் தாமரை முகிழ்களாக வெண்ணி யோடும் வண்டுகளின் வரிசையோ என்று கருதப்பட்ட உரோம ரேகையை யடைந்த வயிறானது, ஆதிகாலத்தில் நாராயணன் பள்ளிகொண் டிருந்த ஆலிலைபோல் விளங்கிற்று. மேலுங் கீழும் அவயவங்க ளிருத்தலாலே இரண்டும் பொருந்தும்படி நடுவிலோர் அவயவ மிருக்கவேண்டுமென்று ஊக்கப்பட்டிருக்கிற அம்மங்கையின் கொங்கையைச் சுமந்த இடை தன்னோடொத்த பூமியானது ரத் தினாகரமாகிய மேகலையை அணிந்திருக்கின்றதே; நாமும் அப்படி யாகவேண்டு மென்று இவ்வுருவங்கொண்டு சகல ரத்தினங்களுக்கு மிருப்பிடமாகிய மேகலாபரணத்தைத் தரித்திருக்கிற தென்று சிந்திக்கப்பட்டு, பரமசிவனுடைய நெற்றிக்கண்ணா லெரிக்கப்பட்டு நசித்த காமனுடைய தேகத்தை மறுபடி யுண்டாக்குவதற்கு முதற்காரணமாகிய பரமாணுவைப்போ லிருந்தது. அவளது வயிற் றிற் பொருந்தி விளங்கு மடிப்புக்களின் வரையோ, இவ்வணங்கின் தேகத்தி னொளியாகிய ஆற்றின் அலைகளையும், மதனன் விளை யாடும் உந்தியென்னும் வாவிக்குக் கட்டப்பட்ட பொற்படிகளையும்

போன்றிருந்தன. அன்றியும், அவளுந்தியானது காமுகர் மனங்களை அவளிடத்தில் ஆழ்ந்து போகும்படி செய்வதற்காக, அக்காமனால் ஒருவாறு கனிவுகொண் டேற்படுத்தியிருக்கிற ஓர் சுழியந்திரம் போலுந் தோன்றிற்று.

அவ்வணங்கினது அல்குலின் அழகை நினைக்கும்போதெல்லாம் பாம்புகள் படங்களைக் குவித்துக்கொண்டு புற்றில் ஒளித்துக் கொள்ளுகின்றன. அன்றியும் அப்பாம்புகளை அதற்கு நிகரென்று உலகத்தார் சொல்வதை நம்பியன்றோ? விஷ்ணுவானவர் சேஷன் படத்திற்குக் கீழ்ப்படிந் திருக்கின்றார். காமவேள் விளையாடுகிற மணற்குன்றுபோ லிராநின்ற அவ் வல்குலுக்கு நிகர் அவ் வரவின் படமேயானாலும் அரசிலை யென்பதும் ஒக்கும். கருப்பு வில்லியினது தேரி னுருளைபோன்ற அம்மாதின் நிகம்பமானது, காமுகருடைய மனங்களைச் சூரணஞ்செய்ய வேற்படுத்திய குண்டுக்கல்லெனத் தோன்றிற்று. அவ ளரையிலிருந்து பாதமளவும் வியாபித்திருக்கும் வெண்பட்டானது, இத்தேவ கன்னிகையைக் கங்கையானவள் தனது தாயாகிய இலக்குமியென்று மயங்கித் தனக் கிஷ்டத்தைக் கொடுக்கவேண்டுமென்று குழந்தைபோற் கட்டிக் கொண்டதோ வென்று சந்தேகிக்கும்படியிருந்தது. அவளுடைய தொடைகளுக்கே நிகராகாத அரம்பையை அவளுக்கு நிகராக யார்தான்பேசுவார்கள்? சொரப்புடையதாகிய யானைத் துதிக்கையையும் அதற்கிணையாக நினைக்கலாமோ வென்றால் விக்கினேஸ்வரர் அத் தொடையினாலுண்டாகிய இச்சையைத் தீர்த்துக்கொள்ள வன்றோ அத்தொடைக்கு நிகராகத் துதிக்கையைப் பெற்றிருக்கிறார். நல்ல தங்கத்தினால் உருட்சியான ஒரு ஸ்தம்பஞ்செய்து, மெருகினாலதற்குப் பளபளப் புண்டாக்கி, அதில் மென்மையையுங் குளிர்ச்சியையும் பொருத்தினால் அதை அத்தொடைக்குச் சமானமென்று ஒருவாறு ஒப்பிடலாமேயன்றி வேறொன்றை ஒப்பிடுதல் சிறப்பன்று. அவளது முழங்கால்களின் தோற்றத்தைப் பொன்னுலகிலிருக்கும் கனகசெண்டுகள் பொருந்தி யிருந்தன. அவளது கணைக் கால்களுக்குப் பென்மயமாகிய இளவரால்களையும், புறவடிகளுக்குப் பொன்னாமைகளையும் பரடுகளுக்குப் பொற்றராசையுமன்றி, வேறு உவமானங் கிடைக்கவில்லை. கால் விரல்கள் பவளத்தாலும், நகங்கள் தரளத்தாலும், செய்யப்படாமற் போனால், அப்படிப் பட்ட தோற்றத்தை யுடையவையாக விரா. அவள் பாதங்களுக்குச் சரியாக வேண்டுமென்று தான் தாமரை மலர்கள் நீரிலிருந்து

கொண்டு சூரியனுக்கு எதிராக அங்காந்து தவஞ் செய்கின்றனவோ வென்றும்; ஆசையாற் சிவந்த ஆடவருடைய மனதி லுறைந்தமையாற்றான் அவை சிவந்தனவோ வென்றும்; சொல்லத்தக்கதாக யிருந்தன. அவளடிகள் சுபாவமா யிருக்கும்போதே அவ்வடிகளுக்குச் சரியாகாமலிருக்கிற அனிச்சமலர்கள், செம்பஞ் சூட்டியிருக்குங் கால்களை நோக்கி உயிரை விடவேண்டுமென்று நினைக்கும்.

அக்கால்களின் மணிச்சிலம்பில் அன்னத்தின் மிடற்றோசை தோற்றுகையாலே, இவைகளைத் தாமரைகளாகத்தான் சொல்லலாமென்று எண்ணும்படியா யிருந்தது. இவளுடைய மேனிக்கு மின்னலாவது இடைவிட் டொளிதலில்லாத தன்மையோடுங் கூடியிருந்தால் உவமையாகச் சொல்லலாமென்றும், இவளது தேகத்தைச் சாம்பூனத நதியினது சேற்றிற் போட்டிழுத்தாரோ வென்றும், இல்லாவிட்டால் அந்தந்த உறுப்புக்களுடைய ஒட்டிடங்களிலே கொஞ்சமாகிலும் விகற்பங் காணப்படுமே யென்றும், இவளுடைய தேகத்திலே காந்தியென்னும் ரசத்தை நிரப்பி யிருக்கிறாரோ வென்றும், இவளுடைய அங்கத்தின் காந்தியைப் பார்த்தால் முத்தினிடத்தில் காந்தியில்லையென்றும், மென்மையை நோக்கினுற் காட்டுவாழை மலர்களில் மென்மை யில்லையென்றும், நிறத்தைக் கண்டால் தங்கத்தில் நிறமில்லையென்றும் குளிர்ச்சியைச் சிந்தித்தால் நிலவிற் குளிர்ச்சி யில்லை யென்றும், வாசனையை நினைத்தால் மலரில் வாசனையில்லை யென்றும், கவிராஜர்கள் புகழ்ந்து கொண் டிருப்பார்கள்.

இவ்வாறாக உலகத்துக்கு ஒரு மோகனுஸ்திரம்போற் சிருஷ்டிக்கப்பட்ட அந்தத் திலோத்தமை யென்னும் அப்சரசானவள் அச்சபையெல்லாம் ஓரொளியை அடையும்படி வந்து, நான்முகக் கடவுளைத் தொழுது நின்று, "சுவாமி! அடியாளுக் கனுகிரகஞ் செய்யவேண்டும்" என்று கேட்டாள். அந்தத் தேவசிரேஷ்டரும் அவளைக் கண்டமாத்திரத்திலே மிகுந்த களிப்பை யடைந்து, "பெண்ணே! உனது தேகமானது யாவரும் மோகிக்கும்படியான காந்திபொருந்தி வாழக்கடவது" என்று வரமளித்தனர். இந்த வர மகிமையாலும் விசுவகர்மாவினது சிருஷ்டித்தொழிலின் திறமையாலும் க்ஷணத்துக்கு க்ஷணம் அழகினுற் சிறந்து, யாவருடைய கண்களையும் மனங்களையும் கவர்ந்து கொண்டவளாகிப் பிரம

தேவரை நோக்கிக் கைகூப்பிக்கொண்டு "எனது கடவுளே! இனி அடியாள் செய்யவேண்டிய பணிவிடை யாது?" என்று வினவினள். அக்கடவுளானவர் "அடி பொற்கொடியே? பூமியிற் சுந்தனென்றும், உபசுந்தனென்றும், இருவ ரிருக்கிறார்கள். அவர்கள் நம்மிடத்தில் வரம்பெற்றுக் கர்வமடைந்து உலகங்களை யெல்லாம் அழித்துத் தேவர்களையுந் துரத்தி யுபத்திரவம் பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தங்களுக்குள்ளாகவே மரணமடைய வேண்டிய தாகையால் நீ அவ்விடம் சென்று, சிறந்த உனது வடிவத்தினால் அவர்களை மயக்கி, அவர்களிருவருக்கும் விரோதம் வரும்படி செய்யவேண்டும்" என்று கட்டளையிட்டார்.

அந்தக் கட்டளையைச் சிரசில்வகித்த அப்பெண்மணியானவள் நான்முகத்தேவரைத் துதித்துப் பிரதக்ஷணம் பண்ணி நமஸ்காரஞ் செய்து விடை பெற்றுக்கொண்டு பூமியை நோக்கிப் புறப்படும் போது, இவளுடைய உல்லாசத்தையும் நடையழகையும் வடிவழகையும் பார்த்துச் சகல தேவர்களும் ரிஷிகளும் ஆச்சரியப்பட்டுப் பிரமித்து, "ஓ! ஓ! இவளுடைய ரூபத்தைக் கண்டு நாமே மோகிக்கும்படியா யிருக்கிறதே; அந்த மதம்பிடித்த அசுரர் இவளை மோகிக்க நாம் கேட்கவேண்டுமோ? அவ்வசுரருடைய தொந்தரவினின்று நீங்கிச் சௌக்கியப்படும்படியாகிய காலம் நேரிட்டது. இதற்குச் சந்தேகமில்லை" என்று ஒருவரோடொருவர் சந்தோஷமாகப் பேசிக்கொண்டு, அவள் பூவுலகுக்குச் செல்வதையே பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

இப்படியிருக்க அந்தச் சுந்தோபசுந்த ரிருவரும் மூன்று லோகங்களையுஞ் ஜயித்து, பல ஆபரணங்கள், வஸ்திரங்கள் - வாகனங்கள் - ஆசனங்கள் முதலாகிய பொருள்களைத் திரளாய் கொள்ளையடித்து, எந்த வேளையில் எந்த வஸ்துவின்பேரில் இஷ்டமோ? எந்த ஸ்திரீயின் பேரில் இஷ்டமோ? அந்த வேளையில் அந்தவஸ்துக்களையும் அந்த ஸ்திரீகளையுங் கொண்டுவந்து மனதிற்கு இசைந்தபடி அனுபவித்துக்கொண்டு, மஹாகர்வம் பொருந்தி அங்கங்கே சஞ்சரித்துக்கொண் டிருந்தார்கள். அந்நாளில் ஒருநாள் விந்தியமென்று பெயர்பெற்ற பெரிய பருவதத்தைக் கண்டு, தங்கள் சேனைகளோடு அந்த மலையின்பேரிற் சென்று, நான்கு பக்கங்களிலுஞ் சுற்றிப்பார்த்து, அதிலோரிடத்திலே பூத்தும் - காய்த்தும் - பழுத்தும் - தளிர்த்தும் - தழைத்தும்-விரிந்து மிராநின்ற, மாமரம்-

பலாமரம் - கோங்குமரம் - மருதாணிமரம் - வாழைமரம் - தென்னை மரம் - புன்னைமரம் - கொன்றைமரம் - மருதமரம் - சண்பகமரம் - பாதிரிமரம் முதலிய பல மரங்களையும், மல்லிகைக்கொடி - முல்லைக் கொடி - ஏலக்கொடி முதலாகிய பல கொடிகளையும் உடைத்தாய் மயில் உலாவவும் - குயில் கூவவும் - கிளி கொஞ்சவும் - தேன் மிஞ்சவும் விளங்காநின்ற ஒரு சோலையையும், அதி னடுவில் மேடுபள்ள மின்றி சமமாய் நிகநிகத்தும் வழுவழுத்து மிராநின்ற பாறையொன் றையுங் கண்டு மனமகிழ்ந்து, தமது மந்திரி முதலான பேர்களைக் கூப்பிட்டு, "நாங்க ளிங்கே வேடிக்கையாகச் சிலகாலம் வாசம்செய்ய விரும்புகிறோ மாகையாற் சேனையையெல்லாந் தூரத்தில் நிறுத்தி வையுங்கள்" என்று சொல்லி, அந்தப் பாறையினிடத்தில் வந்து சோலையிலுண்டாகிய சிங்காரத்தை யெல்லாங்கண்டு, வசந்த காலத் திலுண்டாகிற சுகந்தமும் குளிர்ச்சியும் பொருந்தி மெதுவாய் வீசும் தென்றல் விலாசத்தையும் பார்த்து, அதன்மே லுட்கார்ந்து மகா ருசியுள்ள கனிகளைப் புசித்து, கள்ளைக் குடித்து, அதனால் விசேஷ வெறியையும் வெகுவான மதத்தையு மடைந்து மின்னற் கொடிக் கொப்பாகிய அநேக மங்கையர்கள் வந்து சிலர் வீணை வாசிக்கவும், சிலர் புள்ளாங்குழ லூதவும், சிலர் மத்தளம் முழங்கவும், சிலர் தாளங்கொட்டவும், சிலர் யாழ்வாசிக்கவும், சிலர் பாடவும், சிலராடவும், சிலர் புகழவும், சிலர் நிகழவும், சிலர் புனுகு-கஸ்தூரி - குங்குமம் முதலாகிய வஸ்துக்களைத் தேகத்திற் பூசவும், சிலர் பூச்செண்டு, பன்னீர், பரிமளப்பொடி முதலிய வஸ்துக்களை ஆகத்தில் வீசவும், சிலர் பேசவும், சிலர் ஏசவும், சிலர் பூமாலைகளைச் சூட்டவும், சிலர் கண்ணாடிகளைக் காட்டவும், சிலர் தாம்பூல மடித்துக்கொடுக்கவும், சிலர் ஜாதிக்காயெடுத்து அளிக்கவும், சிலர் ஆலிங்கனஞ் செய்யவும், பலர் ஆனந்தம் பெய்யவுமாக மகா வேடிக்கையோடு சரசசல்லாபமாய் விளையாடிக்கொண் டிருந்தார்கள்.

அக்காலத்திலே அந்தத் திலோத்தமையானவள் ஆகர்சத்தினின்றும் அவ் விந்தமலையின் சமீபத்திலோடுகிற ஓராற்றின்கரையிலிறங்கி, தன்னவயவங்கள் குறிப்பாய்த் தோற்றும்படி மெல்லிதாகிய வெண்பட்டு வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டு, தளுக்கும், மினுக்கும், குலுக்கும், பலுக்குமாகப் புன் சிரிப்புடனே கடைக்கண்ணால் இவர்களிருக்கும் இடத்தையே பார்த்துக்கொண்டு, புட்பங்களைக்கொய்து அன்னம்போல் ஒய்யாரமாக நடந்துவந்துகொண்

டிருந்தாள் அதனைக்கண்ட அவ்வசுரவீரரிருவரும் மனந்தளர்ந்து காமவெறி கொண்டு, அவ்விடத்தில நின்றுந் திடீரென் றெழும்பிக் குதித்து ஓடிவந்து, மூத்தவன் அவளுடைய வலது கையையும், இளையவன் அவளுடைய இடது கையையுமாகப் பிடித்துக்கொண்டு, அவளுடைய ரூபத்தையும் காந்தியையும் கண்ட களிப்பினாலேயும் தேகத்தைப் பரிசித்ததினாலேயும், மிகுந்த காம விகாரமடைந்து, கண்களில் ஆனந்தக்கண்ணீர் ததும்ப தேக மெல்லாம் மயிர்க்கூச்சடைய - ஒன்றுந்தெரியாமற் பரவசமடைந் தனர். சுந்தனனவன் தம்பியை நோக்கி, "இவள் உன் அண்ணனுக்குரியவ ளாகையால் உனக்குத் தாய்க்குச் சமானமாகிய வள்" என்றான். உபசுந்தன் அண்ணனை நோக்கி, "இவள் உன் தம்பிக்குரியவள் ஆகையால் உனக்கு மருகிக்குச் சமானமான வள்" என்றான். இப்படியே நெடுநேரம் ஒருவரோடொருவர் வாதித்துக்கொண்டு, இருகண்களுஞ் சிவந்து சுழலமிட, புருவங் கள் நெறித்துத் தாண்டவமாட, உதடு துடிக்க, உள்ளங்கலங்க, கடினமாகப்பேசி மிகவும் பகைகொண்டு, ஒருவரோடொருவர் சண்டைக்கு ஆரம்பித்தார்கள்.

இப்படியாக அந்த சுந்தோபசுந்தர் பலத்தினாலும், செல்வத்தி னாலும், குடியினாலும், மதமடைந்து, காமத்தினால் மயங்கி, நன்மை தீமைகளைச் சிந்திக்காமல், இயல்பாயிருந்த நேசத்தை நொடியில் மறந்து, பயங்கரமான கதாயுதங்களைக் கையிலெடுத்துப் புஜங் களைத் தட்டி அட்டகாசஞ்செய்து, இருவரும் நீ நானென்று வீர வாதம் பேசி, சிங்கங்கள்போல் ஒருவர்மேலொருவர் பாய்ந்து, தங் கள் கதாயுதங்களைக் கரகரவென்று சுழற்றி அடிக்க வருகிறதும், அதைத் தப்பித்துக்கொண்டு ஆகாசத்தி லெழும்பி மறுபடி பூமியிற் குதித்து பிடிக்க வருகிறதும், பின்பு சமயம் பார்த்து ஒருவனை யொருவன் தூக்கி அம்மனையாடுவதைப்போல் ஆகாசத்தி லெறி கிறதுமாகி, பூமியெல்லாம் கிடுகிடென்று நடுங்க, அண்டமெல்லாம் படபடவென்று வெடிக்க, மலைகளெல்லாம் எதிரிரைச்சல் போடப் பயங்கரமாகக் கர்ஜித்து, ஒரு முகூர்த்தகாலம் யுத்தஞ்செய்து, கடைசியில் அந்தக் கதாயுதங்களாலேயே ஒருவரை யொருவர் அடித்துத் தங்கள் தேகமெல்லாம் பிளந்து இரத்தம் தாரை தாரையாகப் பெருகியோட, ஆயுதங்கள் பிடித்திருக்குங் கைகால் களு முறிந்து நடுங்கியாட, அவ்விரண்டுபேரும் இரண்டு சூரியர் விழுந்தாற்போற் பூமியில் விழுந்து புடிந்தார்கள்.

இப்படி இவ்வசுரர் நாசமாகப்போவதை முன்னமே ஆகாசத்தில் வந்து பார்த்துக்கொண்டிருந்த பிரமதேவரானவர், தேவர் - கருடர் - கந்திருவர் - கின்னரர் - கிம்புருடர் - சித்தர் - சாத்தியர் - இயக்கர் - விச்சாதரர் - முனிவர் முதலாகிய சகல பரிவாரங்களுடனே அந்தத் திலோத்தமையி னிடத்திற்கு வந்து, "பெண்ணே! நீ மகா பாக்கியசாலி. உன்னாலல்லவோ பொல்லாத பாவிகளாகிய இவ்வசுரர் மாண்டார்கள். மூன்றுலோகமும் சௌக்கியப்பட்டது. யாவருக்கும் உபகாரஞ்செய்யும் பாக்கியம், முன்பிறப்பில் மிக அருமையாகிய தவஞ்செய்த உனக்கல்லாது, மற்ற யாருக்குக் கிடைக்கும்? உன் கீர்த்தி உலகமுள்ளளவும் விளங்கிக்கொண் டிருக்கும். நீ செய்த சகாயத்திற்குக் கைம்மாறு யார் செய்ய மாட்டுவார்கள்? அடி கண்மணியே! நான் உன்னிடத்தில் மிகவுஞ் சந்தோஷ மடைந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்று சொல்ல, அந்தப் பெண்ணும் "சுவாமி! அடியாளுக்கு என்ன மகிமையுண்டு? தேவரீருடைய கிருபையைப் பெற்றதினால் இவ்வித பாக்கியங் கிடைத்ததேயல்லது வேறில்லை. இப்படிப்பட்ட தேவரீருடைய கிருபையொன்றே போதுமான வரம்" என்று சொல்லிப் பணிந்தாள். அப்படிச் சொன்னபோதிலும் அவளுக்குப் பிரமதேவர் மிகுந்த சந்தோஷத்தினாலே தாமே பலவந்தமாய் வரங்கொடுக்கக் கருதி, "பெண்ணரசே! நீ நினைத்த விடமெல்லாந் தடையின்றிச் சஞ்சரிக்கக் கடவாய். உன்னைப் பலவந்தமாய்ப் பிடித்துக்கொள்ள வேண்டுமென்று எவன் வந்தாலும், அவனெல்லாம் உன்தேஜோமய மகிமையைக்கண்டு அஞ்சி ஓடிப்போகக் கடவன்" என்று வரங்கொடுத்து, சகல பரிவாரங்களோடுந் தமது சத்தியலோகத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

அந்தத் திலோத்தமையும் தேவர்கள், ரிஷிகள் முதலானவர்களையெல்லாம் பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து, அவர்களிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு தனக்கிஷ்டமாகிய விடம்போய்ச் சேர்ந்தாள். இந்திரன் முதலாகிய தேவர்களும் பொன்னுலகம் புகுந்து, சந்தோஷத்துடனே தங்கள் தங்கள் அதிகாரங்களைச் செலுத்தி வந்தார்கள். சகல ரிஷிகளும் பிராமணரும் வைதிக காரியங்களைக் குறைவின்றிச் செய்து, தருமத்தை விருத்திசெய்து வந்தார்கள். இராஜாக்களும் இராஜ்யங்களைப் பரிபாலனஞ் செய்து, தருமநீதிகளை நடாத்தி வந்தார்கள். இப்படியாக உலகங்களெல்லாம் புதிதாகச் சிருஷ்டிக்கப் பட்டாற்போல் விளங்கின. கேளும்

தருமபுத்திரரே! ஒரு பெண் நிமித்தம் நீரும் பாலும்போலிருந்த மகாவீரர் இருவரும் இயல்பான நேசத்தைத்தள்ளி வீணாய் மடிந்தார்கள். ஆகையால் நீங்க ளிப்போது திரௌபதைக்காக ஒரு ஏற்பாட்டைச் செய்துகொள்ளவேண்டும். அதை என் முன்னிலை யிலேயே நிறைவேற்றி வந்தால் உங்களுக்கு யாதொருதீங்கு நேராம லிருக்கும். இதை உங்களிடத்தில் விசுவாசத்தினாற் சொல்லுகிறேன்; என்னுடைய இஷ்டத்திற்காகவாவது நீங்கள் ஒரு நிபந்தனைசெய்து கொள்ளவேண்டும்" என்று நாரதமஹாமுனி சொல்லப் பாண்டவர் கள் ஒருவரோடொருவர் சமாதானப்பட்டு, அந்த நாரத மஹாமுனி யைக் கும்பிட்டு, "சுவாமி! தேவரீருடைய உத்திரவின்படி எங்க ளுக்கு இதமாகிய ஒரு நிபந்தனை தேவரீரே ஏற்படுத்த வேண்டும்" என்றே கட்டுக்கொண்டார்கள். நாரதர் அதற்கு மனமகிழ்ந்து, "ஓ புண்ணியசீலர்களே! திரௌபதையை இதுமுதல் நீங்கள் ஐவரும் ஒவ்வொருவர் ஒவ்வொருவருஷமாக முறையே சேர்ந்திருக்க வேண் டியது. அப்படி ஒருவரோடு அவளிருக்குங் காலத்தில் மற்றொரு வன் எவ்விதத்தினாலும் அவ்விடம் வந்து பார்ப்பானானால், அவன் ஒருவருஷம் விரதத்தோடு தீர்த்தயாத்திரை செய்து விட்டு வரவேண்டியது. இந்த நிபந்தனையின்படி நீங்க ளைவரும் நடந்து கொண்டு வருவீர்களானால், உங்கட்கு எக்காலத்தும் எக்குறைவு மில்லாதிருக்கும்" என்று ஓர் உறுதி ஏற்படுத்தினார். அவ்வுறுதிக்கு அந்தப் பாண்டவர்கள் ஒப்புக்கொண்டு நாரதபகவானைப் பணிந்தார் கள். அவர் மிகவுஞ் சந்தோஷமடைந்து ஆசிர்வதித்துத் தம் முடைய லோகத்திற்குப் போனார்.

---

## உபபஞ்சபாண்டவ ருற்பவம்

---

இப்பால் நாரத மஹாரிஷியினுடைய ஆக்கினையின்படி பாண்டவர்கள் ஐவரும் தங்களுக்குள்ளே தாங்கள் மாறுபடாம லிருக்கத், திரௌபதையானவள் முறையே கருப்பந்தரித்து, தரும புத்திரருக்குப் பிரதிவிந்திய னென்பவனையும், பீமசேனனுக்குச் சுருதசோம னென்பவனையும், அர்ச்சுனனுக்குச் சுருதகீர்த்தி யென் பவனையும், நகுலனுக்குச் சதானீகனென்பவனையும், சகாதேவனுக் குச் சுருதசேன னென்பவனையும் பெற்றாள். இப்பெயர்க ளிவர்க ளுக்கு வந்த காரணம் யாதென்றால் தருமராஜன்போல் மிகவுஞ் சாந்தி யடைந்து சத்துருக்களை வெல்லவுஞ் சக்தியுடையவ னாகை

யால் அவர் பிள்ளைக்குப் பிரதிவிந்திய னென்கிற பெயரிட்டார்கள். அனேகங்கோடி சந்திரன்போற் பிரகாசமா யிருந்தபடியினாலே, பீமசேனன் மகனுக்குச் சுருதசோம னென்கிற பெயரிட்டார்கள். அர்ச்சுனன் பகைவரை வென்றானென்னுங் கீர்த்தி கேட்குமளவிற் பிறந்தபடியினாலே, அவன் புத்திரனுக்குச் சுருதகீர்த்தி யென்கிற பெயரிடப்பட்டது. அந்தப் பரதவமிசத்திலே முன்னிருந்த சதாநீகன் என்கிற இராஜன்போல் மஹாசக்தி யுடையவனென்று, நகுலன் குமாரனுக்குச் சதாநீகனென்கிற நாமதேயந் தரித்தார்கள். கிருத்திகா நட்சத்திரத்திற் பிறந்தவனாகையாற் சகாதேவன் மைந்தனுக்குச் சுருதசேனனென்கிற நாமமிடப்பட்டது. இப்படிக்குப் பெயரடைந்த அவ்வைந்து குமாரரும் அப்பெயர்களுக்குத் தக்கபடியே மிகவு மகிமைகளை யடைந்து, பஞ்சாக்கினிக ளென்னும்படி வளர்ந்து, சகலகலைகளு மோதி அர்ச்சுனனிடத்திலேயே வில்வித்தைகற்றுச் சகலவித யுத்தங்களிலும் மிகவும் வல்லவரானார்கள். அன்றியும் ஐயப்படாமை விருப்பின்மை வெறுப்பின்மை மயக்கமின்மை பழியை நீக்கல் அழிந்தோரை நிறுத்தல் அறம் விளக்கல் பேரன்புடைமை ஆகிய அறத்துறுப்புக்களையு மனுசரித்தார்கள். திரௌபதையின் குமாரராகிய இந்த உபபாண்டவர்கள் பிறந்த செய்தியைப் பாஞ்சாலர் கேட்டு வந்து, குழந்தைகளுக்கும் தங்கள் பெண்ணுக்கும் செய்யவேண்டிய வரிசைகளை யெல்லாஞ்செய்து, பாண்டவர்களால் வெகுமானங்களைப் பெற்றுத் தங்கள் நகரம் போய்ச் சேர்ந்தார்கள்.

இந்திரப்பிரஸ்தச் சருக்கம் முற்றிற்று

---

## 13. அர்ச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்

கண்ணன் துதி

குன்றெடுத் தாயர்மாதர் குரவைகொண் டொருவிளாவிற்
கன்றெடுத் தெறிந்துவெய்ய காளியற் கிருதாணல்கி
யன்றெடுத் திறுத்தவில்லே யணையவில் விழவுகாண்பான்
சென்றெடுத் திறுத்துநின்ற செங்கண்மா லெங்கள்கோவே.

ஓ சந்திரகுல சிகாமணியாகிய ஜனமேஜய மஹாராஜனே! பாண்டவர்கள் இவ்வாறு இந்திரப்பிரஸ்தத்தில் யாதொரு குறைவுமின்றி அரசாக்ஷி செய்து வருங் காலத்தில் ஒருநாள் அந்த ஊரிலிருக்கும் ஓர் பிராமணனுடைய மாடுமந்தையிற் கள்ளர் புகுந்து மாடுகளையெல்லாம் பிடித்து ஓட்டிக்கொண்டு போகவே, அந்தப் பிராமணன் மிகுந்த பரிதாபத்தை யடைந்து, உடனே ஓடிவந்து அரண்மனை வாசலில் நின்று, கோவென்னும் பெருங்கூச்சலுடனே "ஐயா இராஜாக்களே! அனேகந் துஷ்டர்களாகிய திருடர் வந்து என் மாடுகளைக் கொள்ளை யடித்துக்கொண்டு போகிறார்களே: இதென்ன அநியாயம்? நான் ஏழைப் பிராமணனுச்சுதே: கேள்வியில்லையோ? உங்களுக்கு ஆறிலொரு கடமையுங் கொடுத்துச் சொத்துக்களைத் திருடருக்குங் கொடுக்கிறதா? நீங்கள் தருமமறிந்தவர்க ளல்லவா? எந்த இராஜாவானவன் குடிகளிடத்திற் கடமை தண்டிக்கொண்டு செவ்வையாய்க் காப்பாற்றுமற் போகிறானோ, அவன் யாவருடைய பாதகங்களையும் ஏற்றுக்கொள்ளுகிறவனாகிறான். அதிலும் பிராமணனுடைய சொத்தைத் திருடர் கொண்டுபோக அரசன் பராமரிக்கையாயிருந்தால், அதைக்காட்டிலும் அநியாயம் வேறென்ன? ஓ தருமப் பிரபுக்களாகிய பாண்டவர்களே! என் சொத்தைக் கைக்கொண்ட திருடர் அதோ ஓடுகிறார்கள். சீக்கிரத்தில் ஆயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு போய்ப் பிடித்து, என்சொத்தை எனக்குமீட்டுக் கொடுத்து, அந்தப்பாவிகளையுந் தண்டனை செய்யுங்கள். சாவகாசப் படுத்த வேண்டாம்" என்று மிகவுந் துக்கமாக விக்கினான்.

## அர்ச்சுனன் தீர்த்தயாத்திரைக்குச் செல்லுதல்

அதுகேட்ட அர்ச்சுனன் தன்னுடைய ஆயுத மிருக்கிற விடத்திலேபோக யத்தனப்பட்டான் அப்போது திரௌபதையோடு தருமபுத்திரருக்கு முறையாதலால் அவர் அவ்விடத்தில் அவளோடு

வசனித்திருப்பதையறிந்து, அங்கே போவதற் கஞ்சிச் சற்றே ஆலோசித்து, "ஓ! ஓ! இதென்ன தருமசங்கடம் நேரிட்டது. இந்தப் பிராமணரோ சொத்தைப் பறிகொடுத்துவிட்டு இங்கு வந்து முறையிடுகிறார். நாம் சீக்கிரமாக ஓடி அந்தக்கள்ளரைச் சம்ஹாரஞ்செய்து பிராமணன் சொத்தைத் திருப்பிக் கொடாமற் போனால் தருமத்துக்குக் கேடுவருகின்றது. அதற்காக ஆயுத மெடுக்கப்போவது நிபந்தனைக்கு விரோதமாகையாலே ஸ்தலவா சம் பண்ணவேண்டி வருகிறது. ஆனாலும் தருமத்தைக் காப் பாற்ற வேண்டியதே முக்கியம். வனவாசம் நேரிட்டாலும் நேரிடட்டும்; ஆனால் நாம் சிங்காரவனத்தின் வழியாகச் செல்லுவோ மென்று வந்தான். அந்த யிடத்தில் தருமராஜனுந் திரௌபதை யும் சந்திரகாந்தக்கன் மேடையிற் சரசசல்லாபமா யிருக்கக்கண்டு அரிகரியென்று காதைமூடி, அண்ணனைப் பணிந்து சென்று, அவசரமாய் ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு வந்து, "ஓ பிராமணா! சீக்கிரம் வாரும். அந்தத் திருடர்போனவழி பாரும். தூரமாக ஓடிப்போகிறதற்கு முன்னமே அவர்களைப்போய்ப் பிடிப் போம்" என்று தேரின்மேலேறி, அந்தப் பிராமணனையுங் கூடவைத்துக்கொண்டு அவன் காட்டுகிற வழியே போய்த் திருடர் களைக் கண்டுபிடித்து, வில்லையெடுத்து நாணேறிட்டுக் கூர்மை யாகிய அம்புகளனேகந்தொடுத்து அவர்கள்மேற் பிரயோகித்து அவர்களையெல்லாம் கைவேறு கால்வேறு தலைவேறாகத் துண்டந் துண்டமாய் ஒரு நிமிஷத்துக்குள்ளே அறுத்துத் தள்ளி நாசம் பண்ணிப் பசு மாடுகளை யெல்லாந் திருப்பிக்கொடுத்து, அவரை வீட்டிற்குக் கொண்டுவந்து விடுத்துக் கும்பிட்டு அவரிடத்தில் ஆசிர் வாதம் பெற்று இந்திரப் பிரஸ்தம் வந்துசேர்ந்தான்.

பொழுது விடிந்தவுடன் அர்ச்சுனனானவன் தன் மூத்த தமை யனாரிடத்துக்கு வந்து தண்டனிட்டு, நடந்த செய்தியைச் சொல்லி, "அண்ணா! தேவரீர் திரௌபதையோடு வார்த்தையாடிக்கொண் டிருக்கும்போது நான் பார்த்தபடியால் நாரதர் ஏற்படுத்திய நிபந் தனையின்படி நான் தீர்த்தயாத்திரை போகவேண்டியதல்லவா? ஆகையால் அதற்கு விடை கொடுக்கவேண்டும்" என்று கேட்க, தருமராஜன் தம்பியைவிட்டுப் பிரிய மனமில்லாமல் தளைழந்த மனத்தோடு அவ்வர்ச்சுனனைத் தழுவி யழைத்து, "என் தரு மைத் தம்பி! என் வார்த்தையிலே நம்பிக்கைவைத்துக் கேள். நீ நானிருக்கு மிடத்திற்கு வந்ததினாலே என் மனதிற் கொஞ்சமும்

விகற்பமில்லை. அது எனக்கு இஷ்டந்தான். நீ குழந்தைக்குச் சமானமாகையால் அப்படிச் செய்ததினாலே தோஷமில்லை. நான் நீ யிருக்குமிடத்திற்கு வந்தால் அதுமாத்திரம் குற்றம். மேலும் நீ வேண்டுமென்று வந்தவனல்ல; பிராமண காரியமாய் வந்தாய்; ஆபத்துக்குப் பாபமில்லை. ஆகையால் நான் சொல்லுவதை நம்பி; நீ யாத்திரை போகாமலிரு. இதனாலே உனக்கு தருமத்தாழ்ச்சி வராது" என்று சொல்ல, அர்ச்சுனன் "அண்ணா! சகலமுந் தெரிந்தவராயிருந்தும் நீர் என்னிடத்தில் வைத்த அன்பினாலே இப்படிச் சொல்லுகிறீரே தவிர வேறில்லை. நானோ, கபடமாக எந்தத் தருமத்தையும் அனுஷ்டிக்கக் கூடாதென்று பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆதலால் யாத்திரை போவதற்கு அஞ்சி ஏதாவது ஒரு சமாதானஞ் சொல்லித் தருமத்துக்கு விரோதந்தேட மாட்டேன். மெய்யாகவே இந்த ஆயுதத்தின்பேரில் ஆணையிட்டுச் சொல்லுகிறேன்" என்றான். அப்பால் தருமராஜன் மனவருத்தத்தோடு விடை கொடுக்கப் பெற்ற அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை விரதத்திற்குரிய வேஷத்தை யடைந்து புறப்பட்டான். இப்படிப் புறப்பட்டபோது அவனுடன்கூடச் சகல வேதங்கள் தெரிந்த பிராமணர்களும் சாஸ்திரிகளும் வித்துவான்களும் வேதாந்தயோகிகளும் புராணீகர்களும் வந்து பொருந்த அர்ச்சுனனானவன் அவர்களோடு கூடிக்கொண்டு, வெகு சந்தோஷமாய் அனேகம் புண்ணிய தீர்த்தங்களுக்குப் போய்க் காசியென்னுந் தலத்தில் மஹாபரிசுத்தமாகிய கங்காநதியி னிடத்திற்கு வந்தான்.

---

## அர்ச்சுனன் நாககன்னியை மணத்தல்

---

கேளும் ஜனமேஜய மகாராஜனே! அர்ச்சுனனோடு வந்த சகல பிராமணர்களும் அந்தக் கங்காநதியில் வந்து ஸ்நானஞ் செய்து பரிசுத்தவான்களாய் அக்கினிவளர்த்து ஓமஞ் செய்து கொண்டிருக்க, அர்ச்சுனனும் நீரிலேயே சங்கற்ப முதலிய தர்ப்பணங்கள் பண்ணி ஓமம் செய்வதற்காகக் கரையேறவேண்டுமென்றிருக்கு மளவில், அந்த நீரினுள்ளே விளையாடிக்கொண் டிருந்த உலூபியென்கிற நாககன்னியானவள் அந்த அர்ச்சுனனுடைய ரூபத்தைக் கண்டு மோகித்து, அவனைப் பாதாள லோகத்துக்குக் கொண்டு போய்விட்டாள். இவ்விதமாக அர்ச்சுனனானவன் நாகராஜன் மகளாலே கொண்டுபோய்ப் பாதாளலோகத்திற் கொள்ள

வியன் என்கிற நாகராஜனுடைய மாளிகையில் விடப்பட்டு, அவ் விடத்தில் ஓமத்துக்கு உதவும்படியான அக்கினி வளர்த்துவைத் திருப்பதைக்கண்டு மனதிற் கொஞ்சமேனும் சங்கைப்படாமல் ஓம காரியத்தை முடித்து; அக்கினி பகவானுக்குச் சந்தோஷம் வரச் செய்து, அந்த நாககன்னியைப் பார்த்துச் சிரித்து, "அடி பெண்ணே! நீயார்? ஆ! என்ன சாகசமான காரியஞ் செய்தாய்? இந்தவிடம் யாருடையதோ தெரியவில்லையே? "என்று சொன் ஞன். அந்த உலூபியும் "ஓ எனக் கிஷ்டமான புருஷனே! கேளும், மகா நாகராஜர்களுக்குள்ளாக ஐராவதன் என்கிற ஒரு பெரியவ ருண்டு. அவருடைய வமிசத்திற் கௌரவிய ரென்கிற ஒரு நாகராஜ னிருக்கிருர். நான் அவருடைய மகள் உலூபி என்கிற பெயருடையவள். நீர் கங்கையில் இறங்கிய போது நான் உம் மைக் கண்ட மாத்திரத்திலே காமவேதனை யடைந்தேன். நீரு மோகமுற்று இவண் அடைந்தீர். உம்மை நம்பி விசுவாசித் திருக்கிற என்னிடத்தில் தயைவைத்து, என் மனதைச் சந்தோஷப் படுத்த வேண்டும்" என்று கேட்டுக்கொண்டாள். அர்ச்சுனன் "பாக் கியமுடைய பெண்ணே! நீ சொன்னது சரிதான். ஆனல் என் னுடைய தமையனாகிய தருமராஜன் பன்னிரண்டு மாதம் விரத மிருக்கும்படி எனக்குக் கட்டளையிட் டிருக்கிருர். அது தவறக் கூடாது. நீயோ என்னை விசுவாசித்தவ ளானபடியினலே உனக் கும் இஷ்டத்தைத் தரவேண்டியதா யிருக்கிறது. நானே பொய் யாய் நடக்கிறவ னல்ல. என்னுடைய விரதத்துக்கும் குறைவுவராம லிருக்கவேண்டும். உனது இஷ்டமும் நிறைவேற வேண்டும். இப்படி இரண்டுக்கும் விரோதமில்லாமல் எப்படி நடக்கலாம் சொல்" என்று கேட்க, அந்த நாககன்னிகையானவள் இதனைச் சொல்லுவதானுள்.

## இராவான் உற்பவம்

"ஓ பாண்டுகுமாரனே! நீர் இப்போது பூமிசஞ்சாரம் பண்ணு கிற செய்தி இன்ன காரணத்திற்காகவென்று எனக்கு நன்ருய்த் தெரியும். உமக்கு உம்முடைய தமையனர் கட்டளையிட்ட விரதமும் தெரியும். இவையெல்லாம் திரௌபதை நிமித்தம் நாரத முனிவருடைய முன்னிலையில் ஏற்பட்டதன்ருே? அந்தத் தருமத் துக்கு ஒரு குறையும் வரமாட்டாது. ஏனென்ருல், தொந்த

வடைந்து சரணம் பற்றுகிறவர்களைக் காப்பாற்றுவது எல்லாத் தருமங்களிலும் முதன்மையாகிய தல்லவா? ஆகையால் மன்மதனாலே மிகவும் வேதனைப்படுகிற என்னைக் காப்பாற்றினால் உம்முடைய விரதமானது பூரணமேயாகின்றது. அன்றியும் ஒரு வேளை உம்முடைய விரதத்துக்கு ஏதாகிலும் கொஞ்சம் குறைவு நேரிட்டிருந்தால், அதுவுங்கூட இந்தப் புண்ணியத்தினால் நீங்கும்; சந்தேகமில்லை. ஆதலால் நீயே கதியென்று நம்பிய என்னைக் காப்பாற்றவேண்டும். இது சகலசாஸ்திரங்களை யறிந்தவர்களும் ஏற்றுக்கொள்ளத்தகுந்த தருமமாகும். அப்படியல்லாமல் நீர் உமது விரதத்தையே பெரிதாக எண்ணி என்னிஷ்டத்தை நிறைவேற்றாமற் போனால், நான் உடனே மரணமடைவேன். உமக்குப் பெண்பாவம் வந்து நேரிடுமென்று நிச்சயமாய் நினையும். ஆகையால் ஒருவருக்கு உயிரைக் கொடுப்பதைக் காட்டிலும் உயர்ந்த தருமமுண்டோ? உமக்குத் தெரியாததோ? உம்மைச் சரணமென்று அடைந்த அநேக ஏழைகளை யெல்லாம் காக்கின்றீர். என்னிடத்தி லவ்வளவு கிருபை செய்யலாகாதோ? ஐயனே! உம்மைக் குறித்துக் காமனாலே மிகுந்த துன்பத்தை யனுபவிக்கிறேன். எவ்விதத்திலும் என்னைக் கைவிடாமற் காக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்.'' என்று மிகவும் பரிதாபமாக உலூபிஎன்பவள் சொல்லக்கேட்டு, அர்ச்சுனனும் இரங்கி, அவளுடைய இஷ்டத்தை நிறைவேற்றுகிறது பெரிதான புண்ணியமென்று நினைத்து, அந்த நாககன்னியைப் பார்த்து, "உன்னிஷ்டப்படி நடக்கிறேன்; மனதிற் சஞ்சலங் கொள்ளாதே" என்று சொல்லவே அந்தப்பெண்ணும் வெகு சந்தோஷத்தை யடைந்து, உடனே தனது தாய் தந்தையர்க்குச் சொல்லி, அவர்கள் அனுமதியின்பேரில் இவனுக்கு நல்ல போஜனமிட்டு, சந்தனம்-புஷ்பம்-தாம்பூலம் முதலான போகத்துக்கு உரிய வஸ்துக்களை யெல்லாங் கொடுத்து உபசாரஞ்செய்து, நவரத்தினமயமாகிய தன் பள்ளியறையி லழைத்துக்கொண்டுபோய் அன்றிராத்திரியெல்லாம் மிகவு மன்புடனே காமபோகங்களை யனுபவித்தாள். அர்ச்சுனனும் இராத்திரியெல்லாம் அந்த நாககன்னியோடு கூடியிருந்து அவள் வயிற்றில் ஒரு பிள்ளையை யுண்டாக்கி, விடியற்காலத்தி லெழுந்து, தன்னைப்பிரிய மனமில்லாத அவளைக்கட்டி முத்தமிட்டுக்கொண்டு, "பெண்ணே! நான் போய்வருகிறேன். அதைரியப்படாதே.'' என்று சொல்லி மெள்ளச் செலவு பெற்றுக்கொண்டு, அவளுடைய உதவியினாலே அவ்விடத்தினின்றுங் கங்கைக்கரை

வந்து சேர்ந்தான். அவளும் அர்ச்சுனனுக்குச் சமானமாகிய திட வீர காத்ர பராக்கிரமமுள்ள இராவான் என்கிற ஒரு பிள்ளையைப் பெற்ருள்.

## அர்ச்சுனன் சித்திராங்கதையை மணத்தல்

அப்பால் அர்ச்சுனனுவன் தன்னேடுவந்த சகல பிராமணர்களுடன் கூடி, நாகலோகத்தில் நடந்த செய்தியையெல்லாம் அவர்களுக்குத் தெரிவித்து, அங்கிருந்து அவர்களையு மழைத்துக் கொண்டு இமயமலையினிடத்திற்கு வந்து, அவ்விடத்தில் அகஸ்திய வனமென்கிற ஒரு புண்ணிய ஸ்தலத்தைக்கண்டு தரிசித்து, கவிஷ்ட பருவதத்திற்குப்போய் பிருகுதுங்கமென்கிற புண்ணிய க்ஷேத்திரத்திற் பிராயச்சித்தஞ் செய்துகொண்டு அனேக கோதானங்கள் பண்ணி, யாகங்களுக்காக தக்ஷணைகளுங் கொடுத்து, வெகு நிலங்களையும் பிராமணுளுக்குத் தானஞ்செய்து, இரணிய பிந்து என்கிற தீர்த்தத்திற்கு வந்து, அதிலும் ஸ்நானம்பண்ணி, திருச்சாளக்கிராமம் முதலாகிய பரிசுத்த பர்வதங்களுக்குப்போய் ஆங்காங்குள்ள புண்ணிய ஸ்தலங்களை யெல்லாங் கண்டு தரிசனஞ் செய்து, கிழக்குத் திக்கிற்போய் உத்பலினியென்கிற நதியையும் நைமிசாரண்ணிய க்ஷேத்திரத்தையும், நந்தை - அவரநந்தை - கௌசிகி என்கிற நதிகளையும், கயையென்கிற புண்ணியஸ்தலத்தையும், ஆங்காங்கிருக்கும் புண்ணிய மந்திரங்களையும் கண்டு அங்கங்கே ஸ்நானம், தர்ப்பணம், தானம் முதலாகிய சத்காரியங்களைச் செய்து, இன்னும் அந்தத்திக்கிலுள்ள அங்கம், வங்கம், கலிங்கம் முதலாகிய தேசங்களிற்போய் அவ்விடங்களிலிருக்கிற தீர்த்த க்ஷேத்திரங்களையுங் கண்டு தரிசனஞ்செய்து, கலிங்கராஜ்யத்தின் முகனையில் வருங்காலத்திலே அனேகம் பிராமணர்கள் தன்னிடத்தில் விடைபெற்றுக்கொண்டு போய்விட்டார்கள்.

பின்பு அர்ச்சுனன் சில சகாயத்தோடுங் கூடிக் கலிங்கராஜ்யத்தை விட்டுத் தெற்கே திரும்பி பரிசுத்தமாயும் அழகாயு மிராநின்ற அனேக இடங்களைப் பார்த்துக்கொண்டே கிருச்சிராகரமென்கிற தீர்த்தத்திற்கு வந்து ஸ்நானம்பண்ணி, சமுத்திர சமீபத்திலிருக்கிற மகேந்திரபர்வதத்தைப் பார்த்து, கோதாவரீ கிருஷ்ணை முதலான நதிகளிலேயும் ஸ்நானஞ்செய்து, அங்கிருந்து

சேஷாசலமென்று பெயர்பெற்று விளங்காநின்ற திருப்பதிமலைக்கு வந்து, அதிலிருக்கும் சக்கிரதீர்த்தம் - வராகதீர்த்தம் முதலான தீர்த்தங்களில் மூழ்கி, ஸ்ரீநிவாச மூர்த்தியாகிய திருவேங்கிடமுடையானைச் சேவித்து, அந்தப் பருவதத்தினின்று மிறங்கித் திருக்காளத்தியென்கிற மகா ஸ்தலத்துக்கு வந்து சொர்ணமுகி நதியில் நீராடித் திருக்காளத்தீசுவரனையுந் தரிசனம் பண்ணி, அத்தெலுங்கு நாட்டைவிட்டுத் தொண்டை நாட்டுக்குத் திரும்பித் தணிகைசென்று வள்ளி தெய்வானையுடன் விளங்காநின்ற சுப்பிரமணியக் கடவுளை தரிசித்துக்கொண்டு, திருக்கடிகாசலத்துக்குப்போய் அங்கு எழுந்தருளியிருக்கும் நரசிங்க சுவாமியையும், நான்கு புயங்களோடு விளங்கும் அநுமாரையும் சேவித்து, பின்பு முத்திக்ஷேத்திரமாகிய ஸ்ரீகாஞ்சீபுரமடைந்து, பஞ்சாக்ஷரப் பொருளாகிய ஏகாம்பரநாதரையும், அஷ்டாக்ஷரப் பொருளாய் விளங்காநின்ற வரதராஜப் பெருமாளையுங் கண்டு வணங்கி விரிஞ்சிபுரம்போய்த் தரிசித்துக்கொண்டு வரும்போது, நடுநாடு சென்று, திருவண்ணாமலையில் அடிமுடி காணவொண்ணாப் பெருஞ் சுரனைச் சுடராய் விளங்கும் அருணாசலேசுவரர் பொற்பாதங்களைத் தொழுதுப் பூசித்து, திருக்கோவலூருக்குப் போய் அந்தகா சங்காரஞ்செய்தருளிய வீரட்டேஸ்வரரையும், மூவடிகளாலுலகமளந்த முதல்வனாகிய திருவிக்கிரம கோபாலமூர்த்தியையும் நமஸ்கரித்து, திருவெண்ணெய்நல்லூருக்குப் போய்ப் பெண்ணையென்கிற மகாநதியில் ஸ்நானஞ்செய்து அங்கிருக்கும் பரமேஸ்வரரையும் பணிந்து துதித்து, இந்நடுநாட்டிலும் அத்தொண்டை நாட்டிலும் இருக்கின்ற சகல புண்ணிய தீர்த்தங்களிலுமாடி, மற்றுமுள்ள ஸ்தலங்களையும் தரிசனஞ் செய்து, அங்கிருந்து சோழநாட்டிற் பிரவேசித்து, மிகவுஞ் சிறப்புள்ள தில்லையில் விளங்கா நின்ற சிற்றம்பலவரையும் கோவிந்தராஜரையும் பணிந்து, காவேரியில் ஸ்நானஞ்செய்து புனிதனானே னென்று மனமகிழ்ந்து, கும்பகோண முதலாகிய புண்ணிய ஸ்தலங்களைத் தரிசித்துக் கொண்டே வந்து, திருவானைக்காவலி லெழுந்தருளி யிருக்கின்ற சம்புகேஸ்வரரைத் தரிசித்து, சிரகிரியையடைந்து தயுமான தயாபரமூர்த்தியைத் திரிகரணங்களாலும் வந்தித்து, அடுத்திருக்கின்ற ஸ்ரீரங்கம் சேர்ந்து சந்திரபுஷ்கரணியில் மூழ்கி, ஸ்ரீரங்கநாதனையுஞ் சேவித்து நெஞ்சுருகித் தோத்திரஞ்செய்து, பின்பு காவேரி சங்கமத்திற்குப் போய் ஸ்நானமுதலிய தானங்கள் புரிந்து, அங்

கிருந்து பாண்டிநாட்டுக்குப்போய் மதுரையென்று சொல்லுகிற விச்சாபுரமடைந்து, அழகென்னும் பொருளே இவ்வடிவெடுத்து வந்ததென்னும்படியாகிய மீனாக்ஷியம்மனையும், அவ்வம்மனுக்கு ஏற்ற சொக்கலிங்கநாதரையுங் கும்பிட்டு, அங்கிருந்து மணலூர்ப் பட்டணத்துக்குப் போனான்.

அங்கே சித்திரவாகன னென்கிற பாண்டியன் மகளாகிய சித்திராங்கதை யென்பவள் வேடிக்கையாய் வனத்தில் உலாவும் போது அர்ச்சுனன் அவளைப் பார்த்து மையலாகி, அவள் இராஜ குமாரியென்று கேட்டறிந்து, அதற்காக அந்த இராஜனைக் காண வேண்டுமென்று கருத்துகொண்டு, தான் வந்திருந்த செய்தியை அந்தச் சித்திரவாகன மஹாராஜனுக்குத் தெரிவிக்க, அவனும் தகுந்த மரியாதையுடனே எதிர்கொண்டுவர, அர்ச்சுனன் அவ்வரச னுடனே அரண்மனைக்குப் போனான். அவ்விடத்தில் அந்த அரசன் அர்ச்சுனனுக்குச் சகல உபசாரங்களும் பண்ணி யோக க்ஷேமங்கேட்க, இவனும் தன் யோகக்ஷேமங்களைச் சொல்லி அவனுடைய யோகக்ஷேமங்களை அன்புடனே விசாரித்துத் தனக் கிருக்குங் கருத்தையும் அவனுக்கு அறிவித்தான். அதுகேட்ட அந் தப் பாண்டியராஜனவ அர்ச்சுனனைப் பார்த்து, " இந்திரகுமா ரனே! கேளும்: எங்கள் குலத்தில் ஆதியிற் பிரபாகரனென்கிற ஒரு அரசரிருந்தார். அவருக்குப் பிள்ளையில்லாமற் போகவே அவர் பரமசிவனைக்குறித்துத் தவஞ்செய்ய, அச்சிவன் பிரசன்ன ராகி, "நீ சந்தானத்திற்காகத் தவஞ் செய்கிறாயன்றோ? ஆகையால் உனக்கு ஒரு குமாரன் உண்டாவான். அப்படியே உன் குலத் திலே முறையே ஒவ்வொருபிள்ளைகளே தோன்றுவார்கள்" என்று அனுக்கிரகஞ் செய்தார். அப்படியே எங்கள் குலத்தில் ஒவ்வொரு சந்ததியே உண்டாய்க்கொண்டு வந்தது. அந்தப் படி எனக்கும் இப்போது இந்தப்பெண் ஒருவள் தான் பிறந் திருக்கிறாள். ஆகையால் இந்தப் பெண்ணையே நான் பிள்ளையாக நினைத்து இவளைப் புத்திரிகாபுத்திர விதியின்படி யோக்கியனாகிய ஒருவனுக்குக் கொடுத்து, அவள் வயிற்றில் முதற்பிறக்கும் பிள்ளையை என் சந்ததிக்கு உரியவனாக்கவேண்டுமென்று நினைத் திருக்கிறேன். ஆனபடியினாலே இந்தப்படி உமக்குச் சம்மதியா னால் என் மகளை விவாகஞ்செய்து கொள்ளும்" என்று சொல்லக் கேட்ட அர்ச்சுனன் சம்மதித்தான். அந்தச் சித்திரவாகனன் நல்ல தினத்தில் முகூர்த்தங்கொண்டு, மிகவுஞ் சிறப்பாய்த் தன்மகளை

அவனுக்கு விவாகஞ் செய்வித்தான். அர்ச்சுனன் மகா சௌந்தரிய முடையவளாயும் பதின்மூன்ரும் வயதுடையவளாயு மிராநின்ற அந்தச் சித்திராங்கதையை விவாகஞ்செய்து, அவ்விடத்திலேயே மூன்று மாதம்வரையில் அவளுடனே சகலவித போகங்களையு மனுபவித்துக்கொண் டிருந்தான். பின்பு அவன் அவ்விடத்திற் குச் சமீபமாகிய தீர்த்தங்களுக்குப் போய்வருவோமென்று நினைத்து, உடனே அச்சித்திராங்கதையின் அந்தப்புரம்விட்டுப் புறப்பட்டான்.

---

## நாரீதீர்த்த வரலாறு

---

அங்கிருந்து புறப்பட்ட அர்ச்சுனனனவன் தென்சமுத்திரத் தைச் சேர்ந்த தீர்த்தங்களை யெல்லாம் பார்க்க நினைத்து அனேக தீர்த்தங்களுக்குப்போய் நீராடி, மற்ருேரிடத்தில் வெவ்வேறு ஐந்து தீர்த்தங்களிருப்பதைப் பார்த்து அவைகள் நெடுநாளாய் ஜனங்களாற் பரிசிக்கப்படாமையால் மிகவும் அழகாய் விளங்கிக் கொண் டிருப்பதையுங் கண்டு, அவைகளில் ஸ்நானம் பண்ண வேண்டு மென்று உத்தேசித்து அதில் இறங்க, அங்கிருக்குந் தபசிக ளெல்லாம் அர்ச்சுனனைப் பார்த்து, “ஓ மஹாராஜனே! இந்தத் தீர்த்தங்களி லிறங்கவேண்டாம்” என்று சொன்னுர்கள். அது கேட்ட அர்ச்சுனனனவன் கைகூப்பிக்கொண்டு அந்தத் தபசிகளைப் பார்த்து, “சுவாமிகளே! ஏன் இவைகளி லிறங்கக்கூடாது? இவைகளின் விவரத்தை எனக்குத் தயைசெய்து சொல்லவேண் டும்” என்று கேட்க அந்தத் தபசிகளெல்லாரும் “ஓ பாண்டு குமாரனே! இந்தத் தீர்த்தங்கள் பரிசுத்தமானவை யல்லவென்று நினைக்கவேண்டாம். சுருக்கமாகச் சொல்லுகிருேம் கேளும். இதோ இருக்கிற தீர்த்தத்திற்கு அகஸ்திய தீர்த்தமென்று பெயர். இதில் முழுகினுல் மஹா பாதகங்களெல்லாம் தீரும். இது சௌபத் திர தீர்த்தமென்று பெயர் பெற்றுச் சகல க்ஷேமங்களையுங் கொடுக்கத்தக்கத் திறமையுடையது. இதனுலே தீராதபாவ மென்றுமில்லை. இதுகார்ந்தம் தீர்த்தமென்கிற பெயருடையது. இதில் ஸ்நானஞ் செய்பவர்களுக்கு மனதிலிருக்குங் கவலையெல்லாந் தீரும். இதைப் பரத்துவாச தீர்த்தமென்று சொல்லுகிருர்கள். இதில் நீராடுவதினுல் அசுவமேதயாகஞ் செய்த பலன் கிடைக்

கும். இவை யெல்லாம் மஹா பரிசுத்தங்கள்தான். இவைகளில் மிகவும் பொல்லாத முதலைக ளிருக்கின்றன. அவைகள் நீரி லிறங்கிய அனேக முனிவர்களைப் பிடித்துக்கொண்டு போய்விட்டன. ஆனதுபற்றி யாவரும் இவைகளில் ஸ்நானஞ்செய்கிறதை விட்டு விட்டார்கள். அதனாற்றான் உம்மையும் அதி லிறங்கவேண்டாமென்று சொன்னோம்" என்ன அர்ச்சுனன் அதுகேட்டு, "ஆனாலும் இதில் நான் ஸ்நானம் பண்ணுகிறேன்" என்று சொன்னான். பெரியோர்க ளியாவரும் வேண்டாம் வேண்டாமென்று தடைசெய்தும், மிகுந்த வீரமும் தீரமு முடையவனாகையாலே அந்தத் தடையை லக்ஷியஞ் செய்யாமற்போய் சௌபத்திரமென்கிற தீர்த்தத்தில் இறங்கி ஸ்நானஞ் செய்யுமளவில் அதிலிருந்த முதலையானது இவன் கால்களைக் கௌவிக்கொண்டது. பின்பு அர்ச்சுனன் தன் கால்களைக் கௌவிக்கொண்டு ஜலத்தினுள்ளே இழுக்கும் முயற்சியையுடைய அந்த முதலையைத் தன் வலிமையினாலே தூக்கிக் கொண்டு எழும்பிக் கரையிற் குதித்தான். அப்போது அந்த நீர்மிருகமானது தன் ரூபம் நீங்கிப் பல ஆபரண அலங்காரத்தோடு அழகிய வடிவமுமுடைய ஒரு பெண்ணாய் நின்றது. அதுகண்ட அவ்வரசன் ஆச்சரியப்பட்டு, அன்புடனே அந்தப்பெண்ணைப்பார்த்து, "அடிபெண்ணே! நீயார்? இப்படிப்பட்ட துஷ்ட ஜெந்துவாகப் பிறப்பதற்கு என்ன பாதகஞ் செய்தாய். உன் வரலாற்றைச் சொல்" என்று கேட்க அந்தப் பெண்ணுஞ் சொல்லத் தொடங்கினாள்.

"கேளுமையா மஹானுபாவா! நான் ஒரு தெய்வமகள்; தேவாரணியத்திலிருக்கிறவள்; வந்தையென்கிற பெயருடையவள்; எனக்கு நான்கு தோழிமார்களுண்டு. அவர்களோடு கூட ஒருநாள் நான் தேவேந்திரனுடைய உத்யானவனத்துக்குப் போனேன். அவ்விடத்தில் ஒரு பிராமண மகானுபாவர் சூரியன்போல் தேசோராசியாய் விளங்கி, அந்த உத்தியான வனமெல்லாம் வெயிற்பட்டதுபோற் பிரகாசிக்கும்படி நின்றுகொண்டு, தாமொருவராய் மகா நியமத்தோடு கீதவேத மோதிக்கொண் டிருந்தார். அப்படிப்பட்டவரையும் அவருடைய ரூபத்தையும் பருவத்தையும் நான் கண்டு காதல்கொண்டு, நானும் என்தோழிகளாகிய சௌரபேயி - சமீசை - வந்தை - இல்லிதை என்கிறவர்களும் அவரை மயக்கிக் கைவசப்படுத்த வேண்டுமென்று அவரருகிற்போய் பாடுகிறதும் - ஆடுகிறதும் - சிரிக்கிறதும் - பரிகாசஞ் செய்கிறதும் - கண்ணைக்

காட்டுகிறதும் - தனத்தைக் காட்டுகிறதுமாகப் பலவித விலாசங்களோடு சூழ்ந்து உலாவிக்கொண் டிருந்தோம். அவர் கிஞ்சித்தாகிலும் மனங் கலங்காமல் தனது நெறியிலேயே இருந்து, தான் புரியுந் தவத்திற்கு இடையூறு செய்யு மெங்களைப் பார்த்துக் கோபங்கொண்டு, "ஓ பாவிப் பெண்காள்! நீங்கள் என் விஷயத்திற் செய்யுங் கெட்ட தொழில்களாலே நூறு வருஷகாலம் முதலைகளாய் சலத்தினுள்ளே வாசம்பண்ணக் கடவீர்கள்" என்று சபித்தார். அச்சாபங் கேட்டமாத்திரத்திலே நாகங்களெல்லாம் இடிமுழக்கங் கேட்ட அன்னப் பேடுகள்போல் நடுநடுங்கித் துயரமுற்று, அந்த மஹானுபாவருடைய பாதங்களில் விழுந்து "சுவாமி! நாங்கள் அறியாத பிள்ளைகள்; தேவரீருடைய மகிமை தெரியாமல், காமனால் துளைக்கப்பட்ட தேகமுடையவர்களாகிய நாங்கள் அயோக்கியமாகிய காரியங்களைச் செய்தோம். ஆனாலும் சிறியோர் செய்த பிழையைப் பொறுப்பது பெரியோர் கடமையல்லவோ! அன்றியும் பெண்வதை ஆகாதென்பது தருமநூல்கற்ற தேவரீருக்குந் தெரியுமே. இப்படியிருக்க எங்களுக்கு இவ்வித சாபங் கொடுக்கத் தகுமா? எங்களையனே! இதைக் காட்டிலும் எங்களைக் கொலை செய்யும் விதம் வேறில்லை ஆகையால் எங்களைக் காத்தருள வேண்டும். அல்லாமலும் பிராமணனானவன் யாவரிடத்திலும் தயையா யிருக்கவேண்டியவ னவல்லவோ? ஓ மஹானுபாவா! அந்த நிலையை எங்களுக்காக விடாமலிருக்க வேண்டும். தேவரீர் திருவடித்தாமரைக ளல்லாமல் எளியேங்களுக்கு வேறு தஞ்சமில்லாமையாற் பெரியோர்களுடைய ஒழுக்கத்தின்படி சரணமடைந்த எங்களைக் காப்பாற்றி யருளவேண்டும்" என்று கண்களினின்றும் தாரைதாரையாய் நீர்பெருகக் கோவென்று கதறி வேண்டிக் கொள்ளுமளவில் அவர் மனமிரங்கி, "பெண்களே! பயப்படாதீர்கள். உங்களுக்கு இச்சாபம் சீக்கிரத்திலேயே நீங்கிப்போய்விடும். அது எப்போதென்றால், நீங்கள்முதலைகளாய் நீரிலிருந்து கொண்டு அதி லிறங்குகிறவர்களையெல்லாம் பிடித்துத் துன்பப்படுத்து மளவில் ஒருவன் உங்களை நீரினின்றுந் தூக்கிக் கரையில்விடுவான். அப்போது இந்தச் சாபம் நீங்கும். நான் ஒருபோதும் பொய்பேசாதவனாகையால் முன்சொன்னதும் தவறாது பின்சொன்னதும் பிசகாது. நீங்கள் வாசமாயிருக்குந் தீர்த்தங்களுக்கு இதுமுதல் நாரீதீர்த்தங்க ளென்றுபெயருண்டாகும் போங்கள்" என்று சொன்னார்.

அதுகேட்ட நாங்கள் அவரைப் பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து அப்பால் மிகுந்த துக்கத்தோடு வந்து எவ்விடம்போயிருந்தால் நமது சாபத்தைநீக்கும் புருஷனைச் சீக்கிரத்திற் காணலாமென்று சிந்தித்துக் கொண்டிருந்தோம். அந்த வேளையில் நாரத மஹாமுனிவர் அங்கே எழுந்தருளினர். அவரைக் கண்டமாத்திரத்திலே நாங்கள் கொஞ்சம் சந்தோஷமடைந்து, அவர் பாதங்களில் தெண்டனிட்டு வெட்கத்தினால் தலைவணங்கி நின்றோம். அம்மஹாமுனிவர் பகற்காலத்து விளக்கொளிபோல் மழுங்கியிருக்கும் எங்கள் முகங்களைப் பார்த்து, "உங்களுக்குத் துக்கம் வந்த காரணமென்ன" என்று கேட்டார். நாங்களும் நடந்த செய்தியை விண்ணப்பஞ் செய்தோம். அதைக்கேட்ட அவர் "தென்சமுத்திரக் கரையில் ஐந்து தீர்த்தங்க ளிருக்கின்றன. அவைகளில் நீங்க ளிருந்தாற் சீக்கிரத்திற் பாண்டுமஹாராஜனுடைய குமாரனாகிய அர்ச்சுனனென்கிற ஒரு மஹா புருஷன் தீர்த்தயாத்திரையாய் அவ்விடம்வந்து, உங்களை இந்தச் சாபத்தினின்றும் நீக்கிவிடுவான்" என்று சொல்லி மறைந்து போய்விட்டார். அதுகேட்டு இவ்விடம் வந்த நாங்களும் ஒரு முகூர்த்தத்துக் குள்ளாகவே அந்தக் கோரரூப மடைந்து இவைகளிற் பிரவேசித்தோம். ஓய் மஹா புருஷனே! அப்பெரியோர்களுடைய வாக்கின்படி நான் உம்மாலே இந்த நரகத்தினின்றும் விடுபட்டேன். என் தோழிகளாகிய மற்றை நான்கு பேரும் மற்ற மடுக்களில் விழுந்து கிடக்கிறார்கள். தயை செய்து நீர் அவர்களையும் புனிதராக்கவேண்டும்" என்று வேண்ட அச்சொல்லைக் கேட்ட அந்தத் தேவேந்திரகுமாரன் முன்போலவே மற்றைத் தீர்த்தங்களிலும் முழுகிக் கால்களைக் கௌவிக்கொள்ளும் முதலைகளைத் தூக்கிக்கொண்டு எழும்பிக் கரையிற் குதித்தமாத்திரத்திலே அவர்களும் முதலைரூபம் விட்டு முன்போலவே தெய்வப் பெண்களாய் மிகுந்த வுபசாரத்தோடு துதிக்க அர்ச்சுனன் அவர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டான். பின்பு அங்கிருந்த தவசிகளெல்லாரும் அர்ச்சுனனை மிகவுங் கொண்டாடி, நாரீதீர்த்தங்களை ஸ்நான தர்ப்பணங்களுக்கு உரிய பெருமையாகச் செய்து வந்தார்கள்.

---

# பப்புருவாகனன் உற்பவம்

இவ்விதமாக அந்த அர்ச்சுனனானவன் தக்ஷிண சமுத்திரக் கரையிலிருக்குந் தீர்த்தங்களிலும் கன்னியாகுமரி முதலியவைகளிலும் ஸ்நானம்பண்ணிவிட்டு, தன் காதலியாகிய சித்திராங்கதையைப் பார்க்கவேண்டுமென்று மறுபடியும் மணலூர்ப் புரத்திற்கு வந்தான். அப்போது அவள் பப்புருவாகனனென்று பெயர்பெற்ற குமாரனைப் பெற்றிருந்தாள். அர்ச்சுனனானவன் அப்பிள்ளையைப் பார்த்து சந்தோஷித்து தன் மாமனாராகிய சித்திரவாகன மஹாராஜாவைப் பார்த்து, "ஐயா மஹாராஜனே! என் வாக்குத்தத்தத்தின்படி இதோ இப்பிள்ளையை வாங்கிக்கொள்ளும்" என்று தன் மகனை அந்த இராஜாவுக்குக் கொடுத்து, தன் மனைவியாகிய சித்திராங்கதையைப் பார்த்து, "என் பொற்கொடியே! நான் ஊருக்குப்போகச் செலவு கொடுக்கவேண்டும். நீ இங்கேயே குழந்தையை வளர்த்துக்கொண்டிரு. நான் போய்ச் சேர்ந்தவுடனே சகல சுபசந்தோஷங்களும் நடக்கும். அதற்கு உன் தகப்பனார் சகல பரிவாரங்களோடு எங்கள் பட்டணத்துக்கு வருவார். அப்போது நீயும் கூடவந்து எங்கள் தாயாகிய குந்தியையும், எனதண்ணன்மாராகிய தருமபுத்திரர் பீமசேனன் என்பவர்களையும் என் தம்பிமாராகிய நகுலசகாதேவர்களையும், மற்றும் என்னுடைய சகலவித பந்துக்களையும் கண்டு, அவரவர்களுக்குத் தகுந்தபடி நடந்துகொண்டு, அவர்களெல்லாம் மிகவுங் கொண்டாடச் சகல பாக்கியங்களையும் பெற்று வாழ்ந்துகொண்டிருக்கலாம். குழந்தையைப் பத்திரமாய்ப் பார்த்துக்கொள்ளுக" என்று சொல்லி விடைகேட்டான்.

அதுகேட்ட சித்திராங்கதையானவள் தேகமெல்லாந் துவண்டு கண்ணீர்மல்கிப் பெருமூச்செறிந்து, தலையை வணக்கித் தரையைக் கால்விரலாலே கீறிக்கொண்டு நிற்க, அவளைப்பார்த்த அர்ச்சுனனானவன் போவதற்குக் காலெழாமல் மனதில் வருத்தமடைந்து, போகவேண்டியது ஆவசியகமானதாலே மீட்டும் சித்திராங்கதையைப் பார்த்து, "என் பிராணநாயகியே! நீ விசனப்படாதே ஐயோ! வீணாய் உன்கண்கள் கலங்கிப்போகின்றன; உன்முகத் தாமரை வாடுகின்றது; பெருமூச்சுப்பட்டுக் கொங்கைகள் கன்றிப் போகின்றன; வேண்டாம் குழந்தையின் முகத்தைப் பார்த்து மகிழ்ந்துகொண்டிரு; சிந்தைப்படாதே; மிகவும் விரைவில் உன்னைப் பார்ப்பேன்" என்று சொல்லித் தனது உத்தரீயத்தினால் அவள் கண்ணீரைத் துடைத்து, முகத்தைக்கட்டி முத்தமிட்டு,

குழந்தையையும் பார்த்து எடுத்து முத்தமிட்டு உச்சிமோந்து, வருத்தத்தோடு அவளிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு, தன் மாமனர் முதலாகிய பேர்களையும் கும்பிட்டு விடைபெற்று ; அப் பாண்டியன் மகளைவிட்டு நீங்கமாட்டாத தனது ஐம்பொறிகளுக்கும் சமாதானஞ்சொல்லி, அந்த நகரியைவிட்டுப் புறப்பட்டு இராமேச்சுவரமென்கிற ஸ்தலத்துக்குப்போய், சகல பாவங்களையும் பஞ்சுப்பொதிகளை நெருப்புப்பொறி எரிப்பதுபோல் எரிக்கத் தகுந்த மகத்துவமுள்ள சேதுவைக் கண்டு, ஸ்நானஞ்செய்து அங்கே கோதான பூதான கன்னிகாதான முதலாகிய சோடச மகாதானங்களுஞ் செய்து, தென் கடற்கரை வழியாகவேபோய் மலைநாடு சென்று, அங்கு அனந்தபத்மநாப சுவாமியைத் தரிசித்து, பொதியைமாமலையின்மேலேறித் தவங்களாலாகு மகிமைகளுக்கெல்லா மிருப்பிடமாகிய அகத்திய மஹா முனிவரைத் தரிசித்து, அவ்விடம் விட்டுச் சகியமென்கிற மலைமேலேறி, அவ்விடத்துப் புண்ணிய தீர்த்தங்களிலாடி, மேற்குக்கடலோரமாய் உடுப்பை சுப்பிரமணியமென்கிற ஸ்தலத்தினுக்குப்போய்த் தொழுது, மற்றும் புண்ணிய தீர்த்த க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டு, கோகர்ணமென்கிற மகா சிவக்ஷேத்திரஞ் சென்று, அவ்விடத்துத் தீர்த்தத்தில் ஸ்நான தான ஜபதபதர்ப்பணுதி புண்ணிய காரியங்களை முடித்து, பார்வதிபரமசிவ னிருவரையும் தரிசனம்பண்ணி, பிரபாசமென்கிற தீர்த்தத்துக்கு மகா சந்தோஷத்துடனே பிரயாணமாய்ப் போனுன்.

---

## அர்ச்சுனனுக்குச் சுபத்திரைக் காட்சி

---

இவ்வாருக மேற்குக்கடலருகி லிருக்கின்ற பல தீர்த்தக்ஷேத்திரங்களை யெல்லாங் கண்டு பணிந்து, முறையே பிரபாசதீர்த்தம் வந்து சேர்ந்து, அதில் ஸ்நான தானுதிகளைச்செய்து பிராமணரை யெல்லாம் பூசித்து அனுப்பிவிட்டு, அன்று இராத்திரி படுத்திருக்குங் கால் தனக்கு யாதவகுலத்தானுகிய கதனென்கிறவன் முன்னெருகால் சுபத்திரை யென்பவளுடைய ரூபலாவண்ய முதலானவ்வகைளைக் குறித்துச் சொன்ன கதைகளையெல்லாம் நினைத்து நினைத்து, அவளைப் பார்க்கவேண்டுமென்று ஆவல் கொண்டு, அப்படிக்

காண்பதற்கு எது உபாயமென்று யோசித்து, "காலத்திற்குத் தகுந்த கோலமாய்ச் சந்நியாசிவேஷம் போட்டுக்கொண்டு யாதவர்களுக்கும் அவர்களைச் சேர்ந்தவர்களுக்குந் தெரியாமற் பிக்ஷை செய்து போவோமானால் எவ்விதத்திலேனும் சுபத்திரையைக் காணலாம்; கண்டபின்பு கிருஷ்ணனுடைய கருத்தை யறிந்து அவர் சகாயத்தினாற் செய்யவேண்டியதைச் செய்யலாம்" என்று மனதில் நிச்சயித்து, திரிதண்டமும் காஷாயமும் கமண்டலமும் ஜபமாலையுமாகச் சந்நியாசிவேஷம் தரித்து யோகிபோலானான். இப்படியிருக்குங்காலத்திலே மேகங்கள் ஆகாயமெல்லாம் படர்ந்து, ஸ்ரீகிருஷ்ணன் திருமேனிபோற் கறுத்து, அவர்கையில் விளங்கும் சக்கரத்தின் ஒளிபோலமின்னி, அவருடைய சங்கத்தொனிபோற் கிடுகிடுவென்றிடித்து, அவருடைய சாரங்கமென்கிற வில்லிலிருந்து புறப்படுகிற பாணங்களின் கூட்டம்போல் மழைதூறவும், அம்மழையால் அவருடைய கிருபையென்னும் பேரருட்பிரவாகம் போலப் பூமியெங்கும் ஜலப்பிரவாகம் உண்டாகி நிறைந்தோடவும், அர்ச்சுனனுடைய மனது காமத்திலாழ்ந்தது போலத் தாமரைகளெல்லாம் நீரில் அமிழ்ந்து போகவும், முன்னம் அழகினாலே தன்னை வெற்றிகொண்ட அர்ச்சுனனைக் காமன் அப்போது சுபத்திரையென்கிற ஒரு அஸ்திரத்தினாலே வெற்றிகொள்ளப் போகிறானென்கிற மகிழ்ச்சியினால் அவன் கொடியாகிய மீன்கள் துள்ளவும், தங்களுக்கிணையாகிய சுபத்திராதேவிக்கு அர்ச்சுனன் வாய்க்கப் போகிறானென்கிற சந்தோஷத்தினாலே மயில்களெல்லாம் நடனஞ் செய்யவும், செந்தாழைகளும் குடமல்லிகைகளும் மலர்ந்து வண்டுகளுக்கு விருந்திடவும், ஆறுகளெல்லாம் பூரண வெள்ளங்களுடனே கூடிச் சமுத்திரநீரைத் தங்கள் வடிவமாக்கவும், நாயகரும் நாயகிகளும் அகிற்புகைகமழும் பள்ளியறைகளிற் கட்டியணைந்து படுத்திருக்கவும், பயிர்களெல்லாஞ் சந்தோஷத்துடனே கதிர்களின் பாரத்தினால் முடிவளைந்து தங்கள் சீவனைக் காப்பாற்றும் மேகங்களை வணங்கிக் கும்பிடுவதுபோ லிருக்கவும்; இவ்விதமாக மாரிக்காலமானது விளங்குமளவில்; சன்னியாசிவேடம் பூண்ட அர்ச்சுனனானவன் சுபத்திரையை நினைத்து மனதில் ஏக்கங்கொண் டிருக்கையினால் பொறிகள் வேறுவழி செல்லமாட்டாமையாலும், தேகம் செய்கையற் றிருப்பதினாலும், தானெடுத்த வேடத்துக்குத் தக்கபடி ஓர் ஆலமரத்தின் பொந்தில் உட்கார்ந்து கண்ணனை நினைத்தான். இவன் நினைத்த

மாத்திரத்திலே சத்தியபாமையோடு மஞ்சத்தின்மீதிற் பள்ளி கொண்டிருந்த கண்ணன் திடீரென்று எழுந்து, அந்தச் சத்திய பாமை காணும்படி விழுந்து விழுந்து சிரித்தார். சத்தியபாமை "இதென்ன அகாரணமாகச் சிரிக்கிறீர்? இதன் காரணத்தைத் தயை செய்து விளம்ப வேண்டும்." என்றாள். கண்ணன் மறுபடியுஞ் சந்தோஷத்தினாலே அடிக்கடி சிரித்துச் சத்திய பாமையைப் பார்த்து, "ஓ பெண்ணரசே! உனக்குச் சொல்லத் தகாதது மிருக்கிறதோ? என்மனது அறியாததெதுவோ அது தான் நீ யறியக்கூடாதது; ஆகையால் நான் சிரித்ததற்குக் காரணஞ் சொல்லுகிறேன் கேள். என்னுடைய நல்லத்தையின் மகனும் பீமசேனனுக்குத் தம்பியுமாகிய அர்ச்சுனன் திரௌபதையின் நிமித்தமாகத் தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டு வந்தான். அப்படி வந்தவன் அளவற்ற தீர்த்தங்களாடி திவ்விய க்ஷேத்திரங்களையும் தரிசித்துக்கொண்டு பிரபாசதீர்த்தத்திற்கு வந்து சேர்ந்தபோது நமது சுபத்திரையி னழகை நினைத்து, அவளைக் காண்பதற்காக சன்னியாசி வேடம்பூண்டு, இந்தத் துவாரகைக்குச் சமீபத்தில் ஓர் ஆலமரத்தின்கீழ் மழையில் நனைந்து மனவருத்தப் பட்டுக் கொண்டு என்னை நினைக்கிறான். அதற்காகத்தான் சிரித்தேன். பெண்ணே! நீ உன்னண்ணனாகிய அர்ச்சுனனைப் பார்க்கவேண்டு மானால் என்னுடன் கூடவா காண்பிக்கிறேன்" என்று சொல்லிச் சத்தியபாமையை அழைத்துக்கொண்டு அவனிருக்கும் மரத்தி னிடத்தில் வந்து, "இதோபார், சன்னியாசி வேடத்துடன் வருந்து கிறான் நம்முடை அர்ச்சுனன்" என்று அவளுக்குக் காண்பித் தார்.

அந்த அர்ச்சுனன் தீர்த்தயாத்திரையாகப் பிரபாசமென்கிற விடத்துக்கு வந்திருக்கிறான், என்று முன்னமே சாரணர்கள் சொல்லக் கேட்டிருந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் ஒன்றுந் தெரி யாதவர்போல் அர்ச்சுனனை நோக்கி, எதுக்கு நீ தீர்த்தயாத்திரை வந்தது" என்று வினவ, அவனும் ஆதிமுதல் நடந்த சரித்திரங் களை யெல்லாஞ் சொல்ல, இருவரும் சில நாழிகை வேடிக்கை யாய்ப் பேசிக்கொண் டிருந்து, அங்கிருந்து புறப்பட்டு, மனோரம் மியமாகிய காடுகளும் பாறைகளும் அருவிகளும் மடுக்களும் பொருந் திப் பலவித மிருகங்களுக்கும் பட்சிகளுக்கும் வாசஞ்செய்யு மிட மாய் விளங்காநின்ற ரைவதமென்று பெயர் பெற்ற பருவதத் திற்கு வந்து சேர்ந்தார்கள். அவ்விடத்திலே முன்னமே ஸ்ரீ

கிருஷ்ணசுவாமியினுடைய கட்டளைப்படி ஊழியக்காரர் ஒரிடத்தைச் செவ்வையாய் அலங்காரஞ்செய்து, வேண்டிய போஜன வஸ்துக்களைக் கொண்டுவந்து வைத்தார்கள். அந்த உணவுகளை எல்லாம் அவ்விந்திர குமாரன் கண்ணனோடுகூடப் புசித்து, சில நேரம் தங்களைக் காணவந்தவர்களாகிய அங்குள்ள கணிகையர்களாற் செய்யப்படும் ஆடல்பாடல்களைப் பார்த்திருந்து, பின்பு அவர்களை யனுப்பிவிட்டுத் திவ்வியமாகிய படுக்கையிற் சயனித்துக்கொண்டு, தீர்த்தயாத்திரையிற் கண்ட மூர்த்தண்ய க்ஷேத்திரங்களுடைய சரித்திரங்களை யெல்லாஞ் சொல்லிக்கொண்டேயிருந்து நித்திரை போய்விட்டான்.

பிறகு விடியற்காலத்தில் யதுகுலமன்னருக்கு முழக்கும் வீணை வேணு முதலிய வாத்தியங்களைக் கேட்டு எழுந்திருந்து நித்திய கர்மானுஷ்டானஞ்செய்து நிற்க, கண்ணன் அவனுக்குக் காலங்களில் தகுந்த போஜனங்களைக் கொடுத்து வரும்படியாகச் சிலரை நியமித்து, தாம் அர்ச்சுனனிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு, பொற்றகட்டினு லலங்கரிக்கப்பட் டிரதத்தின்பேரிலேறிச் சத்தியபாமை சமேதராய்த் துவாரகைக்கு வந்துவிட்டார். அர்ச்சுனனும் கண்ண னுத்தரவின்படி அந்த மலையிலேயே இருந்தான். இப்படிக்கிருக்க அந்த ரைவதபருவதத்திலே வருஷந்தோறுஞ் செய்கிறபடியே யாதவர்களுக்கு ஒரு திருவிழா நேரிட்டது. அந்தத் திருவிழாவில் அந்த மலையைச் சுற்றிலும் அங்கங்கே செய்யப்பட்டிருந்த அழகான வீடுகளினாலேயும் கிளைகளுடன் கூடிய பெரிய மரங்கள்போல் வைத்திருந்த விளக்கு வரிசைகளினாலேயும் இன்னும் பல அலங்காரங்களினாலேயும் கோடிசூரியப் பிரகாசமாய் விளங்கும் அம்மலையிலே விருஷ்ணி - அந்தகர் - போஜர் என்கிற பல பிரிவாயிராநின்ற அந்த யதுவமிசத்துக் குமாரர்களெல்லாம் மங்கள ஸ்நானஞ்செய்து, நல்ல ஆடை ஆபரணங்களைத் தரித்து, பலதானங்களும் வழங்கி, திவ்விய போஜனங்களைப் புசித்து சந்தன புஷ்ப தாம்பூல முதலானவைகளுடனே வேடிக்கையாய் வாகனங்களி லேறிக்கொண்டு அனேகம் பட்டணத்து ஜனங்களோடும் பல வாத்திய கோஷங்களோடும் சங்கீதங்களோடும் நாட்டியங்களோடும் நான்கு புறங்களிலும் சுற்றிவரவும், பலராமர் ரேவதி தேவியென்கிற தன் மனைவியுடனே மதுபானஞ் செய்து மதத்தினாற் கண்கள் சிவந்து சுழலமிடும்படி பல பேர்களோடு கூடி

யாடிவரவும், யதுவமிசத்து மகாராஜாவாகிய உக்கிரசேனன் என்கிற வரும் அனேக ஸ்திரீகளோடும் பாடுகிறவர்களோடும் சூழ்ந்து வரவும், இன்னுமிப்படியே பிரத்தும்மனன் - சாம்பன் - முதலாகிய பேரும் வேடிக்கையாயிருக்கவும், இவ்வாறாகக் கோலாஹலமா யிருக்குஞ் சமயத்தில ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் தாமும் செய்ய வேண்டிய தானம் முதலாகிய காரியங்களைச் செய்து, அதில் ஓரிடத்திலிருக்கும் அர்ச்சுன ஸந்நியாசியைக் கண்டு, யாவரும் பார்க்கும்படியாய் அதிவிசுவாச பயபக்தியுடன் நமஸ்காரம் பண்ணிக்கொண் டிருந்தார். அதைகண்ட எல்லாரும் விழுந்து கும்பிட்டார்கள்.

அக்காலத்தில் திருவிழாவுக்காக மிகவுஞ் சிங்காரித்துக்கொண்டு வந்த சுபத்திரையானவள் தோழிகளுடனே கூட அந்த மலையிற் சஞ்சரிக்க, அதுகண்ட அர்ச்சுனன் காமவிகாரமடையவே கிருஷ்ணன் அக்குறிப்பை யறிந்து, புன்சிரிப்போடும் அந்தத் திரிதண்ட ஸந்நியாசியைத் தனியே அழைத்துக்கொண்டு சென்று, "காட்டிற் சஞ்சாரஞ்செய்யுந் தவசியாகிய உனது மனம் நாட்டிற் சமுசார முதலிய காமத்தில் மயங்குகிறதுபோல் தோற்றுகிறது. இந்தப் பெண்ணைப் பார்த்ததினாலே உனக்கு மோகப்பேய் பிடித்ததோ? ஓ ஜெகஜாலத்தவசியே! இவளாரென்றால் என்னுடைய தங்கை சுபத்திரையென்கிற பெயருடையவள். எங்கள் தகப்பனாருக்கு இந்தப் பெண்ணின்பேரில் மிகவும் விசுவாசம். ஆகையால் உனக்கு இந்தப் பெண்ணிடத்திலே அன்பிருந்தால் அஞ்சாமற் சொல்லு. நானே எங்கள் தகப்பனாருக்குத் தெரிவிக்கிறேன்." என்று சொல்ல அர்ச்சுனன் நீரென்ன பரிகாசஞ்செய்கிறீர்? நான் வந்த காரியமே இதுவாயிற்றே. வாசுதேவருக்கு மகளாயும் தேவரீருக்குத் தங்கையாகவு மிருப்பதோடு, மகா ரூபலாவண்ய சவுந்திரியங்களு முடைய வளா யிராநின்ற இந்தப் பெண்மணியைப் பார்த்து மகாதீர முடைய தவசிகளும் மயங்குவார்களே; நான் மயங்குவதரிதோ? நீர் சும்மா வேடிக்கைப் பேச்சு பேசவேண்டாம். அவள் எனக்கு மனைவியானாளேயானாற் சகல மங்களங்களும் வந்தாற்போலேயாம். ஆகையால் என்னிடத்திற் பரிபூரண கிருபை வைத்து, அவளை நான் கலியாணம் பண்ணும்படியான வழியைச் சொல்லவேண்டும்" என்று கேட்டான். அது கேட்டுக் கிருஷ்ணன் மகாவிருப்பத்தோடும் இதனைச் சொல்லுகிறார்—

"அர்ச்சுனா! நீ சொல்லுகிறது சரிதான். அதற்கு உபாய மென்னவென்றால்: க்ஷத்திரியர்களுக்குச் சுயவரமென்பது ஒன்றுண்டன்றோ? அந்தப்படி செய்விக்கலாம். ஆனால் அது நல்ல உபாயமாக மாட்டாது. மேலும் பெண்ணி னிஷ்டப்படியே யன்றி புருஷனிஷ்டப்படி நடக்கமாட்டாது. ஆதலால் இன்னொ ருபாய மிருக்கின்றது. அது யாதென்றால்: இராஜாக்கள் பெண் களை வலிதிற் கொண்டுபோகிறதுண்டு. இது தான் நல்ல உபாயம். இது பெரியோர்களாலும் ஒப்புக்கொள்ளக் கூடியது. ஆனபடியி னாலே, அர்ச்சுனா! நீ என் தங்கையை அப்படியே எடுத்துக் கொண்டு போய்விடு. அதற்குத் தகுந்த சமயம் சொல்லுகிறேன். இதை ஒருவருக்கும் அறிவிக்காமலிரு. பிற்பாடு பார்த்துக்கொள்ளு வோம்." என்று கிருஷ்ணமூர்த்தி சொல்ல அர்ச்சுனனும் சரி தான் என்று சம்மதிக்க, இருவரும் இவ்விதமாக நிச்சயஞ் செய்து, இந்தச் செய்தியைத் தருமராஜனுக்குத் தெரிவிக்கும் நிமித்தம் அந்தரங்கமாய்ச் சிலதூதுவரை யனுப்புவிக்கத் தரும ராஜன் முதலானவர்கள் இச்செய்திகேட்டு, நல்ல காரியம் அப் படியே நடக்கட்டுமென்று சொல்லி யனுப்பிவிட்டார்கள். இப்படிச் செய்தபின்பு ஸ்ரீகிருஷ்ணதேவர் அர்ச்சுனனை அவ்விடத்திலேயே யிருக்கச்சொல்லி நியமித்து விட்டுத் தாம் முன்போல் எல்லாருட னேயும் கூடிக்கொண்டு, திருவிழா கழிந்தவுடனே துவாரகா பட்டணம்போய்ச் சேர்ந்தார். பற்குணன், கிருஷ்ணன் தங்கை யைக் கண்டதுமுதற் காமவேதனை கொண்டு, அழகாகிய சோலை சூழ்ந்திருந்த ஒரு கற்பாறைமீது உட்கார்ந்து சுபத்திரையைச் சதாகாலமுந் தியானஞ் செய்துகொண் டிருந்தான்.

---

## கண்ணன் அர்ச்சுனனைத் துவாரகைக்கு அழைத்துக்கொண்டு போதல்

---

இப்படி யிருக்குங் காலத்தில் ஒருநாள் கிருஷ்ணன் வேட்டைக் குப்போ யிருக்கப் பலராமர் - கிருதவர்மா - சாம்பன் - சாரணன் - பிரத்துய்ம்னன் - கதன் - சாருதேஷ்ணன் - விடூரதன் - பானு - நிசிதன் - விபுருது - பிருது - முதலாகிய சில யாதவவீரர்கள் வேடிக்கையாய் அந்தப் பருவதத்திற்குப் போயிருக்குமளவில்

அவ்விடத்திலிருந்த அர்ச்சுன சந்நியாசியைக் கண்டு சந்தோஷப் பட்டு அவன் பக்கத்திற்போய் மிகவும் விநயத்துடனே பணிந்து நிற்க, அந்தச் சந்நியாசியும் ஆசீர்வதித்து உட்காருங்களென்று சொல்ல, அவர்கள் அங்கிருக்கும் பாறைகளின்மீதில் உட்கார்ந்து கொண்டு "இவர் யாரோ மகானுபாவர். மிகவும் சாந்த மூர்த்தி" என்று மனதில் எண்ணிக்கொண்டு இருக்க, அர்ச்சுன சந்நியாசி அவர்களைப் பார்த்து, "ஓ யாதவவீரர்களே! யாவரும் க்ஷேமமா?" என்று கேட்டான். பலராமர் "சுவாமினுடைய அனுக்கிரகத்தி னாலே க்ஷேமந்தான். தேவரீர் யாரோ? எவ்விடத்தினின்று எதற் காக இங்கே எழுந்தருளினீரோ தெரியவில்லை. ஆகையால் அதை அருளிச்செய்யவேண்டும்" என்றார். சந்நியாசியானவன் நமக் கோரிடமென்றுண்டோ? பூமியெல்லாம் நம்முடைய விடந்தான். நான் சிலகாலமாய் தீர்த்தக்ஷேத்திரங்களை யெல்லாம் பார்த்துக் கொண்டு, மழையாகையால் இவ்விடம் வந்திருக்கிறேன்" என்றான். அதுகேட்ட பலராமர் "சுவாமி! தேவரீர் இவ்விடம் எழுந் தருளியது அடியேங்கள் செய்த தவந்தான். தேவரீர் அனேக புண்ணிய தீர்த்தங்களையும் ஸ்தலங்களையும் கண்டவராகையால் அவைகளின் சரித்திரத்தைச் சொல்லியருளவேண்டும்" என்றனர். சந்நியாசி அந்தச் சரித்திரங்களையும், மற்றும் தருமத்திற் கடுத்த கதைகளையும் - தெய்வபக்திக்கடுத்த காரியங்களையும், எடுத்துப் பிரசங்கிக்கக் கேட்டு, இவர் மகாபெரியவரென்று நினைத்து எழுந்து வந்தனம்பண்ணிப் பின்பு இவர்களெல்லாம் ஒன்றாகக்கூடி மகா பக்திவிசுவாசத்துடன் பின்வருமாறு யோசிப்பதானார்கள்—

"ஓ அன்பர்களே! இவர் மகா சந்நியாசி. வெகுயோக்கியர். நாம் செய்த புண்ணிய வசத்தினாலேதான் நமது தேசத்துக்கு வந்தார். ஆகையால் இவர் இந்த மழைக்காலமெல்லாம் சவுக்கியமா யிருக்கும்படியாய் நாம் எந்த விடத்திலே இருக்கச் செய்யலாம்?" என்று யோசித்துக்கொண்டிருக்குமளவிலே, வேட்டைக்குப் போயிருந்த கிருஷ்ணன் அவ்விடத்திற்கு வந்தார். பலராமர் அவரைக் கண்டு "குழந்தாய் கிருஷ்ணா! இங்ஙனம் ஒரு சந்நியாசி வந்திருக்கிறார். அவர் மழையினாலே இவ்விடத்தில் மிகவும் வருந்துகின்றார்; ஆகையால், அவரை நமது பட்டணத்துள் எவ்விடத்திலிருக்கச் செய்யலாம் சொல்" என்று கேட்கக் கண் ணன் "அண்ணா! எல்லாயோசனைக்கும் நீர் இருக்க நான் சொல்வ தெப்படி? உமக்கு எவ்விடத்தில் வைக்க இஷ்டமோ அவ்விடத்தில்

வைக்கலாம்." என்று கூறியதைக் கேட்ட பலதேவர் சற்றே யோசித்து "கிருஷ்ணா! எனக்குத் தோன்றுவதைச் சொல்லுகிறேன் கேள். இவர் நமது சுபத்திரையினுடைய கன்னியாமாடத்திற் போஜனம் பண்ணிக்கொண்டு, நம்முடைய தோட்டத்திலே கொடிகளினாற் கட்டியிருக்கும் அறைகளிலே இந்த மழைக்காலம் கழிகிறவரைக்கும் வாசஞ் செய்துகொண் டிருக்கட்டும். உனக்கென்ன தோன்றுகிறது? இவணிருக்கும் யாதவர்க ளெல்லாம் உன் உத்தரவை எதிர்பார்க்கிறார்கள்" என்று சொல்லக், கண்ணனவர் "அண்ணா! உம்முடைய சம்மதிக்கும் உத்தரவுக்கும் எதிரில்லை. நீரோ எல்லா மறிந்தவர்; மகா புத்தியுள்ளவர்; எங்களுக்குப் பெரியவர்; ஆகையால் நானொன்றும் மறுத்துச் சொல்லக்கூடவில்லை. ஆகிலும் இப்படிச் செய்வதில் ஒரு குறைவும் வராமலிருப்பதைக் குறித்துக் கொஞ்சம் யோசிக்க வேண்டியதாய்த் தோற்றுகிறது" என்று சொன்னார்.

அதனைக்கேட்ட பலதேவர் "சரிதான் நீசொல்லுகிறது, ஆனால் இந்த சந்நியாசி வெகுவாய்ப் படித்தவராயும் வெகு யோக்கியராயும் சாந்தமூர்த்தியாயும் காணப்படுகிறார். உள்ள மெப்படியிருக்கிறதோ யாருக்குத் தெரியும்? ஆகையால், கண்ணா! நீ இவரை யழைத்துக் கொண்டுபோய்க் கன்னியாமாடத்தில் விட்டு, நான் உத்தரவு பண்ணினதாய்ச் சுபத்திரைக்குச் சொல்லி, அன்னபானங்கள் முதலான உபசாரங்கள் செய்துவரும்படி திட்டம்பண்ணுக" என்று சொன்னார். உடனே கிருஷ்ணன் அப்படியே செய்கிறேனென்று எழுந்து, அந்தக் கபடசந்நியாசியைக் கும்பிட்டு அழைத்துக் கொண்டு, நாம் எண்ணிய காரியம் சித்திக்கு மென்று சந்தோஷப் பட்டவர்களாய் ஒருவரோடொருவர் வேடிக்கையாய்ப்பேசிச், சிரித்துக்கொண்டே பட்டணத்துக்குட் சென்று முன்னதாய் அர்ச்சுனனைத் தமது வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய் தன் மனைவியர்களாகிய உருக்மிணி சத்தியபாமை முதலியவர்களைக் கூபிட்டுப், நாணமுற்றுத் தலை வணங்கி நகைத்துக்கொண்டு நிற்கிற அர்ச்சுனனைக் காட்டி, தானும் நகைத்துக்கொண்டு, "ஓ பெண்களே! இவரைப் பார்த்தீர்களா? இவர் மஹா பெரிய சந்நியாசி மேலே தரித்துக்கொண் டிருக்கிற காஷாயத்திற்குச் சரியான ரூபம் உள்ளத்திலேயு முண்டு. மகானுபாவர் சமயத்துக்குத் தகுந்தபடி யிருப்பவர். இவரிடத்திற் கபடம் கொஞ்சமேனுங் கிடையாது; இவரின்னொன்று இதுவரைக்கு மொருவருக்குந் தெரியாது; இவர்

மெய்யான தனஞ்சயன் சந்தேகமில்லை. இவருக்கு நீங்கள் மருமகனுக்குச் செய்யத்தக்க உபசாரங்களைச் செய்யவேண்டும். அண்ணாவின் உத்தரவின்படி சுபத்திரையினது கன்னியாமாடத்தில் இவரை யிருக்கச்செய்து சுபத்திரையைப் பணிவிடை செய்யும்படி நியமிக்கப்போகிறேன்" என்று சொன்னார். அவையனைத்துங் கேட்ட அந்த உருக்மிணி முதலானவர்களெல்லாம் கொங்கைகுலுங்கக் குலுங்கச் சிரித்துக்கொண்டு "ஆம் ஆம் பார்க்கும்போதே தெரிகிறது. வெகு பெரியவர்தான். இப்படிப்பட்டவர் இனிக் கிடைக்க மாட்டார். சுபத்திரை நல்ல பாக்கியம் செய்திருக்கிறாள். சந்தேகமில்லை. இவ ரெப்படி யிருந்தாலு மிருக்கலாம்போ லிருக்கிறது. தற்காலத்திற் கொண்ட இச்சந்நியாசத்திற்குப் பலன் கிடைத்தால் மறுபடி இல்லறத்தாராய் விடலாம். ஐயா துறவியே வாரும். உட்காரும். தாம்பூலம் போட்டுக்கொண்டு வெகுநாளாயிருக்குமே ; இப்போது தாம்பூலம் போட்டுக்கொள்ளுகிறீரா? இனிப் பரவாயில்லை. வந்தகாரியம் பலிக்கும் ; காஷாயத்தைக் களைந்து நல்லவஸ்திரம் உடுத்துக்கொள்ளும். நாங்கள் வெளிப்படுத்த மாட்டோம் ; மறுபடி போகும்போது காஷாயங் கட்டிக்கொள்ளலாம். எங்கள் வீட்டிலேதான் முதல் மருவுண்ணவேண்டும். ஆகையாற் சாப்பிடும். பிக்ஷை இன்றைக்கு வேண்டாம். எப்போதும் நீர் உயர்ந்த வேஷம்போட்டாற் பெண் கிடைக்கிறது. எப்படியென்றால், பிராமணவேஷம் போட்டபோது திரௌபதை கிடைத்தாள். தவசிவேஷம்போட்டபோது நாககன்னியும் பாண்டிய கன்னியும் கிடைத்தார்கள். அப்படியே இந்த சந்நியாசிவேஷத்துக்கும் பயன்கிடைக்கும்." என்று பரிகாசமாய்ப்பேச அர்ச்சுனனும் "மெய்தான் உங்கள் நாயகருடைய ஸ்நேஹபலத்தினாலேதான் எனக்கு இப்படிப்பட்ட சாமார்த்தியமே தவிர வேறில்லை." என்று, இவனும் பலவிதமாகப் பரிகாசப்பேச்சுக்களைப்பேச, அந்தக் கண்ணனுடைய மனைவிகள், "அர்ச்சுனா! நெடுநாளாய் உன்னை எங்கள் வீட்டில்வரக் காணவேண்டுமென்று ஆசைகொண் டிருந்தோம். இன்றைக்குத்தான் அது பலித்தது." என்று மிகவும் அன்புடனேகூடிய பல வார்த்தைகளைக்கூறிப் போஜனமுதலான உபசாரங்களைச் செய்தார்கள்.

## சந்நியாசி கன்னிகாமாடஞ் சேர்ந்திருத்தல்

---

பின்பு கண்ணன் அர்ச்சுனனைக் கன்னிகாமாடத்திற்கு அழைத்துக்கொண்டுபோய்த் தன் தங்கையை யழைத்து, "என் னம்மணி! இவர் மஹா பெரியவர். நமது தேசத்திற்கு அதிதியாய் வந்தவர். இவரை நீ உன் மாளிகையில் வைத்துப் பூசித்தால் மிவும் நல்லது. உனக்கு நல்லபலன் கிடைக்கும். இப்படித்தான் முற்காலங்களில் நமது கன்னிகா மாடங்களிலே வெகு பெரியோர் கள் வந்து தவஞ் செய்துகொண் டிருந்தார்கள். அவ்வாறே நமது சந்ததியிற் பிறந்த அநேகம் பெண்கள் பூசித்து வெகு நன்மைகளைப் பெற்றார்கள். ஆகையால், குழந்தாய்! இந்தச் சந்நியாசியை நீ வெகு பயபக்தியுடனே பூசித்துவர வேண்டியதென்று நம்முடைய அண்ணா நியமித்திருக்கிறார். இந்தப் பெரியவர் எந்த வேளையில் என்ன சொல்லுகிறாரோ அதை நீ தவறாமல் நடந்துகொண்டு, தகுந்தபடி போஜன முதலானவைக ளால் உபசாரஞ்செய்து வரவேண்டும். இவருக்குத் தவஞ்செய்ய நமது தோட்டத்திலிருக்குங் கொடிகளாற்கட்டிய வீடு தகுந்தா யிருக்கிற படியினாலே, அங்கேயே வாசம்பண்ணிக்கொண் டிருக்கட்டும்" என்று சொல்லியதைக் கேட்ட சுபத்திரையும், "அண்ணா! நான் அப்படியே செய்து, இவர் சந்தோஷப்படும்படி நடந்து கொள்ளுகிறேன்" என்று சொன்னாள். அப்போது யாதவ குலதிலகாரகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் அந்தக் கபடசந்நியா சியைத் தோட்டத்திற்கு அழைத்துப்போய் இருக்கவேண்டிய விடங்களையுங் காண்பித்து, சுபத்திரையையும் பணிவிடைக்கு அவரிடத்தில் ஒப்புவித்து, சந்நியாசியினிடத்தில் உத்தரவு பெற் றுத் திரும்பி, இச்செய்தியைத் தன் தமையனுருக்கு அறிவித் தார்.

அந்த அர்ச்சுனனானவன் தினந்தோறும் விடியற்காலமுதல் இராத்திரிக்குச் சயனித்துக் கொள்ளுகிற வரையிற் சுபத்திரையி னாலேயே வேண்டிய உபசாரங்கள் செய்யப்பட்டு வருவதினாலும் இடைவிடாமற் சுபத்திரையைப் பார்த்துக்கொண் டிருப்பதினாலும், அவளோடு பேசுகிறதினாலும், அவளுடைய நடை - புன்சிரிப்பு முதலிய செய்கைகளைக் காண்பதினாலும், முன்னிருந்ததைவிட

அதிகமாகக் காமத்தீயானது எழும்பி உள்ளும் புறமும் எரிக்கவே அவன் தேகமானது நாழிகைக்கு நாழிகை இளைத்து வெளுத்துத் துவண்டு பரவசமாய்ப் போயிற்று. இவ்வாறாக அவன் காமநோயினாலே மிகவும் வருத்தமடைந்து, மிகுந்த தாபத்தைச் சகிக்கமாட்டாமற் பெருமூச்சுவிட்டு நிலைமிழ்ந்திய சுரைக்காயைப்போல் எவ்வளவு அடக்கினாலும் அடங்காமல் தனது கபடமேலிட்டு வழிந்து வெளிக்கிளர அவற்றையெல்லாம் வெவ்வேறு பாவனையினால் மறைத்துக்கொண்டு, தன் வேஷத்திற்குத் தகுந்தபடி, ஸ்ரீஹரி! மாதவா! கோவிந்தா! என்று கிருஷ்ணனையே கூவிக் கொண்டிருந்தான். அந்தச் சுபத்திரையும் மனதிலே அர்ச்சுனன் பேரிலேயே நெடுநாளாய்க் காதல்கொண்டிருந்தாள். அஃது ஏனென்றால், வசுதேவருடைய குமாரர்களில் ஒருவனாகிய கதன் என்பவன் முன்னொருகாற் பாண்டவர்கள் பிறந்த கதையையும், அர்ச்சுனனுடைய ரூபம் - சாமர்த்தியம் - பெருமை - முதலானவைகளையும், சுபத்திரைக்கு நன்றாய்ச் சொல்லியிருக்கின்றான். அன்றியும், அந்த யாதவர்களுக்குள்ளே ஒருவரோடொருவர் வீரவாதம் பேசுங்காலத்திலே, அந்த அர்ச்சுனனை எனக்கு நிகரல்லவே நீ எவ்வளவென்றும்; வில்வித்தை கற்குங்காலத்தில், நான் அர்ச்சுனனுக்கு அதிகமாகிறேன் பாரென்றும்; எவனாகிலும் சௌரியத்தினாற் கர்வமடைந்தால், அப்போது அவனைப் பார்த்து, நீ யென்னடா அர்ச்சுனனாக நினைத்துக்கொண்டாயோ வென்றும்; வில்வித்தை கற்கிற பிள்ளைகளை ஆசிர்வதிக்குங்கால், அர்ச்சுனனுக்குச் சமானமாகக்கடவாய் என்றும்; அவ்விடத்திற் பேசுவார்கள். அவைகளையெல்லாம் சுபத்திரை பலதரம் கேட்டிருக்கிறவளாகையாற் புருஷர்களுக்குள் அர்ச்சுனனே உயர்ந்தவனென்று எண்ணி, அவனையே விவாகம் பண்ணிக் கொள்ளவேண்டுமென்று நினைத்திருந்தாள். அதனாலே குருதேசத்தினின்று யாராகிலும் வந்தால் அவர்களை யுபசரித்து, அர்ச்சுனனுடைய சரித்திரங்களைச் சொல்லச்சொல்லிக்கேட்டு, அவர்கள் சொல்லுமளவில் மனதில் மிகவுங் களிப்படைவாள். அன்றியும் வெண்மையான வஸ்துவைக் குறித்து யாராகிலும் அர்ச்சுனனென்கிற சொல்லைச் சொல்லும்போது, அதை யுற்றுக் கேட்பாள். இன்னும் யாராகிலும் தவசிகள் - சோதிடர் - குறிசொல்லுவோர் முதலானபேர்கள் வந்தால் அவர்களுக்கு உபசாரஞ்செய்து, "நான் நினைத்திருக்கிற காரியம் கூடிவருமா வராதா" என்று கேட்டு, அவர்கள் கூடிவருமென்று சொல்லுமள

வில் அர்ச்சுனனை விவாகஞ் செய்துகொண்டதுபோலவே களித்திருப்பாள்.

இப்படிக்கெல்லாம் ஜாக்கிரத்திலும் சொப்பனத்திலும் அர்ச்சுனனைப் பாவனையினலே கண்டு அவனிடத்திலேயே மனமழுந்திச் சதாகாலமும் விரகதாபப்பட்டுக்கொண் டிருப்பவளானபடியினலும், தினந்தோறும் கபட சந்நியாசியை யுற்றுப்பார்க்கு மளவில் தான் கேட்டிருப்பதைப் போலும் - சொப்பனத்திற் கண்டிருப்பதைப் போலும் அவனுடைய ரூப மிருப்பதினலும் கைகளில் நாணுரைவதா லுண்டாகிய காய்ப்புக் காணப்படுகிற படியினலும், அர்ச்சுனன் தீர்த்தயாத்திரையாய்ப் பிரபாசம் வரைக்கும் வந்திருக்கிருனென்று முன்னமே கேட்டிருப்பதினலும், அந்த யாதவப் பெண்ணின் மனதிற் சந்தேகமுண்டாயிற்று. அப்படி யிருக்க, ஒரு நாள் இந்த சந்நியாசி காலையில் ஸ்நானஞ்செய்து ஆசனத்தி லுட்கார்ந்து கொண்டு, செபஞ் செய்திருக்குந் தருணத்திலே, வசுதேவருடைய மகளாகிய சுபத்திரைபோய் நமஸ்காரஞ் செய்து, "சுவாமி! தேவரீர் வெகு தேசங்களையும் - நதிகளையும் - மற்று மனேக திவ்விய க்ஷேத்திரங்களையுங் கண்டவரானபடியினலே, அவைகளின் சரித்திரங்களைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டாள். அர்ச்சுனனும் மிகவும் சந்தோஷமடைந்து, காமப் பார்வை முதலாகிய விலாசங்களுடனே அனேகங் கதைகளை யெல்லாஞ் சொல்லி வந்தான். நடுவிற் குருதேசத்துச் சங்கதி வருமளவிற் சுபத்திரையானவள் - "சுவாமி! அவ்விடத்தில் முன் காண்டவப் பிரஸ்தமென்றும், இப்போது இந்திரப் பிரஸ்தமென்றும்? பெயருடைய பட்டணத்தில், எங்கள் நல்லத்தை குந்திதேவி யென்பவளைக் கண்டீரா? அவளும் அவளுடைய குமாரர்களும் க்ஷேமமா யிருக்கிருர்களா? அவர்களில் திரௌபதைக்காக ஏற்பட்ட நிபந்தனையின்படி அர்ச்சுனராஜனுக்குத் தீர்த்தயாத்திரை நேரிட்டதாமே: மஹாசவுக்கியமாயிருந்த அந்த மஹாபுருஷர் நெடுநாளாய் வனந்தரங்களில் திரிந்து கஷ்டப்பட்டுக்கொண்டு இந்த மழைக்காலத்திலே எங்கே யிருக்கிருரோ! தேவரீரும் தீர்த்தயாத்திரை வந்தவராகையால் அவரை எங்கேயாகிலுங் கண்டதுண்டோ? இவைகளை யெல்லாம் தயைசெய்து சொல்ல வேண்டும்." என்று கேட்கும்போது, அர்ச்சுனன், அவள் து கேள்விக்குறிப்பினலே தன்னிடத்தில் அவளுக்கு ஆசையிருப்பதை யறிந்து மிகுந்த காமவெழுச்சியினல் உடம்பெல்லாம் பொங்கிக்

கிறுகிறுத்து, நடுக்க முறத் தொனித்து, சிறுநகைப்புடனே சொல்லுற்ருன்.

---

## அர்ச்சுனன் சுபத்திரைக்குத் தன்னை வெளிப்படுத்துதல்

---

"யதுகுலத்தோர் தவத்தினு லுதித்த மின்னரசே! உங்களத்தையாகிய குந்தியைக் கண்டேன்; அவள் க்ஷேமமாயிருக்கிருள். அவள் புத்திரர் முதலானவர்களும் க்ஷேமமாயிருக்கிருர்கள். அந்த அர்ச்சுனனே தீர்த்தயாத்திரை முடிந்தும் இன்னும் தன் தேசம் போய்ச் சேரவில்லை. ஆனல் எங்கே யிருக்கிருனென்ருல் இப்போது துவாரகா பட்டணத்திலேயே சந்நியாசிவேஷம் பூண்டு ஒருவருக்குந் தெரியாமல் வாசஞ் செய்துகொண் டிருக்கிருன். ஓ பொற்கொடியே! நீ தினந்தினம் அவனைப் பார்த்துக்கொண்டிருக் கிருய்; இருந்தும் அவனை நீ யறியாமலிருக்கிருய்" என்று சொல்லக்கேட்ட சுபத்திரை திடுக்கிட்டு நாணமுற்றவளாய்த் தலைவணங்கி நின்ருள். அப்படி நிற்குமவளைக்கண்ட அர்ச்சுனன் மிக வன்புடனே, "அடி பூங்குழலே! நான் அர்ச்சுனன். உனக்கெப்படி என்னிடத்திற் கருத்திருக்கின்றதோ? அப்படியே எனக்கும் உன்னிடத்திற் பதின்மடங் கதிகமாகக் கருத்தமைந்திருக்கின்றது. உனது பணிவிடைக்குங் காத்திருக்கிறேன். ஓ பூரணசந்திரனை யொத்த முகமுடையவளே! நல்லநாளிலே தருமவிதிப்படி சாவித்திரி யென்பவளைச் சத்தியவா னெப்படி விவாகஞ் செய்துகொண்டானே அப்படியே உன்னை நான் விவாகஞ் செய்துகொண்டு உன்னுடன்கூடி வாழ்வேன்" என்று சொல்லிக் கொடிகளாற் கட்டிய அறைக்குள்ளே பிரவேசித்தான். பின்பு சுபத்திரையானவள் மிகவும் மதிகலங்கி மெய் துவண்டு, தனது பள்ளியறைக்குள்ளே போய்க் கட்டிலின்மிது சயனித்துக் கொண்டு, மூர்ச்சை யடைந்தவள்போல் அசைவற்றிருந்தாள். இப்படியிருக்க ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் இச்செய்தியை யெல்லாம் தமது பேரறிவினல் அறிந்து, சுபத்திரைக்கும் அர்ச்சுனனுக்கும் போஜனமிடும்படி உருக்மிணி தேவியை யனுப்ப அவளு மிவ்விருவருக்கும் போஜனத்தைக் கொணர்ந்து பரிமாறி இவ்விருவருடைய மனேவியாதியை முற்று மறிந்துபோனுள். அர்ச்சுனனும் அந்தக் கொடியறை

யிலேயே யிருந்துகொண்டு, உன்மத்தம் பிடித்தவன் போல் காமவிகாரங் கொண்டிருந்தான்.

இப்படி யிருக்குமளவிற் சூரியன் அஸ்தமனத்தை யடையவே அர்ச்சுனனையும்-சுபத்திரையையும் மோகமென்பது கௌவிக்கொண்டதுபோல் இருளானது பூமியைக் கௌவிக்கொண்டது. அதைப் பார்த்தால் ஒருவன் மிகுந்த புண்ணியஞ்செய்து சொர்க்கலோக மடைந்து மகா போகங்களையெல்லா மனுபவித்து, அந்தப் புண்ணியம் நீங்குமளவில் மறுபடியும் அவனைப் பிறவிப்பாவம் சூழ்வதுபோலிருந்தது. உடனே ஆகாசத்தில் நட்சத்திரங்கள் புறப்பட்டன. அதைப் பார்க்குமளவிற் சுபத்திரையின் தேகத்து வெப்பம் வீசி ஆகாயத்திற் கொப்புளங்கள் புறப்பட்டன போலத் தோன்றிற்று. அப்போது குளிர்ச்சியும் வெண்மையுமுடைய கிரணங்களை வீசி இருளைத் துரத்தியடித்துக்கொண்டு சந்திரன் உதயமானதைப் பார்த்தால், முகத்தி னழகினாலே தன்னை ஜயித்தவளாகிய சுபத்திரையைத் தன் தோழனாகிய மன்மதன் மிகவும் வருத்துகிறானே: இத்தருணத்தில் நாமும்போய் வருத்தி அவள் முகத்தை வாடச் செய்யவேண்டுமென்று வந்ததுபோல் தோன்றிற்று. இவ்வாறாகச் சந்திரன் உதித்து நிலவு விளங்குமளவில் அந்த யதுகுலப் பெண்ணானவள் மன்மதன் பிரயோகித்த புஷ்பபாணங்களினாலே தேகமெல்லாம் துளைக்கப்பட்டுச் சகிக்கமாட்டாமல் தான் சயனித்திருந்த புஷ்பசயனமெல்லாங் கருகிப் போகும் படியான தாபத்தை யடைந்து, மூக்கினுனியில் அணிந்திருந்த ஆணிமுத்தும் நீலமணிபோ லாகும் படியாகப் பெருமூச்சு விட்டுத் தன்னைத் தொந்தரவுசெய்த மன்மதனையும் அவனுடைய தோழனாகிய சந்திரனையும் குயில்களையும் மந்தமாருதத்தையும் சோலைகளையும் வண்டுகளையும் தூஷித்து மெய்சோர்ந்து மூர்ச்சித்துக் கிடக்கவே, அக்குறிப்பறிந்த இவளுடைய தோழிமார்களெல்லாம் விசனமடைந்து தேவகீதேவிக்கு அறிவிக்க, அந்த அம்மனும் ஓடிவந்து மகளைப்பார்த்து, "பெண்ணே! நீயேன் மிகுந்த துயரத்துடனே இப்படி வருந்துகிறாய்? உனக்குண்டாகிய வியாதிக்குத் தகுந்த சிகிச்சை செய்விக்கிறேன்; தைரியத்தை யடைந்திரு. நீ இப்போதிருக்கிறபடி இன்னுஞ் சிலநேரம் இருப்பாயேயானால் நாங்களெல்லாம் பெண்ணை யிழப்பதுமன்றி உயிரையு மிழப்போம். ஆதலால் மகளே! கொஞ்சம் தைரியமடைந்து உயிரைக் காப்பாற்று. உன்கருத்தை உன் தமையன்மார்களுக்கும் தகப்பனார்

முதலான பேர்களுக்கும் தெரிவித்து, "அப்படியே நடத்துகிறேன், வீணாய்த் துயரப்படாதே" என்று சொல்லி வசுதேவரிடத்திற்கு வந்து, ஏகாந்தத்தில் அவரைப் பார்த்து, "கேட்டீரோ! நமது தோட்டத்தில் வந்திருக்கிற சந்நியாசி அர்ச்சுனனென்று தெரிய வருகிறது. அதனாலே நம்முடைய சுபத்திரை அவனிடத்திற் காதல் கொண்டிருக்கிறாள். ஆகையால் நாம் இதற்குத் தகுந்த யோசனை செய்யவேண்டும்" என்று மகா வேட்கையோடுஞ் சொன்னாள்.

வசுதேவர், அதை அக்குரூரன் ஆருகன் கிருஷ்ணன் முதலிய பேர்களுக்குத் தெரிவித்தார். அதுகேட்ட அவ்வக்குரூரன் உக்கிரசேனன் சத்தியகன் கதன் சினி கிருஷ்ணன் பிருது சிரவன் தேவகி உரோகணி உருக்மிணி சத்தியபாமை இவர்களெல்லாருங் கூடி, நன்றாய் யோசித்து, இரகசியமாகப் புரோகிதரையழைப்பித்து, இதை அவருக்கும் அறிவித்து, அவர் யோசனையையுங் கேட்டுக் கொண்டு, பன்னிரண்டாவது நாளில் முகூர்த்தம் வைத்துக்கொண் டார்கள். இவ்வாறிருக்க, இந்தப் பெண்ணை அர்ச்சுனனுக்குக் கொடுக் கப் பலராமர் உத்தவர் முதலானவர்களுக்குச் சம்மதமில்லாமை யால் அவர்கள் இச்செய்தியை யறியாதிருக்கக் கிருஷ்ணன் ஒரு யோசனை செய்து ஒரு விளம்பரப் பறைசாற்றிவித்தார். அவ் விளம்பரம் என்னவென்றால் "நம்முடைய சுபத்திரைக்குத் தேகத்தி லென்னவோ தெய்வீகமாய் உபத்திரவம் உண்டாயிருக்கிற படியி னாலே, சமுத்திரத்தின் நடுவிலிருக்கிற தீவிற் சிவனுக்கு முப்பத்து நான்குநாள் மகாஉற்சவம் நடக்கப்போகிறது. இதற்காக இன்றைக்கு நான்காவது நாள் யாதவர் முதலான யாவரும தங்கள் குடும்பங்க ளுடனேயும் இரதகஜதுரக பாதாதிகளுடனேயும் அந்தத் தீவு போய்ச்சேர வேண்டும்" என்பது. அதில் யாதவரும் தங்கள் தங் கள் சேனைகளுடனே போய்ச் சேரவேண்டிய தென்பதைக்கேட்ட பலராமர் முதலாகிய சகல யாதவர்களும் வஸ்திராபரணங்களைப் பூண்டு, அழகிய சீலைகள் கட்டிய கொடிமரங்களுடனே நல்ல யந்திரங்களுடைத்தாய் உட்காரவும் படுக்கவும் விளையாடவும் உப யோகமாயிராநின்ற இடங்களையுடைய கப்பல்களில் ஏறிக்கொண்டு மகா சந்தோஷ வைபவ விநோத விளையாட்டுடன் அந்தத் தீவு போய்ச் சேர்ந்தார்கள். இப்படியிருக்கச் சுபத்திரையானவள் கண்ணனிடத்திற்கு வந்து, "அண்ணா! நம்முடைய தோட்டத்தி லிருக்கிற சந்நியாசி இன்னும் பன்னிரண்டுதினங்கள் இவ்விடத்தி

லேயே இருக்கப் போகின்றாராம். அவருக்குச் சிசுரூஷை யார் செய்வார்கள்?" என்றனள். கண்ணன் "அம்மணீ! உன்னையல்லாது யார் செய்வார்கள்? நீயே செய்யவேண்டும்" என்றுசொல்லிப் பேரிகை முதலாகிய வாத்தியங்களுடனே புறப்பட்டுக் கப்பலேறி, ஏழு யோஜனை அகலமும் பத்துயோஜனை நீளமுமுள்ள அந்தத் தீவையடைந்து, எல்லாருடனே கூடி அவ்விடத்துத் திருவிழாவை நடத்தினர். அப்போது சகலஜனங்களும் தானதருமங்களைச்செய்து, வேடிக்கையாய்த் தோட்டங்கள் அணைகள் குளங்கள் குட்டைகள் மண்டபங்கள் மணிக்குன்றுகள் முதலானவிடங்களிலே வாசஞ்செய்து, அங்கு நடந்தேறிவரும் திருவிழாவைப் பார்த்து ஆனந்த பரவசராய்ச் சந்தோஷ மடைந்து கொண் டிருந்தார்கள்.

---

## சுபத்திரையின் மணம்

---

இவ்வாறாக முப்பத்து நான்கு நாட்களாய் அங்கே உற்சவம் நடந்து கொண்டிருந்தது. இப்படியிருக்க அர்ச்சுனனவன் காரியம் சித்தியாயிற்றென்று மனதிற் சந்தோஷமடைந்து, சுபத்திரையைப் பார்த்து "அடி தேன்மொழியே! இப்பொழுது உன் தகப்பனார் முதலிய யாவரும் திருவிழாப் பார்க்கப் போயிருக்கிறார்கள். இந்தச் சமயத்திலேதான் நாம் விவாகஞ் செய்துகொள்ளுவது யுக்தம். ஆனால் விவாகத்தைப் பெரியோர்கள் எட்டுவிதமாக வகுத்திருக்கிறார்கள். என்னுடைய பந்துக்களும் தேசாந்தரத்தி லிருக்கிறார்கள். உன்னுடைய பந்துக்களு மிப்போது தேசாந்தரத்திலிருக்கிறார்கள். ஆகையால் அந்த எட்டுவித விவாகங்களுள்ளும் சிறந்ததாகிய காந்தருவமென்பதுதான் நமக்கு இப்போது இசைந்ததாகக் காண்கிறது. அன்றியும் ஒரு கன்னிகையை ஒருவனுக்குக் கொடுப்பதற்கு முறையே, தகப்பன், உடன்பிறந்தான், தாயார், அம்மான், தகப்பனுடன் கூடப்பிறந்தவன், ஆசிரியன் இவர்களெல்லாரும் அதிகாரிகளா யிருக்கிறார்கள். அல்லாமலும் பெரியோர்கள் விவாக முறைமையைக் குறித்துச் சொல்லியதைக் கொஞ்சஞ் சொல்லுகிறேன் கேள். பெண்ணைப்பெற்றவன் யோக்கியனைவனை யழைத்து விதிப்படி கன்னிகையைக் கொடுத்தால், அந்தக் கன்னிகை பத்தினியென்கிற பெயருடையவளாகிறாள். ஒருபெண்சாதி

மரித்தபின் தன்னையும் தன்னை அடுத்தவர்களையும் காப்பாற்றுகிற நிமித்தம் தானே யொருபெண்ணைத் தேடிக் கலியாணஞ் செய்துகொண்டால், அந்தப்பெண் பாரியையென்று பெயருடையவளாகிறாள். பிள்ளைக்குத் தகப்பனானவன் குலம் முதலான யோக்கியதையுள்ள கன்னிகையைத்தேடி விவாகஞ்செய்வித்தால், அந்தக் கன்னிகை தாரம் என்று பெயருடையவளாகிறாள். சந்ததி நிமித்தமாக ஒருவன் ஒருபெண்ணை விவாகஞ்செய்து கொண்டால், அவள் வசியை என்று பெயருடையவளாகிறாள். அன்றியும் அவளுக்கு ஜாயை என்கிற பெயருமுண்டு. இப்படி யிருக்கிறபடியினாலே ஆசையுள்ள பெண்ணை ஆசையுள்ள புருஷன் ரகசியமாய்ச் சேருவது, முன்சொன்ன எல்லாவற்றிலு மேலான தருமமாயிருக்கிறது. அடி மான்விழியே! இப்போது நான் சொல்லுகிற காந்தருவ விவாகமானது அக்கினிமுன்பாகச் சடங்குகள் நடத்திச் செய்துகொள்ளத் தக்கதாகாமற்போனாலும், நீ தயை செய்து அதை அங்கீகரிக்கவேண்டும். ஏனென்றால் உற்சவத்திற்குப் போயிருக்கிறவர்க ளெல்லாரும் வராம லிருப்பதற்கு முன்னமே நல்லநாள் இன்றைக்குத்தான் அமைந்திருக்கின்றது. எப்படியென்றால், உத்தராயணம் வைகாசமாசம் சுக்கிலபக்ஷம் ஹஸ்த நக்ஷத்திரம் திரிதியை திதி மகரலக்கினம் பவகரணம் சித்தயோகம் இவைகளெல்லாம் கலியாணத்திற்கு எடுத்தவைகள். இவையெல்லாம் இன்றிராத்திரி இசைந்திருக்கின்றன. சூரியபகவானும் அஸ்தமனத்துக்குச் சமீபித்திருக்கிறார். ஆகையால் நீ பெரிய மனது பண்ணவேண்டும். ஸ்ரீ கிருஷ்ணனோ சர்வமு மறிந்தவர்தான். ஆனால் இந்த விஷயத்தை யறிந்திருக்கிறாரோ இல்லையோ தெரியவில்லை. ஆனதாற் காமனால் வருத்தப்பட்டுப் புலம்பாநின்ற என்னைக் காப்பாற்ற என்ன யோசிக்கிறாயோ சொல்வாய் என் அன்பே!" என்று அர்ச்சுனன் சொன்ன சொல்லைக் கேட்ட சுபத்திரை கண்ணனை மனத்தில் நினைத்து, ஒன்றுஞ்சொல்லாமற் கண்ணீர்மல்க நின்றுகொண் டிருந்தாள். அர்ச்சுனனும் பரிதாபத்துடனே கொடிவீடு சென்று, தன் பிதாவாகிய தேவேந்திரனை நினைத்தான்.

இப்படி அர்ச்சுனன் நினைத்த மாத்திரத்திலே தேவேந்திரனானவன் இயமன் - வருணன் - குபேரன் - அக்கினி - வாயு - சூரியன் - சந்திரன் - அஷ்டவசுக்கள் - ஏகாதசருத்திரர் - சித்தர் - சாத்தியர் - கின்னரர் - கிம்புருடர் - முதலாகிய சகல தேவர்களோடும், நாரதர் - வசிஷ்டர் - முதலாகிய தேவரிஷிகளோடும், சசிதேவி

முதலாகிய தேவஸ்திரீகளோடும் ஐராவதத்தின்மேலேறிக்கொண்டு தன்மகனிருக்கு மிடம்வந்து சேர்ந்தான். கிருஷ்ணனும் சுபத்திரையினைவை யறிந்து, அக்குரூரன் - ஆகுகன் - கதன் - வசுதேவன் - தேவகி - உரோகிணி - உருக்மிணி - சத்தியபாமை - முதலானவர்களையெல்லாம் அழைத்துக்கொண்டு பலராமர் முதலியவர்கள் தூங்கிக்கொண் டிருக்குந் தருணத்திலே புறப்பட்டு இவ்விடம் வந்து சேர்ந்து தேவேந்திரன் முதலான வர்களைக் கண்டு நமஸ்காரஞ்செய்து நல்வரவுகேட்க, தேவராஜன் முதலானவர்களும் க்ஷேமவிடை கொடுத்துக் கிருஷ்ணனைப் பார்த்து, "நல்லது, ஏன் தாமதம் பண்ணுகிறீர்? சீக்கிரத்திற் காரியத்தை முடிக்க வேண்டும்" என்று சொல்லவே கிருஷ்ணனும் தம் ஏவலாளரைக் கொண்டு கலியாணத்திற்கு வேண்டிய சகலசாமக்கிரியைகளையும் சித்தப்படுத்தித் தேவர்களுக்கு விண்ணப்பஞ்செய்ய, தேவராஜன் தன்மகனுக்கு மங்களஸ்நானஞ் செய்வித்து நவமணிகளு மிழைத்துப் பளபளென விளங்குங் கிரீடம் - தோள்வளை - ஆரங்கள் - கவசங்கள் - முதலான பல ஆபரணங்களினாலும் திவ்விய பீதாம்பரங்களாலும் அலங்காரஞ் செய்து நாரதர் - வசிஷ்டர் முதலான மஹாமுனிவர்களைக் கொண்டு சுபச்சடங்குகளைச் செய்வித்திருக்க, கிருஷ்ணனும் தன் தங்கைக்கு நல்ல அலங்காரஞ் செய்வித்துச் சித்தம்பண்ண, சகலவாத்திய முழக்கத்துடனே பெண்ணையும் பிள்ளையையும் கலியாணமண்டபத்து நடுவே இரத்தினங்களழுத்திய பொற்பீடத்தி லுட்காரவைத்துக் காசிபமஹாமுனிவர் வேதவிதிப்படி அக்கினிவளர்த்து ஓமஞ்செய்ய, வசிஷ்டர் முதலாகிய ரிஷிகளெல்லாரும் மந்திரங்களைக் கோஷிக்க, நாரதர் முதலாகிய பெரியோரெல்லாரும் வேதிகையைச் சூழ்ந்து உட்கார்ந்திருக்க, அருந்ததி முதலான ரிஷிபத்தினிகளும் இந்திராணி முதலான தேவபத்தினிகளும் தேவகி - உருக்மிணி - சத்தியபாமை - ஜாம்பவதி - முதலான யாதவ பத்தினிகளும், பாலிகைகளில் விதைகளை விதைத்துப் பால்கலந்த நீரிடவும் சிலர் பூரணகும்பங்களும் தீபங்களுமேந்தி மங்கலப் பாடல்களுடனே சூழவுமிருந்தார்கள்.

தேவதுந்துபி முதலிய பதினெட்டு வாத்தியங்களு முழங்க, அரம்பை முதலிய தேவஸ்திரீகளெல்லாரும் நடனஞ்செய்ய, கந்தருவர் முதலானவர்களெல்லாரும் கானம்பாட, மகா விபவமாகக் கலியாணத்தை இந்திரன் - கிருஷ்ணன் - முதலானவர்

கள் இருந்து நடத்தினார்கள். புரோகிதர் சொற்படியே கிருஷ்ணனும் உருக்மிணியுமாகத் தாரைவார்த்துக் கன்னிகாதானஞ் செய்த சுபத்திரையை, அர்ச்சுனன் கைப்பிடித்துக்கொண்டு, அக்கினியையும் - வேதிகையையும் - ரிஷிகளையும் - வலம்வந்து உட்கார்ந்து, மாங்கிலியங்கட்டி, அம்மிமிதித்து, பொரியிட்டு, மற்றுமுண்டான எல்லாச் சடங்குகளையுங் குறைவின்றி நிறைவேற்றிச் சந்தோஷத்துடனே விவாகஞ்செய்து கொண்டான். உடனே ஸ்ரீகிருஷ்ணன் நாரதர் - காசியபர் - வசிஷ்டர் - முதலிய மஹாரிஷிகளையும், அருந்ததி முதலிய ரிஷிபத்தினிகளையும் பூசித்துப், பல தானங்களும் வழங்கி, இந்திரன் முதலிய தேவர்களும் இந்திராணி முதலிய தேவஸ்திரீகளுமாகிய சம்பந்திகளுக்குஞ் சகலவுபசாரங்களுஞ் செய்து பூசித்துச், சகலருக்கும் விருந்து செய்துநிற்க, அர்ச்சுனன் தன் பெண்சாதியுடனே ரிஷிகளையும் அவர்களுடைய மனைவிகளையும் நமஸ்கரித்து, அவர்களிடம் ஆசிர்வாதம் பெற்றுப் பின்பு இந்திரன் முதலிய தேவர்களையும் அவர்கள் மனைவிகளையும் நமஸ்காரஞ் செய்ய, அவர்களெல்லாரும் "பெண்ணுக்குத் தகுந்த பிள்ளையும் பிள்ளைக்குத் தகுந்த பெண்ணுமாய் இப்படி யமைந்தது அதிசயமாகையால், ஒரு குறைவுமின்றி இவ்விருவரும் நன்மக்களைப் பெற்று நற்செல்வங்களடைந்து நல்லோர்களுக் குதவிசெய்துகொண்டு நெடுநாள் வாழ்க" என்று ஆசீர்வாதஞ்செய்து, மணக்கோலத்துடன் விளங்காநின்ற மணமகனையும் மணமகளையும் எடுத்து முத்தமிட்டு உச்சிமோந்து, மருமகளுக்குப் பற்பல பணிகள் வழங்கினார்கள். பின்பு அர்ச்சுனனும் சுபத்திரையும் வசுதேவர் - தேவகி - முதலானவர்களை நமஸ்கரித்தார்கள். அவர்கள் பல ஆசிகள் கூறினார்கள். இவ்வாறு கலியாணம் நிறைவேறியபின்பு இந்திரன் முதலானவர்க ளெல்லாரும் யாதவர்களிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு, தங்கள் தங்கள் பதிபோய்ச் சேர்ந்தார்கள். கிருஷ்ணதேவன் அர்ச்சுனனைக் கூப்பிட்டு, "நீ கலியாணத்தைச் சேர்ந்த மற்றத் தீக்ஷையை நிறைவேற்றிவிட்டு, இன்னும் இருபத்திரண்டு தினத்திற்குள்ளாகவே உன் மனைவியாகிய சுபத்திரையை அழைத்துக்கொண்டு நமது தேரின்பேரிலேறி இந்திரப்பிரஸ்தம் போய்ச் சேர்ந்துவிடு. இவ்விடத்தில் நீ யிருக்கிறவரைக்கும் சன்னியாசிவேஷத்தோடே யிருக்கவேண்டும். நாங்கள் பலபத்திரர் நித்திரைவிட்டு எழுந்திருக்கு முன்னமே அவ்விடம் போகவேண்டுமாகையால் எங்கட்குச் செலவுகொடு" என்று சொல்லிச் சுபத்திரைக்

குத் திட்டஞ் செய்து, சகல யாதவர்களோடும் புறப்பட்டு அந்தத் தீவுபோய் சேர்ந்து விட்டார்.

## அர்ச்சுனன் சுபத்திரையை அஸ்திஞபுரத்திற்குக் கொண்டுபோதல்

பின்பு அர்ச்சுனன் சொர்க்கராஜ்ய மடைந்தவனைப்போல் மஹா சந்தோஷத்துடனே சுபத்திரையோடுகூடிப், பல போகங்களையு மின்பமாய் அனுபவித்துக் கொண்டிருந்து இருபத்தொரு நாள் கழிந்தவுடனே தன் மனைவியாகிய சுபத்திரையை யழைத்து, "அடி என் பிராணநாயகி! இனி நாம் கிருஷ்ணனுடைய உத்தரவின்படி இந்திரப் பிரஸ்தம்போய்ச் சேரவேண்டும். ஆகையால், நீ இன்றைக்கு வேதியர் முதலானவர்களுக்கு விரத முடிவுநாளென்று சொல்லி, அன்னதான முதலாகிய பல தானங்களைச் செய்து, நீயும் உன் தோழிமார்களுடனே நல்ல பூஷண முதலானவைகளால் அலங்கரித்துக்கொண்டு, வேடிக்கையாய்ப் புசித்து, நகரியைப் பிரதக்ஷணம் வரவேண்டு மாகையால் சகல ஆயுதவர்க்கங்களோடுங்கூடிய திவ்விய இரதத்தைச் சித்தப்படுத்திக்கொண்டு வா" என்று மொழிந்தான். அந்தப் பூங்கொடியும் அப்படியே யோக்கியர்களாகிய பிராமணரை யழைத்து, அவர்களுக்கு அன்னவஸ்திர தட்சணை தாம்பூல முதலானவைகளை யெல்லாங் கொடுத்துப் பூசித்து, அவர்களிடம் பல ஆசிர்வாதங்களைப் பெற்றுக்கொண்டு, பின்பு தன்பந்துக்கள் தோழிமார்கள் முதலானபேர்களோடு சரசசல்லாபங்களுடனே போஜனஞ்செய்து, அவர்களுக்கும் சில பரிசு கொடுத்து, ராஜாவின் ஊழியக்காரரை யழைத்து, "நமது இரதத்தைச் சகல ஆயுத வர்க்கங்களோடு நன்றாய் அலங்கரித்துக் கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டாள். அவர்களும் அப்படியே அலங்கரித்துக்கொண்டு வர, அதில் தன் வஸ்திரம் முதலானவைகளைத் தாதிகளைக்கொண்டு ஏற்றுவித்து, அர்ச்சுனனிடத்திற்குவந்து, "என் பிராண நாயகனே! உமதுத்தரவின்படி இரதத்தைச் சித்தப்படுத்தினேன்" என்று சொல்ல, அர்ச்சுனன் மிகவுஞ் சந்தோஷத்துடனே அவளைக்கட்டி முத்தமிட்டுக் கொண்டு "போவோம் வா" என்றழைக்க, அப்போது அவள் தன் நாயகனை நோக்கி, "என்பிராண பொக்கிஷமே! அடியா

செய்துகொள்ளும் விண்ணப்பத்தைக் கேட் டங்கீகரிக்கவேண்டும். அதாவது குதிரையின் கடிவாளம் பிடித்துத் தேர் நடத்துவதில் எனக்குச் சமானமொருவரு மிப்பூமண்டலத்திலில்லை யென்பார்கள்; ஆதலால் நான் சாரத்தியஞ் செய்கிறேன். அதை அங்கீகரிக்க வேண்டும்" என்ன, அப்பாண்டவவீரன் "பெண்ணரசே! மிகச் சந்தோஷமாயிற்று; ஆனால் நீ தேரில் ஏறிக்கொள்" என்று சொல் லித், தான் காஷாயங்களைக் களைந்து திவ்விய வஸ்திரந் தரித்துக் கவசகுண்டல ஆரகேயூரங்களையு மணிந்து, கத்தி - கேடயம் முத லான ஆயுதங்களை அரையில் கட்டித் தூணிகளைத் தோட்களில் தாங்கிக் கையில் விற்பிடித்துக் கண்டோர் யாவருந் திப்பிரமை கொள்ளும்படியாகக் கோடிசூரியப் பிரகாசத்தோடு, தனது கட்ட ளைப்படி முதலில் ஏறிக் கடிவாளங்களைக் கையிற் பிடித்து நிற்குஞ் சுபத்திரையினால் விளங்காநின்ற தேரி லேறினான்.

அப்போது சுபத்திரை தன் பாங்கிகளை நோக்கி "பாங்கிகளே இறைவனருளால் இன்புற்றிருப்பீர்களாக" எனப் புன்னகையுடன் மொழிந்தனள். இதைக்கேட்ட பாங்கிகள், "எமதன்புடைய தோழீ! உனக்குத் தகுந்த புருஷன் கிடைத்ததற்காகவும், நீ அவனோடுகூட வாழ்வதற்காகவும், நாங்கள் சுவாமியைத் தோத்தி ரஞ் செய்கிறோம். நீ ஜெயவீரப் பிரதாப திவ்விய தேஜோமயனை நல்ல மகனைப் பெற்று, உனக்கொருவர் நிகரின்றி மஹாவைபவத் தோடு வாழுங்கால் நாங்க ளுன்னைப் பார்க்கும்படி நீ தயை செய்ய வேண்டும்" என்று சொல்லி வழிவிட்டுத் திரும்பினார்கள். உடனே சுபத்திரையானவள் தன்கணவனை நோக்கி "மன்னரேறே! நாம் பிரயாணப்படலாமா?" என்று வினவ, அர்ச்சுனன் "அதற் கென்னதடை?" என்றனன். உடனே அவள் தன் கையிலிருந்த சாட்டையால் குதிரைகளைத் தூண்டவே அக் குதிரைகள் காற் றினுங்கடுகி இடியோசையைப் போன்ற சத்தத்தோடு இராஜ வீதியின் வழியாக ஓடிற்று. அப்போது பட்டணத்திலும் அரண் மனையிலுமுள்ள அனேகர் இந்த இரதத்தின் அதிர்ச்சியைக் கேட்டு ஓடிவந்து பார்த்து, "நமது சுபத்திரையை யாரோ எடுத் துக்கொண்டு போகிறான்; வாருங்கள்! வாருங்கள்" என்று கூவ யாவரும் கும்புகூடி, "யாரடா இவன் நாமெல்லாருமிருக்க அரண் மனையிற் புகுந்து பெண்ணை யெடுத்துக்கொண்டு போகிறான்" என்ன, "சிலர் இவன் அரண்மனைத் தோட்டத்திலிருந்த சன்னி யாசியாம்" என்ன, சிலர் "ஆம் ஆம், நான் முன்னமே அந்தச் சன்னி

யாசியைப் பார்க்கும்போதே எனக்குச் சந்தேகமுண்டாயிற்று. அது சரியாய் முடிந்தது" என்ன, சிலர் "இவன் பாண்டவரில் ஒருவனாகிய அர்ச்சுனனும்" எனப் பின்னர் யாவரும் "சரிதான் அவனைத்தான் காண்கிறது" என்று சொல்லித் தங்கள் ஆயுதங்களை வீசிக்கொண்டே பின்றொடர்ந்தார்கள். அர்ச்சுனனும் அவர்களாயுதங்களைத் தடுத்துக்கொண்டே ரைவதகிரியை அடைந்தான். பின்றொடர்ந்தவர்களும் அவனை விடவில்லை. அர்ச்சுனன் தானிருந்த குகையைத் தன் காதலிக்குக் காண்பிக்க, அவளும் "இதுமகா நல்ல குகையாதலால் இதை நான் நமஸ்கரிக்க வேண்டும்" என்று சொல்லிச் சிரித்துக்கொண்டே நமஸ்கரித்து விரைவாய்த் தேரையோட்டினாள்.

---

## அர்ச்சுனனை விபிருது வழிமறித்தல்

---

இப்படியிருக்கப் பட்டணத்தைக் காப்பதற்காக ரைவத பருவதத்தினருகில் வைக்கப்பட்டிருந்த விபிருது என்பவன் இந்தத் தேரினதிர்ச்சியையும் பட்டணத்தா ரிரைச்சலையுங் கேட்டு ஓடிவந்து பார்க்க, ஜனங்களெல்லாரும் "ஐயையோ! அர்ச்சுனன் சன்னியாசி வேஷம்போட்டு மோசஞ்செய்து நமது குலத்துக்கு இலக்குமி போலிருந்த சுபத்திரையைத் தூக்கித் தேர்மேல் வைத்துக்கொண் டோடிப்போகிறானே!" என்று கூவுதலைக் கேட்டுச், சுபத்திரை தேரோட்டுவதையும் பார்த்து, முன்னம் கண்ணன் சொன்ன சங்கதியை யறிந்திருந்தவனாலும் வெளிக்குக்காட்டாமல் மிகவிரைவாய்த் தன் சேனைகளைச் சன்னகப்படுத்தி, தனது வில்லை எடுத்துச் சரமாரி பொழிந்து கொண்டே அத்தேரைப் பின்றொடர்ந்தான். இவ்வாறாகப் பின்றொடர்ந்து வருவதைக்கண்ட சுபத்திரையானவள் தன் கணவனை நோக்கி, "அதோ நால்வகைச் சேனைகளுடனே விபிருது நம்மைத் துரத்திக்கொண்டு வருகிறான். அவர்களுடனே உமக்கு யுத்தம் நேரிடுங்கால், நெடுநாளாய் என் மனதிலிருந்த கோரிக்கை யீடேறுமென்று சந்தோஷப்படுகிறேன். அஃதென்ன கோரிக்கையென்றால், புஜபல பராக்கிரமங்களுடைய அர்ச்சுனனுக்கு நாம் யுத்தத்திலே சாரதியாகி, நமது சாமர்த்தியங்களையெல்லாம் உபயோகப் படுத்தவேண்டுமென்பதுதான்" என்று சொன்னாள். அர்ச்சுனனும் "பெண்ணே! மிகவும் சந்தோஷமா

யிற்று. இப்படிப்பட்ட சாரதியை யடைந்த வீரனாகிய என் புஜபல பராக்கிரமத்தைப் பார்த்து நீ சந்தோஷப்படக் கடவை. சேனைகள் வரட்டும்; தேரையோட்டு" என்று சொல்லவே, அவளும் தேரைத் துரிதமாக ஓட்டினாள். இப்படிக்குத் தேர் பட்டணத்தைவிட்டு வெகுவேகமாகப் போவதைக் கண்ட விபிருதுவானவன் வில்லை வளைத்து நாணேறிட்டு, வரிசை வரிசையாய் அளவற்ற அம்புகளை நாற்புறத்தும் பாயும்படியாகத் தொடுத்துவிட, அர்ச்சுனனும் தன் வில்லில் நாணைப்பூட்டிப் பாணங்களை யெல்லாம் அறுத்துத் தள்ளினான்.

உடனே விபிருது கோபங்கொண்டு, மறுபடியும் மஹா கூர்மை பொருந்திய சில பாணங்களைத் தொடுத்துவிட, அர்ச்சுனன் அவைகளைத் துண்டந் துண்டமாய் அறுத்து, எதிரியைக் கண் விழித்துப் பார்க்க வொட்டாமல் அளவற்ற சரங்களை ஆமோகமாகப் பொழியவே, சேனைகளெல்லாம் ஒரேமுகமாய்த் திரும்பிச் சூழ்ந்து கொண்டு, கோடைகாலத்திடிபோற் கர்ஜித்துக், கத்திகள் - ஈட்டிகள் - சூலங்கள் - குண்டாந் தடிகள் முதலான பல வாயுதங்களைச் சுழற்றி யெறிய, யானைகள் உலக்கைகளைத் துதிக்கைகளாற் பற்றிச் சுழற்றித் தேரின்பேரில் மோதக், குதிரைகள் தங்கள் பேரிலிருந்த வீரர்களைத் தூக்கிக்கொண்டு பாய்ந்து தேர்க்குதிரைகள்மேல் விழ, ரதங்களிலிருந்து வீரரெல்லாரும் விற்களை வளைத்து அம்புகளைத் தொடுத்துச் சரமாரிபொழிய, அந்தச் சேனைகளுக்குத் தலைவனாகிய தவவீரன் சங்கையெடுத்துப் பூரித்துச் சிங்கநாதஞ்செய்து, மிகலாகவத்துடனே வில்லில் அம்புகளைப் பூட்டி, மலையின்பேரில் மேகங்கள் சூழ்ந்து மழையைப் பொழிவதுபோல் அத்தேரின்பேரில் பாணவருஷங்களை வருஷித்து, சந்து தெரியாமல் மறைத்துவிட்டான். அதுகண்ட அர்ச்சுனன் மிகுந்த வீராவேசத்துடனே தனது ஜயசங்கமெடுத்தூதி, வீரகர்ஜனை செய்து, பர்வதங்களை மூடிக்கொண்டிருக்கும் பனிகளைச் சூரியன் தனது கிரணங்களினாலே ஒரு நிமிஷத்தில் நீக்குவதுபோல் அந்தப் பாணங்களின் கூட்டத்தைத் தனது அம்புகளினாலே துணித்து நீக்கித் தன்னை எதிர்த்த சேனைகளில் யானைகள் - குதிரைகள் முதலானவைகளை வீறிட்டோடும்படி யடித்து, அவற்றின் வீரர்களையெல்லாங் கவச கிரீட குண்டல ஆயுதங்களில்லாதவர்களாக்கிப் பதைபதைக்கச்செய்து, தேர்களின் சக்கரம் - நுகத்தடி - இருசு முதலானவைகளைத் துளைத்துப் பொடியாக்கித் தலைவனாகிய வீரனை

நோக்கி, "வீரனே! ஓடாதே. அர்ச்சுனனுடையவன்மையைக் கண்டு போகலாம்" என்று சொல்லி அட்டகாசஞ்செய்து, சில சரங்களைப் பிரயோகித்து அவன் தேர்க்குதிரைகளுடைய கழுத்தையும் சாரதியின் கழுத்தையும் அறுத்துத் துவசத்தைத் துணித்துக் கவசத்தைப் பிளந்து, வில்லை யொடித்துச் சின்னபின்னமாக்கித், தன் மனைவிக்கு "உன் சேனைபடும் பாட்டைப்பார்" என்று காண்பிக்க, அவளும் சந்தோஷப்பட்டுத் தேரையோட்டவாரம்பிக்க, விபிருதுவானவன் திக்குதோறுந் தலை விரிகோலமாய் ஓடுகிற தன் சேனைகளையெல்லாம் நிற்கும்படி கையமர்த்தித் தான் இரதத்தினின்றுந் திடீரென்று குதித்து, "அர்ச்சுனா! நிற்கவேண்டும். குழந்தை சுபத்திரா! நில்லு நில்லு" என்று கூவிக் கொண்டுபோய் அர்ச்சுனனை வழிகட்டிக்கொண்டு இதனைச் சொல்லுகிறான்.—

"அர்ச்சுனா! நீ நமது மருமகனாக அமைந்ததினால் எனக்கு மிகவுஞ் சந்தோஷமாயிற்று. நீ முன்னமே இவ்விடத்தில் ஸன்னியாசி வேஷத்துடனே மறைந்திருந்ததைக் கிருஷ்ணனால் நான் அறிந்திருக்கிறேன். மேலும் எப்படியாவது உனக்குச் சுபத்திரையை பாரியையாக்கக் கிருஷ்ணனுக்கு மனதிருந்தது. அவரன்றோ குணாகுணங்களை நிச்சயிக்கவல்லர். ஆகையாலே உன் விஷயத்திலே நடந்த சரித்திரமெல்லாம் எனக்குத் தெரியும். இப்போது நீ சுபத்திரையுடனே இந்திரப்பிரஸ்தத்திற்குப் போகவேண்டியதுந் தெரியும். ஆனாலும் ஜனங்களுடைய கோஷத்துக்காக உன்னோடு யுத்தஞ்செய்ய வந்தேன். அர்ச்சுனா! நான் சொல்லவேண்டிய வார்த்தை யொன்றிருக்கிறது. அதென்னவென்றால் இந்திரன் சசிதேவியைக் கலியாணஞ் செய்துகொண்டது போல், நீ யெங்கள்பெண்ணைக் கலியாணஞ்செய்துகொண்டு விளங்குகிறாய். ஆகையால் இனி எங்கள் பெண் முகங் கோணாமல் நடக்க வேண்டுமென்று கோருகிறேன். நீ சுகமாய்ப் பட்டணம்போய்ச் சேர்ந்து, உன்னண்ணன் தம்பிமார் முதலாகிய யாவரும் சந்தோஷப்படும்படி பார்த்துக்கொள். குழந்தாய் சுபத்திரா, நீ நல்ல புருஷனை யடைந்தாய். மிகவும் பாக்கியசாலி. நீ மாமியார் முதலாகிய பந்துக்களும் புருஷனும் உவக்கும்படியாக நற்செய்கை செய்து வாழக்கடவாய். ஸ்ரீகிருஷ்ணன் இவ்விடம்வந்தவுடனே சகல வரிசைகளும் இந்திரப்பிரஸ்தத்திற்கு வந்து சேரும். ஆகையாற் சுகமாய்ப் போங்கள்" என்று சொல்லவே அர்ச்சுனன் விபிரு

துவை நமஸ்கரித்து விடைபெற்று, அத்திவ்விய ரதத்தி லேறிக் கொண்டு முன் போலவே புறப்பட்டுபோனன்.

---

## கிருஷ்ணன் யாதவவீரர்களைச் சமாதானப்படுத்தல்

---

இப்படிப் போகும்போது சகல சைன்னியங்களும் "இது மிகவும் அநியாயம். ஊரி லொருவருமில்லா திருக்கும்போது பெண்ணைத் திருடிக்கொண்டு போகலாமா? இதுதானு இராஜகுமாரனுக்கு லட்சணம்? இந்தச் சேனுதிபதி கையிலாகாதவர். தன்னந்தனியா யிருக்கு மொருவனைத் தனதுசேனையோ டெதிர்த்துப் பிடிக்கமாட்டாமற்போனுரே" என்று பேசிக்கொண்டு திரும்பித் துவாரகா புரிக்கு வந்து, சுதர்மையென்னுஞ் சபைக்கு அதிகாரியாயுள்ளோ னிடத்தில் அதனைத் தெரிவிக்க, அச்சபை அதிகாரியும் உடனே மிகுந்து ஒலிக்கத்தகுந்த பெரிய பேரிகையை அடிக்க உத்தரவு பண்ணினுன். அப்படியே ஆபத்துக்காலத்துக்கு அடையாளமாகிய அந்தப் பேரிகையை வீரன்அடிக்கவே, அந்தச் சத்தங்கேட்ட மாத்திரத்தில் தீவி னடுவிலிருந்த யாதவர்கள் யாவரும் மிகவுங் கலக்கமுற்று, எவனெவன் எந்தவேலை செய்துகொண்டிருந்தானே அந்த வேலையை அப்படியே விட்டுவிட்டு, ஆசனங்கள் - பாத்திரங்கள் - வஸ்திரங்கள் - ஆபரணங்கள் முதலான சகல சாமக்கிரியைகளையும் போட்டுவிட்டு ஒருவரோடொருவர் பேசாமல் அங்கிருந்து ஒரு நிமிஷத்துக்குள்ளாக மேற்படி சபையை வந்தடைந்தார்கள். அந்தச் சபையதிகாரி இவர்களுக்கு அர்ச்சுனன் பெண்ணைக் கொண்டு போனதும், விபிருது தரத்தி பங்கப்பட்டதுந் தெரிவித்தான். அது கேட்ட யாதவர் யாவரும் மிகுந்த கோபமடைந்து, கண்கள் சிவக்க உதடுகளைக் கடித்துக்கொண்டு, ஆசனத்திற் பொருந்தாமல் எழும்பி எழும்பி, "ஓ சேனுதிபதிகளே! ஏன்சும்மா விருக்கிறீர்கள்? சீக்கிரம் இரதங்கள் - யானைகள் - குதிரைகள் - காலாட்கள் - என்கிற நால்வகைச் சேனைகளையும் சித்தப் படுத்துங்கள். கவசங்களைத் தரியுங்கள், கத்தி - கேடயம் - ஈட்டி - வேல் - வல்லயம் - கட்டாரி-வில் - தூணி முதலியவைகளையு மெடுத்துக்கட்டிக் கொள்ளுங்கள்" என்று ஆக்கிரமித்துக் கூறவே சேனைகளைச் சேனைத்தலைவர்கள் சித்தப்படுத்தினுர்கள். சில வீரர்கள் தாங்களே யெழுந்திருந்து, தங்கள் தங்கள் வாகனங்களைச் சித்தப்படுத்திக்

கவசகுண்டலங்களாதி ஆபரணங்களோடு ஆயுதமுதலானவைக ளுடனே மகா உக்ரகோபாவேசமாய்ச் சன்னகப்பட்டு வந்தார்கள்.

இப்படிக்குச் சேனைகளும் வீரர்களும் சூழ்ந்து நிற்க, சங்கு கள் - காகளங்கள் - பேரிகைகள் - கரிகளின் பீஷ்காரங்கள் - பரிக ளின் கனைத்தல்கள் - வீரருடைய சிங்கநாதங்கள் - இரதங்களுடைய கோஷங்கள் - இவையாவுமெழும்பித் திக்குகளைச் செவிடுபடச் செய்ய மதுபானஞ்செய்து மயங்கிநின்ற பலராமர் யாதவவீரர்களை நோக்கி, "ஓய் வீரர்களே என்ன நீங்கள் அறியாதவர்கள்போற் குதிக்கிறீர்கள்? கிருஷ்ணன் சும்மாவிருக்க உங்களுக்கே னிந்த யோசனை? முன்னம் அவன் கருத்தறிந்து பின்பு இந்த முயற்சி களைச்செய்யவேண்டும். சகலகாரியங்களினு மகாபுத்திமானுகிய கிருஷ்ணன் தன் கருத்தை வெளியிடட்டும். பின்பு அவன் கருத் துக்கிசைந்தபடி நடப்போம்" என்று பலதேவர் சொல்ல, அது கேட்டயாவரும் "நல்லது அப்படியே செய்வோம்" என்று அங்கீ கரித்து, முன்போல யுத்தத்திற்காகக் களகளவென்று இரையா மல் ஆசனங்களிலுட் கார்ந்தார்கள். பின்பு பலதேவர் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியைப்பார்த்து, "ஓ மூன்றுலோகங்களுக்கும் கர்த்தாவாயும், மூன்றுகாலமுமறிந்தவனுயுமிரா நின்ற கிருஷ்ண! இந்த ஜனங்கள் இரையு மிரைச்சலையும் நடந்த காரியத்தையும் அறிந்திருந்தும், என்ன சும்மா விருக்கிறுய்? அர்ச்சுனனுக்கு உன்னைப் பற்றி மரியாதை செய்தோமேயல்லது வேறில்லை. அந்த மடையன் நமக்கு மரியாதை பண்ணத்தக்கவனு? அவனே கெட்ட நினைப்பும் நடக்கையு முடையவன். குலத்தைக்கெடுக்கப் பிறந்தவன். இல்லாவிட்டால் எவனுகிலும் உண்ட வீட்டுக்கு இரண்டு நினைப் பானு? தான் நற்குலத்திற் பிறந்தவனுயிருக்க, ஆபத்துக்களி லுபகாரிகளாகிய நமக்கு இப்படிப்பட்ட அபகாரஞ்செய்யலாமா? மேலும் இவர்களுக்கும் நமக்கும் பெரியவர்கள்நாள்முதற் சம்பந்தம் நடந்து வருகிறது. இது வரையில் இவனைப் போல் யாராகிலும் இப்படிப்பட்ட சாகசகாரியஞ் செய்திருப்பார்களா? இவ னிப்படி செய்யலாமா? நல்லது: அந்தத் துஷ்டன் என்னையும் உன்னையுங் கூட எள்ளளவேனும் மதியாமல் வீட்டுக்குள்ளே புகுந்து, திருடன் போல் பெண்ணை யெடுத்துக்கொண்டு போனதை நாம் எப்படிச் சகித்திருக்கலாம்? அந்தப் பஞ்சைமனிதன் என் மானத்தைப் போக்கினுல் நான் பொறுப்பேனே? ஆகையால் இப்பொழுதே போய் இந்தப் பூமியிற் கௌரவவமிசமே யில்லாமற் செய்துவிடுகி

றேன். நீ சும்மாவிரு. கிருஷ்ணா! அவன் செய்த அக்கிரமத்தைக் கொஞ்சமும் பொறுக்கமாட்டேன்" என்று மிகுந்த ஆத்திரத்துடனே பிரளயகால மேகம்போற் கர்ச்சியாநின்ற பலராமரை யாதவர்களெல்லாரும் அனுசரித்துத் தாங்களும் அப்படியே செய்வதுதான் நன்றென்று கூடவே இரைந்துபேச, ஸ்ரீகிருஷ்ணசுவாமி யானவர் அவர்களைப் பார்த்துச் சொல்லுகிறார்:—

"ஓ வீரர்களே! சற்றே நில்லுங்கள். எனக்குத் தோன்றினதைச் சொல்லுகிறேன். அதை நீங்கள் ஞாபகமாய்க் கேளுங்கள். ஏனென்றால் நானே முதலில் ஒன்றுஞ் சொல்லக்கூடாதென்றிருந்தேன். இப்போது அண்ணாவே என்னிஷ்டத்தைச் சொல்லச்சொல்லி நியமித்தாராகையாற் சொல்லுகிறேன். அதாவது ஆதியில் அந்தக் கபட சன்னியாசியைக் குறித்து நீங்களெல்லாருங் கேட்டபோதே எனக்குச் சந்தேகமாயிருந்தது. ஆதலால் அந்தப்புரத்திலே கொண்டுவந்து வைக்கவேண்டாமென்று சொன்னேன். அதை நீங்கள் கேளாமல் உங்களிஷ்டப்படி செய்து விட்டீர்கள். அதனாலே இப்போது இவ்வளவு வருத்தம் நேரிட்டது. போனது போயிற்று. இனி யென்ன அந்த யோசனை. வேறுயோசனை செய்யவேண்டும். எப்படியும் சுபத்திரை அர்ச்சுனனுக்கு அம்மான் மகள்; கலியாணஞ் செய்ய வேண்டியவள்தான். அவனும்-குலம்-வித்தை - சாமர்த்தியம் குணம் முதலானவைகளிலே சிறந்தவன்தான். ஆனால் அவன் மோசமானகாரியஞ் செய்ததற்காக நாம் கோபிக்க வேண்டியதாயிருக்கிறது. ஆகிலும் பதறாமல் எதையுஞ் செய்யவேண்டும். இப்படி அர்ச்சுனன் செய்த காரியத்தினாலே நமது குலத்துக்குப் பெருமையே யல்லது சிறுமை எள்ளளவுமில்லை. எப்படியென்றால் - அர்ச்சுனனோ மிகுந்த பலசாலி. அவன் நம்மோடெதிர்த்தே இந்தப் பெண்ணைக்கொண்டு போகலாம். அப்படியிருக்க இரகசியமாய்க் கொண்டு போனதினாலே நாம் மகாவீரரென்று பெருமையே யாகிறது. அன்றியும், அவன் நாமெல்லாரும் பணத்திலேமதிப்புவைத்துக் கன்னிகையை விற்கப் புகுபவர்களென்று நினைத்து, அவ்வளவு பொருள் கொடுக்கமாட்டாமல் க்ஷத்திரிய தருமத்திற் கேற்றபடி கன்னிகையைப் பலவந்தமாய் எடுத்துக்கொண்டு போனதாய்க் காணப்படுகிறது. இனி நாமெல்லாருஞ் சேனைகளைக் கூட்டிக்கொண்டு யுத்தத்துக்குப் போனாலும், அவனை ஜயிக்கப்போகிறதில்லை. இப்போதிருக்கிறபடி யிருந்தால் அவனுக்கும் நாணம், நமக்குங்கௌரவம். சண்டைக்குப் போய்த்

தோற்றுவந்தால் அதைவிடத் தாழ்வு நமக்கு வேறில்லை. போனது போயிற்று. நமதுபெண் தகுந்த க்ஷேத்திரத்திற் சேர்ந்தாளே யன்றிவேறில்லை. ஆகையால் அமைவுடனே நாமு மந்தக் காரியத்திற்குச் சம்மதித்தவர் போல் நடக்கவேண்டியதை நடத்தினால் நல்லது. இதுதான் எனக்குத் தோற்றுகிற யோசனை. இது உங்களுக்கு யுக்தமாயிருந்தால் அங்கீகாரஞ் செய்யுங்கள். இல்லாவிட்டால் உங்க ளிஷ்டப்படி நடவுங்கள்" என்று பரிவுடன் சொன்னார். பலராமர் முதலாகிய யாதவவீரர்கள் இது யுக்தியோடு கூடியதா யிருக்கிறதென்று அறிந்தும் பேரிகை யடித்துக்கொண்டு மீளவும் யுத்தத்திற்காகவே சித்தப்பட்டார்கள்.

இப்படி இந்த ரணபேரிகையின் சத்தத்தைக்கேட்ட மாத்திரத்தில் அர்ச்சுனன் சுபத்திரையைப் பார்த்து, "உனது பந்துக்களெல்லாரும் யுத்தத்திற்காக வருகிறார்களென்று தெரிகின்றது. யுத்தபேரிகையின் சத்தங் கேட்கிறது. ஆகையால் ரதத்தைத் திருப்பு. குடியரும் மடையருமாகிய அவர்களை யெல்லாம் நாசம் பண்ணிப் போடுகிறேன். இவர்கள் மூடர்களாகையால் தங்களுடைய யோக்கியதையையும் எதிரியினுடைய யோக்கியதையையும் அறியாமல், விளக்கைக் கண்ட விட்டிற் பூச்சிகள்போல் ஓடிவருகிறார்கள்" என்று கோபத்துடனே பேசியதைக்கேட்ட சுபத்திரை மனங்கலங்கி முகம் வாடித் தன் கணவனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு "ஓ என்னுயிரனையநாயகனே! இப்போதென்பேரில் தயைவைத்து என் வார்த்தையின்படி நடக்கவேண்டும். அஃதென்ன வென்றால், யாதவர்களை நீர் சங்கரிக்கப் புறப்படுவீரானால், யாதவர் குலத்துக்கு மிருத்யு சுபத்திரை யென்று எனக்கு மிகுந்த நிந்தை வந்துவிடும். சந்தேகமில்லை. அப்படி நான் குலத்துக்கெல்லாம் நாசகாரியாகி நிந்தைபெற்று உலகத்தில் பிழைத்திருக்கலாகாது. ஆகையால் மனதைப் பெரிதுபண்ணி, இந்திரப்பிரஸ்தப் பட்டணத்திற்கே திரும்பும்" என்று வேண்டிக்கொள்ளவே அர்ச்சுனன் அவளைக் கட்டிக்கொண்டு முத்தமிட்டு, "பயப்படாதே. உன்வார்த்தைக்குக் குறுக்கில்லை. இனி உன்னிஷ்டப்படி நமது பட்டணத்திற்கு இரதத்தை நடத்தலாம்" என்று கட்டளையிட்டான். யாதவர்கள் புறப்பட்டுப் பட்டணத்தைத் தாண்டிவரும்போது, மெத்தைகளிலும் - மேடைகளிலும் - பிராகாரங்களிலும் - சர்ப்பங்கள் போல் விழுந்திருந்த அர்ச்சுனனுடைய அம்புகளைக் கண்டு ஆச்சரியமடைந்து "கிருஷ்

ணன் சொன்ன வார்த்தை மெய்தான்" என்று எண்ணிக்கொண்டு ரைவத பருவதத்தின் பக்கத்தில் வந்து, அங்கிருந்த சேனாதிபதியாகிய விபிருது என்கிறவனால் முன்னம் தான் யுத்தஞ்செய்து தோற்றுப் போனதையும் - அர்ச்சுனனுடைய பராக்கிரமத்தின் விசேஷத்தையுஞ் சொல்லக் கேள்விப் பட்டு, ஆனும் அர்ச்சுனனைச் சன்மானித்தற் பொருட்டேனும் அவனை நாமனைவரும் பின்றொடர வேண்டுமென்று நினைத்து, அப்பால் அவன் மிகவுந் தூரமாகச்சென்றானென்று நிராசைசெய்து திரும்பும்போது சிறிது நிதானித்து, நமது பெண்ணுக்கேனும் மனோதிருப்தியாகும்படி நமது பந்துவர்க்கச் சேனைகளிற் சிலரை யனுப்பவேண்டுமென்று கருதினவர்களாய்த் தகுதியான யாதவகுல வீரர்களையும் சில சேனைகளையுங் கூட்டிச், சில யானை குதிரைமுதலிய பரிவாரங்களையுங் கொடுத்து, "நீங்கள் விரைவிற் போய் வழியில் நமது சுபத்திரையைக் கலந்துகொண்டு அஸ்தினபுரம்போ யிருங்கள். நாங்களும் பின்னால் வந்து சேருகிறோம்" என்று அனுப்பிவிட்டு, மற்ற யாவரும் ஒருவாறான சமாதனத்தோடு துவாரகா புரிக்கு வந்து சேர்ந்தார்கள்.

---

## அர்ச்சுனன் சுபத்திரையோடு இந்திரப்பிரஸ்த மடைதல்

---

இப்பால் அர்ச்சுனன் துவாரகையைச் சேர்ந்த உத்தியான வனங்களையும் - கிரிவிருசம் என்கிற பட்டணத்தையும் - அனேக மலைச்செறிவுகளையும் - உச்சயனியென்கிற நகரத்தையும் - பற்பலவிதமான காடுகளையும் - தேனுமதியென்கிற தீர்த்தத்தையும் - அஸ்வரோகிதமென்கிற தடாகத்தையும் - உத்விருத்த மென்கிற மலையையும் - அற்புதமென்கிற பர்வதத்தையுங் கடந்துபோய், புரோற்சிருங்க மென்கிற விடத்திலிருந்து, கௌரவதீ என்கிற ஆற்றைத் தாண்டி, சால்வதேசம்போய் அங்கிருந்து, மிஷததேசத்துக்குச் சென்று, அங்கிருந்த தேவாமிருதமென்கிற பட்டணத்தைப் பார்த்துக்கொண்டே தேவாரணியம் போய்ச் சேர்ந்தான். அந்தத் தேவாரணியத்தி லிருந்த முனிவர்கள் அர்ச்சுனனைக் கண்டமாத்திரத்தில் அனேக உபசாரங்கள் செய்ய அவ்வுபசாரங்களைப்

பெற்றுக்கொண்டு புறப்பட்டுக் குருதேசம்போய்ச் சேர்ந்து, தன்னண்ணன் தம்பிமாராகிய சிங்கங்கள் வாசஞ்செய்யுங் குகைபோன்ற தன் பட்டணத்தைத் தூரத்திற் கண்டு களிப்படைந்தான். பின்பு அந்த இந்திரபிரஸ்தபுரிக்குச் சமீபத்திலிருக்கும் ஓர் இடைச்சேரியி லிறங்கிப், போஜன முதலானவைகளைச் செய்து, சுபத்திரையை நோக்கி, "அடி யதுகுலத்து மன்னரசே! இனி நாம் சேர வேண்டியது இந்திரப்பிரஸ்த புரிதான். ஆகையால் நான் சொல்லுமொரு வார்த்தையை நீ அங்கீகரிக்க வேண்டும். அதாவது, நீ இடைச்சிபோல் வேடம் போட்டுக்கொண்டு நமது நகரத்திற்குச் செல்ல வேண்டும். ஏனென்றால், என்னுடன் கூட நீ மெய்யான ரூபத்துடன் வருவாயானால், ஒரு வேளை திரௌபதை மனம் நொந்து ஏதாகிலும் கடூரமாகிய வார்த்தையைச் சொல்லுவாள். நீ தனியே வேறுரூபத்துடன் போய் அவளைப் பணிவாயானால், நல்ல வார்த்தை சொல்லுவாள். அவள் முதற் சொன்ன வார்த்தைக்கு மாறாக நடக்கமாட்டாள். ஆனதால் நீ மாறு வேஷத்துடனே செல்லவேண்டும்" என்று சொல்லக் கேட்ட சுபத்திரை அர்ச்சுனனை நோக்கி, "உமது உத்தரவுக்குத் தடை சொல்வதுண்டோ? எப்படி நியமித்தாலும் அப்படியே நடக்கிறேன்" என்ன, அர்ச்சுனன் மிகவுஞ் சந்தோஷப்பட்டு, அவ்விடைச்சேரியி லிருந்த இடையரைக் கூப்பிட்டு, "இச் சுபத்திரையோடு இடைச்சிகள் யாவரும் நமது நகரத்திற்குச் செல்ல வேண்டும்" என்று ஆக்ஞாபிக்க, இடையரெல்லாரும் ஒரு நிமிஷத்துக்குள்ளே தங்கள் தங்கள் ஸ்திரீகளைச் சகல அலங்காரங்களோடுஞ் சித்தப் படுத்தினார்கள்.

அப்பால் அர்ச்சுனன் தன் மனைவிக்குத் தானே ஆய்ச்சி வேஷம் போட்டு, முன்னிருந்த அவ்வுருவத்திலும் இவ்வுருவம் மிகவழகுடன் விலாசம் பொருந்தி விளங்குவதைக் கண்டு, அவளைப் பலமுறை கட்டியணைத்து முத்தமிட்டு, ஆய்ச்சியரெல்லாருடனேயுங் கூட்டி அனுப்பிவிட்டான். அவளும் அப்படியே இந்திரப்பிரஸ்தம்போய் அரண்மனைக்குட் சென்று, தனது அத்தையாகிய குந்திதேவியை நமஸ்காரஞ் செய்து, அவளாலே ஆசிர்வதிக்கப் பட்டு, பின்பு திரௌபதையின் பாதங்களில் தெண்டனிட்டு, "நான் உமது பணிவிடை செய்பவள்" என்றாள். அந்தப் பாஞ்சாலி யாதவகன்னியினுடைய ரூபத்தைக் கண்டு வியப்படைந்து, மிகுந்த சந்தோஷங் கொண்டவளாய் அவளைப்

பார்த்து, "பெண்ணே! நீ உனக்குத் தகுந்த உத்தம புருஷனோடுகூடி நன்மக்களைப் பெற்றுச் சகளத்திபின் விரோதமின்றி வாழக் கடவை" என்று ஆசிர்வாதஞ் செய்ய, அதைக்கேட்ட சுபத்திரையானவள் "நீர் சொன்ன வாக்கு சரியாயிருக்கவேண்டும்" என்று சொல்ல, "அப்படியே யாகும்" என்று அவளை வாரியெடுத்துத் தன்மடியின்மீது உட்காரவைத்து, உற்றுப் பார்த்து, அவள் சுபத்திரை யென்றறிந்து மனதிற் கோபமில்லாமல் ஆலிங்கனஞ் செய்து, மேகவண்ணக் கண்ணனை நினைத்து, "ஸ்ரீகிருஷ்ணன் நல்ல காரியஞ் செய்தார்" என்று மிகவுங் கொண்டாடிக்கொண்டிருந்தாள். இப்படியிருக்க அர்ச்சுனனானவன் அந்த இடைச்சேரியை விட்டுப் புறப்பட்டுப் பட்டணத்திற் பிரவேசிக்கும்போது, சுபத்திரா தேவிக்குத் துணையாக யாதவத் தலைவர்களா லனுப்பப்பட்ட வீரர்களுஞ் சேனைகளுங் கடல்போ விரைந்துகொண்டு அர்ச்சுனனோடு கலந்து கொண்டனர். அர்ச்சுனன் அந்தச் சேனைகளோடு கூடிப் பட்டணத்திற் பிரவேசிக்கப், பட்டணத்திலிருப்போரெல்லாரும் அர்ச்சுனனைக் கண்டு நெடுநாளானபடியினாலே சந்தோஷப்பட, அர்ச்சுனனும் தனது பட்டணத்தைப் பார்த்துக்கொண்டே அரண்மனைவாயிலில் தேர்விட்டிறங்கி, புரோகிதராகிய தௌமியரையும்-அண்ணனாகிய தருமபுத்திரர் - பீமசேனனையும், தாயாகிய குந்தியையும் நமஸ்காரஞ்செய்து, தம்பிமார்களாகிய நகுல சகாதேவர்களாலே நமஸ்கரிக்கப்பட்டு, அவர்களுக்கு ஆசிர்வாதஞ்செய்து, பின்பு தன் மனைவியாகிய சுபத்திரையையும் அவளுக்காக வந்த யானை - குதிரை - ஒட்டகம் முதலானவைகளையும் மஹாராஜாவாகிய தன் அண்ணனிடத்தில் ஒப்புவித்தான். அந்த யாதவ சேனை வீரர்களும் மஹாராஜாவுக்குச் செய்யவேண்டிய மரியாதைகளைச்செய்ய, அவர் இவர்களுக்குத் தக்கபடி சன்மானங்கள்செய்து சபையி லுட்காரவைத்து, தமது தம்பிமார்களுடனே தாமுமிருந்து சுபத்திரையைத் தங்கள் மனைக்குவந்த இலட்சுமி தேவியேயென்று சந்தோஷித்து, அந்தப்புரத்திற் கனுப்பிவிட்டார். இவ்வாறாகத் தருமபுத்திரர் முதலானவர்க்கும் குந்தி திரௌபதை முதலானவர்க்கும் சுபத்திரை யொருகண்போல் விளங்கினாள்.

---

## சுபத்திரைக்குக் கிருஷ்ணன் வரிசை கொடுத்தல்

கேட்டீரோ ஜனமேஜய மஹாராஜனே! துவாரகாபுரியிற் சகலமானபேரும் அர்ச்சுனன் சுபத்திரையைக் கொண்டுபோனதற்குக் கிருஷ்ணன் உளவாயிருந்திருக்கிறான்; இல்லாவிட்டால் இப்படி நடக்காது என்றும், அக்கிருஷ்ணன் தன் தங்கையை அர்ச்சுனனுக்குக் கொடுக்க வேண்டுமென்று இப்படிப்பட்ட காரியஞ் செய்வித்தான் என்றும் சொல்லிக்கொண்டனர். ஸ்ரீகிருஷ்ணன், "யாவரும் இப்படிச் சொல்லும்போது நான் இல்லையென்றால் ஒக்குமா?" என்று சமாதானஞ் சொல்லித் தமது தமையனிடத்திற்கு வந்து, "அண்ணா! அர்ச்சுனன் செய்துபோன காரியத்திற்கு யாவரும் என்பேரில் அபவாதஞ் சொல்லுகிறார்கள். சொன்னால் சொல்லட்டும், இனி யார்தான் செய்வதென்ன? காரியம் மிஞ்சிப்போயிற்று. ஆதலால் நான் பாண்டவர்களுடைய பட்டணத்திற்குப் போய்ச் சுபத்திரையைக் குறித்து நடத்த வேண்டியவைகளை நடத்திவிட்டு வருகிறேன்" என்று விடை கேட்க, அதற்கு அவர் "தம்பீ கிருஷ்ணா! எனக்கும் அது கடமையாகையால் நானும் வருகிறேன், வாபோவோம்" என்ன, இருவரும், உக்கிரசேனன் முதலானவர்களிடம் செய்தியைச் சொல்லிச் செலவுபெற்றுக்கொண்டு, நால்வகைச் சேனைகளையும் ஆயத்தப்படுத்திப் பல ஆபரணம் முதலானவைகளை யெடுத்துக்கொண்டு, சர்வவாத்தியங்களும் முழங்கப் புறப்பட்டார்கள். அப்போது யாதவவீரர்கள் சில அடையாளங்களினாலேயும் - சுபத்திரையின் தோழிகள் சொன்ன ஜாடைகளினாலேயும் - இந்திரன் முதலானவர்கள் வந்து அர்ச்சுனனுக்கும் சுபத்திரைக்கும் விவாகத்தை நடத்தினார்கள் என்பதை அறிந்து மிகவுஞ் சந்தோஷமடைந்தார்கள்.

இப்படியாக மகாசந்தோஷத்துடனே, அக்குரூரன் - கிருதவர்மா - உத்தவன் - சாத்தியகி - பிரத்யும்னன் - சாம்பன் - நிசிதன் - சங்கு - சாருதேஷணன் - சுதேஷணன் - சல்லி - விபுருது - காரணன் - கதன் முதலாகிய யாதவர்களெல்லாரும் பலராமகிருஷ்ணர்களுடனே மகாசேனைகளைக் கூட்டிக்கொண்டு, வெகு சீக்கிரத்தில் இந்திரப்பிரஸ்தத்திற்கு வந்தார்கள். இவ்வண்ணமாக இவர்கள் வருகிற செய்திகேட்ட தருமபுத்திர மகாராஜன் மிகவும் பரபரப்பாய்ப் புரோகிதர் பிராமணர் முதலாகிய பேர்களுடனே கிருஷ்ணனை யெதிர்கொள்ள நகுல சகாதேவர்களை யனுப்

பித் தாம் பீமனுடனே பலதேவரை யெதிர்கொண்டார். இவ்வா ருகப் பாண்டவர்கள் எதிர்கொள்ள ஒருவரை யொருவர் கண்டு மகிழ்ந்து க்ஷேமங்களை விசாரித்துக்கொண்டு, மூத்தவர்களைப் பணிந்து, இளையவர்களை ஆசிர்வதித்து, உடனே பட்டணத் திற்குப்போய் அரண்மனையைச் சேர்ந்தார்கள். பின்பு தருமபுத்தி ரர் சகல யாதவர்களுக்கும் அவரவர்களுக்குத் தகுந்தபடி உப சாரஞ்செய்து விருந்து நடத்தினர். பலராம கிருஷ்ணர்கள் வந்த தினலே குந்திக்கும் திரௌபதைக்கும் உண்டாகிய சந்தோஷத் திற்கு அளவில்லை. பாண்டவர்களும் இவ்விருவரையுங் கண்டு பேரானந்த மடைந்திருந்தார்கள். சுபத்திரையைக் கண்டு எல்லோ ரும் சந்தோஷப்பட்டு வாழ்த்தினர்கள். ஸ்ரீகிருஷ்ணன் தமது தங் கைக்கு நவரத்தினங்க ளிழைத்த சகல ஆபரணங்களும் விசித்ர மாகிய வஸ்திரங்களும், அனேக பொற்பாத்திரங்களும், அனேக ரத்ன பாத்திரங்களும், குதிரைகள் - யானைகள் - ஒட்டகங்கள் - தேர்கள் - பசுமாடுகள் - பல்லக்குகள் - கட்டில்கள் - பெட்டிகள் முதலானவைகளும் ஸ்திரீதனங்கொடுத்தார்; மருமகனுகிய அர்ச் சுனனுக்கும் பல பூஷணங்கள் - ஆசனங்கள் - வேலைக்காரர் முத லான உலுப்பைகளைக் கொடுத்தார். பலராமர் விசேஷமாக அர்ச் சுனனுக்கு ஒரு பாதபீடங்கொடுத்தார். இப்படியெல்லாம் வரிசை கொடுத்துத் தங்கையைக் கட்டியணைத்து முத்தமிட்டு, திரௌ பதையினிடத்திற்கு அவளை யழைத்துக்கொண்டுபோய், "அம்மா பாஞ்சாலி! இவள் உன்னுடைய அடைக்கலம். நீ தான் இவளைக் காப்பாற்றவேண்டும்" என்று சொல்லிக் குந்தியையுங் கண்டுவினவி னர். இப்படி இருவரும் சிலகாலம் அவ்விடத்திலேயே பாண்டவர்க ளோடு கூடமகிழ்ந்துகொண்டு மிகவினோதமாயிருக்க, சகல யாதவர் களும் பாண்டவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தங்களூருக் குப் புறப்படுமளவில், அர்ச்சுனனும் சுபத்திரை முதலானவர்களும் கிருஷ்ணனை இருக்கச் சொல்லி வற்புறுத்தினர்கள். கிருஷ்ண னும் அப்படியே யிருக்க இசைந்த படியினலே, யாதவர்கள் அவரிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு துவாரகாபுரிக்குச் சென் றனர். கிருஷ்ணன் அர்ச்சுனனுடன்கூட ஆற்றின் கரைக்குத் தினந்தோறும்போய் விளையாடிக்கொண்டு வேடிக்கையாயிருந்து வருவார்.

# அபிமன்யு உற்பவம்

இவ்வாறிருக்கிற நாளிலே அந்த அர்ச்சுனனானவன் சுபத்திரையோடு உடலுட னுயிர்போல இரவுபக லறுபது நாழிகையும் பிரியாமற் ஸரஸஸல்லாப விநோத காமபோகமென்கிற அமுதக்கடலிலாழ்ந்து, பேரின்பமும் இதற்கு நிகராகாதென்னும்படி பலவித சிங்கார விநோத சுகங்களை யனுபவித்துக்கொண்டு, அவள் ஒன்றைச் சொல்வதற்குத் தடையேயன்றிச் சொல்வதன்முன்னே அவளுக்கு இஷ்டமான படியெல்லாம் நடந்து கொண்டிருந்தான். இப்படியிருக்கும் நாளிற் சுபத்திரை வயிற்றில் கருத்தரித்தது. அப்போது அவள் முன்னிருந்த அழகிலும் மிகுந்து விளங்கிநிற்க, அர்ச்சுனனும் கிருஷ்ணனும் மிகவுஞ் சந்தோஷமடைந்திருந்தார்கள். இங்ஙனம் பத்து மாதங்களும் நிறைந்த பின்பு, இந்திராணி ஜயந்தனென்கிறவனைப் பெற்றதுபோல் மகாபல பராக்கிரமசாலியும் மிகப் பிரகாசமும் பொருந்திய ஒரு குழந்தையைப் பெற்றாள். அர்ச்சுனனானவன் தன்னிலும் மேலான ரூபலக்ஷணமும் - வீரலக்ஷணமும் - குணலக்ஷணமும் வாய்ந்த புத்திரன் பிறந்ததைக்கண்டு மிகவும் சந்தோஷத்தினாலே சாதககருமஞ் செய்வித்து, பதினாயிரம் ஏழைகளுக்குக் கோதானம் - பூதானம் - வஸ்திரதானம் - சுவர்னதானம் முதலாகிய பற்பல தானங்களும் வழங்கினான். அப்பால் பன்னிரண்டாவது நாளிற் புரோகிதர் முதலாகிய அனேகம் பெரியோர்கள் வந்து அக்குழந்தையைப் பார்த்து, " இவனுக்கு அபிமன்னியுவென்று பெயரிடவேண்டும். ஏனெனில், அபி-என்றால், ஒன்றுக்கும் பயப்படாதவன் என்றும் மன்னியு - என்றால், சத்துருக்கள் விஷயத்தில் மகாகோபம் பொருந்தியவன் என்றும் கருத்தாகையால், இவனுக்கு இப்பெயரே சரி" என்று நட்சத்திரத்திற் கிணங்க அப்பெயரிட்டார்கள். அப்பாற் பாண்டவர்கள் அக்குழந்தைக்குக் காப்பிட்டுத் தொட்டிலிட்டு மிகவு மன்புடனே வளர்க்க, அவன் சுக்கிலபட்சத்துச் சந்திரன்போல் நாளுக்குநாள் செழித்து வளர்ந்து வந்தான்; ஐந்தாம் வயது வந்தவுடனே வித்தியாப்பியாசஞ் செய்யப்பட்டு ஆசிரியர்களால் வேதசாஸ்திரங்களையும்-அர்ச்சுனனால் வில்வித்தையையும் சாங்கமாகக் கற்று, எல்லாரிலும் விசேஷமாகி, பாண்டவர்களும் யாதவர்களுமேயன்றி மற்றச் சகலகலாபண்டிதர்களும் பரிசனங்களும் புகழும்படியாக, கல்வியிலும் - ரூபத்திலும் - குணங்களிலும்-சாமர்த்தியத்திலும் அவன் உயர்ந்திருந்தான். இந்த அபிமன்னியு பிறந்த செய்தியைத் துவா

ரகாபுரியிலிருந்த யாதவவீர்க ளனைவருங்கேட்டு ஆனந்தமுற்று வந்து, அக்குழந்தைக்குஞ் சுபத்திரைக்குஞ் செய்யவேண்டிய வரிசைகளை யெல்லாஞ்செய்து, பாண்டவர்களாற் பல வெகுமானங் களைப் பெற்றுத் தங்கள் நகரம்போய்ச் சேர்ந்தார்கள். ஓ ஜனமே ஜயமகாராஜனே! இப்பால் அபிமன்னியு சிறுவனுயிருக்குங்காலத்தி லேயே நடந்த சரித்திரங்களை இனிச் சொல்லுகிறோம்: அந்த விநோதங்களையுங் கேளும்" என்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம் முற்றிற்று

---

## 14. காண்டவவனதகனச் சருக்கம்

---

கண்ணன் துதி

ஞான மாகிய பரம்பர வமிழ்தமாய் நவிலறு மயலாகி
வான மாயுடன் வாயுவாய்த் தேயுவாய்ச் சலமுமாய் மண்ணுகித்
தான மாமறை முறைமையிற் பற்பல சராசரங் களுமாகி
யேன மாயிவை யனைத்தையு மருப்பினு லேந்தினு னெனையாண்டோன்

இப்படியாகப் பாண்டவர்கள் பலவாறுகச் சந்தான சம்பத்தை யடைந்து, திரிதராஷ்டிர மகாராஜனுடைய கட்டளைப்படியும் பீஷ்மருடைய கட்டளைப்படியும் தருமநீதிகளைத் தழுவி நடக்கும் அரசர்களைத் தாங்கியும், வழுவி நடக்கும் அரசர்களைத் தண்டித் தும் வந்தார்கள். இப்படி அவர்கள் யாவரையும் நல்வழி நடக்கும் படிசெய்து பெரும்புகழ்பெற்று வாழ்ந்துகொண்டிருக்கு நாளில், இளவேனிலென்று சொல்லப்பட்ட வசந்தகாலமானது உண்டாயது. அப்போது சோலைகளிலிருந்த மரங்களெல்லாந் தளிர்ப்பதும்-பூப்ப தும்-காய்ப்பதும்-பழுப்பதுமாகத் தழைத்துநிற்க, குயில்களெல்லாம் சந்தோஷமடைந்துகூவ, வண்டுகளெல்லாம் மதுவுண்டு களித் துப்பாட, தென்றற் காற்றனது முகிழ்களை மலர்த்திச் சோலையை யசைத்து மெள்ளவீச, தடாகங்களெல்லாஞ் செந்தாமரை - வெண்டாமரை - செங்கழுநீர்-கருநெய்தல் முதலாகிய மலர்களால் அலங்காரமடைய, அவற்றிற் சக்கிரவாகம் - சாரசம் - அன்னம் முதலான நீர்ப்பறவைகள் சூழ்ந்து விளங்கிக்கொண்டிருந்தன. அதுகண்ட அர்ச்சுனன் மிகவுஞ் சந்தோஷமடைந்து, ஸ்ரீகிருஷ் ணனைப் பார்த்து, "கிருஷ்ணு! இந்த வசந்தகாலத்தில் நாமும் நம

முடைய பிராணநாயகிகளும் காடுகளிற்போய் விளையாடி ஜலக் கிரீடை செய்து வேடிக்கையாய்ச் சாயங்காலம் மறுபடிவந்து சேரு வோம். இது உமது மனதிற்கு இஷ்டமாயிருந்தாற் போவோம் வாரும்" என்ன, ஸ்ரீகிருஷ்ணனும் "அர்ச்சுன! எனக்கும் அப் படியிருக்கத்தான் விருப்பம்: அதை நான் உன்னோடு சொல்லு கிறதற்கு இருந்தேன். முன்னதாய் நீயே சொல்லிவிட்டாய்; எனக்கு மிகவும் சந்தோஷமாயிற்று. ஆகையால் அப்படியே போவோம்" என்று சொன்னார்.

## கிருஷ்ணார்ச்சுனரை அக்கினிதேவன் உணவுகேட்பது

இவ்வாறு கிருஷ்ணமூர்த்தியானவர் சம்மதித்துக் கூறிய மாத்திரத்தில் அர்ச்சுனன் பிரயாணமானான். பின் இருவரும் தருமபுத்திரரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு, தங்கள் நாயகிக ளுடனே வாகனங்களிலேறி, வேண்டிய பரிவாரத்துடனே யமுனா நதிக்கரைக்கு வந்து, அங்கங்கே மணற்குன்றுகளும், அவைகளிற் பட்சிகள் ஒன்றோடொன்று மருவி நின்று விளையாடுவதையும், ஜலத்திற் றாமரைமலர்களில் வண்டுகள் மொய்த்திருப்பதையும், பார்த்துக்கொண்டே காண்டவவன மென்கிற ஒரு பெரிய வனத்தி னுள்ளே புகுந்தனர். அதிற் சிவிங்கிகள்-புலிகள்-கரடிகள்-சிங்கங் கள் - யானைகள் - பன்றிகள் முதலிய துஷ்டமிருகங்களும், அசுரர்- இராக்கதர் முதலாகிய துஷ்ட ஜனங்களும், பாம்பு முதலாகிய துஷ்ட ஜெந்துக்களும் நிறைந்திருந்தனர். மிகவுங் கொடுமைபொருந் திய பயங்கரமாகிய அவ்வனத்தைக் கண்டு, கண்ணன் அவ்வனத்தை நாசஞ்செய்ய வேண்டுமென்று மனதில் நினைத்தார். இப்படி நினைத்த கிருஷ்ணன் அவ்விடத்தை அர்ச்சுனனுக்குக் காண்பித்து, பின்பு இருவரும் ஸ்திரீகளோடுகூட அவ்வனத்தில் மற்றோர் இடஞ் சென்று, அவ்விடத்துச் சிங்காரங்களைப் பார்த்து விளையாட ஆரம் பித்தார்கள். அந்த ஸ்திரீகளும் மகா உல்லாசத்துடனே புஷ்பங் கள் பறித்து ஒருத்திமேலொருத்தி எறிகிறதும், தங்கள் நாயகர்மேல் வீசுகிறதும், நாயகர்கள் தம் மனைவிகளைப் பூச்செண்டுகளால் அடிக் கிறதுமாக நெடுநேரம் விளையாடிப் பின்பு பலவிதக் கனிகள் கிழங்கு கள் முதலானவைகளைத் தின்று மதுபானஞ்செய்து மதமடைந்து,

ஒருவரை யொருவர் அடிக்கிறதும், ஒருவர்மே லொருவர் வீழ்கிறதும், பாடுகிறதும், ஆடுகிறதும், சிரிக்கிறதும், பரிகாசஞ் செய்கிறதும், அழுகிறதுமாகத் தடாகங்களிலிறங்கி, ஜலக்கிரீடைசெய்து கரையேறி, அவர்க ளிஷ்டப்படி யமுனாநதியின் கரைகளிலிருக்கும் வனங்களிற்போய்ப் படுத்துக்கொண்டார்கள். ஸ்ரீகிருஷ்ணனும் அர்ச்சுனனும் தனியே தூரத்தில் யமுனையின் கரையின் ஓரிடத்திலே போய்ப் படுத்துக் கொண்டார்கள்.

இப்படி யிருக்குந் தருணத்திலே உருக்கின தங்கம்போன்ற நெடியதேகமும், பொன்னிறத்த கண்களும், செம்பொன் னிறமுள்ள தாடி மீசைகளோடு சடையுமுடையவனாகி, கறுத்த வஸ்திரமுடுத்துக், கோடிசூரியப் பிரகாசமாய் விளங்காநின்ற ஒரு பிராமணன் இந்தக் கிருஷ்ணார்ஜுனர்க ளிருக்குமிடத்திற்கு வந்தான். அவன் வரவைக்கண்ட அவ்விருவரும் பய பக்தியுடனே எழுந்து பணிந்து, "சுவாமி! நீரார்? எங்கே வந்தீர்? அதைச் சொல்ல வேண்டும்" என்ன, அந்தப் பிராமணனும் "மகாராஜ சிங்கங்களே! நானொரு பிராமணன். எனக்கு அதிகப் பசி. அதை ஆற்றும்படியாகிய சாப்பாடுபோட யாருக்குஞ் சக்தியில்லை. நீங்க ளிருவரும் மகாநுபாவர்களாகையால், எனக்கு வேண்டிய போஜனம் நீங்கள் கொடுக்கமாட்டுவீர்களென்று, உங்களிடத்திற்கு யாசிக்க வந்தேன்" என்று சொல்ல, அதுகேட்ட அர்ச்சுனன், "அப்படியா சுவாமி! மகா சந்தோஷமாயிற்று. என்ன போஜனம் உமக்கு வேண்டுமோ அதனைத் தடையின்றித் தருகிறேன்; தயைசெய்து சொல்லும்" என்று கேட்க, அந்தப் பிராமணன் "இராஜராஜர்களே! இனி நான் மெய்யாகச் சொல்லுகிறேன் கேளுங்கள்: நான் அக்கினி பகவான். அனேக துஷ்டஜந்துக்கள் வாசஞ்செய்கிற இந்தக் காண்டவவனத்தை நான்புசிக்க வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் இது இந்திரனுடைய ஆதீனத்தி லிருக்கிறது. அதில் தட்சகன் காவல் காத்துக்கொண் டிருக்கிறான். அதினாலே நான் அதின் அருகிற் போகக் கூடவில்லை. ஒருவேளை எப்படியாகிலும் அதில் நான் பிரவேசித்தால், இந்திரன் மேகங்களை மழை பொழியும்படி செய்து என்னைத் துரத்தி விடுகிறான். ஆதலால் அதில் நெடு நாளாய் நான் செய்யு முயற்சி வீணாய்ப் போகிறது. நீங்கள் மகா பல பராக்கிரமசாலிகள். அந்த இந்திரன் முதலானவர்களுடைய சாமர்த்தியத்தைத் தடுத்து அவ்வனத்தை எனக்கு ஆகாரமாக்குவீர்கள், நீங்கள் சொன்ன வாக்குத் தவறாமல் இவ்வனத்தைக்

கொடுத்து என் பசி யாற்றவேண்டும்'' என்று அக்கினிபகவான் சொன்னான்.

## அக்கினிபகவான் கிருஷ்ணார்ச்சுனர்களுக்குப் படைக்கல மளித்தல்

அதுகேட்ட அர்ச்சுனனானவன் ஆச்சரியமும் சந்தோஷமு மடைந்து, ஸ்ரீகிருஷ்ணன் முகத்தைப் பார்க்க, ஸ்ரீகிருஷ்ணனுஞ் சைகைசெய்ய, அதுகண்ட அர்ச்சுனன் அந்த அக்கினிதேவனைப் பார்த்துக் கைகூப்பிக்கொண்டு, "சுவாமி அக்கினி தேவனே! உமது இஷ்டப்படியே இவ் வனத்தை நீர் பட்சிக்கும்படி செய்வேன். இந்தக் கிருஷ்ணனும் நானும் சேர்ந்தால் எந்தக்காரியந்தான் முடியாது? ஆனால் இப்போது நாங்கள் ஆயுதமும் இரதமும் இல்லாதவர்களா யிருக்கிறோம். இந்திரன் ஆயுதம் முதலானவைகளோடு வந்தெதிர்த்தால், நாங்கள் ஆயுதங்களில்லாமல் எப்படி யுத்தம் பண்ணுவோம்? ஆகையாலே நீர் கிருபைசெய்து ஆயுதமும் இரதமுங் கொடுக்க வேண்டும்" என்று சொன்னான். அதுகேட்ட அக்கினிதேவன் வருணனை நினைத்தான். நினைத்த மாத்திரத்திலே வருணனும் அக்கினி யிருக்குமிடத்திற்கு வந்தான். அப்போது அக்கினி வருணனைப் பார்த்து, "ஓ வருண! முன்னே சோமதேவனாலே உனக்குக் கொடுக்கப்பட்ட, வில் - தூணி - தேர் - குதிரை - சக்கரம் - கதை முதலானவைகளைக் கொண்டுவந்து, இந்த மகானுபாவ ரிருவருக்குங் கொடு. இவர்களாலே நமக்கு வெகு காரியங்க ளாகவேண்டி யிருக்கின்றன" என்று சொல்ல, அதுகேட்ட வருணன் அப்படியே தருகிறேனென்று சொல்லி, மகா சந்தோஷத்தோடு முன்னம் வில்லை யெடுத்துக் கொடுத்தான்.

அந்த வில்லானது தேவர்களும் அசுரர்களும் ஒன்றாய் நெருங்கினாலும் வெல்லக்கூடாததாயும், மிகவும் ஆச்சரியப்படத்தக்க தோற்றமுடையதாயும், கையில் ஏந்துவோருக்குத் தேஜஸையும் புகழையுங் கொடுக்கத் தக்கதாயும், இது ஒன்றானாலும் பதினாயிரம் போன்றதாயும் விளங்கிற்று. பின்பு இரண்டு அம்புப்புட்டில்களைக் கொடுத்தான். அவை எத்தனை நாள் எத்தனைவகை அம்புக்களை யெடுத்தாலும் மறுபடி நிறைந்தேயிருக்கும். ஒரு

திவ்விய இரதங்கொடுத்தான். அதில் உருக்கிவிட்ட வெள்ளிபோன்ற நிறத்தையுடையதாய், தேவமணி - கண்டாபரணம் முதலான சகல அணிகளுடையவைகளாயும், வாயு - கருடன் - மனது - இவைகளைக் காட்டிலும் அதிக வேகமுடையவைகளாயுமிரா நின்ற நான்குகுதிரைகள் கட்டி, சிங்கத்தின் வால்போன்ற வாலை யுடைய வானர சிங்கமானது சத்துருக்களெல்லாம் பயந்தோடும் படி நுனியில் விளங்கா நின்ற பொன்னாலாகிய தடியிற்கட்டிய விசித் திரக் கொடியோடுங் கூடிப், பிரளயகால மேகத்தின் முழக்கம் போற் கிடுகிடென்று பூமியதிரும்படி யொலிக்கத் தக்கதுமாய், அனேக சாமக்கிரியைகள் வாய்ந்து, யாவராலும் வெல்லக்கூடாத சிறப்படைந்து விளங்கிற்று. அந்த இரதத்தை முற்காலத்திற் பவுன னென்கிற பிரஜாபதியானவர் உண்டாக்கிச் சோமனென்கிற தேவ னுக்குக் கொடுக்க, அதின்பேரில் அச்சோம னேறிக்கொண்டு அசுரரை யெல்லாம் ஜயித்தான். அப்படிப்பட்டதிவ்விய இரதத்தை அர்ச்சுனன் பார்த்துப் பிரதட்சணஞ் செய்து, அக்கினி தேவனை யும் வருணதேவனையும் நமஸ்காரஞ்செய்து, அதிலேறிக் கவச குண்டலாதிகளை யெல்லாந் தரித்துக்கொண்டு கையிற் காண்டீப மென்கிற அவ்வில்லைப் பிடித்துக் கோடிசூரியப் பிரகாசமாய் விளங்கி னன். பின்பு அக்கினி பகவான் ஸ்ரீகிருஷ்ண மூர்த்திக்கு ஒரு சக்கரா யுதங் கொடுத்தார். அந்தச் சக்கரமானது சுற்றிலும் ஆயிரம் அரங்க ளோடும், ஆயிரங் கிரணங்களோடுங்கூடிய சூரியன்போற் பார்ப் பதற்குங் கூடாத மஹாபிரகாசம் பொருந்தி, அனேககோடி அண்டங்கள் ஒன்றாய்த் திரண்டு வந்தாலும் பொடிப்பொடியாகக் குவிக்கும் படியான சக்தியுள்ளதாய், ஸ்ரீகிருஷ்ணனுக்கே இது உரித்தென்று சொல்லும்படி யிருந்தது. அன்றியும் அவருக்கு ஒரு கதாயுதமுங் கொடுத்தான். அது சுவர்னமயமாய், மேருபர் வதத்திற்கு நிகரானதாய், அசுரருடைய பிராண வாயுக்களைப் புசிக் கும் மஹாசர்ப்பமென்று சொல்லத்தக்கதாய் விளங்கிற்று. இப் படிக்கு வந்த இவ்வாயுதங்களெல்லாம் முன்னம் பிரம்மாவினால் நிருமிக்கப்பட்டன. அன்றியும் அக்கினிபகவான் இவ்விருவருக் குந் திவ்யமாகிய ஆக்கினேயாஸ்திரங் கொடுத்தார். உடனே கிருஷ்ணனும் அந்த இரதத்தின்மேலேறி, மகாதேஜசுடைய கவச குண்டலாதிகள் தரித்து, அர்ச்சுனனுடன்கூட விளங்கினார்.

இப்படிக்குச் சகல உபகரணங்களையும் பெற்று விளங்காநின்ற கிருஷ்ணார்ச்சுனர்களை அக்கினிதேவன் பார்த்து, "மகானுபாவர்

களே! இனி இவ்வுலகத்தில் உங்களுக்கு யார் சமானமாவார்கள்? கிருஷ்ணனுடைய ஆயுதத்தைப் பிரயோகிக்கத் தக்க இலக்கே கிடையாது. அர்ச்சுனனுடைய அம்புக்கு எதிரே நிற்கும்படியான வீரனுங் கிடையான். ஆகையால் நீங்களிருவரும் இனி எனக்குப் புசிக்கச் செலவுகொடுக்க வேண்டும்" என்று சொல்லவே, அர்ச்சுனன் மிகவுஞ் சந்தோஷத்துடனே கையிற் காண்டீபமென்னும் அந்த வில்லை யெடுத்து, நாண்பூட்ட, அந்த நாணோசை கேட்டமாத்திரத்திலே அந்தக் காண்டவவனத்திலிருந்த அசுரர்கள்-இராட்சதர்-முதலாகிய பேர்கள் "இதென்ன பிரளயகாலம்போ லிருக்கிறது" என்று நடுநடுங்கிப் போனார்கள். இவ்வாறாக அர்ச்சுனன் ஆயுத சன்னாகம் பண்ணிக்கொண்டு அக்கினிதேவனைப் பார்த்து, "ஓ செஞ் சுடர்த்தேவனே! இனி யெங்களுக்குக் கூடாதகாரிய மொன்று மில்லை. இந்திரன் அல்லது இன்னும் யார்தானாகட்டும் தெரியாமையாலே எங்களோடு யுத்தத்திற்கு வருவார்களேயானால், அது தான் அவர்களுக்கு முடிவுகால மென்று நினையும். அன்றியும் தேவர்களுடைய தேகங்களைக் கவசகுண்டலங்களற்று முண்டங்களாய் அறுந்து வீழ்ந்திருக்கப் பார்க்குங் காலமுமாகும் அது" என்று சொல்லி ஸ்ரீகிருஷ்ணனுடைய முகத்தை நோக்கிக் குறிப்பறிந்து மீண்டும் அக்கினிபகவானைப் பார்த்து, "ஓ வன்னித்தேவே! இனி நீர் வனத்திற் பிரவேசித்து உமது அலுவல்களை எல்லாந் தீரப் பாரும்" என்று சொன்னான்.

அந்தத் தேவனும் வெகு ஆனந்த மடைந்து, இவ்விருவரிடத்திலும் விடைபெற்று அவ்வுருவை விட்டுத், தேஜோமயமாய் அண்டக்கூடாத உஷ்ணமுள்ள ரூபமடைந்து பாய்ந்து அவ்வனத்திற் பிரவேசித்து க்ஷணகாலத்திலே அவ்வனமுழுவதுஞ் சூழ்ந்துகொண்டு, படபடவென்று மூங்கில்கள் முதலாகிய மரங்கள் வெடிக்கவும், அனேக மரங்கள் பொரிந்து கரிகரியாய் வீழவும், இராட்சதர் ஆகாசத்தில் நாக்கை நீட்டியதுபோற் சுவாலைகள் நாலுபக்கங்களிலும் விளங்கவும், அனேக ஜந்துக்கள் மகாபரிதாபப்பட்டு ஓடமாட்டாமலு மிருக்கமாட்டாமலும் பொரிந்து கரிந்து சாம்பராய்க் குவியவும், சிங்கம்-புலி-யானை-முதலாகிய மிருகங்களெல்லாம் வீறிட்டு மூலைமூலைக்கும் ஓடி எங்குந் தீச்சூழ்ந்துக்கொண் டிருக்கிறபடியினாலே சுருண்டு விழவும், அனேக ஜந்துக்கள் வேகும்போது அவைகளுக்குடைய தேகங்கள் வெடித்து அதிலிருந்த நீர் தெறிக்கவும், அந்தச் சில ஜெந்துக்கள் தாகம் பொறுக்கமாட்டாமல் நாக்கை

யேந்திக் குடிக்கவும், அப்போது அந்தத் தேகங்களும் முடிவில் தீக்கு இரையாய்விழவும், இவ்வாறுகப் பிரளயகாலம்போல் அவ் வனம் எரிந்து நாசமாய்ப்போக, அவ்வன முழுவதுஞ் சுற்றிக் கொண்ட தீயானது கனக நிறமாய் விளங்கும் மேருபருவதம்போல் விளங்கிப் பிரகாசித்துக்கொண் டிருந்தது.

---

## சுவேதகிராஜன் சரித்திரம்

---

இப்படிச் சொல்லிக்கொண்டு வரும் வைசம்பாயன மகா முனியை நோக்கி, ஜனமேஜய மகாராஜன் சொல்லுகிறுன்: "ஓ சுவாமி! அக்கினிபகவான் இந்தக் காண்டவவனத்தைத் தகிக்கக் கருதியதற்குக் காரண மென்ன? அதைத் தேவரீர் கிருபைசெய்து அருளிச் செய்யவேண்டும்" என்று வணங்கினுன். அதுகேட்ட வைசம்பாயனமுனிவர், "ஓ இராஜனே! அப்படியா சந்தோஷமா யிற்று. அதற்குக் காரணஞ் சொல்லுகிறேன் கேளும்: முற்காலத் திற் சுவேதகியென்று ஒரு மகாராஜன் இருந்தான். அவன் மகா தருமநிலை யுள்ளவன்; எப்போதும் யாகஞ்செய்கிறதும், தானஞ் செய்கிறதுமே தொழிலாயிருந்தான். இப்படியிருக்க அவனுக்கு ஒருகால் நூறுவருஷகாலம் ஒய்வில்லாமல் யாகம் பண்ணவேண்டு மென்கிற மனமுண்டாயிற்று. அதற்காக அவ்வரசன் நெடுநாளாய் யாகஞ் செய்விக்கும் பிராமணனைத் தேடி, எவர்களைப் பிரார்த்தித் தாலும் ஒருவரும் அங்கீகரிக்காமற்போக, அதனுல் அவன் மிகவும் விசனமடைந்து, ஆசிரமங்களிற்போய் அங்கிருந்த முனிவர்களைக் கண்டு, "சுவாமிகளே! அடியேனென்ன பாவியா? பெரியோர்களுக்குப் பணிவிடைசெய்யத் தகாதவனு? அல்லது உலோபியா? எந்தக் காரணத்தினுல் என்னிஷ்டப்படி நீங்கள் யாகஞ் செய்யமாட்டேனென்கிறீர்கள்? நான் அயோக்கியனென்று தோற்று மானுல் என்னைச்சாதிக்குப் புறம்பாக்கிவிடுங்கள். யோக்கியனென்று தோற்றுமானுல் யாகஞ்செய்வியுங்கள்" என்று சொல்லியதைக் கேட்ட அந்த முனிவரெல்லாரும் "அரசனே! ஒருகாலும் நீ பாவி யல்ல; பெரியோர்களை யாதரிக்காதவனுமல்ல; உலோபியுமல்ல; யோக்கியன்தான். ஆனுல் உன்னிஷ்டப்படி யாகஞ் செய்விக்காமற் போவதற்குக் காரணம் யாதெனில், நூறுவருஷகாலம் நித்திரை முதலானவைகளைத் துறந்து வருத்தப்படமாட்டாமைதான். நாங்க

ளெல்லாரும் தவங்களினுலே வாடியிருக்கிறேம். ஆகையால் இந்த வருத்தத்தையுஞ் சகிக்கமாட்டோம்" என்று சொல்ல, அரசன் அதுகேட்டு, ஆனல் நினைத்த யாகத்தை விட்டுவிடுகிறதா ? உங்களை நான் பலவாறு கேட்டுக்கொண்டும் உள்ள மிரங்கவில்லையே. நான் இப்படி அநியாயமாய்ப் போகலாமா?" என்று கூவினன். அந்த ரிஷிகள் ஏது இவன் பிடிவாதக்காரனயிருக்கிறனென்று நினைத்து அவனைப் பார்த்து, "இராஜனே! நீ யென்ன சொன்னலுஞ் சரி, எங்களா லாகாது. அப்படி உனக்கு அவசியமாய் அந்த யாகஞ் செய்யவேண்டுமென் றிருந்தால், சிவனைப் பணிந்து கேள். அவர் உன்னிஷ்டத்தை நிறைவேற்றுவார்" என்று கூற, அந்த வேந்தனுஞ் சீக்கிரமாய்க் கைலாசபருவதத்திற்குப்போய், மகாநியமத்தோடு சிலகாலம் பன்னிரண்டுநாட்களுக்கொருதரம் போஜனஞ் செய்கிறதும், சிலகாலம் பதினறுநாட்களுக் கொருதரம் போஜனஞ் செய்வதுமாகி, ஆகாரத்திலுங் காய் கிழங்குகளே யல்லது வேறில்லாமல், முக்காலங்களிலும் ஸ்நானஞ் செய்து, இரவுபகலறுபது நாழிகையும் கைலாசபதியாகிய சிவபெருமானைக் குறித்துத் தவம் பண்ணிவந்தான்.

இப்படிக்கு ஆறுமாதந் தவஞ்செய்யவே உருத்திரமூர்த்தி பிரசன்னமாய் வந்து, அந்த அரசனைப் பார்த்து, "ஓ அரசனே! உன் தவத்தினுலே சந்தோஷப்பட்டேன்; உனக் கென்னவேண்டுங் கேள்" என்ன, "யான் நினைத்த யாகம் நிறைவேற்றவேண்டும்" என்று அரசன் சொல்ல, அதற்குப் பரமசிவன் கொஞ்சம் புன்னகைகொண்டு, "அரசனே! யாகஞ்செய்விக்கிறதைக் குறித்து நமக்கு அதிகாரமில்லை. ஆகிலும் நீ நம்மைக் குறித்து அரிய தவஞ் செய்தாயாகையால், எப்படியாகிலும் யாகத்தை நிறைவேற்றுகிறேன். அதற்கு ஒரு காரியம் நீ செய்யவேண்டும். அதாவது பன்னிரண்டு வருஷங்கள் நீ சகல நியமங்களோடுங்கூடி மகா பரிசுத்தனகி, யானையின் துதிக்கையளவாகிய நெய்யின் தாரையாலே ஓய்வில்லாமல் அக்கினியைத் திருப்தி பண்ணவேண்டும். இப்படிச் செய்தபின் உன்னிஷ்டஞ் சரியாய் நிறைவேற்றப்படும்" என்ன, அந்த அரசனும் அப்படியே பன்னிரண்டு வருஷங்கள் மகா விரதத்தோடு நெய்யினல் அக்கினிக்கு ஆகுதிசெய்து வந்தான். பரமசிவமூர்த்தியானவர் மீண்டும்அவனிடத்துக்கு வந்து சந்தோஷப்பட்டு, "ஓ அரசனே! நீ மகாயோக்கியன்; நான் நேரில் யாகஞ் செய்விக்கக் கூடாது. ஆனல் நம்முடைய அம்சத்தினுற் பிறந்த

தூர்வாசர் என்கிற ஒரு மகாரிஷி யிருக்கிறார். அவர் உனக்கு யாகஞ்செய்விப்பார்" என்று சொல்லித், தூர்வாசரை யழைத்து; "முனிவரே! நீர் இந்த அரசனின் இஷ்டப்படி யாகஞ்செய்யும்" என்று கட்டளையிட, "அந்த ரிஷியும் அப்படியே செய்கிறேன்" என்று அரசனிடத்தில் வந்து வேண்டியவைகளைச் சீக்கிரத்திற் சம்பாதியுமென்று சொல்லிப்போய்த் தகுந்த பிராமணர்களை யழைத்து வந்தார். அரசனும் சகல சாமக்கிரியைகளையுஞ் சித்தம் பண்ணிக்கொண்டு தீக்ஷையடைந்து, அந்த ரிஷியைக்கொண்டு யாகத்தை நிறைவேற்றி; அவர்களுக்கெல்லாம் தகுந்த தட்சணைகொடுத்துப் பூசித்து அனுப்பிவிட்டான். அதனாலே அக்கினிபகவான் அக்கினி மந்தப்பட்டு, அற்பமாகிய தேஜசுடையவனாகி, வலிமையில்லாமல் நோய்பிடித்துப், பிரம்மாவின் சபைக்குப்போய் அவரைத் தண்டனிட்டு, "சுவாமி! அடியேனுக்கு ஏனிப்படி தேஜசும் பலமுங் குறைந்துபோயின? இதற்கு நானென்ன செய்யவேண்டியது? எப்படியாகிலும் நான் முன்போல ஆகும்படி அனுக்கிரகஞ் செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க, அதற்குப் பிரமன் புன்னகை செய்து, "ஓ அக்கினி! நீ பன்னிரண்டு வருஷகாலம் ஓய்வில்லாமல் நெய்யை யுண்டபடியினாலே, உனக்கு அக்கினி மந்தப்பட்டு இப்படிப்பட்ட நோய் சம்பவித்தது. இதற்குப் பரிகார மென்னவென்றால் முன்பு நீ சாம்பலாக்கிப் போட்ட காண்டவ வனமானது மிகவுஞ் செழிப்பாய் வளர்ந்து, அநேக துஷ்டஜந்துக்களுக்கும் இருப்பிடமா யிருக்கிறது. அதை மறுபடியும் நீ புசிப்பதுதான் இந்த நோய்க்குப் பரிகாரம். ஆகையால் விரைவில் அவ்வனத்தைப் புசித்துவிடு" என்று கட்டளை யிட அதுகேட்ட அந்த அக்கினிபகவான் மிகவுஞ் சீக்கிரமாய்ப் பூமிக்கு வந்து, அந்த வனத்தை நாற்புறத்துங் கவிந்து சூழ்ந்துகொண்டான்.

இப்படிச் சூழ்ந்துகொள்ளவே அந்த வனத்திலிருந்த யானைகளெல்லாந் துதிக்கைகளாலே நீரைக்கொண்டு சொரிந்தும், அநேக தலைகளுள்ள நாகங்கள் வாய்களால் ஜலங்களைமொண்டு பொழிந்தும், மற்று மதிலிருந்த அநேக ஜந்துக்களும் இவ்வாறு நானாவித உபாயங்களைக்கொண்டு அக்கினியை அணைக்கும்படியான பிரயத்தினம் செய்ததினாலே அக்கினிதேவன் அவ்வனத்தை யெரிக்கமாட்டாமல் வெகு கஷ்டப்பட்டான். பின் மீண்டுமவன் மிகுந்த ஜுவாலைகளோடுங் கூடி யெரிக்க ஆரம்பிக்க, அந்த ஜந்துக்களும் அணைக்க ஆரம்பிக்க, இவ்விதமாய் ஏழுதரம் அக்கினி

யானவன் யத்தனப்பட்டும் உடனுக்குடனே அணைக்கப்பட்டபடியாலே, அக்கினி விசனத்தையும் வாட்டத்தையு மடைந்து, பிரம்மாவினிடத்திற்குப்போய் நடந்ததையெல்லாம் விண்ணப்பஞ்செய்ய, அதுகேட்ட பிரம்மாவானவர் ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்து, அக்கினிதேவனைப் பார்த்து, "நீ காண்டவவனத்திற் பிரவேசிப்பதற்குத் தகுந்த உபாயமொன்று இப்போதுதான் எனக்குத் தோன்றிற்று. அஃதென்னவென்றால் நரநாராயணர்க ளிருவருந் தேவகாரியத்திற்காகப் பூலோகத்தில் அர்ச்சுனனாகவும் - கிருஷ்ணனாகவும் அவதரித்திருக்கிறார்களல்லவா? அவர்களிப்போது காண்டவவனத்தின் சமீபத்தில் வந்திருக்கிறார்கள். அவர்களை உனக்குச் சகாயஞ் செய்யும்படி பிரார்த்தித்து ஏற்படுத்திக்கொண்டாயானால், நீ எளிதில் அவ்வனத்தை எரிக்கலாம். அவ்விருவருந் தேவரெல்லாருந் திரளாய் வந்தெதிர்த்தாலும் வெல்லத்தக்க வல்லமையுடையவர்கள். சீக்கிரமாக நீ போய் அவர்களை அடைவாய்" என்று சொன்னான். அதைக்கேட்டு அக்கினிதேவன் வந்து அவர்களை அடைந்ததும், அதற்கவர்கள் அவனை ஆதரிக்க ஆயுத முதலியவைகள் கேட்டதும், அவன் அவ்வாறே கொடுத்ததும் பின்பு அவனை ஏவியதும், அவன்போய் எரித்ததும் — என்று வைசம்பாயனர் சொல்லிமுடித்து, அதற்குமேல் நடந்த சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கினர்.—

இவ்வாறாக அக்கினியானவன் வனத்தைச் சூழ்ந்துகொண்டு எரிக்க, கிருஷ்ணனும் அர்ச்சுனனும் தேரின்மேலேறி நான்கு திக்குகளிலும் சுற்றிக்கொண்டு, அவ்வனத்திலிருந்த ஜந்துக்கள் அப்பாலுமிப்பாலும் ஓடிப்போகவொட்டாமல் துரத்தி அடித்து அவ்வனத்திலேயே இருக்கச்செய்து வந்தார்கள். அதனாலே அக்கினியானவன் பயமற்றவனாய், உற்சாகத்துடனே வனமுழுவதையுந் தகித்தான். அவ்வனத்திலிருந்த ஜந்துக்களிலும் மரமுதலானவைகளிலும் சாம்பராகியவை சில; தேம்பலாயினவை சில; கரிந்துபோயினவை சில; பொரிந்துபோயினவை சில; எரிந்துபோயினவை சில; விரிந்துபோயினவை சில; பாதி யெரிந்து முறிந்தவை சில; மோதி விழுந்தெரிந்தவை சில; சிதறிப் போயினவை சில; பதறிப்போயினவை சில - இப்படியாகவே சில ஜந்துக்கள் குட்டிகளைக் கட்டிக்கொண்டும், சில ஜெந்துக்கள் தாய்களிடம் ஒட்டிக்கொண்டும், சில ஜந்துக்கள் தந்தையைப் பற்றிக்கொண்டும், சில ஜந்துக்கள் வெந்ததைச் சுற்றிக்கொண்டும், சில ஜந்துக்கள் ஓடவிடமில்லாமற் கதறி

யழுதுகொண்டும், சில ஜந்துக்கள் நாட விடமில்லாமற் பதறி உதறிக்கொண்டும், சில ஜந்துக்கள் மொத்தை மொத்தையாய் வெந்து கொண்டும், சில ஜந்துக்கள் பத்தல் பத்தலாய் நொந்து கொண்டும், சில ஜந்துக்கள் பரிதாபமாகப் பற்களைத் திறந்துகொண் டும், சில ஜந்துக்கள் பயப்பீதியினால் நாக்குகளை நீட்டிக்கொண்டும், சில ஜந்துக்கள் உயரவெழும்பி அவ்வனத்தின்மேற் கொழுந்து விட்டெரிகின்ற அக்கினிச் சுவாலைகளாலே கொளுத்தப்பட்டுக், கீழே விழுந்திறந்தும், சில ஜந்துக்கள் சிறகெரிந்து பறந்துபோக மாட்டாமல் அவ்விடத்திலேயே புரண்டுமடிந்தன. அவ்வனத்தி லிருந்த தடாகத்து நீரானது கொதித்துப்போகவே மீன் - ஆமை முதலான நீர்வாழு முயிரெல்லாஞ் சமைந்துபோயின. அவ்வனத்திலிருந்த புதர்களெல்லாம் பஸ்மீகரித்துப் போகவே அவற்றிலுள்ள நாகம் - தேள் முதலான மண்வாழு முயிரெல்லாங் குமைந்துபோயின. இவ்வாறு ஊழிக்காலத்துண்டாகும் வடவை யைப்போல் நாற்றிக்குகளையும் வளைத்து எரிக்கின்ற அக்கினி யானது எந்தெந்த ஜந்துக்கள் தன்னிடத்தில் மடிகின்றனவோ அந்தந்த ஜந்துக்களின் ரூபங்கொண்டு விளங்கியது. பலமுள்ள சில ஜீவன்கள் வெகுவேகத்தோடு ஆகாயத்தில் எழும்ப, அர்ச் சுனன் அவைகளையெல்லாம் அம்புகளாற் சூழ்த்திக் கனலிலே வீழ்த்தினன்.

---

## தேவர்கட்கும் அர்ச்சுனனுக்கும் யுத்தம்

---

இந்தப்படி ஆகாசத்திலும் பூமியிலு மிருக்கும் வஸ்துக்க ளெல்லாம் பொரிந்து போகும்படியாக அனலானது அவ்வனத் தைச் சூழ்ந்து நாசஞ்செய்ய, தேவர்களெல்லாருஞ் சகிக்கமாட்டா மல் இந்திரனிடத்திற்குப்போய், "தேவந்திரனே! உமது காவலி லிருக்கின்ற காண்டவவனத்தை அக்கினியானவன் அதிலிருக் குஞ் சகல சராசரங்களோடுகூடச் சாம்பராக்குகிறான். ஐயோ! இதென்ன பிரளயகாலம்? மூன்று லோகமும் வெந்து போகத் தக்கதா யிருக்கிறதே!" என்று முறையிட, அதுகேட்ட தேவ ராஜன் ஓடிவந்து பார்த்து, மிகுந்த விசனத்தையுங் கோபத்தையு மடைந்து, அவ்வனத்திற்கு வந்த ஆபத்தை நீக்கவேண்டுமென்று மேகங்களை யெல்லாங் கூப்பிட்டு, ஆகாசத்தைக் கவிந்து நாற்றிசையி

லும் பெரிதாகிய தாரைகளாக வருஷிக்கும்படி கட்டளையிட்டான். அவைகள் பெய்யும் மழைகளெல்லாம் அவ்வனலின் உக்கிரத்தினாலே நெய்யாகுதி கொடுக்குந் தன்மைபோல் உறியப்படவும், அதுகண்ட இந்திரன் மீண்டும் பிரளயகால மேகங்களைக்கொண்டு பெருமழை பொழியச்செய்ய, அந்த மழைநீரினாலே அவ்வக்கினியொரு பக்கத்தி லணைய, அதனாலே பெரும்புகை யெழும்பிச்சூழ, அப்புகையினாற் சிற்சில ஜந்துக்க ளிறந்தன. இவ்விதமாக இந்திரன் மழைபொழிந்து அனலை அவிப்பதைக் கண்ட அர்ச்சுனனனவன் கோபாக்கினியோடு சரமாரி பொழிந்து அவ்வனத்தில் ஈ-கொசுகு முதலியன உள்ளே நுழையாதிருக்கும்படியும், உள்ளேயிருந்த உயிர்ப்பிராணிகள் வெளிப்படா திருக்கும்படியும், அவ்வனத்திற்குச் சரக்கூடு கட்டிவிட்டான். அதைக்கண்ட தேவர்களும் ரிஷிகளும் ஆச்சரிய மடைந்தார்கள். அப்போது அவ்வனத்திலிருந்த தக்ஷகனென்னும் நாகராஜன் குருக்ஷேத்திரத்திற்குப் போயிருக்க, அவனுடைய குமாரனாகிய அசுவசேன னென்பவன் சிறுவனாகையினாலே தவித்துத் தாயைப்போய்க் கட்டிக்கொள்ள, அந்த நாககன்னியுங் குட்டியை வாயினால் தலைமுன்னதாக விழுங்கிக்கொண்டு வெளியிற்போகப் புறப்படுமளவில், அர்ச்சுனன் தீக்ஷண்யமாகிய ஓர் அம்பினாலே அப் பெண்பாம்பினுடைய தலையை யறுத்துப்போடவே, அந்த அசுவசேன னென்கிற பாம்புக் குட்டியானது அந்தரத்தில் தவிக்க, அதுகண்ட இந்திரன் பெருங்காற்றோடுங் கூடி மழையொன்று உண்டாக்கி, அர்ச்சுனனுக்குத் திப்பிரமை யுண்டாகச் செய்து, தன் தோழன்பிள்ளையாகிய அசுவசேனனைத் தப்பிப் போகும்படி காப்பாற்றினன்.

பின்பு அர்ச்சுனன் இந்திரன் செய்த மாயத்தைக்கண்டு மிகவுங் கோபமடைந்து, ஆகாயத்தி லெழும்பும் பட்சி முதலானவைகளை அர்த்தசந்திர பாணங்களாலே இரண்டு மூன்று துண்டுகளாகத் துண்டித்து, தனது இலக்குக்குத் தப்பிப்போன பாம்புக்குட்டியை மிகவுங் கோணலாகச் சஞ்சரிக்கும்படி சபித்தான். கிருஷ்ணனும் அக்கினியைப் பார்த்து, "நீ அக்கொடியபாம்பை விட்டுவிட்டபடியால் ஓரிடத்திலும் நிலையில்லாதவனாகக் கடவாய்" என்று சபித்தார். அப்போது அர்ச்சுனனனவன், ஆகாசத்திலிராநின்ற இந்திரனைப் பார்த்து, அவன் பாம்புக்காகச் செய்த வஞ்சனையால் மிகுந்த கோபத்துடனே அவன் பேரில் அம்புகளைத் தொடுத்துவிட, இந்திரனும் மகாகோபமடைந்து ஓர் அஸ்திரத்தைப் பிர

யோகிக்க, அந்த அஸ்திரமகிமையினாலே ஊழிக்காலத்தின் காற்றுக்குச் சமமாகிய பெருங்காற்றும் - வானமிடிந்து விழுகின்றதென்று சொல்லும்படியாகப் பயங்கரமான இடிமுழக்கமும்-ஜனங்களுடைய கண்கள் சிதறிப்போகும் படியாகப் பிரகாச வேகமுடைய மின்னல்களும் - கறுத்த மலைகள்போன்ற மேகங்களும் உண்டாகி, ஆகாசமெல்லாங் கம்மிக்கொண்டு, ஒரு நிமிஷத்திற் பூலோகம் நீரிலமிழ்ந்துபோகத் தக்கதாகிய பெருமழை பொழிய, அதனாலே அக்கினியானவன் ஜ்வாலைகளடங்கிப் புகைசூழ்ந்து பரிதாபப்பட்டு நிற்க, அதுகண்ட அர்ச்சுனன் மிகுந்த ஆக்குரோஷத்துடனே வாயுவாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்ய, அந்த வாயுவாஸ்திரத்தின் வேகத்தினாலே மேகங்களெல்லாம் மூலைக்கு மூலை சிதற அடிக்கப்பட்டு, மழை நீரெல்லாம் வற்றிப்போய்ச், சுபாவமாய் அந்தந்த வஸ்துக்களிலிருந்த ஈரங்களு முலர்ந்து, ஆகாசம் நிர்மலமாகி மகா உக்கிரமாகச் சூரியன் பிரகாசிக்கவே, அக்கினி பகவான் மிகவுஞ் சந்தோஷத்துடனே வளர்ந்து, மிருகங்கள் - பக்ஷிகள் - அசுரர்கள் முதலாகிய ஜந்துக்களுடைய தேகங்களினின்று ஒழுகாநின்ற சிலைத்தண்ணீர் முதலான ரசங்களாகிய நெய்களால் ஆகுதியடைந்து, ஒரு நிமிஷத்தில் முன்போல் வனமுழுவதுஞ் சூழ்ந்தெரித்தான்.

இப்படிக் கிருஷ்ணார்ச்சுனருடைய பலத்தினால் அக்கினிதேவன் இவ்வனத்தை நாசஞ்செய்துகொண் டிருக்க, அதிலிருந்த நாகர்-கருடர் - முதலானவர்களெல்லாரும் இவ்விரண்டு வீரரையுங் கொல்ல வேண்டுமென்று பயங்கரமான ரூபங்களோடு எழும்பி ஆகாசத்தில்வர, அதுகண்ட அர்ச்சுனன் அந்த நாகர் கருடர்களைக் கூர்மையான அம்புகளினாலே துண்டுதுண்டா யறுத்து அந்த அனலிலேயே ஆகுதிசெய்ய, அதுகண்ட தேவர்களுங் கந்திருவர் - கின்னரர் - இயக்கர் - முதலானவர்களும் மிக வெகுண்டு, கத்தி - கேடயம்-தண்டு-வில்-சக்கரம்-சூலம் முதலான சகல ஆயுதங்களு மேந்தி, முடிவுகாலத்துக் கடலொலிபோற் சிங்கநாதஞ் செய்துகொண்டுவந்து வானமெல்லாம் நிறைய நின்றார்கள். பின்பு அவர்களெல்லாரும் ஒருங்கே தங்கள் தங்கள் வல்லமைக்குத் தக்கபடியொரு கணப்பொழுதில் அவ்விரண்டு வீரரு மிருக்கு மிடங்கூடத் தெரியவொட்டாமல் ஆயுதங்களை வீசி நிரப்ப, அந்தக் கிருஷ்ணார்ச்சுனரிருவரும் தங்களுடைய சாமர்த்தியத்தினாலே அவைகளையெல்லாம் நீக்கிக்கொண்டனர். பின் அர்ச்சுனன் அந்தத்தேவர்கள் முத

லானவர்களையும், கிருஷ்ணன் அசுரர் முதலானவர்களையும், அம்புகளினாலும் - சக்கரத்தினாலும் - கைவேறு - கால்வேறு-தலைவேறு - உடல்வேறாகச் சின்ன பின்னமா யறுத்துச் சிதைத்தனர். சிதைக்கவே சிலதுண்டங்கள் ஆகாசத்திலெழும்பி விழவும், சில முண்டங்கள் பூமியில் விழுந்து சிதறவுமாகத், தேவாசுர சைனியங்களெல்லாம் எழும்பிவருஞ் சமுத்திரங்கள் பெரு மலைபோன்ற கரைகளால் தடுக்கப்பட்டு வேகமோய்ந்து பின்னிடுவதுபோல், ஒன்றுஞ் செய்ய மாட்டாமற் பதைபதைத்துப் புறமுதுகிட்டு ஸ்தம்பமாய் நிற்கவே, இந்திரன் வெள்ளிமலைக்கு நிகராகிய ஐராவதமென்னும் யானையின் மேலேறி, வஜ்ராயுதத்தைக் கையிலேந்தித் தன் சேனையைப் பார்த்து, "நீங்கள் ஏன் பின்னிடுகிறீர்கள்? பயப்படாதேயுங்கள். மானிடருக்கு நாம் பயப்படுகிறதா? வாருங்கள் அவர்களைப் பிடித்துச் சிதைத்துப் போடுவோம்" என்று சொல்லி ஆகாசத்திலுலவுஞ் சிங்கம்போற் பாய்ந்து வந்தான்.

இவ்வாறு இந்திரன் வஜ்ராயுத மெடுத்துப் பாய்வதைக் கண்டு உற்சாகமடைந்த யமன் காலதண்டத்தையும், குபேரன் சிவிகை யென்னும் ஓர்விதக் கத்தியையும், வருணன் பாசத்தையும், அசுவனிதேவர்கள் எரிந்துகொண்டிருக்கும் ஒஷதிகளையும், தாதா என்பவன் தநுசையும், ஜயனென்பவன் உலக்கையையும், துவஷ்டா என்பவன் பருவதத்தையும், மிருத்தியு கண்டகோடரியையும், சூரியன் பயங்கரமாகிய பெருந்தடியையும், மித்திரன் என்பவன் சக்கரத்தையும், பூஷா என்பவன் வில்லையும், பகன் என்பவனும்-சவிதா என்பவனும்-கத்திகளையும் எடுத்துக்கொண்டனர். பின்னும் ஏகாதசருத்திரரும்-அஷ்டவசுக்களும்-சப்தமருத்துக்களும் - விசுவதேவரும் - சாத்தியரும்-தத்தம் தேஜோமயமாகிய ஆயுதங்களை எடுத்துக் கொண்டனர். எல்லோரும் கிருஷ்ணார்ச்சுனர்களைக் கொல்லவேண்டுமென்று துரத்திக்கொண்டு வந்தார்கள். இவ்விதமாகத் தேவரெல்லாரும் ஒன்றாய் வரக்கண்ட அவ்விரண்டு வீரரும் அஞ்சாமல், தைரியத்துடனே விற்களையெடுத்து வளைத்து நாண் பூட்டி நாணைசைகொண்டு, விசித்திரமான அம்புகளைத் தொடுத்து, ஆயிரம் பதினாயிரமாக வருஷித்துத் திரண்டுவரும் வெள்ளத்தை அணைபோட்டுத் தடுப்பதுபோல் அந்தத்தேவர் சேனையைக் கைகாலசைக்கவொட்டாமலும், அவர்கள் விடும் ஆயுதங்கள் அவர்கண் மேலேயே விழும்படியாகவும் அடித்துவர, அதை ஆகாசத்தில் வந்திருந்த முனிவர்கள் பார்த்து, "இஃதென்ன ஆச்சரியம்

தேவர்களை அலட்சியமாய் எதிர்த்து வெற்றிபெறும் வீரரைப் பூமியில் நாம் எப்பொழுதுங் கண்டதில்லை. ஆனு லிவர்கள் சாக்ஷாத் நரநாராயணர்களா யிருப்பதால் இப்படிப்பட்ட சக்தி இவர்களுக்குண்டாயிற்று. இனி இவர்களோடு தேவர்கள் யுத்தம் பண்ணுவது வீண்'' என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.

இப்படியிருக்க, தேவர்கள் கிருஷ்ணார்ச்சுனர்களுடைய பாணங்களுக்கு எதிர்நிற்க மாட்டாமற் பயந்து இந்திரனிடத்திற் செல்ல இந்திரன் இவ்விருவருடைய சாமர்த்தியத்தைக்கண்டு வியந்து மறுபடியு மிவர்களுடைய நிர்வாகத்தை முற்று மறிவோமென்று எல்லாத் தேவர்களையுங் கூட்டிக்கொண்டுவந்து மிகவுமதிகமாகிய கல்மாரிபொழிய, அதுகண்ட அர்ச்சுனன் உக்கிரமான அனேக பாணங்களைத் தொடுத்துவிட்டு, அந்தக் கல்மாரியைத் தடுத்துக் கற்களைப் பொடியாக்கித் திக்குகள்தோறும் வீழ்ந்து பரவும்படியாகப் பறக்கவடித்தான். அப்போது தேவராஜன் தன்முயற்சி வீணுய்ப் போனதைக் கண்டு மறுபடியும் மலைமலையாய்க் கல்மழை பொழிவித்தான். பின்னும் அர்ச்சுனன் அனேகமாயிரம் பாணங்களைவிட்டு அந்த மலைகளைத் துண்டித்துத் தள்ளினுன். அந்த மலைத்துண்டங்க ளானவை ஆகாசமிடிந்து அதின் துண்டங்கள் சூரிய சந்திர நக்ஷத்திரங்களுடனே கூடிக்கொண்டு விழுந்தா லெப்படி யிருக்குமோ அப்படி பலவர்ணமும் பளபளப்புமுள்ள கல் முதலானவைகளோடு கூட அந்தக் காண்டவ வனத்திலேயே விழ, அவைகளினுலே அவ்வனத்திலிருந்த அசுரர்கள்-இராக்கதர்கள்-இயக்கர்கள் - பிசாசர்கள்-பூதர்கள் - நாகர்கள்-சிவிங்கிகள் கரடிகள்-புலிகள்-யானைகள்-சிங்கங்கள் - எருமைக்கடாக்கள்-ரிஷபங்கள்-முதலாகிய ஜந்துக்களெல்லாம் நசுக்குண்டு நாக்கைக் கடித்துக்கொண்டவை சில, கண்பிதுங்கினவை சில, மண்டையுடைந்தவை சில, தொண்டை யடைந்தவை சில, காலொடிந்தவை சில, கையறுந்தவை சில, கழுத்தறுந்தவை சில, குடல் பிதுங்கினவை சில, உடலற்றவை சில, இப்படியாக நாசமடைந்து கதறிக் கூவித் தீப்பட் டெரிந்து போயின. சில ஜெந்துக்கள் எழும்பி அவ்வனத்தை யெரிக்கும் அக்கினியினுடைய படபடாத்கார வோசையைக் காட்டிலு மதிகமாய் ஆகாச மிடியும்படியாகக் கூச்சலிட்டுக், கையி லாயுதமேந்தி வன்மெரிந்துகொண் டிருப்பதைச் சந்தோஷமாய்ப் பார்த்துக்கொண் டிராநின்ற கிருஷ்ணார்ச்சுனர்கள்மேற் பாய, ஸ்ரீகிருஷ்ண

மூர்த்தியானவர் தேஜோமயமாய் விளங்காநின்ற தமது சக்கராயுதத்தைப் பிரயோகஞ்செய்ய, அந்தச் சக்கராயுதமானது அசுரர் - இராக்ஷதர்-பிசாசங்கள் முதலியவர்களின் தேகங்களைச் சிதைத்து நெருப்பில் தள்ளி மறுபடியுங் கிருஷ்ணனுடைய கையில் வந்தேறிக் கொண்டது. இப்படியே அவ்வனத்தில் நின்றுந் துஷ்டப்பிராணிகள் எழும்புந்தோறும் அந்தச் சக்கராயுதமானது கிருஷ்ணனால் விடப்பட்டு அவைகளை நாசஞ்செய்து, அவ்வுதிரங்களினாற் பூசப்பட்ட நிறத்துடன் தன்னை யேந்துவோன் கையிற் பொருந்திக்கொண் டிருந்தது.

இவ்வாறாகப் பிரளயகால உருத்திரன்போல் விளங்குங் கிருஷ்ணனையும் அர்ச்சுனனையும் பார்த்த தேவர்களும் அசுரர்களும் பயந்து நடுநடுங்கி, நாவுலர்ந்து, மெய்சோர்ந்து, மிரளமிரள விழித்துக்கொண்டு, அசேதனப் பிராணிகள்போல் அசைவற்று நின்றார்கள். இவ்விதமாக அக்கினியை யவித்து அவ்வனத்தைக் காக்க முயற்சி யெவ்வளவு செய்தும், பயன்படாமல் அடிபட்டு வேதனையடைந்த அத்தேவர்கள் முதலாயினோர் திரும்பி யோடினார்கள். தேவேந்திரன் கிருஷ்ணார்ச்சுன ரிருவரையும் பார்த்து, ஒரு பக்கத்தில் துக்கமும் - ஒரு பக்கத்தில் அவமானமுங்கொண்டு மயங்கி நிற்குமளவில், ஆகாசத்தில் அசரீரி தோன்றி, அந்தத் தேவராஜனைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லிற்று—"ஓ தேவராஜனே! நீ உனது சினேகிதனாகிய தக்ஷகனைக் குறித்து மிகவும் விசாரப்படுகிறாய். அப்படி விசாரப்படவேண்டாம். இவ்வனம் தீப்படுங்காலத்தில் அவன் குருக்ஷேத்திரம் போயிருந்தானாகையால், இத்தீயினால் அவன் சாகவில்லை. அன்றியும் மனிதராலே நமக்கு அவமானம் வந்ததென்று விசாரப்படுகிறாய். அதையும் விட்டுவிடு. இதோ நீலமேகம்போற் கறுத்த திருமேனியும், மின்னற்கொடிபோல் விளங்கும் பீதாம்பரமும், பரந்துயர்ந்த மார்பிற் சூரியன்போன்ற இரத்தினாபரணமும், நீலத்தூண்கள் போல் முழங்காலளவு நீண்டுதிரண்ட திருக்கைகளும், அன்று பூத்த செந்தாமரை மலர்களுக்கொப்பாகிய திருக்கண்களுமாய்க் கையிற் சுவாலைகளாகிய மாலைகளால் விளங்காநின்ற சக்கரமேந்தி நிற்கிறவர் யாரென்றால், இவ்வுலகங்களையெல்லாம் படைத்து அளித்து அழிக்கும் பரம்பொருளாகிய ஸ்ரீநாராயணமூர்த்தி. அவர் பக்கத்தில் ரூபத்திலும் பலத்திலும் அவரோடொத்து, கையிற் காண்டீபமென்னும் பெரிய வில்லை யேந்திக்கொண்டு, தக்ஷகனுடைய யாகத்தை யழிக்துங்காற்

பிநாகமென்னுந் தனுசையேந்தி உக்கிர ரூபங்கொண்ட வீரபத்திரர் போற் கோபாவேசங் கொண்டிருக்கிறவர், அவருடைய அமிசம் பெற்ற சேஷனாகிய நரனென்பவர். இவ்விருவரோடும் சண்டை செய்து வெற்றிபெற யார்வல்லவ ராவார்கள்? வீணாக ஏன் எதிர்க்கிறாய்? ஒருபோதும் இவர்களுடைய எண்ணத்தைத் தடுக்கக் கூடாது. இவர்களுடைய ஸ்வரூபமும் - பலமும் - பராக்கிரமும் - உனக்கு நன்றாகத் தெரிந்திருக்க, நீ தெரியாதவன்போல் யுத்தஞ்செய்ய வந்தாய்! துஷ்டநிக்கிரகமுஞ் சிஷ்டபரிபாலனமுஞ் செய்வதற்காக அவதரித்த இந்த மகாநுபாவர்களைப் பூசிப்பதே மேன்மையானது; எதிர்ப்பது நன்மையன்று. உன்னதமாகிய இவ்வனமும் அழிந்து போகிறதென்று விசனப்படவேண்டாம். இவ்வனமும் இதிலுள்ள ஜந்துக்களும் அழியவேண்டிய விதியை யோசித்துப் பார்த்துச், சுகமாய்ச்சுவர்க்கம் போய்ச்சேர்" என்று சொல்ல, அது கேட்ட இந்திரன் யோசித்துப் பார்த்து, சரிதானென்று நினைந்து கோபத்தையும் மானத்தையும் விட்டுத் தனது ஐராவதமென்னும் யானையின்மேலேறிச் சுவர்க்க லோகத்திற்குத் திரும்பினான். இப்படி இந்திரனே திரும்பினதைக் கண்ட மற்ற தேவர்கள் முதலிய யாவரும், மிகவுஞ் சந்தோஷத்துடன் அவன் கூடவே சூழ்ந்துகொண்டு தங்களிடம்போய்ச் சேர்ந்தார்கள். இப்படியாக இந்திரனும் தேவர்களும் சண்டையை விட்டு ஓடியதைக் கண்ட கிருஷ்ணார்ஜுனர்கள் மிகுந்த சந்தோஷத்துடனே சங்கநாதஞ் செய்தார்கள். பின்பு இவர்கள் யாதொரு சங்கையுமற்றவர்களாய், அக்கினியைக் கூவி அவ்வனமடங்கலும் புசிக்கச்செய்ய அக்கானகத்திலிருந்த ஜீவஜந்துக்கள் அப்பாலிப்பா லசையாமல் அவ்வக்கினிக்கே யிரையாயின. அர்ச்சுனனும் ஓரம்பினால் நூறு ஜந்துக்களையும், நூறு அம்புகளால் ஒரு ஜந்துவையும், அவ்வவற்றிற்குத் தக்கபடி பாணப்பிரயோகஞ் செய்து அக்கினியில் வீழ்த்திக்கொண் டிருந்தான்.

இப்படியாக அக்கினிபகவான் சஞ்சீவிமுதலிய ஓஷதிகளைத் தின்று, சகல ஜந்துக்களுடைய மாமிசங்களைச் சாப்பிட்டு, அவைகளின் உதிரம் - கிலேத்தண்ணீர் முதலாகிய ரசங்களைக் குடித்து மதமடைந்து; அண்டச்சுவர் வெடிக்கும்படி சப்தித்துக் கொண்டு ஜ்வாலைகளைப் பரப்பி வளர்த்து, ஆகாசத்துக்கும் பூமிக்குமொன்றாகச் சல்லகி என்கிற மரம் தளிர்த்திருப்பது போலும், பவளக்குன்றம் பருத்தோங்கியது போலும் நிற்பதினாலே, தேவலோகம்

பிதிர்லோக முதலான இடங்களிலுஞ் சகிக்கக்கூடாத தாபமுண்டாகி, யாவரும் தவித்து நின்றார்கள். இவ்வாறாகக் கிருஷ்ணனும் அர்ச்சுனனும் செய்த துஷ்டருடைய தேகங்களாகிய ஆகுதிகளாலும், விருட்சங்கள் - கொடிகள் முதலாகிய சமித்துக்களாலும், அக்கினிபகவான் திருப்தியடைந்து அவ்வனத்தை முக்காலேமூன்று வீசமும் பட்சித்து வருமளவில், அதிலிருந்த மயனென்கிற அசுரனானவன் தக்ஷகனுடைய வீட்டிலிருந்து வந்து பார்த்து ஓடிப்போகச் சித்தப்பட்டிருக்க, அக்கினியுந் தனது ஜ்வாலையாகிய நாவை நீட்டி அவனைப் பட்சிக்க யத்தினப்பட்டுக் கண்ணனைப் பிரார்த்திக்க, அவருங் கையிற் சக்கரத்தை யெடுத்துக்கொண்டு மயனைக் கொல்லவந்தார். அதைக் கண்ட அசுரனானவன் "ஓ அர்ச்சுனா! அடியேன் உன்னடைக்கலம்" என்று சரணம் புகுந்தான். அர்ச்சுனனும் அப்படி சொல்லாநின்ற அவ்வசுரனை நோக்கிப் "பயப்படாதே" என்று சொல்லி அவனை வரவழைக்க, கிருஷ்ணனும் அவனிடத்தி லிரக்கங்கொண்டு கொல்லவேண்டு மென்கிற கருத்தை விட்டுவிட்டார். அக்கினியும் அவனைப் புசிக்கவேண்டு மென்கிற விருப்பத்தைத் தவிர்த்தான். கேளும் ஜனமேஜய மகாராஜனே! இவ்விதமாய் அந்தக் காண்டவவனத்தை அக்கினி யெரித்துச் சாம்பராக்கியதில் ஆறுபேர் தப்பினார்கள். அவர்கள் யாரென்றால் முன் சொன்ன தக்ஷகனுடைய குமாரனாகிய அசுவசேன னென்கிறவன் ஒருவன்; இப்போது சொன்ன மயனென்கிற அசுரனொருவன்; சார்ங்கதர் என்னு நால்வர்; ஆக இவ்வறுவர்தான் தப்பிப் போயினவர்" என்று சொன்னார்.

---

## சார்ங்கதர் என்னும் பக்ஷிகளின் கதை

---

இவ்வாறு சொல்லிய வைசம்பாயன முனிவரை ஜனமேஜய மகாராஜன் நோக்கி, "ஓ தவமுனியே! அசுவசேன னென்பவனும், மயனென்பவனும், தீயி லகப்படாமல் தப்பிப் போனதற்குக் காரணஞ் சொன்னீர்கள். சார்ங்கதர் தப்பியதற்கு ஒன்றுஞ் சொல்லவில்லை. ஆகையால் எந்த விதியால் சார்ங்கதரை மரிக்காதபடி அக்கினி விட்டுவிட்டானோ அதை யெமக்கு அருளிச் செய்யவேண்டும்" என்று கேட்க, வைசம்பாயனர் "ஓ அரசனே! கேளும்; வேதங்களும் புராணங்களும் அறிந்தவர்கட்குள் சிரேஷ்-

டராயும் சகல தருமங்களும் அறிந்தவராயும், பதினோரிந்திரியங்களையுஞ் ஜயித்து நிலைதவறாமல் தவஞ்செய்பவராயும் இராநின்ற மந்தபாலரென்கிற மகாமுனி யொருவர் அந்தக் காண்டவ வனத்தில் வாசஞ் செய்துகொண் டிருந்தார். அவர் உலக வாழ்க்கையை வெறுத்துப் பெண்முகம் பாராமற் பிரமசரிய விரத மநுஷ்டித்து, நெடுங்காலமான பின்பு அச்சரீரத்தை விட்டுத் தமது தவமகிமையாற் சுயேச்சையாய்ப் பிதிர்லோகம்போய்ப் பார்த்தார். அவ்விடத்தில் தாம் செய்த தவத்தினாலே அடையவேண்டிய பலன் ஒன்றையுங் காணாமல், அங்கிருந்து இந்திரலோகம் - வருணலோகம் - ஆதித்தலோகம் முதலிய சகல லோகங்களுக்கும்போய், ஓரிடத்திலுந் தமது தவத்தின் பயனைக் காணாமையால் மறுபடி யமதருமராஜனிடத்திற்கு வந்து, அவனருகிலிருக்குந் தேவர்களைப் பார்த்து, "ஓ தேவர்களே! நான் வெகுதவங்களும் புண்ணியங்களுஞ் செய்தேன். அப்படியிருக்க எனக்கு ஏன் ஒரு பயனுங் கிடைக்கவில்லை? எங்கே பார்த்தாலும் என்மட்டில் ஒன்றுந் திறக்கப்படவில்லை! நான் எந்தக்கருமஞ் செய்யாமையாலே இந்த லோகங்கள் மூடப்பட்டன? அதைத் தயைசெய்து சொல்லுவீர்களானால் அக்கருமத்தையுஞ் செய்து வருகிறேன்" என்று கேட்க, தேவர்கள் "ஓ மந்தபாலமுனியே, கேளும், உலகத்தில் யாவரும் பிறக்கும்போதே மூன்று பேருக்குக் கடனாளியாகப் பிறக்கிறார்கள். யார் யாருக்கென்றால் தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், பிதிர்க்களுக்குந்தான். இக்கடன் தீருகிறவித மெப்படியென்றால் யாகங்கள் செய்து தேவர்கடனைத் தீர்க்கவேண்டும். பிள்ளைகளைப் பெற்றுப் பிதிர்க் கடனைத் தீர்க்கவேண்டும். நீரோ யாகங்கள் செய்தபடியினாலும், வேதங்க ளோதியபடியினாலும், இரண்டு கடன்களைத் தீர்த்துவிட்டீர். சந்ததியில்லாமையாலே ஒரு கடனைத் தீர்க்கவில்லை. அந்தக்கடன் தீராமற்போவது பாவமாகையால் இந்த லோகங்களில் உமக்குப் பயன் கிடைக்கவில்லை. ஆகையால் நீர் சந்ததிக்காக யத்தினப்படும்" என்று சொல்ல, அதைக்கேட்ட அந்த முனிவரானவர் இக்கானகம் வந்து, விரைவாகவும் - வெகுவாகவும் எந்த யோனியிற் பிள்ளைகள் பிறக்குமென்று யோசித்திருக்கையிற் சார்ங்கதமென்னும் ஆண்பக்ஷி யிறந்து ஜரிதையென்னும் பெண் பட்சி பறந்துபறந்து விழுந்தழுவதைக்கண்டு, அந்தப்பட்சி யிறந்துபோன கூண்டிற் பிரவேசித்து, அப்பேடுடன் கூடி நான்கு முட்டைகளை யுண்டாக்கி, அப்பால் லபிதை யென்கிற மற்றொரு

சார்ங்கதப்பேட்டைச் சேர்ந்து, முன் தான் கூடிய ஜரிதையென்னும் பட்சியையும் அதுபெற்ற முட்டையையும் அந்த வனத்திலேயே விட்டுவிட்டுப் போய்விட்டார். பின்பு அந்தப் பெண்பறவையானது அந்த முட்டைகளைக் காத்துக்கொண்டு அவ்வனத்திலிருந்து, குஞ்சுகள் வெளியிற் புறப்பட்டவுடனே அவைகட்குப் பிரமதேஜசு ஜொலிக்கக்கண்டு, மகிழ்ச்சியடைந்து, ஆகாரங்களைக் கொண்டுவந்து கொடுத்து வளர்த்து வந்தது.

இஃதிப்படியிருக்க அந்த மந்தபால ரிஷியானவர் லபிதையோடு கூடப் போகுமளவில் வழியிலே காண்டவவனத்தைத் தகிக்கக் கருத்துக்கொண்டு வராநின்ற அக்கினிதேவனைக்கண்டு, அவர் எண்ணத்தை யறிந்து, அவரைப் பிரதக்ஷண நமஸ்காரஞ் செய்து, கை கூப்பி, "அக்கினிபகவானே! நீர் தேவர்களுக்கு முகமாயிருந்து சகல ஆகுதிகளையும் பெற்று அந்தந்தத் தேவருக்குப் பங்கிட்டுக் கொடுக்கிறவராகையால், நீர் மகா சிரேஷ்டர்; எல்லாத்தேகங்களினுள்ளும் அந்தராத்துமாவைப்போல் வாசஞ்செய்கிறவர். பெரியோர்கள் உம்மை யொருவராயும் மூவராயுஞ் சொல்லுகிறார்கள். அன்றியும் உம்மை யெட்டுவிதமாக்கி யாகங்களை யேற்படுத்தினார்கள். இவ்வுலகங்களுக்கெல்லாம் நீர் சிருஷ்டிகாரணரென்று யாவருஞ் சொல்லுகிறார்கள்! சங்காரமும் உம்மாற் பண்ணப்படுகிறதென்று வழுத்துகிறார்கள். நீர் எல்லாவற்றையும் வயிற்றிலிருந்து காப்பாற்றுகிறவர். நீர் இல்லாமற் போனால் ஒரு நிமிஷமும் உலகம் பிழையாது. வேதியரெல்லாரும் உமக்குத் தினந்தோறும் தோத்திரம் - நமஸ்காரம் முதலானவை செய்து, தங்களுடைய கருமத்தை நிறைவேற்றிக் கொள்ளுகிறார்கள். நீர்தான் உலகம் பிழைப்பதற்காக மின்னல்களோடு கூடிய மேகங்களாகி மழைபொழிகிறீர். உம்மாலேதான் ஆண்டுகளும் - மாதங்களும் - நாட்களுமுண்டாகி, உலகத்தினுடைய ஆயுளைக் கவர்கின்றன. ஆதலால் உலகங்களைச் சிருஷ்டித்துக்காத்து அழிப்பதற்குக் காரணம் நீரே யென்று வேதங்கள் புகழ்கின்றன. இம்மை மறுமைப் பயன்களில் எதைப் பெறவேண்டுவதானாலும், வேதவிதிப்படி உம்து முன்னிலையிற் பெறவேண்டும். அன்றியும் யாவையும் விளக்குகிற ஒளி நீரே. நீர் இல்லாவிடில் இருளினின்றும் ஒன்றும் வெளிப்படமாட்டாது. ஆகாயத்தில் தோன்றுங் கிரகங்களும் - நட்சத்திரங்களும் — உம்து சொரூபங்களே யல்லாது வேறில்லை. எவ்வுலகிலும் நீரே நிறைந்திருக்கிறீர். தேவர்களுக்கு அமிர்தமும் உம்மாலேயே உண்டாக்கப்

ப்படுகிறது. எவ்விதத்திலும் நீரே தேவர்களில் உயர்ந்தவர். ஆகை யால், அக்கினிபகவானே! உலகங்களில் வேதியருக்கு நீரேமுக்கிய தேவனனதுபற்றி என்னிடத்தில் தயைவைத்து அநுக்கிரகஞ் செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க, அக்கினியானவன் அந்த மந்தபால முனியைநோக்கி, "முனிவரே! நீர் செய்த தோத்திரத் தினலே மிகவுஞ் சந்தோஷப்பட்டேன். உமக்கு என்னலாகவேண் டியதைக் கேளும்" என்று சொல்ல, அம்முனிவர் கைகூப்பி, "ஓ செஞ்சுடர்த்தேவே! நீர் காண்டவ வனத்தை யெரித் தழிக்குங் காலத்தில் அவ்வனத்தி லிருக்கும் என் பார்ப்பினங்களை யெரிக்கா மற் காத்தருளவேண்டும்" என்ன, அத்தேவனும் அப்படியே யாகட்டுமென்று வரங்கொடுத்து வந்து விட்டார். ஆகையாலே தான் அச்சார்ங்கதர்களை யெரிக்கவில்லை.

கேளும் ஜனமேஜய மகாராஜனே! இவ்விதமாக வந்த அக்கினிபகவான் அவ்வனத்தைச் சூழ்ந்து தகித்துக்கொண்டு வரு மளவில், அதிலிருந்த ஜரிதையென்கிற பெண்பட்சியானது கதி யொன்றுங்காணமல், மிகவுஞ் சிறிய தன் குஞ்சுகளைப் பார்த்து மெத்தவியாகூலமடைந்து பரிதாபமாய் அழத்தொடங்கி, "ஐயோ? மகா துர்ப்பாக்கியையான எனதுவயிற்றில் இவைகளேன் பிறந்தன? தெய்வமே! அற்பமாயும் ஆதரவற்று மிருக்கிற என்னிடத்தில் தானே உன் சௌரியத்தைக் காட்டவேண்டும். இரங்கலாகாதோ? நான், மகாநுபாவருக்கு மனைவியானேனென்று மகிழ்ந்திருந்தேனே: அப்படி மகிழலாகாதென்று தெய்வம் இவ்வண்ணமாக்கி விட் டதே: என்ன செய்வேன்? ஓ என் குழந்தைகாள்! இப்போதுதான் முளைக்கும் உங்கள் அவயவங்கள் நெருப்பில் விழுந்து கரியப்பார்க் குங் காலம் நேரிட்டதே: இதோ நெருப்பு வந்துவிட்டதே: என் னுடைய வல்லுயிர் முன்னேபோமோ? அப்படிப் போகுமானல் உங்களுடைய பரிதாபத்தையாகிலுங் கண்ணலே பாராமற் போ வேனே? ஐயோ! அக்கினிபகவானே! உன்னைக் கும்பிடுகிறேன். நீ என்னிடத்தில் அன்புபாராட்டி என் குழந்தைகளை யெரிப்பதற்கு முன்னமே என்னை யெரித்துவிடு. இவ்வளவு சகாயமாயினும் செய்யக்கூடாதா? ஓ பிள்ளைகளே! இறகு முளையாத உங்களையும் பேதையாகிய என்னையும் இவ்வனத்தில் விட்டுப் போட்டு, உங்கள் தகப்பனர் லபிதையுடனே கூடிக்கொண்டு சுகித்து வாழ்ந்திருக்கப் போனரே: உங்களை நான் எவ்வாறு காப்பேன்? எப்படி விட்டுப் போவேன்? என்ன செய்வேன்? உங்களுடன் கூடவே உயிரை

விடுவேன்" என்று விசனப்படக்கண்ட அக்குஞ்சுகள் தாயை நோக்கி, "அம்மா! நீ எங்களை விட்டுப்போட்டு ஆகாசத்திலெழும்பி எப்படியாகிலும் உன் புருஷனிடத்திற்போய்ச் சேரவேண்டியதே யன்றி, எங்களுக்காகக் காத்திருந்து நீயுங்கூட இறந்துபோகவேண்டாம். ஏனென்றால் - நாங்கள் போய்விட்டாலும் நீ யிருப்பாயே யானால் எங்களைப்போல் இன்னும் மக்களைப்பெறலாம். நீ போய் விட்டால் எங்கள் குலமே போய்விடுமல்லவா? சந்ததிக்காகத் தானே எங்கள் பிதா உன்னைச் சேர்ந்தார். எங்களைப் காப்பாற்றச் சக்தியில்லாமல் நீயும் இத்தீக்கு இரையாய் விடுவதனாலே ஒரு பயனுமில்லை." என்று சார்ங்கதங்கள் சொன்ன பேச்சைக்கேட்ட ஜரிதை மிகவும் மனநொந்து மக்களைப்பார்த்து, "ஓ எனது பாலர்களே! எனக்கு ஒரு யுக்தி தோன்றுகிறது. அதை நீங்கள் கேளுங்கள். இதோ ஒரு எலிப்பாழியிருக்கிறது. இதில் நீங்கள் நுழைந்து கொள்ளுங்கள். அதின்வாயை நான் மண்ணினாலே மூடிவிடுகிறேன்; அனல் அவிந்தபின் வந்து அதைத்திறந்து விடுகிறேன்" என்றது. அதைக்கேட்ட அந்த முனிகுமாரர், "அம்மா! நீ இப்பிலத்திற் பிரவேசிக்கச் சொல்லுகிறாயே: அதிலிருக்கும் எலியானது இறகில்லாமல் மாமிசபிண்டமா யிராநின்ற எங்களை இலேசாய் விழுங்கிடுமே: ஆகையால் அதில் நாங்கள் எப்படிப் பிரவேசிப்போம்?" என்று சொல்ல, மறுபடியும் தாய், "குழந்தைகளே! இதிலிருந்த எலியானது வெளியில் வரக்கண்டு ஒரு பருந்து காலாலுராய்ஞ்சு தூக்கிக் கொண்டுபோயிற்று" என்றுசொல்ல, குஞ்சுகள், "அம்மா! எலியைப் பருந்து உராய்ஞ்சிக் கொண்டுபோயிற்றென்பதை நாங்களெப்படி அறிவோம்? இந்தப் பிலத்தில் வேறு எலியுமிருக்கலாம்; அதில் நாங்கள் புகுந்தாற் சித்தமாய் மரணமடைவோம். இங்கிருந்தாலும் ஒருவேளை அக்கினி நாமிருக்குமிடத்தைத் தகிக்காமல் விட்டுவிடுவன். அதிற்போய் எலியின்வாயில் விழுந்து சாவதைவிட இங்கிருந்து நெருப்பில் விழுவதே நல்லது." என்று சொன்னதைக்கேட்ட தாய் "குஞ்சுகளே பாழியின் சமீபத்திற் பருந்து வந்திருக்கவும், அதிலிருந்த எலி வெளியில் வரவும், அந்த எலியை அப்பருந்து கொத்திக் காலினால் தூக்கிக்கொண்டு போகவும் நான் கண்டேன். இவ்வாறாக எலியை யெடுத்துப்போன பருந்தை நானும் வேகமாய்ப் பின் தொடர்ந்து போய் அப்பருந்துக்கு ஆசிகள் வழங்கி, எங்களுடைய சத்துருவாகிய எலியைக் கொண்டுபோகிறபடியினாலே நீ ஆகாயத்தில்

விரோதமின்றிச் சஞ்சரித்துக்கொண்டு வாழக்கடவாய்" என்று சொல்லிக்கொண் டிருக்கையில், அந்த எலியைப் பருந்து பட்சித்து விட்டது. நானும் அப்பருந்தினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு வந்துவிட்டேன். ஆகையாலே உங்களுக்குப் பயமில்லை" என்று சொல்லிற்று.

அதற்குச் சார்ங்கதங்கள் "அம்மா! நீ எங்களைச் சந்தேக முள்ளவிடத்துக்கு அனுப்புவதைவிட, இவ்விடத்திலேயே இருத்து வது நன்று. ஏனென்றால், இந்தக் குகைக்குள் புகுவதனால் எங்க ளுக்குச் சாவு நிச்சயம். அப்படிச் சாவதிலும் எலிவாயி லகப்பட்டுப் போவதிற் பாவமுண்டு. நெருப்பில் விழுந்து வெந்துபோனாலும் புண்ணியமுண்டு. அன்றியும் நீ எங்களைக் காத்து எங்களுடன்கூட உயிரை விடுவதில் எங்கள் பிதாவின் அபிப்பிராயம் வீணாய்ப் போகின்றது. மேலும் எங்களைக் காக்கவேண்டியது உன்கடமை யன்று. எங்களால் உனக்கென்ன உபகாரங் கிடைக்கப்போகிறது? ஒன்றுமில்லை. நாங்கள் யாரோ? எப்படிப்பட்டவர்களோ? அவை யெல்லாம் உனக்குத் தெரியாது. எங்களை அக்கினி தகியாமல் விட்டுவிட்டாலும் விடலாம். தகித்துவிட்டாலும் நல்லகதி யடைய லாம். நீயோ நல்ல மங்கைப்பருவமுடையவளா யிருக்கிறாய். உன்னுடைய விதிப்படி கணவனைச் சேர்ந்து வேறு பிள்ளைகளைப் பெறலாம். ஆகையால், நீ எவ்விதமாகிலும் தப்பிப்போய் நெருப்பு அவிந்தபின் வந்தால், அப்போது நாங்களும் பிழைத்திருந்தாற் பார்த்துக்கொள்ளலாம்" என்று சொன்ன சொல்லைக் கேட்டு யோசித்து, "இவர்கள் மஹானுபாவ ராவரென்று முன்பு தனக்கு ரிஷி சொல்லியிருந்த வார்த்தையை நினைத்து, குஞ்சுகளை வனத் திலேயே விட்டு எழும்பி ஆகாசத்திற் பறந்துபோய்விட்டது. இப் படித் தாய் போனவுடனே தீக்ஷண்யமாகிய ஜுவாலைகளுடனே அவ் வனத்திற் பிரவேசித்த அக்கினியானவன் சமீபத்தில் வர, அதைக் கண்ட சார்ங்கதக் குஞ்சுகள் நடுங்கி மிகவுந் துக்கமடைந்து, ஆபத் தினாலாகிய பயத்தினாலே மிகவுமிரக்கமுறத் தக்கதாய்க் கூவிச், சிலபேச்சுக்கள் பேசிக்கொண்டன. அம்முனி குமாரர்களாகிய பட்சிகளுள் முதற்குமாரனாகிய ஜரிதாரி யென்பவன் தன் தம்பிகளை நோக்கி, "உலகத்திலே புத்திமானாகிய புருஷன் தனக்கு ஆபத்துக் காலம் நேரிடுவதற்கு முன்னமே ஜாக்கிரதைப் படவேண்டியது. அப்படிச் செய்பவன்தான் ஆபத்து நேரிட்டபோதும் அதனாலே துன்பப்படமாட்டான். அப்படியின்றி ஒருவன் தனக்கு நல்ல

காலம் நேரிட்டிருக்கும்போது இப்படியே நமக்கு நல்லகால மிருக்குமேயன்றி, கெட்டகால மெப்போதும் வராதென்று நம்பியிருப்பானேயானால், அவன் பின்னுக்கு மிகுந்த துன்பத்தை யனுபவிப்பான். ஆகையால் நமக்கு முன்னமே ஆபத்துவரப் போகிறதென்று நிச்சயப்பட்டிருக்கிறது; அதனால் நாம் விசனப்படவேண்டியதில்லை" என்று சொல்ல, அதுகேட்ட இரண்டாஞ் சகோதரனாகிய சாரிசிருஷ்டன் அண்ணனை நோக்கி, "ஓ அண்ணலே! நீர் மிகவும் புத்திமானாகவும் தைரியசாலியாகவும் இருக்கிறபடியால், இப்போது நமக்கு நேரிட்டிருக்கிற பிராணாபத்தை யெப்படியாகிலும் தீர்க்க யோசிக்கவேண்டும். உம்மைக் கும்பிடுகிறேன். ஏனெனில், ஒரு குலத்தில் ஒருவனே வியாபகனாயிருப்பான்" என்று சொன்னான். பின்பு மூன்றாஞ் சகோதரனாகிய ஸ்தம்பமித்திரனென்கிறவன் அண்ணனை நோக்கி, "தகப்பனாரில்லாதவர்களுக்கு மூத்தவனன்றோ தகப்பன்? ஆதலால், ஆபத்தினின்று மற்றவரைக் காக்கவேண்டிய கடமை அவனுக்கே யிருக்கின்றது. அப்படியிருக்க மூத்தவனுக்கே உபாயமொன்றுந் தெரியாமற் போனால் இளையவன் என்னசெய்யமாட்டுவான்" என்று சொன்னான். பின்பு கடைப்பிள்ளையாகிய துரோணனென்கிறவனும், "ஓ! ஓ! இதோ நாமிருக்குமிடத்திற் சுவாலைகளாகிய நாவுகளை நீட்டி யாவையும் புசிக்குந் திறனைக் காட்டி, வருகிறார் மிகவொளிபெற்று யாகங்களிற் சொரியும் அவிகளைப் புசிக்கும் மகானுபாவராகிய அக்கினிதேவர்" என்று சொல்ல, இவைகளையெல்லாங் கேட்ட மூத்தவனாகிய ஜரிதாரியானவன் அவ்வக்கினியைப்பார்த்து, கைகூப்பி வணங்கித் தோத்திரஞ்செய்ய வாரம்பித்தான்.—

"ஓ அக்கினிதேவனே! நீதான் வாயுவுக்கு ஆத்துமாவா யிருக்கிறாய். சஞ்சீவி முதலிய புற்பூடுகளுக்குத் தேகமாயிருக்கிறாய். தண்ணீருக்குப் பிறப்பிடமா யிருக்கிறாய். ஜலத்துடனே பிறந்தவனாயு மிருக்கிறாய்; மற்றும் பூமியாகவு மிருக்கிறாய்; அன்றியும் உனது விசுவரூபத்தையும் ஏழு ஜுவாலைகளாகிய நாவையுங் கொண்டு எங்களைக் காத்தருளவேண்டும். ஓ அக்கினி பகவானே! நீ யன்றி எங்களுக்கு வேறு கதியில்லை. உன்னையே சரணமடைந்தோம். நீதான் சூரியனாக விருந்து உலகங்களை விழிக்கச்செய்கிறாய். உன்னையன்றிப் பிரகாசம் பொருந்திய வஸ்து வேறில்லை. நீயே தயைசெய்து எங்களை இரட்சிக்கவேண்டும்" என்று ஆக்கினேய மந்திரத்தைத் தோத்திரஞ் செய்தான். பின்பு சாரி

சிருட்டன் "ஓ தேஜோமயமாகிய கடவுளே! நீயே உலகத்திற் காதாரமா யிருக்கிறபடியினாலே இவ்வுலகங்க ளியாவும் உன்வசத்தாய் விளங்குகின்றன. ஆதலால் நீயே காத்தருள வேண்டும்" என்று வேதத்தாற் போற்றினன். பின்பு ஸ்தம்பமித்திரன் "ஓ அனற்கடவுளே, நீயே அவிகளாகியும் அவைகளைப் புசிப்பவனாயு மிருக்கிறாய்; பெரியோர்கள் உன்னை ஒருவனாகவும் பலராகவும் பாவித்து யாகஞ்செய்கிறார்கள்; நீயே சிருஷ்டித்துப் பிரளயகாலத்தில் அழித்துப் போடுகிறாய்; நீயே ஆதேயமும் ஆதாரமுமாகவிருக்கிறாய்; ஆதலால் எங்களை இரட்சிக்க வேண்டும்" என்று ஏத்தினன். அதன் பின்பு துரோணன், "ஓ உலகத்திற்குக் காரணமாகிய தேவனே! நீ யெல்லாருடைய வயிற்றிலுமிருந்து அவர் புசிக்கும் ஆகாரங்களை யெல்லாம் ஜீரணமாக்கி வளர்க்கிறாய்; சூரியனாக இருந்து பூமியிலுள்ள ரசங்களையெல்லாங் கவர்ந்து மறுபடியும் மேகமாகி அவ்விரசங்களை வருஷித்து உலகத்தைக் காக்கிறாய். ஓஷதிகளும் - குளங்களும் - ஆறுகளும் - சமுத்திரங்களும்-உன்னால் உற்பவிக்கின்றன. அதனாலன்றோ வருணதேவனும் ஆக்ஷிபெற்று மாக்ஷிமையுடன் இக்கடலில் வாசஞ்செய்கிறான். பொன்னிறமாகிய கண்களும் செவந்த கழுத்தும் கறுத்த சிகையுமுடையவனாய் விளங்காநின்ற தேவனே! நீ எங்கள் விஷயத்தில் மிகவும் பக்ஷமுடையவனாகி எங்களுக்குப் பிராணபய மில்லாமலிருக்கிறவரத்தைத் தந்தருளவேண்டும். உனக்கு அநேகந் தெண்டனிடுகிறேன்" என்று வாழ்த்தினன். இவ்விதமாகச் செய்த தோத்திரங்களை அக்கினிபகவான் கேட்டுச் சந்தோஷப்பட்டு, ஞானத்திற் சிறந்தவனாகிய துரோணனை நோக்கி, "ஓய் துரோணரே! நீர் மகாரிஷியாதலால் உமதுவாக்கில் வேதமணம் வீசுகின்றது. உங்களுக்குப் பயமில்லை. முன்னமே உங்களை விட்டுவிடுவதாக நான், உங்கள் தகப்பனுருக்கு வாக்குத்தத்தம் பண்ணியிருக்கிறேன். உங்களை நான் எரிப்பதில்லை. நீங்கள் என்னைத் துதித்ததற்காக நான் என்ன செய்யவேண்டுஞ் சொல்லுங்கள்" என்று கேட்டான். துரோணன் "சுவாமி! இங்கே மிகவுங்கொடுமையுள்ள சில பூனைகளிருக்கின்றன. அவை தினந்தோறும் எங்களைப் பார்த்து உறுமி உபத்திரவப் படுத்துகின்றன. அவைகளை நீ சீக்கிரத்தில் புசித்து விட வேண்டும்" என்ன, அதுகேட்ட அக்கினிதேவன் அப்படியே அப்பூனைகளில் ஒரு சிறுகுட்டியைக்கூட விடாமல் எரித்து, முன் போலச்சென்று காண்டவவனத்தை நோக்கி அழற்றுவதானன்.

இது இப்படியிருக்க, அந்த மந்தபாலமுனிவர் பிள்ளைகளை நினைத்து, தான் அக்கினியினிடத்தில் வரம் பெற்றிருந்தபோதிலும் புத்திர வாஞ்சையினால் என்ன ஆகுமோவென்று விசனமுற்று, லபிதையைப் பார்த்து, "அடிபெண்ணே! என் பிள்ளைகள் மிகவுஞ் சிறுவராதலால் அவ்வனத்தில் அக்கினி பிரவேசிக்கு மளவில் எழும்பிப் போகமாட்டாமல் இருக்கவும் இடமில்லாமல் தவித்துக்கொண்டென்ன செய்கின்றனரோ? அல்லது அந்த ஜரிதையானவள் யாது செய்யமாட்டுவாள்? குஞ்சுகளை வைத்துக்கொண்டு அவளெப்படி தவிக்கின்றாளோ? ஐயோ! நான் தவஞ்செய்து பெற்றபிள்ளைகள் சாம்பராய்ப் போயினரோ? எரிந்து கொண்டிருக்கின்றனரோ? அந்த விசனத்தைச் சகிக்கமாட்டாமல் என் பத்தினியுந் தீயில் விழுந்துபோயினளோ? என்ன துயரப்படுகிறார்களோ? ஏன் நான் அவர்களை விட்டுவந்தேன்? மறுபடி காண்பேனோ? காணமாட்டேனோ? ஒன்றுந் தெரியவில்லை:" என்று சொல்லி, "ஓ ஜரிதாரி! ஓ ஜாரிசிருஷ்டா! ஓ ஸ்தம்பமித்திரா! ஓ மகாநுபாவனாகிய துரோணா! நீங்கள் எனக்குப் புத்திரராய் இந்தக்கதி யடைந்தீர்களே: உங்கள் மனம் எப்படி துடிக்கிறதோ? உங்கள் உடல் எவ்விதம் பதைக்கிறதோ?" என்று புலம்ப, அதை லபிதைகேட்டு, மனதிற் பொறாமையோடு தன் கணவனைப் பார்த்து "ஓய் முனியே! நீர் பிள்ளைகளுக்காக மனஸ்தாபப்படவில்லை. முன்னமே அவர்கள் ரிஷிகளென்றும் மகாநுபாவர்களென்றுஞ் சொல்லி யிருக்கின்றீர்! அன்றியும் அக்கினியைத் துதித்துப் பிள்ளைகளுக்கு யாதொரு தீங்கும் நேரிடாம லிருக்கும்படி வரமும் பெற்றிருக்கிறீர். அந்தத் தேவனும் சொன்னவாக்குத் தவறமாட்டான். உமது பிள்ளைகளுக்கு அக்கினிபயங் கொஞ்சமேனுமில்லை. அவையெல்லா முமக்கு நன்றாய்த் தெரிந்திருக்கிற படியினாலே நீர் பிள்ளைகளைக் குறித்து விசனப்படக் காரணமில்லை. ஆனால் என்னை விட்டு ஜரிதையிடத்திற்குப் போகவேண்டு மென்பதைக் கருதிப் பிள்ளைகளுக்காகப் புலம்புகிறதுபோல் மாயம் பண்ணுகிறீர். உமது வித்திலுதித்த ஞானவான்களாகிய பிள்ளைகள் தங்கள் தாயைக் காக்காம லிருப்பார்களோ? இவை யெல்லாமல்ல. என் சககளத்தியாகிய ஜரிதையை நினைத்துக்கொண் டிப்படிப் புலம்புகிறீரேயல்லது வேறில்லை. எனக்கு நன்றாய்த் தெரிகிறது. அவளிடத்தில் எவ்வளவு ஸ்நேக மிருக்கிறதோ அதிற் பத்திலொருபங்கு என்னிடத்திலில்லை. ஐயோ! உம்முடைய ஆசையை நான் கெடுப்பானேன்? இப்படி

மேலுக்கு உறவாடுகிற புருஷனுடன் சேர்ந்து அனுபவிப்பதை விடச் சும்மா இருப்பதே பெண்களுக்கு நல்லது. ஆதலால், நீர் உமது பிரியநாயகியாகிய ஜரிதையினிடத்திற்கே போய்ச் சேரும். இனி யென்னைத் தீண்டவேண்டாம். நான் திக்கற்றவள்போல் எங்கேயாகிலு மிருக்கிறேன்'' என்று சொல்ல, அதைக்கேட்ட மந்தபாலமுனியானவர், "அடி லபிதாய்! நீ யென்னைக் காம மிகுதியினாற் பெண்களை மருவுகிறவனாக நினைக்கிறாய். அப்படி நினையாதே. சந்ததிக்காக யிருக்கிறேனே யல்லது வேறில்லை. அடி மூடத்தன முள்ளவளே! பிள்ளைகளுக்குத் தொந்தரவு நேரிடுங் காலத்தில் நான் உன்னுடனே சரசமாடிக்கொண் டிருக்கலாமோ? கையிலிருக்குங் கனிக்கு யெறிந்து மரத்திலிருக்குங் கனியைத் தாவுவதுபோற், பெற்றபிள்ளைகளை நெருப்பிலிட்டு வேறுபிள்ளை யைப்பெற யத்தனிப்பேனோ? அப்படிச்செய்வேனானால் என்னைப் பார்க்கிலும் ஞானசூனியன் இவ்வுலகத்தில் யாரு மிருக்கமாட்டார் கள். உலகநிந்தையும் பெறுவேன்; பரலோகவாசமு மிழப் பேன்; இம்மைச்சுகமுந் துறப்பேன். இவ்வாறு நான் கெட்டுப் போகவல்லவோ நீ சொல்லுகிறது. ஓ குரூரமனமுடைய கோதாய்! அக்கினிதேவன் வாக்குத்தத்தம் பண்ணியிருந்தாலும், அப்பெரியவனம் பற்றியெரியுமளவிற் சிறகு முளையாத அக்குஞ்சு களை அதில்விட்டுச் சும்மாவிருக்க மனந்துணியுமோ? ஜுவாலை வீசி னாலும் போதுமே! ஆதலால் நீ யென்னசொன்னாலுஞ் சரி, நான் அவ்விடம் போவேன். உன்னிஷ்டம் என்னுடன் கூடவந்தால் வா, அல்லது எங்கேயாவது போனாற் போ'' என்று சொல்லி அம்முனி வர் காண்டவவனத்திற்கு வந்தார்.

இதற்குள்ளாக அக்கினிபகவான் வனமுழுதுந் தகித்துச் சாம்பராக்கிவிட்டார். ஜரிதை அவ்விடத்துக்கு வந்து தன் குஞ்சு கள் பிழைத்திருப்பதைக் கண்டு, மிகவும் பரிவுடனே ஓடிக் குஞ்சு களை யணைத்துக் கண்ணீருகுத்து ஸ்தம்பித்து நின்றாள். அந்த மந்தபாலமுனியும் அவ்விடம் வந்து, தனது மனைவியுமக்களும் பிழைத்திருப்பதை நோக்கி, பரிவினாற்றளர்ந்து ஆச்சரியத்தாற் கிளர்ந்து நின்றார். அந்நான்கு குமாரரும் பிதாவைக்கண்டு, "ஐயா! தேவரீர் திருவடிகட்கு நமஸ்காரஞ் செய்கிறோம்'' என்று, தங்க ளுக்கு முளைத்திருந்த சிற்றிறகுகளுக்குஞ் சிறுகால்களுக்குத் தக்கபடி யோடிவந்து நமஸ்காரஞ் செய்தார்கள். இவ்வாறு வணங் கிய புத்திரரைக்கண்ட மந்தபாலமுனியானவர் மிகவுஞ் சந்

தோஷப்பட்டு, புத்திரப்பேற்றை வேண்டி உலகவின்பத்தை யடைந்தவராதலால், அவர்களை ஆலிங்கனஞ்செய்து தடவிச் சீராட்டி உச்சிமோந்து, தன் மனைவியாகிய ஜரிதையை நோக்கிச் சில வார்த்தைபேச, அவள் ஒன்றும் பதிற்பேசாமலிருக்க, மறுபடி யவளைப்பார்த்து "அடி என்காதலி! இந்த மக்களுள் மூத்தவன் எவன்? இரண்டாவது எவன்? மூன்றாவது எவன்? நான்காவது எவன்? நான் மிகவும் அன்புடனேயும் துக்கத்துடனேயுங் கேட்கிறேன்; மறுமொழி யொன்றுஞ் சொல்லாதிருக்கிறாய். அப்படி நீ யிருப்பதினாலே என்மனம் மிகவும் பரிதாபமுறுகின்றது. என்னிடத்தில் விசுவாசம் பாராட்டிப் பேசவேண்டும்" என்று அவளைப் பரிசித்தார். அந்த ஜரிதையானவாள், "ஓய் முனிவரே! உமக்கு மூத்தபிள்ளை யாரானாலென்ன? இரண்டாவது பிள்ளை யாரானாலென்ன? மூன்றாவது பிள்ளை யாரானாலென்ன? நான்காவது பிள்ளை யாரானா லென்ன? இவர்களைப்பற்றி உமக்காக வேண்டிய தொன்றுமில்லை. அப்படி யேதாகிலும் பிரயோசன மிருந்தாற் பேதையாயுஞ் சிறகுமுளையாத குஞ்சுகளையுடையவளாயு மிராநின்ற வென்னை ஒன்றியாய் இக்கானகத்தில் தனியே விட்டுப்போய்ப் பயங்கரமாகிய காலத்திலும் இப்படிப் பார்க்காம லிருப்பீரோ? முன்னம் எவளிடத்தில் மோகத்தினாலே இவ்வாறென்னை விட்டுப் போனீரோ அவளிடத்திற்கே இப்போதும் போகலாம். நான் அவளைப் போல் அழகும் சொகுசு முடையவளோ? அவளே உம்முடைய மனத்திற்கு இனியவள்" என்று ஒறுத்தாள். அது கேட்ட அம்முனிவர், "அடிபெண்ணே! நான் சந்ததிக்காகப் பெண்களை மருவ வந்தவனாகையாலும், நீ பிள்ளைகளைப் பெற்றிருந்தபடியினாலும், அவளுடனிருந்தேன். அன்றியும் பெண்களுக்குக் குழந்தைகளைப் பார்ப்பதைவிடச் சந்தோஷம் வேறில்லை. ஆதலால் உன்னை விட்டுப்போனேன். நீயோ மகா பதிவிரதையாயிற்றே: நீ யெல்லா மறிந்திருந்தும் புருஷன் விஷயத்தி லிப்படி சந்தேகப்படலாமோ? இப்படித்தான் பூர்வத்தில் அருந்ததியானவள் சப்தரிஷிகள் நடுவில் விளங்கிக்கொண்டு மிகவும் பரிசுத்தமான கருத்துள்ளவராகிய வசிஷ்டரிடத்திலுஞ் சங்கைப்பட்டு, அதன் குறிப்பை யாவருக்குங் காண்பித்தாள். அதனாலே அவ்வசிஷ்ட முனிவர் கோபங்கொண்டு சபித்தார். அச்சாபத்தினாலே தான் இப்போதுங் கருநிறங்கலந்த செந்நிறமுள்ளவளாய், ஜனங்களுடைய கண்களுக்குத்தெரிந்துந் தெரியாமல் ஆகாசத்தில் நட்சத்

திரமா யிருக்கிறாள். ஆதலால் நீ மகாபதிவிரதையாயிருந்து, புருஷனுடைய கருத்தறியாமல் என்பேரிற் சங்கிப்பது நியாயமல்ல. மேலும் நான் பெண்போக ம்விரும்பியவ னல்லன்; சந்ததியை மாத்திரம் விரும்பியவன். அன்றியும் பெண்சாதியினிடத்தில் விசுவாசம் வைப்பது தப்பு. ஏனெனில் பிள்ளைபிறந்தால் அவள் புருஷனை லட்சியஞ் செய்கிறதில்லை. அடி ஜரிதாய்! நீ நற்கதி யடையும்பொருட்டு என்சொற்படி கேட்டுக்கொண்டு என்னுடன் கூட இரு" என்று சொல்லவே, அப்பெண்மயில்போல்பவள் திடுக்கிட்டு, நமது நாயகர் கருத்தை அறியாமற் சொன்னோமேயென்று நடுநடுங்கி நிற்க, பிள்ளைகள் நால்வருந் தகப்பனாரைச் சரணஞ் செய்து, "தாங்கள் எமது தாயினிடத்திற் கோபிக்கவேண்டாம்" என்றார்கள். அம்முனிவரானவர் தமது பிள்ளைகளுடைய சற்குணங்களுக்குச் சந்தோஷித்து, "என்னுடைய தவப்பயனாகிய பிள்ளைகளே! உங்களை யிவ்வாபத்துக் காலத்திற் காக்காமல் விட்டுப்போனேனென்று நீங்கள் நினைக்கவேண்டாம். ஏனென்றால் - இவ்வனத்தைக் கொளுத்த வரும்போதே அக்கினிபகவானை நான் கண்டு துதித்து உங்களைக் காக்கும்படி வேண்டிக்கொண்டேன். அதற்கு அப்படியே யாகட்டுமென்று அக்கினிதேவர் ஒப்புக்கொண்டார். அந்தத் தேவர் வாக்குத் தவறமாட்டாரென்றும், உங்கள் தாயார் மகா பதிவிரதை யாகையால் அவளாலே அக்கினி-ஜெயிக்கப்படுமென்றும், நீங்கள் என் தவப்பயனனபடியினாலே வேதவாக்கியங்களைக்கொண்டு துதிசெய்து தப்பித்துக்கொள்ளுவீர்க ளென்றும் நிச்சயம் பண்ணி, நான் இவ்விடம் வராம லிருந்தேன். ஆனதுபற்றி என்னிடத்தில் நீங்கள் இந்த விஷயத்திற்காக விகற்பமொன்றும் நினைக்கவேண்டாம். இனி இவ்விடத்தில் நாம் இருக்கக் கூடாது. அப்பாற்போவோம் வாருங்கள்" என்று சொல்லிப் பெண்சாதி பிள்ளைகளை யழைத்துக்கொண்டு, மந்தபால முனிவர் வேறிடம் போய்ச் சேர்ந்தார்.

---

## கிருஷ்ணார்ச்சுனர் தேவேந்திரனிடத்தில் வரம்பெற்று மீளல்

---

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இவ்விதமாகச் சார்ங்கதர் - மயன் - அசுவசேனன் என்னு மிவர்களைத் தவிர மற்றெல்லா ஜந்துக்களையும், செடி - கொடி - மரம் - புல் - கல் -

முதலான தாவரங்களையும் அக்கினிதேவன் நன்றாய்ப் பட்சித்து, உதிரம் - ஊனீர் முதலானவைகளைக் குடித்துத் திருப்தி யடைந்து, மகா சந்தோஷத்துடனே கிருஷ்ணார்ச்சுனர்களுக்கு முன்வந்து, "ஓய் மகாநுபாவர்களே! உங்களுடைய சகாயத்தி னாலே எனதிஷ்டம் நிறைவேறிற்று" என்று புகழ்ந்துகொண் டிருக்குந் தருணத்தில் தேவேந்திரனானவன் சகல தேவகணங்க ளோடுங்கூட வானத்தினின்று இறங்கி வந்து, ஸ்ரீகிருஷ்ணமூர்த் தியையும் அர்ச்சுனனையும் பார்த்து, "ஓ புருஷசிங்கங்களே! நீங்கள் லோகோபகாரார்த்தமாக அவதரித்தவர்க ளாகையாற் சகல தேவாசுரர்களையும் வென்று லோகத்துக்கு மிகவும் விரோதமாயிருந்த இவ்வனத்தை அக்கினியைக்கொண் டழித்தீர் கள். ஆகையால் உங்களுடைய பலபராக்கிரமங்களுக்கும் - தைரிய சாமர்த்தியங்களுக்கும் - தருமநிலைக்கும்-நான் மிகவுஞ் சந்தோஷப் பட்டேன். உங்களுடைய இப்படிப்பட்ட நற்குணங்களைக் காண் பதற்காகவே நான் உங்களோடு யுத்தஞ் செய்தேன். இப்போது உங்களுக்கு நல்ல வரங்கள் கொடுக்கவேண்டு மென்று கருத்துக் கொண் டிருக்கிறேன். ஆகையால், உங்களுக்கு இஷ்டமான வரங்க ளைக் கேளுங்கள்" என்று சொல்ல, அர்ச்சுனனானவன் வெகு பய பக்திகளுடனே வணங்கிக் கைகூப்பிக்கொண்டு, "ஓ ஐயனே! ஓ என் பிதாவாகிய தேவராஜனே! என்னிடத்தில் இவ்வளவு பரிவுடனே நீர் வரமளிக்க வந்தமையால் நான் மிகவுந் தன்னியனானேன். தேவ ரீர் திருவாய்மலர்ந்தருளியபடி எனக்குப் பாசுபதாஸ்திரத்தையும், மற்றும் சிரேஷ்டமாகிய அஸ்திரங்களையும் கொடுத்தருளவேண் டும்" என்று கேட்டான். இந்திரனானவன், "ஓ என்மகனே அர்ச்சுனா! நான் உனக்கு ஐந்திராஸ்திர முதலானவை கொடுப் பேன். பாசுபத அஸ்திரத்தையோ உனக்குச் சிவன் கொடுப்பார். எப்போது பகவானாகிய உருத்திரமூர்த்தியானவர் உன்னிடத்திற் கிருபைசெய்து தமது அஸ்திரத்தைக் கொடுப்பாரோ அப்போது தான் நானும் உனக்கு ஆக்கினேய அஸ்திரங்கள் - வாயு வாஸ் திரங்கள் - ஐந்திர அஸ்திரங்கள் முதலிய எல்லா அஸ்திரங்களை யுங் கொடுப்பேன். ஏனெனில், அப்போதுதான் நீ இவ்வஸ்திரங் களை ஏற்றுக்கொள்ளத்தக்க தவப்பெருமை யுடையவனாகிறாய். அந்தக் காலம் எனக்குத் தெரியும். ஆகையால் நானே யுன்னை அழைப்பித்துக் கொடுப்பேன்" என்று சொன்னான். பின்பு கிருஷ்ணமூர்த்தியானவர் இந்திரனைப் பார்த்து, "இந்திரதேவனே!

எனக்கு மற்றொரு வரமும் வேண்டுவதில்லை. இந்த அர்ச்சுனனுடன் எப்போதும் நிலைபெற்றிருக்கும்படியான வரமொன்று கொடுத்தாற் போதும்" என்று சொல்ல, இந்திரனும் "அப்படியேயாகக்கடவது" என்று சொல்லி அக்கினியிடத்திற்கு வந்து, "அக்கினிதேவனே! நீ நல்ல ஆச்ரயம் பெற்றபடியால் உன்னிஷ்டம் நிறைவேறிற்று; நீ செய்தகாரியம் நல்லதாகையால் எனக்கு உன்னிடத்தில் மனஸ்தாபமில்லை" என்று சொல்லி மறுபடியுந் தனதிடமாகிய பொன்னுலகம் போய்ச் சேர்ந்தான்.

இவ்வாறு இருபத்தொரு நாட்களிலே அக்காண்டவவனத்தைத் தகித்த அக்கினிதேவனானவன் அர்ச்சுனனைப் பார்த்து, "சற்குணத்திற் கிசைந்த பற்குனா! இந்தக் காண்டீபமென்னுந் தனுசினாலேயும் அட்சயமாகிய தூணிகளாலேயும் - வானரத்துவசமுடைய இந்த இரதத்தினாலேயும் சகல சத்துருக்களையும் நாசஞ்செய்து நீ வாழப்போகிறாய். இனி எனக்கு விடைகொடுக்க வேண்டும்" என்று சொல்லி விடைபெற்று, அப்படியே ஸ்ரீகிருஷ்ணனையுந் துதித்து விடைபெற்றுச் சொர்க்கலோகம்போய்ச் சேர்ந்தான். பின்பு அக்கினியிடத்தில் விடைபெற்ற கிருஷ்ணார்ச்சுன ரிருவரும் மயனுடன் வேடிக்கையாய்ச் சஞ்சரித்துக்கொண்டு வந்தார்கள். "மனிதர்வெங் கோடை தீர்க்கும் வசந்தமென் காலும் வேறு, துனிதவி ரிளங்கால் வேண்டுஞ் சோலையுஞ் சோலை வேண்டும், புனிதநீர்த் தடமும் வேறோர் புதுமல ரோடை வேண்டும், பனிதரு மதியும் வேறோர் பான்மதி வேண்டுங் காலம்" என்று சொல்லும்படியானதும் இன்றுணையாகிய கணவரைப் பிரிந்த மாதர்கள் துன்பத்தையடைய, விவாகத்தின்கண் இடைவிடாது கணவரைத் தழுவிச் சரசசல்லாபத்தோ டிருக்கு மாதர்கள் இன்பத்தை யடையும்படியானதும் ஆகாயமளவு முயர்ந்த சோலைகடோறும் ஆண்வண்டுகளும் பெண்வண்டுகளும் ஊடல்நீங்கித் தேன்விருந் துண்டு ஆரவாரித்தலைக் கண்ட அழகிய கூந்தலையுடைய மங்கையர் யாருந் தங்கள் புருஷர்களிடத்தி லுண்டான ஊடல்களையும் நீக்கிக்கொண்டு இன்புறத் தழுவ வெண்ணினவர்களாய், மன்மதனுக்கு எங்குந் திருவிழாக்களைச் செய்யும்படியானதும் தென்றிசைப் பெண்ணானவள் இருளைக்கெடுக்குந் தனது நாயகனாகிய சூரியனானவன் இதுவரையிற் றன்பாற் றழுவியிருந்து, இப்போது வடதிசைப் பெண்ணைத் தழுவினானென்று மயங்கிப் பெருமூச்சு விடுந் தன்மைபோல் மலயமாருதம் வீசும்படியானதும், மேகங்கள் கவிந்..கித்

திரைசெய்யும்படியாக உயர்ந்து தழைத்துத் தளிர்த்திருக்கின்ற மாமரங்களிலுள்ள குயில்கள் அழைக்க வருகின்ற அனங்கராஜனது சேனைகளினின் றெழும்பும் புழுதியைப்போலச் சோலைகள்தோறு முள்ள வாசனை கமழ்கின்ற புஷ்பங்களில் வண்டுகள் பண்பாடிக் கொண் டிறங்கி மூக்கினு ளுழுந்தோறும் அவ்வவற்றிலுள்ள மகரந் தங்க ளனைத்து மெழும்படியானதும், நெருப்பையொத்த இரத்தினு பரணங்களினொளி பாயும்படியான குசகும்பங்களையுடைய மங்கைய ரது கரியகூந்தலி னின்றும் வண்டினங்கள் படிந்து கிண்டுந்தோறும் வீழ்கின்ற பசியமலர்களைப்போலச், சோலைகடோறுமுள்ள பூஞ் செடிகளின் கிளைகடோறு மிறங்கிக் கோகிலங்கள் கூத்தாடுதலினால் வீழ்கின்ற புஷ்பங்களால் மூடப்பட்ட பூமியானது பொற்சீலைகள் விரித்த சயனங்களை யொத்திருக்கும்படியானதும், கிளைகளிற் புஷ் பித்திருக்கு மலர்களினது குளிர்ச்சியும் வாசனையும் பொருந்திய மகரந்தப்பொடியி லாடிவருகின்ற ஆண்குயில்களைப் பார்த்த பெண் குயில்கள், புதுமணஞ்செய்து வந்தனவென் றாடி இளவாழையினது குருத்திற் சென் றொளிக்கும்படியானதுமாகிய இளவேனிற் கால மென்னும் வசந்தகாலத்தி னுல்லாசத்தை அநுபவிக்கவேண்டி வந் தவராகையால், இருவரும் தங்களுடைய தேககாந்தி யுறைந்தமை யால், நீலவண்ண முடையதுபோ லிராநின்றதாய் வெண்டாமரை செந்தாமரை - வெண்குவளை - கருங்குவளை - வெள்ளாம்பல்-செவ் வாம்பல் முதலிய நீர்ப்பூவகைகள் எங்கணு நிறைந்துள்ளதாய் நாரை - அன்றில் - புறு - உள்ளான் - அன்னம் - நீர்க்கோழி - நீர்க் காக்கை - சக்கரவாகம் - கின்னரம் - கொக்கு - குணலயம் இவை முதலாகிய பலவகைப் பறவைகள் எங்கணு நிறைந்திருக்கின்றன வாய், யானைகள் பொழிகின்ற கன்னமத முதலாகிய மூன்று வகைப் பட்ட மதங்களும், குதிரைகளின் வாயிலிருந்து ஒழுகுகின்ற விலாழி களுங் கலந்ததாய், தேவரம்பையர் வந்து ஸ்நானஞ் செய்யுந்தோறு மிறைந்துகிடக்கின்ற குங்குமாதிகள் கலந்த வாசனைப்பொடிகளும், அவர்கள் எடுத்துத் தரிக்குந்தோறுங் கீழே விழுந்துகிடக்கின்ற சந்தனம் - கஸ்தூரி - செம்பஞ்சின் குழம்பு-கற்பகமலர் முதலாகிய வஸ்துக்களும் எங்கு நிறைந்ததாய், நீல முதலாகிய ரத்னங்களும் முத்துக்களுங் கரையின்மேலுஞ் ஜலத்திற்குள்ளும் நாநாவிதமாகப் பிரகாசிப்பது—பாற்கடல் முதலாகிய பல கடல்களும் ஒன்றாய்க் கலந்து பெருகிவந்ததுபோ லிருப்பதாய், பாலை-நெய்தல்-குறிஞ்சி- மருதம் - முல்லை என்னு மைந்திணைப் பொருள்களும் ஆங்காங்கு

த்லேமயக்குற்றிருப்பதாய், சிருஷ்டி-திதி சங்காரங்களுக்குக் காரண மாகிய முக்குணங்களுந் தோன்றுகின்ற மகாவிஷ்ணுவினுடைய மேனிபோன்றதாய், பலவித மலர்களா லலங்கரிக்கப்பட்ட பூமி தேவியின் மயிர்ப்பின்னல் போன்றதாய், அன்னங்களுடைய சிறகு களாற் பாதி மறைக்கப்படும் பிரவாகமுடைத்தா யிருக்கிறபடியி ஞலே பரமசிவனுடைய மேனியோடு கலந்த பார்வதியின் தேகம் போன்றதாய் விளங்காநின்ற யமுனையாற்றினது கரையில் வந்தார் கள். அதன் நிலத்தினுள்ளே தோன்றிய தாமரை வளையங்களா னவை தேவலோகத்திலுள்ள ஐராவதமென்னும் யானைகளின் கொம்புகளைப்போ லிருப்பதையும், அதன் ஜலத்தினுள்ளே தோன் றிய குதிரைகளின் சாயல்களானவை தேவேந்திரனுடைய உச்சை சிரவமென்னுங் குதிரைகளைப்போன் றிருப்பதையும், அதன் ஜலத்தினுள்ளே தோன்றிய வெண்டாமரைகளானவை ஆகாசத்திற் பிரகாசிக்குங் களங்கமற்ற பூரணசந்திரர்களை யொத்திருப்பதையும், அதன் ஜலத்தினுள்ளே தோன்றிய செங்குவளை யரும்புகளானவை பவளக்குருத்துக்களை யொத்திருப்பதையும், அதன் ஜலத்தினுள்ளே தோன்றிய நீலோற்பல மலர்களோடுங் கலந்து மலர்ந்த வெண்டா மரை மலர்கள் களங்கத்தோடு முதித்த சந்திரனைப்போன் றிருப் பதையும், அதன் ஜலத்தினுள்ளே விளங்குங் கொடிப்பாசிகளா னவை வடவாமுகாக்கினியின் புகையைப்போன் றிருப்பதையும், அதன் ஜலத்தினுள்ளே தோன்றிய தருக்களின் நிழல்களானவை மைநாக முதலிய பல மலைகளை யொத்திருப்பதையுங் கண்டாநந்த மடைந்தார்கள்; அவ்வாற்றில் முன்னந் தம்மொடு ஜலக்கிரீடை செய்து சென்ற அம் மங்கையர்களுடைய முலைத்தடங்களின் கற்பூரங்களெல்லாம் அவ்வாற்றி னலைகளினுற் கரைத்து ஒதுக்கப் பட்டனவோ வென்று சொல்லத்தக்கவையாய் நுண்மையாயும், வெண்மையாயும், இராநின்ற மணற்பரப்புக்களை நோக்கி வியந்த னர்; அதில் விளையாடிய அந்த ஸ்திரீகளுடைய மெய்யுற வினுற் பரிமளம் பொருந்தி விளங்காநின்ற சிறு மேடுகளிலே உட்கார்ந்துகொண்டு உல்லாசமா யிருந்தனர்; சோலைகளாகிய மங்கையர்கள் கோங்கரும்புகளாகிய இளமுலைகளைச் சுமந்து பூங் கொடியாகிய இடையானது அசைய, மாமரங்களிலுள்ள குயில்க ளின் தொனியாகிய இசையினுல் வம்மின்களென்று இன்சொற் கூறி புன்னைமலர்களாகிய பொறிகளைச் சிதறி மெல்லிய தளிர்களா கிய கைகளினுற் கனிகளைத் தந்து உபசரிக்கப் பெற்றனர்; இவர்

கள் பராக்கிரம மனைத்தையும் விளங்க உரைப்பதுபோலக் குயில்கள் கூவவும், அவற்றைக் கேட்குந்தோறுஞ் சிரக்கம்பிதஞ் செய்வதுபோலச் சோலைக ளசைபவும், அதிசயித் தார்ப்பதுபோல அன்றில்கள் சத்திக்கவுங் கண்டு வியந்தனர். கிரவுஞ்சம் - சக்கிரவாகம் - சாரசம் - இராஜஹம்சம் முதலாகிய நீர்ப்பறவைகளெல்லா மிவர்கள் தேகநிறத்தை யவ்வாற்றின் வெள்ள மென்று கருதிக் களித்தொலித்துக்கொண் டனுசரித்து நின்றன. அதுகண்ட அவர்கள் நகைக்கும் நகையொளிகளைத் தாமரைகளி னடிக் கொடிகளெனப் பிரமித்து அன்னங்கள் மூக்கினாற் கொத்த முயல, அருகிலிருந்த மஞ்ஞைகளெல்லாம் மேனிகளைக் காளமேகங்களென்று நினைத்துச் சிறகுவிரித் தாட, அதுகண்டு அவ்வன்னங்க ளெழும்பிப் பறந்தோட, அதனாலாகாச மெல்லாம் வெண்டாமரை பூத்ததென்ன விளங்கவுங் கண்டு வெகு சந்தோஷத்துடனே விளையாடிக்கொண்டிருந்தார்கள்.

அப்படிச் சிலநேரம் விளையாடியபின் மயனுடன் கூடப் புறப்பட்டு, அக்கினிதேவனாற் கொடுக்கப்பெற்ற தேரின்மீ தேறி, பந்துக்கள் - சகோதரர்கள் - நகரத்தினர் முதலாகிய சகல ஜனங்களும் எதிர்கொண்டுவர, டமரகம் - முரசு - சங்கம் - மிருதங்கம் முதலிய பலவித வாத்திய கோஷங்களோடு இந்திரப்பிரஸ்தம் போய்ச் சேர்ந்து, தருமபுத்திரர் முதலாயினோரைத் தண்டனிட்டுத், தாங்கள் விசாலமாகிய யமுனையாற்றின் கரையிற் சென்றதும், அங்கே அக்கினி வந்து யாசித்ததும், அவரிஷ்டப்படி அக்காண்டவ வனத்தை அவருக்கு ஆகாரமாக்கியதும், தேவர்களை வென்றதும், அவ்வக்கினி தேவனிடத்தினின்று தாங்கள் பரிசுபெற்றதும், மயனைக் காப்பாற்றியதும் இவை முதலாகிய சரித்திரங்களை யெல்லாஞ் சொல்லிக் களித்திருந்தார்கள்.

**காண்டவவனதகனச் சருக்கத்தோடு**

**ஆதிபர்வம் முற்றிற்று.**

---

[சென்னை, பிராட்வே, 15-ம் நெம்பரிலிருக்கும் ஸ்ரீராமா பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.]